தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—138

# இந்திய அரசியலமைப்புத் திட்டம்
# (INDIA'S CONSTITUTION)

ஆசிரியர்

எம். வி. பைலீ,

தமிழாக்கம்

தி. வெ. குப்புசாமி,
எம்.ஏ. (வரலாறு), எம்.ஏ. (பொருளாதாரம்), எம்.ஏ. (அரசியல்).
பொருளாதாரத் துறை
இலட்சுமிபுரம் கல்லூரி, கன்னியாகுமரி.

எஸ். சுப்பிரமணியன், எம்.ஏ.,
பேராசிரியர், அரசியல்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—133

# இந்திய அரசியலமைப்புத் திட்டம்

# (INDIA'S CONSTITUTION)

ஆசிரியர்

**எம். வி. பைலீ**

தமிழாக்கம்

**தி. வெ. குப்புசாமி,**
எம்.ஏ. (வரலாறு), எம்.ஏ. (பொருளாதாரம்), எம்.ஏ. (அரசியல்),
பொருளாதாரத் துறை
இலட்சுமிபுரம் கல்லூரி, கன்னியாகுமரி.

**எஸ். சுப்பிரமணியன்,** எம்.ஏ.,
பேராசிரியர், அரசியல் துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.



**தமிழ் வெளியீட்டுக் கழகம்**

**தமிழ்நாடு—அரசாங்கம்**

First Edition—April 1967

B.T.P.No. 133



# INDIA'S CONSTITUTION

M. V. Pylee

*Translation*

T. V. Kuppusamy and S. Subramanian

***Price Rs. 9-25***



Printed by
SOLDEN & Co.,
Madras-5.
and
BHARANI PRESS,
Vepery, Madras-7,

# அணிந்துரை

## (திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாண வர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுவதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும், மனநிறைவும் தரத் தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணி புரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'இந்திய அரசியலமைப்புத் திட்டம்' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 133ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 168 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கிறாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும், ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முகவுரை

நீதி, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு, புதியதோர் அரசியலமைப்புத் திட்டத்தை உருவாக்கியதைச் சுதந்திர இந்தியாவின் பெரு வெற்றிகளில் முதன்மையானதாகக் குறிப்பிடலாம். ஆனல், அரசியலமைப்புத் திட்டம் நுண்ணியதாகவும், விரிந்துமிருப்பதைப் பலர் குறை கூறியுள்ளனர். இவ்வாறு குறை கூறுவதையும் ஓரிரு காரணங்களால் நாம் ஒப்புக்கொள்வதும் பொருந்தும். பொதுவில், திட்டம் விரிவடைந்திருக்கிறதென்றும் சிக்கல்கள் நிறைந்ததாக இருக்கிறதென்றும் கூறினுல், அதை மிகைபட உரைப்பதாகவே எண்ணவேண்டியிருக்கிறது.

இந்திய நாட்டு அரசியல் நிர்ணய சபையினர் மிகக் கடுமையான வேலையைச் செய்து முடிக்க வேண்டிய நிலையிலிருந்தனர். அத்தகைய நிலை வேறு எந்த நாட்டினருக்கும் இருந்ததில்லை. 360 மில்லியன் மக்களைக் கொண்ட, இந்திய நாட்டைப் போன்ற பரந்த நாடொன்றிற்கு அரசியலமைப்புத் திட்டம் வகுப்பதில், சிக்கல்கள் பல நிறைந்திருப்பதில் வியப்பேதுமில்லை. இந்திய நாட்டை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகளைப் பரப்பு, மக்கட் தொகை என்று குறிப்பதால்மட்டிலும் மன நிறைவு பெற்றுவிடுவதற்கில்லை. மொழி, இனம், சமயம், பண்பாடு ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு நாட்டில் நிலவியிருந்த பன்மைக்கூறு தீராத பிரச்சினையாக விளங்கியது.

1947ஆம் ஆண்டிற்கு முன்னதாக பிரிட்டிஷ் இந்தியா என்றும் இந்தியர் இந்தியா என்றும் இரு அரசியல் பிரிவுகளேயிருந்தன. இவற்றுள் முற்பகுதி இரு நூற்றுண்டுகளாக பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்தது. பிற்பகுதி, நூற்றுக்கணக்கான. பல்வகை மாநிலங்களைக் கொண்ட அரசியல் கலவையாக இருந்தது. இம் மாநிலங்களில் சில பெரியவையாகவும் மற்றும் சில சிறியவையாகவுமிருந்தன. ஒரு சில முற்போக்குடையவையாகவும், மற்றும் பல பண்டைய பண்ணை முறைகளை அனுசரிப்பவையாகவும், சில தாராள மனப்பாங்குடையவையாகவும், மற்றும் பல யதேச்சாதிகார முறைகளைக் கடைப்பிடிப்பவையாகவும் பலவாருக இருந்து வந்தன. இவை யாவும் பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்கு அடங்கியிருந்தன.

குடியேற்ற நாட்டைச் சுரண்டுவது என்னும் கொள்கைக்கு விதி விலக்கின்றி. இந் நாடும் பொருளாதார நோக்கிலும் மிகப் பலவீனமாக இருந்தது. இருந்தபோதிலும், இந் நாடு பெரும் புதிராக இருந்தது. ஒரு சில பகுதிகள் முன்னேற்றமடைந்து செழிப்பாக இருந்தன. மற்றும் பல, சிந்தனைக்கும் எட்டாத வகையில் பின்தங்கியிருந்தன. செல்வம் ஓர்பால் செழித்திருந்தது. மற்றொருபால் மக்கள் வறுமையால் வாடியிருந்தனர். சீர்குலைந்த சாதிமுறையால் சமுதாய வாழ்வு மிகவும் சீர்கெட்டிருந்தது. சமய வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டு தீண்டாமை என்னும் சாபமும், சாதிப் பூசல்கள் என்னும் கறையானும் ஒற்றுமையுடனிருந்த வைரம் போன்ற இந்திய சமுதாயத்தின் அடித்தளத்தைத் தாக்கி நிலைபெயரச் செய்தன.

இவ்வகையான அரசியல், சமுதாயப் பொருளாதார செயற்கை முட்டுக்கட்டைகள் இருந்தபோதிலும், நாடு முழுவதும் பண்பாட்டு அடிப்படையில் ஒன்றுபட்டேயிருந்தது. ஆனால், அவ்வொற்றுமையும், பிளவு சக்திகளின் பிடியில் சிக்கி, நாளடைவில் சீர்குலைந்துவந்தது. இவை யாவற்றிற்கும் மேலாக நாட்டை இந்தியாவென்றும் பாகிஸ்தான் என்றும் துண்டாடவேண்டிய நிலையும் ஏற்பட்டது. இப் பிரிவினையின் தாபங்களும், பிற துன்பங்களும் தவிர்க்க இயலாதவைகளாயின.

1947ஆம் ஆண்டு இந்தியாவைக் காட்டிலும், சிக்கல் மிகுந்த பொருளாதாரச் சமுதாயப் பிரச்சினைகளைக் கொண்ட அரசு ஒன்றைக் காண்பது மிகவும் அரிது. திக்குத் திசையற்ற இக் குழப்ப நிலையிலிருந்து, ஒன்றுகூடிய நற்றேசமொன்றைக் கடைந்தெடுக்க வேண்டிய கடும் முயற்சி அரசியலமைப்புத் திட்டத் தயாரிப்பாளர்களை எதிர்நோக்கியிருந்தது.

உருவாகி வரும் புதிய தேசத்திற்கு உகந்த அரசியலமைப்புத் திட்டமொன்றை வகுத்தளித்து, இந் நிலையிலிருந்து நிவாரணம் தேடி இருக்கின்றனர். அது நாட்டின் அடிப்படை விதிமுறையாகும். அரசாங்கத்தை நடத்திச்செல்வதற்கென்று அமைந்த சட்டத் தொகுதி என்று மட்டிலும் அதை எண்ணுவது பொருத்தமற்றது. உண்மையில் நாட்டு மக்களின் இலட்சியங்களையும், எண்ணக் கருத்துகளையும் அது தாங்கி நிற்கின்றது. அதே நேரத்தில், அரசியல் சுதந்திரம் பெறுகின்ற தருணத்தில் இந்திய நாட்டில் நிலவியிருந்த சமுதாய சக்திகளால் அது விளைந்ததென்பதையும் நினைவுகூர்தல் வேண்டும்.

இயற்கையாகவே, அத்தன்மையானதோர் ஏடு நெடியதாகவும், நுண்ணியதாகவுமிருப்பதில் வியப்பில்லை. சாதாரண மனிதனின் அறிவிற்கெட்டாததாகவும் அது விளங்குகிறது. இவ்வாறாக அவ்வேடு விளங்கவேண்டுமென்று வருந்தி உழைத்தவர் எவருமிலர். சிந்தனைக் குறைவாலும், சரிவரத் தொகுக்கும் ஆற்றலின்மையாலும்

இந்நிலை ஏற்பட்டதென்றும் கூறுவதற்கில்லை. திட்டத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் தனிப்பட்ட வரலாறு உண்டு. ஒவ்வொரு பகுதியும், தனிப்பட்டதொரு தேவையைப் பூர்த்தி செய்கின்றது. அரசியல் நிர்ணய சபையில் இந்திய நாட்டின் அறிவுமிக்க பலர் இடம் பெற்றிருந்தனர். அவர்கள் தீவிரமாக முயன்று, திட்டத்தின் ஒவ்வொரு பகுதியையும் உருவாக்கியுள்ளனர். இதில் சில குறைபாடுகளும் உண்டு. மனித முயற்சியில் உருவாகின்றவைகளுக்கு என்றுமே குறைபாடுகள் உண்டு. நமது திட்டமும் அதற்கு விதிவிலக்கன்று.

தற்கால அரசியலமைப்பு ஒவ்வொன்றும் மிக நுண்ணியதாகவே இருக்கிறது. பண்டைய நாட்களின் அரசு முறை எளிமையாக இருந்தது. தற்கால அரசியலமைப்பு முறைகள் சிக்கல் நிறைந்து, பல நுண்ணிய கருத்துகளையும் கொண்டிருக்கின்றன. 'நல் வாழ்க்கையின் முட்டுக்கட்டைகளுக்கு ஒரு முட்டுக்கட்டை' என்ற அடிப்படையிலேயே பண்டைய அரசு முறைகள் உருவாகியிருந்தன. அம் மரபு மறைந்து விட்டது. தற்கால அரசுகளுக்கு உறுதியான கோட்பாடுகளுடன் இயங்கவேண்டிய நிலை உண்டு. பல துறைகளிலும் வழிகாட்டி மக்களை அழைத்துச் செல்கின்ற கடமை அவைகளுக்கு உண்டு.

விஞ்ஞான அடிப்படையிலமைந்த நுணுக்கமான இயந்திர மொன்றை, எளிய மனிதனுக்குச் சரிவரப் புரிந்துகொள்ளும் சக்தி இல்லை. அதைப்போலவே பல நுணுக்கங்களுடன் அமைந்துள்ள தற்கால அரசு முறைகளையும் அவன் முழுமையாக அறிந்துகொள்ள இயலாது. வல்லுநர்களாலேயே அதைச் சரிவர அறிந்துகொள்ள இயலும். என்றாலும் வல்லுநர்கள் முழுவதையும் அறிந்துகொண்டு விட்டனர் என்றும் கூறுவதற்கில்லை. எளிய மனிதன் சிக்கல் நிறைந்த இவ்வியந்திரத்தின் வாயிலாகத்தான் பெற்று மகிழும் பயன்களைக் கொண்டு, இயந்திரம் நன்முறையில் இயங்கிவருவதையும், பயனற்ற முறையில் இயங்கிவருவதையும் கண்டறியக்கூடும்.

அரசியலமைப்புத் திட்டம் எளிமையானதா ? அல்லது நுண்ணியதா ? என்ற ஆராய்ச்சி நமக்குத் தேவையில்லை. அது எவ்வாறு அமல் நடத்தப்படுகிறது என்பதையே நாம் கவனிக்கவேண்டும். நடைமுறையில் திட்டத்தின் குறிக்கோள்கள் நிறைவேறி வருகின்றனவா ? என்பதொன்றே முக்கியப் பிரச்சினையாக இருக்கிறது. வாசகங்கள் நெடியவையாகவோ, குறுகியவையாகவோ, எளிமையாகவோ, சிக்கல் நிறைந்தவையாகவோ இருக்கக்கூடும். நன்முறையில் இயங்கி, நற்பயன்களை நல்குவதால் திட்டம் சிறப்புப் பெற்றுவிடும். இச் சோதனை ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு இந்திய அரசியலமைப்புத் திட்டத்தை நாம் மதிப்பிட வேண்டும்.

இவ்வாறு மதிப்பிடுவதற்கு நாம் திட்டத்திற்கு அளித்துள்ள கால வரை, மிகக் குறுகியதாக உள்ளது. எனினும், கடந்த பதினோர்

ஆண்டுகளாகத் திட்டம் சந்தேறக்குறைய நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்துவருகிறது. அமைதிமிக்க, ஆனால் புரட்சிகரமான பல மாறுதல்களை நாடு ஏற்றிருக்கிறது. சூழ்நிலைகளுக்கேற்றவாறு திட்டம் எவ்வாறு செயல்பட்டிருக்கிறதென்பதை, நாம் கவனமாக ஆராய்ந்தறிய வேண்டும்.

அத்தகையதொரு முயற்சியை இந் நூல் மேற்கொண்டிருக்கிறது. விரிவான ஆராய்ச்சிக்கு இடமில்லை என்றாலும், கூடியவரை முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. இத் துறையில் ஆர்வமிக்க வாசகர்களுக்கு, திட்டத்தின் ஒவ்வொரு பகுதியும் எவ்வாறு செயல்பட்டுவருகிறதென் பதை நூல் எடுத்துரைக்கிறது. போற்றுதற்குரிய வெற்றிகளையும், ஒரு சில குறைகளையும் வாசகர்களின் கவனத்திற்குக் கொண்டுவருகிறது. திட்ட அடிப்படையில் இயங்கிவரும் அரசின் தொடர்பும் அதன் கணிச மான வெற்றியும், இந்திய நாட்டின் நானூறு மில்லியன் மக்களுக்கு மட்டிலும் உரியது என்று சொல்வதற்கில்லை. அண்மையில், அரசியல் சுதந்திரம் பெற்ற அல்லது பெற்றுவருதற்கு முயன்றுவரும் ஆசிய, ஆஃப்ரிக்க நாடுகளின் தலைவிதிகளையும் முடிவு செய்வதாகவும் நம் திட்டத்தின் செல்வாக்கு விளங்குகிறது.

1960ஆம் ஆண்டில் 'இந்திய நாட்டில் திட்ட அடிப்படையில் அரசு முறை' என்ற நூலை வெளியிட்டேன். தொடர்ந்து இந் நூலை வெளியிட வேண்டுமென நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் நண்பர்கள் என்னை ஊக்குவித்தனர். அவர்களுக்கு, மனங்கனிந்த நன்றியுரைக்க விரும்பு கிறேன். இந் நூல், பல துறைகளைக் குறித்துப் பேசுகிறது. மேலும் விரிவான விளக்கங்கள் தேவையென எண்ணுபவர்கள், 'இந்திய நாட்டில் திட்ட அடிப்படையில் அரசுமுறை' என்ற நூலைப் பயன்படுத்த வேண்டுமென வேண்டுகிறேன்.

எம். வி. பைலீ

# பொருளடக்கம்

பக்கம்

## பகுதி IV

## அரசியல் இயந்திரம்—மத்திய அரசு முறை



## இரண்டாம் பாகம்

## பகுதி V

## இராச்சியங்களில் அரசாங்கம்



## பகுதி VI

## கூட்டாட்சி முறை



## பகுதி VII

## பலவகை ஏற்பாடுகள்

## வரைபடங்கள்

பகுதி 1

# அறிமுகம்

## 1. புதிய சகாப்த உதயம்

சிறப்புமிக்க நெடிய இந்திய வரலாற்றில் 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் நாள் குறிப்பிடத்தக்கதாய் விளங்குகிறது. நடைமுறையிலிருந்து வரும் அரசியலமைப்புத் திட்டம் அன்றே அமலாயிற்று. அதன்மூலம் உலகின்கண் மற்றுமொரு குடியரசின் தோற்றமும் பறைசாற்றப்பட்டது. பல நூற்றாண்டுக் காலமாக விதியின் விளையாடல்களில் சிக்கி உழன்ற பழம்பெரு நாடொன்றின் மறுபிறப் பென்று அதைக் குறிப்பது பொருந்தும்.

1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதியோடு தேசியப் போராட்டம் முடிவுற்றது. அரசியலதிகாரம் இந்தியரின் கைகளுக்கு மாறியதால், இருநூறு ஆண்டுக் காலமாக இந் நாட்டில் நடைபெற்ற பிரிட்டிஷ் ஆட்சி முடிவுற்றதெனலாம். எனினும், சுய ஆட்சி பெற்று விட்டதால் நம் கடமைகள் முடிந்துவிடவில்லை. மற்றுமொரு புதிய சோதனையின் தொடக்கமாக அது விளங்கிற்று. தன்னாட்சி பெற்ற நாடாக வாழவேண்டிய நிலையோடு, நியாயம், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றின் அடிப்படையில் மக்களாட்சியொன்றை ஏற்படுத்தவேண்டிய பொறுப்பும் ஏற்பட்டது. இத்தகைய உயர் இலட்சியங்களை நிறைவேற்றுவதற்கு உரியதொரு சாதனமாக, நாட்டின் அடிப்படைச் சட்டமாக விளங்கக்கூடிய அரசியல் திட்டமொன்று மிகத் தேவையாயிற்று. எனவே, விடுதலை பெற்ற இந்திய நாடு, முதல் வேலையாக, ஏற்ற அரசியல் திட்டமொன்றை உருவாக்கத் தலைப்பட்டது. இன்று அமலிலிருந்துவரும் அரசியல் திட்டம் அதன் விளைவாக எழுந்தது. இத் தலைமுறையின் பெரும்பான்மையான இந்திய மக்களின் அரசியல், பொருளாதார, சமுதாய இலட்சியங்கள் மற்றும் வேட்கைகளின் சின்னமாக அது விளங்குகிறது.

சட்டத் தொகுதிகள், மற்றும் ஆணைகளைக்கொண்டு, நாட்டிற்குத் தேவையான துரைத்தனமொன்றை அரசியலமைப்புத் திட்டம் உருவாக்க முற்படுகிறது. செயற்குழு, சட்டசபை, நீதித்துறை, மத்திய, மாநில, மற்றும் தல துரைத்தனங்கள் ஆகியவற்றின் உரிமைகளை நிர்ண

யித்து, அந் நிறுவனங்களுக்கிடையேயுள்ள தொடர்புகளையும் திட்டம் எடுத்துக்கூறும். ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியல் திட்டம், எழுதிவைக்கப்பெற்ற அரசியலமைப்பு வகைகளில் முதலிடம் பெறு கிறது. 'சுருங்கச் சொல்லுதல், அடக்கம், எளிமை' ஆகிய அடிப் படைகளில் ஈடிணையற்று விளங்குகின்ற இத் திட்டம், அதிசயிக்கத்தக்க தொரு சாதனையென உலகெங்கிலும் போற்றப்படுகிறது. அமெரிக்க நாட்டு அரசிற்கெனப் புதியதொரு திட்டத்தை இது வகுத்தது. சுருங்கச் சொல்லுதல் என்ற கோட்பாட்டைக் கவனமாகக் கடைப்பிடிக்கவில்லை யெனினும், அமெரிக்கத் திட்டத்தை இந்தியத் திட்டச் சிற்பிகள் அதிக மாகக் கடைப்பிடித்தனர் என்று கூறவியலும். அத்துடன், உலகின் பல பாகங்களிலும் தோன்றிய பிற்கால அரசியல் திட்டங்கள் வாயிலாகப் பெற்ற அனுபவங்களை இவர்கள் பயன்படுத்தியுள்ளனர். இவ்வகை யில், ஆங்கிலேயர் அளித்த 1935ஆம் ஆண்டு இந்தியச் சட்டம் குறிப் பிடத்தக்கதாக விளங்குகிறது. இவ்வாறாக, இந்திய அரசியலடிப்படைத் திட்டத்தை முற்றிலுமொரு புதிய சிருஷ்டியாகக் கருதவியலாது. பிற திட்டங்களை வழிகாட்டியாகக்கொண்டும், சில திட்டங்களை அவ்வாறே ஏற்றும் நம் நாட்டுத் திட்டம் உருவாகியுள்ளது.

'அரசியலமைப்பு தெளிவாகவும் சுருக்கமாகவும் இருக்கவேண் டும்' என்று நெப்போலியன் என்பான் தனது அரசியல் ஆலோசகரான டால்ராண்ட் என்பவரிடம் ஒரு காலத்தில் கூறியதாக அறிகிறோம். அது 'தெளிவற்றதாகவும் நீண்டதாகவுமே' இருக்கவேண்டுமென அம் மதியாலோசகன் பதிலிறுத்தான். அபூர்வ பிறவியான, இந்த ஃபிரஞ்சுக்காரன் குறித்த இரு குணாதிசயங்களில் ஒன்றை (நீண்டது) இந்தியத் திட்டம் பெற்றுள்ளது. இரண்டாவது குணாதிசயத்தை நம் திட்டம் பெற்றிருக்கிறதாவென்பது ஐயத்திற்கிடமாக உள்ளது. திட்டத் தில், 395 விதிகள் XXII பகுதிகளாக அமைந்திருக்கின்றன. இவற் றுள் பலவற்றிற்கு விலக்குகளும், தடைகளும், துணைவிதிகளும் உண்டு. அத்துடன் ஒன்பது அட்டவணைகளும், இதுவரை ஒன்பது திருத்தங் களும் சேர்க்கப்பட்டுள்ளன. சுமார் முன்னூறு பக்கங்களைக்கொண்ட இத் திட்டம் அரசியல் திட்டங்களின் வரலாற்றிலேயே மிகவும் விரிந்த தாகக் காணப்படுகிறது.

## களிறுபோன்ற தோற்றமுடைய அரசியல் திட்டம்

முதல் முறையாகப் பார்வையிடும்போதே, ஏன் இத் திட்டம் இப் பெரிய உருவைப் பெற்றது என்ற வினாவொன்றே யாவர் மனத்திலும் எழக்கூடும். தொடக்கத்தில் இவ் வினாவையே நாமும் ஆராய்வோம். பெரும் உருவத்தைத் திட்டம் பெற்று விளங்குவதற்கான காரணங்கள் பல உண்டு.

அவைகளில் முக்கியமானவை சில வருமாறு :

(1) இந்தியத் திட்டம் கூட்டாட்சி வகையைச் சார்ந்தது. அவ் வகையான திட்டத்தில் மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்கும் உரிய அதிகாரங்களை எடுத்துரைப்பதும் எல்லை வகுப்பதும் தவிர்க்க முடியாதவை. இதனால் ஒருமுக ஆட்சித் திட்டத்தைக் காட்டிலும் இது மிக விரிவானதாகவே அமைகின்றது. இந்திய நாட்டிற்கென்று திட்ட மிடப்பெற்ற கூட்டாட்சி பிற நாடுகளைக் காட்டிலும் நமது அரசியல் திட்டத்தில் மிகவும் விரிவாகவே எடுத்துக்கூறப்படுகிறது. மேலும், நமது அரசியல் எளிமையான கூட்டாட்சியுமன்று. மத்திய அரசிற்கு எனத் திட்டத்தில் தனிப் பகுதியும், மாநில அரசுகளுக்கென்று தனிப் பகுதியும் ஒதுக்கப்பெற்றிருக்கின்றன. அதிகாரப் பங்கீட்டினால், மத்திய, மாநில அரசுகளுக்கிடையே காலப்போக்கில் எழக்கூடிய சிக்கல்களைத் தவிர்ப்பதற்கு நமது திட்டத் தயாரிப்பாளர்கள் மிகவும் ஆர்வமுடையவராக இருந்திருக்கவேண்டும். மத்திய, மாநில அரசு களுக்கிடையே ஐயமற்றதோர் அதிகாரப் பங்கீட்டினால், இத்தகைய குழப்பங்களை அகற்றலாகுமென்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தனர். எனவே, சட்டமியற்றுதல், ஆட்சி செலுத்துதல், நிதி நிர்வாகம், வாணிகவியல், வியாபாரத் தொடர்பு என ஒவ்வொரு தலைப்பின்கீழும் விரிவாக உரிமைகளை எடுத்துரைப்பதில் மிக்க கவனம் செலுத்தி யுள்ளனர்.

(2) திட்டத்தின் மூன்றாவது பகுதியில் அடிப்படை உரிமைகளைக் குறித்த 24 அரசியலமைப்பு விதிகள் காணப்படுகின்றன. தற்கால அரசியலமைப்புத் திட்டங்கள் யாவற்றிலும் அடிப்படை உரிமைகளை எடுத்துரைக்கும் அதிகாரமொன்று காணப்படும். ஆனால், நமது திட்டத்தில் காணப்படுவதுபோல மிக விரிவாக இவைகளை வேறெந்த திட்டமும் எடுத்துரைப்பதில்லை. இந்திய நாட்டிற்கே உரித்தான பழக்கவழக்கங்களாலும், சூழ்நிலைகளாலும், பிற நாட்டினர் கேட்டறி யாத சில அடிப்படை உரிமைகள் நமது திட்டத்தில் சேர்க்கப்பட்டிருப் பதைக் காணலாம். உதாரணமாக, 'தீண்டாமை' என்னும் பொருளைக் கூறலாம். இதைப்பற்றிய விரிவுரைகளைப் பிற நாட்டினர் தேவையற்றவையெனக் கருதக்கூடும்.

(3) 'அரசு செலுத்துவதற்கான நெறிசெய் நியதிகள்' என்ற தலைப் பில் ஓர் அதிகாரத்தையும் இணைக்கவேண்டுமென அரசியல் புனைசபை நியாயமாகவே விரும்பியது. இந் நெறிசெய் நியதிகள் பகுதி நான் கில் காணப்படுகின்றன. திட்ட விதிகளுக்கேற்ப, இவைகளை எந்த ஒரு நீதிமன்றமும் வற்புறுத்த இயலாதென்றாலும், நாட்டின் துரைத் தனத்தின் அடிப்படைகளாகவே விளங்கிவருகின்றன.

(4) இந்திய நாட்டிற்கென்றே சில பிரச்சினைகள் உண்டு. அவைகளைத் திட்டத்தில் தனியாக எடுத்துரைத்துத் தெளிவு பெறவேண்டுமென அரசியல் புனைசபை எண்ணியது. மத்திய, மாநில அரசுகளின் கீழ்ப் பணியாளர்களை அமர்த்துவது இத்தகைய பிரச்சினைகளில் ஒன்று. அட்டவணை வகுப்பினர், அட்டவணைக் கூட்டத்தினர், ஆங்கிலோ-இந்தியர் போன்றவர்களுக்குத் தனி விதிகள் இயற்றவேண்டியதாயிற்று. ஆட்சி மொழி, மற்றும் நெருக்கடி நிலையைக் குறித்தும் தனியாகக் குறிப்பிடவேண்டியிருந்தது. தேர்தல்கள், பலவகைப் பிரச்சினைகள், மற்றும் தாற்காலிக, நிலைமாறும்வரையுள்ள ஏற்பாடுகள் என்ற பல தலைப்புகளையும் திட்டத்தில் காணலாம். திட்டத்தில் முக்கால் பாகம் இத்தகைய விஷயங்களையே நாம் காண்போம். திட்டத்தின் அளவு பெருகியுள்ளதன் காரணம் இப்போது நன்கு விளங்கும்.

(5) சில பிரச்சினைகளைப்பற்றித் திட்டத்தில் குறிப்பிடாமல் சாதாரணச் சட்டங்களின் உதவியுடனேயே அவைகளுக்கு நிவாரணம் தேடியிருக்கலாம். ஆனால், பிரிட்டிஷ் ஆட்சியில், இந்திய வரலாற்றுப் போக்கை அறிந்தவர்களுக்கு, நிலவிவரும் விநோத சூழ்நிலை நன்கு புலனாகும். 1935ஆம் ஆண்டு இந்தியத் துரைத்தனச் சட்டத்தை அடிப்படையாகக்கொண்டு அரசியல் திட்டம் உருவாகியுள்ளது. அச் சட்டத்தின் விதிகள் பல எவ்வித மாறுதலுமின்றி அரசியல் திட்டத்தில் இடம்பெற்றுள்ளதை நாம் காணலாம். பிரிட்டிஷ் பாராளுமன்றம் இயற்றியுள்ள சட்டங்களில் இது மிகப் பெரியதொன்று. அரசியலதிகாரத்தை மாற்றிக் கொடுப்பது அதன் முக்கிய நோக்கம். அவ்வாறு செய்யும்போது, பிரிட்டிஷ் அதிகாரிகளும் இந்திய அரசியல் தலைவர்களும் பல சேமக் காப்புகளைப் புகுத்தியது மிகவும் இயற்கையேயாம். புதிய கூட்டாட்சிச் சட்டசபையொன்றை நிறுவ வேண்டியிருந்தது. அதே சமயத்தில், சுதேச மன்னர்கள் அரசு செலுத்திய மாநிலப் பிரச்சினைகளையும் ஒழுங்கு செய்யவேண்டியிருந்தது. இவ்விரு இலட்சியங்களையும் நிறைவேற்றவேண்டிய நிலையிருந்ததால் 1935ஆம் ஆண்டுச் சட்டத்தில் சமரச முயற்சி மிகவும் அதிகமாகத் தென்படுகிறது. இதன் விளைவாக, மிகவும் விரிவான, அரசியல் நுணுக்கங்கள் மிகுந்த திட்டமொன்று உருவாயிற்று. 1935ஆம் ஆண்டுச் சட்டம் முழுவதும் அமல் நடத்தப்படவில்லை. அதன் முக்கியப் பகுதியொன்று 1937ஆம் ஆண்டில் செயல்படுத்தப்பட்டது. அது எவ்வாறாயினும், அதன் ஷரத்துகளை இந்தியர் நன்கு உணர்ந்துகொண்டனர். 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதிக்கும், 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதிக்கும் இடைப்பட்ட காலத்தில், அவ்வரசியல் சட்டத்தை இந்திய ஜனநாயகத்தின் திட்டமாக்குவதற்கேற்ற முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஜனவரி 26ஆம் நாள் 1950ஆம் ஆண்டில், இப் புதிய திட்டம் அமல் செய்யப்பட்டது. 1935ஆம் ஆண்டு அரசியல் சட்டத்தின் ஷரத்துகளையடுத்து புதிய திட்டமாக நமது நிபுணர்கள் செய்து

மிகவும் இயற்கையான செயலேயாகும். நமது அடிப்படைத் திட்டத்தின் இக் குணுதிசயத்தைக் குறிப்பாக உணர்த்தித் திருத்தக் குழுவின் தலைவரான அம்பேத்கர், அரசியல் நிர்ணய சபையில் பின்வருமாறு உரைத்தார் : "திட்டத்தின் வரைவில் 1935ஆம் ஆண்டு இந்திய அரசியல் சட்டத்தின் வாடை மிக அதிகமாக வீசுகின்றது என்ற குறைபாட்டிற்கு நான் விளக்கமெதுவும் கூறவேண்டியதில்லை. இவ்வாறு கடனுளியாவதில் வெட்கப்படுவதற்கு ஒன்றுமேயில்லை. 'காப்பியடித்தல்' என்ற இழுக்கு இதனுல் ஏற்பட்டுவிடாது. அரசியல் திட்டத்தின் அடிப்படை இலட்சியங்களைக் குறித்து ஏகபோக உரிமை எவருக்கும் கிடையாது. 1935ஆம் ஆண்டு இந்திய அரசியல் சட்டத்திலிருந்து நாம் கடனுகப் பெற்றது பெரும்பாலும் ஆட்சி நுணுக்கங்களைப் பற்றியதாக விளங்குகிறது என்பதைக் குறித்தே நான் வருந்துகிறேன்." இந்திய நாட்டில், ஜனநாயக முறை இன்னும் வேரூன்றி வளர வேண்டும். அத்தகைய மரபு நமக்கில்லை. இச் சூழ்நிலையில், அரசியல் திட்டத்தை மேலெழுந்தவாரியாகப் பொதுவாகக் கூறிவிடுவதில் பல ஆபத்துகள் நிறைந்திருக்கின்றன. எனவே, விரிவானதோர் அரசியல் திட்டம் தேவையாயிற்று என்று அம்பேத்கர் விளக்குவாராயினர்.

(6) இந்திய நாட்டிற்கே உரித்தான சில விசேஷ சூழ்நிலைகளையும் அரசியலமைப்புத் திட்டத்தைத் தயாரித்தளித்த பெரியோர்கள் உணர்ந்திருந்தனர். அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினருள் பலர், அதிலும் குறிப்பாகத் தலைவர்களாக விளங்கியவர்கள், சுதந்திரப் போராட்டத்தின்போது பிரிட்டிஷ் ஆட்சியை சாத்வீகமாக எதிர்த்து நின்று சிறைவாசம் அனுபவித்து மிக்க அனுபவம் பெற்றவர்களாக இருந்தனர். துரைத்தனத்தின் கட்டுப்பாடற்ற இச்சையால் பிறந்த சட்டங்களால் இவர்கள் சிறைவாசம் அனுபவிக்கவேண்டிய நிலை இருந்தது. எனவே, துரைத்தனத்தாரின் அதிகாரத்தைச் சட்ட வரம்பிற்குள்ளாக்கி அமைக்கவேண்டிய தேவையை இவர்கள் நன்கறிவார்கள். எனவே, அரசியல் திட்டத்தில் இடம்பெறுகின்ற ஒவ்வொரு விதியையும், நன்ருக அலசி ஆராய்வதில் இவர்கள் மிக்க கவனம் செலுத்தியுள்ளனர்.

(7) இந்திய நாட்டில் வேற்றுமைகள் பல நிரம்பியுள்ளன. சமய அடிப்படையில், இந்து சமயம், இஸ்லாம் ஆகிய இரு சமயங்களே முக்கியமானவைகளாக விளங்குகின்றன. கிறிஸ்துவ மதம், சீக்கிய மதம், புத்த சமயம், சமண சமயம், சொராஸ்டிரிய மதம், ஜூடேய மதம் என்ற பல்வேறு சமயங்களைச் சார்ந்தவர்களும் உண்டு. இந்து சமயத்தினரிடையிலும் சாதிப் பிரிவினை காணப்படும். அவர்களுள் 'தீண்டத்தகாதவர்கள்' என்ற ஒரு தனி வகுப்பினர் தலைமுறை தலைமுறையாக இருந்து வருகின்றனர். மலைச்சாதியினர் சிலர் ஆங்காங்கே ஒதுக்

குப்புறங்களில் வசித்துவருகின்றனர். இவர்கள், பிற மக்களுடன் தொடர்பின்றியே வாழ்ந்துவருகின்றனர். இன அடிப்படையிலும் இந்தோ-ஆரியர்கள், திராவிடர்கள், மங்கோலிய-ஆரியர் என்ற மூன்று வகைகளைக் காணலாம். நாட்டின் பல பாகங்களிலும் குறைந்தபட்சம் ஒரு டஜன் மொழிகள் நன்கு வளர்ச்சியுற்றுப் பேசப்பட்டுவருவதைக் காணலாம். இம் மொழி இலக்கியங்களில் சில 3000 ஆண்டுக் காலத்தைக் கடந்த தொன்மையுடையவை. பண்பாட்டு அடிப் படையில் இந்திய உபகண்டத்தின் ஒவ்வொரு பகுதியிலும் பலத்த வேற்றுமைகள் நிறைந்திருப்பதையும் நாம் காணலாம். வேற்றுமைகள் நிறைந்த நாட்டின் அடிப்படை ஒற்றுமையை நிலைநிறுத்துவது திட்டம் தீட்டிய பெருமக்களின் முக்கிய கடமையாயிற்று அத்துடன் சிதறிக் கிடந்த சிறுபான்மையினரின் உரிமைகளையும் சீரிய வகையில் அவர்கள் பாதுகாக்கவேண்டியதாயிற்று. இதனால் அரசியல் திட்டத்தின் பரி மாணமும் வளர்ந்துவிட்டது.

(8) அரசியல் திட்டத்தைப் பயன்படுத்துபவர்கள், அரசியல்துறை யிலும் பொருளாதாரத்துறையிலும் ஜனநாயகக் கோட்பாடுகள் கையாளப்பட்டிருப்பதை நன்கு உணரலாம். பொருளாதார, சமூக நிறு வனங்களுக்குப் புது மெருகு ஊட்டவேண்டுமென்ற தீவிர ஆசையால் திட்டம் வகுத்த பெரியோர்கள் உந்தப்பட்டனர். 'தலையிடாமை'க் கொள்கையைப் பின்பற்றி, பொதுநலனைப் புறக்கணிக்கவேண்டு மென்று 1950ஆம் ஆண்டில் அரசியல் திட்டம் வகுத்த பெரியோர்களை எதிர்நோக்குவதென்பது பொருத்தமற்றதாகும். இரண்டு நூற்றாண்டுக் காலமாக அந்நியராட்சியில் அவதியுற்றுப் பெரும் மக்கள்தொகையைப் பெற்று விளங்குகின்ற இந்திய நாட்டின் தலைவிதியைச் சமைப்பதற்குச் சட்டத்தின் நற்சிந்தனையையோ அல்லது நீதி நிர்வாகத்தினரின் விளக்கவுரைகளையோ நம்புவதென்பது முற்றிலும் தவறாக விளங்கியது.

(9) ஆட்சிப் பொறுப்புகளையும் நீதிநிர்வாகத்தையும் அலுவலர் ஒருவரே ஏற்பதென்பது, பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்தில் பலத்த சர்ச்சைக்குள்ளாகிய ஒரு பிரச்சினையாகும். ஒரு மாவட்டத்தின் தலைவ ரான கலெக்டர் அப் பகுதிக்கே ஒரு சர்வாதிகாரியாக விளங்கினார். ஆட்சிப் பொறுப்பையும், நீதி வழங்குகின்ற பணியையும் ஒருவரிடமே ஒப்படைத்ததன் விளைவாக இந் நிலை ஏற்பட்டது. சுமார் ஒரு நூற் றாண்டுக் காலமாகவே இவ்விரு அதிகாரங்களையும் பிரித்துவிடவேண்டு மென்ற வேட்கை இந் நாட்டில் நிலவியிருந்தது. திட்ட அமைப்பாளர் இப் பிரச்சினையில் இயற்கையாகவே விசேஷ கவனம் செலுத்துவாரா யினர். எனவே, அதிகாரப் பிரிவினை என்ற கோட்பாட்டிற்கு இந்திய நாட்டில் புதியதொரு விளக்கம் தென்பட்டது. உயர் நீதிமன்றங்களின சுதந்திர நிலையைப் பாதுகாப்பதோடு, தல நிர்வாகத்திலும் பணி துளின் தன்மையை வறைப்படுத்துவது என்ற புதுக் கருத்தும் எழுந்தது.

ராஜ்யப் பிரிவுகளின் கடைநிலைப் பகுதிகளிலும் நீதிநிர்வாகமென்ற அரசியல் பணிக்குத் திட்ட அடிப்படையில் முக்கியத்துவம் அளிக்கப் பெற்றது. இப் பிரச்சினையைத் திட்ட அடிப்படை விதிகளைக்கொண்டே தீர்மானிக்க வேண்டுமென்றும், சாதாரணச் சட்ட அடிப்படைகளில் தீர்மானிக்கவேண்டியதில்லை யென்றும் நீதிநிர்வாகத்தைக் குறித்துப் பேசுகின்ற திட்ட விதிகள் ஐயமின்றி எடுத்துரைக்கின்றன.

(10) இத்தகைய சிக்கல் நிறைந்த பிரச்சினைகளும் விநோதச் சூழ் நிலைகளும் திட்டம் விரிவாகவும் நுணுக்கங்கள் மிக்கனவாகவும் அமை வதற்குக் காரணங்களாயமைகின்றன. வக்கீல்களின் வாதத்திறமைக் குத் திட்டம் அதிக இடமளிப்பதையும், அரசியல் திட்டத்தின் மற்று மோர் சிறப்பாகக் குறிப்பிடலாம். பெரும்பாலான நாடுகளில் இரத்த வெறி கொண்ட புரட்சிகளுக்குப் பின்னரே இத்தகைய திட்டங்கள் எழுந்துள்ளன. அவ்வகையானதொரு சூழ்நிலையில் இந்தியத் திட்ட அமைப்பாளர்கள் திட்டத்தை உருவாக்கவில்லை. இந்திய மக்களுக்கு அரசியலதிகாரம் மிகவும் அமைதியாகவே மாற்றிக்கொடுக்கப்பட்டது. எனவே, வெகு காலமாகக் கடைப்பிடிக்கப்பெற்றுவந்த ஆட்சி முறை களை ஒரு நொடியில் முழுவதும் புறக்கணித்துவிட்டு, முற்றிலும் புதிய தொரு திட்டத்தைக் கைப்பற்றுவதென்பது இயலவில்லை.

வக்கீல்களின் சுவர்க்கமென்ற குற்றச்சாட்டு, வரைத் திட்டத்தை விவாதிக்கின்றபோது அரசியல் நிர்ணயசபையிலும், பின் அதற்கு வெளி யிலும், திட்டம் வக்கீல்களின் வாதத்திறனுக்கு மிகவும் வாய்ப்பளிக் கின்றதென்று பலமாகக் குற்றஞ்சாட்டப்பெற்றது. அரசியல் திட்டத் தின் ஒரு குறைபாடாக இதை அடிக்கடி எடுத்துக்கூறுகின்றனர். திட்டத்தைக் குறித்துப் பொதுவான மதிப்பீடு செய்த அங்கத்தினர் ஒருவர் பின்வருமாறு குறிப்பிட்டார்: “இவ் வரைத் திட்டம் மக்களை வழக்கு வெறியர்களாகவும், நீதிமன்றங்களை நாடுபவர்களாகவும், பொய் பேசுபவர்களாகவும், சத்தியநெறி, அஹிம்சை ஆகியவற்றில் நம்பிக்கையற்றவர்களாகவும் செய்துவிடுகிறது. எனக்கு அனுமதி வழங்குவீர்களாயின், இதை 'வக்கீல்களின் சுவர்க்கம்' என்றே கூறு வேன். இது ஏராளமான வழக்குகளைத் தோற்றுவித்து, திறமையும் புத்தி கூர்மையுமுள்ள நம் வக்கீல்களுக்கு ஏராளமான வேலைவாய்ப்பு களை ஏற்படுத்தும்.”

நுணுக்கமான பல விஷயங்களை அரசியல் திட்டம் தாங்கியிருக் கின்றதென்பது உண்மை. திட்டத்தை உருவாக்குகின்றபோது நம் அரசியலறிஞர்களை எதிர்நோக்கியிருந்த பல பிரச்சினைகளின் காரண மாகத் திட்டம் மிகவும் நுண்ணிய விஷயங்களைக் கொண்டதாயிற்று என நாம் முன்பு கண்டோம். பிரச்சினைகளுக்குரிய நிவாரணங்களைத் திட்டத்திலேயே புகுத்திவிடவேண்டுமென்பதில் அவர்கள் மிக்க ஆர்

வங்கொண்டு விளங்கினர். மேலும், திட்டத்தில் ஷரத்துகளை எடுத்துக் கூறுவதற்கு விரிவான கடினமான மொழிநடையைக் கடைப்பிடித் திருக்கின்றனர். பயன்படுத்தப்பட்டிருக்கும் வசன நடை அதிகமாக நீதிமன்றங்களிலேயே கையாளப்படுகின்றது. ஒவ்வொரு விதியுட னும் பல விலக்குகளும், விளக்கங்களும், உபவிதிகளும் திட்டத்தில் காணப்படுகின்றன. இவைகளுக்குத் திட்டத்தில் இடமளிப்ப தற்கு எத்தகைய காரணங்களை எடுத்துரைத்தபோதிலும், சாதாரண வாசகனொருவன் திட்டத்தைப் படித்து, அதிலுள்ள விஷயங்களை அறிந்துகொள்வதென்பது மிகவும் கடினம். அரசியல் திட்டவிதிகளில் துறைபோகிய அனுபவமிக்க வழக்கறிஞன் ஒருவனே பயன்படுத்தப் பட்டுள்ள நீதிமன்ற மொழிநடையையும், அதனுள் அடங்கியுள்ள நெளிவு சுழிவுகளையும் உள்ளவாறு அறிந்துகொள்ள இயலும். இக் கருத்தை நாம் ஏற்றுக்கொள்வோமாயின், திட்டம் 'வக்கீல்களின் சுவர்க்கம்' என்ற எண்ணம் வலுப்பெற்றுவிடும்.

கூர்ந்து ஆராய்வோமெனில், இத்தகைய எண்ணம் நிலைமையைத் தவறாக உணர்ந்ததாலும், காரணமற்ற அச்சத்தாலும் விளைந்ததென்பது புலனாகும். அரசியல் நுணுக்கங்கள் நிறைந்த சட்டத் தொகுதி என்பது உண்மையே என்றாலும், இதனால் வழக்குகள் விளைவதற்கு உற்ற நில மாகத் திட்டம் அமைகின்றதென்பதை ஏற்பதற்கில்லை. சட்டத் தொகுதியொன்றின் நுணுக்கச் செறிவிற்கும், பருத்த தோற்றத்திற்கும், அதன் காரணமாக வழக்குகள் விளைவதற்கும் நெருங்கிய நேரடித் தொடர்பிருக்கிறது என்று கொள்வதும் தவறேயாகும். எளிய நடையி லுள்ள சாதாரண விதியொன்றைக் குறித்து ஏராளமான முடிவற்ற வாதப் பிரதிவாதங்கள் எழுவதும் சாத்தியமாகும். அமெரிக்க அரசியல் திட்டத்திலுள்ள 'வாணிகவியல் விதிகளை' இதற்கு ஏற்ற உதாரண மாகக் கூறலாம். 'அந்நிய நாடுகளுடன் வாணிபத் தொடர்பைக் கட்டுப் படுத்துவதற்குக் காங்கிரசிற்கு அதிகாரமுண்டு. இதைப்போலவே, பல மாநிலங்களுக்கிடையுள்ள தொடர்பையும், இந்தியக் குடிகளுடன் உள்ள தொடர்பையும் கட்டுப்படுத்தலாம்' என்று அரசியலமைப்புத் திட்ட விதி கூறுகின்றது. இவ் விதியில் அடங்கியுள்ள கருத்தை இதைக் காட்டிலும் எளிய நடையில் விளக்க இயலாது. இதைப் புரிந்து கொள்வதற்கு எந்த ஒரு வழக்கறிஞனின் உதவியும் தேவையில்லை. ஆனால், அமெரிக்கக் குடியரசின் வரலாற்றில் இவ் 'வாணிகவியல் விதி களை'க் குறித்து முடிவற்ற ஏராளமான வழக்குகள் மூண்டிருக்கின்றன. இதைப்போலவே அமெரிக்க அரசியல் திட்டத்தில் காணப்படும் ஏனைய பல எளிய விதிகளும், எளிதில் விளங்கக்கூடிய கருத்துகளும் ஏராளமான சர்ச்சைகளுக்கு இடமளித்திருக்கின்றன. 'பொதுநல விதி'யை இதற்கு மற்றுமொரு மேற்கோளாக எடுத்துரைக்கலாம்; பிற நாட்டு அரசியலமைப்புகளிலிருந்தும் இத்தகைய மேற்கோள்களை நாம் எடுத்துக்கூறலாம். ஆஸ்திரேலிய நாட்டு அரசியல் திட்டத்தின்

92ஆவது பகுதி மாநிலங்களுக்கிடையேயுள்ள வியாபார—வாணிகத் தொடர்புகளைப்பற்றிக் கூறுகின்றது. நிலையற்ற உலகில் ஓர் எழுதி வைக்கப்பெற்ற அரசியல் திட்டத்தின் கதியை இப் பகுதியின் வரலாறு அனுபவ வாயிலாகக் காட்டுவதோடு, விளையக்கூடிய குறைபாடுகளையும் நன்கு விளக்கிக் காட்டுகிறது. ஆஸ்திரேலிய நாட்டு விமர்சகர் ஒருவர் கூறுவதுபோல, அவ்வரசியல் திட்டத்திலுள்ள எப் பகுதியும், இதைப்போன்று வழக்குகளையோ அல்லது நீதிமன்றக் கருத்து வேற்றுமைகளையோ தோற்றுவிக்கவில்லை.

இந்திய நாட்டு அரசியல் திட்டத்தோடு ஒப்புநோக்கும்போது, அமெரிக்க அரசியல் திட்டம் சுருக்கத்திலும் எளிமையிலும் அரியபெருஞ் சாதனையாக விளங்குகிறது. ஆனால், வழக்குகள் விளைவது அங்கு நின்றுவிடவில்லை. சராசரியாக ஆண்டுதோறும், ஆயிரத்துமுந்நூறு வழக்குகளில் அமெரிக்க உயர் நீதிமன்றம் நியாயம் வழங்கவேண்டிய நிலை இருந்துவருகிறது. இதற்கு மாறாக, இந்திய நாட்டு உயர் நீதிமன்றம், இதுகாறுமுள்ள தன் வாழ்வில், ஆண்டுக்கு நூறு வழக்குகளுக்கும் குறைவாகவே விசாரித்து நீதி வழங்கியுள்ளது. நம் நாட்டு உயர் நீதிமன்றத்தின் அனுபவம் கானடா நாட்டுக்கூட்டாட்சியின் உயர் நீதிமன்றத்தின் அனுபவத்தையும், ஆஸ்திரேலிய நாட்டு ஹைகோர்ட்டின் அனுபவத்தையும் ஒத்திருக்கிறது!

மிக விரிவான அரசியல் திட்டம் அமைந்திருப்பதால், வழக்குகள் விளைவதற்குரிய சூழ்நிலைகள் வளர்ந்துவிடாமல் குறைந்து வந்திருக்கின்றன என்று கூறவேண்டும். மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்குமிடையுள்ள தொடர்புகளைக் கூறுகின்ற அதிகாரங்களை இதற்குரிய மேற்கோள்களாக எடுத்துரைக்கலாம். கூட்டாட்சி அரசியலை ஏற்றிருக்கும் எந்த நாட்டிலும், மத்திய-மாநில அரசுகளுக்கிடையில் அதிகாரப் பிரிவினை குறித்தே ஏராளமான பூசல்கள் எழுவது வழக்கம். ஐக்கிய அமெரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளும் இத்தகைய அனுபவங்கள் பெற்று விளங்குகின்றன. சென்ற பதினாறு ஆண்டுகளாக அமலிலிருந்துவருகின்ற இந்திய அரசியலமைப்பை இயக்குவதில் இத் துறையில் ஒருசில வழக்குகளே இருந்திருக்கின்றன என்பது மிகவும் குறிப்பிடத்தக்க செய்தியாக விளங்குகிறது. நமது அரசியல் திட்டம் மிகவும் விரிவாக அமைந்திருப்பதையே இத்தகைய சிறப்புக்குரிய காரணமாகக் கூறலாம்.

‘வழக்கறிஞர்களின் சுவர்க்கம்’ என்ற கருத்திற்கு ஆக்கமளிக்கின்ற அதிகாரம் ஒன்றுக, திட்டத்தின் ஆதார உரிமைகளை எடுத்துரைக்கும் பகுதியைக் கூறலாம். அவைகளைக்குறித்தே பல வழக்குகள் இதுகாறும் எழுந்திருக்கின்றன. உயர் நீதிமன்ற அறிக்கைகளை மேல்நோக்காகக் கவனித்தாலும், பிற துறைகளைக் காட்டிலும் இத்

துறையிலேயே அதிக வழக்குகள் பதிவாகியிருப்பது விளங்கும். அரசியல் திட்ட விமர்சகர்கள் இப் பகுதியிலுள்ள விதிகளை ஏற்கும் போதே எச்சரிக்கை விடுத்திருக்கின்றனர். வழக்குகளின் ஊற்றாக இவை எப்பகுதியையும் மிஞ்சிவிடுமென்றும் அவர்கள் முன்னரே கூறியுள்ளனர். ஆனால், இத் துறையிலும் இவர்கள் எதிர்நோக்கியதைக் காட்டிலும் மிகக் குறைவான வழக்குகளே இருந்தனவென்பதும் திட்டத்தின் சிறந்த வெற்றியாகும். குடிமகனுக்கும் அரசாங்கத்திற்கும் இடையேயுள்ள பூசல் முடிவற்றதொரு பிரச்சினையாக இருந்துவருகிறது. ஆதார உரிமைகளை உறுதி செய்கின்ற எந்த அரசியல் திட்டமும், நீதித் துறையை அதன் காவலனாக அமர்த்திவிடுகிறது; அத்துடன் வழக்குகளுக்கும் அழைப்பு விடுக்கிறது. அமெரிக்கத் திட்டத்திலுள்ள 'உரிமை மசோதாவை' இதற்கேற்ற மேற்கோளாகக் கூறவியலும். கற்பனைக்கெட்டக்கூடிய எளிமையான நடையில் அமெரிக்க நாட்டு உரிமை மசோதா எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. ஆனால், வழக்குகள் விளைவது எவ்வகையிலும் குறைந்தபாடில்லை. இதற்கு நேர்மாறாக, அமெரிக்க உயர் நீதிமன்றம் ஆயிரத்திற்கும் மேலான வழக்குகளில் குடிமகனின் சுய உரிமைகளுக்கும், சமுதாயக் கட்டுப்பாட்டு விதிகளுக்குமிடையில் எழுகின்ற முரண்பாடுகளில் தீர்ப்பு வழங்கியிருக்கின்றது. ஆதார விதிகளைப் பொறுத்த ஷரத்துகள் விரிவான முறையில் அதைக் கூறுவதாலோ, அல்லது அத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் விதிவிலக்குகள், மற்றும் உபவிதிகளாலோ, ஆதார உரிமைகளைக் குறித்த ஏராளமான வழக்குகள் எழுந்துவிட்டன என்று கொள்வதற்கு இடமேயில்லை. ஜனநாயக ஆட்சியில் குடிமகன் தன் உரிமைகளைக் குறித்து மிகவும் விழிப்புடனிருக்கிறான். இவ் வழக்குகள் அதன் எதிரொலிகளேயாகும். இது மிகவும் ஆரோக்கியமானதோர் அறிகுறி. சட்ட அமைப்பிலுள்ள குறைபாடுகளை இவை எடுத்துக்காட்டுவனவாக இல்லை.

உறுதியற்ற தெளிவு குன்றிய கருத்து, இருபொருள் கொண்ட சொல்லாட்சி, குழப்பமிக்க வசன நடை என்ற குறைபாடுகளே சாதாரணமாக வழக்குகளை விளைவிக்கின்றன. இக் கண்கொண்டு நோக்குபவர்களுக்கு, ஆதியில் உருப்பெற்ற அரசியல் திட்டத்தின் பல விதிகள் திருப்தியற்றவை என்பது தெளிவாகத் தெரியவரும். பத்து ஆண்டுக் காலத்திற்குள் ஒன்பது திருத்தங்களும், பொதுவில் பல திருத்தங்களும் ஏற்பட்டிருப்பதற்கும் இதையே ஒரு காரணமாகக் கூற வேண்டும். திட்ட விதி 31, பொதுவில் சொத்துரிமையைக் குறித்துப் பேசுகின்றது. தனியொரு விதியைக்குறித்து எழுந்த வழக்குகளில் இது ஒன்றே மிக அதிகமான பூசல்களுக்குக் காரணமாக இருந்தது. இது உண்மையில் சிறந்ததொரு மேற்கோளாகவே விளங்குகிறது. தன்னாட்சி பெறுவதற்கு முன்பாகப் பன்னெடு நாட்களாக இந்திய நாடு அனுபவித்த அரசியல், சமுதாயப் பொருளாதாரக் குறைபாடு

களுக்கு நிவாரணம் தேடியளிக்கின்ற, அசாதாரணமான நெடிய சட்டத் தொகுதியில் இரு பொருள் கொண்ட அல்லது தெளிவற்ற விதிகளைக் காண்பது மிகவும் அரிது. அதன் பருத்த உருவத்தையோ, நுண்ணிய அரசியல் கருத்துகளையோ அடிப்படையாகக்கொண்டு அதை 'வழக்கறிஞர்களின் சுவர்க்க'மெனக் கூறுவது முற்றிலும் தவருகும். இதற்கு மாருக, அரசியல் திட்டம் இதுகாறும் சட்டவாதங்களுக்கு ஏராளமான வாய்ப்புகளை அளித்துவிடவில்லை; எதிர்காலத்திலும் அது வாய்ப்புகளை வழங்கிவிடுமென்றும் நாம் அஞ்சவேண்டியதில்லை. திட்டத்தை உருவாக்கிய சில வழக்கறிஞர்கள் சதிசெய்து திட்டத்தைக் குழப்பமிக்கதாக்கிவிட்டனர் என்றும் சொல்வதற்கில்லை. தன்னுட்சி பெறுகின்ற வேளையில் இந்திய நாட்டை எதிர்நோக்கியிருந்த ஏராளமான பிரச்சினைகள், மிகுந்த குழப்பம் விளைவிப்பவையாக இருந்தன. ஜனநாயக அடிப்படையில் திட்டமொன்றை உருவாக்கும் பொறுப்பேற்றிருந்த எந்த நாட்டு அரசியல் நிர்ணய சபையையும் இத்தகைய பல்வகையான விநோதப் பிரச்சினைகள் எதிர்நோக்கியிருந்திருக்கமுடியாதென்று உறுதியுடன் கூறலாம். எளிமையானதென்ற ஒரு காரணத்தாலேயே மிகச் சிறந்ததென்று கூறிவிட முடியாது. தேவையைப் பூர்த்தி செய்வதென்பது, சட்டத்தொகுதியொன்றின் இன்றியமையாத குணங்களில் ஒன்ருகும். ஓர் அரசியல் திட்டத்தின் சிறப்பை, இறுதியாக, அதனைச் செயல்படுத்துவதால் எழுகின்ற விளைவுகளைக்கொண்டே மதிப்பிட இயலும்.

## மற்றும் சில கண்டனங்கள்

பல அரசியல் நுணுக்கங்களைத் தாங்கிப் பெருவடிவில் வெளிவந்தமையால் 'வழக்கறிஞரின் சுவர்க்கம்' என்று அரசியல் திட்டத்தைத் தாக்கியதோடு நின்றுவிடாமல், மற்றும் பல வகைகளிலும் திட்டத்தைக் குறைகூறியுள்ளனர். அவைகளில் சிலவற்றை இங்குக் கூறியேயாக வேண்டும்.

(1) இந்திய நாட்டின் புராதன அரசியலமைப்பு முறை, மதியூகத்திற்கு இலக்கணமாகவும், ஒளிமிக்க பண்பாட்டு மரபைத் தோற்றுவிப்பதற்குக் காரணமாகவுமிருந்தது. தற்கால அரசியலமைப்புத் திட்டத்தின் எப் பகுதியும் இம் மரபுகளை உள்ளடக்கியிருப்பதாகத் தெரியவில்லை என்பது முக்கியமான குறைபாடுகளில் ஒன்று. அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினர்கள் இக் குறைபாட்டைச் சபையினர், மற்றும் நாட்டு மக்களின் கவனத்திற்குக் கொண்டுவருவதற்குத் தயங்கவில்லை. 'காந்தீயம்' அல்லது இந்திய தேசிய காங்கிரஸ் எத்தகைய இலட்சியங்களுக்காகப் போரிட்டுவந்ததோ, அவ்விலட்சியங்களும் திட்டத்தில் இடம்பெறவில்லை என்பதையும் பலர் எடுத்துக்காட்டினர். 'கிராமப் பஞ்சாயத்துகள், மற்றும் மாவட்டப் பஞ்சாயத்துகளை அடிப்படையாகக்

கொண்டு' திட்டம் வகுக்கப்படவேண்டுமென்று ஒருசிலர் எண்ணினர். தீவிரவாதிகளில் சிலர், மத்திய மாநில அரசுகளை ஒழித்துவிட வேண்டுமென்று கூறினர். இந்தியா முழுவதிலும் பல கிராம ஆட்சிகளே நிரம்பியிருக்கவேண்டுமென அவர்கள் விரும்பினர்.

இத்தகைய குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளிக்கையில், அரசியல் நிர்ணய சபையில் அம்பேத்கர் பின்வருமாறு கூறினார் :

"கிராமிய ஆட்சி வேண்டுமென்ற மதிமிக்க இந்தியனின் வேட்கை பரிதாபத்திற்குரியதன்று என்றாலும், அது எல்லையற்றது (நகைப்பு). மெட்காஃப் என்பவர் கிராமிய ஆட்சிகளை மிகையாகப் புகழ்ந்து பேசியிருப்பதால் இவ் வேட்கை மிகுந்தது. இவை, தங்கள் சுயதேவைகளைப் பூர்த்திசெய்துகொள்ளும் எல்லா வாய்ப்புகளையும் பெற்ற சிறு குடியரசுகளாக விளங்குவதோடு, அந்நியத் தொடர்புகளிலிருந்து முற்றிலும் விடுபட்டவையாகவுமிருக்கின்றன. கிராம-சமூகம் ஒவ்வொன்றும் ஒரு நிறைவுற்ற தனி அரசாக விளங்குகிறது. இந்திய நாடு பல புரட்சிகளையும், அரசியல் மாறுதல்களையும் கண்டு அல்லலுற்றிருக்கிறது என்றாலும், இன்றும் மக்கள் உயிருடனிருந்து சந்தோஷ வாழ்க்கை நடத்துவதற்கும், தான் பெற்ற சுய-உரிமைகளையும், தன்னாட்சியையும் நன்கு அனுபவிப்பதற்கும் இக் கிராம-சமூக அரசியல் முறைகளே பெரிதும் காரணங்களாக விளங்குகின்றன என மெட்காஃப் கூறியுள்ளார். ஆனால், நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பதில் தாங்கள் ஆற்றியுள்ள அருந்தொண்டைக் குறித்து இக் கிராம-சமூகங்கள் ஒருசிறிதும் சிந்திப்பதில்லை. இதன் காரணமென்ன? நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பதில் அவை கொண்ட பெரும் பங்கை மெட்காஃப் நன்கு சித்திரித்துள்ளார். அவர் கூறுவதாவது : 'பல அரசகுலத்தினர் ஒருவர் பின் ஒருவராக மண்ணோடு மண்ணாக மடிந்திருக்கின்றனர். பல புரட்சிகள் ஒன்றையடுத்து ஒன்றாகத் தோன்றியிருக்கின்றன. இந்துவும், பத்தானியனும், மொகலாயனும், மராத்தியும், சீக்கியனும், ஆங்கிலேயனும் முறையே எஜமானர்களாக இருந்திருக்கின்றனர். ஆனால், கிராம-சமுதாயங்களோ என்றும் ஒரே நிலையிலிருந்துவருகின்றன. விபத்துகள் நேருகின்றபோது அவை படை தாங்கித் தங்களைக் காத்துக்கொள்கின்றன. விரோதிகளின் படையொன்று நாட்டின் வழியாகச் செல்லுகின்றது. கிராம-சமூகத்தினர், தங்களுக்குச் சொந்தமான ஆடுமாடுகளை நாட்டெல்லைக்குள் அடக்கி, விரோதிகளின் குரோதத்தைத் தூண்டாது, படையைச் செல்வதற்கு அனுமதிக்கின்றனர்' ".

'நாட்டு வரலாற்றில் கிராம-சமூகத்தினர் இத்தகைய சாதனைகளைச் செய்து முடித்திருக்கின்றனர். இவை யாவும் அறிந்தும் அவைகளின் பெருமையை எவ்வாறு உணர முடியும்? எல்லாவிதத் துரதிர்ஷ்டங்களையும் தாங்கி, அவை உயிருடனிருக்கின்றனவென்பதென்னவோ உண்மையேயாகும். ஆனால், பிழைத்திருப்பதனால்மட்டும் என்ன பயன்,

எந்த நிலையில் உயிர்தப்பியிருக்கின்றனவென்பதே உண்மையான பிரச்சினையாக விளங்குகிறது. மிகவும் கீழ்த்தரமான சுயநலம் பற்றியே அவை பிழைத்திருக்கின்றன. இக் கிராமக் குடியரசுகளே இந் நாட்டின் சிதைவுக்குக் காரணமாயிருந்தன என்ற கருத்தையே நான் கொண்டிருக்கிறேன். சாதிப் பிரிவினையையும் மாநிலப் பிரிவினையையும் கண்டித்துரைக்கின்ற மக்கள், கிராம ஆட்சியை ஏற்றிப் பேசுவதற்கு முன்வருகிறார்கள் என்பதைக் காண வியப்பு மேலிடுகிறது. குறுகிய நாட்டுப்பற்றின் தேக்கிடமாகவும், மூடஅறிவின் குகையாகவும், குறுகிய மனப்பாங்கு சாதிப் பிரிவினையும் நீங்கலாக, இக் கிராமங்களில் வேறென்ன இருக்கிறது? வரைத் திட்டத்தில், கிராமத்தைப் புறக்கணித்து, குடிமகனை அடிப்படை அளவையாகக் கொண்டிருப்பதைக் காண நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்'.

சென்ற பதினைந்தாண்டுகளாக நாட்டிலுள்ள கிராமப் பஞ்சாயத்துகள் இயங்கிவருகின்ற கோலத்தைக் காண்பவர்கள், அம்பேத்கர் எடுத்துரைத்த குறைபாடுகள் மெத்த சரியானவை என்பதனை அனுபவவாயிலாக அறிவார்கள். கிராமப் பஞ்சாயத்துகள் நாட்டின் முதுகெலும்பைப் போன்றவை என்பதிலும், அவை நன்றாகச் செயல்படுவதிலேயே இந்திய ஜனநாயகத்தின் நிலையான தன்மையும் பாதுகாப்பும் அடங்கியிருக்கின்றன என்பதிலும் ஒரு சிறிதும் சந்தேகமேயில்லை. ஆனால், இன்றைய நிலையில் கிராமப் பஞ்சாயத்துகள் அக் குறிக்கோளிலிருந்து மிகவும் விலகியிருக்கின்றனவென்பதே உண்மையாக இருக்கிறது. சமீபகாலத்திற்குள், அத்தகையதொரு பணியை ஏற்பதற்கு அவை சித்தமாகித் தங்கள் நிலையை உயர்த்திக்கொள்ளக்கூடுமாவென்பது ஐயத்திற்கிடமாக உள்ளது. ஜனநாயக முறை நாட்டில் வேரூன்றித் தழைத்தோங்கவேண்டுமெனில், நல்லதோர் அஸ்திவாரம் தேவையாகிறது. கிராமங்களில் கல்வியறிவைப் பெருக்கி, கிராம சமூகத்தினரிடையில் குடிமையுணர்வைப் பெருக்குவதன்மூலமாகவே இம் முயற்சி வெற்றி பெறவேண்டும். 'கிராமியக் குடியரசுகள்' மிகப் பழமையான காலங்களில் தழைத்தோங்கி வளர்ந்திருந்தன என்ற ஒரு காரணத்தால், கைத்தொழில் கலை ஏற்றம் பெற்றிருக்கின்ற நிலையை மறந்து, இருபதாவது நூற்றாண்டின் மத்தியில் அரசியலமைப்புத் திட்டம் அதைப் புகுத்துவதற்கு முயன்றிருந்தால், குழப்பமும் அவலநிலையுமே எஞ்சியிருக்கக்கூடுமென்பதோடு, மிகுந்த தியாகத்தின் விளைவாக நாம் பெற்றிருக்கின்ற நாட்டின் ஒற்றுமையையும் மீண்டும் கைவிட்டு, என்றுமே திரும்பப் பெறமுடியாத நிலையிலேயே உழன்றிருப்போம்.

(2) கூட்டாட்சி முறையைக் குறைகூறுபவர்களை இரு வகைகளாகப் பிரிக்கலாம். மத்திய அரசின் செல்வாக்கு மிகவும் அதிகரிக்கப்பட்டுவிட்டது எனக் கூறுவர் ஒருசாரார். அவர்களுள் மற்றும் சிலர், மத்திய அரசை மேலும் வலுப்படுத்தவேண்டுமெனக் கூறுவர்.

திட்டம் இவ்விரு கருத்துகளையும் கொண்டு சமநோக்குடன் விளங்கு கிறது. அம்பேத்கர் கூறியதைப்போல :

'மத்திய அரசிற்குச் செல்வாக்கு வழங்கக்கூடாதென்று நீங்கள் மறுத்தாலும், அது வலிமை பெற்றுவிடுவதைத் தடுக்கவியலாது. இன்றைய உலக நிலையில் ஆட்சி ஒருமுகமாவது இயற்கை; அதைத் தவிர்க்க முடியாது. உதாரணமாக, ஐக்கிய அமெரிக்க நாடுகளில் கூட்டாட்சி அரசை எடுத்துக்கொள்வோம். அரசியல் திட்டம் அதன் செல்வாக்கை வரையறுத்துவிட்டது. ஆனால், மாநில அரசுகள் யாவற்றையும் பின்னணிக்கு ஒதுக்கிவிட்டு, அங்கு மத்திய அரசு மிகச் செல்வாக்குப் பெற்று எதிர்நோக்கியதற்கு அதிகமாகவே வளர்ந்துவிட்டது. இன்றைய சூழ்நிலையையே இதற்குக் காரணமாகக் கூறவேண்டும். அதே வகையான சக்திகள் இந்திய அரசாங்கத்தையும் கட்டுப்படுத்திவிடும். நமது மத்திய அரசும் மிக வலிமை பெற்றுவிடுவதை எவரது முயற்சியாலும் தடுத்து நிறுத்திவிட இயலாது. இதற்கு எதிராக, மத்திய அரசு வலிமை பெறுவதற்குத் துணையான சக்திகளையும், அப்போக்கையும் நாம் எதிர்க்கவேண்டும். தேவைக்கதிகமாக அது உணவருந்த முடியாது. அதன் நிறைக்கேற்பவே அதன் சக்தியும் அமைந்திருக்கவேண்டும். அதை மிகவும் வலிமைபெறச் செய்வது மடமை. அவ்வாறு செய்வோமாகில் தன் நிறையைத் தாளாது, தானாகவே அது சரிந்துவிடும்.'

சென்ற பதினைந்து ஆண்டுகளாகக் கூட்டாட்சி முறை மிக நன்றாக இயங்கிவருகிறதென்பதை அனுபவ வாயிலாக நாமறிவோம். மத்திய அரசு மிக வலிமை பெற்றிருப்பதால் மாநிலங்களை விழுங்கிவிடுமென்றும், மாநிலங்கள் ஆட்சி நிர்வாகத்தின் சிறிய உறுப்புகளாக மாறிவிடுமென்றும் விமர்சகர்கள் கூறி அச்சமுற்றனர். அவர்கள் எண்ணியவாறு எதுவும் நிகழ்ந்துவிடவில்லை. தங்கள் தனித்தன்மையையும் சுதந்திரத்தையும் இழந்துவிடாமல், திட்டம் வகுத்த எல்லைக்கோட்டையும் மீறிவிடாமல் இன்றும் மாநிலங்கள் செல்வாக்குடன் விளங்கிவருகின்றன. மத்திய-மாநில அரசுகளின் உறவைக்குறித்த வழக்குகள் அதிகமாக இல்லை என்று சொல்வதைக் காட்டிலும், மிகக் குறைவாக இருப்பது வியக்கத்தக்கது என்று கூறுவது மிகவும் பொருந்தும். கூட்டாட்சி முறையைக் கடைப்பிடித்துவருகின்ற பழமை வாய்ந்த நாடுகள் பலவற்றில் இதற்கு மாறான நிலையே இருந்துவருகின்றது என்பது சாதாரணக் குறைபாடுகளில் ஒன்று. திட்டம் செயல்படத் தொடங்கியதிலிருந்து பத்தாண்டுகளாக ஒன்பது திருத்தங்கள் ஏற்பட்டுவிட்டன. ஆயினும், மத்திய-மாநில அரசுகளிடையுள்ள உறவைக் குறித்துக் குறிப்பிடத்தக்க திருத்தங்கள் எதுவும் இல்லை. ஓரிரண்டு சீர்திருத்தங்களே ஏற்பட்டிருக்கின்றன. திட்டத்தில் நீண்டதொரு 'பொதுத் துறைப்பட்டியல்' காணப்படுகிறது. இதனால் வழக்குகளைத் தவிர்க்க

முடியாது என்று கருதியதோடுமட்டிலுமன்றி, வழக்குகளை அதிகரிக்கவும் இது வழிகோலிவிடுமென விமர்சகர்கள் அச்சமுற்றனர். அவ்வச்சம் காரணமற்றது என்பதை அனுபவ வாயிலாக நாம் அறிகிறோம். சட்டமியற்றுகின்ற அதிகாரத்தைப் பங்கீடு செய்தளிக்கும்போது, கூட்டாட்சி முறைத் தத்துவங்களுக்கு அதிக மதிப்பளித்து அவைகளை அடிப்படையாகக் கொள்ளாமல், நாட்டின் அரசியல், பொருளாதார நிலைகளைப் பங்கீடு செய்து அளித்தமையால் நம் நாட்டு முறை அதிக வெற்றி கண்டது என்பது மறுக்க முடியாத உண்மையாக இருந்து வருகிறது.

திட்டத்தில், ஆதார உரிமைகளைக் குறிப்பிடும் பகுதியையே மிகவும் அதிகமாகக் குறைகூறியிருக்கின்றனர். அங்கு எடுத்துரைக்கப்பட்டிருக்கும் ஆதார விதி ஒவ்வொன்றிற்கும், பல விலக்குகளும் உப விதிகளும் உடன்சேர்க்கப்பட்டுள்ளன. இதனால், முக்கிய விதியைக் கடைப்பிடிக்க முடியாதுபோய்விடுகின்றது. குடிமகனின் வாழ்வும், உரிமைகளும் ஆட்சியாளரின் கருணையைப் பெரிதும் எதிர்நோக்கியிருக்கின்றன. கொடுங்கோன்மையான சட்டங்களை இயற்றுவதைத் தடைசெய்வதற்கு எவ்வித முயற்சிகளும் மேற்கொள்ளப்படவில்லை என்று பல்வகையான குறைகளை எடுத்துக்கூறியிருக்கின்றனர்.

விதி விலக்குகளையும், உப விதிகளையும் குறித்து அம்பேத்கர் பின்வருமாறு கூறியுள்ளார்:

'ஆதார உரிமைகள் சுயரூபத்தோடு விளங்கவேண்டுமெனில், அவைகளை வரம்பற்ற முழு விதிகளாக்கவேண்டுமென விமர்சகர்கள் கூறுகின்றனர். தங்கள் கருத்தை வற்புறுத்துவதற்கு ஐக்கிய அமெரிக்க நாடுகளின் அரசியல் திட்டத்தையும், அதில் கண்டுள்ள பத்துத் திருத்தங்களிலுள்ள உரிமைச் சட்ட ஷரத்துகளையும் மேற்கோள்களாக எடுத்துக்கூறுகின்றனர். அமெரிக்க உரிமைச் சட்டத்தில் கண்டிருக்கும் ஆதார உரிமைகள் முழு வலிமை பெற்று விளங்குகின்றன என்றும், தடைகளும் விலக்குகளும் உடன் எடுத்துரைக்கப்படாமையே இதற்குரிய காரணம் என்றும் கூறுகின்றனர்.

இவ்வாறாக, ஆதார உரிமைகளின்மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டு முழுவதும் தவறான கருத்துகளின் அடிப்படையில் எழுந்தவை என்று கூறவேண்டியிருப்பதற்கு மிகவும் வருந்துகிறேன். முதற்கண் ஆதார உரிமை, சாதாரண உரிமை என்று பாகுபாடு செய்வது ஏற்கக்கூடிய வாதமாக இல்லை. ஆதார உரிமைகள் இயற்கையாகவே முழு வலிமை பெற்றவை என்றும், சாதாரண உரிமைகள் உடன்பாட்டின் விளைவாகத் தோன்றியவை என்றும், ஆதார உரிமைகள் சட்டத்தின் நன்கொடை என்ற பலவித வாதங்களுக்கும் இடமேயில்லை. ஆதார

உரிமைகளை அரசாங்கத்தின் நன்கொடையாகக் கருதுவதனால், அவைகளைக் கட்டுப்படுத்துவதற்கு அரசாங்கத்திற்கு உரிமையில்லை என்று கூறிவிட முடியாது.

இரண்டாவதாக, அமெரிக்கத் திட்டத்தில் ஆதார உரிமைகள் முழு வலிமைபெற்று விளங்குகின்றன என்று கூறுவது தவருகும். அமெரிக்கத் திட்டத்திற்கும் நமது வரைத் திட்டத்திற்கும் உருவ வேற்றுமை காண வியலுமே ஒழிய, பொருள் வேற்றுமை காணமுடியாது. அமெரிக்க நாட்டில் ஆதார உரிமைகள் முழு வலிமை பெற்றவை அல்ல என்பதைப் பொறுத்து வாது செய்வதற்கு வழியே இல்லை. நமது வரைத் திட்டத்தில் ஒவ்வோர் ஆதார உரிமைக்கும் துணையாக உபவிதிகளும், விலக்குகளும் எடுத்துரைக்கப்பட்டிருப்பதுபோல, அமெரிக்கத் திட்டத்தில் கூறப்பட்டிருக்கும் ஒவ்வோர் ஆதார விதிக்கும் துணையாக அமெரிக்க உயர் நீதிமன்றத்தின் தீர்ப்பு ஒன்று இருப்பதையும் காணலாம்.'

(3) இச்சைக்கு ஏற்றவாறு சட்டமியற்றப்படுவதைக் குறித்தும் ஆட்சித்துறையினரின் வரம்பு மீறிய நடத்தையையும், அதனுல் மக்களின் வாழ்க்கையும் உரிமைகளும் பறிமுதலாகிவிடுமென்ற குறைபாடுகளைக் கவனத்திற்குரியவையல்லவென்று தள்ளிவிட இயலாது. சட்ட ரீதியாகத் தீர்மானித்து உயிரையும் உரிமைகளையும் பறிப்பது முறையேயாகுமென்றும் 21ஆம் விதி குறிப்பிடுகிறது. பொது நலனுக்காகத் தனியாரின் சொத்துகளைத் தேவையெனில் அரசினர் கைப்பற்றிக்கொள்ளலாம். நஷ்ட ஈடாகச் சட்டமன்றம் சந்தர்ப்பத்திற்கேற்றவாறு ஒரு தொகையை நிர்ணயிக்கக்கூடும். இவ்விரு விஷயங்களிலும் எல்லையை வரையறுத்துக் கூறுகின்ற பொறுப்பு சட்டமன்றத்தினிடமே ஒப்படைக்கப்பட்டிருக்கின்றது. கொடுங்கோல் மனப்பாங்குடையோராகச் சட்டமன்றப் பெரும்பான்மையினர் இருக்க நேரிடுமெனில், ஆதார உரிமைகளுக்குப் பெருந்தீங்கு விளைய நேரிடுமென்பதோடு, குடிமகன் அதற்கு எதிராக எவ்வழியிலும் நிவாரணம் தேட இயலாது. அரசாங்கத்தின் தேவையைப் பொறுத்துக் 'கால வரையறையின்றி ஒருவனைச் சிறையிடலாம்' என்று சட்ட விதிகளிலொன்று கூறுகிறது. குடிமகனின் சுதந்திரத்தைப் பறிப்பதற்கு ஆட்சியாளரின் கைகளில் இது நல்லதோர் ஆயுதமாகப் பயன்படக்கூடும். ஆதார உரிமைகளை அனுபவிப்பதில் இவை யாவும் தடைகளாக இயங்குகின்றன. எனவே, இவ்வடிப்படைகளில் திட்டத்தின்மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டுகள் மிகவும் கவனத்திற்குரியவையாக விளங்குகின்றன.

(4) விளக்கம் தேவையற்ற சில விதிகள், 'அரசாங்க நெறிசெய் நியுதிகள்' என்ற தலைப்பில் திட்டத்தில் இடம்பெற்றுள்ளன. இவை கூளைப் பக்திமிக்க பிரகடனங்கள் என்றும், எவரையும் கட்டுப்படுத்து

கின்ற சக்தி அவைகளுக்கில்லை என்றும் குறைகூறப்படுகிறது. இக் குற்றச்சாட்டு தேவையற்றதென அம்பேத்கர் கருதுகின்றார். 'திட்டத்திலேயே அவ்வகையான விரிவான விளக்கத்தைக் காணலாம். நெறி செய் நியதிகளுக்குப் பிற சட்டங்களின் செல்வாக்கில்லை என்பதை நான் மனப்பூர்வமாக ஒப்புக்கொள்கிறேன். ஆனால், அவைகள் எவரையும் கட்டுப்படுத்தமாட்டா என்ற கூற்றை ஒப்புக்கொள்வதற்கு நான் தயாராக இல்லை. சட்ட ரீதியான கடுமை இல்லையென்பதால் அவை பயனற்றவை என்பதை நான் ஏற்கமாட்டேன்.'

சட்டமியற்றுபவர்களுக்கும் ஆட்சியாளர்களுக்கும் நெறிசெய் நியதிகள் அறத்தொகுதியாகப் பணியாற்றுவதோடு, அதிவிரைவில் அடையவேண்டிய நாட்டிற்குகந்த சமுதாயப் பொருளாதாரக் குறிக்கோளொன்றையும் கொடுத்து உதவுகிறது. மேலும், பொதுத் தேர்தல்கள் நடைபெறும்போது, ஒவ்வோர் அரசாங்கத்தின் சாதனைகளையும் மதிப்பிடுவதற்கு மக்களுக்கேற்ற உரைகல்லாகவும் பயன்படுகிறது. விளக்கம் தேவையற்ற உரிமைகள், காரணத்தை அடிப்படையாகக் கொண்ட உரிமைகள் என்ற பாகுபாட்டிலும் ஒரு நன்மை அடங்கியிருக்கிறது. உரிமை ஒவ்வொன்றிற்கும் தனிவகையான மதிப்பு உண்டு. எல்லா உரிமைகளையும் ஒரே வகையானவைகளாகச் செய்து விடாமல் இப் பாகுபாடு காப்பாற்றுகிறது.

(5) சிறுபான்மையினருக்கென்றும் சமூக நோக்கிலும் கல்வியறிவிலும் பின்தங்கியவர்கள் என்று கருதப்படுவோருக்கும் திட்டத்தில் சில பாதுகாப்புகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. இதையும் பலர் குறை கூறியிருக்கின்றனர். இச் செயலில் பொதிந்து கிடக்கின்ற அறிவுத் திறனைக் குறிப்பிட்டுப் பேசுகையில் அம்பேத்கர் கூறியதாவது : 'அரசியல் நிர்ணய சபை இவ்வாறு சிறுபான்மையினரின் உரிமைகளைப் பாதுகாத்தளித்திருப்பதை, என் அறிவிற்கு எட்டியவரையில், மெச்சத் தகுந்ததென்று எண்ணுகிறேன். இந் நாட்டைப் பொறுத்தவரையிலும் பெரும்பான்மையினரும் சிறுபான்மையினரும் தவறான வழிகளிலேயே சென்றிருக்கின்றனர். சிறுப்பான்மையினரின் உரிமைகளை மறுத்துரைப்பது பெரும்பான்மையினரின் பெருந்தவறாகும் ; அதைப் போலவே தங்களை நிலைநிறுத்திக்கொள்ள முயற்சி செய்வது சிறுபான்மையினரின் தவறாகும். எனவே, இரு சாதனைகளையும் நிறைவேற்றக் கூடிய உபாயம் ஒன்றைத் தேடவேண்டும். தொடக்கத்தில் சிறுபான்மையினரின் இருப்பினை அது ஒப்புக்கொள்ளவேண்டும். காலப் போக்கில் இரு சாராரையும் ஒன்றுகூட்டிவைக்கும் உபாயமாகவும் அது இருக்கவேண்டும். நிர்ணய சபை கூறியிருக்கும் உபாயத்தை நாம் வரவேற்கவேண்டும். அது இவ்விரு சாதனைகளுக்கும் ஏற்ற கருவியாகக் காணப்படுகிறது. சிறுபான்மையினர் உரிமைகளைப் பாதுகாக்கத் தேவையில்லை என்று வெறிபிடித்தலையும் கடுமைவாதி

களுக்கு நான் இரு விஷயங்கள் கூற விரும்புகிறேன். சிறுபான்மையினர் குமுறிக்கொண்டிருக்கும் எரிமலை என்பதை நினைவில் கொள்ளவேண்டும். இவ்வெரிமலை வெடித்துச் சிதறுமேயாகில், அரசாங்கம் முழுவதுமே அழிந்துவிடும். இத்தகைய சம்பவங்கள் நிறைந்த ஐரோப்பிய வரலாறு இதற்குத் தகுந்த மேற்கோளாக விளங்கி வருகிறது. தங்களுக்கு நீடித்த வாழ்வு அளிக்கின்ற பொறுப்பினைப் பெரும்பான்மையினருக்கே அளித்துவிடவும் சிறுபான்மையினர் தயாராகவிருக்கின்றனர். அயர்லாந்தை அரசியல் பங்கீடு செய்வதற்கான முயற்சிகள் நடைபெற்றுவந்தபோது, ரெட்மாண்ட் என்பவர் கார்சனிடம் வருமாறு கூறினார்: 'பிராடஸ்டென்டு சமயம் சார்ந்த சிறுபான்மையினருக்குத் தேவையான பாதுகாப்புகளைத் தயக்கமின்றிக் கேளுங்கள். ஐக்கிய அயர்லாந்து ஒன்றைச் சமைப்பதே நம் குறிக்கோளாக விளங்கவேண்டும்.' கார்சன் அளித்த விடை வருமாறு: 'உங்கள் பாதுகாவலர்களைக் குப்பைத் தொட்டியில் எறிந்துவிடுங்கள். நீங்கள் ஆட்சி செய்வதை நாங்கள் விரும்பவில்லை.' இந்தியச் சிறுபான்மையினர் எவரும் இத்தகைய கருத்துடையவரல்லர்; பெரும்பான்மையினரின் ஆட்சியை விசுவாசத்துடன் அவர்கள் ஏற்றிருக்கின்றனர். அவர்களும் சாதி என்ற அடிப்படையிலே பெரும்பான்மையினராவரல்லாது அரசியல் நோக்கில் பெரும்பான்மையினரல்லர். சிறுபான்மையினரைச் துச்சமாக எண்ணிவிடாமல் நன்கு மதித்து உரிய கௌரவத்துடன் போற்றிநடத்தவேண்டுமென்பதைப் பெரும்பான்மையினரும் தங்கள் கடமையென உணரவேண்டும். சிறுபான்மையினர் நிலைபெற்றிருப்பரா அல்லது அழிந்துவிடுவார்களா என்பதைப் பெரும்பான்மையினரின் நடவடிக்கைகளைக்கொண்டே தீர்மானிக்கவேண்டும். சிறுபான்மையினரை இழிவு செய்கின்ற மனப்பாங்கைப் பெரும்பான்மையினர் அறவே நீக்கிவிடுவார்களென்றால், சிறுபான்மையினர் என்ற ஒரு வகையினர் நீடித்திருப்பதற்கே வகையில்லாதொழிந்துவிடுவர். இயற்கையாகவே அவர்கள் மறைந்துவிடுவார்கள்.'

அரசியல் நிர்ணய சபை வரைதிட்டத்தை விரிவாக ஆராயத் தொடங்குவதற்கு முன்னதாகவே, மாநில அசெம்பிளிகள் அதை அலசி ஆராய்ந்து விரிவான சர்ச்சைகளை நடத்தியிருக்கின்றன. பொதுவில் திட்ட அடிப்படைகளைக்குறித்து யாவரும் நல்லெண்ணம் கொண்டிருப்பதும், உருப்பெற்று எழுகின்ற புதிய இந்திய நாட்டிற்கு ஏற்றதோர் அரசியல் ஏடாக அது விளங்குமென்று நம்பிக்கை தெரிவித்திருப்பதும் குறிப்பிடத்தக்க முக்கிய அம்சங்களாக விளங்குகின்றன. மத்திய—மாநில அரசுகளிடையே நிதிப்பிரிவினை செய்கின்ற விதிகளைக்குறித்து பலத்த கண்டனங்கள் எழுப்பியிருக்கிறார்கள். நிதியைப் பொறுத்தமட்டில் மாநிலங்கள் மத்திய அரசின் கருணையை எதிர்நோக்கியிருக்கின்ற நிலை இருக்கிறதென்பதை அவர்கள் சுட்டிக் காட்டியிருக்கின்றனர். மிக முற்போக்குடையவராயினும் சரி, அல்லது

மக்களில் மிகவும் பின்தங்கியவராயினும் சரி, திட்ட முழுவதையும் பய னற்றது என்று எவருமே ஒதுக்கிவிடவில்லை. உண்மையில் சோஷலிசக் கட்சி, இந்து மகாசபை என்ற இரு அரசியல் கட்சிகள் சுதந்திர இந்தியாவிற்கு ஏற்ற திட்டங்களைத் தாங்களாகவே தயாரித்திருக்கின்றன. அவைகள் சமர்ப்பித்துள்ள திட்டங்கள், அரசியல் நிர்ணய சபை உருவாக்கியுள்ள திட்டத்துடன் பெரும்பாலும் ஒத்திருக்கிறதென்பது மிகவும் வியப்பாக இருக்கிறது.

குறைபாடுகளற்ற ஒரு திட்டத்தை உலகில் எங்குமே நாம் காண முடியாது. இந்திய நாட்டின் திட்டமும் இப் பொது விதிக்கு விலக்கன்று. 'ஐடியலிசக் கருத்தையும் உண்மை வாதத்தையும் அது அற்புதமாகக் கலந்தளிக்கிறது. அவைகளை உலையிலிட்டுக் காய்ச்சிச் சம்மட்டியால் அடிக்கும்போது ஜனநாயக உற்பத்தி ஆலையின் இயக்குமுறையின் நுணுக்கங்களையும், நடைமுறையிலிருந்துவருகிற ஜனநாயக சக்திகள் யாவற்றையும் நன்குணர்ந்து பணியாற்றியிருக்கின்றனர். எண்ணம் நுண்ணிய ஆய்வு, வாதப் பிரதிவாதங்கள் ஆகியவற்றில் மிக்க கவனம் செலுத்தியிருக்கின்றனர். கருத்து வேற்றுமைகள் மிகவும் கடுமையாகவே இருந்திருக்கின்றன. ஒவ்வொரு சமயத்தில் வாதங்கள் உச்ச நிலையை அடைந்துவிடுவதுமுண்டு. அதன் கடுமையைக் கண்ணுற்ற ஃபிராங்க் அந்தோணி என்பவர், ரோமானியர்களிடையே நிலவிய 'ஆர்குமென்டம் அட் பாக்குலம்' அல்லது 'உடல் வலிமையைப் பயன்படுத்தி உடன்பாடு கொள்வது' என்ற முறையையே கடைப்பிடித்து விடுவார்களோ என்று அச்சமுற்றிருக்கிறார். பொதுவாகக் கூறுமிடத்து, உண்மையில் சகிப்புத் தன்மையும் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும் போற்றுதற்குரிய அளவில் இருந்திருக்கின்றன. புதியதொரு சுதந்திர இந்தியாவைச் சமைப்பதென்பது நம்மை எதிர்நோக்கியுள்ள மாபெருஞ் சாதனையாக உள்ளது. இதற்கெனக் கருத்துகளைப் பறிமாறிக்கொள்வதற்கும், கூட்டுறவை வளர்ப்பதற்கும் யாவருக்கும் பொதுவானதொரு கருவியாக நமது அரசியல் திட்டம் வெளிவந்திருக்கிறது. அம்பேத்கர் கூறியதாவது : 'இது நடைமுறையில் பயன்படுமென்றே நான் எண்ணுகிறேன். அது நெகிழ்வுடையது என்றாலும், போர்காலங்களிலும் மற்றும் சமாதானம் நிலவுகின்றபோதும் நாட்டில் ஒற்றுமை நிலவச் செய்து ஒன்றுகூட்டும் வலிமை வாய்ந்தது என்று கருதுகிறேன். உண்மையைக் கூறுவதற்கு எனக்கு அனுமதியளிப்பீர்களென்றால், இப் புதிய திட்டத்தைச் செயல்படுத்துவதால் தவறுகள் விளையுமாயின், அதற்கு நாம் ஒரு விலைமதிப்பற்ற திட்டத்தைக் கடைப்பிடித்தோமென்பது ஒருநாளும் காரணமாகாது. மானிடன் குறுகிய நோக்குடையவனாயிருந்தான் என்றே நாம் கூறவேண்டியிருக்கும்'.

# 2. அடிப்படைக் கோட்பாடுகள்

நாகரிக வளர்ச்சியுற்ற அரசொன்றிற்கு அதிகாரப் பிரிவினையே அடிப்படைத் தேவை என்று கொள்வோமெனில், அதைச் சரிவர நிறைவேற்றுவதற்கு அரசியலமைப்புத் திட்டம் மிகப் பயனுள்ள ஒரு கருவியாகும். அரசியல் முறைமைக்குட்படுகை என்பது தற்கால உலகம் கண்ட வெற்றியாக விளங்குகிறது. ஆனால், அது மிகச் சமீப காலச் சாதனையாகும். எனவே, அது இன்றும் வேரூன்றி நிற்கவில்லை. இதற்கு நடுவில், ஒவ்வோர் அரசியலமைப்புத் திட்டமும், சில கோட்பாடுகளை அடிப்படைகளாகக்கொண்டு அரசொன்றைத் தோற்றுவிக்க முற்படுகின்றன. இக் கோட்பாடுகள் ஏறக்குறைய சமுதாயத்தினரின் ஒப்புதல் பெற்றவைகளாக விளங்குகின்றன. சில கோட்பாடுகள் பொதுவாக எல்லா அரசியலமைப்புத் திட்டங்களிலும் காணப்படுகின்றன. ஆனால், மற்றும் சில ஒவ்வோர் அரசியலமைப்பிற்கும் தனிச் சிறப்பை அளித்துவருகின்றன. அரசியலமைப்புத் திட்டம் உருவாகின்ற சூழ்நிலையையும், அவை பூர்த்திசெய்யவேண்டிய தேவைகளையும் பொறுத்து இவ் வேற்றுமைகள் மாறுதலடைகின்றன. இந்திய நாட்டு அரசியல் திட்டமும் இப் பொது விதிக்கு விலக்கன்று. அதற்கென்று தனியான அடிப்படைக் கோட்பாடுகளும் உண்டு. எனவே, திட்டத்தைக் கற்பதற்கு முதல் படியாக அதன் அடிப்படைக் கோட்பாடுகளை நன்கு அறிந்துகொள்வதற்கு முயற்சி செய்வோம். இந்திய நாட்டு ஜனநாயக ஆட்சிமுறைக்கு அவைகளே அஸ்திவாரங்களாக விளங்கி வருகின்றன.

திட்டத்தைக் கவனமாகப் படிப்பவர்களுக்கு அதில் ஆறு அடிப்படைக் கோட்பாடுகள் உள்ளடங்கியிருப்பது தெளிவாக விளங்கும். இவ்வடிப்படை விதிகள் ஆறும் இந்திய ஜனநாயகத்தின் அடிக்கற்களாக விளங்கிவருகின்றன. அவை வருமாறு: (1) செல்வாக்குப் பெற்ற இறைமை, (2) ஆதார உரிமைகள், (3) அரசாங்கத் திட்ட நெறி செய் நியதிகள், (4) நீதித்துறையின் சுதந்திரம், (5) கூட்டாட்சி முறை, (6) அமைச்சவை ஆட்சி.

## செல்வாக்குப் பெற்ற இறைமை

தொடக்கத்திலேயே மக்களின் இறைமைச் சக்தியைத் திட்டம் ஏற்று அறிவிக்கிறது. அரசியலமைப்பின் முகப்பில் காணப்படும் வாசகம் பின்வருமாறு: 'இந்திய மக்களாகிய நாங்கள் இந் நாட்டை ஆட்சி முதன்மை பெற்ற ஜனநாயகக் குடியரசாக அமைப்பதென்று மனமாரத் தீர்மானித்து'. இக் கருத்து திட்டத்தில் பல இடங்களில் மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்படுகின்றது. தேர்வுகளைக் குறித்துப் பேசுகின்ற அதிகாரத்தில் இதை அதிகமாகக் காணலாம். 'மக்கள் சபைக்கும், ஒவ்வொரு மாநிலச் சட்டமன்றத்திற்கும் வயதுவந்த மக்களின் வாக்குரிமையைப் பயன்படுத்தியே உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமெனத்' திட்டத்தின் 326ஆவது விதி கூறுகிறது. இதனால் மத்தியத் துரைத்தனமும் மாநிலத் துரைத்தனங்களும் மக்களிடமிருந்தே அரசு செலுத்துகின்ற உரிமையைப் பெறுகின்றன. மாநிலச் சட்டமன்றங்களுக்கும் பாராளுமன்றத்திற்கும் குறிப்பிட்ட காலங்களில் மக்கள் தங்கள் பேராட்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். மேலும், ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருப்பவர்கள் சட்ட மன்றத்திற்கு உத்தரவாதிகளாகவும், அதன்மூலமாக மக்களுக்குப் பணி செய்பவர்களாகவும் ஆகிவிடுகின்றனர். எனவே, அரசாங்க விவகாரங்களில் இறுதியாக மக்களின் சித்தமே மேலோங்கி நிற்கின்றது. ஆனால், ஒருசில சுய நலக்காரர்களின் எண்ணங்களுக்கு அதில் செல்வாக்குக் கிடையாது. இதையே, 'செல்வாக்குப் பெற்ற இறைமை' என்று குறித்திருக்கிறோம்.

தொன்றுதொட்டு ஏராளமான மன்னர்களாட்சியும், புரட்சிகளும், அரசியல் திட்டங்களும், சிறந்த அதிகார வர்க்கங்களும் வழக்கிலிருந்திருக்கின்றன. ஆனால், வயதுவந்தவர்களுக்கு வாக்குரிமை, பொதுமகன் பேராளைத் தேர்வது என்ற வழக்கங்கள் மிக அண்மையிலேயே தோன்றியிருக்கின்றன. சந்தைப்பேட்டையில் பொதுமக்கள் யாவரும் திரண்டு, ஓர் சபையாக அமர்ந்து, சமுதாயத்தை எதிர்நோக்கியிருக்கின்ற பிரச்சினைகளுக்கு முடிவுகாண்பதில் ஓர் இலட்சிய ஜனநாயகம் துலங்குகின்றதென அரிஸ்டாடில் முடிவு செய்தான். இன்று வயதுவந்த ஒவ்வொரு குடிமகனும், ஆண்-பெண் அடங்கலாக, ஓட்டுச் சாவடிக்குச் சென்று, நாட்டின் அரசியல் நிர்வாகத்தில் பங்கு பெறுவதற்குத் தகுதியுடையவன் என்று எவனைக் கருதுகிறார்களோ, அத் தகுதி பெற்றவனைப் பேராளாகத் தேர்வதற்கு அவன் அல்லது அவளது வாக்குரிமையை அளிக்கிறான். இவ்வாறு பேராட்களைப் பெறுவதற்குத் தேர்தல் என்பது ஒரு வழியாகக் கடைப்பிடிக்கப்படுகிறது. வேறு சில வழிகளும் உண்டு. ஆனால், தேர்தல் ஒன்றே மிகச் சிறந்த ஜனநாயக முறையாகக் கருதப்படுகிறது. அம் முறைப்படி வயதடைந்த குடிமகன் ஒவ்வொருவனும் குறிப்பிட்ட இடைவெளி

களில், ஆட்சியாளனைத் தேர்ந்தெடுக்கும் பணியில் பங்குபெறும் வாய்ப்பை அடைகிறான். எனவே, அதைச் சிறந்த ஜனநாயக முறை என்கிறோம். ஆளப்படுவோரின் சம்மதி பெற்ற ஒரு ஜனநாயக அரசு அமைப்பதற்குத் தடையற்ற பொதுத் தேர்தல்கள் எத்துணைச் சிறப்பு வாய்ந்தவைகளாக விளங்குகின்றன என்பதை இதனினும் மிகைப் படுத்தி நாம் கூறவியலாது.

இந்திய மக்களில் பெரும்பாலோர் மடமையிலும் கல்வியறிவு இன்மையிலும் உழலுபவர்கள் என்பதை அரசியல் நிர்ணய சபை நன்கு உணர்ந்திருந்தபோதிலும், எளிய மக்களின் மீது மிக நம்பிக்கை கொண்டு ஜனநாயக முறையின் இறுதி வெற்றியையும் மனத்தில் வைத்து, வயதுவந்தோர்க்கு வாக்குரிமை என்ற கொள்கையை ஏற்றிருக்கின்றனர். 'அறிவுப் பெருக்கும், பொதுநலனும், வாழ்க்கைத் தர உயர்வும், பொதுமகனின் சுகமும் வளமும் மிக்க வாழ்வும்' வயது வந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையிலமைந்த ஜனநாயக ஆட்சி முறையாலேயே ஏற்படவேண்டுமென்ற கருத்தை நிர்ணய சபை கொண்டிருந்தது.

செல்வாக்குப் பெற்ற இறைமை என்னும் தத்துவம், திட்டத்தில் இடம்பெற்றிருக்கின்ற இலட்சியக் கனவு மட்டுமன்று; சென்ற பதினைந்து ஆண்டுகளாகத் திட்டம் இயங்கிவருவதில் உயிருள்ள ஓர் உண்மையாகவே அது விளங்கியிருக்கிறது. இது வரையிலும் இரண்டு பொதுத் தேர்தல்கள் நடைபெற்றிருக்கின்றன (1951-52, மற்றும் 1957). மடமை மிக்கவர்களாகத் தோன்றும் கல்வி யறிவில்லாத மக்கள் ஓட்டுரிமையைத் தம்மிச்சையாகப் பயன்படுத்த இயலாதவர்களல்லர் என்பதை இவ்விரு தேர்தல்களும் அனுபவ வாயிலாக எடுத்துக்காட்டியிருக்கின்றன. அவர்கள் கைவசமுள்ள விலைமதிப்பற்ற இவ்வுரிமை, சுதந்திர இந்தியக் குடிமகனின் சுய கௌரவத்தை மிகவும் உயர்த்தியிருக்கின்றது. சொத்து, கல்வியறிவு, சமூக அந்தஸ்து, மற்றும் முக்கியத்துவம் என்ற அடிப்படைகளை யெல்லாம் நீக்கிவிட்டு, சிறந்த ஜனநாயகக் கொள்கையான 'ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரே வாக்குரிமை, யாவரும் சமம்' என்பதைப் பொது மகன் கையிலுள்ள இவ்வுரிமை நிலைநிறுத்திவிடுகிறது. அவர்கள் 'மரம் வெட்டுபவர்களாகவும், தண்ணீர் சுமப்பவர்களாகவும்' இனியு மில்லை என்ற நம்பிக்கையை அவர்களுக்கு ஊட்டிவிடுகிறது. கூட்டுறவால் புதியதொரு சமுதாயத்தை நிறுவுவதில் ஈடுப்பட்டிருக் கின்ற பரந்த புதிய மனித சமூகத்தின் முக்கிய உறுப்பினன் என்று அவன் பெருமிதமடைகிறான். குடிமக்களிடையில் நிலவுகின்ற ஒற்று மையாலேயே நாட்டை வலுப்படுத்த இயலும் என்ற உண்மை அவ னுக்குப் புலனாகத் தொடங்குகிறது. குடிமகனின் நல்லதிர்ஷ்டத்தையும் நாட்டின் நல்லதிர்ஷ்டத்தையும் ஒன்றுக்கொன்று பயனுள்ள கடமை

என்ற கட்டுப்பாட்டினால் ஒன்றோடொன்று பிணைக்கின்ற பாலமாக வோட்டுரிமை விளங்கிவருகிறதென்பதை அவர்கள் அதிவிரைவில் உணர்ந்துவருகின்றனர். இவ்வுணர்வும், எதிர்காலத்தில் அடுத்து வருகின்ற தேர்தல்களில் இவ்வுணர்வின் எதிரொலியும் வலிமையுடன் நெடுநாட்கள் நிலைத்துநிற்கக்கூடிய அடித்தளங்களாக அமைந்து, அதன் மேல் எழுகின்ற கட்டடமாக இந்திய ஜனநாயக அரசியல் தழைத் தோங்க இருக்கிறது.

தடையற்ற தேர்வுகளைத் திரளான மக்களுக்கு அறிவு புகட்டு கின்ற கூடங்கள் எனக் கருதலாகும். பொது அறிவு குறைந்த சமுதா யத்தில் வயதுவந்தவர்களுக்கு வாக்குரிமை என்ற கொள்கையுள்ளே புதைந்து கிடக்கின்ற பேராபத்துகளைக் கல்வியறிவைத் தடையின்றிப் பரப்புவதன்மூலமாகவே ஒருவாறு குறைக்க இயலும். எண்பது சதவிகிதத்தினர் கல்வியறிவின்றி இருக்கும் இந்தியாபோன்ற நாட்டில் பரந்த கல்வுயறிவைப் புகட்டுவதென்பது கைக்கெட்டாது வெகு தூரத்திலேயே இருந்துவருகிறது. குறைந்தபட்ச கல்வியறிவு புகட்டு கின்ற நிலை ஏற்படும்வரை, இந்திய மக்களால் தங்களுக்கு அளிக்கப் பட்டிருக்கும் வாக்குரிமைகளைச் சரியான வகையில் பயன்படுத்த முடியாது என்று நிலையைத் தவருகப் புரிந்துகொள்வது சரியன்று. கல்வியறிவின்மை மடமையாகிவிடாது. தடையற்ற தேர்தல்களின் போது, பொதுநலனுக்காக வெவ்வேறு சமுதாயத் திட்டங்களையும் குறிக்கோள்களையுமுடைய போட்டியிடுகின்ற கட்சிகள் மக்களை அணுகி உரிமைகளைக் கோருவதற்கும், அதனுல் கருத்துகளைப் பரிமாறிக் கொள்வதற்கும் உரிய வாய்ப்புகள் ஏற்படுகின்றன். கல்வியறிவு குறைந்த மக்களுக்கு அரசியலறிவு பெறுவதற்கேற்ற தகுந்த உபாயமாக இது விளங்கிவருகிறது. இந்த வாய்ப்பினையே திட்டமும் உறுதியளிக் கின்றது. வயதுவந்தவர்களுக்கு வாக்குரிமை வழங்குவதோடு மட்டிலும் திட்டம் தீட்டியவர்கள் திருப்தியடைந்துவிடவில்லை. கட்டுப் பாடின்றித் தேர்தல்கள் நடைபெறவேண்டுமென்பதற்காகத் தேர்தலைக் குறித்த விஷயங்கள் யாவற்றையும் கவனிப்பதற்குச் சட்ட ரீதியாகச் செல்வாக்குப் பெற்றிருக்கும் தனித்துறை யொன்றையும் நிறுவியிருக் கின்றனர். எவ்விதக் கட்டுபாடுமின்றிப் பேராட்களைத் தேர்வதென்பது இந் நாட்டில் கடைப்பிடிக்கப்பட்டுவருகிறது. வாக்காளருக்குப் பேராட்களை தேர்ந்தெடுக்கும் சுதந்திரத்தையும், இரகசியமாகத் தேர்ந் தெடுக்கும் வாய்ப்பினையும் அது வழங்குகிறது. சாதாரணக் குடிமகன் எத்தகைய கல்வியறிவும் இல்லாதவனுக விளங்கும்போதும் தன் இச்சைப்படி பேராட்களைத் தேர்வதில் தெளிந்த பொது அறிவைப் பயன்படுத்துகிருன் என்பதை, நடைபெற்றிருக்கின்ற இரு பொதுத் தேர்தல்களிலிருந்தும் அனுபவ வாயிலாக நாமறிவோம். சுயநலங் கொண்ட அரசியல்வாதிகள், பணத்தாலோ, சமூகத்தில் உயர்ந்த தரலோ, அல்லது உத்தியோக செல்வாக்கினுலோ குடிமகனைத் தங்கள்

விருப்பத்திற்கேற்ற கருவியாகப் பயன்படுத்திக்கொள்ள இயலவில்லை. இந்திய மக்களில் பலர் மடமை, வறுமை, சமுதாயப் பிற்போக்கு என்ற குறைபாடுகளுடையவர்களேயென்றாலும், செல்வாக்குடைய இறைமை நீங்காது என்றும் இந் நாட்டில் தழைத்திருக்குமென்பதற்கு இஃது ஒன்றே வரவேற்கத்தகுந்த உத்தரவாதமாக விளங்குகிறது.

## ஆதார உரிமைகள்

எந்த ஓர் அரசின்கீழ் மக்கள் வாழ்ந்துவருகிறார்களோ, அதை அவர்களே குறித்த காலங்களில் அமைத்துக்கொள்ளும் வாய்ப்பினை வழங்குகின்ற ஓர் அரசியல் திட்டம் ஜனநாயக ஆட்சி முறையின் முக்கியக்குணாதிசயங்களிலொன்று. என். ஹெரால்டு லாஸ்கி என்பவர் தான் எழுதிய 'நவீன அரசில் உரிமைப் பிரச்சினை' (Liberty in the Modern State) என்னும் தனது நூலில் குறிப்பிடுகிறார். இவ்விலட்சியம் நமது திட்டத்தில் எவ்வாறு பாதுகாக்கப்பட்டிருக்கிறதென்பதை நாம் இங்கு கண்டோம். குடிமக்களுக்குச் சில ஆதார உரிமைகளைப் பெற்றுத்தருவதும், அவ்வுரிமைகளைப் பயனுள்ளதாகச் செய்வதன் பொருட்டு நீதிநிர்வாகத்தையும் ஆட்சித் துறையையும் தனியாகப் பிரிப்பதும் ஜனநாயக ஆட்சியின் மற்றும் சில குணாதிசயங்கள் என அடுத்தபடியாக லாஸ்கி தனது நூலில் குறிப்பிட்டுள்ளார். பேச்சுரிமை, தகுந்த காரணமின்றிக் கைதுசெய்யாமை போன்ற சில ஆதார உரிமைகளைப் பாதுகாப்பதற்காக உரிமை மசோதா ஒன்றைத் தயாரித்து வழக்கத்திலிருத்திவரும் கடமையாகுமென்று அவர் மேலும் குறிப்பிடுவார். ஜனநாயக ஆட்சி நன்றாக நடைபெறுவதற்குச் 'சட்ட ஆதிக்கம்' மிகவும் இன்றியமையாதது என்றும் அவர் கூறுவார். 'சட்ட ஆதிக்கம்' பெற்றிருக்கும் நாடுகளிலேயே ஜனநாயக முறை இயங்க முடியும். ஜனநாயக ஆட்சிமுறையின் வெற்றியோ அல்லது தோல்வியோ, பொதுவில் குடிமக்கள் அனுபவித்துவருகின்ற மக்களுரிமைகளைப் பொறுத்தே தீர்மானிக்கப்படுகிறது.

'சுய உரிமை' என்பதற்குப் பொருத்தமான இலக்கணம் கூறிவிட முடியாது. 'சுய உரிமை என்பதற்குப் பொருத்தமான இலக்கணத்தை உலகத்தின் எப் பகுதியும் கண்டதில்லை; தற்போது அதைப் பெற வேண்டுமென்று அமெரிக்க மக்கள் துடிக்கின்றனர்' என்று 1864ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 18ஆம் தேதியன்று ஆப்ரகாம் லிங்கன் கூறினார். அமெரிக்க நாட்டு உள்நாட்டுப் போர் முடிந்ததும் அடிமைப் பிரச்சினையைக்குறித்து அவர் பேசியபோதே இவ்வாறு கூறினார். 'சுய உரிமை வேண்டுமென்று நாமெல்லோரும் கூச்சலிடுகிறோம். ஆனால், அச்சொல்லைப் பயன்படுத்தும்போது நாமெல்லோரும் ஒரேவிதப் பொருளை மனத்தில் கொள்வதில்லை. தங்களுக்குத் திருப்தியளிக்கின்ற வகையில்

செயல்படுவதும், தனது உழைப்பின் பயனை மனத்தில் தோன்றியவாறு அனுபவிப்பதுமே 'சுய உரிமை' என்று சிலர் கூறுகின்றனர். பிறரைத் தங்களிச்சைக்கேற்றவாறு நடக்கச் செய்வதும், பிறரது உழைப்பால் பெறும் பலன்களைத் தங்கள் புத்திக்கெட்டிய வகையில் பயன்படுத்துவதும் 'சுய உரிமை'யாகும் என்று மற்றும் பலர் கருதிவருகின்றனர். ஒரே பெயரில் முரண்பாடுள்ளவையும் சாதிக்க இயலாதவையுமான இரு கருத்துகளை நாம் காண்கிறோம். தங்களுக்கு எதிரான கொள்கைக்குக் கொடுங்கோன்மை என்று பெயரிட்டு, பிடித்தவைகளையும் வெறுப்பவைகளையும் முறையே குறிப்பதற்குத் தங்கள் நோக்கில் முரண்பாடுள்ள 'கொடுங்கோன்மை, சுய உரிமை' என்ற இரு சொற்களையே பயன்படுத்தியும் வருகின்றனர்.

ஆட்சி பீடத்திலமருகின்ற பெரும்பான்மையினர், தங்களை இன்றியமையாதவர் என்று நினைத்துக்கொள்ளும் மனப்பாங்கை வளரவிடாமல், உண்மையான ஜனநாயகம் என்றும் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். மக்களின் உள்ளங்களில் எழுகின்ற உணர்வுகள் துரைத்தனத்தின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தவேண்டுமென்று ஜனநாயக முறை விரும்புவதைப்போல, மக்களின் மனவெழுச்சிகளும் கட்டுப்பாடுகளுக்கடங்கியவையாக இருக்கவேண்டுமென்று மக்களாட்சி முறை அரசியல் விரும்புகிறது. அவ்வாறு கட்டுக்கடங்காது எழுகின்ற உணர்ச்சிகள் பெரும்பான்மையினரின் கொடுங்கோன்மையாக மாறிவிடுகிறது. அரசியல் போட்டி என்ற உரிமையையும் அது பறித்துவிடுகிறது. துரைத்தனம் தன்வசமுள்ள செல்வாக்கைப் பயன்படுத்தி அரசியலதிகாரத்தை நிரந்தரமாகத் தேடிக்கொள்ள வகை செய்வதாவதோடு, மற்றுமொரு பெரும்பான்மைக் கட்சி தோன்றவிடாமல் தடுத்துவிடவும் கூடும். மேலும், தன் எண்ணமும் நடத்தையுமே மெத்த சரி என்றும், தனது சுதந்திரத்தைத் தடைசெய்யக்கூடிய உயர் சக்தி எதுவுமில்லை என்றும் நினைத்து இறுமாப்படையவும் வழியாகும். லாஸ்கி என்பவர் கூறுவதுபோல, 'அரசாங்கமொன்றில் எல்லையற்ற அரசியலாதிக்கம் பெற்ற மனிதக் கூட்டமொன்று இருக்குமாயின், அவர்கள் எந்த மக்களின்மீது ஆட்சி செலுத்துகின்றனரோ அவர்கள் சுதந்திரமாக வாழ முடியாது'. அத்தகைய சூழ்நிலையொன்று முளைத்தெழுமாயின், தனி மனிதனின் முயற்சியைச் சோதிப்பது போன்று, ஜனநாயக அரசின் சில முக்கியக் குணதிசயங்கள் அறவே ஒழிந்துவிடக் கூடும். அதற்கு மாறாக வாய் பேசாது கீழ்ப்படிவதும், ஆணைகளைக் கடைப்பிடிப்பதும் வழக்கமாகிவிடும். இவை இரண்டும் சர்வாதிகார ஆட்சியின் முக்கியக் குணதிசயங்களாகும். நவீன ஜனநாயக ஆட்சி முறையை இயக்குவதில் பொதிந்து கிடக்கின்ற பேராபத்தாக இதைக் கொள்ளலாம். இப் பேராபத்தைத் தடுப்பதற்கு ஏற்ற பாதுகாப்புகளை அமைக்கவேண்டும்,

இத்தகைய நிலை ஏற்படாமல் காப்பதற்கென்று திட்டத்தில் இரு வகையான உபாயங்களை ஏற்படுத்தலாம். முதலாவதாகத் தனி மனிதனின் ஆதார உரிமைகள் சிலவற்றை எடுத்துரைத்து, அரசாங்கத்தின் தலையீட்டையும் தடுத்துவிடலாம். இரண்டாவதாக, அரசாங்கத்தின் அதிகாரங்கள் யாவற்றையும் பலவாருகப் பிரித்து, ஒவ்வொரு பகுதியையும் தனியோர் இலாகாவின் பொறுப்பில் அமைத்து, மனிதக் கூட்டமொன்று உரிமைகள் யாவற்றைவும் கைப்பற்றிவிடாமல் தடுக்கலாம். இவ்விரண்டு உபாயங்களில் இந்திய அரசியல் திட்டம் முதல் உபாயத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறது. குறிக்கோளை அடைவதற்கு ஆதார உரிமைகளை எடுத்துரைப்பதோடு, சுதந்திர மிக்க நீதித்துறையையும் அமைத்து, அவ்வுரிமைகளை உத்தரவாதத்துடன் மக்கள் அனுபவிக்கின்ற வகையையும் தேடியுள்ளது. இவ்வாதார உரிமைகள் வழங்கப்பட்டிருப்பதால், ஆட்சித்துறை, சட்டத்துறை ஆகியவைகளின் செல்வாக்கு வரையறுக்கப்பட்டுள்ளது. சட்ட மன்றம் மக்களின் ஆதார உரிமைகளைப் பறிக்கும் நோக்கமுள்ள சட்டங்களை இயற்ற முடியாது. ஆட்சித்துறை அலுவலரும் மக்களுடன் பழகுகின்றபோது ஒருசில வழிமுறைகளையும், ஒழுங்கு முறைகளையும் கையாள வேண்டும். இவ்வாறு அடிப்படைச் சுதந்திரத்தைப் பாதுகாக்கின்ற அரசியல் திட்டம் அரசாங்கத்துறைகள், மற்றும் தனி மனிதனின் செல்வாக்கையும் ஓரளவில் கட்டுப்படுத்தியுள்ளது; துரைத்தனத்திற்கும் மக்களுக்குமிடையில் ஒருவகையான மதில் சுவரை எழுப்பியிருக்கிறது என்று அனுமானிக்கவும் இடமிருக்கிறது.

குடிமகன் ஒவ்வொருவனும் மானிடனாய்ப் பிறந்துவிட்ட ஒரு காரணத்தாலேயே சில உரிமைகளை அனுபவிக்க வேண்டுமென்ற அடிப்படைக் கொள்கையைத் திட்டம் உறுதி செய்கிறது. உரிமைகளை அனுபவிக்கின்ற வாய்ப்புப் பெரும்பான்மையினரின் இச்சையைப் பொறுத்ததன்று. எந்தப் பெரும்பான்மையினராலும் அவ் வாய்ப்பைப் பறிக்கவியலாது. சட்டரீதியாக ஆட்சி செலுத்துகின்ற வாய்ப்பினைப் பெரும்பான்மையினர் உண்மையில் ஆதார உரிமைகளை மக்கள் அனுபவிக்கின்ற வாய்ப்பிலிருந்தே பெறுகின்றனர். பேச்சுரிமை, இடம் பெயர்வதற்கும் சங்கம் கூடுவதற்குமுள்ள உரிமை, சட்டப் பாதுகாப்பு, சட்டத்தின்முன் சமத்துவம், சமயத்தைப் பின்பற்றும் உரிமை, பண்பாட்டுக் கல்வியறிவு பெறுகின்ற உரிமைகள் ஆகிய அடிப்படைச் சலுகைகள் ஆதார உரிமைப் பட்டியலில் அடங்குகின்றன. அரசியல் திட்டம் இவ்வுரிமைகளை ஏழு வகையாகப் பிரிக்கிறது. அவைகளில், திட்ட அடிப்படையில் நிவாரணம் தேடுவதுமொன்று. இதற்கிணங்க, தனது ஆதார உரிமையை இழந்த குடிமகன் ஒருவன், இந்திய உயர் நீதிமன்றத்தை அணுகி இழந்துவிட்ட தன்னுரிமையைப் பெறுவதற்கு முயற்சி செய்யக்கூடும்.

திட்ட வாயிலாக உருப்பெறுகின்ற அரசு முறையில் தனி மனிதனின் முழு வளர்ச்சிக்கு ஏராளமான வாய்ப்புகள் இருக்க வேண்டுமென்பதை நம் அரசியல் திட்டம் நன்கு வற்புறுத்துகிறது. நாம் மேலே எடுத்துரைத்திருக்கின்ற உரிமைகளை அனுபவிக்கின்ற வாய்ப்புகள் இல்லையெனில், குடிமகன் முழு வளர்ச்சி பெறுவதென்பது அறவே இயலாதென்றும், அந் நிலையில் ஜனநாயகமென்பது பொருளற்ற வெறுஞ் சொல்லாகவே ஒலிக்குமென்றும் திட்டத்தை வகுத்தவர்கள் மிக நன்ருக உணர்ந்திருந்தனர். வாழ்நாளில் பெரும் பகுதியை அந்நியராட்சியில் கழித்து, இவ்வுரிமைகளைத் தாங்களனுபவிப்பதற்கென ஓய்வின்றிப் போரிட்டவர்கள், ஜனநாயக ஆட்சிமுறையொன்றை உருவாக்குகின்றபோது, அதற்கெனச் சமைக்கின்ற அரசியல் திட்டத்தில் அவ்வுரிமைகளை இடம்பெறச் செய்வது மிக இயற்கையேயாகும். இவ்வாட்சிமுறையை அரசியல் போட்டியில் சுதந்திரம் என்ற அடிப்படையிலேயே அவர்கள் நிர்மாணிப்பதற்கு எண்ணினர். பெரும்பான்மையினரின் எண்ணக் கருத்துகள் இவ்வுரிமைகளை எவ்வாறு அளிப்பதென்பதைத் தீர்மானிக்கக்கூடும். ஆனால், இவ்வுரிமைகள் இருந்துவருவதைப் பெரும்பான்மையினரின் மனப்போக்குகளினுல் மாற்ற இயலாது. இதையே இவ்வுரிமைகளின் சிறப்பாக நாம் கருத வேண்டும். இதற்கு மாருகப் பெரும்பான்மையினரின் உளப்பாங்கை வளர்ப்பதற்கும், அதைச் செயல்படுத்துவதுபற்றிச் சிந்திப்பதற்கும் ஏற்ற சூழ்நிலையை இவ்வுரிமைகள் தீர்மானிக்கலாயின. பெரும்பான்மையினரின் ஆட்சிமுறைக்கு 'ஜனநாயக அடிப்படையில் பொருத்தம்' காண்பதற்கேற்ற சூழ்நிலையை அவை அமைக்கின்றன.

குடிமகனுக்கு அரசியல் திட்டம் உத்தரவாதமளிக்கின்ற அடிப்படை உரிமைகள் யாவும் அழிவற்றவை அல்ல என்ற கருத்தை வற்புறுத்தியாக வேண்டும். எத்தகைய அடிப்படைத் தேவையுள்ளவையாயினும் குடிமகனின் தனி உரிமைகளால் தேசியப் பாதுகாப்பையோ அல்லது பொதுநலனையோவிட அதிகச் சிறப்புப் பெற்றுவிடமுடியாது. உண்மையில் தேசியப் பாதுகாப்பும் பொதுநலனும் புறக்கணிக்கப்படுமெனில், தனியுரிமைகள் தழைத்திருக்க முடியாது. பேச்சுரிமை என்பதற்குப் பிறரைத் தூற்றுகின்ற வாய்ப்பு என்பது பொருளன்று—அதைப்போலவே குடி பெயர்தல் என்பதற்குப் பிறரை வலியச் சென்று தாக்குவதென்பதும் பொருளன்று. ஆதார உரிமைகளை வரையறுப்பதற்கென்று திட்டம் தனிப்பட்ட விதிகளை அளித்துள்ளது. உரிமைகளை அனுபவிக்க விருப்பமுடையவர்கள் தங்கள் கடமைகளையும் நன்குணர்ந்துகொள்வதற்கு இது உரிய வாய்ப்பளிக்கின்றது.

## நெறிசெய் நியதிகள்

குடிமகனின் சந்தோஷ வாழ்க்கை அவனது தனியுரிமை, மற்றும் உயிர் ஆகியவைகளுக்குச் சிறந்த உறுதியான பாதுகாப்பாக, ஆதார

உரிமைகளுக்கும் துரைத்தனத்திற்குமிடையில் எழுகின்ற பிரிவினை மதில் விளங்குகின்றது. நிலையாக அரசு செலுத்தும் வாய்ப்புபோன்ற தனியாரின் செல்வாக்கு தடையற்றுப் பெருகுவதால் குடிமக்னின் சுதந்திரம் அழிந்துவிடக்கூடும். இவ்வாறே, பொருளாதாரத்துறையில் கட்டுப்பாடு செய்கின்ற வாய்ப்பினை ஒருசிலர் பெற்றுவிடுவாராகில், ஜனநாயக சமுதாயத்தின் சீரிய பண்புகளை ஒரு சர்வாதிகார ஆட்சி அழிப்பதைப்போல அக் கூட்டத்தினர் அழித்துவிடவும்கூடும். சிறப் பெய்திய முதலாளித்துவ சமுதாயமொன்றில் சில தொழிலதிபர்களும் செல்வம் படைத்தவர்களும் பொருளாதாரத்துறையில் செல்வாக்கை வயப்படுத்தி, சமுதாயத்திலுள்ள பிற மக்களைப் புதிய வகையான படை மானிய முறையின் அல்லல்களுக்கு உள்ளாக்கிவிடுவார்கள். ஆதார உரிமைகளுக்குத் திட்டபூர்வமான உத்தரவாதமளித்து, சர்வாதிகார ஆட்சி தலையெடுக்காவண்ணம் வகை செய்தபின், தனியார் சிலர் முதலாளித்துவ ஆதிக்கத்தைக் கைப்பிடித்து, பொருளாதாரத்துறையில் சிறந்த செல்வாக்குப் பெற்றுவிடுவதால் எதிர்காலத்தில் நேரக்கூடிய பேராபத்தை எண்ணி, அதையும் தடுக்க வகை செய்திருக்கின்றனர். மக்களினத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் பொருளாதார வாய்ப்புகளைப் பங்கீடு செய்தளித்துச் சமுதாயத்தைச் சமைக்கவும் நிலைநிறுத்தவும் முற்பட்டிருக்கின்றனர். இதற்கென்று அவர்கள் வகுத்த வழிகளைத் திட்டத்தில் நெறிசெய் நியதிகள் என்ற தலைப்புடைய அதிகாரத்தின் கீழ் நாம் காணலாம். திட்டத்தின் மற்றுமோர் அடிப்படைக் கோட் பாட்டை இது உள்ளடக்கியிருக்கின்றது.

யுத்த காலத்திற்குப்பின் தோன்றிய, தோராயமாக ஐம்பதிற்குமதிக மான அரசியல் திட்டங்கள் குறித்துச் சிந்தனை மிக்க விமரிசகர் ஒருவர் எழுதுவது வருமாறு :

'சுய உரிமை வழங்குவதாகத் திட்டங்கள் உறுதி கூறலாம்; கூறவும் செய்தன; உணவளிப்பதாகக் கூறமுடியாது. பொருளாதாரப் பாதுகாப்பின் ஒரு சிறு ரேகையையே எளிய குடிமகன் மிக அதிகமாக விரும்புகிறுன். அது ஒன்றே அவனுக்கு நேரடியான, பச்சை உண்மை யாக விளங்குகிறது. எல்லாக் குடிமகனின் பொது நலனுக்கும் தேவையான அரசியல் முடிவுகள், திட்டத்தின் வரையறைக்குள் இனியும் அடங்கியிருப்பதில்லை. திட்டம் தேவையான வழிகளைக் குறித்து, ஒருசிறிதேனும் சிந்திக்க முயலவில்லை என்பதால், சமுதாயச் சக்திகள் முன்னேறிவிடுவதோடு, திட்டத்திற்கு வெளியே நின்று போரிடுகின்றன.' திட்டம் தீட்டியவர்கள் இப் பிரச்சினையை உணர வில்லையென்றோ அல்லது வழி தேட முயற்சிபுரியவில்லை என்றோ, இந்தியத் திட்டத்தைப் பொறுத்தமட்டில் விமரிசகர்கள் குறை கூறி விட முடியாது.

குறையைத் தவிர்ப்பதற்கென்று அதிகாரப் பிரிவினை என்ற இரண்டாவது உத்தியை ஐக்கிய அமெரிக்க நாடு உட்படப் பண்டைய அரசிலமைப்புகள் பல கையாண்டுவந்தன. இம் முயற்சியில் பெரும்பாலும் அவை தோற்றன. ஐரிஷ் நாட்டு அரசியலமைப்புத் திட்டத்தைப் பின்பற்றி, இந்திய அரசியலமைப்புத் திட்டம் வேறொரு வழியைக் கடைப்பிடிக்கின்றது. அரசாங்கம் வெவ்வேறு துறைகளில் ஆற்ற வேண்டிய பணிகளைக்குறித்து ஆலோசிக்கின்றபோது, அரசாங்கமும் அதன் ஒவ்வோர் உறுப்பும் கடைப்பிடிக்க வேண்டிய அடிப்படை விதிகள் சிலவற்றை எடுத்துரைத்திருப்பது இரண்டாவது உத்தியாக விளங்குகிறது. ஒருவகையில், அரசாங்கத்திடமிருந்து மக்கள் எதை எதிர்பாக்கலாமென்பதை இவ் அடிப்படை விதிகள் உறுதி செய்கின்றன. இரண்டாவதாக, 'தேசிய வாழ்வின் ஒவ்வொரு நிறுவனத்திலும் சமுதாய, பொருளாதார, அரசியல் நியாய உணர்ச்சி மிகுந்த' சமூகமொன்றை நிறுவுவதற்கும் நிலைநிறுத்துவதற்கும் தேவையான வழிகளை மத்திய, மாநில அரசுகளுக்கு எடுத்துரைக்கின்றன. பின் வருவனவற்றைச் சாதிப்பதற்கென்று குறிப்பாக அரசாங்கம் தனது திட்டங்களை வகுத்துக்கொள்ளவேண்டும்.

(அ) ஆண் பெண் அடங்கலாக வேற்றுமையின்றிக் குடிமக்கள் நல் வாழ்வு வாழ்வதற்குத் தேவையான பொருளாதார வசதி வேண்டும்.

(ஆ) சமுதாயத்தின் சடப்பொருள்களும் பிற சாதனங்களும் பொதுநலனை வளர்க்கின்ற வகையில் மக்களின் உடைமைகளாக விளங்க வேண்டும்.

(இ) பொருளாதாரத் திட்டத்தை இயக்குவதால், செல்வமும் உற்பத்திச் சாதனங்களும் ஒருமுகமாகக் குவிந்து, பொது நலனைச் சீர் குலைப்பதாக இருக்கக்கூடாது.

(ஈ) ஆணுக்கும் பெண்ணுக்கும் வேற்றுமையின்றி வேலைக்குத் தகுந்த ஊதியம் வழங்கப்படவேண்டும்.

(உ) ஆண், பெண், மற்றும் பச்சிளம் பாலகர் அடங்கலான தொழிலாளிகளின் உடல்நலமும் வலிமையும் நலிந்துவிடக்கூடாது. பொருளாதாரத் தேவை என்ற காரணத்தால் தங்கள் வயதிற்கோ அல்லது உடல் வலிமைக்கோ பொருந்தாத தொழில்களை அவர்கள் மேற்கொள்ளக்கூடாது.

(ஊ) இளமையும் வாலிபமும் சுரண்டப்படுவதனின்றும் காப்பாற்றப்படுவதோடு, ஒழுக்கச் சிதைவும் சாதன அழிவும் ஏற்படாமலும் காப்பாற்றவேண்டும்.

போதிய உரிமைகளைப் பெற்றிராத இந்தியச் சமுதாயத்தின் எளிய மகனுக்கு இவைகளும் பிற நெறிசெய் நியதிகளும் பொருளாதார உரிமைகளை வழங்குகின்ற 'மாக்னு கார்ட்டா'வாக (உரிமைச் சாசனமாக) விளங்குகின்றன.

திட்டத்தில் இவை இடம் பெற்றிருப்பதன் சிறப்பைப்பற்றி நிர்ணய சபையில் பேசுகின்றபோது அம்பேத்கர் குறிப்பிட்டதாவது:

'நாம் உருவாக்கியிருக்கின்ற வரைதிட்டம், நாட்டின் துரைத்தனத் திற்கென்று ஒரு கருவியாக வழங்குகிறது. சில நாடுகளில் உள்ளது போல, ஏதோ ஓர் அரசியல் கட்சியை அதிகாரபீடத்தில் அமர்த்து கின்ற நோக்கம் நம் திட்டத்திற்கில்லை. ஆட்சி செலுத்தவேண்டிய வர்களைத் தீர்மானிக்கின்ற பொறுப்பு மக்களையே சாரும். இம் முறை ஜனநாயகச் சோதனைகளில் வெற்றி பெறவேண்டுமெனில், அது அவ்வாறே இருக்க வேண்டும். அரசியலதிகாரத்தைக் கைப்பற்று கின்றவரும் தன்னிச்சைக்கேற்றவாறு அதைப் பயன்படுத்த முடியாது. அதைப் பயன்படுத்துகின்றபோது, நாம் நெறிசெய் நியதிகள் எனக் குறிப்பிட்ட மதியுரைகளை ஆட்சி செலுத்துபவர் மனத்தில் கொள்ள வேண்டும். அவைகளைப் புறக்கணிக்க முடியாது. அவற்றை மீறுபவரை நீதிமன்றமொன்றில் நாம் தண்டிக்க முடியாது என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால், தேர்தல் நேரத்தில் அவர்கள் மக்களுக்குத் தகுந்த சமாதானம் சொல்லியேயாக வேண்டும். வலதுசாரியினர் அரசியலாதிக்கத்தைக் கைப்பற்ற முயற்சி செய்கின்றபோது, இந் நெறி செய் நியதிகளுக்குள்ள வலிமையை நாம் நன்கு உணரமுடியும்.

## நீதித்துறையின் சுதந்திரம்

'நீதியே துரைத்தனத்தின் குறிக்கோள்' என 'ஃபெடரலிஸ்ட்' கூறியது. 'எப்பொழுதுமே அது குறிக்கோளாக விளங்கியிருக்கிறது. அதை அடையும்வரையிலோ அல்லது அம் முயற்சியில் தனியுரிமையை இழக்கும்வரையிலோ மக்கள் சளைக்கமாட்டார்கள்'. எனவே, நீதி ஒன்றே துரைத்தனத்தின் முதல் குறிக்கோள் அல்லது ஒரே குறிக்கோள் என்று கூறுவதில் வியப்பில்லை.

நீதி வழங்குவது கடினமான, சிக்கலான ஒரு பணி என்பதில் ஐயமில்லை. வாதிடுகின்ற இரு சாரார் அல்லது பலரின் வேற்றுமைகளைக் கேட்டு, சரியானதைத் தீர்மானிக்கின்ற பொறுப்பு இப் பணியிலடங்கும்; நீதித்துறையின் நடுவு நிலைமையில் கட்சிகள் நம்பிக்கையற்றுவிடுவார் களெனின், 'நீதி' என்ற சொல் பொருளற்றுவிடும். சட்டதிட்டங்க ளுடன்கூடிய அரசின்கீழ் வாழ்வதற்கே மனிதன் பல நாட்களாக முயன்றிருக்கிறான்—மனிதரிடையே வாழ்வதற்கன்று. சட்டத்தின்கீழ் பாரபட்சமற்ற நீதி அல்லது யாவருக்கும் பொதுவான சட்ட ஆட்சி

என்ற குறிக்கோள் மக்களின் சிந்தனையை நெடுநாட்களாக ஆட்கொண்டிருக்கிறது. குறுகிய அரசியல் அல்லது சமய அடிப்படையில் நீதி வழங்குகின்ற ஆட்சியையும், ஆட்சியாளரின் கருத்திற்கும் விருப்பத்திற்கும் ஏற்ற வகையில் நீதி வழங்குவதையும் எக் காலத்திலும் விரும்பாது விடுதலை பெறுவதற்கு மனிதன் முயன்றிருக்கிறான். இப் போராட்டத்தின் பயனாக நிரந்தரமான சிறப்பை மதிப்பிடக்கூடிய தத்துவம் ஒன்று தோன்றியுள்ளது—சுதந்திரமற்ற எந்த நீதித்துறையும் பாரபட்சமின்றி நீதி வழங்க இயலாது என்பதே அத் தத்துவமாகும். நீதி வழங்குபவர்கள் வெளிச்சக்திகளிலிருந்து விடுதலை பெறவில்லையெனில், நீதிமுறை என்பது நியாயமற்றதாகிவிடுகிறது. இதிலிருந்து, நீதித்துறைக்குச் சுதந்திரம் வழங்கவேண்டிய தேவையை அறிந்து கொள்ளலாம்.

லார்டு ஹீவர்ட் என்பவர் கூறுவதுபோல, நியாயம், சுதந்திரம் ஆகிய துறைகளின் பல வெற்றிகள் நீதிமன்றங்களிலேயே கிடைத்திருக்கின்றன. குடிமகனின் சுய உரிமையைப் பாதுகாப்பதற்கும், நீதிபதிகளின் முழுச் சுதந்திரத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. எனவே, நீதித்துறைக்கு முழுச் சுதந்திரம் தேவையாகும். இதனின்று நீதிமன்றங்களில் நியாயம் வழங்குவதற்குரிய மனிதர்கள், அவர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை, அவர்கள் செயல்படவேண்டிய முறை, அவர்களது பதவிக் காலம், இன்னும் இதுபோன்ற தொடர்புள்ள எண்ணிறந்த பிரச்சினைகள், நியாய சபையின் சுதந்திரம் என்ற குறிக்கோளோடு பிணைந்து கிடக்கின்றன. ஆட்சிபீடத்திலிருக்கின்றவரின் வேண்டுகோளுக்கிணங்க, அரசியல் காரணங்களுக்காகச் சட்டங்களை மாற்றியமைத்துவிடாமல் பாதுகாப்பதுடன், வெளிப்புறச் சக்திகள் பயமுறுத்தியும், ஏராளமான லஞ்சம் வழங்கியும், நாட்டின் நீதிமன்றங்களைத் தங்கள் பணிகளைச் சரிவர நிறைவேற்ற முடியாமல் தடுப்பதிலிருந்தும், நீதித் துறையின் சுதந்திர வாழ்வு காப்பாற்றப்படுகின்றது.

அவைகளைப் பாதுகாப்பதற்கென்று கட்டுப்பாடற்ற தனி இயந்திரம் ஒன்றில்லையெனில் ஜனநாயக உரிமைகள் பொருளற்றவைகளாக மாறிவிடுகின்றன என்பதைத் திட்டத்தை உருவாக்கியவர்கள் நன்கு அறிந்திருந்தனர். வழக்கொன்றில் துரைத்தனமே ஒரு கட்சியாக இருக்கும்போது, அரசாங்க ஊழியன் அல்லது பேராள் ஒருவன், நேர்மையாகவும் பாரபட்சமின்றியும் தீர்ப்பு வழங்குவான் என்று நாம் நம்புவதற்கில்லை. அதைப்போலவே, மத்திய-மாநில அரசுகளுள் வழக்குகள் எழும்போது, இவ்விரு அரசுகளில் ஏதேனுமொன்றிற்குக் கீழ்ப்படிதலுள்ள நீதிமன்றம் வழக்கை விசாரிக்கின்றபோது, நியாயமான தீர்ப்பு வழங்குமென்று எதிர்பார்க்க முடியாது. நீதித்துறையின் சுதந்திரத்தை அடிப்படைக் கொள்கையாகவும், சுதந்திரம் பெற்ற நீதித்துறையைத்

திட்டத்தின் ஒரு பகுதியாகவும் கொண்டதற்கு, நாம் எடுத்துரைத்த காரணங்கள் தவிர்க்கமுடியாதவைகளாக விளங்கின.

இவ்வாறு, நீதித்துறைக்குச் சுதந்திரம் வழங்குகின்ற முயற்சியில், முதல் வேலையாக ஆட்சித்துறை, நீதித்துறை ஆகியவைகளிடையே மதில் சுவர் ஒன்றை எழுப்பித் திட்டம் அவைகளைப் பிரித்தது. இப் பிரிவினையைத் தொடர்ந்து கட்டுப்பாடின்றி நீதித்துறை இயங்கு வதற்கான சூழ்நிலைகளை உருவாக்கத் தொடங்கியது. அமர்த்தப்படும் நீதிபதிகள் உயர்ந்த யோக்யதாம்சங்களையுடையவர்களாக இருக்க வேண்டும். சுப்ரீம் கோர்ட்டுகளுக்கும் ஹைகோர்ட்டுகளுக்கும் நீதிபதிகளை அமர்த்துவதில் தலைமை நீதிபதியின் ஒப்புதல் பெற வேண்டுமென்று திட்டம் கண்டிப்பாக விதிக்கிறது. ஒரு முறை நீதிபதியாக அமர்த்தப்பட்டவர் ஆயுட்காலம்வரை பதவியிலிருப்பார். பதவியேற்றபின் பணிவிதிகளை அவர்களுக்குத் தொல்லை விளைவிக் கின்ற வகையில் மாற்ற முடியாது. அவர்களுக்குத் தாராளமாக ஊதிய மளிக்கப்படும். அவர்களது நடத்தையைக் குறித்துச் சட்டமன்றங் களில் விவாதிக்க இயலாது. தவறான நடத்தையுள்ளவர் என்பதை நிரூபித்த பின்னரே ஒருவரைப் பதவியிலிருந்து நீக்க முடியும். இவ்வாறு பதவிநீக்கம் செய்வதற்குப் பாராளுமன்றத்தின் இரு சபை களிலும் தீர்மானத்தை நிறைவேற்றி, ஆஜராகி வோட்டளிக்கின்ற பேராட்களில் மூன்றில் இரண்டு பங்கினர் அதற்கு ஒப்புக் கொடுப் பதோடு, சபையின் மொத்த அங்கத்தினர்களில் ஐயமற்ற பெரும் பான்மைத் தொகையினர் அதை ஆதரிக்கவும் வேண்டும்.

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலேயே நேர்மைக்கும் சுதந்திர உணர் விற்கும் இந்திய நீதித்துறை புகழ் பெற்றிருந்தது. திட்ட அடிப்படையில் அதன் நிலை இரு மடங்காக மேலும் உறுதிபெற்றுவிட்டது. அதன் அதிகார எல்லைக்குள் எடுத்துவரப்படும் வழக்குகளையும் கருத்து வேறுபாடுகளையும் உண்மையிலேயே பாரபட்சமின்றி விசாரித்து நீதி வழங்குகின்ற உரிய வாய்ப்பு அதற்குக் கிடைத்திருக்கிறது. ஆதார் உரிமை மறுக்கப்படுவதால் நஷ்டமடைந்த எந்த ஒரு குடிமகனும் தன் வழக்கை எடுத்துரைத்து நியாயம் பெறக்கூடும். சுப்ரீம் கோர்ட்டு, மற்றும் ஹைகோர்ட்டுகள் இதுவரை வழங்கியிருக்கின்ற நூற்றுக் கணக்கான தீர்ப்புகளை மேலெழுந்தவாரியாக நோக்குபவருக்கும், இந்திய நாட்டு நீதித்துறை சுதந்திரம் மிகப் பெற்றுப் பாரபட்சமின்றிப் பணியாற்றிவருவது தெளிவாக விளங்கும்.

## கூட்டாட்சி முறை

தற்கால அரசியலமைப்புத் திட்டங்களில், கூட்டாட்சி முறை அதிக மாகக் கையாளப்படுகிறது. கொள்கையிலும், விருப்பிலும், பண்பிலும் வேறுபட்ட பல சமூகத்தினர், பொதுவான கொள்கை விருப்பு, மற்றும்

பண்பாடுகளை வளர்க்க முயற்சி செய்யும்போது, அரசியல் வகைகளில் கூட்டாட்சி முறை ஒன்றே மிகச் சிறந்த சாதனமாக உதவுகின்றதென்பது உலகெங்கிலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. பன்மையில் ஒருமை, செல்வாக்கைப் பகிர்ந்தளித்தல், ஆட்சியைப் பலமுகப் படுத்துதல் ஆகியவை கூட்டாட்சி முறையின் அடிப்படைத் தத்துவங்களாக விளங்குகின்றன. மத்திய அரசு, மாநில அல்லது தல அரசுகள் என்ற இரு வகையான அரசுகளுக்கிடையில் அதிகாரப் பிரிவினை செய்து வழங்குவது அம் முறையின் சிறந்த குணாதிசயங்களில் ஒன்றாக விளங்குகிறது. இவ்விரு வகை அரசுகளும், தங்கள் எல்லைகளுக்குள்ளாகச் சுதந்திரமாக இயங்குகின்ற வாய்ப்பினைப் பெற்றவை. புதிய ஐக்கிய இந்தியாவிற்கென்று ஓர் அரசியல் திட்டத்தைத் தயாரிக்க முயன்ற திட்டச் சிற்பிகள், தங்களை எதிர்நோக்கியிருந்த பல பிரச்சினைகளுக்கு ஏற்றதொரு சாதனமாகக் கூட்டாட்சி முறை அரசியலையே தேர்ந்தெடுத்தனர். நாடெங்கிலும் பரவி வேரூன்றியிருந்த 'எண்ணிறந்த பண்புகளும் அடிப்படை ஒற்றுமையும்' நீடித்திருக்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினர்.

இந்திய நாட்டிற்கேற்ற தேசியத் துரைத்தனமொன்றை அமைப்பதற்குக் கருவியாகக் கூட்டாட்சி முறை அரசியலைத் தேர்ந்தது, 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி அரசியலதிகாரம் கைமாறியபின் மேற்கொள்ளப்பட்ட அவசர முடிவு என்று கொள்ளலாகாது. பல ஆண்டுகளாகவே அவ் எண்ணமிருந்தது. பிரிட்டிஷ் ஆட்சியின் போதும் அம் முறை ஓரளவு செயல்படுத்தப்பட்டிருந்தது. இனம், மொழி, ஜாதி ஆகியவைகளால் வேறுபட்டு, விரிந்த நிலப்பரப்பும் மிகுந்த ஜனத்தொகையையும் கொண்ட இந்தியாபோன்ற நாடொன்றை எதிர்நோக்கியிருந்த அரசியல் பிரச்சினைக்கு உகந்த விடையாகக் கூட்டாட்சி முறை தேர்ந்தெடுக்கப்பெற்றது இயற்கையாகும். இருந்தபோதிலும், கூட்டாட்சி முறையால் தாங்கள் நிலைபெறச் செய்யவிருக்கும் ஒற்றுமை அழிவற்றதாக விளங்க வேண்டுமென்பதிலும், எதிர்காலத்தில் ஒருகால் ஒருமைக்கும் பன்மைக்கும் போட்டி ஏற்படுமாயின், பன்மையை விடுத்து ஒருமையையே நிலவச் செய்யவேண்டுமென்பதிலும் அவர்கள் எச்சரிக்கையாக நடந்து கொண்டனர். அழிவற்ற நடு அரசை நிறுவவேண்டுமென்றும், நாட்டைப்பொறுத்த முக்கியமான பிரச்சினைகளில் நடு அரசின் முடிவு, மாநில அரசுகளின் விருப்பத்திற்கு மேலாகச் செல்வாக்குப் பெற்று விளங்கவேண்டுமென்றும் திட்டத்தை உருவாக்கியவர்கள் விரும்பினரென்று கூறுவது பொருந்தும்.

## அமைச்சவை ஆட்சி

ஆட்சித்துறை, சட்டமன்றத்திற்குத் தொடர்ந்து முழுவதும் கட்டுப்பட்டுச் செயல் புரிவதென்பதை அமைச்சவை ஆட்சியின் மிக முக்கியக்

குணுதிசயமாகக் கூறலாம். ஆட்சித்துறையின் தலைவரான முதலமைச்சரும் துரைத்தனத்தாரும் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகளேயும், அதைச் செயல்படுத்த வேண்டிய முறைகளையும் தீர்மானிப்பதில் முதலமைச்சருக்குத் துணைசெய்கின்ற அனுபவமிக்க அவரது துணைவர்களும் அமைச்சவையில் இடம் பெறுகின்றனர். பல சம நிலைத் தலையீடுகளைக் கொண்ட தலைவர் முறைத் துரைத்தனம் ஐக்கிய அமெரிக்க நாடுகளில் நடந்துவருகிறது. இதற்கு மாருக, அமைச்சவை முறை அரசியலில் கடுமையான கண்காணிப்பின்கீழ், அதிகாரம் குவித்துவைக்கப்படுகிறது. துரைத்தனமென்ற இயந்திரத்தின் பிற நிறுவனங்கள் யாவற்றையும் இயக்குகின்ற மையமான அச்சாக அமைச்சவை விளங்குகின்றது. ஆட்சித்துறையின் பல பிரிவுகளின் (இலாகா) தலைவர்கள் அமைச்சவையின் தனி அங்கத்தினர்களாவார்கள். அமைச்சவை ஒன்றுகூடி நிறைவேற்றப்படவேண்டிய சட்டத் தொகுப்பை உருவாக்குகிறது. இத் தொகுப்பு பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படும். அதிலிருந்து பொதுத் திட்டங்களும் விதிகளும் பிறக்கின்றன. துரைத்தனம் செயல்படுவதையும் பாராளுமன்றம், கண்காணித்தும் கட்டுப்படுத்தியும் வருகின்றது. இவ்வாறு, அமைச்சவை முறை அரசியல், ஒருவகையில் ஆட்சித்துறைக்கும் சட்டமன்றத்துக்குமிடையில் நெருங்கிய கூட்டுறவை ஏற்படுத்துகின்றது. மற்ருெரு வகையில் மக்களின் பேராட்களைக்கொண்ட சட்டமன்றத்திற்கு ஆட்சித்துறையைப் பொறுப்புள்ளதாகச் செய்கிறது.

அமைச்சவை முறை அரசியலில் நாட்டின் தலைவருக்கு மிகுந்த கௌரவம் அளிக்கப்படுகிறது. ஆனல், பெயரளவில் அவருக்கு வழங்கப்பட்டிருக்கும் சலுகைகள் யாவும் அமைச்சவை அல்லது மந்திரி சபையின் வசமே இருந்துவருகின்றன. அச் சபை, தலைவரின் பெயரால் செயலாற்றுகின்றவைகளுக்கு முழுப் பொறுப்பும் ஏற்கின்றது. அமைச்சவையின் ஒற்றுமையும் கூட்டுப் பொறுப்பும், காபினெட் என்னும் வளைவிற்கு ஆதாரக் கல்லாக விளங்குகின்ற முதலமைச்சரின் வாயிலாகவே பெறப்படுகின்றன. அமைச்சவையில், அவரது துணை உறுப்பினர்கள் முதல் மந்திரியின் சிபாரிசின்பேரிலேயே அமர்த்தப் படுகின்றனர். அவர் வெளியேறும்போது அவர்களும் பதவி இழந்து விடுகின்றனர். இவ்வாருக, அமைச்சவை கூட்டுவதிலும் கலைப் பதிலும் அவர் மையமான சக்தியாக விளங்குகிருர்.

ஆட்சித்துறையினர் சட்டமன்றத்திற்குப் பொறுப்புள்ளவர்கள் என்பதால், அவர்கள் செயல்படுவதை மேற்பார்வையிடும் வாய்ப்புக் கிடைக்கின்றதென்பதே அமைச்சவை முறை அரசியலின் சீரிய பண்பாக விளங்குகிறது. பணிகளைச் சரிவர நிறைவேற்றும் சக்தியற்று விடும்போதோ அல்லது நெறி தவறிச் சட்டமன்றத்தின் விருப்பத்திற்குச் செவிமடுக்காமல் நடந்துகொள்ளும்போதோ, நம்பிக்கையில்லாத்

தீர்மானம் ஒன்றின்மூலம் அதைப் பதவியிலிருந்து நீக்கிவிடலாம். தற்காலங்களில் கட்சி முறை வழக்கத்திலிருந்துவரும் நாடுகளில், ஆட்சிபீடத்திலமர்ந்திருக்கின்ற பெரும்பான்மைக் கட்சிக்குச் சட்ட மன்றத்தில் உரிய ஆதரவு இருந்துவரும்போது, கட்சி அங்கத்தினர்கள் அதை முழு மனத்துடன் ஆதரித்தால், அமைச்சவையின் செல்வாக்கு எல்லைமீறிப் பெருகிவிடும். ஹெர்மன் ஃபைனர் என்பவர் கூறுவது போல, அமைச்சவை பாராளுமன்றத்தின் சிருஷ்டியேயாயினும், அத்தகைய சூழ்நிலையில் தனது படைப்பாளனை நடத்திச் செல்லுகின்ற படைப்பாக மாறிவிடும். ஆனால், வேறுவகையான சூழ்நிலைகளில் பாராளுமன்றம் செல்வாக்குப் பெற்று விளங்கும். எந்த ஓர் அமைச்சவையும் அதைமீறிச் செயல்பட இயலாது. ஃபிரான்சு நாட்டு நான்காவது குடியரசு கண்ட அனுபவம்போல, அமைச்சவையின் சரிவென்பது தீராத வியாதியாக இருக்குமேயெனில், சட்டசபைக்குரிய செயல் குழு அமைப்பது, தலைவர் முறைச் செயல் குழுவை அமைப்பதைக் காட்டிலும் சிறந்ததாகும். குறிப்பிட்ட காலம்வரை நீடிக்கும்வரை செயல் குழு பணி செய்துவரக்கூடுமென்பது இவ் உபாயத்தின் சிறப்பாகக் கூறப்படுகிறது.

பிரிட்டிஷ் அமைச்சவை முறையை முழுமையாக ஏற்று, அதையே அடிப்படையாக இந்திய அரசியல் திட்டம் சிபாரிசு செய்கின்றது. முதலமைச்சரின் ஸ்தானத்தைப் பொறுத்தமட்டில், இந்திய அரசியல் திட்டம் அளிக்கின்ற தனி முறையைச் சிறப்பாக எடுத்துரைக்க வேண்டும். அவரை மந்திரிசபையின் தலைவராக அமர்த்தி, ஐயத்திற்கிடமின்றி மிகச் செல்வாக்குடையவராக நமது திட்டம் விளங்கச் செய்கிறது. பிரிட்டினிலும், நடைமுறையில் முதலமைச்சர் இத்தகைய செல்வாக்குப் பெற்று விளங்குகிறார். ஆனால், பெயரளவில் அவரைச் 'சம அந்தஸ்துள்ளவர்களின் முதல்வராக'க் கருதுவது மரபாயிருந்து வருகிறது. இந்திய நாட்டில் அமைச்சவை முறைத் துரைத்தனம் மத்திய, மாநில அரசுகளை இயக்குவதில் கடைப்பிடிக்கப்படுகிறது. மத்திய காபினெட்டிற்கு நாட்டின் முதலமைச்சர் தலைவராக அமர்ந்திருப்பதுபோலவே, ஒவ்வொரு மாநிலத்திலும் முதலமைச்சர் ஒருவரைத் தலைவராகக்கொண்டு அமைச்சவை பணியாற்றிவருகின்றது.

# 3. வரலாற்றுப் பின்னணி

## கிழக்கிந்தியக் கம்பெனி

இந்தியக் குடியரசின் அரசியலமைப்புத் திட்டப் பிறப்பு, பெரும்பாலும், பிரிட்டிஷ் ஆட்சியில் இந்திய நாடு பெற்ற அனுபவங்களை ஒட்டியே அமைந்துள்ளது. 1600ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் கிழக்கிந்தியக் கம்பெனி தோன்றியதுமுதல் இவ் வரலாறு தொடங்கிவிட்டதாகக் கூறலாம். ஆனல், உண்மையில் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதிவரையிலும் ஆங்கிலேயரின் அரசியலாதிக்கம் ஏற்படவில்லை. ஆதியில் வியாபார நோக்குடனேயே கம்பெனி தொடங்கப்பெற்றது. சுமார் ஒன்றரை நூற்றாண்டுக் காலத்திற்குள் சிறுகச்சிறுக அது மிகவும் உருமாறிவிட்டது. நாட்டை ஒன்றுபடுத்துகின்ற சக்தியாக விளங்கிய முகலாய சாம்ராச்சியம் 18ஆவது நூற்றாண்டின் இறுதியில் சரிந்துவிட்டது. இதனல், கட்டுப்பாட்டுடன் இயங்கிவந்த மத்திய ஆட்சி சிதறிவிட்டது. ஏராளமான தலைவர்கள் ஆங்காங்கே முளைத்துத் தல ஆட்சி தொடங்கிவிட்டனர். இவர்கள் ஒருவரோடொருவர் போட்டியிட்டுவந்தமையால், கிழக்கிந்தியக் கம்பெனிக்கு இந்திய நாட்டு அரசியலில் தலையிடுகின்ற வாய்ப்புக்கிட்டியது. வங்காளத்தின் நவாபாக இருந்த சுராஜ்-உத்-தௌலா என்பவரை 1757ஆம் ஆண்டு பிளாஸி என்னுமிடத்தில் நடந்த போரில் கம்பெனியார் முறியடித்தனர். அது முதல் இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராச்சியம் தோன்றுவதற்கு அடிக்கல் நாட்டப்பெற்றது.

இவ்வாறு வியாபாரக் கம்பெனி அரசைக் கவருகின்ற சக்தியாக உருமாறியதும், பிரிட்டிஷ் பாராளுமன்றமும் மாற்றுக் கண்களால் அதை நோக்கியதுடன், அதைப்பற்றிய தன் கருத்தையும் மாற்றியமைத்துக் கொண்டது. பாராளுமன்றத்தில் தேவையான சட்டங்களை இயற்றி, இந்திய நாட்டில் கம்பெனியின் நடவடிக்கைகளை பிரிட்டிஷ் அரசாங்கம் கட்டுப்படுத்தத் தொடங்கிற்று. இவ்வாறு இயற்றப்பட்ட சட்டங்களில் ஒழுங்குமுறைச் சட்டம்—1773, பிட்-இந்தியச் சட்டம்—1784 ஆகியவற்றையும், அவைகளைத் தொடர்ந்த பிற உரிமைச் சாசனங்களையும்

முக்கியமானவைகளாகக் குறிப்பிடலாம். இந்திய நாட்டை ஆட்சி செய்கின்ற அதிகாரச் செல்வாக்கு முழுவதும் பிரிட்டிஷாரின் கைகளில் இச் சட்டங்கள் இயற்றப்பட்டதன் விளைவாக ஒப்புவிக்கப்பட்டது.

## 1857ஆம் ஆண்டுப் புரட்சி

1857ஆம் ஆண்டு இந்தியப் புரட்சிக்கு ஆங்கிலேயர் 'சிப்பாய்க் கலகம்' என்ற பெயரைச் சூட்டினர். ஒருவகையில் அந்நியராட்சியை அகற்றுவதற்கு மேற்கொள்ளப்பட்ட முற்றுப்பெறாத முயற்சிகளில் ஒன்றாக இது விளங்குகிறது. மற்றுமொருவகையில் இதை இந்திய நாட்டில் நிலவிய பிரிட்டிஷாரின் பொறுப்பற்ற எதேச்சாதிகார ஆட்சிக்கு எதிராக எழுந்த திரமிக்க போராட்டமெனக் கருதலாம்; பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் கட்டுப்பாடு ஓரளவு இருந்தபோதிலும், பரந்த நாடொன்றை ஆளுவதற்குக் கம்பெனியார் தகுதியற்றவர்கள் என்பதையும் அது வெளிப்படுத்திற்று. இந்திய நாட்டில் கம்பெனி ஆட்சி மேலும் நீடித்திருப்பதைக் குறித்து இங்கிலாந்தில் பலத்த கண்டனங்கள் எழுந்தன. இதன் விளைவாக, 1858ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் இந்திய ஆட்சிப் பொறுப்பு, கம்பெனியாரிடமிருந்து பிரிட்டிஷ் அரசிற்கு மாற்றிக் கொடுக்கப்பட்டது. இந்திய நாட்டு அரசியல் பரிணாமத்தில் ஒரு முக்கியமான செய்தியாக இவ் அரசியல் மாற்றம் விளங்கிவருகிறது.

## அதிகாரவர்க்கத்தினரின் ஆட்சி தோன்றுதல்

1858ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் அரசு இந்திய நாட்டின் ஆட்சிப் பொறுப்பை நேரடியாக ஏற்றுக்கொண்டது. அதைச் சரிவரக் கவனிப்பதற்கென்று இந்தியா மந்திரி ஒருவரும், அவருக்குத் துணையாகக் குழு ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. சட்டமியற்றுதல், ஆட்சி செலுத்துதல், நிதி நிர்வாகம் ஆகிய அதிகாரங்களைப் பெற்று இவர்கள் பிரிட்டிஷ் அரசின் சார்பாக இந்திய ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர். இதன் இயற்கையான விளைவாக இந்திய நாட்டிலும் அதிகாரம் ஒரு கவர்னர்-ஜெனரல், மற்றும் அவருக்குத் துணையாக ஒரு குழுவினரிடம் ஒப்படைக்கப்பட்டது. நாடெங்கிலும் ஆட்சி நடத்துவதற்கென்று பல அலுவலர்கள் அமர்த்தப்பட்டனர். உருப்பெற்ற துரைத்தனத்தை 'அதிகாரவர்க்கத்தினரின் ஆட்சி' என்று வருணித்திருக்கிறார்கள்.

இவ் வகையான துரைத்தனத்தில் அடுக்கடுக்காக அமர்த்தப் பெற்ற அலுவலர்கள் பொறுப்பேற்று, கீழ்த்தர அதிகாரிகள் அவர்களது பேராட்களாகவும், மேலதிகாரிகளுக்குப் பொறுப்புள்ளவர்களாகவும் ஆட்சி நடத்தலாயினர். இவ்வதிகார வர்க்கத்தின் உச்சியில் இந்தியா மந்திரியும் அவரது குழுவும் அமர்ந்து செயலாற்றினர்,

இந்திய ஆட்சியைக் குறித்தவரையில் இவர்கள் பிரிட்டிஷ் பாராளு மன்றத்திற்குப் பொறுப்புடையவராயினர். வைசிராயும் கவர்னர்-ஜெனரலும் அவருக்குக் கீழ்ப்படிந்த அதிகாரிகளாகச் செயலாற்றினர். இந்திய நாட்டு கவர்னர்-ஜெனரல் 'தல அதிகரியாக' விளங்கியதோடு, இந் நாட்டுத் துரைத்தனத்தாரின் தலைவராகவுமிருந்தார். ஏராளமான கவர்னர்களும், லெப்டினன்ட் கவர்னர்களும், பிரதான கமிஷனர்களும் மாநிலங்களின் தேவைகளுக்கேற்ப அமர்த்தப்பட்டு ஆட்சிப் பொறுப் பைக் கவனித்துவந்தனர். நாடு பலவகையான மாநிலங்களாகப் பிரிக் கப்பட்டிருந்தது. இவர்கள் யாவரும் தலைமை கவர்னர்-ஜெனரல், மற்றும் அவரது குழுவின் பேராட்களாக இருந்ததோடு, அவர்களுக்குப் பொறுப்புடையவர்களாகவும் பணியாற்றிவந்தனர். மாநிலங்களிலும் சற்றேறக்குறைய ஒரே வகையான அரசுமுறை நிறுவப்பெற்று, அதன் அளவைகளாக மாவட்டங்கள் தோன்றின. கலெக்டர், மாஜிஸ்டிரேட் அல்லது டெபுடி கமிஷனர் என்பவர் மாவட்டத்தின் தலையாய ஆட்சி யாளராக இருந்தார். இவ்வாறு மேலிருந்து கீழ்வரையிலும் திட்டம் முழுவதும் நன்முகப் பிணைக்கப்பட்டிருந்தது. இதனால் அதிகாரங்கள் குவிந்து ஒரு முழுமையான தனியரசின் குணங்கள் யாவற்றையும் பெற்றுத் தகர்த்தெறிய முடியாத ஓர் எஃகு வலைபோல அமைந்திருந்தது.

## ஆட்சியைப் பன்முகப்படுத்தும் இயக்கம்

இத்தகைய அதிகாரம் குவிந்த ஆட்சி முறையின் குறைபாடுகள், அதிகாரக் குவிப்பு முற்றுப்பெறுவதற்கு முன்னரே நன்கு வெளியாயின. இவ் வுணர்வினால் எதிரான மாற்று முறை ஒன்று தொடங்கிற்று—அதிகாரங்களை மத்திய, மாநில அரசுகளுக்கிடையில் பகிர்ந்தளிப்பதற்கு இம் மாற்றுமுறை முயன்றது. செய்தித் தொடர்பு வசதிகள் பெருகி யதும், ஆங்கிலக் கல்வி புகுத்தப்பட்டு அதிவிரைவில் பரவியதும், மேனாடுகளில் வழங்கிவந்த பாராளுமன்ற அரசியல் முறைகளை இந்தியர் கற்றுணர்ந்ததாலும், அதனால் அவர்கள் நோக்குப் புதுமை பெற்றதாலும் ஆட்சியைப் பன்முகப்படுத்துகின்ற புது முயற்சி மேற்கொள்ளப் பட்டது. பிரிட்டிஷாரின் இந்திய ஆட்சி நடத்திய தன்மையிலும் சிறுகச் சிறுக மாறுதல்கள் ஏற்படத் தொடங்கின. 1858ஆம் ஆண்டிற்கு முன்பாக இந்திய நாட்டில் நிலவிய பிரிட்டிஷ் ஆட்சியின் சிறப்பியலை 'அதிகாரக் குவிப்பு' என்ற ஒரே சொல்லாலேயே வருணிக்க முடியும். அதைப் போலவே 1858ஆம் ஆண்டிற்குப் பின்னுள்ள பிரிட்டிஷ் இந்திய ஆட்சியையும் 'பன்முகப்படுத்துதல்' என்ற ஒரு சொல்லி னாலேயே வருணிக்கலாம். இதிலிருந்து நாட்கள் செல்லச்செல்ல, கூட் டாட்சி முறை அரசியல் ஏற்படுவதற்கு வழியேற்பட்டது. 1935ஆம் ஆண்டு அரசியல் திட்டத்திலும், 1950ஆம் ஆண்டில் வெளியாகிய இந்தியக் குடியரசின் அரசியல் திட்டத்திலும் கூட்டாட்சி அரசியல்முறை ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

## பன்முகப்படுத்துகின்ற முயற்சியின் பல படிகள்

பன்முகப்படுத்துகின்ற முயற்சி 1861ஆம் ஆண்டில் இந்தியக் கௌன்சில் சட்டம் பிறந்தவுடன் தொடங்கியதெனலாம். இந்திய அரசியலரங்கில் கலந்தாலோசிப்பது என்ற கொள்கையை இதன் மூலம் பிரிட்டிஷார் தொடங்கினர். கலந்தாலோசிப்பது மிகவும் மறை முகமாகவும் திருப்தியற்றதாகவுமிருந்தது. என்றாலும், நாட்டை ஆட்சி செய்வதில் இந்தியரின் ஒத்துழைப்பை அது முதல் முறையாக நாடியது. இது சரியான நோக்கத்துடன் மேற்கொள்ளப்பெற்ற முயற்சியாகும்.

1909ஆம் ஆண்டில் பிறந்த மின்டோ–மார்லி சீர்திருத்தச் சட்டங்கள், இரு வகைகளில் அதிகாரவர்க்க ஆட்சியின் கேடுகளை நீக்குவதற்கு முயன்றன. முதலாவதாக, தல ஆட்சி முறைக்கு ஊக்க மளித்து, மாநில அரசுகளுக்கு ஏராளமான சலுகைகளையும் வழங்கி, நடைமுறையிலிருந்த ஆட்சி அதிகாரங்களைப் பன்முகப்படுத்துவதற்கு வகை செய்தது. இரண்டாவதாக, சட்டமன்றக் கௌன்சில்களின் அதிகாரங்களைப் பெருக்கி, அவைகளில் இந்தியர்களுக்கு ஏராளமான இடமளித்தது. முன்னதாகவே அறிவிக்கப்பட்டிருந்த கொள்கையை அமலாக்குகின்ற முயற்சியாகவும், ஆட்சி முறையை உருவாக்குகின்ற தொடக்க நிலையாகவும் 1909ஆம் ஆண்டுச் சட்டத்தைக் கொள்ள வேண்டும். இந்தியர் தேசிய உணர்வு பெற்றவுடன், 1909ஆம் ஆண்டிற்கு முற்பட்ட காலங்களில், அரசியல் சலுகைகள் சிலவற்றைக் கோருவதற்குத் தலைப்பட்டனர். அதற்கு ஓரளவு செவிசாய்க்கின்ற வகையிலேயே 1909ஆம் ஆண்டுச் சட்டம் எழுந்தது. செயல்படுத்தப் பட்டவுடன் அதனால் அதிகப் பலனில்லையென்பது மிக விரைவிலேயே வெளியாயிற்று. இச் சட்டத்தின்மூலம் மேற்கொள்ளப்பெற்ற பன்முகப்படுத்துகின்ற முயற்சி, பொதுமக்கள் விரும்பிய அளவில் பிரிட்டிஷ் இந்திய அதிகார வர்க்கத்தினரின் ஆட்சித் தன்மையை மாற்றி அமைத்துவிடவில்லை. ஆட்சியில் அதிகம் பங்கு பெறவேண்டும் என்ற கோரிக்கையும் புரட்சி மனப்பான்மையும் குறையாது இருந்து கொண்டேயிருந்தன.

இதையடுத்து, வெளிநாடுகளிலும் இந்தியாவிலுமேற்பட்ட பல நிகழ்ச்சிகளால், இந்தியருக்குச் சாதகமான ஒரு சூழ்நிலை உருவாயிற்று. இவைகளில் முதலாவது உலக மகாயுத்தம் தொடங்கியதை மிகச் சிறப்பாகக் கூறவேண்டும். யுத்த முயற்சிக்கு இந்தியரின் முழு ஆதரவைத் தேடுவதற்கு பிரிட்டன் விரும்பியது. இதையடுத்து, இந்திய ஆட்சியில் தான் கையாளவிருக்கின்ற புது முறையொன்றை அது பறைசாற்றியது. தல ஆட்சி நிறுவனங்களுக்கு ஆதரவு அளிப் பதற்காக, ஆட்சித் துறையின் ஒவ்வொரு பிரிவிலும் ஏராளமான

இந்தியர்கள் பங்கு கொள்வதற்கான வாய்ப்பளிக்கப்படுமென்ற புதுக் கொள்கை வெளியாகியது மான்டேகு என்பவர் அப்போது இந்திய மந்திரியாகப் பதவி ஏற்றிருந்தார். இப் பிரகடனத்தைத் தொடர்ந்து அவர் இந்திய நாட்டிற்கு விஜயம் செய்து, அப்போது கவர்னர்-ஜெனரலாகப் பணியாற்றிவந்த லார்டு செம்ஸ்ஃபோர்டு என்பவருடன் கலந்தாலோசித்து, இந்திய அரசியல் சீர்திருத்தங்களை உள்ளடக்கிய அறிக்கை ஒன்றைத் தயாரித்தார். சாதாரணமாக, அது மான்ட் ஃபோர்டு அறிக்கை என்ற பெயராலேயே வழங்கப்பெறுகிறது. இவ் அறிக்கையை அடிப்படையாகக்கொண்டு, பிரிட்டிஷ் பாராளுமன்றம், 1919ஆம் ஆண்டுச் சட்டம் என்ற புதியதொரு சட்டத்தைப் பிறப்பித்தது.

## 1919ஆம் ஆண்டு இந்திய கவர்மென்டு சட்டமும் இரட்டையாட்சியும்

மான்டேகு அறிக்கையை அடிப்படையாகக்கொண்டு இச் சட்டம் உருவாகியது. அதற்கு இரு முக்கியக் குறிக்கோள்களுண்டு. முதலாவதாக, ஆட்சித்துறையின் பல்வேறு பிரிவுகளிலும், மத்திய, மாநில அரசுகளுக்கிடையே, அதிகாரச் செல்வாக்கை முடிந்த அளவு பகிர்ந்தளிக்க வேண்டுமென அது சிபாரிசு செய்தது. இரண்டாவதாக, மாநிலங்களில் 'இரட்டையாட்சி' ஏற்படவேண்டுமென்றும் விரும்பியது. ஆட்சித்துறையிலுள்ள செல்வாக்கை இந்திய மக்களின் பேராட்களும், கவர்னரின் ஆங்கிலேயே ஆலோசகர்களும் பகிர்ந்துகொள்ளவேண்டுமென்பதே இரட்டையாட்சியின் நோக்கமாக இருந்தது.

அகில இந்தியப் பிரச்சினைகள் மத்திய அரசினால் கையாளப்படவேண்டுமென்றும், தல ஆட்சியைப் பொறுத்த பெரும்பாலான பிரச்சினைகளை மாநில அரசுகள் கவனிக்கவேண்டுமென்றும் அதிகாரப் பிரிவினைக்கு வழி வகுத்தளிக்கப்பட்டது. கூட்டாட்சி முறையில் கடைப்பிடிக்கப்படுவதுபோல, இவ் அதிகாரப் பிரிவினை முயற்சி மிகக் கடுமையாகக் கடைப்பிடிக்கப்படவில்லை என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். மத்தியச் சட்ட மன்றம், மாநிலங்களைப் பொறுத்த பிரச்சினைகளில் சட்டமியற்றுகின்ற வாய்ப்பினைப் பெற்றிருந்ததென்பதிலிருந்து இது மிகத் தெளிவாக விளங்கும். கூட்டாட்சித் தத்துவம் எதுவும் பயன்படுத்தப்படவில்லை; இந்திய அரசு ஏட்டிலும் செயல்படுவதிலும் ஒருமுக ஆட்சியாகவே விளங்கியது என்று இதை வேறு வகையாகவும் கூறலாகும். இருந்தபோதிலும், சட்டமியற்றுவதிலும், நிதி நிர்வாகத்திலும், ஆட்சி செலுத்துவதிலும் மாநிலங்களுக்குக் கணிசமான செல்வாக்கு வழங்கப்பட்டிருந்தது.

1919ஆம் ஆண்டுச் சட்டம் ஆட்சியை வெகுவாகப் பன்முகப்படுத்தியும், ஜனநாயகக் கொள்கைகளைப் புகுத்தியும் வந்ததென்பது

உண்மையே என்றாலும், அதைச் செயல்படுத்துவதால் எழுந்த விளைவுகள் மக்களுக்கு அதிக ஊக்கமளிக்கவில்லை. இதற்கு மாருக, அதிருப்தியும் மனத்தாங்கலுமே எங்கும் நிறைந்திருந்தன. அரசியல் துறையில் மேற்கொள்ளப்பட்ட இரட்டையாட்சி என்னும் பரிசோதனை தோல்வியுற்றதையே இதற்கு முக்கியக் காரணமாகக் கூறலாம். 1919ஆம் ஆண்டுச் சட்டத்தின் முக்கியச் சிறப்பு, மாநிலங்களில் 'இரட்டையாட்சி' முறை புகுத்தப்பட்டதே ஆகும். நடைமுறையில் கையாளப்பட்டபோது, மக்களின் பேராட்களுக்கு அரசியலதிகாரம் மாறிவிடவில்லை என்பது வெளியாயிற்று. பெரும்பான்மையான மாநிலச் சட்ட மன்றங்களில் 'சுயராஜ்யப் பிரியர்களே' அதிக இடங்களைப் பெற்றிருந்ததோடு பெரும்பான்மையினராகவும் விளங்கினர். அவர்களது ஒத்துழைப்பின்றித் திட்டம் வெற்றிபெறவியலாது என்ற நிலை இருந்தது. தீவிரவாதிகளான 'லிபரல் கட்சியினரும்' சட்டத்திற்கு உரிய கௌரவமளித்தனர். நடைமுறையில் பொறுப்புள்ள ஆட்சிக்குத் தேவையான சூழ்நிலையை அது ஏற்படுத்தவில்லை என்பதால், மிகவும் மனவருத்தமடைந்தனர்.

## அரசியலதிகாரம் முழுவதும் மாற்றப்படவேண்டுமென்ற கோரிக்கை

இவற்றின் விளைவாக இந்தியத் தேசியக் காங்கிரசின் தலைமையில் புதியதொரு வேட்கையாலும் ஆர்வத்தாலும் உந்தப்பட்டுக் கல்வியறிவுள்ள இந்திய மக்கள் ஒன்றுகூடினர். காந்தியடிகளால் தொடங்கப்பெற்ற சாத்வீக ஒத்துழையாமை இயக்கம் அதிவிரைவில் செல்வாக்கு பெற்றது. நாளடைவில் முழு அரசியலதிகாரமும் இந்தியர்களின் கைகளுக்கு மாற்றிக் கொடுக்கப்பட வேண்டுமென்று போரிடுகின்ற அளவிற்கு இவ் இயக்கம் வளர்ந்தது. இந்திய நாட்டுச் சூழ்நிலைகளுக்குப் பொருத்தமான புதியதோர் அரசியலமைப்புத் தேவையென்பதை ஒவ்வொருவரும் உணர்ந்தனர். அப் புதிய திட்டம் எத்தன்மையதாக இருக்கவேண்டும்—கூட்டாட்சியா? அல்லது ஒருமுக அரசியலா? என்பவைகளைப்பற்றியே கருத்து வேற்றுமைகள் இருந்தன.

1927ஆம் ஆண்டில் இந்திய நாட்டிற்குத் தேவையான அரசியல் சீர்திருத்தங்களைக் கண்டறிந்து கூறுவதற்கென, பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் சைமன் கமிஷனை ஏற்படுத்தினர். அக் கமிஷன் அகில இந்தியக் கூட்டாட்சி ஒன்றையே சிபாரிசு செய்தது. இந்தியத் தேசிய காங்கிரஸினால் அமர்த்தப்பட்ட, சைமன் கமிஷனுடன் ஒப்பிடக்கூடிய நேரு குழு, கூட்டாட்சி முறை அரசியலொன்று உடனே நிறுவப்பட வேண்டுமென்று வற்புறுத்தியது. சுதேச மன்னர்களின் செல்வாக்குப் பெற்ற பிரதிநிதிகளும் அகில இந்தியக் கூட்டாட்சி ஏற்படுவதை வரவேற்றனர். சின்னாட்கள்வரை பிரிட்டிஷ் அரசாங்கம் எவ்வித

முடிவையும் கொள்ளவில்லை. இறுதியில் சைமன் கமிஷன் செய்த சிபாரிசுகளைப் புறக்கணித்துவிட்டு, இந்திய அரசியல் பிரச்சினைகளுக்கு ஏற்ற சாதனமாகக் கூட்டாட்சி அரசியல் ஏற்படுத்துவதே முறையெனத் தீர்மானித்தது. இவ்வாறு கூட்டாட்சி அரசியலொன்றை அமைப்பதற்கு ஏற்ற திட்டத்தைத் தயாரிப்பதற்கு அநேக மகாநாடுகளை லண்டன் மாநகரில் கூட்டியது. இம் மகாநாடுகளை 'வட்ட மேசை' மகாநாடுகளென நாமறிவோம்.

பிரேரேபிக்கப்பட்ட திட்டத்தின் கீழ் இந்திய நாட்டில் அமைக்கப்படவிருந்த சுய ஆட்சியின் தன்மையைக்குறித்து பிரிட்டிஷ் அரசினருக்கும் இந்தியத் தேசியக் காங்கிரசிற்குமிடையில் தீவிரமான கருத்து வேற்றுமைகள் இருந்தமையால், காங்கிரஸ் இம் மகாநாடுகளிலிருந்து வாபஸ் பெற்றது. ஆனால், இந்திய நாட்டின்மீது புதியதோர் அரசியல் திட்டத்தைச் சுமத்திவிடுவதென்று பிரிட்டிஷ் அரசு முடிவு செய்துவிட்டது. இக் கருத்தை மனத்தில் கொண்டு, அவர்கள் பாராளுமன்றத்தில் புதியதொரு திட்டத்தைப் புகுத்தினர். நெடுநாள் விளக்கத்திற்கும் விவாதத்திற்கும்பின், 1935ஆம் ஆண்டில் இச் சட்டம் இறுதியாக ஒப்புக்கொள்ளப்பெற்று, '1935ஆம் ஆண்டு இந்தியா கவர்மென்டு சட்டம்' என்ற பெயரில் வெளிவந்தது.

## 1935ஆம் ஆண்டு அரசியல் சட்டம்

1935ஆம் ஆண்டு இந்திய கவர்மென்டு சட்டத்தின் இரு முக்கிய விதிகளை நாம் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். அவைகளாவன: (1) கூட்டாட்சி அரசியல் திட்டத்தை இந்திய நாட்டில் புகுத்துவது; (2) பிரிட்டிஷ் இந்திய மாகிலங்களில் மாகாணத் தன்னாட்சி ஏற்படுத்துவது. இவ் இரண்டும் புரட்சிகரமான மாறுதல்களாகும். வழங்கிவந்த ஒருமுக ஆட்சிக்குப் பதிலாகப் புதியதொரு கூட்டாட்சி முறையைப் புகுத்தி, பிரிட்டிஷ்-இந்திய மாகாணங்களையும் சுதேச சமஸ்தானங்களையும் நாடு முழுவதற்கும் சொந்தமான ஒரு துரைத்தனத்தின்கீழ்க் கொண்டுவரும் முயற்சி தொடங்கியது. மாகாணங்களும் சமஸ்தானங்களும் கூட்டாட்சியின் ஆகு உறுப்புகளாகச் செயல்பட வேண்டுமென்றும் கூறப்பட்டது. மாகாணங்களில் தன்னாட்சி பெறவேண்டும் என்றும், சமஸ்தானங்கள் இச்சைப்படி இயங்கலாமென்றும் அனுமதிக்கப்பட்டன.

இச் சட்டம் கண்ட கனவாகிய அகில இந்தியக் கூட்டாட்சி, அது செயல்படுகின்ற காலவரையறைக்குள் கைகூடவில்லை. இச் சட்டத்தின் பயனாக, பிரிட்டிஷ்-இந்திய மாகாணங்களைக் கொண்ட, அரைகுறையான கூட்டாட்சி ஒன்றே உருவாயிற்று. இருந்தபோதிலும், இம் மாறுதல் குறிப்பிடத்தக்கதாகவே விளங்கியது. இந்திய நாட்டின் முதல் தலைமை நீதிபதியாகப் பணியாற்றிய சர் மொரைஸ் குவியர்

என்பவர் கூறியதைப்போல, 'மத்திய அரசின் ஆணைகளுக்குக் கீழ்ப் படிதலுள்ள, வழக்கிலிருந்த மாகாணங்களுக்குப் பதிலாக, தன்னாட்சி பெற்ற பதினொரு மாகாணங்கள் உயிர்பெற்றெழுந்தன. துடிப்புடன் கூடிய உயிர்பெற்று விளங்கிய அவை, இந்தியத் துரைத்தனத்துடன் சட்டமியற்றுகின்ற, மற்றும் ஆட்சி செலுத்துகின்ற செல்வாக்குகளைப் பயன்படுத்திக்கொண்டன. பதினொரு பிரிட்டிஷ்-இந்திய மாகாணங்கள் ஒன்றுகூடி ஒரு கூட்டாட்சியாக இணைந்து விளங்கின என்று இதை மற்றொரு வகையாகவும் உரைக்கலாம்.'

## மாகாணத் தன்னாட்சி

1937ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 1ஆம் தேதி சரித்திரச் சிறப்பு வாய்ந்ததொரு முக்கிய நாளாகும். அந் நாளில் இந்திய நாட்டு அரசியல் முன்னேற்றத்தில் புதியதோர் அத்தியாயம் குறிக்கப்பெற்றது. பதினொரு மாகாணங்களிலும் சட்ட விதிப்படி பொதுத் தேர்தல்கள் முடிந்துவிட்டன. அந் நாளுக்கு முன்னதாகவே ஒவ்வொரு மாநிலத்திலும் பொறுப்புள்ள அரசு அமைக்கப்பட்டுவிட்டது. ஏழு மாகாணங்களில் காங்கிரஸ் கட்சி அமோகமான பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றுவிட்டது. அம் மாகாணங்களின் ஆட்சிப் பொறுப்பு அவர்களிடமே ஒப்படைக்கப்பட்டுவிட்டது. பிற மாகாணங்களில் கூட்டு அரசுகள் அமைக்கப்பெற்று ஆட்சிப் பொறுப்பேற்றிருந்தன.

புதிய அரசியல் திட்டத்தைக்குறித்து எத்தன்மையான அவநம்பிக்கைகள் வெளியிடப்பட்டிருந்தபோதும், மாகாணங்களின் ஆட்சிப் பொறுப்பேற்ற அமைச்சவைகள், வியப்புமிக்க வெற்றிகளை அடைந்தன என்பதை ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. மாகாண ஆட்சித்துறையின் தலைவர்களாக அமர்ந்திருந்த பிரிட்டிஷ் கவர்னர்களிடமும், அரசியல் முறைமைக்குட்படுகை என்ற புதிய பரிசோதனைக்கு முறையான வாய்ப்பளிக்க வேண்டுமென்று கருதி ஆட்சிப் பொறுப்பேற்ற இந்தியத் தலைவர்களிடமும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பாங்கு அதிகமாக இருந்தது. பிரசித்திபெற்ற சட்டசபைக்குரிய ஜனநாயக முறையின் அடிப்படைகளைப் பினபற்றி, அமைதியும் திறமையும் கூடிய வகையில் மாநில அரசுகள் இதன் விளைவாக இயங்கத் தொடங்கின. அகில உலக அரசியலரங்கில், மிகத் தீவிரமான மாறுதல்கள் விரைவாக ஏற்பட்டுவந்தமையால், இப் பரிசோதனை குறுகிய காலத்திற்கே நீடித்திருக்க விதி இருந்தது.

## இரண்டாவது உலக மகாயுத்த சூழ்நிலை

1939ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம் இரண்டாவது உலக மகாயுத்தம் தொடங்கிவிட்டது. அது இந்திய நாட்டில் அரசியல் முறைமைக்குட்படுகை என்ற சோதனைக்குப் பேராபத்து விளைவித்தது. மாகாணங்

களில் வழக்கிலிருந்த பொறுப்புள்ள ஆட்சியின் அடித்தளத்தையே பெயர்த்துவிடுகின்ற அளவிற்கு அச்சமேற்படுத்தியது. நாட்டின் ஆட்சிப் பொறுப்பைக் கைப்பற்றியிருந்த பிரிட்டிஷ் அரசினரின் குறுகிய ஆட்சி முறையால் அழிவு துரிதமாயிற்று. கவர்னர்-ஜெனரலாக இருந்த லார்டு லின்லித்கௌ என்பவர் ஜெர்மனியின்மீது போர்தொடுத்துப் பிரகடனமொன்றை வெளியிட்டார். அதைத் தொடர்ந்து, பிரிட்டனின் முதலமைச்சர் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் ஒரு பிரகடனத்தை வெளியிட்டார். கவர்னர்-ஜெனரலின் தான்தோன்றித்தனமான செருக்கு மிக்க இவ் வெறிச்செயல், பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களில் செயலாற்றிவந்த செல்வாக்குப் பெற்ற அமைச்சவைகளுக்கு எதிர்நோக்கியிராத அதிர்ச்சியைக் கொடுத்தது. போர்ப் பிரகடனம் அவர்களுக்கு அதிர்ச்சியை உண்டாக்கவில்லை. அதைப் பிரகடனப்படுத்திய முறையே அவர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. நாட்டை உலக மகாயுத்தமொன்றில் ஈடுபடுத்துவதற்கு முன்பாக இந்திய நாட்டிலுள்ள செல்வாக்குப் பெற்ற அரசியல் சக்திகளைக் கலந்தாலோசிக்க வேண்டுமென்ற எண்ணம், பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தினருக்குத் தோன்றவே இல்லை. கானடா, ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்காபோன்ற பிரிட்டிஷ் டொமினியன்களில் உடனடியாகப் போர்ப் பிரகடனம் செய்துவிடாமல், பிரேரேபணையை அந் நாட்டுப் பாராளுமன்றங்களில் சமர்ப்பித்து முடிவு கோரப்பட்டது. இதை எண்ணிப் பார்க்கும்போது, நம் நாட்டில் அரசாங்கம் கடைப்பிடித்த தவறுன முறை நன்கு விளங்கும். பாரளுமன்றங்களின் ஒப்புதல்களைப் பெற்ற பின்னரே அவர்கள் டொமினியன்களைப் போரில் ஈடுபடச் செய்ய இயலும்.

கவர்னர்–ஜெனரலின் ஆலோசனையற்ற செயலினல், இந்திய நாட்டை பிரிட்டிஷார் ஒரு குடியேற்ற நாடாகவே கருதிவருகின்றனர் என்ற எண்ணம் இந்திய நாட்டுத் தலைவர்களைப் பலமாகப் பற்றிக் கொண்டது. கீழ்த்தரமான இந் நிலையை எதிர்த்து நின்று, நாட்டின் முழுச் சுதந்திரத்தை நிலைபெறச் செய்யவேண்டுவது தங்கள் கடமை என்று எண்ணினர்கள். இந்தியத் தேசிய காங்கிரசின் காரியக் கமிட்டி 1939ஆம் ஆண்டு செப்டம்பர் 14ஆம் தேதி வெளியிட்ட அறிக்கையில் பலவற்றைக் கூறியதில் பின்வருவதும் ஒன்று: ‘ஜனநாயகத்தை நிலைநிறுத்தவும், பரப்புவதற்கும் பிரிட்டன் போரிடுவது உண்மையெனில், அது ஏகாதிபத்தியக் கொள்கையை உடனே கைவிட வேண்டும். தன்வயமுள்ள நாடுகளில் ஏகாதிபத்திய ஆட்சியை வாபஸ் பெறுவதோடு இந்திய நாட்டில் ஜனநாயக ஆட்சியை நிறுவவேண்டும். தங்களுக்கென்று அரசியல் நிர்ணய சபையை அமைத்து, ஒரு திட்டத்தைத் தயாரித்துச் செயல்படுத்தி, சுயநிர்ணய உரிமையைப் பெற வேண்டும். சுதந்திர ஜனநாயக இந்தியா, பாதுகாப்பதற்கென்றும், ஆக்கிரமிப்பை எதிர்ப்பதற்கென்றும் பிற சுதந்திர நாடுகளுடன் மகிழ்ச்சியுடன் இணைந்து ஒத்துழைக்கும்.’ எனவே, நாட்டின் சுதந்

திரத்திற்காகப் போரிடுவது என்ற உறுதியை மீண்டும் செய்துகொண்டு, அதற்கென்று மாநில ஆட்சித்துறையில் தாங்கள் ஏற்றிருந்த பதவிகளை ராஜினுமா கொடுத்தது மிகவும் இயற்கையாக விளைந்தது. ஆனால், இவ் விருப்பத்திற்கு நேர்மாருக, கவர்னர்-ஜெனரலும் அவரது சகபாடிகளும் தங்கள் யதேச்சாதிகாரக் கருத்தை மக்களின் தலையில் சுமத்திவிடவேண்டுமென்று உறுதி பூண்டிருந்தனர். இந்திய நாடெங்கிலும் நெருக்கடி நிலைச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. நாட்டின் ஆட்சிப் பொறுப்பு முழுவதையும் கவர்னர்-ஜெனரல் ஏற்று, கவர்னர்களின் மூலமாகவும் இந்திய சிவில் பணியினர்மூலமாகவும் ஆட்சி செலுத்தினர். நாட்டின் செல்வாக்குப் பெற்ற சக்திகளின் எவ்வித எதிர்ப்பையும் சமாளித்து நிற்பதற்குப் பல அவசரச் சட்டங்கள் உடனடியாகப் பிறப்பிக்கப்பட்டன. நாட்டின் தலைவர்கள் பலரைக் கைது செய்து சிறைத்தண்டனை விதித்தனர். 1935ஆம் ஆண்டுச் சட்டத்தின்கீழ் ஏற்பட்ட கூட்டாட்சி முறையின் சிறு சாயலின் அடிப்படையாக விளங்கிய மாகாண சுய ஆட்சி, அரசியலமைப்பின் கூருக இனியுமில்லை—கடந்த காலக் கனவாகவே அது மாறிவிட்டது. கைகளில் குவிந்த அதிகாரங்களையுடைய அதிகாரவர்க்கத்தினரின் ஆட்சி என்ற இரும்பு வலையினுள் மீண்டும் இந்திய ஆட்சி அடைக்கப்பட்டது.

## கிரிப்ஸ் தூது

உலக வல்லரசாக விளங்கிய அதன் முழு வரலாற்றிலும் உலக மகாயுத்தம் தொடங்கிய முதலிரண்டு ஆண்டுகள், மகாபிரிட்டனுக்கு மிக ஆபத்தான காலங்களாக இருந்தன. ஜெர்மானியரின் ஆகாயத் தாக்குதல்களிலிருந்து தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்கென்று தன் சொந்த நாட்டில் அது போராடிவந்தது. பிரிட்டனுக்குச் சொந்தமான, கிழக்குத் திசையிலுள்ள குடியேற்ற நாடுகளை ஜப்பான் அதிவிரைவில் கைப்பற்றிவந்ததோடு, இந்திய சாம்ராச்சியத்தின் தலைவாயிலையும் நெருங்கிவிட்டது. இத்தகைய பிற்போக்குச் சக்திகளின் மத்தியில் சிக்கி உழன்றதால், இந்தியாவைக் குறித்த தனது கொள்கைகளை அது மாற்றியமைத்துக்கொள்ளவேண்டியதாயிற்று. இக் கருத்தை மனத்தில் கொண்டு இந்திய நாட்டு அரசியல் பிரச்சினைகளுக்கு 'நியாயமான இறுதியான வழி' ஒன்றை ஆய்ந்து கொடுப்பதற்கென்று சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ் என்பவர் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டார்.

யுத்த காலத்தின்போது, இந்தியருக்கு அரசியலதிகாரம் ஓரளவு மாற்றப்பட வேண்டுமென்றும், யுத்தத்திற்குப்பின் அரசியலதிகாரம் முழுவதும் மாற்றப்பட்டுவிட வேண்டுமென்றும் அவர் கூறினர். இதற்குப் பதிலாக இந்தியத் தலைவர்கள் பிரிட்டனின் போர் முயற்சிகளில் முழு மனத்துடன் ஒத்துழைக்க வேண்டுமென்று பிரிட்டன் விரும்பியது. இந்திய மக்கள் சுதந்திர வாழ்வு பெற்றாலன்றி ஏராளமான இந்திய மக்களின் உள்ளங்கள் களிப்படையுமாட்டா என்றும்,

அச் சூழ்நிலையில் செயல்படுவது அசாத்தியம் என்றும் கூறிக் கிரிப்ஸ் அளித்த உடன்பாட்டை இந்தியத் தேசியக் காங்கிரஸ் ஏற்காது தள்ளி விட்டது. இக் கோரிக்கையை நிறைவேற்றிவைப்பதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் தயாராக இல்லை என்பதால், கிரிப்ஸின் தூது தோல்வி யடைந்தது.

## இந்திய நாட்டைவிட்டு வெளியேற்றும் தீர்மானம்

கிரிப்ஸின் விஜயம் பயனற்றுப்போனதால், உடன் தொடர்ந்து ஆகஸ்ட் மாதம் 1942ஆம் ஆண்டு அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி பம்பாயில் கூடி ஆலோசனை நடத்தி, இந்திய நாட்டில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முடிவு கட்டுவதற்கென 'அந்நியரை நாட்டைவிட்டு வெளி யேற்றும்' தீர்மானத்தைக் கடைப்பிடித்தது. காங்கிரஸ் காரியக் கமிட்டி இத் தீர்மானத்தை ஏற்பதற்கு காந்திஜி வழிகாட்டியாக விளங்கினர். பல்வேறு விஷயங்களுடன் தீர்மானம் பின்வருவனவற்றையும் உள் ளடக்கியிருந்தது :

'...... இந்திய நாட்டில் பிரிட்டிஷாரின் ஆட்சிக்கு உடனடியாக முடிவுகட்டவேண்டுமென்று இக் கமிட்டி கருதுகிறது. இது இந்திய ருக்கும் ஐக்கிய நாடுகளுக்கும் வெற்றியைத் தேடியளிக்கும். அவ் ஆட்சி நீடிப்பது தலைகுனிவாக இருக்கின்றது. இந்திய நாட்டை அது வலிவிழக்கச் செய்கின்றது. தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் வலிமை யையும், உலக நாடுகளின் சுதந்திரத்திற்காகப் பாடுபடக்கூடிய சக்தி யையும் இவ் ஆட்சி நீடித்திருப்பதால், இந்திய நாடு நாளடைவில் இழந்துவிடும்......'

'அந்நியராட்சியிலிருந்து வருகின்ற ஆசிய நாடுகளின் சுதந்திரத் திற்கு முன்னுரையாகவும் அடையாளக் குறியாகவும் இந்திய நாட்டுச் சுதந்திரம் விளங்கவேண்டும். பர்மா, மலேயா, இந்தோ-சைனு, டச்சு-இந்தியத் தீவுகள், இரான், இராக் ஆகிய நாடுகளும் முழுச் சுதந்திரம் பெறவேண்டும்.'

'மேலும், எதிர்காலத்தில் அமைதியும், பாதுகாப்பும், முறையான முன்னேற்றமும் உலகில் ஏற்படவேண்டுமெனில், சுதந்திர நாடுகளின் கூட்டாட்சி ஒன்று மிகவும் தேவை என்று இக் கமிட்டி கருதுகிறது. நவீன உலகின் பிரச்சினைகளை வேறு எந்த அடிப்படையிலும் தீர்க்க இயலாது......அத்தகைய கூட்டாட்சியில், சுதந்திர இந்தியா மன முவந்து சேருவதோடு, அகில உலகப் பிரச்சினைகளுக்கு முடிவு காண்ப தில், பிற நாடுகளுடன் சம அந்தஸ்துப் பெற்று பூரணமாக ஒத்துழைக் கும்.'

இம்முடிவுகளைப் பொறுக்கவியலாத பிரிட்டிஷ் துரைத்தனத்தார், காங்கிரஸ் தலைவர்கள் யாவரையும் கைதுசெய்ததோடு, இந்திய நாடு

முழுவதும் காங்கிரஸ் நிறுவனங்கள் இருக்கக்கூடாதென்றும் தடை விதித்தனர். இவ்வாறு தலைவர்கள் கைதுசெய்யப்பட்டதும், நாடெங்கிலுமுள்ள மக்கள் கொதித்தெழுந்தனர். தொடர்ந்த புரட்சிக்கு 'ஆகஸ்ட் புரட்சி' என்ற பெயர் வழங்கிவருகிறது. ஆயிரக்கணக்கான மக்கள் பிரிட்டிஷ் போலீஸ் படையினரின் வெறிச்செயல்களுக்கு இலக்காயினர். இவ்வாறு மக்கள் வெறுப்புற்றதால், துரைத்தனத்தாரின் யுத்த முயற்சிகள் மிகவும் தடைப்பட்டன. இருந்தபோதிலும், ஆகஸ்ட் புரட்சியை மிக்க வெறியுடன் துரைத்தனத்தார் அடக்கி விட்டனர்.

## சிம்லா மகாநாடு

1945ஆம் ஆண்டு மே மாதம், ஐரோப்பிய நாட்டுப் போரில் நேசக் கட்சியினர் வெற்றி கண்டனர். கிரிப்ஸின் விஜயத்திற்குப் பின் மூன்றாண்டுகள் கடந்துவிட்டன. இக் காலவரையறை முழுவதும் தேசியத் தலைவர்கள் சிறையிலிருந்தனர். பூர்வாங்கப் பேச்சுவார்த்தைகள் தொடங்குவதற்கு முதல் படியாக, 1945ஆம் ஆண்டு ஜூன் மாதம், காங்கிரஸ் தலைவர்களை விடுதலை செய்வதாக கவர்னர்-ஜெனரல் அறிவித்தார். அதிவிரைவில் இதையடுத்து சிம்லாவில் ஒரு மகாநாடு கூட்டப்பட்டது. அம் மகாநாட்டில் பிரதான அரசியல் கட்சிகள் பங்கு பெற்றன. ஆனால், யாவருக்கும் சம்மதமான ஒரு வழியை அவர்களால் கண்டுபிடிக்க இயலவில்லை. இதையடுத்து, கவர்னர்-ஜெனரலாக இருந்த வேவல் என்பவர் இங்கிலாந்திற்கு விஜயம் செய்தார். அங்கு நடைபெற்ற பொதுத் தேர்தல்களில் கன்சர்வேடிவ் கட்சியினர் செல்வாக்கை இழந்து, லேபர் கட்சியினர் அரசைக் கைப்பற்றியிருந்தனர். இதனால் அரசியல் கருத்துகளிலும் பலத்த மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. 1945ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் வேவல் இந்திய நாடு திரும்பினார். அதிவிரைவில் இந்திய நாட்டிற்குச் சுய ஆட்சி வழங்குவதற்கு பிரிட்டிஷ் அரசு ஆவலுடனிருப்பதாக அறிவித்தார்.

## பாராளுமன்றப் பிரதிநிதிகளின் இந்திய விஜயம்

1946ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம், பிரிட்டிஷ் பிரதம மந்திரியான கிளமென்ட் அட்லி என்பவர், இந்திய நாட்டிற்குப் பாராளுமன்றப் பிரதிநிதிகளின் குழு ஒன்று விஜயம் செய்யுமென்றும், அது தேசியத் தலைவர்களைச் சந்தித்து சுய ஆட்சியைப் பொறுத்த பல பிரச்சினைகளையும் கலந்தாலோசிக்குமென்றும் மக்கள் சபையில் அறிவித்தார். பல அரசியல் கட்சிகளைச் சார்ந்த பாராளுமன்ற உறுப்பினர்களைக்கொண்ட குழுவொன்று தொடர்ந்து இந்திய நாட்டிற்கு விஜயம் செய்து நான்கு வாரங்களுக்கு மேலாகத் தங்கியது. இந்திய நாட்டு அரசியல் பிரச்சினையைக் குறித்து இந்தோ-பிரிட்டிஷ் உறவு மேலும் வளருவதற்கு இது வுகை செய்தது. இதற்கிடையில், இந்திய நாட்டிற்குப் பூரண சுதந்திரம்

வழங்கவேண்டிய அவசியத்தைக்குறித்துத் தொழில் கட்சியைச் சார்ந்த அரசு நன்கு உணரலாயிற்று. இந்திய மக்கள், பிரிட்டிஷ் காமன்வெல்த்தின் அங்கத்தினர்களாக இருப்பதற்கு விரும்பலாமென்று தான் எதிர்பார்ப்பதாகவும், பூரண சுதந்திரத்தைக் கோருவதற்கு அவர்களுக்கு உரிமையுண்டென்றும், 1945ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 14ஆம் தேதி அன்று பிரதமர் அட்லி, காமன்ஸ் சபையில் அறிவித்தார். இவ் அரசியல் மாற்றத்தை அமைதியாகவும் சுலபமாகவும் செய்வதற்கு பிரிட்டன் உதவி செய்வதற்குக் கடமைப்பட்டதென்பதையும் அவர் ஏற்றுக்கொண்டார். இவ் வாக்குறுதியை நிறைவேற்றிவைப்பதற்கென்று, மேலே குறிப்பிட்ட பிரகடனத்தைத் தொடர்ந்து, காபினெட் தூது கோஷ்டியொன்று இந்தியாவிற்கு அனுப்பிவைக்கப்பட்டது.

## காபினட் மிஷன் பிரேரேபணைகள்

ஸர் ஸ்டா∴போர்டு கிரிப்ஸ், லார்டு பெதிக் லாரன்சு, திரு. ஏ. வி. அலெக்சாந்தர் ஆகிய மூவரும் கிரிப்ஸ் தூது கோஷ்டியில் அங்கம் வகித்தனர். மார்ச்சு மாதத்தின் மூன்ருவது வாரத்திலிருந்து ஜுன் மாதம் மத்திவரையிலும், மூன்று பிரிட்டிஷ் மந்திரிகளும், இந்திய நாட்டுக் கட்சித் தலைவர்களான முக்கிய அரசியல்வாதிகளுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். தங்கள் இந்திய விஜயம் முற்றுப் பெறுகின்ற தருணத்தில், இந்திய நாட்டின் வருங்கால அரசியலமைப்பைக் குறித்த தங்கள் திட்டத்தை வெளியிட்டனர். அதற்குக் 'காபினட் மிஷன் திட்டம்' என்ற பெயர் வழங்கிவருகிறது. அகில இந்திய முஸ்லீம் லீக் கட்சியினர், நாட்டை இரண்டாகப் பிரிக்கவேண்டுமென்றும், முழு இறைமை பெற்ற பாகிஸ்தானை உருவாக்கவேண்டுமென்றும் கோரினர். காபினட் திட்டம் அக் கோரிக்கையை மறுத்தது. மூன்று வகையான தன்னாட்சி பெற்ற அரசுகளைக்கொண்ட நாட்டுக் கூட்ட அரசியல் திட்டத்தை சிபாரிசு செய்தது. இவ் அரசியலடிப்படையில் தற்காப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், செய்திப் பரிவர்த்தனைகள் ஆகியவற்றை மத்திய அரசின் பொறுப்பில் விட்டுவிட வேண்டுமென்றும், எஞ்சியுள்ள அதிகாரங்களை நாடுகளே வைத்துக்கொள்ளவேண்டுமென்றும் விதித்தனர். நாட்டுக் கூட்டத்தின் ஒவ்வொரு பகுதியும் தனக்கென்று தனி அரசியல் திட்டத்தை வகுத்துக்கொள்ளலாம். இவ் ஏற்பாட்டினால் பிரதான சமயக் கூட்டங்களான இந்துக்களும் இஸ்லாமியரும் ஒற்றுமையுடன் வாழ்க்கை நடத்துவதற்கும், அவர்கள் பெரும்பான்மையினராக விளங்கிய பகுதிகளில் முழு சுய ஆட்சி பெற்று விளங்குவதற்கும் நல்ல வாய்ப்புகளேற்பட்டன. நெடுநாள் தேவையைப் பூர்த்தி செய்வதற்கென்றும், உடனடித் தேவையைப் பூர்த்தி செய்வதற்கென்றும் திட்டத்தில் இரு பகுதிகள் இருந்தன. எதிர்காலத்தில் அரசியலமைப்பு நிரந்தரமாக எவ்வாறு அமையவேண்டுமென்பதைக்குறித்து முற்பகுதியும், உடனடியாக ஓர் இடைக்காலத் துரைத்தனம் எவ்வாறு அமைக்கப்பட வேண்டுமென்பதைக்குறித்துப் பிற்பகுதியும் எடுத்துரைத்தன.

முஸ்லீம் லீக் பிரிவினர், திட்டத்தின் இரு பகுதிகளையுமே ஏற்றனர். இந்தியத் தேசியக் காங்கிரஸ் நெடுங்காலத் திட்டமொன்றையே ஏற்பதற்குத் தயாராகவிருந்தது. இதைத் தொடர்ந்து திட்டத்தை முஸ்லீம் லீக் முழுமையையும் ஏற்க மறுத்ததோடு, தனது கோரிக்கைகளை நிறைவேற்றிக்கொள்வதற்கென்று புரட்சி செய்யப்போவதாகவும் அறிவித்தது. இதற்கிடையில் பிரிட்டிஷ் இந்திய மாநிலங்களில் தேர்தல்கள் முடிவடைந்துவிட்டன. 1935ஆம் ஆண்டுத் திட்டத்தின் மாநிலத் தன்னாட்சி முறை செயல்படுத்தப்பட்டு, எல்லா மாநிலங்களிலும் செல்வாக்குப் பெற்ற மந்திரிசபைகள் அமைக்கப்பெற்றன. ஆனால், மத்திய அரசில் இடைக்கால சர்க்கார் அமைப்பதைக்குறித்து எவ்வித முடிவும் ஏற்கப்படவில்லை. 1946ஆம் ஆண்டு ஜூன் மாத இறுதியில், தாற்காலிகமாக அனுபவமிக்க சிவில் அதிகாரிகளைக் கொண்ட, இடைக்காலத் துரைத்தனமொன்றைக் கவர்னர்-ஜெனரல் அமைத்தார்.

## இடைக்கால சர்க்கார் உருப்பெறுதல்

லார்டு வேவல் துரை, எதிர்கட்சிகளிடையே உள்ள வேற்றுமைகளை அகற்றுவதற்கு உகந்த வழியை ஆராய்ந்துவரும்போது, புரட்சியில் ஈடுபடப்போவதாக முஸ்லீம் லீக் கட்சியினரின் பிரகடனத்தால் மிகுந்த பரபரப்பும் தீவிரமான எதிர்ப்புகளும் தோன்றலாயின. இனவெறி நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டே வந்தது. 1946ஆம் ஆண்டு ஜூலை மாதம் 1ஆம் தேதியன்று இனவெறிச் செயல்கள், பம்பாயில் முதலாவதாகத் தொடங்கி, பிற பகுதிகளுக்குக் காட்டுத்தீ போலப் பரவிவந்தன. 1946ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 12ஆம் தேதியன்று, பண்டிட் ஜவாஹர்லால் நேருவை, இடைக்கால மத்திய அரசு அமைப்பதற்கான பிரேரேபணைகளைக் கலந்தாலோசிப்பதற்கென்று லார்டு வேவல் துரை அழைத்தார். ஆலோசனைகள் வெற்றிகரமாக நடந்தேறியதன் பயனாக செப்டம்பர் மாதம் 2ஆம் தேதியன்று இடைக்கால சர்க்கார் ஏற்படுத்தப்பட்டது.

இதற்கு நடுவில், முஸ்லீம் லீகினர் நேரடி நடவடிக்கைகளில் ஈடுபடலாயினர்; இந்திய நாடு இதுவரை கண்டிராத இனவெறிச் செயல்கள் நாடெங்கிலும் நிகழ்ந்தன. இடைக்காலத் துரைத்தனத்தில் சின்னாட்களுக்குப்பின் பதவியேற்ற முஸ்லீம் லீகின் பேராட்களும் நிலைமையைச் சீர்திருத்துவதற்கு எவ்வித முயற்சியும் மேற்கொள்ளவில்லை.

## மௌண்ட்பாட்டன் திட்டம்

இந்திய நாட்டின் நிலை அதிக விரைவாக மாறிவருகிறதென்று இங்கும் இங்கிலாந்திலும் உணர்ந்தனர். உடனடியாகச் செயல்படவில்லையெனில், நிலைமை மிகவும் மோசமாகி அழிவு நிச்சயமாகி

விடுமென்பதை அவர்கள் உணர்ந்தனர். லார்டு வேவல் இந் நிலைமையைச் சமாளிப்பதற்குத் தகுதியற்றவர் என்பதை உணர்ந்த பிரிட்டிஷ் துரைத்தனத்தார், லார்டு லூயி மௌன்ட்பாட்டன் என்பவரைத் தொடர்ந்து கவர்னர்-ஜெனரலாக அமர்த்தினர். 1948ஆம் ஆண்டு ஜூன் மாத இறுதிக்குள்ளாக, அரசியலதிகாரத்தைப் பொறுப்புள்ள இந்தியப் பிரதிநிதிகளிடமே மாற்றிவிடப்போவதாக, முக்கிய வரலாற்றுச் செய்தியாக விளங்குகின்ற பிரகடனமொன்றை 1947ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 20ஆம் தேதியன்று வெளியிட்டனர். உடனடியாகப் பதவியேற்ற லார்டு மௌன்ட்பாட்டன், கட்சித் தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்துவதில் மூழ்கினார். வகுப்புவாதப் பூசல்களால் ஏற்படுகின்ற வெறிச்செயல்களையும் உயிர்ச் சேதத்தையும் நிறுத்துவதற்கான ஒரே வழியாக உடனடியாக அரசியலதிகாரம் இந்தியர்களின் கைகளுக்கு மாற்றப்பட வேண்டுமென்பதை அவர் நன்குணர்ந்தார். இம் மாற்றத்தைத் துரிதப்படுத்துவதற்கும், அதே சமயத்தில் போட்டியிடுகின்ற இருபெரும் அரசியல் கட்சிகளைத் திருப்தி செய்வதற்கும், நாட்டை இந்தியா, பாகிஸ்தான் என்ற இரு பகுதிகளாகப் பிரித்தளிப்பதற்கான திட்டமொன்றையும் வகுத்தார். இத் திட்டத்தினடிப்படையிலேயே, பஞ்சாப், வங்காளம் ஆகிய இரு மாநிலங்களும், இரு தேசங்களுக்கும் முறையே பகிர்ந்தளிக்கப்பட்டன.

## 1947ஆம் ஆண்டு இந்தியச் சுதந்திரச் சட்டம்

மௌன்ட்பாட்டனின் திட்டத்தை பிரதான இந்திய அரசியல் கட்சிகளும் பிரிட்டிஷ் அரசாங்கமும் ஏற்றன. 1948ஆம் ஆண்டு ஜூன் மாதத்திற்கு முன்பாக, அரசியலதிகாரத்தை மாற்றிவிடுவதென்ற தீர்மானம், 1947ஆம் ஆண்டு ஜூன் மாதம் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் வெளியிடப்பெற்றது. அதற்கேற்ப இந்தியச் சுதந்திரச் சட்டம் வெளியிடப்பெற்றது. அதனடிப்படையில், 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதியன்று இந்தியா, பாகிஸ்தான் என்ற இரு புதிய டொமினியன்களை ஏற்படுத்துவதென்றும் முடிவாயிற்று. இவ்வாறு வரலாற்றுச் சிறப்பு மிக்க 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் நன்னாளில் இரவு பன்னிரண்டு மணிநேரத்தில், இந்தியா, பாகிஸ்தான் என்ற இரு புதிய டொமினியன்கள் தோன்றின. இதன்மூலம், உலகின் கண்ணுள்ள மனிதவர்க்கத்தில் ஐந்தில் ஒரு பங்கான நானூறு மில்லியன் மக்களுக்கு அரசியல் சுதந்திரம் வழங்கப் பெற்றது.

## இந்திய சுதேச ராஜ்யங்களின் நிலை

1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் பிரிட்டிஷார் இந்திய நாட்டைவிட்டு வெளியேறியதும், அரசியலடிப்படையில் பிரிட்டிஷ் இந்தியா என்றும், இந்திய இந்தியா என்றும் இக் நாடு துண்டிக்கப்பெற்றது.

பிரிட்டிஷ் இந்தியாவில், ஒன்பது கவர்னர் ஆட்சிக்குட்பட்ட மாநிலங்களும், ஐந்து பிரதான கமிஷனர் ஆட்சிக்குட்பட்ட மாகாணங்களும், மலைச்சாதியினர் வசித்த பகுதிகளும், எல்லைப்புற மாகாணங்களும், அந்தமான், நிக்கோபர் தீவுகளும் அடங்கியிருந்தன. இந்திய இந்தியாவில் 500 மாநிலங்கள் அடங்கியிருந்தன. அவைகளில் நூற்றுக்குமதிகமானவை மேஜர் மாகாணங்களாகும். ஹைதராபாத், காஷ்மீர், மைசூர், திருவிதாங்கூர், பரோடா ஆகியவை இதிலடங்குகின்றன. ஒருசில நீங்கலாகப் பெரும்பான்மையான இம் மாகாணங்களில் தன்னரசு நிலவிவந்தது. அவைகளில் சில, மத்திய கால ஐரோப்பிய நிலமானிய நாடுகளைப்போன்றவை. அவைகளில் பெரும்பான்மையானவற்றை மாநிலங்கள் என்றுகூடக் கூறவியலாது. அவைகள் அளவில் சிறியவையாகவும் வளங்குன்றியவையாகவுமிருந்தன. 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதியுடன் பிரிட்டிஷ் பேரரசின் ஆதிக்கம் தீர்ந்துவிட்டபடியால், அவை யாவும் முழு இறைமை பெற்ற மாநிலங்களாகிவிட்டன. பிரிட்டிஷ் பிரதம மந்திரி அறிவித்த கருத்திற்கிணங்க, இம் மாநிலங்கள் முழுச் சுதந்திரம் பெற்றுவிட்டன. இந்தியா, பாகிஸ்தான் என்ற இரு டொமியன்களில் ஒன்றில் சேருவதற்கு அவைகளுக்குப் பூரண உரிமை வழங்கப்பெற்றுவிட்டது.

இம் மாநிலங்கள் தன்னரசு பெற்ற தனி அரசியல் அளவைகளாக விளங்குவனவென்பதை எண்ணிப் பார்க்கவும் வழியில்லை. இரு டொமினியன்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அதனோடு இணைந்து ஒன்றாகிவிடுகின்ற வாய்ப்பையே அவை பெற்றன. அரசியல், மற்றும் புவியியல் சக்திகளும் இத் தேர்வைத் தீர்மானிப்பதில் மிக முக்கியமான பங்கு பெற்றன. டொமினியனைத் தேர்ந்தெடுப்பதில் அப் பகுதிவாழ் மக்களின் விருப்பத்திற்கும் செவிசாய்க்க வேண்டியிருந்தது. ஒரு சில மாநிலங்கள் பாகிஸ்தானுடன் சேர்ந்து கொண்டன. பல இந்திய மாநிலங்கள், இந்திய டொமினியனுடன் இணைந்து ஒரு நூற்றாண்டுக் காலத்திற்குள் முதல் முறையாக நாட்டின் ஒற்றுமைக்கு வழியமைத்தன.

## மாநிலங்களின் இணைப்பும் நாட்டெல்லைகள் சீரமைக்கப்படுவதும்

இம் மாநிலங்கள் இந்திய நாட்டுடன் இணைந்ததால், டொமினியனில் அடங்கியுள்ள மாநிலங்களின் எல்லைகளைப் புனரமைக்கவேண்டியதாயிற்று. 'ஒன்றுபடுதல்' (integration), 'இணைதல்' (merger) என்ற இருவகைச் செயல்பாடுகள் இதிலடங்கியிருந்தன. ஒன்றுபடுதல் என்ற முறையால் இரண்டு அல்லது அதற்குமேற்பட்ட மாநிலங்கள் ஒன்றுசேர்ந்து அடக்கமான ஆட்சி அளவையாக உருப்பெற்றன. இராஜஸ்தானம், திருவிதாங்கூர்-கொச்சின், சௌராட்டிரம் (1950) போன்ற இந்திய டொமினியனில் அடங்கிய மாநிலங்கள் இவ்வாறு உருப்பெற்றவையேயாகும். இணைப்பு என்ற முறையால், சிறு மாநிலங்

கள் ஒன்று சேர்ந்து அண்டையிலுள்ள பெரு மாகாணங்களோடு இரண்டறக் கலந்துவிட்டன. பீஹாருடன் சேரைக்கெல்லா, காஸ்ரவம் போன்ற மாநிலங்கள் இணைந்ததையும், நிலமானிய மாநிலங்கள் சில ஒரிசாவுடன் இணைந்ததையும், புதுக்கோட்டை, சென்னை மாநிலத்துடன் இணைந்ததையும் இதற்கு மேற்கோள்களாகக் கூறவேண்டும்.

ஒன்றுபடுதல், இணைத்தல் என்ற இரண்டு கோட்பாடுகளும் நல்ல விளைவுகளை ஏற்படுத்தின. இந்திய யூனியனில் அடங்கியிருந்த எண்ணிக்கை, ஆறு நூறிலிருந்து பதினறாகக் குறைக்கப்பட்டது. 1950ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்ட பதினறு மாநிலங்களில் ஒன்பதைப் பகுதி 'B' மாகாணங்கள் என்றும், எஞ்சியிருந்த ஏழு மாநிலங்களைப் பகுதி 'C' மாகாணங்கள் என்றும் அழைத்தனர். இரண்டாவதாக, இப் பகுதிகளில் பிரதிநிதிகளடங்கிய, பொறுப்புள்ள ஆட்சி ஏற்படுவதற்கும் வழி அமைக்கப்பட்டது. மூன்ருவதாக, இந்திய நாடு, இந்தியா-பாகிஸ்தான் என்ற இரு கூறுகளாகத் துண்டாடப் பட்டபோதிலும், புதிய இந்தியா பல அரசுகளைக்கொண்டு நன்ருகப் பிணைக்கப்பட்ட அரசியல் கோவையாக உருவாயிற்று. பலத்த மத்திய அரசுடன் கூடிய கூட்டாட்சி முறை அரசியலொன்று ஏற்படுவதற்கும் நல்ல வழியமைக்கப்பட்டது.[1] இவ்வரிய சாதனை, பரந்த எதிர்நோக்கும் அரசியலில் சிறந்த ஆக்க சக்தியும் பெற்ற சர்தார் வல்லபாய் படேலின் முயற்சியால் விளைந்தது. குடியரசு இந்தியாவின் முக்கியச் சிற்பிகளில் ஒருவராக அவர் விளங்கியிருக்கிருர்.

## குடியரசாக மாறுவதற்குரிய தீர்மானம்

பிரிட்டிஷ் காமன்வெல்த் குடியரசின் ஓர் உறுப்பாக இந்தியா நெடு நாட்கள் நீடித்திருக்கவில்லை. 1949ஆம் ஆண்டு மே மாதம், இந்தியா ஒரு குடியரசாக மாறிவிடவேண்டுமென்று அரசியல் நிர்ணய சபை தீர்மானித்தது. மேலும், அது சுதந்திர நாடுகளின் பொதுநலக் கூட்டில் (இனியும் அது பிரிட்டிஷ் காமன்வெல்த்தாக இல்லை) தொடர்ந்து அங்கத்தினராக இருந்து வரவேண்டுமென்றும், இங்கிலாந்தின் அரசனை அதன் தலைமை அடையாளமாகக் கருத வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. இம் முடிவு, இந்திய நாட்டின் அரசியலமைப்புத் திட்டத்தில் இடம்பெறவில்லை என்பதும், இந்திய நாட்டிற்கும் காமன் வெல்த்தின் பிற நாடுகளுக்குமிடையிலுள்ள நல்லதொரு நம்பிக்கையின் அடிப்படையிலேயே இருந்துவருகிறதென்பதும் அறிவதற்கு மிகச் சுவையாகவே இருக்கிறது.

[1] தற்கால அமைப்பு ஏற்படுவதற்கான மாநிலங்களின் புனரமைப்பைப்பற்றிய முழு விவரங்களும் அடுத்து வரும் அதிகாரத்தில் மேலும் விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன.

## அரசியல் நிர்ணய சபை

1947ஆம் ஆண்டுச் சுதந்திரச் சட்டத்தினடிப்படையில் அரசியலதிகாரம் முழுவதும் மாற்றப்படுவதற்கு முன்னரே, இந்திய நாட்டிற்கேற்ற அரசியல் திட்டமொன்றைத் தயாரிப்பதற்கென்று அரசியல் நிர்ணய சபை ஒன்று ஏற்படுத்தப்பட்டது. காபினெட் தூதுக்குழுவினருக்கும் இந்திய நாட்டின் பிரதான அரசியல் கட்சிகளுக்குமிடையே 1946ஆம் ஆண்டு ஏற்பட்ட உடன்பாட்டிற்கிணங்க இது ஏற்பட்டது. நிறுவப்படவிருக்கின்ற அரசியல் நிர்ணய சபைக்கு அங்கத்தினரைத் தேர்வது மறைமுகமாக இருக்க வேண்டுமென்றும், அதனால் சபை கூட்டுவதிலேற்படக்கூடிய காலதாமதம் தவிர்க்கப்படலாமென்றும் கருதினர்கள். மாநிலங்களில் தேர்வின்மூலமாக அமைந்த சட்டசபையினர், அரசியல் நிர்ணய சபைக்கு அங்கத்தினரைத் தேர்வதென்று முடிவாயிற்று. அசெம்பிளியில் பிரிட்டிஷ் இந்திய மாநிலங்களுக்கென்று 292 ஸ்தானங்களும், இந்திய சுதேச சமஸ்தானங்களின் பேராட்களுக்கென்று 93 ஸ்தானங்களும் ஒதுக்கப்பெற்றன. இவ்வாறு, அரசியல் நிர்ணய சபையின் மொத்த அங்கத்தினர் எண்ணிக்கை 385ஆக இருந்தது. புதியதோர் அரசியலமைப்புத் திட்டத்தைத் தயாரிக்கின்ற பொறுப்பு இச்சபையினிடமே ஒப்புவிக்கப்பட்டது.

முதல் முறையாகக் கூட்டப்பெற்றபோது, அரசியல் நிர்ணய சபை முழு இறைமை பெற்ற நிறுவனமாக இல்லை. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் இறுதி ஒப்புதலை அது எதிர்நோக்கியிருந்ததையே இதற்குக் காரணமாகக் கூறவேண்டும். ஆனல், 1947ஆம் ஆண்டு இந்திய சுதந்திரச் சட்டம் அதனமைப்பில் முழு மாறுதலை ஏற்படுத்தி, இறைமை பெற்ற நிறுவனமாக மாற்றியது. 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 14ஆம் தேதியன்று அது மீண்டும் கூடி இந்தியத் துரைத்தனத்தின் சார்பில் பதவியேற்கச் சித்தமாக இருந்தது.

அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினர்கள், குறிப்பிட்ட எந்த ஓர் அரசியல் கட்சியிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்படவில்லை. எல்லாவித வாழ்க்கைத் துறையிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்ததோடு, இந்திய மக்களின் ஒவ்வோர் இனத்தின் பேராட்களும் சபையின் உறுப்பினராயினர். இந்தியச் சமுதாய வாழ்க்கையில் மிகச்சிறந்த தொண்டாற்றிய சிலரும் அதில் இடம்பெற்றிருந்தனர். நிர்ணய சபையின் உயிர்த்தத்துவமாகிய சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமராக நேரு விளங்கினர்; ராஜேந்திர பிரசாத் அதன் தலைவராக இருந்தார். முக்கியப் பங்கு கொண்டவர்களில் வல்லபாய் படேலைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். இத் தலைவர்கள் யாவரும் பிறரைக்காட்டிலும், திட்டத்தின் அடிப்படைகளைத் தீர்மானிப்பதற்குப் பாடுபட்டனர். ஆனல், பி. ஆர். அம்பேத்கர் என்பவரைத் தலைவராகக்கொண்ட திட்ட வரை கமிட்டியே, வரைதிட்டத்தைத் தயாரிப்பதற்கு அருந்தொண்டாற்றியது. வரைதிட்டக் கமிட்டியில் அம்பேத்கருடன் துணையாகு

அமர்ந்து ஒத்துழைத்தவர்களில் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், என். கோபாலஸ்வாமி அய்யங்கார், கே. எம். முன்ஷி, டி. டி. கிருஷ்ணமாச்சாரி ஆகியோர்களைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும்.

யூனியன் பவர் கமிட்டியின் அறிக்கைகள், யூனியன் திட்டக் கமிட்டி, சிறுபான்மையினர் மற்றும் ஆதார உரிமைகளைக் குறித்து ஆலோசனை கூறும் கமிட்டி, மாநிலத் திட்ட கமிட்டி, பிரதான, கமிஷனர் ஆட்சிக்குட்பட்ட மாகாணங்களைப் பொறுத்த கமிட்டி, யூனியன் திட்ட நிதித் தேவைகளை ஆராயும் கமிட்டி, ஆதிவாசிகளைக் குறித்து ஆலோசிக்கின்ற கமிட்டி ஆகியவை திட்டமென்ற கட்டிடத்திற்குத் தேவையான செங்கற்களையும் சுண்ணும்பையும் அளித்தன. ஆனுல், இறுதியான உருவத்தையும் அழகையும் வரைதிட்டக் கமிட்டி உறுப்பினர்களும் டாக்டர் அம்பேத்கரும் ஒத்துழைத்து அளித்தனர். 1946ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9ஆம் தேதி முதல் முறையாகக் கூடிய அரசியல் நிர்ணய சபைக்குத் திட்டத்தை முழுவதும் உருவாக்குவதற்கு இரண்டு ஆண்டுகள், பதினெரு மாதங்கள், பதினேழு நாட்கள் பிடித்தன. இக் காலவரையில் பதினெரு செஷன்சுகளை நடத்தி, நடைமுறையில் 165 நாட்கள் வேலை மேற்கொள்ளப்பட்டது. வரைதிட்டத்தில் 315 விதிகளும் 13 ஷெட்யூல்களுமிருந்தன. 1949ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட திட்டத்தின் இறுதி வடிவில் 395 விதிகளும் 8 ஷெட்யூல்களுமிருந்தன. இதிலிருந்து வரைதிட்டத்தில் பல மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டன என்பது தெளிவாகிறது. வரைதிட்டத்தில் 7,000 திருத்தங்களுக்குமேல் தேவையென்று அறிக்கைகள் வெளியிடப்பெற்றன. இவைகளில் 2,473 பிரேரேபிக்கப்பட்டு, விவாதத்திற்கு உட்படுத்தப்பட்டு, லாயக்கற்றவை என ஒதுக்கப்பட்டன. நிர்ணய சபை எத்தகைய பணியாற்றியது என்பதற்கு இது ஒன்றே சான்ருக விளங்குகிறது. நிர்ணய சபையில் கையாளப்பெற்ற நடவடிக்கைகளை ஆராய்பவர்களுக்கு, ஜனநாயகப் பரிசோதனைகளில் இது மிகச் சிறந்தவொன்று என்பது புலனுகும். விவாதத்திற்குப் போதிய இடமளிக்கப்பட்டிருந்தது. குறைகளைப் பொறுமையுடன் செவிமடுத்து, நீண்ட நேர விவாதங்களைச் செவியுற்று அலுத்துவிடாமல், அவசரத்தை அறவே நீக்கி, சுமை தாங்க வைக்கும் முயற்சியிலீடுபடாது நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. கையாளப்பெற்ற உண்மையான ஜனநாயக முறையைக்குறித்து உண்மையிலேயே இந்தியர்கள் பெருமை கொள்ளலாகும்.

முழு உருப்பெற்ற திட்டத்தை 1949ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26ஆம் தேதியன்று அரசியல் நிர்ணய சபை ஏற்றது. எனினும், 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26-ஆம் தேதியன்றே திட்டத்தின் தொடக்க விழாக் கொண்டாடப்பெற்றது. அந்நாளையே நாம் குடியரசு தினமென்று கொண்டாடிவருகிறோம்,

பகுதி II

# அரசியலமைப்பின் முகப்பு, எல்லை, குடிமை

## 4. அரசியலமைப்பின் முகப்பு

அரசியல் திட்டம் ஒவ்வொன்றிற்கும் முகப்பு ஒன்று உண்டு; அதில் அதன் குறிக்கோள்களும் அடிப்படைக் கருத்துகளும் அடங்கியிருக்கின்றன. இதனால் திட்டத் தயாரிப்பாளர்களுக்கு மிகுந்த பயனுண்டு. பல்லாண்டுகளாகக் கண்டுவரும் இலட்சிய சமுதாயக் கனவை எடுத்தியம்புவதற்கு அவர்களுக்கு இங்கு ஓர் அரிய வாய்ப்புக் கிடைத்தது. புதிய சமுதாயத்தைத் தாங்குகின்ற அடிப்படைகளைக் கொண்ட முகப்பொன்றை அளிப்பதற்கு அவர்கள் மிகவும் ஆவலுள்ளவர்களாக இருந்தது இயற்கையேயாகும்.

சட்ட நோக்கில் இம் முகப்பைப் பயனற்றதென்றே கருத வேண்டும். சட்டத்தின் வாசகங்கள் தெளிவாகவும் ஐயத்திற்கிடமின்றியுமிருக்கும்போது, இம் முகப்புகள் சட்டத்தை மேலும் விளக்குகின்ற வாய்ப்பைப் பெறுவதில்லை. ஐயத்திற்கிடமான சட்ட விதி ஒன்று இருக்குமெனில், அதை விளக்குவதற்கும் தெளியவைப்பதற்குமாக முகப்பை மேற்கோளாகக் கூறலாம். இந்த வகையில் 'திட்டத்தை உருவாக்கியவர்களின் உள்ளத்தை அடைவதற்கு உரிய திறவுகோலாகவும், அவர் குறைக்க எண்ணிய கெட்ட வழிகளை அறிவதற்குரிய வாயிலாகவும்' முகப்பைக் கருதலாம். இக் கருத்தை இந்திய உயர் நீதி மன்றம் முழுமையாக ஆதரிக்கிறது.

இந்திய அரசியலமைப்பின் முகப்பில் காணப்படும் வாசகங்கள் வருமாறு ;

"இந்திய மக்களாகிய நாங்கள் இந்திய நாட்டை மனப்பூர்வமாக ஒரு பூரண இறைமை பெற்ற ஜனநாயகக் குடியரசாகச் சமைப்பது என்று உறுதி பூண்டு அதன் குடிமக்கள் யாவருக்கும்

சமூக, பொருளாதார, அரசியல் துறைகளில் 'நியாயத்தையும்', எண்ணம், பேச்சு, கருத்து, நம்பிக்கை, வழிபாடு ஆகிய 'உரிமைகளையும்,' வாய்ப்புகள், அந்தஸ்து ஆகியவைகளில் 'சமத்துவத்தையும்' பெற்றுத் தருவதோடு,

நாட்டின் ஒற்றுமைக்குக் கேடு விளையாமல், தனி மனிதனின் கௌரவத்தை உறுதிப்படுத்திச் 'சகோதரத்துவத்தை' வளர்க்கவும்

1949ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26ஆம் தேதியாகிய நன்னாளில் 'எங்கள் அரசியல் நிர்ணய சபையில்' இவ்வாறு இயற்றிக் கடைப்பிடித்து எங்களைத் திட்டத்திற்கு அர்ப்பணித்துக்கொள்கிறோம்.'

அரசியல் நிர்ணய சபையின் முதல் கூட்டத்தில் ஜவஹர்லால் நேரு அவர்கள் கொள்கைப் பிரேரேபணைகள் சிலவற்றைச் சமர்ப்பித்தார். அவைகளை அசெம்பிளி முழு மனத்துடன் ஏற்றுக்கொண்டது. நேரு அவர்களின் பிரேரேபணைகள் புதியவை அல்ல—மகாத்மா காந்தியடிகள் முன்னரே இக் கருத்துகளைப் பன்முறை வழங்கியிருக்கின்றார். 1931ஆம் ஆண்டு இரண்டாவது வட்ட மேசை மகாநாட்டிற்குக் காந்தியடிகள் தேசிய இந்தியப் பிரதிநிதியாக அழைக்கப்பட்டார்; பிரயாணத் தொடக்கத்தில் லண்டனுக்கு அவரை அழைத்துச் செல்லவிருந்த கப்பலின் மேல்தளத்தில் அவர் நின்றுகொண்டிருந்தபோது, பத்திரிகை நிருபர்கள், சந்தர்ப்பம் கிடைக்குமாயின் எத்தகைய திட்டத்தை நீங்கள் கொண்டுவருவீர்களென வினவினர். காந்தியடிகள் இறுத்த மறுமொழியை இங்குக் குறிப்பிடுவது பொருந்தும்: 'இந்திய நாட்டைத் தளைகளிலிருந்தும் அரவணைப்பிலிருந்தும் நீக்கி, தேவையானால் குற்றம் புரிகின்ற வாய்ப்பினையும் அதற்கு அளிக்கும் வல்லமையுள்ள அரசியல் சட்டத்தை விரும்புவேன். மிக ஏழ்மை நிலையுள்ளவனும் இதைத் தனது நாடாகக் கருதுகின்ற வாய்ப்பினையும், அதை உருவாக்குவதில் தனக்குமோர் பங்குண்டு என எண்ணுகின்ற வாய்ப்பினையும் அளிக்குமொரு திட்டத்தை உருவாக்க முயற்சிசெய்வேன். ஏழையென்றும் பணக்காரனென்றும் பாகுபாடற்ற சமுதாயத்தையும், எக் குலத்தினரும் ஒன்றாகக் கூடிவாழ்கின்ற சமுதாயத்தையும் உருவாக்க முயற்சி செய்வேன். அத்தகைய இந்தியாவின் தீண்டாமை என்ற சாபத்திற்கோ, போதை தருகின்ற மதுபோன்ற பிற லாகிரிப் பொருள்களுக்கோ இடமளிக்கமாட்டேன். ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சம உரிமை வழங்குவேன். உலகிலுள்ள பிற நாடுகளுடன் நட்புக் கொண்டு, அமைதியான வாழ்க்கை நடத்த விரும்புகின்ற நம் நாட்டில் பிறரைச் சுரண்டுவதோ அல்லது பிறரால் சுரண்டப்

படுவதோ இருக்க முடியாதென்பதால், மிகக் குறைந்த படை பலத்தையே நாம் அமைத்துக்கொள்ளவேண்டும். ஊமைகளாக வாழ் கின்ற மில்லியனுக்கதிகமான மக்களின் நலனுக்கு முரணற்ற எல்லா நன்மைகளேயும், இந் நாட்டில் தோன்றியவையாயினும் அல்லது பிற நாட்டில் தோன்றியவையாயினும், விருப்பு வெறுப்பின்றி நான் ஏற்றுக் கொள்வேன். சொந்த முறையில், அந்நியரால் உருப்பெற்றது, நாட் டிற்கு இயற்கையானது என்ற பாகுபாட்டையே நான் வெறுக்கிறேன். நான் கனவுகாண்கின்ற இலட்சிய இந்தியா இதுவேயாகும்.'

காந்தியடிகள் கண்ட இலட்சிய சுதந்திர இந்தியக் கனவின் மணம் திட்டத்தின் முகப்பில் மட்டிலுமன்றித் திட்டமுழுவதிலுமே வீசுகின்றது என்று கூறுவது மிகையாகாது.

முகப்பு முழுவதையும் படிப்பவர்களுக்கு, அது பூர்த்தி செய்கின்ற தேவைகள் நன்கு விளங்கும். அவை வருமாறு: (1) திட்டத்திற்குரிய ஆதாரம்; (2) அதன் குறிக்கோள்களைக் கூறுவது; (3) அது ஏற்கப் பட்ட தினம்.

முகப்பின் தொடக்கத்தில் காணப்படுகின்ற வாசகங்கள் மக்களே இறுதியாகத் தீர்ப்புக் கூறுகின்ற வாய்ப்பினைப் பெற்றவர்கள்; அவர் களிடமிருந்தே திட்டத்தின் எண்ணக் கருத்துகள் உருவாகின்றன என்பதை நன்கு வலியுறுத்துகின்றன. பெரும்பாலான அரசியல் திட்டங்கள் இக் கருத்தையே வலியுறுத்துகின்றன. [இந்திய மக்களின் சார்பாக அரசியல் நிர்ணய சபை திட்டத்தை 'உருவாக்கி ஏற்றது.' இதனல், நிர்ணய சபை உண்மையில் மக்களின் பேராட்களைக் கொண் டிருந்ததா என்ற கேள்வி உண்டாகிறது. 'அரசியல் திட்டம் இந்திய மக்களின் உள்ளக்கிடக்கையை எதிரொலிக்கிறதா?' என்ற கேள்வி நிர்ணய சபையின் உள்ளும் வெளியும் எழுந்தது. இத்தகைய கருத் துள்ள பிரேரேபணை ஒன்று அவையின் விவாதத்திற்குக் கொண்டு வரப்போவதாக உறுப்பினர் ஒருவர் அறிக்கை விடுத்திருந்தார். வரை திட்டத்தை விவாதிப்பதை சபை தள்ளிவைக்கவேண்டுமென்று அவர் கேட்டுக்கொண்டார். வயதுவந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப் படையில் பேராட்களைத் தேர்ந்து புதிய சபை ஒன்று அமைக்கப்பட வேண்டுமென்றும் கூறினர். அத்தகைய சபை ஒன்றிற்கே வரை திட்டத்தை ஆய்வதற்குரிய உரிமை உண்டென்றும் அவர் வாதித்தார். ஆனல், இந்த பிரேரேபணையை ஆமோதித்துக் கூறுபவர் எவருமில் லாததால், நிர்ணய சபை அதைத் தள்ளிவிட்டது.

அரசியல் நிர்ணய சபை ஏற்பட்ட சூழ்நிலைகளைக் கவனிக்கும்போது, அத்தகைய அடிப்படையில் எழுந்த நிறுவனமொன்றை 1946–ல் நீடித் திருக்கச் செய்வது இயலாதென்பது மிக நன்ருக விளங்கும். அவ்

வாண்டில் வயதுவந்தவருக்கு வாக்குரிமை என்ற அடிப்படை ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டது. அத்தகை அடிப்படையில் நாட்டின் எப் பகுதிக்கும் அனுபவமில்லை. வயதுவந்தவர்களைக் கணக்கெடுத்து வாக்காளர் பட்டியல் தயாரிப்பதற்கும், அதை அடிப்படையாகக்கொண்டு தேர்வுகள் நடத்துவதற்கும் ஏராளமான ஆண்டுகள் பிடித்திருக்க வேண்டும். அத்தகையதொரு தேர்வு நடைபெறும்வரை திட்டத்தை உருவாக்குவதில் காலதாமதமேற்படக்கூடாது என்ற சரியான கருத்து நிலவியிருந்தது. அதே நேரத்தில் நாட்டின் நிலைக்கும் தேவைக்குமேற்ற அரசியல் திட்டமொன்று இந்தியர்களால் தயாரிக்கப்பட வேண்டு மென்ற அவசியமும் இருந்தது. காபினட் தூதுகோஷ்டியினர், மறை முகத் தேர்வின்மூலமாக நிர்ணய சபை அமைக்கவேண்டுமென்று கூறிய ஆலோசனையை ஏற்றதற்கு இதையே முக்கியக் காரணமாகக் கொள்ளவேண்டும்.

1946ஆம் ஆண்டில் உரிய காலம் வந்துவிட்டது என்பது ஒன்றே பிரச்சினையாயின், மற்றுமொரு கேள்வியும் எழுகின்றது. '1950ஆம் ஆண்டில் திட்டத்தை மக்களின் ஒப்பைப் பெறுவதற்கென்று அவர் களிடம் சமர்ப்பிக்காது விடுத்ததற்குரிய காரணம் யாது ?' அத்தகைய முறையைக் கடைப்பிடித்திருந்தால், திட்டம் மக்கள் ஒப்புப் பெற்றதாக விளங்கியிருக்கும். நிர்ணய சபை ஜனநாயக முறையில் தேர்ந் தெடுக்கப்படவில்லை என்பதையும் எவரும் பொருட்படுத்தியிருக்க மாட்டார்கள். இதற்கும் விடையளிப்பது மிகச் சுலபமேயாகும். நாடு முழுவதுமுள்ள மக்களிடம் திட்டத்தைச் சமர்ப்பித்து, 180 மில்லியன் மக்களின் நல்வாக்குகளைப் பெறுவதென்பது மிகக் கடின வேலை என்பது தெளிவு. அதற்கு ஏராளமான தயாரிப்பு வேலைகளும் பொருட் செலவு ஏற்படுவதும் திண்ணம். அத்தகைய முயற்சியினால் கிடைத்திருக்கக்கூடிய பலனை 1951-52ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தல் வாயிலாக நாம் அடைந்தோம். அத் தேர்வுகள் வயதுவந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையிலே நடைபெற்றன. அத் தேர்வின் போது எதிர்க்கட்சியினர் சிலர், தங்களைத் தேர்ந்தெடுத்தால் அரசிய லமைப்புத் திட்டத்தையே கிழித்தெறிந்துவிட்டு வேறு திட்டம் அமைப்ப தாக வாக்காளர்களுக்கு வாக்குறுதி வழங்கிவந்தனர். இருந்த போதிலும், தேர்வுகளின் முடிவுமூலம் அரசியல் நிர்ணய சபை நேரடி யாகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்றாலும் மக்களின் ஒப்புதல் பெற்ற நிறுவனமே என்பதும், அரசியல் திட்டம் மக்களின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துகின்ற கருவியாக விளங்குகிறது என்பதும் வெளியாயிற்று. திட்டத்தை எதிர்த்த கட்சிகள் யாவும் தேர்தலில் தோற்றுவிட்டன என்பதோடு, அரசியல் நிர்ணய சபையின் உறுப் பினராக இருந்து, பின் தேர்தலில் போட்டியிட்ட ஒவ்வொருவரும் இந்திய நாட்டின் புதிய பாராளுமன்றத்திற்கும் ராஜ்ய சட்டசபைகளுக் கும் பெருவாரியான வாக்குகள் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்;

அன்று முதல் திட்டத்தைக் கிழித்தெறிந்துவிடுவது என்ற பேச்சு அடியோடு மறைந்துவிட்டது. இன்று நாட்டிலுள்ள ஒவ்வோர் அரசியல் கட்சியும் திட்டத்தை ஆதரிப்பதிலும், போற்றிக் காப்பதிலும், அரசியலதிகாரம் பெற்றால் அத் திட்டத்தினடிப்படையில் எவ்வாறு ஆட்சி நடத்தலாம் என்பதிலுமே கவனம் செலுத்திவருகின்றன. 1949ஆம் ஆண்டில் அரசியல் நிர்ணய சபையில் அம்பேத்கர் கூறியதை இன்றும் தீவிரமாக எதிர்ப்பவர் எவருமிருக்கவியலாது. 'இவ்வரசியல் முகப்பு, இச் சபையின் அங்கத்தினர் ஒவ்வொருவரது கருத்தையும் தாங்கி நிற்கிறது. மக்களின் இறைமைச் சக்தி என்பதிலேயே இத் திட்டம் வேரூன்றி அதன் செல்வாக்கைப் பெறவேண்டும். அது அவ்வாறே அமைந்துள்ளது'.

இந்திய மக்கள் மனமுவந்து செய்த தீர்மானத்தை அரசியலமைப்பின் முகப்புக் கொண்டிருக்கிறது. 'இந்திய நாட்டை இறைமையுடன் கூடிய ஜனநாயகக் குடியரசாக'ச் செய்வதென்பதே அத் தீர்மானம். 1947ஆம் ஆண்டு இந்தியச் சுதந்திரச் சட்டம் வெளியான பின்னர், இந்திய நாடு பிரிட்டிஷ் சாம்ராச்சியத்திடமிருந்து அடிமைத் தளையை நீக்கிக்கொண்டுவிட்டது. 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதியிலிருந்து 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதிவரையிலும், பிரிட்டிஷ் நேசநாடுகளின் கூட்டுறவில், டொமினியன் அந்தஸ்து பெற்று விளங்கியது. நடைமுறையிலிருந்துவரும் அரசியலமைப்புத் திட்டம் அமுலாக்கப்பட்டதும், ஐக்கிய அமெரிக்க நாடு அல்லது சுவிட்சர்லாந்துக் குடியரசைப்போல 'முழு இறைமை பெற்ற நாடாக' மாறிவிட்டது. இருந்தபோதிலும், பிரிட்டிஷ் நாடுகள் கூட்டமைப்பில் இந்தியா ஓர் உறுப்பாக இருந்துவருகிறது. 1949ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் லண்டனில் நடைபெற்ற காமன்வெல்த் பிரதமர் மகாநாட்டில் ஏற்பட்ட ஓர் ஒப்பந்தத்தின் விளைவாகவே இவ் விநோதமான சூழ்நிலை ஏற்பட்டது. அங்கு, இந்திய நாடு முழு இறைமை பெற்ற சுதந்திரக் குடியரசாக மாறிவிட்டபோதிலும், காமன்வெல்த் நாடுகளின் கூட்டுறவில் முழு உறுப்பினராக அது பங்கு பெற்று இருந்துவருமென்றும், காமன்வெல்த் நாடுகள் சுதந்திரம் பெற்று நட்புடன் இயங்குவதற்கு இலட்சியமாக பிரிட்டிஷ் அரசரை ஏற்குமென்றும் அறிவிக்கப்பட்டது. ஆனால், இவ்வறிக்கை சட்ட வரம்பிற்கப்பாற்பட்டது என்பதை இங்கு நாம் உணரவேண்டும். அதைப்பற்றிய எவ்விதக் குறிப்பும் இந்திய அரசியலமைப்புத் திட்டத்தில் இல்லை. பிறரது வற்புறுத்தலெதுவுமின்றி வெளியிடப்பட்ட இவ்வறிக்கை, சட்ட வரம்பிற்குட்பட்ட கட்டுப்பாடுகளின்றிச் சுதந்திர நாடுகள் தாமாகவே இயங்குகின்றன என்பதை எடுத்துக்காட்டுவதாகும். பிரிட்டிஷ் அரசரை (அல்லது அரசியை) இலட்சியக்குறியாக ஏற்றிருப்பதால், இந்தியக் குடிமக்கள் அந் நாட்டு மன்னருக்குத் தலைவணங்கி அடிபணியவேண்டுமென்பதுமில்லை. அவ்வாறு வற்புறுத்தலெதுவுமின்றிக் காமன்வெல்த்தில் இந்தியா கூட்டுச் சேர்ந்திருப்பதால் இந்திய நாட்டின் இறைமைக்கு

எவ்விதச் சேதமும் ஏற்படுவதில்லை எத்துணைச் சுலபமாக இவ்வறிக்கையை வெளியிட்டதோ, அதைப்போலவே அது தனது கூட்டுறவைத் துண்டித்துக்கொள்ளவும் கூடும்.

'ஜனநாயகம்' என்ற சொல் ஆழ்ந்த பொருளுடையதாகும். சாதாரண அரசியல் நோக்கில் அது ஒரு வகையான ஆட்சி முறையைக் குறிப்பதாகும். இவ்வகை அரசு முறையில் மக்களின் பேராட்களைக் கொண்ட பொறுப்புள்ள துரைத்தனம் நடைபெறும். துரைத்தனப் பொறுப்பேற்றிருப்பவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, மக்களுக்கு உத்தரம் சொல்லவும் கடமைப்பட்டவர்களாவார்கள். பரந்த நோக்காகக் கருதும்போது, அது அரசியல் துறையில் ஜனநாயகமென்பதோடன்றிச் சமுதாயப் பொருளாதாரத் துறைகளிலும் பொருந்துகின்றது. இவ்வகையான கருத்துடனேயே 'ஜனநாயகம்' என்ற சொல் அரசியல் முகப்பில் இடம்பெற்றிருக்கிறது.

'குடியரசு' என்ற சொல்லில், தேர்ந்தெடுக்கப்படும் தலைவன் என்ற பொருளும் அடங்கியிருக்கிறது. ஒரு ஜனநாயக அரசிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது பரம்பரைத் தலைவனும் இருக்கக்கூடும். பின்கூறியவற்றிற்கு ஏற்ற மேற்கோளாக பிரிட்டனைக் கூறலாம். அங்குப் பரம்பரைத் தலைவனாக அமர்ந்திருகின்ற அரசன், ஜனநாயக ஆட்சிக்கோர் தடையாக இல்லை. ஆட்சி செலுத்துகின்ற உண்மை அதிகாரம் அங்கு மக்களின் பிரதிநிதிகளிடமே இருந்துவருகிறது குடியரசு ஆட்சி முறையின்கீழ் இதற்கு மாறாகத் துரைத்தனத்தின் தலைவன், ஒருவனாகவோ அல்லது பலர் கூடியோ குறிப்பிட்ட காலவரையறையில் ஆட்சி செய்வதற்கென்று தேர்ந்தெடுக்கப்படுகிறான். உதாரணமாக, ஐக்கிய அமெரிக்க நாட்டின் தலைவனாகவும், தலைமை ஆட்சியாளனாகவும் விளங்குகின்ற—பிரசிடென்ட்—நான்காண்டுகள் பதவி வகிப்பதற்கென்றே தேர்ந்தெடுக்கப்படுகிறான் சுவிட்சர்லாந்தில் இதற்கு மாறாக, ஏழு அங்கத்தினர்களைக்கொண்ட கூட்டாட்சிக் குழு ஒன்று, ஏழாண்டுகள் ஆட்சி செலுத்துவதற்கென்று தேர்ந்தெடுக்கப்படுகிறது. குடியரசாக இயங்குவதென்று தீர்மானித்துவிட்ட இந்திய நாடு, தன் குடிமக்களுள் ஒருவனை—முறையான இடைவெளிகளில் பிரசிடென்ட் அல்லது நாட்டுத் தலைவனைத் தேர்ந்தெடுக்கிறது.

அரசியலமைப்பின் முகப்பு, மேலும் இந்தியக் குடியரசின் குறிக்கோள்களைச் சித்திரிக்க முயல்கிறது. இக் குறிக்கோள்கள் நான்கு வகையாகும்: நியாயம், சுய உரிமை, சமத்துவம், சகோதரத்துவம். நியாயம் என்ற குறிக்கோளுக்கிணங்க, 'தனி மனிதனின் நடத்தை சமுதாயத்தின் பொதுநலனோடு ஒன்றியிருக்க வேண்டும்'. நியாயம் என்ற குறிக்கோளின் அடிப்படை பொதுநலனைப் பேணுவது என்பதேயாகும். அரசியல் திட்டத்தின் முகப்பில் கூறியிருப்பதுபோலச் சமுதாய, பொருளாதார, அரசியல் துறைகளில் மனிதன் மேற்கொள்ளும் முயற்சி யாவும் இதிலடங்குகின்றன.

'தனியுரிமை' என்ற சொல், மறைமுகமான பொருளுடைத்தா யிருப்பதோடு, தெளிந்த பொருளையும் கூறுவதாய் முகப்பில் அமைகின்றது. குடிமகன் தன்னிச்சைப்படி செயல்படுவதை நினைத்தவாறு தடை செய்கின்ற வாய்ப்பு இல்லாமையை அது குறிப்பிடுவதோடு, குடிமகனின் முழுத் திறனும் வெளிப்படுவதற்குரிய வாய்ப்புகளைத் தோற்றுவிக்கின்ற தேவையான கூறுபாடுகளையும் அது குறிப்பிடுகிறது. சமுதாயம் என்பது பல மக்கள் கூடி எழுகின்ற நிறுவனமென்பதால், குடிமக்களின் முன்னேற்றத்தை அடிப்படையாகக்கொண்டே சமுதாயமும் முன்னேற இயலும். சமுதாயம் என்பது தனி மனிதர்களின் கூட்டம் என்பதால், தன் நலம் கருதிக் குடிமகனுக்குச் சிந்திக்கவும் செயல்படவும் சமுதாயக் கட்டுப்பாடுகளையும் சூழ்நிலைகளையும் ஒட்டிய வாறு அதிகபட்ச உரிமை அளிக்கவேண்டும்.

சுய உரிமையும் சமத்துவமும் ஒன்றையொன்று நிறைவு செய்வனவாக விளங்குகின்றன. சமத்துவம் என்பதால் எல்லா மனிதர்களும் சிந்தனையாலும் உடல் வலிவாலும் சமமென்றாகிவிட முடியாது. சம அந்தஸ்து, சுயேச்சையான தனி மகனின் அந்தஸ்து, சமமான வாய்ப்புகள் என்ற பொருள்களெல்லாம் இதிலடங்குகின்றன. ஃபிரெஞ்சுப் புரட்சிக்காரர்கள் வெளியிட்டதைப்போல 'மக்கள் எங்குமே சுதந்திரமாகப் பிறந்திருக்கின்றனர்; சம உரிமை பெற்றிருக்கின்றனர்; சமுதாய அந்தஸ்துகள் எவ்வளவில் சமுதாயத்திற்குப் பயனுள்ளவராவோம் என்பதைப் பொறுத்தே இருக்கின்றன. சம வாய்ப்புகள் என்று கூறும் போது, ஒவ்வொரு குடிமகன் அல்லது குடிமகளுக்கும் அவரவரது இயற்கை சக்திகளைப் பெருக்குவதற்குக் கிடைக்கின்ற வாய்ப்புகளையே குறிப்பிடுகின்றோம். தனி மனிதன், குடிமகன் ஆகியோரது உரிமைச் சாசனம் கூறியதாவது: சட்டமென்பது பொதுமக்களின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துவதாகும். தண்டிப்பதிலும் காப்பதிலும் அது யாவருக்கும் பொதுவாகவே செயல்பட வேண்டும். குடிமக்கள் யாவரும் அதன்கண் சமமென்பதால், தங்கள் சக்திக்கேற்பப் பொதுவில் கௌரவிக்கப்படுவதற்கும் நில உரிமை பெறுவதற்கும் அருகதையுள்ளவராகின்றனர். அவர்களது நற்குணங்கள், மற்றும் புத்தி சாதுரியத்தின் அடிப்படையில் வேற்றுமை பாராட்டி வாய்ப்பளிக்கலாகாது. முகப்பில் கூறப்பட்டுள்ள சமத்துவ தத்துவம், வாய்ப்பு, மற்றும் அந்தஸ்து ஆகிய இரு கூறுகளையும் உள்ளடக்கியிருப்பதால், பெருகுவதற்கு ஏராளமான இடமளிக்கிறது'.

இறுதியாகச் சகோதரத்துவத்தையும் முகப்பு மிகவும் வற்புறுத்துகின்றது. குடிமகனின் கௌரவத்தைக் காப்பதற்கும், தேசத்தின் ஒற்றுமைக்கும் இது மிகவும் பயன்படக்கூடியது. குடிமக்களுக்குள் சகோதர வாஞ்சை நிலவவேண்டுமென்ற தேவையை முதல் முறையாகப் ஃபிரெஞ்சுப் புரட்சி வற்புறுத்திக் கூறியது. இப் புரட்சி சமைக்க

முற்பட்ட சமுதாயத்திற்கு இத்துடன் தனியுரிமை, சமத்துவம் என்ற இரு கோட்பாடுகளும் அடிப்படையாக அமைந்தன. ஃபிரெஞ்சு மக்கள் பிரகடனப்படுத்தியபின் உலகெங்கிலும் பயன்படுத்தக்கூடிய தத்துவங்களாக இவை மாறிவிட்டன. ஆதார மனித உரிமைகளைப்பற்றிய பிரகடனத்தில் ஐக்கிய நாடுகள் சபை பின்வருமாறு எடுத்துரைக்கிறது: 'மனித இனத்தினர் யாவரும் சுதந்திரமுடையவர்களாகவே பிறந்திருக்கின்றனர். சம அந்தஸ்தும் உரிமைகளும் பெறுவதற்கு அவர்கள் அருகதையுள்ளவர்களாவார்கள். அவர்களுக்கு நியாய உணர்ச்சியும், விஷயங்களைச் சீர்தூக்கி ஆய்கின்ற தன்மையும் இயற்கையாகவே அமைந்திருக்கின்றன. எனவே, ஒருவரோடொருவர் பழகுகின்றபோது அவர்கள் சகோதர வாஞ்சையுடனிருக்க வேண்டும்'. இத்தகைய சகோதர வாஞ்சையையே திட்டத்தின் முகப்பு 'சகோதரத்துவம்' என்று குறிப்பிடுகிறது. இந்திய நாடு இனம்-மொழி, வகுப்பு-எண்ணிக்கை, தலம்-மாவட்டம், மொழி-பண்பாடு என்ற பல்வகையான சமுதாயப் பிரிவினைச் சக்திகளால் பிளவுபட்டிருக்கின்றது. குடிமக்களிடையில் பல வேற்றுமைகள் காணப்படுகின்றபோதிலும், நாட்டில் நிலவியிருக்கின்ற சகோதர வாஞ்சை என்ற ஒரு சக்தியினாலேயே தேசத்தின் ஒற்றுமையை நாம் பாதுகாக்க இயலும். நியாயம், சுய உரிமை, சமத்துவம் என்ற அடிப்படைகளில் உருவாகின்ற புதிய சமுதாயத்தினால், யாவருக்கும் தாங்கள் நாட்டின் மக்களே என்ற உணர்வு ஏற்படவேண்டும். மேலும், அவர்கள் யாவரும் ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்களென்றும், ஒரே குலத்தைச் சார்ந்தவர்கள் என்றும் எண்ணவேண்டும்.

இந்திய அரசியல் திட்டத்தின் முகப்பு இதுவரை வெளியாகியுள்ள வரைதிட்டங்களில் மிகச் சிறந்தவைகளில் ஒன்றாகும். உலகெங்கிலுமுள்ள அரசியலமைப்புத் திட்டங்களின் முகப்புகளைப் படித்து ஆய்பவர்களுக்குக் கருத்துகளிலும், கோட்பாடுகளிலும், எடுத்துரைப்பதிலும் நமது திட்ட முகப்பு ஈடிணையற்று விளங்குவது நன்கு புலனாகும். அரசியல் திட்டத்தின் உயிரோட்டத்தையும், ஒற்றுமையாகக் கூடிப் புதிய சுதந்திரச் சமுதாயம் ஒன்றை உருவாக்குவது என்ற உறுதி பூண்டிருக்கும் இந்திய மக்களின் மனவெழுச்சியையும், பொதுவான இத் தீரச் சாதனையால் நியாயம், சுய உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் என்ற கனவுகள் நனவாகுமென்ற எதிர்நோக்கையும் முகப்பில் நாம் காணவியலும். அரசியல் முகப்பு அமைந்திருக்கும் அருமையான வாசகத்தைப் போற்றுவதற்கு முற்பட்ட நிர்ணய சபை அங்கத்தினருள் ஒருவர், கவிதையொன்றையே சிருஷ்டித்துவிட்டார். அவர் கூறியதாவது: 'முகப்பே அரசியல் திட்டத்தின் விலைமதிப்பற்ற பகுதியாக விளங்குகிறது. அதைத் திட்டத்தின் ஆவி என்று கூறலாம். திட்டத்திற்கு அது ஒரு திறவுகோலாகவும் விளங்குகிறது'.

# 5. மத்திய அரசும் அதன் எல்லையும்

இந்திய நாடு பல அரசுகளைக்கொண்ட ஒரு யூனியன் என அரசியலமைப்புத் திட்டத்தில் முதல் விதி கூறுகின்றது. 'அரசுகளைக்கொண்ட யூனியன்' என்பதை விளக்கிக் கூறும்போது அம்பேத்கர் இரு கருத்துகளைக் கூறினார். முதலாவதாக, இந்தியக் கூட்டரசு பல அரசுகளிடையே ஏற்பட்ட ஓர் ஒப்பந்தமன்று. இரண்டாவதாக, கூட்டரசின் பகுதியொன்று யூனியனிலிருந்து பிரிந்துபோக இயலாது. 'யூனியன்' என்ற பெயரில் திருப்தியில்லை என அரசியல் நிர்ணய சபையில் கூறியவர்கள், இச் சொல் கூட்டாட்சி முறையின் முழுக் கூறுகளையும் விளக்குவதில்லை எனக் கூறினார்கள். 'பல அரசுகளைக்கொண்ட பெடரேஷன்' என்ற பெயர் வழங்கவேண்டுமென்று அவர்கள் கூறினார்கள்.

அரசியலமைப்புத் திட்டம் உருவாகியபோது, நாட்டரசுகள் முழு இறைமை பெற்று விளங்கவில்லை. இந்திய யூனியனின் அரசுகளைப் பற்றிய இம் முக்கியக் கருத்தை நாம் இச் சந்தர்ப்பத்தில் மனத்தில் கொள்ளவேண்டும். 1935ஆம் ஆண்டு அரசியல் திட்ட அடிப்படையில், பிரிட்டிஷ் இந்திய அரசுகள், ஆட்சி செலுத்துகின்ற சுதந்திரம் ஒன்றையே பெற்றிருந்தன. 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதிவரையிலும் இந்திய அரசுகள் பிரிட்டிஷ் சாம்ராச்சியப் பகுதிகளாகவே இருந்தன. வெளிநாட்டு விவகாரங்களிலும், ஓரளவு உள்நாட்டுத் துரைத்தன விஷயங்களிலும் பிரிட்டிஷாரின் செல்வாக்கு நீடித்திருந்தது. எனவே, சட்ட ரீதியாக 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி, இந்திய நாட்டுச் சுதந்திரச் சட்டம் வெளியான பின்னரே, பிரிட்டிஷ் செல்வாக்கு மறைந்ததென்பதோடு, இந்திய நாட்டரசுகளும் முழு இறைமை பெற்று விளங்கலாயின. ஆட்சி புரிந்துவந்தவரின் இறைமை எத்தகையதாக இருந்தபோதிலும், 1947-50-க்கு இடைப்பட்ட காலத்தில் அதை பிரிட்டிஷார் இந்திய நாட்டுத் துரைத்தனத்திற்கு மாற்றிக்கொடுத்துவிட்டனர்.

சுதந்திரப் பிரகடனத்திற்கு முன்பான அமெரிக்க நாடுகளைப் போலவோ, அல்லது தங்கள் இறைமைகளை ஒன்று கூட்டி ஒரு

கூட்டாட்சி நிறுவுவது என்ற முடிவெய்திய சுவிட்சர்லாந்து கான்டன்களைப்போலவோ இந்திய யூனியன் துணை அரசுகளின் நிலை இருந்ததென நம்மால் கூறவியலாது. அரசியல் நிர்ணய சபையும் யூனியனில் சேரவிருக்கும் நாடுகளின் பிரதிநிதியாக இல்லை. அது தனது முழு இறைமைச் சக்தியையும் மக்களிடமிருந்தே பெற்றது. எனவே, நாட்டு மக்களின் புத்திகூர்மைக்கும் தேவைக்கும் ஏற்றதொரு திட்டத்திற்கு மக்கள் இதற்குமுன் தங்கள் ஒப்புதல்களைக் கொடுத்திருக்கவில்லை. இவ்வாறு 'இந்திய நாடு, அரசுகள் கூடிய யூனியன்' என்று சொல்லும்போது, கூட்டாட்சி முறை அரசியல் ஒன்று நிறுவப்பட்டிருக்கிறது என்றே பொருள்படுகிறது. ஆனால், உறுப்பினர்களான அரசுகளுக்கு யூனியனிலிருந்து பிரிந்து செல்ல இயலாது. இங்கு, மக்களின் விருப்பத்தாலேயே அரசியல் நிர்ணய சபையின்மூலமாகக் கூட்டாட்சி அரசியல் ஏற்பட்டிருப்பதை இதற்குக் காரணமாகக் கூறவேண்டும்.

இந்திய நாட்டுப் பாராளுமன்றம் யூனியனில் புதிய அங்கத்தினர்களை அனுமதிப்பதற்கோ, அல்லது தனக்கு முறையானதென்று தோன்றுகிற விதிகளின் அடிப்படையில் புதிய அரசுகளை ஏற்படுத்துவதற்கோ திட்டத்தின் இரண்டாவது விதி உரிமையளிக்கிறது. ஒரு நாட்டரசின் எல்லையைப் பிரித்தளித்தும், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நாடுகள் அல்லது நாட்டுப் பகுதிகளை இணைத்தும், அல்லது மேலும் நிலப்பரப்பை அளித்தும், புதிய நாடுகளைப் பாராளுமன்றம் தோற்றுவிக்கக்கூடும். இவ் வேலையில் ஈடுபடும்போது, ஒரு நாட்டின் பரப்பைக் கூட்டவோ குறைக்கவோ அல்லது எல்லைகளை மாற்றவோ அல்லது ஒரு நாட்டின் பெயரை மாற்றவோ அதற்கு அதிகாரமுண்டு (விதி 3). பாராளுமன்றத்தின் செல்வாக்கு இம் முறையில் தனிப்பட்டதேயாகும். இம் முறையில் பாராளுமன்றத்தின் செல்வாக்குத் தனிப்பட்டதெனினும், நாடுகளின் சட்டமன்றம் இம் மாறுதல்களைப்பற்றிய தனது கருத்துகளை எடுத்துரைப்பதற்கென்று திட்டத்தில் வகை செய்யப்பட்டிருக்கிறது. இதற்கேற்ப மாறுதல்களைப் புகுத்தும் நோக்கமுடைய ஒவ்வொரு விதியையும், நாட்டுத் தலைவரின் ஒப்புதல் பெற்ற பின்னரே பாராளுமன்றத்தில் புகுத்த இயலும். நாட்டின் தலைவர் சம்பந்தமுள்ள அரசின் சட்டசபைக்கு மேற்கொள்ளவிருக்கின்ற மாறுதலைக் குறிப்பிட்டு, அதன் கருத்தை வரவேற்பதுண்டு. மேற்கொள்ளவிருக்கும் மாறுதலைக் குறித்து முடிவெய்துவதற்கு முன் சம்பந்தமுள்ள மாகாண மக்களின் விருப்பு வெறுப்புகளை நன்கு அறிந்துகொள்வதற்கு இம் முறையைக் கையாள்வதால், பாராளுமன்றத்திற்கு நல்ல வாய்ப்புக் கிடைக்கிறது. இவ்வாறு பாராளுமன்றம் ஏற்படுத்துகின்ற மாறுதலும், அதன் விளைவாகத் திட்டத்திலேற்படுகின்ற திருத்தங்களும் அரசியலமைப்பை மாறுதல் செய்துவிட இயலாது (விதி 4).

தற்போது இந்திய யூனியனில் பதினைந்து துணை நாடுகளும், ஆறு நாட்டுப் பகுதிகளும் அடங்கியிருக்கின்றன. துணை நாடுகள் யாவும் யூனியனின் உறுப்புகளாகவும், நாட்டுப பகுதிகள் யூனியனின் நேரடி ஆட்சியிலும் இருந்து வருகின்றன. 1947ஆம் ஆண்டில் இந்திய நாடு சுதந்திரம் பெற்றபோதும், 1950ஆம் ஆண்டில் நடைமுறையிலிருந்து வரும் திட்டம் அமுலாகத் தொடங்கியபோதும் இருந்த இந்திய நாட்டின் அரசியல் வரைபடத்தைக் காட்டிலும் தற்போதுள்ள வரைபடம் எளிமை மிக்கதாகக் காட்சியளிக்கிறது. இந்திய நாட்டின் சுதந்திர வாழ்வின் முதல் பத்தாண்டுகளில், பெரும் அளவில் மேற்கொள்ளப் பட்ட ஒன்றுபடுத்தும் முயற்சியாலும் வெற்றிகரமான புனரமைப்புத் திட்டத்தாலும் இது கைகூடிற்று எனலாம். மேற்கொள்ளப்பெற்ற முயற்சி கடினமானதும், ஓரளவு வருத்தம் உண்டுபண்ணக்கூடியது மாகும். இருந்தபோதும், கிடைத்த வெற்றியால் உருவாயிருக்கின்ற நிலை முடிவானதென்று கூறிவிடமுடியாது. ஒன்றுபடுதல் மற்றும் புனரமைப்பு ஆகியவைகளின் சுருக்கமான வரலாறு இங்குத் தரப்படு கிறது.

1947ஆம் ஆண்டில் பிரிட்டிஷார் இந்திய நாட்டை விட்டு வெளி யேறியபோதும், மாகாணங்களின் அமைப்பு 1935ஆம் ஆண்டு அரசியல் சட்டத்தில் எவ்வாறிருந்ததோ அதைப்போலவே இருந்தது. இந்திய நாடு, பாகிஸ்தான், இந்தியா என்ற டொமினியன்களாகத் துண் டாடப்பட்டிருந்ததொரு மாறுதல் மட்டிலுமேற்பட்டிருந்தது. 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்துடன் இந்திய மாகாணங்களில் பிரிட்டிஷ் ஆட்சி முற்றுப்பெற்றுவிட்டதென்று முன்னர் கூறினோம். ஆனால், இந்தியச் சுதந்திரச் சட்டம் தயாராகும்போதே, பல சுதேச மன்னர் களுடன் அவர்களது சமஸ்தானங்களையும் இந்திய யூனியனில் இணைப் பதற்கான பேச்சுவார்த்தைகள் தொடங்கிவிட்டன. இந்திய யூனிய னுடன் இணைவதற்குப் பல சுதேச மன்னர்கள் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தனர். அவர்களது வழியைப் பின்பற்றி மேலும் சிலரும் தொடர்ந்தனர். இவ் இணைப்புத் திட்டம் நாட்டின் அடிப்படை ஒற்றுமைக்கு வழி வகுத்தது. மாகாணங்களையும், சுதேச சமஸ்தானங் களையும் உள்ளடக்கி இந்திய நாடு ஒரு கூட்டாட்சியாகிவிட்டது. யூனியன் துரைத்தனத்திற்கும், சுதேச மன்னர்களுக்கும் இடையில் நிலையான உடன்பாடுகள் ஏற்பட்டன. அகில இந்திய நலன் களைப் பேணுவதற்கென்று, பல உடன்பாடுகளும், அரசியல் ஏற்பாடு களும் ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கதிகமாகவே வளர்ந்து வந்திருக் கின்றன. பிரிட்டிஷ் ஆட்சி முற்றுப்பெற்றுவிட்டதால் அவைகள் அழிந்துவிடுமோ என்ற அச்சமேற்பட்டதோடு, நாடு முழுவதையும் குழப்பத்திலும் வேதனையிலும் ஈடுபடுத்திவிடுமோ என்ற ஐயப்பாடும் இருந்தன. ஆனால், சமஸ்தானம் மற்றும் துணை அரசுகளுடன் ஏற்பட்ட உடன்பாட்டினால் இந்நிலைகள் தவிர்க்கப்பட்டன.

1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி அரசியல் நிர்ணய சபையில் செய்த பிரசங்கத்தில், இவ்விணைப்புத் திட்டத்தை மிகவும் புகழ்ந்து பேசியதோடு, தூரதிருஷ்டியுள்ள அரசியலறிஞரான சர்தார் வல்லபாய் பட்டேலையும் மிகவும் புகழ்ந்துரைத்தனர். அத்தகைய திருப்திகரமான நிலை ஏற்படுவதற்கு சர்தார் வல்லபாய் படேல் அவர்களே பெரிதும் காரணமாயிருந்தார்.

இந்தியர் கைகளுக்கு அரசியலதிகாரம் மாறியதைத் தொடர்ந்து, இந்திய சமஸ்தானப் போக்குகளிலும் புரட்சிகரமான மாறுதல்கள், ஒரு நாடக அரங்கில் நடப்பதைப்போல, மிக விரைவாக ஏற்பட்டன. இந்திய யூனியனுடன் சமஸ்தானங்கள் இணைந்த பின்னர், எத்துணை வெறுப்பாக இருந்தபோதிலும் அத்தகைய மாறுதல்கள் ஏற்படுவதை அவைகளால் தடுக்க இயலவில்லை. இம் மாறுதல்களை ஏற்படுத்துவதற்கென்று ஆச்சரியமிக்க இரு உபாயங்கள் கையாளப் பெற்றன. அவைகள் முறையே 'ஒன்றுபடுதல்' (integration) என்றும் 'இணைதல்' (merger) என்றும் பெயர் பெற்றன. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தொடர்ச்சியாக அமைந்திருந்த துணை நாடுகள் ஒன்றுசேர்ந்து, யூனியனின் புதியதோர் அளவையாக அமைவதற்கு 'ஒன்றுபடுதல்' என்ற பெயர் வழங்கியது. ஓர் அரசு, துணை நாடொன்றின் எல்லைக்குள் அமைந்திருந்து, முழுவதும் மறைந்து அத் துணை நாட்டோடு இரண்டறக் கலந்துவிடுவதற்கு 'இணைதல்' என்ற பெயர் வழங்கலாயிற்று. இவ்வாறாக 'ஒன்றுபடுதல்', 'இணைதல்' என்ற முறைகளைக் கடைப்பிடித்ததன் பயனாக, ஒரு காலத்தில், அறுநூறாகப் பெருகியிருந்த துணை நாடுகளின் எண்ணிக்கை மிகவும் குறுகிவிட்டது. ஒன்றுபடுதல், இணைதல் என்ற உபாயங்களுக்குட்படாமல் தப்பிய சமஸ்தானங்கள் முறையே ஹைதராபாத், மைசூர், ஜம்மு-காஷ்மீர் ஆகிய மூன்றேயாகும்.

ஒன்றுபடுதல் என்ற முறை விரிவடைந்ததோடு மத்திய அரசின் செல்வாக்கும் பெருகி வந்தது. மத்திய அரசின் முயற்சியால், துணை நாடுகளுடன் ஃபெடரல் நிதி இணைப்பும் முற்றுப்பெற்றது. துணைநாடுகளின் ஆட்சித் துறையை ஜனநாயக மயமாக்குதல் என்ற இயக்கம் வெகுவாக முன்னேறிவிட்டது. முழு உருப்பெற்ற, பொறுப்புள்ள துரைத்தனம் ஏற்கெனவே ஆட்சித்துறையின் கடிவாளத்தைக் கைப்பற்றிவிட்டது. இவ்வாறாக மாகாணங்களும், சமஸ்தானங்களும் யூனியன் அரசின் சமத் தோழர்களாக மாறிவிட்டனர்.

'ஒன்றுபடுதல்', 'இணைதல்' என்ற கோட்பாடுகளை அமல் நடத்துகின்றபோது, மொழி, இனம், வரலாற்று மரபு ஆகியவைகளைக் கூடிய வரையில் மனத்தில் கொண்டிருந்தபோதிலும் சூழ்நிலையின் தடுக்க முடியாத சக்திகள், உடனடியாகச் செயல்படவேண்டிய அவசியத்தைத்

தோற்றுவித்தன. இச்சமஸ்தானங்களின் சார்பாக மேற்கொள்ளப்பட்ட உடன்பாடுகள், தாற்காலிக உடன்பாடுகளாகவே இருந்தன. இதனால், பழைய நிலைகள் சிலவற்றைத் தவிர்க்க முடியாமல் திட்டத்தில் இடம் பெறச் செய்ய வேண்டியிருந்தது. 1949ஆம் ஆண்டு அனுமதிக்கப் பட்ட திட்டத்தில், வினோதமான ஒரு நாட்டு-உடன்பாடு காணப் படுவது மேற்கூறியவற்றின் விளைவுகளேயாகும். இத் திட்டத் தின்படி, யூனியனின் யூனிட்டுகளுக்குச் சம அந்தஸ்து வழங்க இயல வில்லை. இதற்கு மாறாக, மூன்று வகைப் பிரிவுகள் ஏற்பட்டன. அவை முறையே பகுதி—'ஏ'; பகுதி—'பி'; பகுதி—'சி' துணை நாடுகள் எனப் பெயர் பெற்றன.

பகுதி 'ஏ' வகையில் பத்துத் துணை நாடுகள் இருந்தன. பொது வாகக் கூறுமிடத்து இவை பத்தும் முன்னாள் பிரிட்டிஷ் இந்தியாவை உருவாக்கிய மாகாணங்களில் பெரும்பான்மையானவை. அவற்றின் எல்லைக்குள் அமைந்திருந்த சமஸ்தானங்கள் சில அவைகளில் சேர்ந்து விட்டதால், சில மிகப் பெரிதாக வளர்ந்துவிட்டன. நாடு துண்டாடப் பட்டுவிட்டதால் மற்றும் சில அளவில் சிறுத்துவிட்டன. பகுதி 'ஏ' துணை நாடுகள் யாவும் யூனியன் அரசின் முழு உரிமை பெற்ற உறுப்பு களாக விளங்கின. அவைகளுக்குக் கூட்டாட்சி முறை அரசியலின் அடிப்படையில் அந்தஸ்து வழங்கப்பட்டிருந்தது.

பகுதி 'பி' வகையில் எட்டுத் துணை நாடுகள் இருந்தன. இவை யாவும் 'ஒன்றுபடுதல்' என்ற கொள்கையடிப்படையில் உருப் பெற்றவை. கூட்டாட்சியின் பகுதி 'ஏ' வகுப்பைச் சார்ந்த நாடுகளைப் போலவே இவைகளும் சம அந்தஸ்து பெற்று விளங்கின. இருந்த போதிலும் அரசியல் முன்னேற்றத்தில் 'ஏ' பகுதியைச் சார்ந்த நாடு களைவிட இவை சற்றுத் தரங்குறைந்தவையாகவே இருந்தன. எனவே, திட்டமளிக்கின்ற தன்னாட்சி உரிமையை இவைகள் முழுவதும் அனு பவிக்க முடியவில்லை. 'பி' பகுதியைச் சேர்ந்த துணை நாடுகளின் துரைத்தனம் மத்திய அரசினரின் மதியுரைகளை ஏற்று நடைபெற வேண்டுமென்றும், அவரது கண்காணிப்பில் இயங்கவேண்டு மென்றும் திட்டத்தின் 371ஆவது விதியில் கண்டிருக்கிறது. 'பி' பகுதியைச் சார்ந்த துணை நாடுகளுக்கு 'ராஜப் பிரமுகர்கள்' தலைமை தாங்கினர். 'ஏ' பகுதி மாகாணங்களைப் போல கவர்னர்கள் தலைமை தாங்கவில்லை. 'பி' வகுப்பைச் சார்ந்த துணை நாடுகளின் தனிச் சிறப் பாக இதை நாம் எடுத்துக் கூறலாம்.

'சி' பகுதியைச் சார்ந்த துணை நாடுகள் அப்பெயரால் வழங்கி வந்தபோதிலும், உண்மையில் கூட்டாட்சி யூனியனைச் சார்ந்தவை அல்ல. ஒருமுக ஆட்சி முறையில் அவைகளை மத்திய அரசு நேரடியாக ஆண்டுவந்தது. அவைகளின் மொத்த எண்ணிக்கை பத்து.

இவற்றுள் சில முன்னாட்களில் பிரிட்டிஷ் ஆட்சியில் தலைமைக் கமிஷனர் ஆட்சி மாகாணங்களாக இருந்தன. 1952ஆம் ஆண்டு முதல் இவற்றுள் சிலவற்றிற்குச் சட்ட மன்றங்களை அமைத்துக்கொள்ளும். உரிமையும், பொறுப்புள்ள அமைச்சர்களைத் தேர்ந்துகொள்ளும் உரிமையும் அளிக்கப்பட்டிருந்தன. இந் நிறுவனங்களின் அதிகாரங்களைப் பாராளுமன்றம் நேரடியாகக் கவனித்து வந்தது. இவைகளில் நடைபெற்று வருகின்ற ஆட்சியைக் குறித்துப் பாராளுமன்றத்திற்கு யூனியன் ஆட்சித்துறை பொறுப்புள்ளதாக இருந்தது.

நாம் மேலே குறித்திருக்கின்ற மூன்று வகைகள் நீங்கலாகப் பகுதி 'டி'யைச் சார்ந்த சில துணை நாடுகளும் நாட்டிலடங்கியிருந்தன. இப்பகுதியில் வங்காளக் குடாக் கடலிலுள்ள—அந்தமான், நிக்கோபார் தீவுகளே அடங்கியிருந்தன. அவை மத்திய அரசின் நேரடியான முழுமையான கட்டுப்பாட்டில் இயங்கிவந்தன. பகுதி ஏ, பி, சி, டி ஆகியவைகளில் முறையே அடங்கிய துணை நாடுகளின் பட்டியலும், 1950ஆம் ஆண்டில் திட்டம் முதன்முதலாகச் செயல்படத் தொடங்கும் போது அவைகளின் விஸ்தீரணம், ஜனத்தொகை ஆகிய விவரங்களும் அட்டவணையில் தரப்பட்டுள்ளன (பக்கம்—69).

மூன்றடுக்கு நாட்டுத் திட்டத்தைத் தோற்றுவித்த திட்ட விதிகள், சந்தர்ப்பத்தை ஒட்டியே எழுந்தவையாகும். இவ் ஏற்பாடு ஒருவருக்கும் திருப்தி அளிக்கவில்லை; கூடிய விரைவில் அதை அகற்றிவிட வேண்டுமென்றே அனைவரும் விரும்பினர். 1952ஆம் ஆண்டில் நிலைமையில் எதிர்பாராத திடீர் மாறுதலொன்று ஏற்பட்டது. முன்னாட்களில் வெட்டுப்படாத பகுதி 'ஏ' அரசாக விளங்கிய சென்னையைத் துண்டாடி, புதியதோர் ஆந்திரப் பிரதேசத்தை உருவாக்குவதென்று மத்திய அரசினர் முடிவு செய்தனர். சென்னை மாகாணத்திலடங்கிய தெலுங்கு மொழி பேசிவந்த மக்களின் இடைவிடாத வேண்டுகோளுக் கிணங்கவே இந் நிலை ஏற்பட்டது. 1953ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 1ஆம் தேதியன்று ஆந்திர மாகாணம் உருவாயிற்று. இவ்வாறு புதிய மாகாணம் ஒன்று உருப்பெறுவது அதிசயமானதொரு செய்தியன்று. மொழி வாரியாகப் புது மாகாணங்களை உருவாக்குவதும், இதனால், நாட்டுத் திட்டம் முழுவதும் புனரமைப்புப் பெறுவதும், நாடெங்கிலும் மிக ஆர்வத்துடன் வரவேற்கப்பட்டன. பொங்கி எழுகின்ற இப் புதிய கோரிக்கையை அணையிட்டு நிறுத்த அரசியல் தலைவர்களால் இயலவில்லை. எனவே, 1953ஆம் ஆண்டு டிசம்பர் மாதம். மாகாணப் புனரமைப்புத் திட்டக் கமிஷன் ஒன்று அமர்த்தப்பட்டது. 'விருப்பு வெறுப்பின்றி நாட்டு நலனையே குறிக்கோளாகக் கொண்டு' பணியாற்றி, மிகக் குழப்பமான இப் பிரச்சினையைத் தீர்ப்பதற்குரிய வழிகளை எடுத்தியம்ப வேண்டுமென்று அரசு கமிஷனைக் கேட்டுக் கொண்டது.

உயர் நீதிமன்ற முன்னாள் நீதிபதியாகப் பணியாற்றிய ஃபாசல் அலி என்பவர். இக் கமிஷனுக்குத் தலைமை தாங்கினார். பொது மக்களின் அபிமானம் பெற்றிருந்த எச். என். குன்ஸ்ரு, கே. எம். பணிக்கர் என்ற இருவர் கமிஷனில் அங்கத்தினராகவுமிருந்தனர். சுமார் ஒன்றரையாண்டுக் காலமாகப் பிரச்சினையை ஆய்ந்து 1955ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதத்தில் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது.

புனரமைப்பு என்ற பிரச்சினையின் பல முகங்களை ஆய்ந்த பின்னர் நான்கு பரந்த குறிக்கோள்களைக் கமிஷன் வெளியிட்டது. நாடுகளின் புனரமைப்பில் இவை நான்கும் கடைப்பிடித்துப் போற்ற வேண்டியவைகளாகும். அவைகளாவன :

(1) இந்திய நாட்டின் ஒற்றுமையையும் பாதுகாப்பையும் போற்றிப் பலப்படுத்துதல்;

(2) மொழி, மற்றும் இன ஒற்றுமையைப் பேணுதல்;

(3) நிதி, பொருளாதார, ஆட்சித்துறையைப் பொறுத்த பிரச்சினைகள்;

(4) தேசிய வளர்ச்சித் திட்டங்களைச் சரிவர அமல் நடத்துதல்.

| | துணைநாடு | விஸ்தீரணம் (சதுர மைல்) | மக்கள்தொகை |
|---|---|---|---|
| | பகுதி 'ஏ' | | |
| 1. | ஆந்திரம் | 63,608 | 20,801,792 |
| 2. | அஸ்ஸாம் | 85,012 | 9,043,707 |
| 3. | பீஹார் | 70,330 | 40,225,947 |
| 4. | பாம்பே | 111,434 | 35,956,150 |
| 5. | மத்தியப் பிரதேசம் | 130,272 | 21,247,533 |
| 6. | சென்னை | 60,263 | 35,736,489 |
| 7. | ஒரிசா | 60,136 | 14,645,946 |
| 8. | பஞ்சாப் | 37,378 | 12,641,205 |
| 9. | உத்திரப் பிரதேசம் | 113,409 | 63,215,742 |
| 10. | மேற்கு வங்காளம் | 30,775 | 24,810,308 |
| | பகுதி 'பி' | | |
| 1. | ஹைதராபாத் | 82,168 | 18,656,108 |
| 2. | ஜம்மு-காஷ்மீர் | 92,780 | 4,410,000 |

| | துணைநாடு | விஸ்தீரணம் (சதுர மைல்) | மக்கள்தொகை |
|---|---|---|---|
| 3. | மத்திய பாரதம் | 46,478 | 7,954,254 |
| 4. | மைசூர் | 29,489 | 9,074,972 |
| 5. | பெப்ஸு | 10,078 | 3,493,685 |
| 6. | ராஜஸ்தானம் | 130,207 | 15,290,797 |
| 7. | சௌராஷ்டிரம் | 21,431 | 4,137,359 |
| 8. | திருவிதாங்கூர்-கொச்சின் | 9,144 | 9,280,425 |
| | பகுதி 'சி' | | |
| 1. | ஆஜ்மீர் | 2,417 | 693,372 |
| 2. | பிலாஸ்பூர் | 453 | 126,099 |
| 3. | போபால் | 8,878 | 836,474 |
| 4. | குடகு | 1,586 | 229,405 |
| 5. | டெல்லி | 578 | 1,744,072 |
| 6. | ஹிமாசலப் பிரதேசம் | 10,451 | 983,367 |
| 7. | கட்ச் | 16,742 | 567,606 |
| 8. | மணிபுரி | 8,628 | 577,635 |
| 9. | திரிபுரம் | 4,032 | 639,029 |
| 10. | விந்தியப் பிரதேசம் | 23,603 | 3,574,690 |
| | பகுதி 'டி' | | |
| ● | அந்தமான்—நிக்கோபார் தீவுகள் | 3,215 | 30,971 |

மேலே குறிப்பிட்ட நான்கு முக்கியக் குறிக்கோள்கள் நீங்கலாக அவை இரண்டாமவையாகக் கருதப்படவேண்டியவை' எனினும், மற்றும் பலவற்றிலும் உரிய கவனம் செலுத்த வேண்டுமென்று திட்டக் கமிஷன் கூறியது. அரசு மரியாதை, ஒற்றுமை, பூகோளத் தொடர்ச்சி, ஆட்சி முறைப் பிரச்சினைகள் ஆகியவைகளை வளர்க்கின்ற வரலாற்று மரபிலும் கவனம் செலுத்தப்படவேண்டுமென்று கமிஷன் கூறியது. நாட்டின் பொதுநலனுக்கு முரண்படாமல், எவ்வளவில் பொது மக்களின் கோரிக்கைகளை எண்ணுல் அளக்க இயலுமோ அவைகளையும் கவனித்துவரவேண்டுமென்று மேலும் திட்டம் கூறியது. இத்தகைய பிரச்சினைகளைக் கணக்கெடுத்து எடுத்துரைத்ததுடன், புனரமைப்புடன் தொடர்புகொண்ட சிக்கலான பிரச்சினைகள் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறு வகையானவை என்பதையும் கமிஷன் ஒப்புக்கொண்டது.

'வரலாறு, மொழி, புவியியல், மற்றும் பொருளாதார சக்திகள் பல நூற்றுண்டுகளாகத் தங்கள் செல்வாக்கினுல், ஒவ்வொரு வட்டார

# POLITICAL MAP OF INDIA

at the commencement of the Constitution

JAMMU AND KASHMIR
SRINAGAR
PUNJAB
HIMACHAL PRADESH
Bilaspur
Simla
Chandigarh
PEPSU
Patiala
DELHI
UTTAR PRADESH
RAJASTHAN
JAIPUR
Agra
LUKNOW
AJMER
Ajmer
Gwalior
MADHYA BHARAT
VINDHYA PRADESH
Rewa
BHOPAL
KUTCH
Bhuj
Rajkot
SAURASHTRA
DIU
DAMAN
BOMBAY
MADHYA PRADESH
Nagpur
HYDERABAD
HYDERABAD
KURNOOL
GOA
ANDHRA
MYSORE
BANGALORE
MADRAS
COORG
Coorg
MADRAS
LACCADIVE ISLANDS
TRAVANCORE COCHIN
TRIVANDRAM
PATNA
BIHAR
ORISSA
Cuttack
WEST BENGAL
CALCUTTA
SIKKIM
BHUTAN
W. B.
ASSAM
SHILLONG
EAST PAKISTAN
Manipur
MANIPUR
Agartala
TRIPURA
Port Blair
ANDAMAN AND NICOBAR ISLANDS


Sikkim and Bhutan are attached to India by special treaties

*Based on a map from INDIA 1954, Publi·hed by the Government of India*

ரத்திலும் ஒருவகையான சூழ்நிலையைத் தோற்றுவிக்கின்றன. எனவே, ஒவ்வொன்றிற்கும் தனியான பின்னணி உண்டு. மேலும், புனரமைப்பு வேலை மிகக் கடினமும் சிக்கல்களும் நிறைந்தது. எனவே, எந்த ஒரு பிரச்சினையையும் ஒரே சோதனையைக்கொண்டு தீர்மானிப்பது உண்மைக்குப் புறம்பானதாகும். ஒவ்வொரு பிரச்சினையையும், அதற்கேற்ற சூழ்நிலையில், அதையொட்டிய விஷயங்களைக்கொண்டே ஆராய்ந்து முடிவெய்தியிருக்கிறோம். அவ்வாறு முடிவெய்துவதிலும், சூழ்நிலைகளைப் பரவலாக மனத்திற்கொண்டும், முழுமையாகப் பிரச்சினையைத் தீர்ப்பதற்குள்ள சாதனங்களை எண்ணியும் வந்திருக்கிறோம்.'

இத்தகைய சிபாரிசுகளைச் செய்யும்போது, விஸ்தீரணத்தை மட்டிலும் புனரமைப்புச் செய்துவிட்டுக் கமிஷன் திருப்தி எய்தவில்லை. நிதியைப்பொறுத்த பிரச்சினைகள், ஆட்சிப் பொறுப்பைப்பற்றிய மாறுதல்கள், ஆணையர்களை இணைத்தல் முதலியவைகளையும் கமிஷன் கருதியிருக்கிறது. இவை யாவற்றையும் ஒருமுகமாகக் கருதி வழங்கப் பெற்ற பின்வரும் தீர்மானங்கள் கவனத்திற்குரியவை :

(1) துணைநாடுகள் திட்ட அடிப்படையில் சம அந்தஸ்துள்ளவைகள் என்பதால், அவைகளை ஏ, பி, சி என்ற மூன்று பகுதிகளாக வகைப்படுத்துகின்ற பழக்கத்தை அறவே ஒழித்துவிடுவது. அவ்வேற்பாடு தாற்காலிகமானதே என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

(2) 'பி' வகையைச் சார்ந்த துணைநாடுகளுடன் யூனியன் அரசு செய்துகொண்ட பிரத்யேக நிதி இணைப்பு ஒப்பந்தங்களையும் ஒழித்துவிடுவது, 371ஆம் விதிப்படி இந்தியத் துரைத்தனத்திற்கு அளிக்கப்பெற்ற, பொது மேற்பார்வைச் சலுகையையும், இராஜபிரமுகர்கள் என்ற ஆட்சித் தலைமைப் பதவியையும் நீக்கிவிடுவது.

(3) 'சி' பகுதியைச் சார்ந்த நாடுகளின் நிதி, ஆட்சி நிர்வாகம், மற்றும் அரசியல் பிரச்சினைகளுக்குப் போதிய ஊதியமில்லாததால், மத்திய அரசின் நேரடி ஆட்சியிலுள்ள அவைகளில் மூன்று நீங்கலாக (ஃபெடரல் தலைநகர் டெல்லி, மணிபுரி, அந்தமான், நிக்கோபார் தீவுகள்) மற்றவைகளை அண்டையிலுள்ள நாடுகளுடன் இணைப்பது.

(4) இம் மாறுதல்களின் அடிப்படையில், 16 துணைநாடுகளையும், மத்திய அரசின் நேரடி ஆட்சியில் 3 நாடுகளையும் பின்வரும் அட்டவணைப்படி உருவாக்கவேண்டுமென்று கமிஷன் சிபாரிசு செய்தது.

## துணைநாடுகள்

| | விஸ்திரணம் (சதுர மைல்களில் தோராயமாக) | மக்கள்தொகை (மில்லியன் எண்ணிக்கை தோராயமாக) |
|---|---|---|
| சென்னை | 50,170 | 30.0 |
| கேரளம் | 14,980 | 13.6 |
| கருநாடகம் | 72,730 | 19.0 |
| ஹைதராபாத் | 45,300 | 11.3 |
| ஆந்திரம் | 64,950 | 20.9 |
| பம்பாய் | 151,360 | 40.2 |
| விதர்ப்பம் | 36,880 | 7.6 |
| மத்தியப் பிரதேசம் | 171,200 | 26.1 |
| ராஜஸ்தானம் | 232,300 | 16.0 |
| பஞ்சாப் | 58,140 | 17.2 |
| உத்திரப் பிரதேசம் | 113,410 | 63.2 |
| பீஹார் | 66,520 | 38.5 |
| மேற்கு வங்காளம் | 34,590 | 26.5 |
| அஸ்ஸாம் | 89,040 | 9.7 |
| ஒரிசா | 60,140 | 14.6 |
| ஜம்மு-காஷ்மீரம் | 92,780 | 4.4 |
| **இராச்சியங்கள்** | | |
| டெல்லி | 578 | 1,744,072 |
| மணிபுரி | 8,628 | 577,635 |
| அந்தமான், நிக்கோபார் தீவுகள் | 3,215 | 30,971 |

துணைநாட்டுப் புனரமைப்புக் கமிஷன் அறிக்கை வெளியானதும், நாட்டின் பல பகுதிகளில் கலகங்கள் தோன்றின. நடைமுறையிலிருந்து வருவனவற்றை முழுவதும் மாற்றவேண்டுமென சிபாரிசு செய்யப்பெற்ற பகுதிகளில் பலருக்குக் கடுமையான குந்தகமேற்பட்டது இயற்கையேயாகும். இதைக் காரணமாகக்கொண்டு மனவெழுச்சியைத் தூண்டி, மக்கள் உணர்ச்சிவசப்பட்ட பகுதிகளிலும் வருந்தத்தக்க விளைவுகளே எழுந்தன. அரசியல் செல்வாக்கும் புரட்சியும் திட்டங்களை மாற்றிவிடக்கூடுமென்று கனவு கண்ட மக்களிடையிலும் எதுவும் நேரக்கூடிய வாய்ப்பிருந்தது. அறிக்கை வெளியானதும் இவைகளே நடந்தேறின. கமிஷனின் சிபாரிசுகள் முழுவதும் குற்றமற்றவை என எவராலும் கூறமுடியாது. புனரமைப்பில் முக்கியக் கோட்பாடுகளாகக் கருதப்படவேண்டியவைகளைக் கமிஷன் எடுத்துக் கூறியபோதிலும், அதன் சிபாரிசுகளின் விளைவாக எழுந்த விளைவு,

ஒரு மொழி வழங்கிய துணைநாடுகளே அதிகமாயின. ஆனால், நாட்டின் நிலவரத்திலும் நிலவிய சூழ்நிலையிலும் இவ்வெழுச்சி தடுக்கவியலாத தொன்று என்றே நாம் கருத வேண்டும்.

இவ்வறிக்கை, பாராளுமன்றத்திலும் துணைநாடுகளின் சட்ட மன்றங்களிலும் சமர்ப்பிக்கப்பட்டு, விரிவாக விவாதிக்கப்பட்டது. சட்டமன்றங்களிலும் வெளியிலும் நெடுநாள் விவாதத்திற்குப் பின்னும், யூனியன்-காபினெட், மற்றும் தொடர்புடையவர்களுடன் கலந்தாலோசித்த பின்னும், தங்களுடைய முடிவைத் துரைத்தனத்தார் வெளியிட்டனர். 'துணைநாடுகளின் புனரமைப்புச் சட்டம்' என்ற சட்டத்தின் வாயிலாக இம் முடிவு வெளியிடப்பட்டது. அறிவிக்கப் பட்ட புனரமைப்புத் திட்டத்தைச் செயற்படுத்துதற்கென்று திட்டத்தில் பல திருத்தங்களை ஏற்படுத்தவேண்டியதாயிற்று. திட்டத்தில் ஏற்பட்ட திருத்தமும் (7ஆவது திருத்தம்), புனரமைப்புச் சட்டம் ஆகிய இரண்டும் 1956ஆம் ஆண்டில் ஏற்றுக்கொள்ளப்பட்டு, 1956ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 1ஆம் தேதியன்று அமல் நடத்தப்பெற்றன.

திருத்தம், மற்றும் சட்டத்தின் விதிகள் மாகாணப் புனரமைப்புக் கமிஷனின் சிபாரிசுகளையே பெரும்பாலும் ஒட்டியமைந்திருந்தன. பம்பாய் மாகாணத்தை அமைப்பதும், தெலுங்கு மொழி பேசுகின்ற ஐக்கிய ஆந்திர மாகாணத்தை அமைப்பதும் இங்கு ஏற்றுக்கொள்ளப் பெற்ற திட்டங்களில் முக்கியமானவைகளாக விளங்கின. மத்திய அரசினால் நேரடியாக ஆட்சி செலுத்தப்படவேண்டிய மாகாணங்களின் எண்ணிக்கையும் மூன்றிலிருந்து ஆறாக உயர்த்தப்பட்டது. 1956ஆம் ஆண்டு இயற்றப்பெற்ற மாகாணப் புனரமைப்புச் சட்டத்தினடிப்படை யில் எழுந்த அரசுகளின் எண்ணிக்கையைப் பின்வரும் அட்டவணை யின்மூலமாக அறிந்துகொள்ளலாம்.

இவ்வட்டவணையை உபயோகித்து இந்திய யூனியனில் அப்போது பதினான்கு துணைமாகாணங்களும், மத்திய அரசினால் ஆட்சி செலுத்தப் பெற்ற ஆறு இராச்சியங்களுமிருந்ததைக் காணலாம். தீவிரமாக இடை விடாது மக்கள் கோரியதன் விளைவாக, பம்பாய், மொழியடிப்படை யில் மராத்தி மொழி பேசுகின்ற மக்களைக்கொண்ட மகாராட்டிரம் என்றும், குஜராத்தி மொழி பேசும் மக்களைக்கொண்ட குஜராத் என்றும் பிரிக்கப்பட்டது. இதனால் நிலைமையில் மேலும் மாறுதலேற்பட்டது. மகாராஷ்டிரம் 118,459 சதுர மைல்கள் விஸ்தீரணத்தையும், 32,003,086 மக்களையும் கொண்டது ; குஜராத் 72,137 சதுர மைல்கள் விஸ்தீரணத் தையும், 16,262,135 மக்களையும் கொண்டது.

மாகாணப் புனரமைப்பிற்குமுன் மத்தியப் பிரதேசம் ஒன்றே இந்திய மாகாணங்களில் அளவில் பெரியதாக இருந்தது. 130,272

சதுர மைல்கள் விஸ்திரணமுள்ள அது, ஃபிரான்ஸ் நாட்டின் பரப்பில் 2/3 பாகம்வரை வியாபித்திருந்தது. புனரமைப்பினால் 190,668 சதுர மைல்கள் விஸ்திரணமுள்ள பம்பாய் மிகப் பெரியதாகிவிட்டது. இது சற்றேறக்குறைய ஃபிரான்ஸ் நாட்டைப்போல அளவில் பெரியது. ஆனால், குஜராத், மகாராஷ்டிரம் என்று பம்பாய் மீண்டும் பிரிக்கப்பட்டதால், மத்தியப் பிரதேசம் யூனியன் துணைநாடுகளில் உருவில் மீண்டும் பெரியதாகிவிட்டது. 15,000 சதுர மைல்களையே கொண்ட கேரளம் உருவத்தில் மிகச் சிறியதாகும். இது டென்மார்க்கைவிட அளவில் சற்றே குறைந்தது.

| துணைநாடு | விஸ்திரணம் (ச. மைல்கள்) | மக்கள் தொகை | தலைநகரம் | முக்கிய மொழி |
|---|---|---|---|---|
| 1. ஆந்திரப் பிரதேசம் | 105,963 | 31,260,333 | ஹைதராபாத் | தெலுங்கு |
| 2. அஸ்ஸாம் | 50,043 | 9,043,707 | ஷில்லாங் | அஸ்ஸாமி |
| 3. பிஹார் | 67,164 | 38,784,172 | பாட்னா | ஹிந்தி |
| 4. பாம்பே | 190,919 | 48,265,221 | பம்பாய் | மராத்தி குஜராத்தி |
| 5. ஜம்மு-காஷ்மீர் | 85,861 | 4,021,615 | ஸ்ரீநகரம் | காஷ்மீரி, உருது |
| 6. கேரளம் | 15,035 | 13,549,118 | திருவனந்தபுரம் | மலையாளம் |
| 7. மத்தியப்பிரதேசம் | 171,201 | 26,071,637 | போப்பால் | ஹிந்தி |
| 8. சென்னை | 50,110 | 29,974,936 | சென்னை | தமிழ் |
| 9. மைசூர் | 74,326 | 19,401,193 | பெங்களூர் | கன்னடம் |
| 10. ஒரிசா | 60,136 | 14,645,946 | புவனேசுவரம் | ஒரியா |
| 11. பஞ்சாப் | 47,456 | 16,134,890 | சண்டிகார் | பஞ்சாபி, ஹிந்தி |
| 12. ராஜஸ்தானம் | 132,077 | 15,970,774 | ஜெய்ப்பூர் | ராஜஸ்தானி, ஹிந்தி |
| 13. உத்திரப்பிரதேசம் | 113,409 | 63,215,742 | லக்னௌ | ஹிந்தி |
| 14. மேற்கு வங்காளம் | 34,945 | 26,310,992 | கல்கத்தா | வங்காளி |
| **மத்திய அரசின் ஆட்சிக்குட்பட்டவை** | | | | |
| 1. டெல்லி | 578 | 1,744,072 | டெல்லி (யூனியன் தலைநகரம்) | ஹிந்தி, உருது, பஞ்சாபி |
| 2. ஹிமாசலப் பிரதேசம் | 10,904 | 1,109,466 | சிம்லா | ஹிந்தி, பஹாரி |
| 3. மணிபுரி | 8,628 | 577,635 | இம்பால் | மணிபுரி |




*Based on a map from INDIA 1961, Published by the Government of India*

| துணைநாடு | விஸ்திரணம் (ச. மைல்) | மககள் தொகை | தலைநகரம் | முக்கிய மொழி |
|---|---|---|---|---|
| 4. திரிபுரம் | 4,032 | 639,029 | அகர்தாலா | வங்காளி திரிபுரி |
| 5. அந்தமான், நிக்கோபார் தீவுகள் | 3,215 | 30,971 | போர்ட் பிளெயர் | வங்காளி |
| 6. லக்காடைவ், மினிகாய், அமிந்த்வி தீவுகள் | 10 | 21,035 | கோழிக்கோடு | மலையாளம் |

மக்கள்தொகையை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது, உத்திரப் பிரதேசம் முதலிடம் பெறுகிறது. 63 மில்லியன் மக்களைக் கொண்ட இத் துணைநாடு, சற்றேக்குறைய மேற்கு ஜெர்மனி ஃபெடரல் குடியரசை ஒத்திருக்கிறது. நாலு மில்லியனுக்குத் தோராயமாகச் சற்று அதிக ஜனத்தொகையைக்கொண்ட ஜம்மு-காஷ்மீரைச் சிறியதென்று கூறவேண்டும். ஒரு சதுரமைல் விஸ்திரணத்திலுள்ள மக்கள் தொகையின் அடர்த்தியை அடிப்படையாகக் கொள்வோமெனில், கேரளம் முதலிடம் பெறுகிறது. அங்கு சதுரமைலுக்கு ஓராயிரம் மக்களுண்டு. ஒருகால் உலகிலேயே மிக அடர்த்தியான மக்கள் தொகையைக் கேரளம் பெற்றிருக்கிறதெனலாம்.

பரப்பு, மக்கள்தொகை, மொழிகள், இனங்கள் ஆகியவற்றினடிப் படையில் இந்தியாபோன்ற ஒரு தேசத்தையும், ஐரோப்பாபோன்ற ஒரு கண்டத்தையும் ஒப்புநோக்குவது மிகச் சுவையானது. இந்திய நாடு முழு ஐரோப்பாவின் பரப்பில் 2/3 பகுதி பரப்பளவுள்ளது. ஆனால், ஐரோப்பாவின் மக்கள்தொகையைவிட 9 சதவிகிதமே குறை வாக இந்திய நாட்டின் ஜனத்தொகை உள்ளது. மொழி அடிப்படை யிலும், ஐரோப்பிய நாட்டில் ஏராளமான பிரதான மொழிகளிருப்பது போல, இந்திய நாட்டிலுள்ள மொழிகளின் வகைகளுக்கும் குறைவே இல்லை. இன அடிப்படையில் இந்திய நாட்டில் முழு ஐரோப்பிய நாட்டைக் காட்டிலும் ஏராளமான வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஆனால், இன்று இந்திய நாடு ஓர் அரசின்கீழ் இயங்கிவரும்போது, ஐரோப்பிய நாட்டில் தன்னிறைமை பெற்ற நாடுகள் ஏராளமாக இருக் கின்றன. ரஷிய நாட்டைத் தனி இறைமை பெற்ற அரசாக நீக்கி விட்டு, ஐரோப்பா முழுவதையும் தனியோர் அரசின்கீழ் இணைக்க முற்படுவது எத்தகையதோர் மாபெருஞ் சாதனை என்பதை எண்ணிப் பாருங்கள். மேற்கு ஐரோப்பிய நாடுகளின் கூட்டாட்சி ஒன்றை அமைக் கும் முயற்சி இன்றும் வெற்றிபெற்றபாடில்லை. பெரிய உருவத்தையும்

நிறைந்த வேற்றுமைகளையும் கொண்ட இந்திய உபகண்டத்தின் பிரச்சினைகளைப்பற்றிச் சிந்திக்கும்போது, நாம் மேற்கூறிய கருத்துகள் யாவற்றையும் நினைவில் கொள்வது நலம்.

# 6. குடிமை

குடிமையைப்பற்றிய விதிகளை முடிவுசெய்து அமைப்பதற்கு, அரசியல்நிர்ணய சபைக்கு இரண்டு ஆண்டுகளுக்குமதிகமாகவே பிடித்தன. இந்திய நாடு பகிர்ந்தளிக்கப்பட்டதால் எழுந்த பிரச்சினைகளாலும், இந்தியர் பலர் அந்நிய நாடுகளில் இருந்தமையாலும், சிக்கல்கள் நிறைந்திருந்தன. 1947-க்கும் 1949-க்கும் இடைப்பட்ட காலத்தில் தங்கள் குடிமை உரிமையைத் தீர்மானிப்பதற்கென ஏராளமான மக்கள் இந்திய நாட்டையும் பாகிஸ்தானையும் பிரிக்கின்ற எல்லைகளைக் கடந்து போவதும் வருவதுமாக இருந்திருக்கின்றனர். பாகிஸ்தான் எல்லைக்குள்ளடங்கிய பகுதிகளில் பல சீக்கியரும் இந்துக்களும் பிறந்தும் வளர்ந்துமிருந்தனர். அப் பகுதிகள் பாகிஸ்தானுக்குச் சொந்தமாகி விடவே, இந்திய நாட்டிற்குத் திரும்பிவிட்ட இவர்களுக்கு இடமளிக்க வேண்டியிருந்தது. அதைப்போலவே இந்திய நாட்டிலிருந்து வெளியேறிய இஸ்லாமியரையும் கழித்துவிடவேண்டியிருந்தது. இந்திய நாட்டைச் சேர்ந்த பலர், பல ஆண்டுகளாக அந்நிய நாடுகளில் வசித்து வந்தனர். இப்போது இந்தியா சுதந்திரம் பெற்றுவிட்டதால், அவர்கள் தாய்நாட்டிற்குத் திரும்புவதில் விருப்பமுற்றனர். இவ்வாறு பலவகையான மக்களின் உரிமைகளையும் தேவையெனக் கருதிப் பாதுகாப்பதற்கென்று வரைதிட்டக் கமிட்டி முயற்சி செய்து, பல திட்டங்களை வரைவதும் திருப்தியின்றிக் கழித்து விடுவதுமாக இருந்தது. இருந்தபோதிலும், இறுதியாக அது நிர்ணய சபையில் வரைதிட்டத்தைச் சமர்ப்பித்ததும், சுமார் 140 திருத்தங்களை ஏற்கவேண்டியதாக இருந்தது. இச் சிக்கலான பிரச்சினையில் முடிவு காண்பது எத்துணைக் கடினமானதென்பது இதனால் வெளியாயிற்று. இறுதியாக ஏற்கப்பெற்ற முடிவுகள், திட்டத்தின் இரண்டாவது பகுதியில் 5-லிருந்து 11 வரையுள்ள விதிகளாக இடம் பெற்றிருக்கின்றன.

அரசியலமைப்பு விதி 5, குடிமையைப்பற்றிப் பொதுவாகக் கூறிவிடாமல், திட்டம் தொடங்கிய நாளிலிருந்து உள்ள குடிமையைப்பற்றிப் பேசுகிறது. நாட்டின் குடிமையைப்பற்றிய நிரந்தரமான விதியொன்றை அமைப்பது இதன் நோக்கமாக இல்லை. அவ் வேலையை

இந்தியப் பாராளுமன்றம் ஏற்றுக்கொண்டுவிட்டது. இதற்கேற்ப, திட்டம் தொடங்குகின்றபோது, இந்திய எல்லைக்குள் குடியேறிவிட்ட ஒவ்வொரு மனிதனும், (அ) இந்திய நாட்டில் பிறந்தவன் அல்லது, (ஆ) அவர்களுள் ஒருவரின் தந்தை இந்திய நாட்டில் பிறந்திருந்தாலும் அல்லது, (இ) சாதாரணமாகத் திட்டம் அமலாக்கப்படுவதற்கு ஐந்தாண்டுகளுக்குக் குறையாது இந்திய நாட்டில் வசித்திருந்தாலும், இந் நாட்டுக் குடிமகன் என்று கருதப்படவேண்டும். திட்டம் தொடங்கிய காலத்தில் இந்திய நாட்டில் பிறந்து வெளிநாடுகளில் குடியேறியிருந்த மக்களுக்கு, மேற்கூறிய விதிகளினடிப்படையில் விருப்பமிருந்தால் இந்திய நாட்டின் குடிமையை ஏற்பதற்கு வாய்ப்புகள் அளிக்கப்பட்டன. இதையொட்டி அவர்கள் நிறைவேற்றவேண்டிய கடமையும் ஒன்று உண்டு (அரசியலமைப்பு விதி 8). அவர்கள் குடியிருக்கின்ற நாட்டிலுள்ள தூதர் அல்லது இந்தியக் கான்சலிடம் (தூதுவர்) சென்று, இந்தியக் குடிமக்கள் எனத் தங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டும்.

விதிகள் 6-ம் 7-ம் இருவகையான மக்களைக் குறிக்கின்றது. அவர்கள் முறையே, இந்தியக் குடிமக்களாக இருந்து பாகிஸ்தானத்தில் குடியேறியவரும், பாகிஸ்தான் குடிமக்களாக இருந்து இந்திய நாட்டில் குடியேறியவருமாவார்கள். பாகிஸ்தானத்திலிருந்து இந்திய நாட்டில் குடியேறியவர்களும் இருவகையாக இருந்தனர்: (அ) 1948ஆம் ஆண்டு ஜூலை மாதம் 19ஆம் தேதிக்குமுன் வந்தவர்கள்; (ஆ) அத் தேதிக்குப்பின் வந்தவர்கள். ஆறுவது விதிக்கிணங்க ஜூலை மாதம் 19ஆம் தேதிக்குமுன் வந்தவர்கள், திட்டம் தொடங்கும்போது இயற்கையாகவே குடிமையுரிமை பெற்றுவிடுவார்கள். அதற்குப்பின் வந்தவர்கள், இவ் உரிமையைப் பெறுவதற்கு, இந்தியத் துரைத்தனத்தார் ஏற்படுத்தியிருக்கின்ற வகையிலும் வழியிலும் அவர்கள் தங்களைப் பதிவு செய்துகொண்டிருக்க வேண்டும். இவ் இரு விதிகளும் பொதுவில் பாகிஸ்தானிலிருந்து ஏராளமான மக்கள் இந்திய நாட்டில் குடியேறுவதற்கு வகை செய்தன. நாட்டைத் துண்டாடியதற்கு இனம் அடிப்படையாக இருந்தபோதிலும், இவ்வாறு குடியேறுவதை அனுமதிப்பதில் அத்தகைய வேற்றுமைகள் பாராட்டப்பெறவில்லை.

பாகிஸ்தானில் குடியேறியுள்ளவர்கள் சிலர், நிரந்தரமாக இந்திய நாட்டிற்குத் திரும்பிவிடுகின்ற நோக்கமுடையவராயிருந்தனர். அவர்களுக்குரிய சலுகைகளை 7ஆம் விதி குறிக்கிறது. இந்திய நாட்டிலிருந்து பாகிஸ்தானுக்குச் சென்று குடியேறிவிட்டவர்களை, மீண்டும் அந் நாட்டிலிருந்து இந்தியா திரும்புவதற்கென்று, இந்தியத் துரைத்தனம் 'அனுமதித் திட்டம்' ஒன்றைக் கடைப்பிடித்தது. எனவே, அதற்கென்று சில விதிகளையும் ஏற்படுத்த வேண்டியதாயிற்று. இந்த அனுமதித் திட்டம் 1948ஆம் ஆண்டு ஜூலை மாதம் 19ஆம் தேதிமுதல்

அமலாயிற்று. இத் திட்டத்தின்கீழ் இந்திய நாடு திரும்பி நிரந்தரமாகக் குடியேற விரும்புகின்ற ஒவ்வொரு மனிதனும் தனியான அனுமதி ஒன்றைப் பெறவேண்டும்.

நாம் மேலே எடுத்துரைத்திருக்கின்ற விதிகளின் தன்மையிலிருந்து அரசியல் நிர்ணய சபையின் முன்பாகத் தேசியக் குடியுரிமை என்ற ஒரு சட்டத் தொகுப்பைமட்டிலும் திட்டத் தயாரிப்பாளர்கள் சமர்ப்பிக்க விரும்பவில்லை. அத்தகைய முறை எந்த நாட்டு அரசியலமைப்பிலும் கையாளப்பட்டிருப்பதாகவும் தெரியவில்லை. இந்திய நாட்டு அரசியலமைப்புத் திட்டம் குடியரசு வகையைச் சார்ந்தது. அரசாங்கத்திலுள்ள பல பதவிகளுக்கும் மக்களிடையிலிருந்து மக்களாலேயே பேராட்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும் வகை செய்யப்பட்டிருக்கின்றது. எனவே, திட்டத்தைச் செயல்படுத்தத் தொடங்கும் போது நாட்டின் குடிமகனைப்பற்றித் தெளிவுகொள்ள வேண்டுமென்ற அவசியமிருந்தது. அவ்வாறில்லையெனில், குறிப்பிட்ட அலுவல்களில் அமருவதைப் பொறுத்துப் பல துன்பங்கள் ஏற்பட்டிருக்கக்கூடும். குடியரசுத் திட்டத்தின்கீழ்ப் பல நிறுவனங்களை நிறுவுவதும் கடின முயற்சியாகவே இருந்திருக்கக்கூடும். நாட்டின் சூழ்நிலைக்கு ஏற்றவாறு குடிமை உரிமையைப்பற்றி எத்தகையதொரு சட்டமியற்றுவதற்கும் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது என்பதற்கு நாம் மேற்கூறியவைகளையே காரணமாகக் கொள்ளவேண்டும். குடிமை உரிமையைப் பெறுவதற்குமட்டிலுமன்றி அதைப் பறித்துவிடவும், அதைக் குறித்து வேறு விஷயங்களைத் தீர்மானிக்கவும் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது (விதி 11). திட்டத்தின் ஒன்பதாவது விதியின்படி, அந்நிய நாட்டுக் குடிமை உரிமையை முயற்சி செய்து பெறுகின்ற இந்தியக் குடிமகன் இந்திய நாட்டுக் குடிமை உரிமையைப் பெறுவதற்குத் திட்ட அடிப்படையில் ஏதேனுமொரு விதியின்கீழ் அருகதையுள்ளவனென்றாலும், அவ் உரிமையைப் பாராளுமன்றம் மறுக்கவும்கூடும்.

## குடியுரிமைச் சட்டம் 1955

குடியுரிமை என்ற பிரச்சினையைக்குறித்துச் சுருக்கமான சட்டத் தொகுதியொன்று, 1955ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தில் அனுமதிக்கப்பட்டது. இவ் உரிமையைப் பாராளுமன்றத்திற்குத் திட்டத்தின் 11ஆவது விதி வழங்கியிருக்கின்றது. இவ் விதியிலடங்கிய ஷரத்துகளைப் பொதுவாக மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை வருமாறு: குடியுரிமை பெறுவது, குடியுரிமை மறுப்பது, உபரி ஷரத்துகள். இந்தியக் குடியுரிமை பெறுகின்ற ஐந்து வீதிகளைச் சட்டம் குறிப்பிடுகிறது. அவையாவன:

(1) பிறப்பினால் : 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதிக்குப்பின் இந் நாட்டில் பிறந்த ஒவ்வொருவனும் இந்தியப் பிரஜை யாவான். இச் சட்டத்திற்கும் விதிவிலக்குகள் இரண்டு உள்ளன. அந்நிய நாட்டைச் சார்ந்த தூதுவர்களுக்கு இங்குப் பிறக்கும் குழந்தை களுக்கும், நம் நாட்டுப் பகுதி விரோதிகளால் கைப்பற்றப்பட்டு அப் போது அந்நியனான விரோதி நம் நாட்டுப் பகுதியில் தங்கியிருக்கும் போது அவனுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கும் இவ் உரிமை கிடை யாது.

(2) வழியுரிமையால் : 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதிக்குப்பின், இந்திய நாட்டெல்லைக்கு வெளியே பிறக்கின்ற ஒருவன், அந் நேரத்தில் அவனது தகப்பன் இந்தியப் பிரஜையாக இருப் பானேயாகில், வழியுரிமையால் குடிமையுரிமை பெற்றுவிடுகிறான். வழி யுரிமையால் இந்தியப் பிரஜையாக விளங்குகின்றவர்களின் குழந்தை களுக்கும், பிரஜா உரிமை பெறாதவர்களின் குழந்தைகளுக்கும் அவர்கள் துரைத்தனத்தாரின் பணியில் அமர்ந்திருப்பார்களேயெனில், அவர்களும் இவ் விதியால் பயன்பெற்று, விரும்பினால் வழியுரிமையால் பிரஜா உரிமை பெற்ற இந்தியக் குடிமக்களாகப் பதிவு செய்து கொள்ளலாம்.

(3) பதிவு செய்துகொள்வதால் : நாம் மேலே கூறியுள்ள திட்டத்தின் விதிகளுக்கேற்ப அல்லது சட்டத்தின்கீழ்க் குடியுரிமை பெறாத ஒருவன், தன்னை இந்தியப் பிரஜையாகப் பதிவு செய்துகொள் வதற்கு, அடியிற் கண்ட ஏதாவதொரு வகையை அவன் சார்ந்தவனாக இருக்கவேண்டும்.

(அ) பூர்விகமாக இந்திய நாட்டைச் சேர்ந்த ஒருவன், பிரஜை யாகப் பதிவு செய்துகொள்வதற்கு, மனுச் செய்வதற்கு ஆறு மாத காலத்திற்கு முன்பிருந்து இந் நாட்டில் வசித்திருக்கவேண்டும்.

(ஆ) பூர்விகமாக இந்திய நாட்டைச்சேர்ந்தவனும், சாதாரணமாகப் பிளவுறாத இந்திய நாட்டிற்கு வெளியில் அல்லது வெளிநாட்டில் வசிப்பவன்.

(இ) இந்தியக் குடிமகனை மணந்திருந்த அல்லது குடிமகனுக்கு மணம் செய்விக்கப்பட்ட பெண்கள்.

(ஈ) இந்தியக் குடிமகனின் வயது நிரம்பாத (மைனர்) குழந்தைகள்.

(உ) முழு வயதும் செயல்திறனும் படைத்த காமன்வெல்த் நாடுகள் அல்லது அயர்லாந்துக் குடியரசைச் சார்ந்தவர்கள்.

(4) குடியுரிமை அடையும் சலுகை பெறுவதால்: மேலே தரப் பட்டுள்ள வகைகள் யாவற்றிற்கும் புறம்பாக உள்ள ஒருவன், இந்தியத் துரைத்தனத்தாருக்கு விண்ணப்பம் செய்து, அவ் விண்ணப் பத்தையும் அவர்கள் ஏற்று, சான்று வழங்கினால், குடியுரிமையை அடைந்துவிடுகிறான். இவ்வாறு குடியுரிமைச் சான்று பெறுவதற்கு பின்வரும் யோக்கியதாம்சங்களைப் பெற்றிருக்கவேண்டும்.

(அ) இந்தியர்களுக்குக் குடியுரிமை வழங்குவதற்கு விருப்பமற்ற ஒரு நாட்டின் பிரஜையாக அவனிருக்கக்கூடாது.

(ஆ) தான் பிறந்த நாட்டின் குடியுரிமையை அவன் துறந்திருக்க வேண்டும்.

(இ) மனுச் செய்வதற்குமுன், ஓராண்டு காலமாக அவன் இந்திய நாட்டில் வாழ்ந்திருக்க வேண்டும் அல்லது இந்தியத் துரைத் தனத்தில் அலுவலனாக அமர்ந்து பணியாற்றியிருக்கவேண்டும்.

(ஈ) இவ் ஆண்டுக்கு முந்திய ஏழாண்டு காலத்தில் அவன் இந்திய நாட்டில் வாழ்ந்திருக்கவேண்டும் அல்லது இந்தியத் துரைத் தனத்தில் பணியாற்றியிருக்க வேண்டும். இவ்வாறு அவன் பணியாற்றி உள்ள காலம், மொத்தத்தில் குறைந்த பட்சம் நாலாண்டுகளாக இருக்க வேண்டும்.

(உ) நன்னடத்தையுள்ளவனாக இருக்கவேண்டும்.

(ஊ) திட்டத்தில் கூறப்பட்டுள்ள மொழிகளிலொன்றில் தேவை யான அறிவு பெற்றிருக்கவேண்டும்.

(எ) சான்று வழங்கப்பட்டால், இந்திய நாட்டில் குடியேறி வசிப் பதற்கும் அல்லது இந்திய நாட்டிலுள்ள துரைத்தனத்தின்கீழ்த் தொடர்ந்து பணியாற்றுவதற்கு அல்லது ஏற்பதற்குச் சித்தமாக இருக்க வேண்டும்.

விஞ்ஞானம், தத்துவம், கலை, இலக்கியம், உலக சமாதானம் அல்லது பொதுவில் மனிதகுல முன்னேற்றம் ஆகிய ஏதாவதொரு துறையில் குறிப்பிடத்தக்கப் பணியாற்றியுள்ள மனிதன் ஒருவனுக்கு, மேற்கூறிய தடைகள் யாவற்றிலிருந்தும் விதி விலக்களிப்பதற்கும் சட் டத்தில் இடமுண்டு. சட்ட அடிப்படையில் எழுகின்ற இந்திய அரசிய லமைப்புத் திட்டத்தை மனப்பூர்வமாகக் கடைப்பிடித்தொழுகுவது என்றும், இந்திய நாட்டின் சட்ட திட்டங்களைச் சரிவரக் கடைப்பிடித்துக் குடிமகன் என்ற முறையில் பழுதின்றித் தனது கடமையைச் செய்து முடிப்பதென்றும் குடியுரிமைச் சான்றைப் பெற்ற ஒவ்வொருவனும் பிரதிக்ஞை செய்துகொள்ளவேண்டும்.

**(5) புதிய நாடுகளின் இணைப்பால் :** ஏதாவதொரு நிலப்பரப்பு இந்திய நாட்டின் பகுதியாகுமெனில், சட்டமொன்றைப் பிரசுரித்து, இந்திய நாடு அப் பகுதியுடன் தொடர்பு கொண்டமையால், அந்நாட்டு மக்கள் யாவரும் இந்தியக் குடிகளாகிவிட்டனர் என ஏற்கலாகும்.

இந்தியக் குடிமகன் ஒருவன் உரிமையை இழப்பதையும், திட்ட விதி மூன்று பகுதிகளாக விரித்துரைக்கிறது.

**(1) துறந்துவிடுவதால் :** மற்றுமொரு நாட்டுப் பிரஜா உரிமையையும் பெற்றிருக்கின்ற இந்தியக் குடிமகன் ஒருவன், சட்ட முறைப்படித் தனது குடிமையைத் துறந்துவிடுவானேயாகில், அத்தகைய பிரகடனத்தை அவன் பதிவு செய்கின்ற நாள் முதலாக இந்திய நாட்டுக் குடியுரிமையை இழந்துவிடுகிறான். ஆண்மகனொருவன் இவ்வாறு பிரஜா உரிமையைத் துறந்துவிடுவானேயாகில், வயது நிரம்பப் பெறாத (மைனர்) அவனது குழந்தை ஒவ்வொன்றும் இந்திய நாட்டுக் குடி உரிமையை இழந்துவிடுகிறது. ஆனால், முழு வயது நிரம்பப்பெற்ற ஓராண்டுக்குள்ளாக, இந்தியக் குடிமகனாகத் தான் மீண்டும் வாழ விரும்புவதாகப் பிரகடனம் ஒன்றைச் செய்து, உரிமையைத் திரும்பப் பெறக்கூடும்.

**(2) உரிமைக்கு முற்றுப்புள்ளி யிடப்படுவதால் :** சலுகை பெற்றதாலோ, பதிவு செய்து கொள்வதாலோ அல்லது வேறு வகையிலோ ஒருவன் அல்லது ஒருத்தி, 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதிக்கும், திட்டம் அமலாகும் நாளுக்கும் இடைப்பட்ட காலத்திலும், திட்டம் அமலாகும் நாளுக்கும் 1955ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 30ஆம் தேதிக்கும் இடைப்பட்ட காலத்திலும் வேறொரு நாட்டின் குடி உரிமையைப் பெற்றுவிடுவார்களென்றால், அவ்வாறு பெறுகின்ற நாளிலிருந்து இந்தியக் குடியுரிமையை இழந்துவிடுவார்கள்.

**(3) பறிக்கப்படுவதால் :** சட்டத்தின் பத்தாவது பிரிவின்கீழ் ஒரு குடிமகனின் பிரஜா உரிமையைப் பறித்துக் கட்டளை பிறப்பிப்பதற்கு மத்திய அரசிற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால், இவ் அதிகாரத்தை ஒவ்வொரு குடிமகனுக்குமெதிராக அரசாங்கத்தினரால் பயன்படுத்தவியலாது. சலுகை பெற்றுக் குடியுரிமை அடைந்தவர், திட்டத்தின் 5ஆம் விதி (இப் பிரிவின்கீழ் குடியுரிமை பெற்றவர் அல்லது பதிவு செய்துகொண்டதால் உரிமை பெற்றவர்கள், ஆகியவர்களுக்கு எதிராகவே இதைப் பயன்படுத்த முடியும். பொய், புனை சுருட்டுகள் புரிந்து, உண்மையை ஒளித்துத் தவறான முறையில் உரிமைப் பத்திரம் பெறுவது, வாக்கினாலும் செயலாலும் இந்திய அரசியல் திட்டத்திற்கு எதிராக நன்றிக் குறைவாகவும் பற்றின்றியும் நடந்து கொள்வது, இந்திய நாடு போரிட்டுவரும்போது விரோதிக்குத்

துணை செய்வது, இந்தியக் குடியுரிமையைப் பெற்ற முதல் ஐந்தாண்டுகளுக்குள்ளாக, இரண்டாண்டுகளுக்குக் குறையாமல் பிற நாடுகளில் சிறைத் தண்டனை அனுபவிப்பது, இந்தியக் குடியுரிமையை நீடித்து அனுபவிப்பதில் தனது நோக்கம் அல்லது எண்ணத்தைச் சட்ட முறைப்படித் தெளிவாக எடுத்துரைக்காமல் ஏழாண்டுகளுக்கு மேலாக அந்நிய நாட்டில் குடியேறுவது ஆகிய காரணங்களுக்காகக் குடியுரிமையைப் பறித்துவிடலாம். இவ்வாறு குடியுரிமையைப் பறிக்கும்போது, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தவறுகள் ஏற்படாதவாறு பல முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகளையும் திட்டம் கூறியிருக்கின்றது.

## காமன்வெல்த் குடியுரிமை

காமன்வெல்த்துடன் இந்திய நாடு தொடர்பு கொண்டிருப்பதன் விளைவாக, காமன்வெல்த் குடிமகனின் அந்தஸ்தைக் குறித்தும் சட்டத்தில் சில ஷரத்துகள் சேர்க்கப்பட்டுள்ளன. காமன்வெல்த் கூட்டுறவிலுள்ள நாடொன்றின் குடிமகன் ஒவ்வொருவனும் அத்தகைய குடியுரிமையைப் பெற்றிருப்பதால், இந்திய நாட்டிலும் காமன்வெல்த் குடியுரிமை அந்தஸ்தைப் பெற்றுவிடுகிறான். இந்தியக் குடிமகனுக்குரிய உரிமைகள் யாவையும், பரிமாறிக்கொள்கின்ற அடிப்படையில், காமன்வெல்த் நாடுகளிலுள்ள குடிமக்களுக்கு வழங்குவதற்கும் மத்திய அரசிற்கு அதிகாரமளிக்கப்பட்டிருக்கிறது. பாராளுமன்றத்தில் குடிமைச் சட்டத்தைப்பற்றிய விவாதத்தின்போது, இந்தியரைப்போன்று அந்நியருக்கு வழங்கப்படும் குடியுரிமைச் சலுகைகள், அதேபோன்று இந்தியருக்குச் சலுகைகள் வழங்குகின்ற அந்நிய நாட்டுக் காமன்வெல்த் குடிமக்களுக்கே வழங்கப்படும் என்பதைக் குறித்து விவாதத்தின் போது மிகவும் வற்புறுத்திக் கூறப்பட்டது.

எந்த நாட்டு அரசியலமைப்புத் திட்டத்திலும், இந்தியக் குடியுரிமையைப்போன்ற தாராள மனப்பாங்குள்ள சட்டத்தை நாம் காணவியலாது. இந்திய நாட்டுப் பிரஜா உரிமை பெறுவதற்குச் சுலபமான, தெளிவான வழியை அது எடுத்துரைக்கின்றது. மேலும், சில சந்தர்ப்பங்களில் இரு நாடுகளில் குடியுரிமை பெறுகின்ற வாய்ப்பினையும் அது ஆமோதிக்கிறது. காமன்வெல்த் குடியுரிமை ஷரத்துகளின்மீதுள்ள தாக்குதல்களையும், இந்திய நாட்டுக் குடியுரிமை மிக மலிவாகிவிட்டது என்று குறை கூறுதலையும், நாம் அதிகமாகப் பொருட்படுத்த வேண்டியதில்லை. காமன்வெல்த்துடன் இந்திய நாடு கொண்டுள்ள தொடர்பின் தன்மையையும், அகில உலக அடிப்படையில் தேசம்விட்டுத் தேசம் மாறுகின்ற வாய்ப்புகளையுடைய தற்கால சூழ்நிலைகளையும், நாம் நன்கறிந்துகொள்வோமெனில், தாக்குதல்களும் பிற தூஷணைகளும் தேவையற்றவை என்பது நன்கு விளங்கும்.

## ஒரேவகையான குடியுரிமை

நாடு முழுவதற்குமாகக் குடியுரிமையைக் குறித்து ஒரே வகையான சட்டத்தைக் குடியுரிமையை எடுத்துரைக்கும் திட்ட விதிகள் கூறுகின்றனவென்பதே அதன் சிறப்பு அம்சமாக விளங்குகிறது. சட்ட அடிப்படையில், இந்தியக் குடிமகனொருவன், நாட்டின் எப்பகுதியிலிருந்தாலும் பிரஜா உரிமையுடன் தொடர்ந்த எல்லாச் சலுகைகளையும் பெற்று வாழும் வாய்ப்பைப் பெறுகிறான். சில கூட்டாட்சிகளின், இரண்டு வகையான குடியுரிமைகள் நடைமுறையிலிருந்து வருகின்றன.[1] திட்டத்தைத் தொடங்குவதற்கு முன், பிரிட்டிஷ்-இந்தியப் பிரஜைகள், மாநிலப் பிரஜைகள் என்ற இரு வகையான பிரிவுகள் இந்திய மக்களிடையே நிலவி வந்தன. 500-க்குமதிகமான இந்திய மாநிலங்கள் இருந்தமையால், மாநிலப் பிரஜைகள், எண்ணிக்கையில் எத்துணை மாநிலங்கள் அடங்கினவோ, அத்துணைப் பிரிவுகளாகப் பிளவுபட்டிருந்தனர். இந்திய மக்கள் யாவரும் நாட்டை ஆட்சி புரிந்த பிரிட்டிஷ் துரைத்தனத்தாரின் பிரஜைகள் என்பதைத் தவிர, இந்திய குடிமகன் என்பதற்குச் சட்டபூர்வமான தெளிவான பொருளெதுவுமில்லை. அத்தகைய வேறுபாடுகள் அகற்றப்படுகின்றனவென்பது தேச ஒற்றுமையை உண்மையுள்ளதாகச் செய்கின்றது, நாடு முழுவதற்கும் பொதுவான ஒரே குடியுரிமை என்பதால், சுதந்திரமடைவதற்கு முன்பிருந்த நாட்களில் நிலவிய செயற்கையான துணைநாட்டுத் தடைகள் யாவும் நீங்கப்பெறுகின்றன. இந்திய நாடு முழுவதும், வாணிகம், மற்றும் தொழில் துறைகளில் சுதந்திரம் அதிகரித்தது.

இருந்தபோதிலும், நாடெங்கிலும் ஒரே வகையான குடியுரிமை என்ற உயர் தத்துவத்தின் முழுப் பயனையும், திட்டத்தில் கண்டுள்ளவாறு மக்களால் அனுபவிக்க இயலாது தடை செய்கின்ற முட்டுக்கட்டை ஒன்று உண்டு. துணைநாடுகளில் இன்றும், 'குடியுரிமைச் சட்டங்கள்' சில நடைமுறையிலிருந்து வருவதையே முட்டுக்கட்டைகள் எனக் குறித்தோம். 'குடியுரிமை' என்ற சொல்லை விளக்குவது மிகவும் கடினமாகும்.

இந்தியாவின் துணைநாடுகளில் இன்று நிலவி வருகின்ற குடியுரிமை விதிகள் மிக மாறுபட்டிருக்கின்றன. பதின்மூன்றிலிருந்து பதினைந்தாண்டுகள்வரை தொடர்ச்சியாக வாழ்ந்திருக்க வேண்டுமென்பதோடு வேறு பல கட்டுப்பாடுகளும் உள்ளன. இவ்வாறு, குடியுரிமை அந்தஸ்து, நாட்டில் நிரந்தரமாகவாழ்ந்திருக்கின்ற ஒருவனுக்கே

[1] உதாரணமாக, ஐக்கிய அமெரிக்க நாடுகளில், ஐக்கிய அமெரிக்க நாட்டின் குடிமகன், ஏதாவதொரு துணை நாட்டின் குடிமகனுமாகவுமிருக்கிறான்.

அளிக்கப்படுகிறது. அத்தகைய அடிப்படையில் சில துணை நாடுகளில் குடிமகனுக்குக் குடிமகனைப் பாகுபடுத்திச் சலுகை வழங்கப்படுகின்றது. இதனால் குறுகிய மாகாணப் பற்றும் மனப்பாங்கும் ஏற்பட்டுத் தேசத்தின் ஒற்றுமையைச் சீர்குலைப்பதற்கும் வழி யேற்பட்டுவிடுகிறது. பொதுப்பணித்துறையில் அலுவலர்களாகப் பதவி கிடைப்பதற்குரிய யோக்கியதாம்சங்களில், குடியுரிமையையும் ஒன்றாகச் சில துணைநாடுகள் கருதி வருவதை இதற்கு ஏற்ற மேற்கோளாகக் கூறலாம். சில துணை நாடுகள் பொதுத்துறையில் உத்தியோகம் வழங்குவதற்குமட்டிலுமின்றி, கான்டிராக்டுகளுக்கும், மீன் பண்ணை, ஓடத்துறைகள், சுங்கம் வசூலிக்கின்ற பாலங்கள், காடுகள், அப்காரிப் பொருள்கள் விற்பனை செய்யும் கடைகள் ஆகியவைகளுக்கு அனுமதி வழங்குவதற்கும் அச்சட்டத்தையே பயன்படுத்துகின்றன. குடியுரிமை பெறுவதற்கென்று சில துணை நாடுகளில் விதிக்கப்பெற்றிருக்கின்ற விதிகள் மிகவும் கடுமையானவை. அவ்வகைகளைத் திருப்தி செய்வதென்பது எந்த ஒரு மனிதனாலும் இயலாத காரியமாகும்.

அத்தகைய கட்டுப்பாடுகள் சட்டத்திற்குமுன் சமம் என்ற ஆதார உரிமைக்கு முரண்பாடாக இருப்பதோடு, எல்லாச் சட்டத்தின்கீழும் பாதுகாப்பு, பொது வேலை வாய்ப்புகளில் யாவருக்கும் சம உரிமை, எத்தொழிலையும் அல்லது வணிகத்தையும் கடைப்பிடிப்பதற்கு அல்லது எவ்வகையான வேலையிலும் அமருவதற்குச் சுதந்திரம் ஆகியவைகளையும் மறுப்பதுடன், இந்தியக் குடியுரிமை என்ற கோட்பாட்டின் அடித்தளத்தையே தகர்த்தெறிந்துவிடுகின்றன என்று வற்புறுத்திக் கூற வேண்டியதில்லை. 'குடியுரிமை விதிகள்' என்ற பெயரில் இன்றும் வழங்கிவருகிற கட்டுப்பாடுகளை நீக்கி, இந்தியக் குடியரசினுள் எங்குச் சென்றாலும், குடிமகனை உற்ற மரியாதையுடன் ஏற்கும் வாய்ப்புக் கிடைத்தாலன்றி, இந்திய அரசியலமைப்புத் திட்டத்தின் இரண்டாவது பகுதியை எந்த நோக்கமுடன் அரசியல் நிர்ணய சபை இயற்றியதோ, எந்தக் கருத்துடன் பாராளுமன்றம் குடியுரிமைச் சட்டத்தை இயற்றியதோ, அவை யாவும் முற்றிலும் நிறைவேறப்பெறாமல் அரைகுறையாக நின்றுவிடக்கூடும். அரசியலமைப்புத் திட்ட 35ஆம் விதியின்படி பாராளுமன்றம் உரிய சட்டங்களை இயற்றி, அவைகளைக் கருத்துடன் அமல் நடத்துவதாலேயே இதற்கேற்ற நிவாரணம் கிடைக்கக்கூடும். வேலை வாய்ப்புகளைப் பொறுத்தவரையில் பாராளுமன்றம் இதற்கென முயற்சியை மேற்கொண்டிருக்கிறது. அம் முயற்சியை மேலும் தொடர்ந்து, பல்வேறு துணை நாடுகளில் நிலவிவருகின்ற குடியுரிமை விதிகள், நாடு முழுவதும் ஒரே வகையான குடியுரிமையை அமைப்பதில் தடைகளாக விளங்காதவாறு வகை செய்ய வேண்டும்.

பகுதி III

# ஆதார உரிமைகளும் நெறிசெய் நியதிகளும்

## 7. ஆதார உரிமைகள்

### பொதுத்தன்மை

குடிமகனுக்கும் அரசியற்குமிடையில் வேற்றுமைகள் தோன்றுவதென்பது மிகப் பழமையான வரலாற்றுச் செய்தியாகும். குடிமகனுக்கும் அரசிற்குமுள்ள போட்டியில் சமரசமேற்படுத்துவதற்கென்று பல நூற்றாண்டுகளாக முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இன்னும் முடிவு வெகு தூரத்திலேயே இருந்து வருகிறது. மனித சமுதாயம் மாறும் தன்மையுடையது என்பதே இதற்குற்ற காரணமாக விளங்குகிறது. பொருள்களின் மதிப்புகளும், மனிதன் கொண்டுள்ள கருத்துகளும், மற்றும் பிற சக்திகளும் சமுதாயத்தில் அடிக்கடி மாறி வருகின்றன. மக்களுக்குத் தடையற்ற பேச்சுரிமையும் செயற்படுகின்ற உரிமையும் அளித்துவிட்டால் குழப்பம், சிதைவு, அராசகம் ஆகியவைகளே விளையக்கூடும். இதற்கு மாறாக, தனி மனிதனின் உரிமைகளைத் தீர்மானிப்பதற்கு அரசிற்குத் தடையற்ற செல்வக்கு உண்டெனில், கொடுங்கோன்மையே எஞ்சி நிற்கும். சமுதாயக் கட்டுப்பாடு, தனி மனிதன் உரிமை என்ற இரு சக்திகளையும் எவ்வாறு சமரசப்படுத்துவதென்ற தீர்த பிரச்சினை, அரசியலறிஞர்களையும் தேசியவாதிகளையும் எதிர்நோக்கியிருந்திருக்கிறது. தனி மனிதனின் உரிமையை அரசிற்கு எதிராகப் பாதுகாப்பதின் அவசியமும், தனியாள் உரிமையை அரசினர் கட்டுப்படுத்துவதும் ஆகிய தேவைகள் என்றுமே இருந்து வந்திருக்கின்றன.

ஒரு ஜனநாயக ஆட்சி முறையின்கீழ் இது மிகவும் கடினமான பிரச்சினையாகிவிடுகிறது, ஏனெனில், ஒரு ஜனநாயக ஆட்சியின்

வெற்றி அல்லது தோல்வி, அந்நாட்டு மக்கள் பொதுவாக அனுபவித்து வரும், சிவில் உரிமைகளைப் பொறுத்தேயிருக்கிறது. தனியாளின் முழுத் திறமையும் வெளியாவதற்கு ஜனநாயகம் பாடுபடுகின்றது. தனி மனிதனின் தனித் திறன் அவன் அனுபவிக்கின்ற உரிமையுடன் இரண்டறப் பிணைக்கப்பட்டிருக்கிறது. சுதந்திரமிக்க சமுதாயம் ஒன்றிலேயே குடிமக்கள் முழு வளர்ச்சி அடையக் கூடும். மனித சமுதாயத்தின் நலனுக்கு இறுதியாக இது வழியமைக்கிறது. எனவே, ஜனநாயக ஆட்சி முறை ஒவ்வொன்றும் இந்தக் குறிக்கோளை இயன்ற அளவிற்குப் பெறுவதற்கு மிகவும் முயல்வதோடு அரசின் பாதுகாப்பிற்கும் பங்கமேற்படாது எச்சரிக்கையுடன் நடந்துகொள்ளுகிறது. அரசியலமைப்புத் திட்டத்தில் ஆதார உரிமைகளின் பட்டியல் ஒன்றை இணைத்து, ஆட்சித்துறையினரும் சட்டமன்றத்தினரும் அதை மீறி விடாமல் வழி செய்வதைப் பெரும்பாலான ஜனநாயக அரசுகள் சாதாரண உபாயமாகக் கையாண்டு வருகின்றன.

## பிரிட்டனின் நிலை

அநேகமாக நவீன அரசியலமைப்புத் திட்டங்கள் இவ் வழியைக் கையாண்டிருக்கின்றன. இப் பொது விதிக்குத் திட்டம் அமைக்கின்ற நிறுவனமாக விளங்கிய பிரிட்டிஷ் பாராளுமன்றத்தை ஒரு விலக்காகக் கூறலாம். இதைப் பின்பற்றியே கானடா, ஆஸ்திரேலியாபோன்ற பிரிட்டிஷ் டொமினியன்களின் எழுதி வைக்கப்பெற்ற அரசியலமைப்புகளிலும், ஆதார உரிமைப் பட்டியல்கள் துணையாகச் சேர்க்கப்படவில்லை. எழுதி வைக்கப்பெற்ற உரிமைகளுக்கு நடைமுறையில் அதிக மதிப்பு இருப்பதில்லை என பிரிட்டிஷ் அரசியலறிஞர்களும் சட்ட அமைப்பாளர்களும் பொதுவாகக் கருதி வருகின்றனர். தெளிவற்ற பிரகடனங்கள் பயனற்றவை; பிரகடனங்களைச் செயற்படுத்தும் உறுதியும் வகையும் இல்லையெனில், அவை பயனற்றுவிடுகின்றன என்று அவர்கள் கருதுகின்றனர். பயனளிக்கவல்ல பொதுமக்களின் அபிப்பிராயங்களிலும், அவ் அபிப்பிராயங்களைச் செவிமடுத்துச் செயலாற்றும் விருப்பமுள்ள துரைத்தனமும் மனிதனின் சுய உரிமைகளைக் காக்கும் வல்லமையுடையவை என்றும் அவர்கள் கருதுவர்.

ஆதார நோக்கில் இது உயர்ந்த தத்துவம் என்பதில் ஐயமில்லை. இன்று உலகிலுள்ள நாடுகளில் கிரேட் பிரிட்டனில் தனியார் உரிமை மிகவும் சிறப்புற்றிருக்கிறது என்பதும் உண்மையாகவே இருக்கிறது. இருந்தபோதிலும் ஆதார உரிமைகளைக் குறித்து, பிரிட்டிஷார் கொண்டிருக்கும் கருத்து, குறை கூறுவதற்கு இலக்காகிறது. உதாரணமாக, இச் சிறு வினவை எடுத்துக்கொள்வோம். 'தற்போதுள்ள நிலையை அடைவதற்கு பிரிட்டனுக்குப் பிடித்த காலவரையறை என்ன? எத்தகைய தியாகங்களை அது செய்திருக்கிறது? இந் நிலை எய்துவதற்

குள் 'இரத்த வெறி கொண்ட' புரட்சி ஒன்றும், 'சாத்துவிகப் புரட்சி' ஒன்றுமாக இரண்டு புரட்சிகளையாவது நடைபெற்றிருப்பதை நாம் எடுத்துக் கூறலாம். தற்கால ஆங்கிலேயத் தலைமுறையினர் அனுபவித்து வருகின்ற உரிமைகளைப் பெறுவதற்கு, அவரது முன்னோர்களில் ஆயிரக்கணக்கானவர்கள், தங்கள் உரிமைகளையும், உயிர்களையும், சொத்து சுதந்திரங்களையும் இழந்திருக்கின்றனர். மேலும், மாக்ளு கார்ட்டா, உரிமைச் சாசனம், உரிமை விண்ணப்பம் முதலியவைகளின் முக்கியத்துவத்தை எவரும் மறுத்துவிடுவதற்கில்லை. ஒரு குடிமகன், மானிடன் என்ற முறையிலும், ஓர் அரசியல் சமுதாயத்தின் உறுப்பினன் என்ற முறையிலும் அனுபவிக்கவேண்டிய உரிமைகள் யாவையும், இச் சாசனங்கள் எடுத்துக் கூறி, ஆட்சித்துறையினரும் சட்டமன்றத்தினரும் அதைப் புறக்கணிக்கலாகாது என்பதை வலியுறுத்துகின்றன. பிரிட்டிஷ் மக்கள், சிவில் உரிமைகளுக்காக ஆட்சித்துறையினரையே எதிர்த்து நின்றிருக்கின்றனர் என்பதும், சட்டமன்றத்தினரை எதிர்க்கின்ற வாய்ப்பு அவர்களுக்கு அதிகமாக இல்லை என்பதும் பிரிட்டிஷ் அரசியல் வரலாற்றின் சிறந்த அம்சமாக விளங்குகிறது. மக்களின் பேராட்களைக் கொண்ட பாராளுமன்றம் செயற்படுவதில், மன்னனின் யதேச்சாதிகாரம் குறுக்கே நின்றதை இதற்குக் காரணமாகக் கூற வேண்டும். எனவே, ஆட்சித்துறையினரின் செல்வாக்கைக் குறித்து, சட்டமன்றத்தின் செல்வாக்கை அதிகரிப்பதிலேயே ஆங்கிலேய மக்கள் அதிகமான கவனம் செலுத்தியிருக்கின்றனர். இதன் காரணமாகவே, மாக்ளுகார்ட்டா போன்ற சாசனங்கள் மன்னனின் செல்வாக்குகளைமட்டிலும் கட்டுப்பாடு செய்வதுபற்றிக் கூறுகின்றன. சட்டமன்றமும் கொடுங்கோன்மையுள்ள நிறுவனமாக மாறக்கூடுமென்பதை பிரிட்டிஷ் மக்கள் எண்ணிப்பார்க்கவேயில்லை. இதனால், பாராளுமன்றப பெரும்பான்மையினரிடமிருந்தும், தனி மனிதனின் உரிமைகளைக் காப்பாற்றவேண்டுமென்பதை பிரிட்டிஷார் சிந்திக்கவே இல்லை. 'பாராளுமன்ற இறைமை' என்ற கோட்பாடு இத்தகைய சூழ்நிலையின் விளைவாக எழுந்ததாகும்.

## அமெரிக்க நாட்டு நிலை

அமெரிக்க நாட்டு அரசியலமைப்பை உருவாக்கியவர்களில் பலர், பிரிட்டிஷ் நாட்டு முறைகளிலேயே உழன்றவர்கள். ஆனால், பிரிட்டனில் உள்ள நிலையை அவர்கள் ஏற்கவில்லை. சட்டமன்றத்திற்கு மக்களின் ஆதரவு ஏராளமாக உண்டென்றாலும், சட்டமன்றத்தின் இறைமையில் அவர்களுக்கு அதிக நம்பிக்கையில்லை. ஆதியிலெழுந்த அரசியலமைப்புத் திட்டத்தில், உரிமைச் சாசனம் என்ற தொகுதி இல்லை என்பது உண்மையேயாகும். என்றாலும், திட்டம் தொடங்கிய இரண்டு ஆண்டுக்குள்ளாக உரிமைச் சாசனம் ஒன்றைச் சேர்ப்பதற்காக ஏராளமான திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. நீதித்

துறையினருக்கு, அதிலும் குறிப்பாக உயர் நீதிமன்றத்தினருக்கு இவ் உரிமைகளைச் செயற்படுத்துகின்ற வாய்ப்பும், காப்பாற்றுகின்ற பொறுப்பும் அளிக்கப்பட்டன. ஆதார உரிமைகள், அரசியல் கருத்து வேற்றுமை எல்லைகளுக்கு அப்பாற்பட்டனவென்பதும், அவைகளைச் சட்டமன்றப் பெரும்பான்மையினரின் கருணைக்கு இலக்கானவையாக விட்டுவிடக் கூடாதென்ற கருத்தையும் அமெரிக்கர் கொண்டுள்ளனர். ஆதார உரிமைகளை அமெரிக்கர் காப்பாற்றுவதற்கு மேற்கொண்டிருக்கும் முயற்சிகளும், அவ் உரிமைகளைப்பற்றி அவர்கள் கொண்டிருக்கும் கருத்துகளும், நாம் கொண்ட முடிவிற்குச் சான்று பகருகின்றன. அவைகளை அரசியலமைப்புத் திட்டம் ஐயத்திற்கிடமின்றி ஏற்க வேண்டும். ஆட்சித்துறையினரும் சட்டமன்றத்தினரும் அதன் புனிதத் தன்மையைச் சீர்குலைத்துவிடாமல், விருப்பு, வெறுப்புகளற்ற, சுதந்திரமான நீதித்துறை ஒன்றின் வாயிலாகக் காப்பாற்றவேண்டும்.

உரிமைகளை உறுதிப்படுத்த வேண்டுவது ஏன்? ஆதார உரிமைகளைப்பற்றி வாக்குறுதியளிப்பதால் விளையும் பலன்கள் யாவை? அரசியல் வேற்றுமைகளிலிருந்து, அடிக்கடி மாறி வருகின்ற சமுதாயத்தில், சில உரிமைகளைப் பிரித்தெடுத்துவிடுவதும், அவைகளைச் சட்டமன்றப் பெரும்பான்மையினர் அல்லது பிற அரசாங்க அலுவலர்கள் அழித்துவிடாமல் பாதுகாப்பதும், அவைகளைச் சட்ட அடிப்படையில் உறுதி செய்து நீதிமன்றங்களைக் கையாளச் செய்வதும், ஆதார உரிமைகளைத் திட்டத்தில் உறுதி செய்வதால் ஏற்படும் பலன்களெனக் கருதப்படுகின்றன. மக்களின் பேராட்களைக் கொண்ட ஆட்சி நிறுவனங்கள் தோன்றிவிட்டதால், தான்தோன்றித்தனமான கொடுங்கோலர்களின் ஆட்சியென்ற பேராபத்து மறைந்துவிட்டதென்றால், அதற்குப் பதிலாகச் சட்டமன்றங்களின் தலையீடு அதிகமாகிவிட்டது. பெரும்பான்மைக் கட்சியினர் சட்டமன்றங்களைத் தங்களிச்சைக்கு ஏற்றவாறு நியாயமற்ற சட்டங்களை இயற்றி, மக்களில் பெரும்பான்மையினரின் நன்மைகளுக்கு இடையூறு விளைவிக்கக்கூடும். உண்மையில் ஒரு வகையான கொடுங்கோன்மையை நீக்கிவிட்டு, வேறுவகையான கொடுங்கோன்மைக்கு இடமளித்துவிடுவதாகவே இது பொருள்படுகிறது. அரசனின் தனி ஆட்சியை நீக்கிவிட்டுச் சட்டமன்றப் பெரும்பான்மையினரின் கொடுங்கோன்மையை ஏற்பதாகவே இது மாறிவிடுகிறது. வாழுகின்ற உரிமை, சுதந்திர வாழ்வு, சொத்துரிமை, பேச்சுரிமை, கருத்துரிமை, வழிபடுவதற்கான உரிமை, கூட்டம் கூடுவதற்குள்ள உரிமை, மற்றும் இதுபோன்ற ஆதார உரிமைகள் மக்களின் வாக்குரிமைகளைக்கொண்டுத் தீர்மானிக்கப்படவேண்டியவைகளல்ல. இவ் உரிமைகள் தேர்தல்களின் முடிவுகளை எதிர்நோக்கி இருக்கக் கூடாது.

சட்டபூர்வமான பாதுகாப்புகளால் சட்டமன்றங்கள் தனியுரிமைகளைப் பறிப்பதினின்றும் தடுக்கப்பட்டவுடன், ஆட்சித்துறை, சட்டமன்றம் ஆகிய இரு துறைகளின் எதேச்சாதிகாரத்திலிருந்து மக்களின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டுவிட்டன. அரசியல் திட்டத்தின் சிபாரிசுக்கிணங்க, சுதந்திரம் பெற்ற நீதித்துறை இவ் உரிமைகளின் காவலனாக நியமிக்கப்பெற்றது. இவ்வாறு ஆதார உரிமைகளைப் பாதுகாக்கின்ற முறை முற்றுப்பெற்றுவிட்டது. இனம், சமய நம்பிக்கை, சொத்து, சமுதாய அந்தஸ்து என்ற எவ்வித வேற்றுமையுமின்றி, இவ் ஆதார உரிமைகளை அனுபவிக்கின்ற வாய்ப்பும் கிடைத்தது. ஆதார உரிமைகளின் சிறப்பியல்பும் இதிலேயே அடங்கியுள்ளது. இம் முறையில், ஐக்கிய அமெரிக்க நாடு, பல நாடுகளுக்கு வழிகாட்டியாக விளங்குகிறது. அரசியலமைப்புத் திட்டத்தில், ஆதார உரிமைகளின் பட்டியலொன்றையும் இணைப்பது என்ற பழக்கம் தற்காலங்களில் பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. இவ் ஏற்பாட்டின் அறிவுடைமையைப் பிரிட்டிஷாரும் அதிகமாக மறுத்துப் பேசுவதில்லை. அது ஓரளவு பயனுள்ளது என்ற கருத்தையாவது அவர்கள் ஏற்கச் சித்தமாயிருக்கின்றனர்.

## ஆதார உரிமைகள் தேவையென இந்தியர் கோரிக்கை

அரசியலதிகாரம் பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியர் கைகளுக்கு மாற்றப்பட்டுவிடும் என்று நிலையேற்பட்டதும், இந்திய நாட்டிற்கென்று தயாரிக்கப்படும் புதிய அரசியலமைப்புத் திட்டத்தில், ஆதார உரிமைகளடங்கிய தனிப் பகுதியொன்றையும் இணைக்க வேண்டுமென்ற கற்பனை, அரசியல் மேதைக்கும் திட்ட வல்லுநருக்கும் உதயமாயிற்று. இந்தியர் மனத்தில் இக் கருத்து உதயமாவதற்கு, அமெரிக்க நாட்டு உரிமை மசோதா சட்டம் பெரிதும் காரணமாயிருந்தது. இந்தியத் தேசிய காங்கிரஸ், லிபரல் கட்சியினர், மிதவாதிகள், இஸ்லாமியர், கிறிஸ்தவர், சீக்கியர் போன்ற எல்லா வகையான சமயச் சிறுபான்மையினர் ஆகிய பலரும் அத்தகைய ஏற்பாடு விரும்பத்தக்கதென்றும் தேவையென்றும் கருதியதோடு, அது சிறுபான்மையினரின் உரிமைகளைப் பாதுகாப்பதுடன், பெரும்பான்மையினருக்கு நம்பிக்கையுமூட்டுகின்றதெனத் திருப்தியடைந்தனர். ஆனால், பிரிட்டிஷ் துரைத்தனத்தார் இக் கருத்தை ஏற்கவில்லை. எனவே, பிரிட்டிஷ் பாராளுமன்றம் உருவாக்கிய அரசியலமைப்புத் திட்டங்களில் ஆதார உரிமைகளைப்பற்றிய பேச்சு இல்லை.

இவ்வாறு, ஆதார உரிமைகளைக் குறித்து எவ்வித உறுதியும் அளிக்கப்படவில்லை என்பதால், சட்ட விரோதமான எந்தச் செயலிலும் ஈடுபடுவதற்கு, இந்தியத் துரைத்தனத்திற்குச் சலுகை இருந்ததென்பது தெளிவாயிற்று. போர் நடந்துவந்த காலங்களில் குடியுரிமை

என்ற சொல் பொருளற்றதாகிவிட்டது. இந்திய நாட்டின் ஃபெடரல் நீதிமன்றம் உட்பட, பிற மன்றங்களாலும் அவ் உரிமைகளைப் பாதுகாக்க இயலவில்லை. சட்டமன்றங்களால் சட்டமியற்றப்படுவதற்குப் பதிலாகக் கவர்னர்—ஜெனரல் பல கட்டளைகளைப் பிறப்பித்தார். அரசியலில் ஈடு பட்டவர்களை விசாரணை செய்வதற்கென்று நீதிமன்றங்கள் பல ஏற்படுத்தப்பட்டன. அந் நீதிமன்றங்கள் சாதாரணக் கிரிமினல் சட்ட விதிகளையும் புறக்கணித்து வந்தன. அவைகளளித்த தீர்ப்புகளை உயர் நீதிமன்றத்தினராலும் மாற்றியமைக்க முடியாத நிலை ஏற்பட்டுவிட்டது. இத்தகைய நீதிமன்றங்களை ஏற்படுத்திய கவர்னர்-ஜெனரலின் கட்டளை, சட்டத்திற்குப் புறம்பானதென்று ஃபெடரல் நீதிமன்றம் கூறிய தும், அதற்கு மறுநாள் தம் கட்டளைகளை வாபஸ் பெற்று, மற்றுமொரு பிரகடனத்தை அவர் வெளியிட்டார். ஆட்சித்துறையினரின் அநீதியைப் பொறுக்க இயலாது, பாதுகாப்புக்கோரி, உயர் நீதிமன்றங்களில் ஏராள மான வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. ஆனால், திட்ட அடிப்படை யில் பாதுகாப்புச் செய்து உறுதி மொழி வழங்கப்படவில்லையென்பதால் மன்றங்களால் செயலாற்ற இயலவில்லை. 1935ஆம் ஆண்டு அரசியல் சட்டம் அமலாக்கப்பெற்றுப் பத்தாண்டுகளில் பெற்ற அனுபவத்தால் சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்புத் திட்டத்தில், ஆதார உரிமைக ளடங்கிய பட்டியலொன்றை இணைக்க வேண்டுமென்ற எண்ணம் உறுதியாயிற்று.

அதன் விளைவாக பிரிட்டிஷ் காபினெட் தூது கோஷ்டியினர், வருங்கால இந்திய அரசியலமைப்புத் திட்டத்தில் ஆதார உரிமைகளைக் கொண்ட ஓரதிகாரத்தையும் இணைக்க வேண்டுமென்ற தேவையை உணர்ந்தனர்.

## அரசியல் நிர்ணய சபையின் மனப்பாங்கு

1946ஆம் ஆண்டு அரசியல் நிர்ணய சபை முதன் முறையாகக் கூடியபோது, திட்டத்தின் ஒரு பகுதியாக ஆதார உரிமைகளடங்கிய ஓர் அதிகாரத்தை இணைக்கவேண்டுமென்பதைக் குறித்து உறுப்பினர் ஒருவரும் ஆட்சேபம் தெரிக்கவில்லை. உண்மையில் அசெம்பிளியின் எல்லாப் பகுதியினரும் ஒருமுகமாக அதை வரவேற்றனர். இதற் கென்று தனியாக அமைக்கப்பெற்ற கமிட்டிக்கு சர்தார் வல்லபாய் படேல் தலைமை வகித்தார். சிறுபான்மையினரின் செல்வாக்குப் பெற்ற பேராட்கள் பலர், கமிட்டியின் அங்கத்தினர்களாக இருந்தனர். பிரச்சினையைத் தீவிரமாக ஆராய்ந்து, அநேக சிபாரிசுகளைக் கமிட்டி செய்தது. இவ் அறிக்கையை அடிப்படையாகக்கொண்டு, அரசியல் நிர்ணயசபையின் வரைதிட்டக் கமிட்டி, வரைதிட்டத்தில் கண்டுள்ள ஆதார உரிமைகளைப்பற்றிய விதிகளைத் தயாரித்தது.

நாட்டு அரசியல், பொருளாதாரச் சமுதாயத் துறைகளில்-விரைவாக முன்னேற வேண்டுமென்ற ஒரே அவாவினால் திட்டத்தை வகுத்தவர்கள் உந்தப்பட்டனரென்பது —ஆதார உரிமைகள், நெறிசெய் நியதிகள் என்ற இரு அதிகாரங்களையும் மேல்நோக்காகப் படித்துணரும் எந்த விருப்பு வெறுப்பற்ற வாசகருக்கும் தெளிவாகப் புலப்படும். ஆதார உரிமைகள் என்ற தலைப்பிலும் இவ் எண்ணம் நன்கு எதிரொலிக்கிறது. இவ் ஏற்பாடு செய்வதில் அமெரிக்க-ஃபிரெஞ்சுப் புரட்சிகள் வாயிலாகக் கிடைத்த அனுபவங்களைத் தயாரிப்பாளர்கள் நன்கு பயன் படுத்தியுள்ளனர். அறிவுத் துறையில் சமகால இந்தியத் தலைவர்களை மேனாட்டின் குழந்தைகளென்றே கருதவேண்டும் உலகின் அப் பகுதியிலேயே நவீனக் கருத்துகள் பிறந்து வளர்ந்து வந்தன. எனவே, தயாரிக்கப்பெற்ற திட்டத்திலும், அரசியல், சமுதாயப் பொருளாதார நிறுவனங்களை நவீனமாக்குவதற்கென்று, மேனாட்டில் வழங்கிய உரிமைகளுக்குச் சிறந்ததோர் இடமளிக்கப்பட்டிருப்பதில் வியப் பொன்றுமில்லை.

இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட உரிமைகள், பொதுவாகக் கூறுமிடத்து இருவகையானவை—தனித்துறை, பொதுத்துறை—என்று பிரிக்கலாம். ஆனால், இரண்டிற்கும் வரம்பற்ற ஆட்சிக்கு முடிவு கட்டுவது என்ற பொதுவான அடிப்படையே இருந்தது. பொதுத் துறை அல்லது அரசியல் உரிமைகளில் தங்கள் ஆட்சியாளனைத் தேர்வதற்கு மக்களுக்குரிய உரிமை, அவர்கள் நன்னடத்தைக்கு உத்திரவாதம் பெறுவது, சட்டமியற்றுவதில் பங்கு கொள்வதற்கான உரிமை, ஆயுதம் தாங்குவதற்குள்ள உரிமை ஆகியவை அடங்கியிருந்தன. சுதந்திர வாழ்வு, சமயத்தைக் கடைப்பிடிக்கும் உரிமை, சிந்தித்தவற்றை எடுத்துரைக்கும் உரிமை, சமத்துவம் பெறும் உரிமை, சொத்துரிமை ஆகியவை தனித்துறையைச் சார்ந்திருந்தன. அக் காலத்தைச் சார்ந்த அரசியலறிஞர்கள் இவைகளை ஆதார உரிமைகளாகக் கருதுவதற் கேற்ற தத்துவ விளக்கங்களை அளித்தனர். மகிழ்ச்சி பெறுவது மானிட வாழ்வின் அடிப்படை என்ற கருத்துடன் தொடங்கி, அம் முயற்சிக்குத் தேவையான இவ் உரிமைகள் யாவையும், அரசொன்று இல்லாவிடினும் மனிதன் கடைப்பிடிக்கக்கூடும் என்று அவ் அறிஞர்கள் சுட்டிக் காட்டினர். அத்தகைய சூழ்நிலையில் மனிதன் மேற்கொள்ளும் முயற்சிகளுக்கு 'உரிமை'கள் என்ற பெயர் வழங்கலாயிற்று. தற்கால அரசியலறிஞர்கள், மனிதத் தன்மையை வளர்த்துக்கொள்வதையே மானிட வாழ்க்கையின் இலட்சியம் என்று கொண்டாலும், 'உரிமை' என்ற பெயர் நிலைபெற்றுவிட்டது. இவரது கருத்துகளுக்கிணங்க மனிதத் தன்மையை வளர்த்துக்கொள்வதற்குத் தேவையான அடிப்படைக் குறை திசயங்களை 'உரிமை' என்று கூறலாமென்றும், அவன் தன் நிலையை எந்த அளவில் உயர்த்திக்கொள்ள இயலுமோ, அதற்காகச் செய்கின்ற முயற்சியும் இதிலடங்குமென்றும் கூறப்படுகிறது. ஆனால், ஆதார

உரிமைகளின் பட்டியலைப் பொறுத்தவரையில், இவ் இரு அறிஞர் கூட்டத்தினரிடையில் அதிக வேற்றுமைகள் இல்லை. பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் தத்துவஞானிகளும் அரசியல் நிபுணர்களும் கூடி, ஆதார உரிமைகளுக்கான சூத்திரம் ஒன்றைத் தோற்றுவித்தனர். அதையடுத்து அரசியல் திட்டம் தயாரித்தவர்கள், இப் பட்டியலிலிருந்து ஆதார உரிமைகள் என்பதைத் தேர்ந்தெடுத்து உறுதியளிப்பதற்கும், அவைகளைத் திட்டத்தில் இடம்பெறச் செய்வதற்கும் அதிக முயற்சியை மேற்கொள்ளும் தேவையில்லாது போயிற்று.

உலகின்கண் தோன்றியுள்ள வெவ்வேறு அரசியலமைப்புத் திட்டங்களுக்குக் கிடைத்த அனுபவங்களைச் சீர்தூக்கி ஆராய்கின்ற நல் வாய்ப்பினை இந்திய அரசியலமைப்புத் திட்டத்தின் சிற்பிகள் பெற்றிருந்தனர். அமெரிக்கத் திட்டத்தின் உரிமைச் சாசனம், ஃபிரெஞ்சு நாட்டு மனித உரிமைப் பிரகடனம், 1935ஆம் ஆண்டு ஐரிஷ் அரசியலமைப்புத் திட்டம் ஆகியவை அவர்களைக் கவர்ந்தவைகளில் மிக முக்கியமானவை. இவையாவும், இரண்டாவது உலக மகா யுத்தத்தின் முந்திய சகாப்தத்தைச் சார்ந்தவை. உலக மகா யுத்தத்திற்குப்பின் தோன்றியவைகளில் ஜப்பான் நாட்டுத் திட்டமும் (அமெரிக்க முறையால் ஊக்கம் பெற்றது) பர்மா நாட்டுத் திட்டமும் (இந்தியத் நாட்டைப்போன்று பல பிரச்சினைகள் அங்குமிருந்தன) அவர்களை மிகவும் கவர்ந்தன. அப்போது உலக முழுவதும் அறிந்த மானிட உரிமைச் சாசனம் முற்றுப்பெற்று, ஐக்கிய நாடுகளின் சபையால் ஏற்கப்படுகின்ற தருணமாகவுமிருந்தது. இதன் கோட்பாடுகளும் திட்ட அமைப்பாளர்களை அதிகமாகக் கவர்ந்தன. ஆனால், அந்நியர் பெற்ற அனுபவங்களைக் கடன் வாங்குவதுடன், இந்தியத் திட்ட அமைப்பாளர்கள் திருப்தியடைந்துவிடவில்லை. இந்திய நாட்டில் நிலவியிருந்த விசேஷமான சூழ்நிலைகளில் மூன்று, அவர்களை மிகையாகக் கவர்ந்திருந்தன. பிரிட்டிஷ் ஆட்சியில் இந்தியர்கள் அனுபவித்துவிட்ட குறைகள் இவைகளில் ஒன்றாகும். கொடுங்கோலர் ஆட்சியில் மேனாட்டினர் அனுவபத்துவிட்ட குறைகளுடன் இவைகளை ஒப்பிடலாம். அதனுடன், அந்நியராதிக்கம் என்பதும்கூட இருந்தது. இந்திய சமுதாய அமைப்பின் முக்கியக் குணமாக விளங்கிய சாதி முறையை இரண்டாவதாகக் கூறலாம். இம் முறையால் சமுதாயத்தில் ஏராளமான மக்கள் 'தீண்டத் தகாதார்' என்று கருதப்பட்டு வந்தனர். சமயம், மொழி, இனம் ஆகியவற்றால் வேறுபட்ட சிறுபான்மையினர் ஏராளமாகச் சமுதாயத்திலிருந்ததை மூன்றாவதாகக் கூறலாம். அவர்களது உரிமைகளையும் பாதுகாக்கவேண்டியதாக இருந்தது. திட்டத்தில் இடம் பெற்றுள்ள உரிமைகள் சில, நாம் மேற்கூறிய ஏதாவதொரு காரணம் பற்றி எழுந்தவையாகும்.

சில வகை உரிமைகளைமட்டிலும் பொறுக்கி எடுத்து ஒப்புக்கொள்வதோடு, எவ்வாறு திருப்தியடைவதென்பதே திட்ட அமைப்

பாளரின் உண்மையான பிரச்சினையாக இருந்தது. ஆதார உரிமைகள் எவை? இல்லாதவை எவை? ஏன்? வாழ்வதற்கு உரிமை, சுய உரிமை, சொத்துரிமை ஆகியவை ஆதார உரிமைகளென்றால், வேலை வாய்ப்பு உரிமை, கல்வி பெறும் உரிமை ஆகியவைகளை எவ்வாறு வகைப்படுத்துவது? ஆதார உரிமைகளைப்பற்றிய வழிமுறைக் கருத்துகள், அவைகளின் தனிப்பட்ட முறையில், பொதுநல நாடு சகாப்தத்தில் பல மாறுதல்களுக்குட்படவில்லையா? இக் கேள்விகளுக் குரிய விடையைப் பொறுத்து, திட்டமியற்றிவர்களுக்கு எவ்வித ஐயமும் இல்லை. தற்காலச் சமுதாய அமைப்பில் நேர்ந்திருக்கின்ற மாறுதல்களை அவர்கள் நன்கறிவார்கள். அமெரிக்க நாட்டு உரிமைச் சாசனம் பிறந்த நாட்களில் நிலவிய 'மனிதனின் அப்பழுக்கற்ற வாழ்க்கையும், துரைத்தனத்தின் விரோத மனப்பான்மையும்' என்ற நிலை ஒடி மறைந்து விட்டது என்பதையும் அவர்கள் மிக நன்றாக அறிவார்கள். என்றாலும், சிந்திக்க இயலாத அளவிற்கு அது கடும் பிரச்சினையாகவே இருந்தது. வேலை வாய்ப்பு உரிமையையும், கல்வியறிவு பெறுகின்ற உரிமையையும் உறுதி செய்தளிக்கக்கூடிய நிலையில் இந்திய அரசாங்கம் இல்லை என் பதையே இதற்குக் காரணமாகக் கூறவேண்டும். உள்ளத்திலே துரைத்தனம் விருப்பம் கொண்டிருந்தபோதும், சூழ்நிலையால் செயற் படுவதற்கு இயலவில்லை. எனவே, உரிமைகளைச் சட்ட அடிப்படையில் செயற்படுத்தக்கூடியவை என்றும், சட்ட வலிமை பெறாதவை என்றும் இருவகையாகப் பிரித்தனர். சட்ட அடிப்படையில் செயற்படுத்தக்கூடிய உரிமைகளை நீதி மன்றங்களின் உதவியுடன் பெற முடியும். அரசிய லமைப்புத் திட்டத்தின் மூன்றாம் பகுதி 'ஆதார உரிமைகள்' என்ற தலைப்புப் பெற்றிருக்கிறது. வாழும் உரிமை, சுய உரிமை, சொத்துரிமை போன்றவைகள் இதிலடங்குகின்றன. அமைப்புத் திட்டத்தின் நான்கா வது பகுதி, 'நெறிசெய் நியதிகள்' என்ற தலைப்புப் பெற்றிருக்கின்றது. வேலை வாய்ப்புப் பெறும் உரிமை, கல்வி பெறும் வாய்ப்புப் போன்ற வைகள் இப் பகுதியிலடங்குகின்றன. இவ் உரிமைகளை அனுபவிக் கின்ற வாய்ப்புப் பெறாத குடிமகன், நீதிமன்றத்தின் மூலமாக நிவாரணம் தேட முடியாது.

ஆதார உரிமைகளைக் குறித்துத் திட்டத்தில் காணப்படுகின்ற விதிகளை நாம் இப்போது விரிவாக ஆராய்வோம்.

## பொது விதிகள்

இவ்வதிகாரத்தில் 'அரசாங்கம்' என்ற சொல்லுக்குரிய பொருளை 12ஆம் விதி விளக்குகின்றது. இந்திய நாட்டெல்லைக்குள் அல்லது இந்தியத் துரைத்தனத்தாரின் கட்டுப்பாட்டிலுள்ள தல ஆட்சி, மற்றும் பிற நிறுவனங்கள், ஒவ்வொரு துணை நாட்டின் ஆட்சித் துறை, சட்ட மன்றம், மத்திய அரசின் ஆட்சித் துறை, சட்டமன்றங்கள் ஆகியவை

இதிலடங்குகின்றன. இந்தச் சுருக்கமான விளக்கம், சட்டமியற்று கின்ற, மற்றும் ஆட்சி செலுத்துகின்ற செல்வாக்குப்பெற்ற மத்திய, மாநில, தல அரசுகளை உள்ளடக்குவதுடன், இவை ஒவ்வொன்றும் தனி மனிதனின் உரிமைகளில் தலையீடு செய்யாவண்ணமும் பாது காக்கிறது.

13ஆம் விதியிலும் இரு முக்கியச் சிறப்புகளைக் காணலாம். அரசிய லமைப்புத் திட்டம் செயற்படத் தொடங்கியபோது, வழக்கிலிருந்த ஆதார உரிமைகளுக்கு முரண்பாடுள்ள சட்டங்களையும், எவ்வளவில் முரண்பாடிருந்ததோ, அவைகளையும் செயற்பட இலாயக்கற்றவையாகச் செய்தது. இவ்வதிகாரத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ள ஆதார உரிமை களைக் குறைக்கின்ற அல்லது பறித்துவிடுகின்ற எவ்வகையான சட்டத் தையும் துணை நாடுகள் இயற்றக் கூடாதென்று தடை விதித்தது. இவ் விதிக்கும் முரணாக ஏதாவது சட்டமியற்றப்படுமெனில், அச் சட்டம் குறிப்பிட்ட ஆதார உரிமையுடன் எவ்வளவில் முரண்பாடுள்ளதாக இருக்கின்றதோ, அவ்வளவில் நடைமுறையில் பயனற்றதாகிவிடும். சட்டமன்றத்தினர் இயற்றுகின்ற விதிகளை நீதிமன்றம் சீர்தூக்கி நின்று புனராய்வு செய்து, அவை அரசியலமைப்புத் திட்ட நோக்கமுடன் ஒத்திருக்கின்றனவா என்பதை முடிவு செய்யும் வாய்ப்புப் பெற்றிருப் பதே இதன் சிறப்பாக விளங்குகிறது.

விதிகள் 12, 13 நீங்கலாக, அவ்வதிகாரத்திலுள்ள விதிகள் 33, 34, 35 ஆகியவைகளும் பொதுக் குறிப்புகள் சிலவற்றைக் கொண்டிருக் கின்றன. படை வீரரைப் பொறுத்த அளவில் ஆதார உரிமைகளைத் தகுந்தவாறு மாற்றிக்கொள்வதற்கு 33ஆம் விதி பாராளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்குகின்றது. படையினரைக் கட்டுப்பாட்டுடன் இயங் கச்செய்வதற்கும், பணிகளைச் சரிவர நிறைவேற்றச் செய்வதற்கும் இச் சலுகை தேவைப்படுகிறது. யுத்த காலச் சட்டம் அமலிலிருக்கும் போது, அவ்வெல்லைக்குள் ஆதார உரிமைகள் எவ்வாறு இயங்கு கின்றன என்பதை 34ஆம் விதி கூறுகின்றது. சட்டம் அனுமதிக்கின்ற முறையிலன்றி, வேறு வகையில் வாழ்வதற்குரிய உரிமை, சுய உரிமை ஆகியவைகளைப் பறிக்கவியலாதென்றால், ஒரு பகுதியில் புரட்சி நடக் கும்போது, அல்லது கொள்ளை அல்லது பிற பலாத்காரச் செயல்களில் ஈடுபடும்போது அவசரகாலச் சட்டத்தை அமல் நடத்துவதென்பதே இயலாது போய்விடும். எப்பகுதியில் போர்க்கால நெருக்கடிச் சட்டம் அமலிலிருக்கின்றதோ, அப் பகுதியின் படைத் தலைவருக்கு விசேஷ அதிகாரங்கள் சில வழங்கப்படுகின்றன. அவ் வேளையில் அங்கு இழைக்கப் பெறுகின்ற குற்றங்கள் யாவும், சாதாரணச் சட்டங்களின் கீழ் வருகின்ற குற்றங்களாகவே கருதப்படுகின்றன. அதைப் போலவே படைத் தலைவர் வகுக்கின்ற வழி முறைகளும், சாதாரண சட்ட அனுமதி பெற்றவைகளாகவே கருதப்படும். அத்தகைய சட்டம்

அமலிலிருக்கின்ற பகுதியில், அமைதியையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவதற்கென்று செயற்படும்போது மேற்கொள்ளும் முயற்சிகளுக்குச் சட்டபூர்வமான பாதுகாப்பளிப்பதற்கும் பாராளுமன்றத்திற்கு அனுமதி வழங்கப்பெற்றுள்ளது. இவ்வாறு 34ஆம் விதி யுத்த கால நெருக்கடிச் சட்டங்களையும் அதன் மூலமாக அமைதியையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவதையும் அனுமதிக்கின்றது.

திட்டத்தின் 35ஆம் விதியும், ஆதார உரிமைகளை அமல் செய்வதற்கென்று சில குறிப்புகளைக் கொண்டிருக்கிறது. இதன்கீழ் பாராளுமன்றத்திற்குக் கீழ்க்கண்டவைகளைக் குறித்துச் சட்டமியற்றுகின்ற முழு உரிமை வழங்கியிருக்கிறது. அவையாவன—திட்டபூர்வமான நிவாரணங்கள், பொதுத் துறையில் வேலை வாய்ப்புப் பெறுவதற்குக் குறிப்பிட்ட தலவாசியாக இருக்கவேண்டுமென்ற நிபந்தனை, படையினர் மற்றும் போர்க் காலச் சட்டங்கள் முதலியன. ஆதார உரிமைகள் என்ற தலைப்புள்ள அதிகாரத்தில் சில குற்றங்களும் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. அக் குற்றங்களுக்கேற்ற தண்டனைகளைக் குறிப்பிடுவதற்கும் பாராளுமன்றத்திற்குத் தனி அதிகாரம் வழங்கப்பெற்றிருக்கிறது. இவ் விஷயங்களைக் குறித்து எந்தவிதமான சட்டங்களையும் இயற்றலாகாது எனத் துணைநாடுகளை ஐயத்திற்கிடமின்றித் திட்டம் தடை செய்கிறது. நாடு முழுவதும் ஒரே வகையான சட்டங்கள் அமலிலிருக்கவேண்டுமென்பதே இத் தடைகளின் அடிப்படை நோக்கமென்றும் தெரிய வருகிறது. இவ்விஷயங்களைக் குறித்துத் துணை நாடுகளும் சட்டமியற்றத் தொடங்கிவிட்டால் அவைகளுக்குள் தாரதம்மியம் ஏற்படுவதோடு, ஒரே வகையான குடிமை, தேசிய ஒற்றுமை போன்ற கோட்பாடுகளுக்குக் குந்தகமேற்பட்டுவிடும். இவ்விலட்சியங்களை நிறைவேற்றுவதே அரசியலமைப்புத் திட்டத்தின் நோக்கமென்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

# 8. சமத்துவ உரிமை

## (திட்ட விதிகள் 14, 15, 16, 17 18)

அரசியலமைப்புத் திட்டத்தின் 14ஆம் விதி பின்வருமாறு கூறுகின்றது. 'சட்டத்தின் முன் யாவரும் சமமென்பதை அரசாங்கம் மறுக்க முடியாது. அதைப்போலவே சட்டம் யாவருக்கும் ஒரே வகையான பாதுகாப்பையே அளிக்கும்.' ஆதார உரிமைகளை உறுதிசெய்து கொடுக்கின்ற அரசியலமைப்புத் திட்டம் ஒவ்வொன்றிலும், 'சட்டத்தின் முன் யாவரும் சமம்' என்ற சொற்கள் அடிக்கடி பயன்படுத்தப்படுகின்றன. சட்டத்தின் முன் யாவரும் சமமென்பது ஆங்கில நாட்டுப் பொதுச் சட்டத்திலிருந்து பெறப்படுகின்றது; 'யாவருக்கும் சட்டத்தின் நிழலில் ஒரே வகையான பாதுகாப்பு' என்பது அமெரிக்கத் திட்டத்திலிருந்து பெறப்படுகின்றது. திட்டத்தின் முகப்பில் கண்டுள்ள 'சம அந்தஸ்து—சம வாய்ப்பு' என்பதை மேலும் உறுதிப்படுத்துவதே இச் சொற்களைப் பயன்படுத்துவதின் நோக்கமென்று தெரியவருகிறது. சட்டத்தின் முன் யாவரும் சமமென்பது மறைபொருளுள்ள ஒரு தத்துவம் தனி மனிதன் ஒருவனுக்குப் பிரத்யேகமான சலுகை எதுவும் கிடையாதென்பதைத் தெளிவுபடுத்துவதோடு, யாவரும் நாட்டின் சட்டங்களுக்குத் தலைவணங்கவேண்டுமென்பதையும் வற்புறுத்துகின்றது. சட்டப் பாதுகாப்பில் 'சம வாய்ப்பு' என்பது நேரடியான ஒரு தத்துவம். ஒரே வகையான சூழ்நிலைகளில் ஒரே வகையான வாய்ப்பு என்பதை அது தெளிவுபடுத்துகிறது. சட்டங்களால் அல்லது சட்டங்களை அமல் நடத்துவதால் மக்களுக்குள்ள அந்தஸ்தில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படாத சூழ்நிலையை உண்டுபண்ணுவதற்குத் திட்டத்தின் 14ஆம் விதி துணை செய்கின்றது.

'சிராஞ்ஜித் லால் சௌதுரி—இந்திய யூனியன்' என்ற வழக்கில் தீர்ப்பு வழங்கிய இந்திய உயர் நீதிமன்றம், இவ் விதியின் செயற்படு திறனை விளக்கிற்று. (அ) ஒரே வகையான பாதுகாப்பு என்பதால் ஒரே வகையான சூழ்நிலையில் ஒரே வகையான பாதுகாப்பு என்பது பொருள்; (ஆ) சட்டமியற்றுவதற்கென அரசாங்கம் தேவையான பாகு

பாடுகளைச் செய்துகொள்ளலாம்; (இ) ஒரு சட்டமியற்றப்படுவதன் தேவையைக் குறித்துத் தீர்மானிப்பதற்கு அரசாங்கத்தாருக்கு அதிகாரம் உண்டு; (ஈ) சட்டத்தை எதிர்த்து நிற்பவர்களுக்குத் தங்கள் கருத்தை மெய்ப்பிக்கும் பொறுப்பு உண்டு. 'தேவையான பாகுபாடுகள்' என்பதை மேலும் விளக்கிய நீதிமன்றம் கூறியதாவது, 'சட்டத் தேவைகளுக்கென ஒரு கார்ப்பரேஷன் அல்லது மனிதக் கூட்டத்தையும் ஒரே அளவையாக எடுத்துக்கொள்ளலாம். ஆனல், அதற்குப் போதிய காரணங்கள் இருக்கவேண்டும். அதேபோனறு, வேறு பல கம்பெனிகள் இருந்ததையும், தனது கம்பெனியை மட்டிலும் அரசாங்கம் பாரபட்சமாக நடத்தியது என்பதையும் மெய்ப்பிக்கின்ற கடமை மனுதாரரைச் சார்ந்திருந்தது.'

சமுதாய, அரசியல் சுதந்திரம் பெறுகின்ற முயற்சியில் மனித இனம், 'எக்காலத்திலும் யாவரும் சமம்' என்ற கோட்பாட்டையே குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது. சமத்துவம், சுய உரிமை ஆகியவைகளைப் பெறுவதற்கான வேட்கையே, பல புரட்சிகள் உருவாவதற்கு ஆக்க சக்தியாக விளங்கியுள்ளது. சர்வதேச சங்கத்தின் உறுப்பினர்கள் ஆண், பெண் ஆகிய இருபாலரும் சம அந்தஸ்துப் பெற்று வாழ்வதில் தங்களுக்குள்ள தீவிரமான நம்பிக்கையைப் பிரகடனம் ஒன்றில் பதிவு செய்திருக்கின்றனர். எல்லாத் துறைகளிலும் முழு அளவில் சமத்துவம் ஏற்பட்டாலொழிய, உண்மையான பயனுள்ள ஜனநாயக ஆட்சி ஏற்படமுடியாது. வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் ஆண், பெண் அடங்கலாக முழுவதும் சம அந்தஸ்துப் பெறுவதென்பது மிக்க தொலைவிலுள்ள ஒரு குறிக்கோளாக இருக்கிறது. நெடிய கரடு முரடான, பொருளாதாரச் சமுதாய, அரசியல் முன்னேற்றம் என்ற பாதையில் மனித வர்க்கம் வேகமாக முன்னேறிய பின்னரே, அம் முழுமையான சம அந்தஸ்தைப் பெற முடியும். அரசியலமைப்புத் திட்டமும் சட்டங்களும் எவ்வகையில் முயன்றாலும், அதன் குடிமக்களுக்கு ஓரளவு சம அந்தஸ்தையே பெற்றுத் தரமுடியும். இந்தியத் திட்ட அமைப்பாளர்கள் இதை மிக நன்றாக உணர்ந்திருந்தனர். இதன் காரணமாகவே அரசியல், மற்றும் சட்டத்துறைகளில் சம அந்தஸ்திற்கு அவர்கள் ஆதார உரிமையின் கௌரவத்தை வழங்கினர்கள். பொருளாதாரச் சமுதாயத்துறைகளில் சமத்துவத்தைப் பெற்றுத்தரும் பொறுப்பினை அரசாங்கத்தின் நெறிசெய் நியதிகளின் ஆளுகைக்குட்படுத்திவிட்டனர்.

சமத்துவ உரிமையின் கீழ், சட்டமன்றத்தின் பாரபட்சமான சட்டங்களுக்கு எதிராகப் பாதுகாப்பு அளிக்கப்படுவதோடு, ஆட்சித்துறையினரின் கையில் அவர்களிச்சைப்படி செயற்படும் அதிகாரம் தேங்கிவிடாமலும் தடுக்கப்படுகிறது. தற்காலத் துரைத்தனங்களில், ஆட்சித்துறையினருக்கு ஏராளமான அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்

கின்றன. அவர்கள், உப சட்டங்களையும், பல வகையான கட்டுப்பாடு களையும் அமல் செய்கின்ற வாய்ப்புடன் நடைமுறைச் சட்டங்களையும் பல வகையில் பயன்படுத்துகின்ற வாய்ப்புகளையும் பெற்றிருக்கின்றனர். அத்தகைய அதிகாரங்களை அவர்கள் பாரபட்சமாகப் பயன்படுத்தி விடாத வகையில் சமத்துவ உரிமை விதி காப்பாற்றுகிறது. உதாரண மாகப் பல வகையான வியாபாரங்களை மேற்கொள்வதற்கும், அல்லது தொழில்களைக் கடைப்பிடிப்பதற்கும் லைசென்சுகளும் பெர்மிட்டுகளும் வழங்குவதற்கு, அதற்கென்று அமர்த்தப்பட்டிருக்கும் ஆட்சித்துறை யினருக்கு எல்லையற்ற அதிகாரம் வழங்கிவிட முடியாது. லைசென்சு வழங்கும் அதிகாரிகள் எந்த முறையில் செயற்படவேண்டுமென்ப தைச் சட்டபூர்வமாக எடுத்துரைத்து, அவைகளின் அடிப்படையிலேயே ஆட்சித்துறை பணியாற்றி வரவேண்டும்.

விதி 14 அரசாங்கத்தினர் இழைக்கக்கூடிய பாரபட்ச செயல்களைப் பற்றியே பேசுகின்றது. தனி மனிதர்களைப் பற்றிப் பேசுவதில்லை. உதாரணமாகச் சொந்த வியபாரம் நடத்துகின்ற ஒரு கம்பெனி தனது பணியாட்களைப் பாரபட்சமான முறையில் தேர்ந்தெடுத்தாலும் அல்லது பாரபட்சமான முறையில் அவர்களை நடத்தினாலும், அத்தகைய அநீதிக் குட்பட்ட பணியாளருக்குச் சட்டமன்றத்தில் நீதி கோருகின்ற வாய்ப்புக் கிடையாது. எனவே, திட்டம் அளிக்கின்ற சலுகையில் ஏன் தனியார் துறையையும் சேர்க்கலாகாது என்ற கேள்வி இயற்கையாகவே எழு கின்றது. ஆனால், அவ்வாறு செய்யாததற்குத் தகுந்த காரணங்கள் உண்டு. தனியார் செயல்களையும் சட்டத்தினால் கட்டுப்படுத்த முயல் வது அவர்களது சுய உரிமையில் தலையிடுவதாகும். அத்தகைய நிலை ஏற்படும்போது ஆதார உரிமைகள் பொருளற்றவைகளாகிவிடக்கூடும். தனி மனிதனின் சுதந்திரத்திற்கும், சமுதாய நலன் கருதி அச் சுதந்திர வாழ்விற்கு ஒரு சில தடைகள் விதித்து, இரண்டிற்கும் ஒரு சம நிலை காண்பதிலேயே உண்மையான ஜனநாயகத்தின் வெற்றியடங்கி யுள்ளது. இருந்தபோதிலும், தனியார் செயற்படுவதையும் சில துறை களில் திட்டம் கட்டுப்படுத்துகிறது. தீண்டாமை ஒழிப்பையும், தீண் டாமையை எவ்வகையிலாவது எவரேனும் கடைப்பிடித்தால் அவர்களைத் தண்டிப்பதையும் இதற்கேற்ற மேற்கோளாகக் கூறலாம். சுருங்கக் கூறுமளவில் திட்டத்தின் 14ஆம் விதி முக்கியமானதோர் ஆதார உரிமையை எடுத்துரைக்கிறது. அதைத் தொடர்ந்தும் கவனமுடனும் பாதுகாக்க வேண்டும்.

## சில காரணங்களுக்காகப் பாரபட்ச முறைகளைக் கைப்பிடிப்பதைத் தடைசெய்தல் (விதி 15)

சமத்துவம் என்ற உரிமையை ஏற்றுப் பிரகடனப்படுத்தியதோடு திருப்தி கொள்ளாமல், நாட்டில் கையாளப்பட்டுவந்த பாரபட்ச முறை

களையெல்லாம் நன்கறிந்திருந்த திட்டத் தயாரிப்பாளர்கள் மேலும் ஓர் அடி முன்னேறியிருந்தனர். திட்டத்தின் 15ஆம் விதி, புதிதாக எதையும் தோற்றுவிக்கவில்லை என்றாலும், இருப்பதை விளக்குவதாகவே இருந்தது. அதில் நாம் சிறப்பான ஓர் அம்சத்தைக் காணலாம். மிக எளிய அளவிலேயே என்றாலும், தனியாரின் செயல்களையும் சட்ட வரம்பிற்குள் கொண்டுவருவதற்கு அது முயன்றிருக்கிறது. இவ் விதிக் கிணங்க, 'சமயம், இனம், சாதி, ஆண்-பெண், பிறந்த இடம் ஆகியவை களின் அடிப்படையில், குடிமக்களை அரசாங்கம் வகைப்படுத்தக் கூடாது. மேலும் இவ்வடிப்படையில் ஒரு குடிமகனை முழுவதும் அரசாங்கச் செலவில் நிறுவப்பட்டிருக்கும் அல்லது பொதுமக்களின் உபயோகத்திற்கென்று ஏற்பட்டிருக்கும் கடைகள், பொது விடுதிகள், கிணறுகள், ஏரிகள், ஸ்நானக்கட்டங்கள், சாலைகள், மற்றும் தங்குமிடங் களைப் பயன்படுத்துவதினின்றும் தடுக்கக்கூடாது.'

இந்த விதியின் செல்வாக்கை விரித்துரைக்கின்றபோது, உயர் நீதி மன்றம் பின்வருமாறு கூறியது: 'திட்டத்தின் 15ஆம் விதி (1) ஒரு குடிமகனுக்கு ஆதார உரிமை வழங்கும்போது, அவன் தனியொரு மனிதன் என்ற அடிப்படையிலேயே வழங்குகிறது. உரிமைகளையும், சலுகைகளையும், பாதுகாப்புகளையும் குடிமகன் என்ற முறையில் அவன் அனுபவிப்பதில் அவனுக்கெதிராகப் பாரபட்சமான தடைகள் ஏற்படாமல் உறுதியளிக்கிறது.' ஒரு பகுதியில் வாழ்ந்து வந்ததால் அது பிறப்புரிமைக்கு ஈடாகும் என்ற வாதத்தை மற்றுமொரு வழக்கில் தீர்ப்பு வழங்கியபோது நீதிமன்றம் ஏற்கவில்லை. 'வாழ்ந்த இடம்' என்பதும், 'பிறந்த இடம்' என்பதும் வெவ்வேறு பொருளுடையவை என்றும், சட்ட அடிப்படையிலும் நடைமுறையிலும் அதை அவ்வாறே பின்பற்ற வேண்டுமென்றும் கூறியது. எனவே, திட்ட விதி 15 (1) 'பிறந்த இடம்' காரணமாகப் பாரபட்சமான சலுகை அளிக்கக் கூடாது என்று கூறும்போது, அதை, 'வாழ்ந்த இடம்' என்று பொருள் கொள்வது முறையாகாது. வேலை வாய்ப்புப் போன்ற சிலவற்றிற்கு, வாசஸ்தலத்தை ஒரு யோக்கியதாம்சமாகக் கூறுவதை, சாதி, பிறப்பிடம் போன்ற அடிப்படைகளுடன் ஒப்பு நோக்கிவிடக் கூடாது. அரசாங்கம் சமயம், இனம், சாதி, ஆண்-பெண் என்ற அடிப்படையில் பாரபட்சமாகச் சலுகை வழங்கக் கூடாதென்பதற்கு இவ்விதி ஒரு பாதுகாப்பளிக்கின்றது என்பதாகவே கொள்ளவேண்டும். பிறப்பிடம் காரணமாகப் பாரபட்சம் கூடாதென்பதால், குறுகிய மாகாணப் பற்றை அது வேருடன் களைந்துவிடுகிறது. நாடு முழுவதற்கும் குடியுரிமை ஒன்றே என்ற குறிக்கோளைத் திட்டம் நிலைநாட்டும் முயற்சிக்கு இது மேலும் துணை செய்வதாகும். சில தனி மனிதர்களின் பாரபட்சமான நடத்தைகளையும் சட்டம் தனது வரம்பிற்குள்ளாக்குகிறது என நாம் முன்னர்க் கூறினோம். இவ்வகையில் திட்டத்தின் 17ஆம் விதிக்கு இது முன்னோடியாக விளங்குகிறது. 17ஆம் திட்ட விதி தீண்டாமையை அகற்று

வதோடு, உயர் சாதியினர் தாழ்ந்த வகுப்பினரைப் பாரபட்சமாக நடத்த முற்படுவதையும் நீக்கி, சமுதாய சமத்துவம் ஏற்படுவதற்குக் கணிசமான அளவில் வகை செய்கின்றது.

15ஆம் திட்ட விதியைச் செயற்படுத்துவதில் குறிப்பிடத்தக்க இரு விலக்குகள் காணப்படுகின்றன. மாதர்களுக்கும் குழந்தைகளுக்கும் தனி ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று முதற்கண் கூறப்படுகிறது. சமுதாய அடிப்படை அல்லது கல்வியறிவில் பின்தங்கியவர்களுக்கும், ஷெட்யூல் சாதியினருக்கும், ஷெட்யூல் கூட்டத்தினருக்கும் அரசாங்கம் அவர்களது முன்னேற்றத்திற்கென்று தனிச் சலுகைகளை அளிக்கலாமென இரண்டாவதாகக் கூறப்படுகிறது. பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் சலுகையளிப்பதில் சமுதாயத்தின் பொதுநலனையும், எதிர்கால வளத்தையும் கருத்திலிருத்தியிருக்கின்றனர். சமூகப் பழக்கவழக்கங்களையும், நாட்டின் வரலாற்றுச் சூழ்நிலையையும் திட்ட அமைப்பாளர்கள் மனத்தில் கொண்டிருக்கின்றனர். இரண்டாவதாக நாம் கூறியுள்ள ஷரத்து ஆதியில் எழுந்த திட்டத்தில் இல்லை. 1951ஆம் ஆண்டில் ஏற்பட்ட முதல் திருத்தத்தின்போது திட்டத்தில் இவ்விதியும் சேர்க்கப்பட்டது.

## பொதுப்பணித்துறைகளில் உத்தியோகங்கள் பெறுவதில் சம வாய்ப்புகள் (விதி 16)

பொதுப்பணித் துறையில் வேலை வாய்ப்பு அளிக்கின்றபோது யாவரையும் சமமாகக் கருதவேண்டுமென்று விதி 16 உறுதியளிக்கின்றது. அவர்கள் எங்கு வசித்துவந்தபோதிலும், அரசாங்கத்தின் கீழ் வேலைகளில் அமர்த்துவதில் யாவருக்கும் சம வாய்ப்புகள் அளிக்கப்படுமென, 16ஆம் விதியின் முற்பகுதியில் பொதுவாகக் கூறப்படுகிறது. இதனால் இந்தியக் குடியுரிமையின் பொதுநோக்கு வற்புறுத்தப்படுகிறது. அடுத்த பகுதியில் பொது விதி விரிவாக விளக்கப்படுகிறது. சமயம், சாதி. இனம், ஆண்-பெண், மரபு, பிறப்பிடம் அல்லது வாழும் இடம் என்ற அடிப்படையில் அரசாங்கம் குடிமக்களைப் பாரபட்சமாக நடத்தக்கூடாது என்று இப்பகுதி தடைசெய்கிறது. அதையடுத்து வரும் ஷரத்துகளில் சில விலக்குகள் எடுத்துரைக்கப்படுகின்றன. அரசாங்க அலுவல்களில் ஒரு சிலவற்றில் அமர்த்தப்படுவதற்கு 'வாழுமிடம்' என்ற யோக்கியதாம்சம் அவசியமெனக் கருதப்படலாகும். ஆனால், இதைப் பொறுத்துத் தனி அரசாங்கங்களை விதிகள் ஏற்படுத்துமாறு அனுமதிக்காது. அத் துணை நாட்டிற்குள் வசித்திருக்க வேண்டும் என்னும் விதியமைப்பதற்குப் பாராளுமன்றத்திற்கே அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. யோக்கியதாம்ச சோதனையை நாடு முழுவதும் ஒரே வகையானதாகச் செய்வதற்கு இவ்வுபாயம் உதவுகிறது. பின்தங்கிய வகுப்பினருக்கென்று அரசாங்க உத்தியோகங்களை ஒதுக்குவது பற்றி

இரண்டாவது ஷரத்துக் கூறுகிறது. பின்தங்கிய வகுப்பினர் யாவர் என்று தீர்மானிப்பதற்கு ஒவ்வொரு துணைநாட்டு அரசாங்கத்திற்கும் அதிகாரமளிக்கப்பட்டிருக்கிறது. சமயச் சார்புள்ள, மற்றும் குறிப்பிட்ட உறுப்பினர்களைக் கொண்ட நிறுவனங்களின் விவகாரங்களை அதற்கென்று அமைக்கப்பெற்ற சட்ட அடிப்படையில் நடத்தும்போது அவைகளை இப் பொது விதியின் வரம்பிற்கு அப்பாற்பட்டதாகச் செய்வதற்கு மூன்ருவது விதி விலக்கு வகை செய்கிறது.

## தீண்டாமை ஒழிப்பு (விதி 17)

திட்ட அமைப்பின் 17ஆம் விதி 'தீண்டாமையை' ஒழிக்கிறது. அதை எவ்வகையிலேனும் கடைப்பிடிப்பவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள். இவ் விதியை ஒருமுகமாகவும், மலர்ச்சியுடனும், ஆரவாரத்துடனும் ஏற்றதுபோல, திட்டத்தின் வேறு எந்த விதியும் ஏற்கப்படவில்லை. அதை ஏற்கும்போது 'மகாத்மா காந்திக்கு ஜே' என்ற ஆரவாரம் எழுந்தது. இவ் விதி ஒன்றிற்கே இக் கௌரவம் கிடைத்துள்ளது. 'இந்த விதியால் நாம் பெறுகின்ற உரிமை யாது?' என்ற கேள்வியைத் திட்டத்தைக் குறை கூறுபவர்கள் சிலர் கேட்கின்றனர். எவருக்கும் தனியான சலுகையொன்றை அது உற்பத்தி செய்யவில்லை என்பது உண்மையேயாகும். எனினும், அதை ஒரு சிறந்த ஆதார உரிமையென்றே நாம் கருதவேண்டும். இந்திய மக்களில் ஆறில் ஒரு பங்கினர் என்றும் அடிமைகளாகவும், நம்பிக்கைபற்றவர்களாகவும் வாழ்ந்தனர். அவர்களைச் சமுதாயம் இழிவுபடுத்தியும், அவமானப் படுத்தியும் வந்தது. அத்தகைய மக்களுக்கு இவ் விதி ஒரு விடுதலைச் சாசனமாக விளங்கியது. ஆதார உரிமைகளின் தன்மையைப் பற்றி விவாதிக்கின்றபோது, இயலாமைக்கு, உரிமை என்பது ஒரு மாற்று அல்ல என்பதைக் கூறினேம். அத்தகைய கண்ணேட்டத்தில் தீண்டாமை ஒழிப்பு ஓர் உரிமையாக மாறிவிடுகிறது. தீண்டாமை என்னும் வழக்கம் ஏராளமான இந்திய மக்களை ஆழம் காணவியலாத இருட்டிலும், பயத்திலும், அவமானத்திலும், தலைதனியிலும் தள்ளிவிட்டது என்பதோடல்லாது, அது நாட்டின் உயிரையே குடித்துவிட்டது. திட்ட அமைப்பில், 'ஆதார உரிமைகள்' என்ற தலைப்பின் கீழ் இவ்விதியை ஏற்றிருக்கின்றனர். இத் தீய பழக்கத்தினை வேருடன் களைந்துவிடுவது என்று உறுதிபூண்டிருப்பதை விளக்குவதற்கு இதிலும் சிறந்த சான்று தேவையில்லை.

இவ் விஷயத்தைக் குறித்து மிக்க மன நெகிழ்ச்சியோடு காந்தியடிகள் கூறிய வார்த்தைகளை இச் சந்தர்ப்பத்தில் கூறுவது பொருத்தமுடையதேயாகும். அவர் கூறியதாவது: நான் புனர்ஜன்மம் எடுக்க விரும்பவில்லை. அவ்வாறு நேரிட்டால், ஒரு ஹரிஜனகவும், தீண்டத்தகாதவனகவும் பிறக்க விரும்புகிறேன். அவ வாய்ப்புக் கிடைக்கு

மெனில் இப் பிரிவினரின் மீது சுமத்தப்பட்டிருக்கும் கொடுமைகளையும், அவமரியாதைகளையும் எதிர்த்துத் தொடர்ச்சியான போராட்டம் நடத்துவேன்'. மேலும், தீண்டத்தகாதவன் என்பதால் பள்ளி பள்ளியாகத் துரத்தப்பட்டவனும், வகுப்பறைக்கு வெளியே நின்று பாடங்கேட்டவனும், நடு இரவென்பதைக் கூடப் பாராட்டாமல் விடுதிகளிலிருந்து வெளியேற்றப்பட்டவனுமான ஒருவனுக்கு, இத் தீய சமுதாயப் பழக்கத்திற்குச் சாவு மணியடித்த இத் திட்ட விதியைக் கொண்ட ஓர் அரசியலமைப்புத் திட்டத்தைத் தயாரிக்கின்ற பொறுப்பு ஒப்படைக்கப் பட்டிருந்ததென்ற தலைவிதியின் விநோத விளையாட்டையும், இச் சந்தர்ப்பத்தில் நினைவுகூர்வது மிகவும் பொருத்தமுடையதேயாகும்.

1932ஆம் ஆண்டில் 'பொதுத்தீர்ப்பு' (communal award) வெளியிடப்பட்டது. அதனடிப்படையில், ஷெட்யூல் வகுப்பினருக்குத் தனித் தேர்தல் தொகுதி அளிக்கப்பட்டது. இதை எதிர்த்து 1932ஆம் ஆண்டில் காந்தியடிகள் உண்ணாவிரதம் தொடங்கினர். அதைத் தொடர்ந்து தீவிரமான தீண்டாமை ஒழிப்பு இயக்கமொன்று நாடெங்கிலும் தொடங்கிற்று. 'தீண்டாமைக்கு நாட்டில் இனியும் இடமில்லை' என்று கூறி, இந்திய தேசிய காங்கிரஸ் உறுப்பினர்களும் மற்றும் பலரும் புனித சபதமெடுத்துக்கொண்டனர். இவ்வியக்கத்தினுல் சில நன்மைகள் விளைந்தன. பல ஆலயங்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டன. தீண்டாமையின் கொடுமைகள் நகர்ப்புறங்களிலும் பழங்கதைகளாயின. இருந்தபோதிலும், தீண்டாமை என்னும் பழக்கம் பல வகைகளாக நாட்டின் பல பகுதிகளிலும் ஆங்காங்கே நீடித்துமிருந்தது. தீண்டாமையின் பெயரால் இழைக்கின்ற குற்றங்களை அடக்கிய மசோதாவைப்பற்றிப் (1955 ல் இது சட்டமாக ஏற்கப்பட்டது) பேசுகையில், இந்திய உள்நாட்டு மந்திரி பின் வருமாறு கூறினுர்: 'தீண்டாமை என்னும் இப் புற்றுநோய் நம் சமுதாயத்தின் ஜீவனிலேயே புகுந்துவிட்டது. இந்து சமயத்திற்கு இழுக்காக விளங்குவதோடு, பொருமை, வகுப்புவாதம், பிரிவினை மனப்பான்மை ஆகியவைகளையும் அது வளர்த்துவிட்டது. இன்று நம் சமுதாயத்தில் நிலவி வருகின்ற தீமைகள் பலவற்றிற்கும் பாப மூட்டையான இவ்வரக்கச் செயலே காரணமாகும். உயர்ந்த தத்துவ ஞானத்திற்கும் கருணைக்கும் புழுப்பூச்சிகளிடமும் அன்பு காட்டுகின்ற ஈர நெஞ்சத்திற்கும் இந்துக்கள் புகழ் படைத்தவர்கள். அத்தகைய பண்புமிக்கவர்கள் மனித இனத்தின் தாழ்விற்குக் காரணமாயிருந்தனர் என்பது மிக விநோதமாகவேயிருக்கிறது. இருந்தும், தீண்டாமை என்பது பல நூற்றுண்டுகளாக நடைமுறையிலிருந்து வந்திருக்கிறது. அதற்கு நாம் பிராயச்சித்தம் செய்ய வேண்டியவர்களாக இருக்கிறேம்...... தீண்டாமை என்ற நினைப்பே அரசியல் திட்டத்தின் அமைப்பிற்கும், இலட்சியத்திற்கும், விதிகளுக்கும் முற்றிலும் முரணுனது.'

தீண்டாமைக் குற்றச் சட்டம் 1955ஆம் ஆண்டு ஜூன் மாதம் அமலாக்கப்பெற்றது. ஒரு வகையில், திட்ட அமைப்பின் 15ஆம் விதியின் விரிவுரையாக இதைக் கொள்ளலாகும். சாதியின் பெயரால் ஷெட்யூல் வகுப்பினருக்குத் தீங்கிழைப்பதைச் சட்ட அடிப்படையில் குற்றமாக்குவதற்கு இச் சட்டம் முயற்சி செய்கின்றது. அநீதிக்கு இலக்கானவன் ஷெட்யூல் வகுப்பினனாக இருந்தால், தீண்டாமை என்ற அடிப்படையில் செய்யத் தகாதவற்றைச் செய்துவிட்டதாகக் கொள்ள வேண்டும். பொதுமக்களுக்கும் அல்லது இந்துக்களுக்கும் வழங்கப்படும் சலுகைகள் யாவும் ஷெட்யூல் வகுப்பினருக்கும் அதே அளவில் வழங்கப்படவேண்டும். உதாரணமாகத் தீண்டத்தகாதவன் என்பதால் ஒருவனுக்குக் கடைக்காரன் விற்பனை செய்ய மறுக்கக் கூடாது; அதைப்போலவே அதே காரணத்தைக் கொண்டு ஒருவனுக்கு சேவை செய்யவும் தயங்கக் கூடாது. சாதாரணச் சூழ்நிலைகளில் தன் சோதரர்கள் எவ்வாறு சலுகைகளைப் பெற்று, பிறருடன் வாழ்க்கை நடத்துகின்றனரோ, அதே வகையான சலுகைகளையும் உரிமைகளையும் அனுபவிப்பதற்கு எல்லோருக்கும் சுதந்திரம் உண்டு. அவ்வாறு எவரேனும் எதையும் மறுப்பாராகில் மறுப்பவருக்குத் தொழில் நடத்துவதற்கென வழங்கப் பெற்றிருக்கும் அனுமதி ரத்தாகிவிடும். எந்தக் குடிமகனின் உரிமையையும் பறிக்கின்ற வகையில் செயற்படுகின்றவனுக்கு, அவனிழைக்கும் குற்றத்திற்கென ஆறு மாதக் காவல் தண்டனையும், 500 ரூபாய் வரை அபராதமும் அல்லது இரண்டையும் விதிப்பதற்கு அரசினருக்கு அதிகாரமுண்டு இரண்டாவது முறையாக அத்தகைய குற்றமிழைப்பவருக்கு இந் தண்டனைகளையுமே வழங்க முடியும். இச் சட்டத்தை மீறும் செயல்கள் யாவும் 'பிடியாணைக் குற்றங்களாகும்' (cognisable offence); நீதிமன்றத்தின் அனுமதி பெற்று, இசைவுத் தீர்ப்புப் பெறவும் கூடும்.

அரசியலமைப்புத் திட்டத்தில் வகை செய்தும், தீண்டாமை ஒழிப்புக் குற்றச் சட்டங்களியற்றியும், நீதிமன்றங்களில் தீர்ப்புகள் வழங்கியும், இந்திய நாட்டில் தீண்டாமை என்னும் கொடிய பழக்கம் வேருடன் களைக்தெறியப்படவில்லை. சமுதாயக் குறைபாடுகளுடன் போராடுவதில் சட்டமியற்றுவதென்பது ஒரு சாதாரணக் கருவியே யாகும். தீண்டாமையை எதிர்த்து, அரசியலமைப்புத் திட்டத்தில் ஒரு விதியை ஏற்படுத்துவதும், இதை ஆதார உரிமை என்று சொல்வதும், அல்லது பாராளுமன்றத்தின் துணையோடு சட்டமொன்றை இயற்றித் தீண்டாமையைக் கடைப்பிடிப்பதைக் குற்றமெனக் கருதியும், பல நூற்றாண்டுகளாகச் சமுதாயத்திலிருக்கின்ற தீமை, ஒருநாளிரவிலேயே மறைந்துவிடும் என்று எதிர்பார்ப்பது அதிக நம்பிக்கையுடைமையாகும். இத்தகைய சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன என்பதைக் கொண்டு திருப்தியுடன் சமாதானமடைவதற்கு இல்லை. வெறுப்புகளை நீக்குவதற்குச் சட்டமியற்றுதல் என்பது ஒரு சிறந்த நிவாரணமல்ல, வெவ்

வேறு வகையான தீண்டாமையை ஒட்டிய பழக்கவழக்கங்களுக்கும், சமுதாய ஏற்றத் தாழ்வுகளுக்கும் எதிராகப் போரிடுவதை, வெறுப்புக் கண்களுடன் நோக்குகின்ற ஒவ்வொரு மனிதன் சிந்தனையிலும் உள்ளத்தில் மக்கள் தொடர்பின் வாயிலாகவும், பொதுஜன அபிப்பிராயங்களாலும், சமுதாய நடவடிக்கைகளாலும் பதிய வைக்க வேண்டும். குற்றமிழைப்பவர்களையும் தொடர்ந்து கவனமாகப் பார்த்து வர வேண்டும். சாதி வேற்றுமையின் பெயரால் இழைக்கப்படும் கொடிய குற்றங்களையும் கவனமாகக் கண்காணித்து வர வேண்டும்.

## பிருதுகளை நீக்குதல் (விதி 18)

அரசியல், சமூகப் பொருளாதார சமத்துவம் நிலவும் சமுதாயம் ஒன்றை உருவாக்கி, அதன் மூலமாக உண்மையான ஜனநாயகத்தை ஏற்படுத்த விரும்பும்போது, சமுதாயத்தில் ஒரு சிலர் மட்டிலும், சில பிருதுகளைத் தாங்கிச் செயற்கையான சில வேறுபாடுகளை உருவாக்கிக் கொள்வதற்கு இடமேயில்லை. பிருதுகளை ஏற்று, அதன் விளைவாகப் பிரபுக்கள் சமுதாயம் ஒன்றை சிருஷ்டி செய்வது ஜனநாயகத்திற்கு முரணானது என்று பதினெட்டாவது நூற்றாண்டிலேயே அமெரிக்க, ஃபிரெஞ்சுப் புரட்சிகளின் போது கண்டிக்கப்பட்டிருக்கிறது. ஒரு ஜனநாயகம் அவ்வகையான பிருதுகளையும், அவற்றையொட்டிய சலுகைகளையும் வளர்க்கக்கூடாது. இந்திய நாட்டில் பிரிட்டிஷ் துரைத்தனத்தார் ஆண்டுதோறும் ஏராளமான பிருதுகளை வழங்குவது வழக்கம். பெரும்பாலும் அவைகள் துரைத்தன அலுவலருக்கும் ஆதரவாளருக்குமே வழங்கப்படும். மக்களிடையில் விநோதமான பிரபுக்கள் கூட்டமொன்றை இது உண்டுபண்ணிவிட்டது. இத்தகைய பிருதுகளைத் தாங்கி நிற்பவர்களின் உண்மையான யோக்கியதாம்சம் நீங்கலாக, கொள்கை அடிப்படையில் சுதந்திர இந்தியாவிற்கு அவைகளை மதித்து ஏற்பதென்பது அசாத்தியமாயிற்று. எனவே, திட்ட விதி 18 பிருதுகள் யாவற்றையும் ஒழித்துவிட்டது. அரசாங்கமும் பிருதுகள் வழங்கக் கூடாது என்றும் விதிக்கிறது. இவ்வாறு பிருதுகளை மதித்து ஏற்பதில்லை என்ற கொள்கைக்குக் கல்வித்துறையிலும் ராணுவத்துறையிலும் பிருது பெறுகின்றவர்கள் மட்டிலும் விதிவிலக்காயினர்.

18ஆம் விதி ஆர்ச்சிதம் செய்யக்கூடிய உரிமையொன்றைத் தோற்றுவிக்கவில்லை என்பதை அரசியல் நிர்ணயசபையில் அம்பேத்கர் விளக்கினார்: 'தொடர்ந்து குடிமை பெறுவதற்கு பிருதுகளை ஏற்கக் கூடாதென்பது ஒரு கட்டுப்பாடு. அது ஓர் உரிமை அல்ல. ஒருவன் இந்நாட்டுக் குடிமகனாக நீடித்திருக்க வேண்டுமேயானால், அவன் சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டேயாகவேண்டும். அத் தனி மனிதனின் மீது சுமத்தப்படுகிற கடமையாக அது மாறிவிடுகிறது. அவன் பிருதுகளை ஏற்கக்கூடாதென்பது ஒரு கட்டுப்பாடு. அதை அவன் செய்வானே

யாகில், சட்ட அடிப்படையில் இவ்வரசியல் திட்ட விதியை மீறுபவர்களை எவ்வாறு நடத்த வேண்டுமென்று தீர்மானிக்கின்ற அதிகாரம் பாராளுமன்றத்திற்கு உண்டு. அதற்கு விதிக்கப்படும் தண்டனைகளில் ஒன்றாக அவனைக் குடிமை உரிமையையும் இழக்கச் செய்யலாம்'.

இவ்வாறு திட்ட விதி–18, இந்திய அரசாங்கம் குடிமகன் ஒருவனுக்குப் பிருதுகள் வழங்குவதைத் தடுக்கிறது. அதனுடன், இந்திய நாட்டுப் பிரசிடென்டின் அனுமதியின்றி, வேறு அரசாங்கங்கள் அளிக்கின்ற பிருதுகளையும் இந்தியக் குடிமகன் ஏற்கக்கூடாது என்று தடை செய்கிறது. இத்தடை, அந்நிய நாட்டு பிருதுகளைத் தடை செய்வதோடு திருப்தியடைவதில்லை. இந்திய அரசாங்கத்தின் ஆதரவில், அலுவலையோ, இலாபத்தையோ, நம்பிக்கை உரிமையையோ பெற்றிருப்பவர்கள் அந்நிய நாட்டிலிருந்து வெகுமதியையோ, ஊதியத்தையோ அல்லது எவ்வகையான அலுவலையோ ஏற்கக்கூடாது.

பிரிட்டிஷ் அரசர் அளிக்கின்ற பிருதுகளுக்கு எதிரான போராட்டம் 1787ஆம் ஆண்டு தொடங்கிற்று. அவ்வாண்டில் ஐக்கிய அமெரிக்க அரசியல் திட்டம், அந்நாட்டெல்லைக்குள் பிரபுத்துவப்பட்டம் எதுவும் இருக்கலாகாதென்று முடிவு செய்தது. பிரிட்டனின் காலனிகளில் ஒன்றாகவிருந்த அயர்லாந்து, தன்னரசு பெற்றவுடன் அமெரிக்க நாட்டைப் பின்பற்றியது. அந்நாட்டு அரசியலமைப்புத் திட்டமும், அரசாங்கத்தார் பிருதுகள் வழங்குவதைத் தடை செய்கிறது. பர்மா, இந்தியா ஆகிய நாடுகள் இவ்வடிச்சுவடுகளைப் பின்பற்றின. இவற்றுள் இந்தியா காமன்வெல்த்தின் உறுப்பாக இருப்பதென்று முடிவு செய்த போதும் பிருதுகளை நீக்கிவிட்டது. காமன்வெல்த்தின் தலைவராகப் பிரிட்டிஷ் அரசர் இருந்து வருகிறார் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

# 9. சுதந்திர வாழ்வு பெறும் உரிமை

## (அரசியல் விதி 19)

தனி மனிதனின் சுய உரிமை, ஆதார உரிமைகள் யாவற்றிலும் மிகச் சிறந்தது. இவ்வடிப்படை உரிமையின் வெவ்வேறு நிலைகளை அரசியலமைப்புத் திட்டத்தின் விதிகள் 19லிருந்து 22 வரை எடுத்துக் கூறுகின்றன. ஒருங்கு சேர்ந்து, இந்த நான்கு விதிகளும் மனிதனின் தனியுரிமைச் சாசனமாக விளங்குகின்றன. ஆதார உரிமைச் சாசனத்தின் அதிகாரத்திற்கு இது முதுகெலும்பாக விளங்குகிறது. அவைகளில் 19 ஆம் விதி மிக முக்கியமானதாக இருக்கிறது. குடிமக்கள் யாவரும் அனுபவிக்கலாமெனத் திட்டத்தில் உறுதி செய்யப்பட்டிருக்கும் 'ஏழு சுதந்திர வாழ்வுச் சூத்திரங்க'ளுக்கு ஆதார விதியாக 19ஆம் விதியை நாம் கூறலாம். அவ்வேழு சூத்திரங்களும் வருமாறு:

(1) பேச்சுரிமையும், கருத்தை வெளிப்படுத்தும் உரிமையும்.

(2) சமாதானமாக, ஆயுதங்கள் தரிக்காமல் கூடிப்பேசும் உரிமை.

(3) சங்கங்கள், மற்றும் வட்டக் குழுக்கள் அமைக்கின்ற உரிமை.

(4) இந்திய யூனியன் முழுவதிலும் தடையின்றிப் பிரயாணம் செய்யும் உரிமை.

(5) இந்திய யூனியனின் எப்பகுதியில் வசிக்கவும், நிரந்திரமாகக் குடியேறிவிடவும் உள்ள உரிமை.

(6) சொத்துச் சேர்க்கவும், வைத்துக்கொள்ளவும், அல்லது விற்று விடுவதற்கான உரிமைகளும், மற்றும்.

(7) ஏதாவதொரு தொழிலைத் தடையின்றிப் பின்பற்றவும், வாணிபம் அல்லது தொழில் நடத்தும் உரிமைகள்,

ஒரு ஜனநாயக சமுதாயத்தில் இந்த உரிமைகளின் சிறப்பைக் குறித்து விரித்துரைப்பதென்பது இயலாது. உண்மையில் ஒரு ஜன நாயக சமுதாயத்தின் சிறப்பை எவ்வளவில் இவ்வுரிமைகளை மக்கள் அனுபவித்து வருகின்றனர் என்பதைக் கொண்டே மதிப்பிடவேண்டும். இவ்வுரிமைகள் யாவும் ஒன்றுகூடி மக்களின் தனியுரிமையாகின்றன. மனித முன்னேற்றத்திற்கும் சந்தோஷத்திற்கும் இன்றியமையாத அடிப்படைத் தேவைகளில் மனிதனின் தனியுரிமை மிக முக்கியமான தொன்றாக விளங்குகிறது. 'வாழ்க்கை, தனியுரிமை, சந்தோஷ வாழ்க்கைக்கான முயற்சி' ஆகியவை மனித இனத்தின் அசைக்க முடியாத உரிமைகளில் மிக முக்கியமானதென்று அமெரிக்க நாட்டுச் சுதந்திரப் பிரகடனம் கூறுகிறது. இதை அரசியலமைப்புத் திட்டங்கள் ஒவ்வொன்றின் முகப்பும், ஏதாவதொரு வகையில் தனது குறிக்கோ ளாக எடுத்துரைக்கின்றது. உதாரணமாக, அமெரிக்க நாட்டு அரசியல் திட்டத்தின் முகப்பு—'தனியுரிமையின் ஆசீர்வாதங்களை நமக்காகவும் நம் சந்ததியாருக்காகவும் பெறுவதைத்' தனது குறிக்கோளில் ஒன்றாகக் கூறுகிறது. சுய உரிமை பெறுவதைத் தனது குறிக்கோள்களில் ஒன்றாக, இந்திய அரசியலமைப்புத் திட்டத்தின் முகப்பும் கூறுகிறது—'சிந்திப்ப தற்கும், பேசுவதற்கும், நம்புவதற்கும், கோட்பாட்டைப் பின்பற்று வதற்கும் வழிபடுவதற்குமான உரிமைகள்'.

சுதந்திர வாழ்வு என்ற உரிமையைப்பற்றிக் கூறுகின்ற அரசிய லமைப்புத் திட்டத்திலடங்கிய விதிகள் தொலைதூரத்திலுள்ள இரு கருத்துகளுக்கிடையிலெழுந்த ஒரு சமரசமாகும். அரசியல் சுதந்திரத்தை அண்மையிலேயே பெற்றிருந்ததால், கட்டுப்பாடான சுதந்திர வாழ்வை அனுபவிப்பதற்கான ஆசை மிகுந்திருந்தது. அதே சமயத்தில், தோன்றி யுள்ள அரசும் குழந்தைப் பருவத்திலேயே இருக்கிறது என்ற உணர்வு மிருந்தது. அந்நாடு, மேலும் பல அனுபவங்களை எதிர்நோக்கியிருந்தது. எனவே, காப்பாற்றப்படுவதாக வாக்குறுதியளிக்கப்பட்டிருக்கிற உரிமை களில் ஒரு சிலவற்றைக் கைவிட நேரிடுமென்றாலும், அரசாங்கத்தைக் காப்பாற்ற வேண்டிய நிலையுமிருந்தது. ஆகவே, வரைதிட்டக் கமிட்டி, நடுநிலை வகித்து ஒரு முடிவை எய்தியது. அதன்படி தனி மனித னுக்குத் தேவையென்று கருதிய உரிமைகள் யாவற்றையும் எடுத் துரைத்து, அதே சமயத்தில், அரசாங்கத்திற்குக் கேடு விளைவிக்கக் கூடிய வைகளின் மீது தேவையான தடை விதித்துத் துரைத்தனத்தாரின் பாதுகாப்பிற்கு வழி தேடியது. இவ்வுரிமைகளை நடைமுறையில் கை யாளுவது, இந்திய மக்களின் திறமையைப் பொறுத்ததென்றும், சுய உரிமையைக் குறித்து அவர்கள் எத்தகைய எண்ணங்களை வளர்க் கின்றனரோ, அதையும் பொறுத்ததென்றும் அவர்கள் எண்ணினர். உரிமையைப் பற்றிய கருத்துகள் திட்டம் தயாராகும்போது வளர்ச்சி பெறாத நிலையிலேயே இருந்தன.

இன்றிருக்கின்ற நிலையில், பேச்சுரிமை, மற்றும் கருத்துகளை வெளிப்படுத்துவதில் ஏழு வகையான தடைகள் இருக்கின்றன. அவைகளாவன : அரசாங்கத்தின் பாதுகாப்பு, அந்நிய நாடுகளுடன் நேச உறவு, பொது ஒழுங்கு, பண்பு அல்லது நெறி, நீதிமன்ற அவமதிப்பு, அவதூறு, மற்றும் பலாத்காரச் செயல்களைத் தூண்டிவிடுதல் ஆகியவைகளேயாகும். அரசியல் நிர்ணய சபையில் ஏற்கப்பட்ட போது தடைகள் மிகக் குறைவாகவே இருந்தன. 'எழுத்து அவதூறு, வாய் அவதூறு, இகழ்வு, நீதிமன்ற அவமதிப்பு, பண்பு அல்லது நெறியைத் தாக்குகின்ற செயல் அல்லது அரசாங்கத்தை ஒழித்துவிடும் முயற்சி அல்லது அரசாங்கத்தின் பாதுகாப்பிற்கு ஆபத்தான செயல்' ஆகியவைகளே அப் பட்டியலில் அடங்கியிருந்தன. அந் நிலையிலிருந்து தற்போதுள்ள நீண்ட பட்டியலாக 1951ஆம் ஆண்டில் அமலாக்கப் பட்ட திட்டத்தின் முதல் திருத்தமே செய்தது. அவ்வாண்டில் ரொமேஷ் தாப்பருக்கும் சென்னை அரசாங்கத்திற்குமிடையில் நடை பெற்ற வழக்கில், உயர் நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பினால் இம் மாறுதல்கள் இன்றியமையாதவைகளாயின. பேச்சுரிமை அல்லது கருத்தை விளக்கும் உரிமையைக் கட்டுப்படுத்துகின்ற சட்டம், அதை மீறுவதால் அரசாங்கத்தின் பாதுகாப்புச் சீர்குலைவதையும், அல்லது அரசாங்கத்தையே ஒழித்துவிடுவதையும் பற்றியே குறிப்பிடவேண்டும். சட்டம் பொதுஜன ஒழுங்கை நிலைநிறுத்துவதற்கெனத் தடை விதித் தாலும், நாம் மேலே குறித்தவாறு இல்லையெனில், அதைப் போதுமான தடையென்று கொள்வதற்கில்லை. தற்போது வழங்கி வருகின்ற நிலையில் கட்டுப்பாட்டிற்கான சூழ்நிலை முன்பிருந்ததைவிட அதிகமாக உள்ளது. தனி அனுபவம் ஏற்படும்போதெல்லாம் நீதிமன்றத்திற்குப் பொருத்தமுடைமை என்பதற்கு எதிராக ஆட்சித்துறையினரின் செயலையோ அல்லது சட்டமன்றத்தினரின் சட்டங்களையோ பரிட்சிப்ப தற்கு வாய்ப்புக் கிடைக்கிறது. 'பொருத்தமுடைமை' என்ற சொல் ஒன்றே உண்மையில் இவ்விதியின் உயிரும் உடலுமாக விளங்குகிறது. இச் சொல்லின் பொருளை விளக்கிக் கூறுகையில் உயர் நீதிமன்றம் கூறியதாவது :

" 'பொருத்தமுடைய தடை' என்னும் சொல், ஒரு மனிதன் தன் உரிமையை அனுபவிப்பதில் இச்சைக்கு அடிமையாகிவிடக் கூடாது அல்லது பொதுஜன நலனுக்குத் தேவையான அளவிற்கும் மீறிவிடக் கூடாது என்ற தடையை வற்புறுத்துகின்றது. இச்சைக்கேற்றவாறு அல்லது தேவைக்கதிகமாக உரிமையைப் பறிக்கின்ற சட்டம் 'பொருத்த முடைமை' என்ற குணம் பெற்றிருப்பதாகக் கூறமுடியாது. உறுதி யளிக்கப்பட்டிருக்கும் உரிமைக்கும், திட்ட விதி 19-ன் கீழ் அனுமதிக்கப் படும் சமுதாயக் கட்டுப்பாட்டிற்கும் இடைப்பட்ட முடிவொன்றைச் சரியான முறையில் எய்தவில்லையெனில், அது பொருத்தமுடைமை என்னும் குணத்தை முற்றிலும் பெற்றுவிடவில்லை என்றே உறுதி செய்யவேண்டும்."

## எழுத்தாளர் உரிமை

எழுத்தாளர் உரிமை என்பதைக் குறித்துச் சிறப்பாக எடுத்துக் கூறவில்லை என்றும், பேச்சுரிமையுடன் அதையும் உறுதி செய்து தர வில்லை என்றும் அரசியல் நிர்ணய சபையிலும், அதற்கு வெளியிலும் ஏராளமான குற்றச்சாட்டுகள் இருந்தன. 'எழுத்தாளரின் சுதந்திரம்' என்பதைக் கொள்கையாகக் கொண்டவர்கள், வரை திட்டக் கமிட்டி எழுத்தாளர் உரிமையைப் புறக்கணித்துவிட்டது என்பதை ஒரு பெருங் குறையாகவே கருதி வந்தனர். இருந்தபோதிலும், ஆதார உரிமைகள் என்ற அதிகாரத்தில் இதைப்போன்ற தனியுரிமை ஒன்றை எடுத் துரைக்க வேண்டுமென்பதை வரை திட்டக் கமிட்டி அவசியமென்று நினைக்கவில்லை.

கமிட்டியின் சார்பில் உரை நிகழ்த்திய அம்பேத்கர் 'எழுத்தாளர்' என்பதும், ஒரு குடிமகன் அல்லது தனிமகனைக் குறிக்கும் சொல்லே யாகும். ஒரு குடிமகன், தனியாள் என்ற முறையில் அனுபவிக்கக் கூடாத எந்த உரிமையையும் எழுத்தாளர் என்பதால் பிரத் யேகமாக அனுபவிப்பதற்கில்லை. ஒரு செய்தித்தாளின் ஆசிரியர் அல்லது மானேஜரும் குடிமக்களேயாவார். அவர்கள் செய்தித்தாளில் எழுதமுற்படும்போது தங்களுக்களிக்கப்பட்டிருக்கும் கருத்தை வழங்கு கின்ற உரிமையையே பயன்படுத்துகின்றனர். எனவே, என் அறிவிற்கு எட்டியவரையில் 'எழுத்தாளர் உரிமை' என்பதைத் தனி யாகக் குறிப்பிட வேண்டிய தேவை இல்லை.

திட்ட விதி 19 (1) (a)-ல் பயன்படுத்தப்பட்டிருக்கும் 'கருத்தை எடுத்துரைத்தல்' (Expression) என்னும் சொல், 'பேச்சு' (Speech) என்பதைக் காட்டிலும் அதிக வலிமையுள்ளதென்பதால் எழுத்தாளரை யும் தனது வரம்பிற்குள் அடக்குகிறது உண்மையில், திட்டத்தில் சிறப்பாக எழுத்தாளன் என்று குறிப்பிடாமையால், ரொமேஷ் தாபர் வழக்கில் எழுத்தாளர் உரிமையடிப்படையில் தீர்ப்பு வழங்கிய உயர் நீதிமன்றத்திற்கு எவ்வகையான கஷ்டமும் ஏற்படவில்லை. மேலும், நவீன கால விஞ்ஞானமும், தொழிலாராய்ச்சியும், கருத்துகளைப் பரப்பு வதற்குப் புதிய சொல்லாட்சிகளையும் பிற வழிகளையும் கண்டுபிடித்தும், கண்டுப்பிடித்துக்கொண்டும் வருகின்றனர். இப் புதிய வகைகளுக்கு ரேடியோ, சினிமா, டெலிபோன், டெலிவிஷன் ஆகியவற்றை மேற் கோள்களாகக் கூறலாம். செய்தித்தாள்களைவிட, இவைகளில் சில நாளடைவில் மிக்க சக்தி வாய்ந்த சிறந்த சாதனங்களாகவும் மாறக் கூடும். நடைமுறையிலிருந்து வரும் எல்லாச் சாதனங்களையும் குறிப் பிடவேண்டுமென்பதோ, அல்லது அவைகளில் ஒன்றைச் சிறப்பாகக் கூறவேண்டுமென்பதோ இல்லை. 'கருத்துகளை எடுத்துரைத்தல்' என்ற சொல்லில் அடங்காத புதிய பொருள் எதையும், அவ்வாறு

எடுத்துரைப்பதால் நாம் காணப்போவதில்லை. எனவே, 'எழுத்தாளர் உரிமை' என்பவதைத் தனியாகத் திட்டத்தில் எடுத்துரைக்கவில்லை என்று குறை காண்பதில் பயனெதுவுமில்லை.

## கூடுவதற்கான உரிமை
## [திட்ட விதி 19 (1) (b), மற்றும் 19 (3)]

பேச்சுரிமை என்பதை யொட்டிய அடிப்படைப் பாதுகாப்பில் தடையின்றிக் கூடுவதென்பதும் ஒன்று. உண்மையில் தடையின்றிக் கூடுவதும் பேச்சுரிமையும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு கொண்டவை. அரசியல் காரணங்களுக்காகவும், பிற தேவைகளுக் காகவும் அமைதியாகக் கூடிப் பேசுவதும், விவாதங்கள் நடத்துவதும், பேச்சுரிமையையும் கருத்துப் பரிவர்த்தனை உரிமையையும் உண்மையில் அனுபவிக்கச் செய்வதற்கு இன்றியமையாதவை என்பதைத் திட்டத் தயாரிப்பாளர்கள் நன்கறிவார்கள். எனவே, ஆயுதம் எதுவுமின்றி அமைதியாகக் கூடுவதற்குத் திட்ட அடிப்படையில் உரிமை வழங்கப் பட்டிருக்கிறது.

ஒழுங்கை நிலைநாட்டுவதென்பதற்காகவே கூடுகின்ற உரிமையைக் கட்டுப்படுத்தக்கூடும். இக் கட்டுப்பாடுகளும் நியாயமானவைகளாக இருக்கவேண்டும். இந்திரதேவ் சிங் VS துரைத்தனம் என்ற வழக்கில் பாட்னா உயர் நீதிமன்றம் தீர்ப்பு வழங்கவேண்டியிருந்தது. அப்பொழுது இத்திட்ட விதியின் வரம்பைத் தீர்மானிக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டது. அவ் வழக்கில் பீகார் மாகாண ஒழுங்கு முறைச் சட்டம் (1949) நியாயமற்றது என வாதிடப்பெற்றது. அப்போது பாட்னா உயர் நீதிமன்றக் கட்டுப்பாடுகள் நியாயமான வைகளா அல்லவா என்பதைப் பற்றித் தீர்மானிக்கவேண்டியிருந்தது :

'ஊர்வலங்கள் முதலியவற்றைத் தடை செய்கின்ற சட்டத்தின் பகுதி, அரசியலமைப்புத் திட்ட விதி வாயிலாக [விதி 19 (3)] அளிக்கப் பட்டிருக்கும் உரிமையின்மீது நியாயமற்றதோர் தடையாக விளங்கு கின்றதா? இல்லையா? என்பதே பிரச்சினை. பொது ஊர்வலம் முதலியவைகளைப் பொறுத்தவரையில் சட்டம் விதிக்கின்ற தடைகள் என் அறிவிற்கு எட்டியவரையில் நியாயமற்றவைகளாக இல்லை என்று நான் கூறுவதே போதுமானது. எனவே, வாதிகளுக்கெதிராக அளிக் கப்பெற்ற நீதி, சட்டத்தின் குறிப்பிட்ட பகுதியுடன் செல்லாது போயிற்று என்று கூறவியலாது. உண்மையில் விதிக்கப்பெற்ற தடை, எந்த ஓர் அளவைக்கொண்டு மதிப்பிட்டாலும், நியாயமற்றதென்று கூற முடியாது.'

## சங்கங்கள், வட்டக்குழுக்கள் அமைப்பதற்கான உரிமை [திட்ட விதி 19 (1) (c), மற்றும் 19 (4)]

சங்கங்களும் வட்டக்குழுக்களும் அமைப்பதற்கான உரிமைகள் வழங்கப் பெற்றிருப்பது, நாட்டிலுள்ள தொழிலாளிகள் யாவருக்கும் ஒரு சாசனமான விளங்குகிறது. அண்மைக் காலம் வரையிலும், பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளில் தொழிற்சங்க அலுவல்களில் ஈடுபடுவதை மேலை நாடுகளில் ஆதரிக்கவில்லை. அநேக நாடுகள், அதைச் சமுதாயத்திற்கும் அரசாங்கத்திற்கும் விரோதமானதென்றும் கருதி வந்தன. சமுதாயத்தின் ஓரினமாக அல்லது வகுப்பாக விளங்குகின்ற அவர்களது வாழ்க்கையை ஒட்டிய சாதாரணமான உரிமையைக் கூடப் பெறுவதற்குத் தொழிலாளர் பல கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருந்தது. தொழிற்சட்டங்கள், மற்றும் தொழிலாளர் சட்டங்களை இயற்றித் தொழிலாளிகளின் நியாயமான உரிமைகளைப் பெறுவதற்கு, இருபதாவது நூற்றாண்டிலேயே, அதிலும் குறிப்பாக முதலாவது உலக மகாயுத்தத்திற்குப் பின்னரே குறிப்பிடத்தக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இந்த உரிமைகளை அடிப்படையாகச் செய்வதற்கும், அவைகளை அரசியலமைப்புத் திட்டத்தில் இணைப்பதற்கும் மேற்கொள்ளப் பெற்ற முயற்சிகள் உண்மையிலேயே துணிகரமானவையாக இருக்கின்றன. காலத்தின் போக்கை நன்கறிந்து, தொழிலாளிகள் தங்களுக்கென சங்கங்கள் அமைத்துக் கொள்வதை ஆதார உரிமை என்று திட்டம் ஏற்றிருக்கிறது.

வட்டக் குழுக்கள் அல்லது சங்கங்கள் அமைக்கின்ற உரிமையைப் பொதுஜன அமைதி அல்லது ஒழுங்கை மனத்தில் கொண்டே கட்டுப்படுத்த இயலும். சட்ட விரோதமான நடவடிக்கைகள் அல்லது சதிச் செயல்களில் ஈடுபடுவதற்கென்று ஒரு வட்டக்குழுவோ அல்லது சங்கமோ இருக்கமுடியாது. அல்லது ஒழுங்கீனத்தை வளர்ப்பதற்காகவும் சங்கமொன்று கூட்டமுடியாது. வி ஜி. ராவ் என்பவருக்கும் சென்னை அரசாங்கத்திற்கும் நடந்த வழக்கில் இவ்வுரிமையின் வரம்பை எடுத்துரைக்கும்போது உயர் நீதிமன்றம் பின்வருமாறு கூறியது :

'வட்டக்குழுவையோ அல்லது சங்கங்களையோ கூட்டுகின்ற உரிமைக்குப் பரவலான, பலவகையான செல்வாக்குகள் உண்டு. சமயம், அரசியல், பொருளாதாரத் துறைகளில் அதைச் செயற்படுத்த அனுமதிப்பதால் அல்லது செயற்படாது தடுப்பதால் வலிவு மிக்க விளைவுகள் ஏற்படக்கூடும். அத்தகைய உரிமை ஒன்றின் மீது தடைகள் விதிக்கின்ற அதிகாரத்தை, அத்தடைக்குரிய காரணங்களை எடுத்துக்காட்டாமல், நடைமுறை அனுபவத்தையும் சட்ட நுணுக்கங்களையும் நீதிமன்றத்தில் ஆராய்ந்துபாராது, ஆட்சித்துறையினருக்கு அளித்துவிடுவது மிகவும் கவனத்திற்குரிய முடிவாகும். என் கருத்திற்கிணங்க, திட்ட விதி 19 (c)க்கு இணங்க அனுமதிக்கப்படும் ஆதார

உரிமையை அனுபவிப்பதன்மீது விவாதிக்கப்படும் தடைகளின் நியாயத்தைத் தீர்மானிக்கும்போது நான் குறிப்பிட்டுள்ள கருத்தையும் மனத்தில் கொள்ளவேண்டும்.'

சங்கங்கள் அல்லது வட்டக் குழுக்கள் அமைக்கும் உரிமையை எல்லாக் குடிமகனும் ஒரே அளவில் பெறுவதில்லை. பொதுத்துறை அலுவலர் ஒருவர், அவரும் ஒரு குடிமகனேயாயினும், தனிக் குடிமகன் ஒருவருக்குள்ள உரிமைகள் யாவற்றையும் பெற்றுவிடமுடியாது. அரசாங்க அலுவலர் என்ற முறையில் பணி விதிகள் அவரைக் கட்டுப்படுத்துகின்றன. சங்கங்கள் கூட்டுகின்ற உரிமையைத் தம்மால் முழுவதும் அனுபவிக்க முடிவதில்லை என்று அவர் பணி விதிகளைக் குறை கூறவியலாது. பாலகோடியா என்பவருக்கும் இந்திய அரசாங்கத்திற்கும் இடையில் நடந்த வழக்கில் உயர் நீதிமன்றத்தினரால் இது தெளிவாக்கப்பட்டிருக்கிறது.

## தடையின்றிப் பிரயாண உரிமை, வாசஸ்தலம், மற்றும் சொத்துரிமை [திட்ட விதி 19 (1) (d), (e), (f), மற்றும் 19 (5)]

இந்திய நாடு முழுவதும் தடையின்றிப் பிரயாணம் செய்யவும், வசிக்கவும், நிரந்தரமாகத் தங்கிவிடவும், சொத்துப் பெறவும், வைத்திருக்கவும், விற்றுவிடவுமான உரிமைகள் திட்ட விதி 19-ன் 1ஆவது பிரிவின் உபவிதிகள் (d), (e), (f) ஆகியவைகளால் அனுமதிக்கப்படுகின்றன. தடையின்றிப் பிரயாணம் செய்வதற்குள்ள உரிமையைப் பற்றி மிகைப்படக் கூறவேண்டுவதில்லை. உண்மையில் நமக்களிக்கப்பட்டிருக்கும் பிற உரிமைகளை முழுவதும் நாம் சுதந்திரமாக அனுபவிக்க வேண்டுமெனில், தடையற்ற, வரம்பற்ற போக்குவரவு உரிமைகளும் அளிக்கப்பட வேண்டும். இவ்வுரிமைகளின்மீது இரண்டு அடிப்படைகளைக் கொண்டே துரைத்தனத்தார் தடை விதிக்கக்கூடும். பொதுமக்களின் நலன், ஷெட்யூல் வகுப்பினரின் குறிப்பிட்ட நலனைப் பேணுதல் என்ற இவ்விரண்டும் அவ்வடிப்படைகளாக விளங்குகின்றன. உதாரணமாக, தொத்துநோயால் பீடிக்கப்பட்டிருக்கும் ஒருவனை அங்குமிங்கும் தடையின்றி அலைவதைப் பொதுமக்களின் நலன் கருதித் துரைத்தனத்தார் தடைசெய்யக்கூடும். அதைப்போலவே ஷெட்யூல் வகுப்பினர் தனிக் கூட்டங்களாகவே வசித்துவருகின்றனர். பின்தங்கிய, நாகரிக வளர்ச்சி குன்றிய அவர்களது பண்பாடும், சொத்துரிமையைப் பற்றிய கருத்துகளும் தனி ரகமானவை. தனியான பண்பாடு, பின்தங்கிய பொது மரபு என்ற அடிப்படைகளில், மலைச் சாதியினரை முழுவதுமாகப் பிரித்து ஒதுக்குவது என்பது தவறானதும், குறிக்கோளாகிய தேசிய ஒருமைப்பாட்டிற்கு முரணானதுமாகும். என்றாலும், சில பாதுகாப்புத் தடைகள் கூறப்பட்டிருப்பதும் பொருத்தமுடையதாகவே தோன்றுகின்றது. 'நாகரிகமிக்க' புத்திசாலிகளான சகோத

ரர்களின் கபடமான திட்டங்களுக்கு ஷெட்யூல் வகுப்பினர் இலக்காகி, அவர்களால் சுரண்டப்படவும் கூடும் என்பதால், இத் தடைகள் தேவையுள்ளவைகளாகவே விளங்குகின்றன. எனவே, இச் சாதியினர் தங்களது சொத்துகளைச் சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டே விற்க இயலுமெனப் பல தடைகளை விதித்து எளிதில் அவ்வாறு நேர்ந்துவிடாத வண்ணம் பல விதிகளமைக்கப்பட்டிருக்கின்றன. அச் சாதியினர் குடியிருக்கும் பகுதிகளிலிருந்தும், அவர்களிடமிருந்தும் சில நிபந்தனைகளுக்குட்பட்டே சொத்துகளை வாங்கலாமென்று பிற குடிமக்களைத் தடை செய்வதும் இச் சாதியினரின் நலனைக் கருதியேயாகும். 'ஷெட்யூல் வகுப்பினரின் நலன் கருதி' என்ற சொல்லாட்சி கவனத்திற்குரியது. தடையற்ற போக்குவரவு எனத் திட்ட விதியில் குறிப்பிடப் பட்டிருப்பது, புகைவண்டிமூலம் நடைபெறுகின்ற போக்குவரவைப் பொறுத்ததன்று. எவ்விதப் பாகுபாடுமின்றி, இந்திய நாட்டின் ஓர் பகுதியிலிருந்து மற்றுமொரு பகுதிக்குச் செல்லுகின்ற தனித்த உரிமையையே இவ் விதி குறிப்பிடுகிறது.

## வாழ்க்கை வழி, தொழில், வியாபாரம், அலுவல் ஆகியவைகளைக் கடைப்பிடிக்கும் உரிமை [திட்ட விதி 19 (1) g, மற்றும் 19 (6)]

வாழ்க்கை வழியை வகுத்துக்கொள்வதற்கும், தொழிலொன்றைக் கடைப்பிடிப்பதற்கும், வியாபாரம் அல்லது அலுவலை மேற்கொள்வதற்கும் திட்ட விதி 19 (1) (g) வழிவகுக்கிறது. இவைகளை ஆதார உரிமைகளாகக் கருதலாமாவென்று அரசியல் நிர்ணய சபையில் ஓர் ஐயத்தை எழுப்பினர். அவைகளுக்கு ஆதார உரிமைகளின் அந்தஸ்தை அயர்லாந்து, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளின் அரசியலமைப்புத் திட்டங்களே வழங்கியிருக்கின்றன. இத்தகைய உரிமைகளுக்கு உறுதி தேடுவதில், இந்திய நாட்டில் நிலவிய சிக்கலான சமுதாய அமைப்பையே திட்டத் தயாரிப்பாளர்கள் மனத்தில் கொண்டிருந்தனர் எனத் தெரியவருகிறது. தொழில்கள் பரம்பரையானவை. அவைகளைப் பயிற்சி செய்து பெறுவதில்லை என்பது இந்திய நாட்டுச் சமுதாய அமைப்பின் மிகவும் கீழ்த்தரமான நிலையாக விளங்குகிறது. அச் சமுதாய அமைப்பில் சாதிமுறைக்கு அதிகச் சிறப்பளிக்கப்பட்டிருக்கிறது. தொழில்கள் யாவும் சமயம் அல்லது சாதியின் அடிப்படையிலேயே இயங்கிவருகின்றன. சமுதாயத்தில் பரிவர்த்தனையும் வளர்ச்சியும் மிக்குற்று விளங்க வேண்டுமென்ற கருத்திற்கு இவைகளினால் எவ்விதப் பயனும் இல்லை. தங்கள் முன்னோர்களின் தொழில்களைக் கைவிட்டு, வேறு தொழில்களைக் கடைப்பிடிக்க விரும்புபவர்களை அச் சமுதாயம் விருப்புடன் ஏற்பதில்லை. உறுதி பெற்றுவிட்ட சமுதாய அமைப்பை நிலைநிறுத்துவதற்கே அது முயற்சி செய்கிறது. ஒருவனுக்கு மிகவும் பிடித்தமான தொழில், அலுவல், வியாபாரம் அல்லது பணியை ஏற்பதற்குச் சுதந்திரமான உரிமையை உறுதியளிப்

பது புதியதொரு சக்தி வாய்ந்த ஜனநாயக சமுதாயத்தை அமைப்பதற்கு மிகவும் இன்றியமையாதது. திட்டத் தயாரிப்பாளர்கள் இந்த உரிமைகளை 'ஆதார உரிமைகள்' என்ற தலைப்பைக்கொண்ட அதிகாரத்தில் இணைத்தது மிகப் பொருத்தமானதேயாகும். அவ்வாறு செய்து உண்மையான ஜனநாயக சமுதாயம் உருப்பெறுவதற்கு அவர்கள் வழியமைத்துவிட்டனர். இவ்வுரிமைகளை மக்கள் அனுபவிப்பதைக் கட்டுப்படுத்தவும் அரசாங்கத்திற்கு அதிகாரமுண்டு. பொதுமக்களின் நலனை முன்னிட்டு நியாயமான தடைகளை அரசாங்கம் விதிக்கலாம். அத்தடைகள் பின்வரும் வகையைச் சார்ந்திருக்கலாம்: (அ) ஏதாவது ஒரு தொழிலைக் கடைப்பிடிப்பதற்கோ, அலுவலை ஏற்பதற்கோ, வியாபாரம் அல்லது பணியை ஏற்பதற்கோ தேவையான யோக்யதாம்சங்கள் பெற்றிருக்க வேண்டும். (ஆ) எந்த வியாபாரம், அலுவல், தொழில் அல்லது பணியையும் அரசாங்கமோ, அல்லது அரசாங்கத்திற்குச் சொந்தமானதும் அவர்களால் கட்டுப்படுத்துவதுமான நிறுவனமோ மேற்கொள்ளக்கூடும்.

தொழிலைப் பொறுத்த உரிமையை விரிவாக ஆய்ந்தோய்ந்து பார்ப்பதற்கும் அதன் வரம்பை மதிப்பிடுவதற்கும் கைரானு முனிசிபல் போர்டுக்கும் ரஷித் அகமத்துக்கும் நடந்த வழக்கில், உயர் நீதிமன்றத்திற்கு வாய்ப்புக் கிடைத்தது. கைரானு என்பது உத்தரப் பிரதேசத்திலுள்ள ஒரு நகரம். அங்குள்ள சந்தையொன்றில் ரஷித் அகமத் என்பவர், பழங்கள், காய்கறிகள் ஆகிய பண்டங்களின் மொத்த வியாபாரம் செய்துவந்தார். 1949ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் கைரானு நகராட்சியினர், புதிய பை-லாத் தொகுதியொன்றை அமல் நடத்தத் தொடங்கினர். இந்த பை-லாத் தொகுதி அமலாகிவிடும் என்பதை எதிர்நோக்கி, பழங்கள் மற்றும் காய்கறிகளின் மொத்த வியாபாரத்தை ஏகபோக உரிமையாகக் கழகம் ஏலமிட்டுவிட்டது. ஹபீப் அகமது என்பவருடன் ஒப்பந்தம் செய்துகொண்டு முழு உரிமையையும் அளித்துவிட்டது. இதையடுத்துக் காய்கறிகளின் மொத்த வியாபாரம் நடைபெறுகின்ற இடமென்று சந்தையில் ஒரு பகுதியையும் குறிப்பிட்டுவிட்டது. இதன்பேரில் மனுதாரர் வியாபாரத்தைத் தம் சொந்தக் கடையிலேயே செய்துவருவதற்கு லைசென்சு வழங்கவேண்டுமென்று மனுச் செய்துகொண்டார். கழகம் மனுவைத் தள்ளுபடி செய்தது இம் முடிவு மனுதாரருக்குத் தெரிவிக்கப்பட்டது. அம் முடிவின் வாசகம் வருமாறு :

'1949ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 22ஆம் தேதி, 188ஆம் இலக்கமிட்ட தீர்மானத்தின்படி, ரஷித் அகமது என்பவரின் மனு தள்ளுபடி செய்யப்பட்டது. இவ் விவரமும் இதனுல் அவருக்குத் தெரியப்படுத்தியிருக்கிறது'. எந்தக் காரணத்தை முன்னிட்டு மனு தள்ளுபடி செய்யப்பெற்றதென்பதை இத் தீர்மானம் தெரியப்படுத்தவில்லை. இதையடுத்துக் கழகம் மனுதாரருக்கு நோட்டீஸ் ஒன்றையும்

அனுப்பிவைத்தது. அதற்கிணங்க, சந்தையில் குறிப்பிட்ட இடத்திலாவது, அல்லது பை-லாத் தொகுதி அமலாவதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்புவரை அவர் வியாபாரம் செய்துவந்த இடத்திலாவது மேலும் தொடர்ந்து வியாபாரம் நடத்தலாகாது எனத் தடை விதித்தது. அவர் வியாபாரம் முழுவதும் நின்றுவிட்டது. ஆனால், அவர் பை-லாச் சட்டங்களை மீறிவிட்டதாக மேலும் துன்புறுத்தப்பட்டார். இரண்டாவது பை-லாச் சட்டத்தின் வாசகம் பின்வருமாறு அமைந்திருந்தது; 'கழகத்தின் பூர்வாங்க உத்தரவைப் பெறுவதற்கு முன்பாக, மொத்த வியாபரத்திற்கென்று புதியதொரு சந்தையையோ அல்லது வியாபார ஸ்தலத்தையோ ஏற்படுத்தக்கூடாது. கழகம் குறிப்பிட்டிருக்கின்ற இடம் நீங்கலாகப் பிற இடங்களில் கழகத்தின் உத்தரவின்றி ஒருவரும் காய்கறி, பழம் முதலியவைகளை விற்பனைக்கென்று விளம்பரப்படுத்தக்கூடாது.'

ஒருமுகமான கருத்தைக்கொண்ட நீதிமன்றத்தின் சார்பாக ஜஸ்டிஸ் எஸ். ஆர். தாஸ் கூறியதாவது :

'விதி 19 (1) g மூலமாக இந்தியக் குடிமகன் ஒருவனுக்கு, அவ்விதியின் 6ஆவது பிரிவில் குறிப்பிட்டுள்ள கட்டுப்பாடுகள் நீங்கலாக, விரும்புகின்ற வியாபாரம் அல்லது அலுவலைக் கடைப்பிடிப்பதற்கு உரிமை அளிக்கிறது. இரண்டாவது பை-லாச் சட்டத்தின்கீழ்க் கறிகாய்களின் மொத்த வியாபாரம் நடத்துவதற்கென்று கழகத்தின் அனுமதியின்றிச் சந்தையொன்றை ஒருவரும் ஏற்படுத்தக்கூடாது. பிரதிவாதிக்கு லைசன்சு வழங்கும் அதிகாரம் உண்டு என எந்த பை-லாவும் கூறவில்லை. எனவே, இதன் விளைவு யாதெனில், லைசன்சு வழங்குவதற்கு எவ்வித அதிகாரமும் இல்லாதபோது, இந்த பை-லாவின் ஷரத்துகள் நியாயமற்றவையாகிவிடுகின்றன. மேலும், கழகம் ஹபீப் அகமது என்பவருக்கு ஏகபோக உரிமையை வழங்கிவிட்டது. காய்கறிகளில் மொத்த வியாபாரத்தைக் குறிப்பிட்ட ஒரு சந்தையிலாவது அல்லது கைரானு முனிசிபல் எல்லைக்குள் வேறெங்கிலும் நடத்துவதற்கென்ருவது லைசன்சு வழங்கும் அதிகாரத்தைக் கழகம் இழந்துவிட்டது. இந்த உறுதிப்பாடு, அரசியலமைப்புத் திட்டத்தின் 19ஆவது விதியின் (6)ஆவது பிரிவின்கீழ் வாதியின்மீது என்னென்ன கட்டுப்பாடுகளை விதிக்க முடியுமோ, அவை யாவற்றையும் மீறிய செல்வாக்குடையது... எனவே, வாதியின் ஆதார உரிமைகளுக்குப் பங்கமேற்பட்டிருக்கிறது. எனவே, தமது கஷ்டங்களுக்கு ஈடுசெய்துகொள்வதற்கு அவருக்கு உரிமையுண்டு. இந்தச் சூழ்நிலையில் வாதி கறிகாய், பழங்கள் ஆகியவற்றின் மொத்த வியாபாரியாகவும் கமிஷன் ஏஜன்டாகவும் கைரானு முனிசிபல் எல்லைக்குள் செயலாற்றுவதைப் பிரதிவாதியாகிய கழகம் தடுக்கக்கூடாதென்று கட்டளையிடுவதே நியாயமாகும். எதிர்காலத்தில் அவ்வப்போது வெளியாகும் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டு வாதி

தொழில் செய்யவேண்டும். பிரதிவாதியாகிய முனிசிபல் கழகம், வாதியின்மீது நிறைவேற்ற இருக்கின்ற பிராசிகியூஷனை வாபஸ் பெற வேண்டும். அவ்வாறே நாங்கள் கட்டளையிடுகின்றோம்.'

## குற்றங்களுக்கென்று தண்டிக்கப்படுவதில் பாதுகாப்பு (திட்ட விதி 20)

குற்றவாளி ஒருவனுக்குத் தடையற்ற கொடுமையான தண்டனை வழங்கப்படுவதிலிருந்து திட்ட விதி 20 காப்பாற்றுகிறது. அத்தகைய உறுதிப்பாடுள்ள பாதுகாப்புகள் நான்கு உண்டு: (1) அவன்மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்படும்போது அமலிலுள்ள சட்டமொன்றை அவன் மீறிவிட்டான் என்னும்போது குற்றத்திற்காக அவனைத் தண்டிக்கலாம். (2) அவன் குற்றமிழைத்தபோது அமலிலிருந்த சட்ட அடிப்படையில் அவனுக்கு என்ன தண்டனை வழங்கலாமோ அதைக்காட்டிலும் அதிக தண்டனை விதிக்கக்கூடாது. (3) ஒரு குற்றத்திற்காக ஒரு தடவைக்கு மேற்பட்டு ஒருவனைத் தண்டிப்பதோ, பிராசிகியூஷன் செய்வதோ கூடாது. (4) குற்றம் சாட்டப் பெற்ற ஒருவனை, தனக்கெதிராகச் சாட்சி சொல்வதற்குக் கட்டாயப் படுத்தக்கூடாது. இரு முறை தண்டனையடைவதைத் தடுக்கும் வரை திட்ட விதியில் 'பிராசிகியூஷன் செய்யப்பட்ட' என்னும் சொல்லாட்சி இல்லை. அத்தகைய சொல் தேவை என்பது அரசியல் நிர்ணய சபையில் வற்புறுத்திக் கூறப்பட்டது. 'தண்டனை' என்பது இச் சந்தர்ப்பத்தில் நீதிமன்றம் ஒன்றினால் அளிக்கப்படுவதை மட்டிலுமே குறிப்பதாகிறது. பிற ஆட்சித்துறையினர் வழங்கும் பிற 'தண்டனைகளை'த் தண்டனை என்ற சொல் எக் கருத்தை விளக்குவதற்காகத் திட்டத்தில் கையாளப்பட்டிருக்கிறதோ, அதே பொருளில் ஏற்கமுடியாது. நீதிமன்றம் ஒன்று தண்டனை வழங்கிவிட்டதென்பதால், அதே குற்றத்திற்காகப் பிற துறைகளைச் சார்ந்த அரசாங்க அலுவலர்கள் மேல்நடவடிக்கைகள் எடுப்பதையும் தடுக்க முடியாது. நீதிமன்றம் வழங்கிய தண்டனை நீங்கலாகத் துரைத்தனமொன்று அலுவலருக்கெதிராக ஒழுங்கு நடவடிக்கை எடுக்கலாமென்பதும், அத்தகைய நடவடிக்கையால் அரசியலமைப்புத் திட்ட வாயிலாக உறுதியளிக்கப்பட்டிருக்கும் ஆதார உரிமைக்கு எவ்விதப் பங்கமுமேற்படாது என்பதும் தெளிவாகிறது. கடந்த கால குற்றமொன்றிற்குத் தண்டனையளிப்பதற்காகத் துணைச்சட்டம் ஒன்றைப் பயன்படுத்துவதையும், ஒரே குற்றத்திற்கு இரண்டு முறை தண்டனை வழங்குவதையும் தவிர்ப்பதற்குப் பொதுவில் இவ்விதிகள் துணைசெய்கின்றன என்று கூறலாம். 'மனிதனின் இச்சைக்கு மேலாகச் சட்டமே முதன்மை பெற்றது' என்ற நியதியை வற்புறுத்தி நிலைநிறுத்துவதற்கு உதவுகின்ற இவ்வுறுதிப்பாடுகள் மிகச் சிறப்பு வாய்ந்தவை,

## உயிர், மற்றும் தனி மனிதனின் சுய உரிமைக்குப் பாதுகாப்பு (திட்ட விதி 21)

அரசியலமைப்புத் திட்டத்திலடங்கிய மிகச் சுருக்கமானவைகளில் விதி 21-ம் ஒன்ருகும். அதைக் குறித்து நீண்ட விவாதமும் நுண்ணிய ஆய்வும் அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்றன. 'ஒரு தனி மனிதனின் சொத்தையும் உடைமைகளேயும் சட்ட அடிப்படையிலன்றிப் பிற வழிகளில் பறிக்க இயலாது' என்று இத் திட்ட விதி கூறுகின்றது. தற்போது வழக்கிலிருக்கின்ற விதி, வரைதிட்டத்தில் இடம் பெற்றிருந்த விதியின் மாறுபட்ட வடிவமாகும். வரைதிட்டத்தில் பின்வருமாறு கண்டிருந்தது: 'உரிய சட்ட அடிப்படையிலன்றி, ஒரு மனிதனிடமிருந்தும் அவனது சொத்து சுதந்திரங்களைப் பறிமுதல் செய்யக் கூடாது.' மாறுதலேற்படுவதற்கான இரு காரணங்களைத் திட்டக் கமிட்டி கூறியது. 'சுய உரிமை' என்னும் சொல்லிற்குத் துணையாகத் 'தனியார்' என்ற சொல்லையும் சேர்க்கவேண்டும். அவ்வாறு இல்லையென்ருல் சட்ட வரம்பின் எல்லை மிக விரிந்துவிடும். நாம் முன்னரே விவரித்துள்ள திட்ட விதி 19-ன்கீழுள்ள உரிமையும் இதிலடங்கிவிடக் கூடும். இரண்டாவதாகச் 'சட்ட விதிகளின் அடிப்படையில்' என்ற சொல், ஐயப்பாடுகளை மிகவும் குறைத்துவிடுகின்றது. இதைப் போலவே ஓர் உபவிதி 1946ஆம் ஆண்டு தோன்றிய ஜப்பானிய நாட்டு அரசியலமைப்புத் திட்டத்திலும் இடம்பெற்றிருக்கிறது.

திட்ட விதி 21-ல் காணப்படும் சொற்களில் 'சட்டம்' என்பது முக்கியமானது. இச் சொல் அதிகாரம் பெற்ற சட்டமன்றம் இயற்றிய சட்டத்தைக் குறிப்பதா? அல்லது ஆதார இயற்கைச் சட்டத்தைக் குறிப்பதாக விளங்குகிறதா? திட்டம் செயற்படத் தொடங்கியது முதல் உயர் நீதிமன்றத்திற்கு இது பெரும் பிரச்சினையாக இருந்தது. ஏ. கே. கோபாலனுக்கும் சென்னைத் துரைத்தனத்திற்குமிடையில் நடைபெற்ற வழக்கில் இப் பிரச்சினையைப் பொறுத்துத் தீவிரமான விவாதம் நடைபெற்றது.

திட்ட விதியின் பொருளில் சந்தேகத்திற்கு இடமெதுவும் இல்லையென்று உயர் நீதிபதி கனியா கூறினர் :

"வேறு அரசியலமைப்புத் திட்டங்களை எண்ணிப் பார்க்காமல், 'சட்ட அடிப்படையில் அனுமதி பெற்ற நடவடிக்கை' என்ற வாசகத்தை சாதாரணமாகப் படிப்பவர்களுக்கு, நாட்டின் சட்டத்தால் அனுமதிக்கப் பெற்ற நடவடிக்கை என்ற பொருளே தென்படும். 'சட்டம்' என்ற சொல்லிற்கு இயற்கை நியதி என்று பொருள் கொள்வதால் அநேக குழப்பங்கள் ஏற்படக்கூடும். ஏனெனில், நடவடிக்கைகளைக் குறித்த இயற்கை நியதியின் கருத்துகள் எங்குமே குறிப்பிடப்படவில்லை. எனது கருத்தின்படி, அரசியலமைப்புத் திட்டம் தெளிவற்ற ஓர் அடிப்

படையை வகுக்கின்றதென்பதை ஏற்பதற்கில்லை. 'உரிய சட்ட அடிப் படையில்' என்பதை நீக்கிவிட்டுச் 'சட்ட அடிப்படையில் ஏற்படுத்தப் பட்ட நடவடிக்கை' என்பது அடிப்படையை வலுப்படுத்துகின்றபோது, எனது கருத்து மேலும் உறுதிபெறுகின்றது."

உயர் நீதிபதியின் இக் கருத்தை நீதிமன்றத்தின் நீதிபதிகள் நால்வரும் ஒப்புக்கொண்டனர்.

சட்டமியற்றுகின்ற அதிகாரத்திற்கு வரையறை வகுக்கவில்லை என்றாலும், 21ஆவது விதியில் அடங்கியிருக்கின்ற உரிமையின் சிறப்பு, அதே வழக்கைத் தொடர்ந்து நீதிபதி முகர்ஜி என்பவரால் பின்வரும் வாசகங்களில் கூறப்பட்டுள்ளது :

'ஆதார உரிமைகள் சட்டமன்றத்தின்மீது தடைகளை விதிப் பதோடு நின்றுவிடவில்லை. ஆட்சித்துறையினரின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துகின்றவைகளாகவும் அவை விளங்குகின்றன. ஒரு மனி தனின் உடைமைகளைப் பறிப்பதில், ஆட்சித்துறையினர் நடவடிக்கை மேற்கொள்வதைக் கட்டுப்படுத்திச் சட்டத்திற்குப் புறம்பான அவர் களது தாக்தோன்றிச் செயலைத் தடுப்பதென்பதை, ஆதார உரிமைக் குச் சமமாகவே நாம் ஒப்பிடலாம். வேறு பல நாடுகளின் அரசிய லமைப்புத் திட்டங்களிலும், சுய உரிமையைப் பாதுகாப்பதென்பதில் சற்றேறக்குறையத் திட்ட விதி 21-ல் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். இத்தகைய பிரச்சினைகளிலெல்லாம் நீதிமன்றத்தினர் முடிவு கூறுவதா அல்லது சட்டமன்றத்தினர் முடிவு கூறுவதா என்பது சௌகரியத்தை முன்னிட்டுச் செய்யக்கூடிய விஷயமேயாகும். இந்திய நாட்டுத் திட்டத்தை உருவாக்கியவர்கள் இவ்வதிகாரத்தை வேண்டுமென்றே சட்டமன்றத்தினருக்கு அளித்தனர். ஜப்பானிய நாட்டு அரசியலமைப்புத் திட்ட விதி 31-ஐ ஒரு மேற்கோளாகக் கொண்டு நமது திட்டத்தின் 21ஆவது விதி அமைக்கப்பட்டிருக்கிறது. அதே கொள்கையையே நாமும் பின்பற்றியிருக்கிறோம்.'

சாராம்சத்தைக் கூறுமளவில் : 'அரசியலமைப்புத் திட்ட விதி 21 உயிருக்கும் உடைமைக்கும் உறுதி கூறியிருக்கின்ற அளவில் பாதுகாப்பை அளிக்கிறது. வாழ்க்கை உரிமையையும் சொத்துரிமை யையும் பிரித்தெடுக்க முடியாத உடைமைகளாக அது கொள்ளவில்லை; ஆனால், அவ்வுரிமையின் வரம்பையே எல்லையிட்டுவிடுகிறது. பிரித் தெடுக்கக்கூடிய உரிமை என்பதால் அவைகளைச் சட்ட அடிப்படை யில் பறித்துவிடலாமென்பதும் உள்ளடங்கியிருக்கிறது. இவ்வாறு எல்லை வகுக்கப்பட்டிருக்கும் உரிமையை அரசியலமைப்புத் திட்ட விதி 21, ஆட்சித்துறையினரின் அதிக்கிரமச் செயலிலிருந்தும், சட்டமன்றத் தினரிடமிருந்தும் பாதுகாப்பதாக உறுதியளிக்கிறது. அவைகளைப் பறிப் பது சட்டமன்றத்தினரால் விதிக்கப்பட்டிருக்கும் சட்ட அடிப்

படையிலேயே இயலும் என்று திட்டத்திலேயே கண்டிருக்கிறது. பத்தொன்பதாவது விதியுடன் கூடிய 2-லிருந்து 6 வரையுள்ள பிரிவுகள் குடிமகனின் ஆதார உரிமையின் மீது சில தடைகளை விதிக்கின்றன. 246ஆம் திட்ட விதி, சட்டப் பட்டியலுட்பட உள்ளதில் கண்டிருக்கும் ஆட்சித்துறையினரின் அதிகாரங்களுக்கு, அரசியலமைப்புத் திட்ட விதி 21, மற்றும் 22 ஆகியவை வரம்பை அமைக்கின்றன. அரசியலமைப்புத் திட்டத்தின்கீழ், 19ஆவது விதியில் கண்டுள்ளபடி ஒரு குடிமகனின் வாழ்க்கை உரிமையும் சுய உரிமையும் சமனப்படுத்தப்படுகின்றன. திட்ட விதிகள் 21, 22 ஆகிய அரசாங்க அதிகாரங்களுக்குத் தடை விதிக்கின்றன.

## கைதுசெய்வது, விசாரணையின்றிச் சிறையில் வைத்திருப்பது ஆகியவைகளுக்கு எதிராகப் பாதுகாப்பு (திட்ட விதி 22)

மூன்று உரிமைகளைத் திட்ட விதி 22 அளிக்கிறது. முதலாவதாக, கைதுசெய்யப்படும் ஒவ்வொருவனுக்கும் எக் காரணம்பற்றி அவன் கைதுசெய்யப்படுகிறான் என்பதை அறிவிக்கவேண்டும். இரண்டாவதாக, தன்னிச்சைப்படி வக்கீலைத் தேர்ந்தெடுத்து அவருடன் கலந்தாலோசித்துத் தனக்காக வாதாடுவதற்கு அமர்த்தும் உரிமை. மூன்றாவதாக, கைதுசெய்யப்பட்டு விசாரணையின்றிக் காவலில் வைக்கப்பட்டிருக்கும் ஒவ்வொருவனையும், இருபத்துநான்கு மணி நேரத்திற்குள்ளாக அண்மையிலுள்ள மாஜிஸ்டிரேட்டிடம் ஆஜர் செய்ய வேண்டும். அவரது அனுமதி பெற்றபின்னரே தொடர்ந்து அவனைச் சிறையிலடைக்கலாம். இவ்வுரிமைகள் யாவற்றிற்கும் துணையாகத் தடைகள் எதுவும் கூறப்படவில்லை. எனவே, அவைகளைத் தடையற்றவைகள் என்றே கருதவேண்டும்.

திட்ட விதி 22-ன் முதலிரண்டு பிரிவுகள் உறுதியளிக்கின்ற உரிமைகளுக்குப் பொதுவாக வழங்குவதனின்றும் இரு விதி விலக்குகள் உண்டு. அவைகள் :

(1) அந்நிய நாட்டு விரோதியொருவன், அல்லது

(2) சட்டத்திற்கிணங்கக் கைதுசெய்யப்பட்டு அல்லது காவலில் வைக்கப்பட்டுப் பாதுகாப்புச் சட்டக் காவல் தண்டனையை எதிர்நோக்கியிருப்பவன்.

இதில் முதல் விலக்கை, அது மிகவும் நியாயமான ஒரு விஷயம் என்பதால், அரசியல் நிர்ணய சபை எவ்வித ஆட்சேபணையுமின்றி ஏற்றுக்கொண்டது. உதாரணமாக, இந்தியா மற்றுமொரு நாட்டுடன் போரிட்டுவரும்போது தேசியப் பாதுகாப்பிற்கென்று, அந்நிய நாட்டுக் குடிமகன் ஒருவனைச் சிறைப்பிடித்துக் காவலில் வைக்க வேண்டியு

அவசியமேற்படலாம். அவனுக்குத் திட்ட விதிகள் 22 (1), மற்றும் (2) பிரிவுகளில் கண்டுள்ள உரிமைகள் மறுக்கப்படவும் கூடும். இரண்டாவது விதிவிலக்கிற்கு அத்தகைய போதிய காரணம் கிடைக்கவில்லை. சாதாரணக் காலங்களிலும் காவலில் வைக்கலாமென்று அவ்விதி அனுமதி வழங்குகிறது. எனவே, இதைப்பற்றி அரசியல் நிர்ணய சபையில் விவாதம் நடைபெற்றபோது வெறுப்புக் கனலும் புயலும் வீசின.

அத்தகையதொரு ஷரத்தை இடம்பெறச் செய்தமைக்குரிய காரணத்தை அம்பேத்கர் பின்வருமாறு எடுத்துரைத்தார். அவர் கூறிய விளக்கம் வருமாறு :

'நாட்டின் அமைதிக்குப் பங்கம் விளைவிப்பவனையும் அல்லது பாதுகாப்பு ஏற்பாடுகளுக்குத் தடையாக நிற்பவனையும் நாட்டிலுள்ள தற்போதைய நிலைமையைக் கருதி ஆட்சித்துறையினர் கைதுசெய்து காவலில் வைக்கவேண்டிய நிலை ஏற்படலாம். அத்தகைய சூழ்நிலையில், தனி மனிதனின் சுய உரிமைகளை நாட்டு நலனுக்கும் மேலாக வைத்து எண்ணவேண்டுவதில்லை என நான் கருதுகிறேன்'.

நிர்ணய சபையில் இப் பிரிவை மிகவும் கடுமையாக எதிர்த்தவர்களை அம்பேத்கரின் விளக்கம் திருப்தி செய்யத் தவறிவிட்டது.

விவாதத்திற்குப் பதிலளிக்கையில், அரசியலமைப்புத் திட்டத்தில் கண்டுள்ள தனிப் பாதுகாப்புகளை அம்பேத்கர் சுட்டிக்காட்டினார். நாட்டு நலன் கருதிக் காவலில் வைக்கப்படுபவனின் உரிமைகளைப் பாதுகாப்பதற்கும் சில பாதுகாப்புகள் அளிக்கப்பட்டிருந்தன. அவர் கூறியதாவது :

'நமது குறிக்கோளை அடைவதற்கு நாமெல்லோரும் அரசியல் முறைகளைக் கடைப்பிடிப்போமெனில், நிலைமை வேறு விதமாக இருக்கக்கூடும்; காவல் கைதியாக ஒருவனை வைத்திருக்க வேண்டிய அவசியமே இல்லாதிருந்திருக்கவும் கூடும். ஆனால், ஒரு சட்டமியற்றும் போது மிகக் கீழ்தரமானதையே நாம் கொள்ள வேண்டுமேயன்றி மிக உயர்ந்ததை அடிப்படையாகக் கொள்ளக்கூடாது. பல கட்சிகளும் மனிதர்களும் அரசியலமைப்புத் திட்ட விதிகளைப் பின்பற்றும் விருப்பமற்றவர்களாக இருக்கலாம். ஆனால், குறிக்கோளை அடைவதில் மிகுந்த ஆத்திரமுடையவர்களாக இருக்கின்றனர். அதனால் அவர்கள் அரசியலாளரின் ஒப்புப் பெறாத வழிகளைக் கடைப்பிடிப்பரேயெனில், ஏராளமான மக்களைச் சிறைப்பிடித்து, ஆட்சித்துறையினர் காவலில் வைக்கவேண்டியிருக்கும். அத்தகையதொரு சூழ்நிலையில் ஆட்சித்துறையினருக்கு ஏராளமான மக்கள்மீது வழக்குகளைத்

தயாரித்து விதித்திருக்கின்ற சட்ட விதிகளையெல்லாம் திருப்தி செய்வது சாத்தியமாகுமா? இதை நடைமுறையில் பின்பற்ற இயலுமா?'

திட்ட விதி 22 (3)ன்கீழ்க் கைது செய்து காவலில் வைக்கலாமென்ற முழு அதிகாரத்தின் வேகத்தைக் குறைப்பதற்கென்று, அரசியல் திட்டத்தில் பல பாதுகாப்புகள் உள்ளன என்பதை அம்பேத்கர் எடுத்துக் காட்டியுள்ளார். முதலில், கைதுசெய்து காவலில் வைப்பது சட்ட அனுமதியில் நடைபெற வேண்டும்; ஆட்சித்துறையினரின் மனப் போக்கின்படி நடைபெறக் கூடாது. இரண்டாவதாக, காவலில் வைப்பதென்ற சட்டத்தின்கீழ், ஒருவனை மூன்று மாதங்களுக்கு மேலாகச் சிறையில் வைத்திருக்கக்கூடாது. மூன்ருவதாக, காவலில் வைப்பதென்ற ஒவ்வொரு வழக்கிலும், காவல் காலம் மூன்று மாதங்களுக்கு மேலாக நீடிக்குமெனில், ஆலோசனைக் குழுவொன்றின் பரிசிலனைக்கு அனுப்பப்படவேண்டும். உயர்நீதிமன்ற நீதிபதிகளாக நியமனம் பெறுவதற்கு அருகதையுள்ளவர்களே அவ்வாலோசனைக் குழுவில் இடம் பெறக்கூடும். இவ் வழக்குகள் மூன்று மாத கால வரையறைக்குள்ளாகக் குழுவினரின் பரிசிலனைக்கு அனுப்பப்பட வேண்டும். மூன்று மாதங்களுக்கு மேலாக, இவ்வாறு தொடர்ச்சியாகக் காவலில் வைத்திருப்பதற்குக் கழகத்தாரின் அனுகூலமான அனுமதி வேண்டும். ஆனால், பாராளுமன்றம் சூழ்நிலையை எண்ணி ஒரு சட்டமியற்றியிருந்தால், அச்சட்டத்தின்கீழ் ஒருவனைக் கழகத்தின் அனுமதியின்றியே மூன்று மாதங்களுக்கும் மேலாகச் சிறையில் வைத்திருக்கலாம். நான்காவதாக, பாதுகாப்புச் சட்டத்தின்கீழ்க் காவலில் வைக்கப் பட்டிருப்பவனைக் காலவரையறையின்றிச் சிறைப்படுத்த முடியாது. அவ்வாறு சிறையிடுவதற்கான உயர்ந்தபட்ச காலவரையறையைச் சட்ட மூலமாகப் பாராளுமன்றம் உறுதிப்படுத்தவேண்டும். ஐந்தாவதாக, ஆலோசனைக் குழுவினரின்முன் கொண்டுவரப்படும் வழக்குகளுக்கும் கழகத்தினரால் பின்பற்றப்படவேண்டிய முறைகளைப் பாராளுமன்றத்தினரே தீர்மானிக்கவேண்டும். ஆருவதாக, பாதுகாப்புச் சட்டப்படி குடிமகனொருவன் சிறையிடப்பட்டிருந்தால், சிறை பிடிக்கும் அதிகாரி, கைதிக்கு அவன் சிறைப்பட்டிருக்கும் காரணத்தை எடுத்துரைக்க வேண்டும். ஏழாவதாக, அவ்வுத்தரவுக்கு எதிராக அவன் முறையிட்டுக்கொள்வதற்குக் கூடிய விரைவில் அவனுக்கு அவகாசம் அளிக்க வேண்டும்.

பாதுகாப்பிற்கென்று சிறையிடுவது சட்டத்தின் பெயராலேயே நடைபெறுகிறதென்பதே மிகச் சிறந்த பாதுகாப்பாக விளங்குகிறது. ஆட்சித் துறையினரின் இச்சைப்படி அதை நடத்த இயலாது. வழக்குகளை வகைப்படுத்துவதும் தேவையென்றே தெரியவருகிறது. சில சந்தர்ப்பங்களில் மிகவும் கடுமையான விளைவுகளையுடைய குற்றங்களுக்காகச் சிறைப்பிடிக்கப்பட்டிருக்கலாம். அப்போது சிறைப்பட்

டிருக்கும் ஒருவன் ஏன் சிறைப்பிடிக்கப்பட்டிருக்கிருன் என்பதைக் கழகத்தினருக்குத் தெரிவிப்பதும் ஆபத்தாகவிருக்கலாம். அத்தகைய காரணங்களை வெளியிட்டால், நாட்டின் பாதுகாப்பிற்கும் தேசிய நலனுக்கும் கேடு விளையவும்கூடும். இங்கும் சமனமூட்டும் சக்திகள் இரண்டிருக்கின்றன. முதலாவதாக, அவ்வழக்குகளைப்பற்றிப் பாராளு மன்றம் விளக்கிவிடும். அவைகளைத் தம்மிச்சைப்படி ஆட்சிக் குழுவினர் தீர்மானிக்க இயலாது. இரண்டாவதாக, ஒவ்வொரு வழக் கிலும் அதிகபட்சமாகச் சிறையிலிடக்கூடிய நாள்கள் சட்டமூலமாகக் குறிப்பிடப்படும்.

பாதுகாப்பிற்காகச் சிறையிடுவது என்ற சட்டம் முதலாவதாக 1950ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தினரால் வெளியிடப்பெற்றது. நடைமுறையில், இச் சட்டம் பயன்படுத்துகின்ற ஆற்றலை, உயர் நீதி மன்றததிற்கு முன்பாக கோபாலனுக்கும் சென்னை அரசாங்கத்திற்கு மிடையில் நடைபெற்ற வழக்கில் சோதனையிடும் வாய்ப்புக் கிடைத்தது. நீதிமன்றத்தின் ஆறு நீதிபதிகள் இவ் வழக்கில் தீர்ப்பு வழங்குவதற் கென்று அமர்ந்தனர். நீதிபதி ஒவ்வொருவரும் தனியான குறிப்புகள் எழுதினர். தனி மனிதனின் சுதந்திரத்தைக்குறித்து நன்கு விரிவாக ஆராய்ந்த பின்னர், திட்ட அடிப்படையிலளிக்கப்பெற்ற ஆதார உரிமைகளின் வரம்பையும் நீதிபதிகள் ஒவ்வொருவரும் ஆராய்ந்தனர். 4 : 2 என்ற விகிதப் பெரும்பான்மை ஓட்டினுல் சட்டத்தை நீதிமன்றம் ஏற்றது. சட்டத்தின் 14ஆவது பிரிவுமட்டிலும், யாவராலும் செல்லத் தகாததென்று கூறப்பட்டது. இப் பிரிவு செல்லத்தகாததென்பதால் அரசியலமைப்பு விதியின் பிற பகுதிகளும் பயனற்றதென எண்ணு வதற்கில்லை. செல்லத்தகாத இப் பிரிவு மட்டிலும் பிற பிரிவு களிலிருந்து வேருகத் துண்டிக்கப்பெற்றது.

பாதுகாப்புச் சிறைச் சட்டம் இதுவரை ஐந்து முறைகள் திருத்தி யமைக்கப்பட்டிருக்கின்றன. வெகு அண்மையில் ஏற்கப்பட்ட (1960) திருத்தத்தின்படி, 1963ஆம் ஆண்டுவரையில் அது அமலிலிருக்கும். அதன் காலவரையறையை நீட்டிக்கவேண்டுமென்று அரசினர் கோரிய தும், பாராளுமன்றத்தில் ஏராளமான எதிர்ப்புகள் எழுந்தன. சட்டத் திற்கு மேலும் சில ஆண்டுகள் உயிர் கொடுக்கவேண்டுமென்பதை எதிர்த்துப் பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர்கள், இத் திட்ட விதி நியாய மான அரசியல் எதிர்ப்பையும் தடுப்பதற்கென்றே இயற்றப்பட்டிருக் கின்றதென்று கடுமையாகக் குற்றஞ்சாட்டினர். ஆனுல், இக் குற்றச் சாட்டை வலுப்படுத்துவதற்கான காரணங்களும் புள்ளிவிவரங்களும் இல்லை. உதாரணமாக, பம்பாயில் காவலில் வைக்கப்பட்டுள்ள 49 பெயர்களில், 3 கம்யூனிஸ்டுகளும் 6 பிரஜா சோஷலிஸ்டுகளுமே இருக்கின்றனர் எனச் சுட்டிக்காட்டப்பெற்றது. நாம் முன்னரே கூறியவாறு தாந்தோன்றி நடத்தையின்மீது தேவையான கட்டுப்

யாடுகள் விதிக்கப்பெற்றிருந்தன. விவாதத்தின்போது கூறப்பட்ட புள்ளிவிவரங்களிலிருந்து, காவல் கைதிகளுக்கு மிகவும் உதவுகின்ற நிறுவனமான ஆலோசனைக் குழு பணிபாற்றியிருக்கின்றதென்பது வெளியாயிற்று. இக் குழுக்கள் செய்த முடிவினால் அவர்களில் 60 சதவிகிதத்தினர் விடுதலை பெற்றிருக்கின்றனர். உள்நாட்டு மந்திரி கூறியதுபோல, 1950ஆம் ஆண்டில் தோராயமாக 11,000 நபர்கள் கைது செய்யப்பட்டனர். ஆனால், 1957ஆம் ஆண்டு செப்டம்பர் மாத இறுதியில் 205 நபர்களே பாதுகாப்புக்கைதிகளாக இருந்தனர். அவர்களில் நூற்றுக்குமதிகமானவர் பஞ்சாபைச் சேர்ந்தவர்கள். பாதுகாப்புச் சட்டத்தின்கீழ்க் காவலில் வைக்கப்பட்டிருந்தவர்களின் எண்ணிக்கை ஒரு காலத்தில் இந்தியா முழுவதும் பன்னிரண்டிற்கும் குறைவாகவே இருந்தது.

பதினான்கு ஆண்டுகளாகச் சுதந்திர இந்தியாவின் வாழ்வில், பொதுவாக இந்திய மக்களின் சுதந்திரம் மிக நன்றாகப் பாதுகாக்கப் பட்டு, மக்களால் அனுபவிக்கப்பட்டு வந்திருக்கிறதெனக் கூற வேண்டும். ஜனநாயக உரிமைகளையும் அமைதியான வாழ்வையும் பற்றி அதிக நினைவில்லாத பல தீய சக்திகள், நேரடியாகவும் மறைமுகமாகவும் ஜனநாயக சுதந்திரத்தைத் தாக்கிவருகின்றன. இந்திய நாட்டில் அது இன்னும் குழந்தைப் பருவத்தில், இச் சக்திகளின் தீய தாக்குதல்களிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள இயலாத ஒரு பச்சிளங்கொடியாகவே இருந்துவருகிறது. மிக அதிகமான தியாகத்தின் பெயரில் பெற்ற நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு மிகக் கவனம் இன்றும் தேவைப்படுகிறது. சுதந்திரமும் தேசிய ஒற்றுமையும் மறைமுகமான தீய சக்திகளிலிருந்தும், பலமான புரட்சிகளிலிருந்தும் காப்பாற்றப்பட வேண்டியவைகளாகும். பல கட்சிகளும் குடிமக்கள் குழாங்களும் தங்கள் இலட்சியங்களை நிறைவேற்றிக்கொள்வதற்குச் சட்டபூர்வமான நடவடிக்கைகளை மேற்கொள்ளும் வழக்கத்தைக் கடைப்பிடித்தாலன்றி, பாதுகாப்புக் காவல் சட்டம்போன்ற சட்டங்கள் இந்திய நாட்டிற்கு நிரந்தரமாகத் தேவைப்படக்கூடும். அவைகளைச் சட்ட ஏடுகளில் பதியவைத்திருப்பதற்கான காரணங்கள் எத்துணை நியாயமுள்ளவைகளாக விளங்கியபோதும், இவை இந்திய நாட்டுச் சுதந்திரத்தின் புனிதத் தன்மையை மாசுபடுத்துகின்ற கரும்புள்ளிகளாகவே விளங்கிவரும் என்பதில் ஐயமில்லை.

# 10. சுரண்டலுக்கெதிரான பாதுகாப்பு உரிமை

## (திட்ட விதி 23, 24)

சுரண்டலுக்கெதிரான பாதுகாப்பு உரிமைகளைத் திட்ட விதிகள் 23, 24 ஆகியவை அளிக்கின்றன. மனித வர்க்கங்களைப் பரிமாறிக் கொள்வதையும், 'பிகார்' போன்ற கட்டாயச் சேவைகள் பெறுவதையும் திட்ட விதி 23 தடுக்க முயலுகிறது. கட்டாய சேவையையும் அடிமைத் தளையையும் நீக்கிய அமெரிக்க அரசியலமைப்புத் திட்டத்தின் 13ஆவது திருத்தத்திற்கு இதை ஒப்பிடலாகும். அரசியலமைப்புத் திட்டத்தை ஏற்கும்போது, இந்திய நாட்டில் எப் பகுதியிலும் அடிமைகளை அமர்த்திக் கொள்ளும் வழக்கமோ அல்லது கட்டாய சேவை பெறும் வழக்கமோ இல்லை. இந்த நூற்றுண்டின் இருபதாவது ஆண்டுகளில் தொடங்கிய இந்தியச் சுதந்திர இயக்கம் அத்தகைய பழக்கங்களுக்கு முற்றுப்புள்ளி யிட்டுவிட்டது. இருந்தபோதிலும், நாட்டின் பல பகுதிகளிலும் 'தீண்டத்தகாதவர்' என்னும் சாதியினரை உயர்சாதியினரும் பணக் காரரும் பல வகைகளில் சுரண்டிவந்தனர். உதாரணமாக, மேற்கிந்தியா விலுள்ள ராஜஸ்தானப் பகுதியில், சுதந்திரம் பெறுவதற்கு முந்திய நாள்களில், சுதேச சமஸ்தானங்கள் நிறைந்திருந்தன. அப் பகுதியில், பிரபு ஒருவரது நிலத்தில் பயிரிட்டுவரும் அடிமை, அப் பிரபுவின் உத்தரவின்றி வேறெருவரிடம் வேலைக்கமருவது கூடாது என்ற பழக்கமிருந்துவந்தது. இத் தடை அநேகமாக மிகத் தீவிரமாகக் கடைப் பிடிக்கப்பட்டுவந்து, அடிமை தன் யஜமானனையே முழுவதும் நம்பி வாழ்ந்திருந்தான். உண்மையில் அவன் வாழ்வு ஓர் 'அடிமையின்' வாழ்வாகவே இருந்தது. நடைமுறையிலிருந்த தல வழக்காறுகளும் அத்தகைய சூழ்நிலைக்கு உதவியாக இருந்தன.

'தேவதாசிகள் முறை' மேற்கு, தென்-இந்தியப் பகுதிகளில் வழக்கிலிருந்துவந்தது. சமயத்தின் பெயரால் இந்து சமயக் கடவுளர், விக்கிரகங்கள், வழிபாட்டுப் பொருள்கள், கோவில்கள், பிற சமய நிறுவனங்கள் ஆகியவைகளுக்கு சேவை செய்வதன் பொருட்டுப் பெண்களை அர்ப்பணித்துவிடுவது வழக்கம். அவ்வாறு அர்ப்பணிக்கப்

படுகின்ற பெண்கள் துறவறம் பூண்டு பணிசெய்து, தூய அறவாழ்க்கையை மேற்கொள்ளவேண்டும். ஆனால், நடைமுறையில் அவர்கள் ஆசைக்கும் ஒழுங்கின்மைக்கும் அடிமைகளாகிவிட்டனர். அத்தகைய தீய ஒழுக்கங்கள், வழக்காறுகளின சாயல்கள், நாட்டின் பல பகுதிகளிலும் இன்றும் வழக்கிலிருக்கின்றன. திட்ட வாயிலாக, இத் தீய பழக்கங்களை அகற்றிவிடவேண்டுமென்று தயாரிப்பாளர்கள் முடிவு கட்டினர். சுதந்திரமடைந்தபின் உருவாகின்ற அரசியல், சமுதாய நிறுவனங்களில் இத் தீய வழக்கங்களுக்கு இடமே இல்லை. 'ஒரு குடிமகனுக்கு ஓர் ஓட்டு, யாவற்றுக்கும் ஒரே மதிப்பு ; சட்டத்தின்கண் சம நோக்கு, சட்டத்தினடிப்படையில் ஒரே வகையான பாதுகாப்பு; தொழிலைத் தேர்ந்துகொள்வதற்குச் சுதந்திரம், நாடு முழுவதும் தடையின்றிப் பிரயாணம் செய்யும் உரிமை'—ஆகிய இவை யாவும் ஒரு 'மனிதன்' மற்றொரு 'மனிதனுக்கு' அடிமையாக இருந்தாலும், ஒருவனது உயிர் மற்றொருவனது கையிலிருந்தாலும் பொருளற்றவைகளாகிவிடுகின்றன.

'தீண்டாமை' என்பது எவ்வாறு குற்றமெனக் கருதப்படுகிறதோ, அதைப்போலவே, எவ்வகையிலிருந்தாலும் கட்டாய சேவையும் குற்றமெனக் கருதப்படுகிறது. தனியாரிடமிருந்தும், தனியார் நிறுவனங்களிலிருந்துமே இத்தகைய பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. அரசாங்கத்தின் சார்பில் மட்டிலும் இதற்கு விதி விலக்களிக்கப்படுகிறது. பொதுநலனைப் பேணிக் கட்டாய சேவை பெறுவதற்கு அரசினருக்கு அதிகாரமுண்டு. கட்டாய ராணுவ சேவையையும், தேச முன்னேற்றத் திற்கெனத் திட்டமிட்டுப் பெறுகின்ற கட்டாய சேவையையும் இதற்கு உதாரணங்களாகக் கூறலாம். ஒரு சர்வகலாசாலையின் பட்டதாரி ஒவ்வொருவனும், சர்வகலாசாலையை விட்டு வெளியேறுகின்றபோது, குறைந்த அளவில் ஆறு மாத காலமாகக் கல்வியறிவு புகட்டுவதிலும் பிற சமுதாய நல வேலைகளிலும் கிராமங்களில் சென்று ஈடுபடவேண்டுமென அரசினர் சட்டமியற்றவும்கூடும். அத்தன்மையானதொரு சட்டம், சமயம், இனம், சாதி என்ற முறையில் அவர்களைப் பாகுப்பாடு செய்யக்கூடாது.

பச்சிளம் பாலகரை வேலைகளிலீடுப்படுத்துவதில் தடை; ஓர் ஆலை அல்லது சுரங்கம், அல்லது வேறெந்த வகையான கடினமான வேலையிலும் பதினான்கு வயதிற்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளை ஈடுபடுத்தக் கூடாது. நெறிசெய் நியதிகளுடன் இவ் விதி மிகவும் நெருங்கிய தொடர்புடையது. பதினான்கு வயதுவரையுள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் கட்டாயக் கல்வி இலவசமாக அளிக்கப்படவேண்டுமென்று நெறிசெய் நியதி கூறுகின்றது. எதிர்காலத்தில் பொறுப்பு மிக்க நற்குடி மக்களாகக் குழந்தைகள் வளரவேண்டுமென்பதே இத் திட்டத்தின் குறிக்கோளாக இருக்கிறது. குழந்தைகளை வேலையிலமர்த்துவது

மனிதப் பண்பாட்டிற்குப் புறம்பான, நாகரிகமற்ற செயலாகும். அதுவும் சமுதாயச் சுரண்டல் வகைகளில் ஒன்றேயாகும். அது அவர்களது வளர்ச்சியைத் தடுக்கிறது; ஒழுக்கமின்மையை வளர்த்துக் குற்றமான தொழில்களில் ஈடுபடச் செய்கிறது. எனவே, அதற்குத் தடைவிதித்து வேலைகளில் ஈடுபடாதவாறு அவர்களைத் திருத்துவதற்குக் கவர்ச்சிமிக்க வேறு பல வழிகளைக் கையாளவேண்டும்.

சுரண்டலுக்கு எதிராகப் பல சட்டங்களை விதித்து அமல் நடத்தி வந்தபோதிலும், நாட்டின் பல பாகங்களில் இன்றும் இத்தகைய சுரண்டல்கள் இருந்துவருகின்றன. அவை யாவும் இந்த உரிமையின் வரம்பெல்லைக்குட்படவையாகும். இதுகாறும் இத் துறையில் அரசினர் மேற்கொண்ட முயற்சிகள் மிகச் சமாதான மனப்பாங்குடையவைகளாக இருக்கின்றன. மேலும், உறுதியான நடவடிக்கைகள் மிகத் தேவை. இந்த உரிமைகளைப் பொறுத்த சட்டங்களை அமல் நடத்துகின்ற அதிகாரிகளும் சற்று மெத்தனமாகவே நடந்துகொள்கின்றனர். உதாரணமாக, விபசார விடுதிகளை மூடிவிடுவது என்ற முயற்சி முற்றிலும் வெற்றிபெறப்போவதில்லை என்ற எண்ணமுடையவர்களாக அவர்களிருப்பதை மேற்கோளாகக் கூறலாம். பிகார், மற்றும் ஒழுங்கற்ற நடவடிக்கைகள் உதாசீனத்தாலும் வறுமையாலும் விளைகின்றவை என்ற உண்மையைச் சமுதாயம் மிக நன்ருக உணர்ந்திருக்கவேண்டும். மத்திய சமுதாய நல போர்டார் அமர்த்திய கமிட்டி ஒழுங்கீனத்தின் காரணங்களை ஆராய்வதில் ஈடுபட்டு, மாதர், அதிலும் குறிப்பாகப் பெண்களைச் சுரண்டுவது விபசாரத்துடன் நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதால், மற்ருென்றை ஒழிப்பதற்கு முயற்சி மேற்கொள்ளாமல் சுரண்டலை மட்டும் ஒழித்துவிடுவதற்கு முயற்சி மேற்கொள்வது பயன்தராது என அறிக்கை விடுத்திருக்கின்றது. தேசிய முன்னேற்றம், முழு வேலைவாய்ப்புகள், பொருளாதார முன்னேற்றம், சமுதாய நீதி, மற்றும் மக்களின் பல வகுப்பினரின் பொருளாதார முன்னேற்றம் —ஆகிய இவைகளை அடிப்படையாகக்கொண்டே சுரண்டல் என்ற பிரச்சினைக்கு முடிவுகாணவேண்டும். இருந்தபோதும், தடுப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்வதால் நடைமுறையிலிருந்துவரும் பழக்க வழக்கங்களை ஒரு வகையில் கட்டுப்படுத்தலாகும். இம் முயற்சியில் வெற்றி காண்பதற்கு அரசினர் மேலும் கடுமையான விதிகளைக் கையாளவேண்டும்.

# 11. சமயத்தைப் பின்பற்றுவதற்குத் தடையற்ற சுதந்திரம்

## (திட்ட விதி 25—28)

உலகிலுள்ள சமயக் கோட்பாடுகள் யாவும் மனிதர்கள் சகோதரர் களாக வாழவேண்டுமென்ற கொள்கையடிப்படையில் எழுந்தும், அதற் கெனப் பாடுபட்டுவரும்போதும் அதன் பெயரால் மனித வரலாற் றில் பல போர்கள் நிகழ்ந்திருப்பதை நாம் அறிவோம். இவ்வகையில், அதிலும் குறிப்பாகச் சென்ற ஆயிரம் ஆண்டுகளாக இந்திய நாடு மிகவும் துரதிருஷ்டம் வாய்ந்தது என்று கூறவேண்டும். இத்தகைய சூழ்நிலையைத் தங்கள் சுயநலனுக்காகப் பயன்படுத்தித் தங்களாட்சியை மேலும் நீட்டிக்கச் செய்வதற்கு பிரிட்டிஷார் பின்வாங்கவில்லை. சமயம் நாட்டின் ஒற்றுமையை எவ்வாறு சீர்குலைத்ததென்பதையும், சமயத்தின் பெயரால் நாடு எவ்வாறு துண்டாடப்பெற்றதென்பதையும் நாம் சற்று முன் மேற்கொண்ட ஆய்வில் விளக்கிக் கூறினோம். சமயத்தின் பெயரால் சுதந்திர இந்தியாவிலிருந்து வருகின்ற சிறுபான்மையினரின் பிரச்சினை தீர்க்கப்படாமல் இன்றும் இருந்துவருகிறது. பாகிஸ்தான் உருவாகிவிட்டபோதிலும், நானூறு மில்லியனுக்குமதிகமான முஸ்லீம் கள் நாட்டில் ஆங்காங்கே சிதறிக் கிடந்தனர். உபரியாகப் பத்து மில்லியன் கிறிஸ்துவர்களும், ஐந்து மில்லியன் சீக்கியரும், ஏராளமான பார்சிகளும், சமணரும், புத்தரும், யூதரும் இருந்துவருகின்றனர். மக்கள் தொகையில் 85 சத விகிதத்தினரான இந்துக்கள் பெரும் பான்மையராக விளங்கினர். பிரதிநிதிகளடங்கிய நிறுவனமொன்றில் பேராட்களாக அமரும் வாய்ப்புகள் இவர்களுக்குக் கிடைத்துவிட்டால், அவர்கள் யாவரும் ஒன்றுசேர்வார்களேயெனின், அவர்கள் எண்ணிய சட்டங்களை நிறைவேற்ற இயலும் என்பதுடன், அரசாங்கம் என்ற இயந்திரத்தையும் அதன் செயற்படு துறைகள் பலவற்றிலும் கட்டுப் படுத்தவும் இயலும். இத்தகைய எண்ணம் பெரும்பான்மையினருக்கு ஒருசிறிது தோன்றுமேயெனில், சமயச் சிறுபான்மையினர் நம்பிக்கை இழந்திருப்பர். இந்திய நாட்டில் ஜனநாயகம் என்பது பெயரளவிலே

இயங்குகின்ற பொருளற்ற கொள்கையாகவும், சதைப்பற்றில்லாத எலும்புக்கூடாகவுமே இருந்திருக்கக்கூடும்.

அத்தகைய நிலை ஏற்பட்டுவிடாமல் தடுப்பதற்கென்றே, ஆதார உரிமைகளைத் திட்டத்திலிணைத்து உறுதிப்படுத்துகின்ற உபாயம் கையாளப்பட்டது. பேச்சுரிமை, கருத்தைப் பிரகடனப்படுத்துகின்ற உரிமை, சங்கங்கள் கூட்டுகின்ற உரிமை, தொழிற்சங்கங்கள் அமைக்கின்ற உரிமை ஆகிய யாவும், சமயத்துறையில் பிரசாரம் செய்யும் உரிமை, கருத்துக்களை எடுத்தியம்பும் உரிமை, சமயச் சார்புள்ள சங்கங்கள், செயற்குழுக்கள் ஆகியவற்றை அமைக்கின்ற உரிமை இவை யாவையும் உள்ளடக்கியிருக்கின்றன. சமயச்சார்புள்ள சிறுபான்மையினருக்கு முழு நம்பிக்கையூட்டுகின்ற முயற்சியில் ஈடுபட்ட அரசியல் நிர்ணய சபையினருக்கு இத்தகைய ஏற்பாடுகளால் மட்டிலும் திருப்தியேற்படவில்லை. அவர் மேலும் ஓர் அடியெடுத்து வைத்து, சமயத்தைப் பின்பற்றுகின்ற உரிமைகளை மட்டிலும் எடுத்துரைத்து, தனியான திட்ட விதிகள் சிலவற்றை ஏற்படுத்தினர். திட்ட விதிகள் 25, 26, 27, 28 ஆகியவைகளில் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்ற உரிமைகள், சமயச் சார்புள்ள சிறுபான்மையினருக்கு முற்றிலும் திருப்தியளிக்கின்ற வகையில் தயாரிப்பாளர்களால் கவனத்துடன் தயாரிக்கப் பெற்றவைகளாகும். அரசியல் நிர்ணய சபையினர் கூட்டிய சிறுபான்மையினர்—கமிட்டியினர் ஆய்ந்து ஒப்புக் கொடுத்த ஒருமுகமான முடிவுகளையே திட்டத்தில் தயாரிப்பாளர்கள் இணைத்துள்ளனர். அத்தகைய ஒருமுகமான முடிவுகள் மெஜாரிட்டி கட்சியினருடன் கூடி வாழ இயலும் என்ற இனிமையான சூழ்நிலையை உருவாக்கித்தருகின்றன. மேலும், திட்ட முகப்பில் காணப்படுகின்ற 'குடிமக்கள் யாவருக்கும் சுய உரிமையையும், நம்பிக்கையையும், நட்பையும், வழிபாட்டுரிமையையும் பெற்றுத்தருவதற்கு, என்ற குறிக்கோள்', இவ்வேற்பாடுகளின் அடிப்படையிலேயே எழுந்தது என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும்.

## சமயச்சார்பற்ற அரசாங்கமும் சமயத்தைப் பின்பற்றும் உரிமையும்

அரசியலமைப்புத் திட்டம் சமயச்சார்பற்ற ஓர் அரசை ஏற்படுத்த விரும்புவதாகக் கூறப்படுகிறது. இது உண்மையாயின், திட்ட விதிகள் கூறுகின்ற சமய உரிமைகள் அடிப்படை நோக்கத்திற்கே முரணாக விளங்குகின்றனவென, அசெம்பிளியில் பலத்த விவாதங்கள் நடைபெற்றன. எனவே, இந்த ஏற்பாடுகளை வரைதிட்டக் கமிட்டி அங்கத்தினர்கள் உட்படப் பலர் மிகப்பலமாக எதிர்த்தனர். இதையொட்டித் தெரிவிக்கப் பெற்ற கருத்துகள் சிலவற்றை இங்கே அப்படியே எடுத்துக்கூறுவது மிகவும் பொருத்தமுடையதாகும். லக்ஷ்மிகாந்த் மைத்ரா என்பவர், மேலே எடுத்துரைக்கப்பட்ட சமயச்சார்பற்ற அரசாங்கக் கருத்து முற்றிலும் தவறென்று கூறினர். அவர் கூறியதாவது:

'சமயச்சார்பற்ற அரசாங்கத்தில், சமயம், ஜாதி என்ற அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட சமயக் கோட்பாட்டைப் பின்பற்றிவருபவனை அரசாங்கம் தனிப்பட மதிக்கப்போவதில்லை என்றே நான் அறிகிறேன். இதன் முக்கிய சாராம்சம் யாதெனில், அரசாங்கம் எந்த ஒரு தனி சமயத்திற்கும் விசேட சலுகைகள் வழங்கக்கூடாது. ஏதாவது ஒரு மதத்தைத்தேர்ந்தெடுத்துப் பிற மதங்களைப் புறக்கணித்துவிட்டு, அக் குறிப்பிட்ட மதத்திற்கு மட்டிலும் சலுகைகளும் நன்கொடைகளும் வழங்கி நிலைநிறுத்துவதற்கு இயலாது. அதேபோல், நாட்டுக் குடிமகனொருவன் ஏதாவதொரு மதத்தைச் சார்ந்தவன் என்பதற்காக அவனுக்கு விசேட சலுகைகளை வழங்குவதோ அல்லது அவனுக்குச் சில உரிமைகளை மறுத்துவிடுவதோ இயலாது. வேறு வகையாகக் கூறினல், அரசியல் விவகாரங்களில், சமயத்தின் பெயரால் எவ்வித விசேட சலுகைகளையும் பெற்றுவிட முடியாது. இதையே சமயச்சார்பற்ற ஓர் அரசாங்கத்தின் அடிப்படை இயல் என நான் கருதுவேன்'.

எச். வி. காமத் என்பவர் கூறியதாவது :

'ஓர் அரசாங்கம் எந்த ஒரு சமயத்துடனும் நெருங்கிய உறவு கொண்டுவிடக்கூடாது என்று கூறுவதால், அரசாங்கம் சமயப்பற்று அற்றதாகவோ அல்லது புறச்சமயம் கூறுவதாகவோ இருக்கக்கூடாது. இந்திய அரசாங்கம் சமயச்சார்பற்றது என்று நாம் ஐயமறக் கூறிவிட்டோம். என் அறிவிற்கு எட்டிய வரையில் சமயச்சார்பற்ற அரசாங்கம் என்பது, புறச்சமயம் கூறுகின்ற அல்லது சமயத்தில் நம்பிக்கையற்றதோர் அரசாங்கம் என்று கொள்வதற்கில்லை.'

இந்து சட்டம் பற்றிய விவாதத்தில் பாராளுமன்றத்தில் பங்கெடுத்துக்கொண்ட அம்பேத்கர் சமயச்சார்பற்ற தன்மை என்பதைக் குறித்து விரித்துரைத்துக் கூறியதாவது :

'சமயச்சார்பற்ற அரசாங்கமெனில், மக்களின் சமய உணர்வுகளுக்கு மரியாதை செலுத்த வேண்டுவது அன்று என்பது பொருளன்று. சமயச்சார்பற்ற அரசாங்கமென்றால், இப் பாராளுமன்றம் மக்களின் மீது குறிப்பிட்டதொரு சமயத்தைச் சுமத்திவிடுவதற்கு அருகதையுள்ளதென்பதுமில்லை. அரசியலமைப்புத் திட்டம் ஏற்கின்ற ஒரே கட்டுப்பாடு இதுவேயாகும்.'

இந்திய அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் சமயச்சார்பற்ற கொள்கை யாதென்பதை இந்திய நாட்டு உப-ஜனதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள் பின்வருமாறு கூறினர்கள் :

'இந்திய அரசாங்கம் சமயச்சார்பற்றதாக விளங்குமென்று நாம் கூறும்போது, மறைவான பெருஞ்சக்தியை நாம் மறுத்துவிடுகிறோ.

மென்றோ, வாழ்க்கைக்குச் சமயத்தின் இன்றியமையாமையை ஏற்ப தில்லை என்றோ, அல்லது நாத்திகத்தை வளர்க்கிறோமென்றோ பொருள் கொள்ளக்கூடாது. சமயச்சார்பற்ற தன்மையே ஒரு சமயக் கோட் பாடாக மாறிவிடுகிறதென்றோ அல்லது அரசாங்கம் தெய்வீக சக்தி களைப் பெற்றுவிடுகின்றதென்றோ நாம் கனவு காண்பதில்லை. எல்லை யற்ற இறைத்தத்துவத்திற்கு மதிப்பளிக்கின்ற அடிப்படையில் இந்திய சமயம் உருவாயிற்றென்ற மரபிருந்தாலும், இந்திய அரசு தன்னை அதனுடன் இணைத்துப் பேசுவது இயலாது; அல்லது குறிப்பிட்டதொரு சமயத்தால் அரசைக் கட்டுப்படுத்த இயலாது. ஏதாவதொரு சமயத் திற்கு மட்டிலும் விசேட சலுகை அளிக்கக்கூடாது, தனிக் கௌரவம் வழங்கக்கூடாது, தேசிய வாழ்வில் அல்லது உலக அரங்கில் அதற்குத் தனிச் சலுகைகள் ஏற்படுமாறு செய்யக்கூடாது என நாம் யாவரும் ஒப்புக்கொள்வோம். அவ்வாறு செய்வதால் ஜனநாயகத்தின் அடிப் படையையே நாம் மறுக்கிறோம் என்பதோடு, அரசாங்கம், சமயம் ஆகியவற்றின் நலன்களையே அது பழுதடையச் செய்துவிடுகிறது. இவ்வாறு சமயத்தின் விருப்பு வெறுப்புகளற்ற நிலையையும் சகிப்புத் தன்மையையும் மனத்திற்கொள்ளும்போது, தேசிய-உலக வாழ்க்கை அடிப்படைகளே மாறிவிடுகின்றன. எந்த ஒரு குடிமக்கள் கூட்டமும், பிறருக்குத் தான் அளிக்க மறுக்கின்ற உரிமைகளையோ, சலுகை களையோ பெற விரும்புவது முறையாகாது. சமயத்தின் பெயரால் குடிமகன் ஒரு கஷ்டத்தையோ அல்லது பாரபட்சமான நிலையையோ அடையக்கூடாது. பொது வாழ்க்கையின் சுகதுக்கங்களைப் பகிர்ந்து யாவரும் ஒன்றாக அனுபவிக்கவேண்டும். சமயத்துறையிலிருந்து அரசாங்கத்தைத் தனியாகப் பிரித்துவிடுவதற்கு இதுவே உற்ற காரண மாக விளங்குகிறது. இந்திய அரசாங்கம் மதங்களைப் பொறுத்த வரையில் கையாளுகின்ற நடுநிலையை, புறச்சமயக் கோட்பாடு என்றோ அல்லது சமயச்சார்பற்ற கோட்பாடு என்றோ தவறாக எண்ணிவிடக் கூடாது. இங்கு எடுத்துரைக்கப்பட்டுள்ள, சமயச்சார்பற்ற கோட் பாடு என்பது இந்திய நாட்டின் மரபையொட்டியதே ஆகும். நம்பிக்கையுள்ளவர்களின் சமுதாயம் ஒன்றைத் தோற்றுவிக்க அது முயல்கிறது. அம் முயற்சியில் தனி மனிதனின் குணங்களைக் கூட்டத் தினரின் கருத்திற்கு அடிமைப்படுத்திவிடாமல் அவர்களை ஒருவரோ டொருவர் இணைந்து வாழும் வகையைத் தேடுகிறது'.

இவ்வாறாக இந்திய அரசியலமைப்புத் திட்டம் கருதுகின்ற சமயச் சார்பற்ற ஜனநாயக ஆட்சியின் சிறப்பியல்புகளைக் கீழ்வருமாறு எடுத் துரைக்கலாம். (1) தனிப்பட்ட ஒரு சமயத்துடன் அரசாங்கம் தன்னை இணைத்துக்கொள்ளாது, அல்லது தனிப்பட்டதொரு சமயத்தால் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த இயலாது: (2) நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகனும் தனக்குத் தேவையான சமயத்தைத் தேர்ந் தெடுத்துப் பின்பற்றலாம் (அல்லது நாத்திகனாகவோ, நம்பிக்கை அற்றவ

னுகவோ வாழலாம் என்பதும் இதிலடங்கும்). அதே தருணம், குறிப்பிட்டதொரு சமயத்திற்கு விசேட சலுகைகளை அளித்துவிடாது. ஒரு குடிமகன் தனிப்பட்டதொரு சமயத்தைச் சார்ந்தவன் அல்லது கோட்பாட்டைக் கடைப்பிடிப்பவன் என்பதால் அவனைத் தனியாகப் பாகுபடுத்தி அரசாங்கம் சலுகைகளை வழங்குவதற்கில்லை. (4) பொதுவான விதிகளுக்குட்பட்டு, தனது சோதரக் குடிமக்கள்போல, எந்தத் தொழிலையும் கடைப்பிடிப்பதற்கு நாட்டுக் குடிமகனுக்கு உரிமையுண்டு. அரசாங்கத்திலுள்ள மிக உயர்ந்த அலுவலைப் பெறுவதற்கு அரசியல் சமத்துவம் என்ற அடிப்படையில் ஒவ்வொரு குடிமகனுக்கும் உரிமையுண்டு. அரசியலமைப்புத் திட்டம் கூறுகின்ற விருப்பு வெறுப்பற்ற சமயக் கொள்கையின் உயிரும் உடலும் இதுவேயாகும். இந்திய மக்களிடையில் சகோதரத்துவம் ஏற்படுவதற்கு இது முயற்சி செய்கிறது. தனி மனிதனின் கௌவரமும் தேச ஒற்றுமையும் பாதுகாக்கப் படுகின்றன.

## மனச்சாட்சியைப் பின்பற்றும் உரிமை முதலியன

அவரவர் மனச்சாட்சிக்கிணங்கி வாழுகின்ற உரிமையைத் திட்டவிதி 25(1) எடுத்துரைக்கிறது. அதனால் தங்களிச்சைப்படி ஒரு சமயத்தைத் தோற்றுவிக்கவும், கடைப்பிடிக்கவும், பிரசாரம் செய்யவும் யாவருக்கும் உரிமைகள் உண்டு. ஐக்கிய அமெரிக்க நாடுகளில், சமயத்தைப்பொறுத்த உரிமைகளைக் குறித்து, நீதிமன்றங்களின் விளக்கங்களையொட்டியே நம் நாட்டு அரசியலமைப்புத் திட்டத்தின் 25ஆம் விதி அமைந்திருக்கிறது. முதல் திருத்தத்தின்கீழ் உறுதியளிக்கப்பட்டிருக்கும் சமய உரிமைகளை விளக்கிக் கூறுகையில் அமெரிக்க நாட்டு உயர் நீதிமன்றம் கூறியதாவது: சமயத்தில் பற்றுக்கொள்ளுகின்ற உரிமையையும், அதைக் கடைப்பிடிக்கின்ற உரிமையையும் அனுபவிப்பதால், சமாதானம், ஒழுங்கு அல்லது சமுதாயத்தின் நெறிகள் கெட்டுவிடுவதற்கு வழியில்லை. அந்த அளவிலாவது சமயத்தைப் பின்பற்றுகின்ற உரிமை அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்குட்பட்டதாகும். சமயம் என்ற காரணத்தைக் காட்டி, விரும்பத்தகாத ஒன்றை மக்கள் கடைப்பிடிப்பதோ அல்லது பிரசாரம் செய்வதோ நடைபெறுதென்ற நவீன காலக் கருத்தை உறுதி செய்வதாக இவ் வாசகம் அமைகின்றது.

சமயத்தைப் பின்பற்றுவது அல்லது பிரசாரம் செய்வது என்பதைக் குறித்து விளக்கம் கூறுவது, நீதிமன்றங்களுக்கு மிகவும் கடினமான வேலையாகவே இருந்திருக்கிறது. தேசியக் கொடியை வணங்குவது சமயக் கோட்பாட்டிற்கு முரணுள்ளதா என்ற மிக எளிய பிரச்சினைக்கும்கூட, அமெரிக்க நாட்டு உயர் நீதிமன்றம் கருத்து வேற்றுமையுள்ள தீர்ப்புகளை வழங்கியிருப்பதிலிருந்து இதை நாம் நன்கு உணர்ந்து கொள்ளமுடியும். இத்தகைய, தீர்ப்புகள் ஒன்றில் ஜஸ்டிஸ் பீலிக்ஸ்

ஃப்ராங்ஃபபுர்ட்டர் என்பவர் கூறியிருப்பது போல், 'நாட்டுப்பற்று என்பதைக் கொடி வணக்கத்தின் வாயிலாகப் பெற்றுவிட முடியாது. அதைப்போலவே குறுகிய சட்டத்தை நீதிமன்றம் மறுத்துத் தள்ளி விடுவதால் தாராள மனப்பான்மையை வளர்த்துவிட முடியாது. நாகரிகத்தின் விலைமதிப்பற்ற விருப்புகளை நீதிமன்றம் தனது தீர்ப்புகளால் உறுதிப்படுத்திவிட இயலாது. அவைகளைச் சட்டமன்றத்திற்கு வெளிப் புறமிருந்தே பெறவேண்டும். சுதந்திரமிக்க சமுதாயமொன்றின் இடையறாத நம்பிக்கையைக் கொள்கைகளாகவும் பழக்கங்களாகவும் வடித்துச் செயற்படுத்தி, மானிட இயற்கையின் வெட்கமற்ற ஆசைகளுடன் போரிட்டு வெற்றி காண்பதாலேயே நலன் காணவியலும்'.

சமயக் குரவர்களின் உரிமைகளைப் பாதுகாக்கின்ற ஆவலினால், உந்தப்பட்டு, நீதிமன்றம், சில சமயங்களில் கதவு மணிகளை ஓசைப் படுத்துவது, கிரகஸ்தர்களை உறக்கத்திலிருந்து எழுப்புவது, வழிப்போக்கர்களை வந்தனம் செய்து அவரது சமயக் கோட்பாடுகளைக் குறைப் படுத்துவது, பயமுறுத்தி நன்கொடைகள் பெறுவது, குயவன் மண் பாண்டம் விற்பதுபோல் விலை கூறிச் சமயக் கோட்பாடுகளை 'நடுவீதிகளில் விற்பது' என்ற எளிய உரிமைகளையும் உறுதி செய்து, நகைப்புக் கிடமான தீர்ப்புகளை வழங்கியிருக்கிறது. அரசியலமைப்புத் திட்டத்திலேயே எந்த அளவிற்குச் சமயத்தைப் பரப்புவது, பின் பற்றுவது ஆகிய நடவடிக்கைகள் செல்லலாமென்பதைத் தெளிவாக எடுத்துரைத்துவிட்டால், நீதிமன்றங்களின் வேலைகள் மிக எளிதாகி விடுமென்பதை அமெரிக்க நீதிமன்றத் தீர்ப்புகளிலிருந்து நாம் தெளிவாக அறிந்துகொள்ளலாம். அத்தகைய கட்டுப்பாடுகளை விதிக்கின்ற வழக்கம் இன்று எங்கும் பரவியுள்ளது.

இக் கருத்தை இந்திய அரசியலமைப்புத் திட்டத் தயாரிப்பாளர்களும் ஏற்றுக்கொண்டனர். திட்ட விதி 25 (1)-ல் அக் கருத்தையும் பகுதியொன்றில் கூறியுள்ளனர். பொதுவில் சமுதாய ஒழுங்கு, நெறி, சுகாதாரம் ஆகியவைகளுக்குச் சமயத்தின் பெயரால் குறைகளேற்படக் கூடாதென்பதைத் திட்டவட்டமாகத் தெரிவித்துள்ளனர். இவ் விதிகளின் முழு விளக்கமும் இன்றும் தெளிவாக அறியக்கூடவில்லை. மக்களின் சமுதாய உணர்வுகளும் அறவழி உணர்வுகளும் பெருகுவதாலும், நீதிமன்றங்கள் காலப்போக்கில் அளிக்கின்ற விளக்கங்களாலும், விதிகள் மேலும் தெளிவு பெறவேண்டும். சமயத்துறையுடன் தொடர்புள்ள பொருளாதாரம், நிதி, அரசியல் பிரச்சினைகளைக் குறித்துச் சட்டங்களியற்றுவதற்கும் அரசாங்கத்திற்கு அதிகாரமுண்டு. மேலும், சமுதாய நலனையும் அது பேணி வளர்க்கலாம். இந்து சமயம் சார்ந்த நிறுவனங்களையும், பொதுநோக்குடைய ஸ்தாபனங்களையும், இந்து சமயத்தினர் யாவருக்கும் பொதுவான சொத்தாகச் செய்

வதற்கோ அல்லது சேர்த்திருந்துவதற்கோ அரசினருக்கு அதிகாரமுண்டு.

சமயத்துறையைப்பற்றிப் பேசுகின்ற பிற அரசியலமைப்புத் திட்டங்களிலெல்லாம் 'பிரசாரம்' என்ற சொல் உபயோகிக்கப்படவில்லை. அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினர்களில் சிலர், இச் சொல் பயன்படுத்தப்படுவதைப் பலமாக எதிர்த்தனர். இதை உறுதி செய்து கொடுப்பதால் மிகப் பயங்கரமான விளைவுகளேற்படலாகுமென்றும், சமய மாற்றம் மிக மலிந்துவிடுமென்றும் அவர்கள் எண்ணிவந்தனர். ஆனால், பெரும்பான்மையான அங்கத்தினர்கள் முரண்பட்ட இக் கருத்தை ஆதரிக்கவில்லை. அங்கத்தினர் ஒருவர் குறிப்பிட்டதுபோல, 'பிரசாரம்' என்பது கருத்தை வெளியிடும் உரிமையேயாகும். 'சமய மாற்றம்' என்ற சொல் அங்கு இடம் பெறவில்லை என்பதை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன். தடையற்ற சமய மாற்றம் ஏற்படுவதற்குத் திட்டத் தயாரிப்பாளர்கள் அனுமதியளிக்கவில்லை என்பதை நான் கூற விரும்புகிறேன். மனச்சாட்சிக்கேற்ப நடந்துகொள்வதற்கு மக்களுக்கு உரிமையுண்டு. மனச்சாட்சியின் அனுமதியுடன் சமய மாற்றத்திற்கு ஒருவன் உடன்படுவானேயாகில், அது ஏற்கக்கூடியதேயாகும். அதற்கு மாறாகத் தடையேதும் விதிக்க முடியாது.'

வரைதிட்டக் கமிட்டியின் சார்பாக கே. எம். முன்ஷி பேசுகையில் கூறியதாவது :

> 'சிறுபான்மையினருடன் சமாதானம் செய்துகொள்வதென்ற கருத்திற்கு, ஆதியிலிருந்து நான் உடந்தையாக இருந்தவன். இச் சொல் (பிரசாரம்) திட்டத்தில் இடம் பெறவேண்டுமென்று இந்தியக் கிறிஸ்தவர்கள் மிக ஆவலுள்ளவர்களாக இருந்தனர். அதற்கு அவர்கள் மக்களை மத மாற்றுவதில் பற்றுள்ளவர்களாக இருந்தனர் என்பது பொருளல்ல. 'பிரசாரம்' என்பது அவரது சமயக் கோட்பாடுகளின் அடிப்படையாக விளங்கியதையே இதற்குக் காரணமாகக் கூறவேண்டும். அச் சொல் அங்கு இடம் பெறாதிருப்பினும், அரசியலமைப்புத் திட்டம் பேச்சுரிமை என்ற ஆதார உரிமைக்கு உறுதியளிப்பதால், எந்தச் சமயக் கூட்டத்தினரும், சகோதரர்களைத் தங்கள் சமயத்தைக் கடைப்பிடிக்குமாறு தூண்டுவதற்கான உரிமையைப் பெற்றுவிடுகின்றனர். 'சமயம்' என்பது மாறாமல் விளங்க வேண்டுமெனில், மனச்சாட்சியினடிப்படையில் சமயத்தைத் தேர்வதென்ற உரிமை தடையின்றி வழங்கப்பட வேண்டும்.

'பிரசாரம்' என்ற சொல் இடம் பெறவேண்டும் என்று வற்புறுத்திக் கூறிய மற்றுமோர் அங்கத்தினர் கூறியதாவது :

'பிரசாரம்' என்னும் இச் சொல், கிறிஸ்தவ சமயத்தினருக்கு மிகவும் பயன்படக்கூடியதாக இருக்கின்றது என்ற பொதுவான கருத்து நிலவுகிறது. தற்போதுள்ள சூழ்நிலையில், தமது மக்களுக்குச் சமயக் கருத்துகளையும் கோட்பாடுகளையும் மிகவும் வற்புறுத்திக் கூறவேண்டிய தேவை இருக்கிறதென நான் கருதுகிறேன். கிறிஸ்தவ சமூகத்தினர் சமயப் பிரசார உரிமையை வரையறையோடு பயன்படுத்தி வருகின்றனர் என்று என் அனுபவ வாயிலாக நான் நன்கு அறிவேன். பொதுவாகக் கூறுமளவில் அவர்கள் நற்பணியே புரிந்திருக்கின்றனர். அவர்களைப் பின்பற்றிப் பிற சமூகத்தினர் தங்கள் சமயக் கோட்பாடு களையும் பிரசாரம் செய்யவேண்டும். தங்கள் சமயத்தில் உள்ள அற நெறியை மக்களுக்கு எடுத்துரைக்கவேண்டும். தனது சமயநெறியைப் பரப்புவதில் ஒருவனுக்கு மிக்க ஆர்வம் காணப்படுகிறதென்றால், பிற சமயங்களை அவன் பழித்துக் கூறவேண்டுமென்பது பொருளாகாது. பிற சமயங்களைப் பழித்துக் கூறவேண்டுமென்பது, ஒரு சமயத்தின் அடிப்படைக் கோட்பாடாக இருக்க இயலாது. ஆகவே, இது மிகவும் இன்றியமையாத தேவை என்று கூறுவேன்'.

அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரவர்களின் கருத்து வருமாறு :

'பேச்சுரிமைத் திட்ட விதி 19, முன்னரே உறுதிப்படுத்திவிட்டதால், ஒருகால் 'பிரசாரம்' என்ற சொல் தேவையற்றதென்று கருதுவதற்கு இடமேற்படுகிறது போலும். மத போதகர்கள் சிலர், இச் சொல்லைப் பயன்படுத்த வேண்டுமென்று தீவிரமாகக் கருதியதால், அவர்களுக்கு முழுத் திருப்தியளிக்கின்ற வகையில், அதிக கவனத்துடன் இச் சொல் பயன்படுத்தப்படுகிறது.'

அரசியலமைப்புத் திட்ட விதி 25-ன் கீழ் உறுதியளிக்கப்பட்டிருக்கும் சமய சுதந்திர உரிமையை அடிப்படையாகக்கொண்டு தீர்ப்பு வழங்கு வதற்கு, இந்து சமயக் கட்டளை போர்டிற்கும் எல். டி. சுவாமியார் என்பவருக்குமிடையில் நடைபெற்ற வழக்கில், உயர் நீதிமன்றத்திற்கு நல்வாய்ப்புக் கிடைத்தது. நீதிமன்றம் அளித்த விளக்கமாவது :

ஒவ்வொரு மனிதனுக்கும், தன் அறிவிற்கும் மனச்சாட்சிக்கும் ஏற்ற வகையில் சமயமொன்றைப் பின்பற்றுவதற்குத் திட்ட விதி 25 முழுச் சுதந்திரத்தை வழங்குகிறது. அச் சுதந்திரத்தை அனுபவிக்கும் போது பொதுஜன அமைதிக்கும், சுகாதாரத்திற்கும், அறவொழுக்கத் திற்கும் எவ்விதக் கெடுதலும் ஏற்படக்கூடாது. அதனுடன் அவன் எண்ணுகின்ற வகையில் தனது கருத்தைச் செயற்படுத்தவும், பிரசாரம் செய்யவும், பிறரைப் புனிதராக்குவதன் பொருட்டு எடுத்தோதவும் உரிமை உண்டு. ...... 'சமயத்தைக் கடைப்பிடித்தல்' என்ற சொல் லிற்கு அரசியலமைப்புத் திட்டம் சமயக் கோட்பாடுபற்றிய

சுதந்திரத்தை உறுதிப்படுத்துவதோடு, அதையொட்டிச் செயற்படும் போது எழுகின்ற பிற விளைவுகளையும் அனுமதிக்கின்றது என்று பொருள் உண்டு'.

திட்ட விதி 26, 25ஆம் திட்ட விதியின் துணை விளக்கமாக உள்ளது. சமய அலுவல்களைக் கவனிப்பதற்குத் திட்ட விதி 26 சுதந்திரம் வழங்குகின்றது. இதையொட்டி ஒவ்வொரு சமயக் குழுவினருக்கும் (அ) சமயப் பணிக்கென்றும், அறப்பணிக்கென்றும் நிறுவனங்களை ஏற்படுத்தி, அவைகளை இயக்கும் உரிமை: (ஆ) சமயத் துறையிலுள்ள தனது அலுவல்களைக் கவனித்துக்கொள்ளும் உரிமை; (இ) ஜங்கம ஸ்தாவர சொத்துகளை அடைகின்ற உரிமையும் ஆண்டனுபவிக்கின்ற உரிமையும்; (ஈ) சட்ட வரம்பிற்குட்பட்டு அச் சொத்துகளை மேற்பார்வையிடுகின்ற உரிமை ஆகிய உரிமைகள் வழங்கப்படுகின்றன. திட்ட விதி 27 சமய நடவடிக்கைகளுக்கு மேலும் ஒரு பாதுகாப்பு வழங்குகிறது. ஏதாவதொரு சமயத்தை நிறுவுவதற்கு அல்லது பேணி வளர்ப்பதற்கென்று திரட்டப்படும் நிதிக்கு, வரி செலுத்துவதினின்றும் விதிவிலக்கு அளிக்கப்படுகிறது.

## பள்ளிகளில் மத போதனை

அரசாங்க நிதியுடன் இயங்கிவருகின்ற பள்ளிகளில் சமய போதனை கூடாதென்று திட்ட விதி 28 தடுத்துக் கூறுகிறது. அப் பள்ளி அரசாங்கத்தினரால் நிறுவப்பற்றதேயாயினும், அல்லது தனியார் உதவியதாயினும் இத் தடை நீடிக்கும். தனியார் ஒருவர் நிறுவுகின்ற கல்வி நிலையம் அல்லது தனிப்பட்ட டிரஸ்டுகள் நிறுவிப் போஷித்து வரும் கல்வி நிலையம் ஆகியவற்றில், சமய போதனை தேவையென்று அவர்கள் விரும்பினால், அதற்கு எவ்விதத் தடையுமில்லை. அரசாங்கத்தாரின் முழு உதவி பெற்று விளங்குகின்ற கல்வி ஸ்தாபனங்களைப் பற்றி இவ்வாறு கூறிவிட்டு, அரசாங்கத்தினரின் அனுமதி பெற்றும் உதவி பெற்றும் நடைபெற்றுவருகின்ற கல்வி நிலையங்களின் நிலையை எடுத்துக் கூறுகின்றது. அப் பள்ளியில் தொடர்பு கொள்கின்ற ஒருவரை அவரது சம்மதமின்றி எந்தவிதமான சமய நடவடிக்கைகளிலும் ஈடுபடச் செய்யக்கூடாது. தொடர்பு கொள்பவர் வயது நிரம்பப்பெறாத மைனராக இருந்தால், பெற்றோர் அல்லது போஷகரின் ஒப்புதல் வேண்டும். இந்த ஏற்பாடும் சமயச் சிறுபான்மையினரின் நலன் கருதியே செய்யப்பட்டிருக்கிறது. அவர்களால் நடத்தப்பெறுகின்ற பள்ளிகள் அரசாங்க உதவிபெற்றுவந்தபோதிலும், மனமுவந்து கற்க முன்வருவோருக்குச் சமய போதனை நடத்துவதில் எவ்விதத் தடையுமில்லை. அரசாங்கத்தினரின் கல்வி நிலையங்களிலும், தனியார், மற்றும் சமயச் சார்புடையவர்களின் அரசாங்க உதவியுடன் நடைபெறுகின்ற கல்வி நிலையங்களிலும் மதச் சார்பற்ற நிலை இருந்து

வருகிறது. அரசாங்க உதவி பெற்றுவந்தபோதிலும், அவர்களது சமயக் கோட்பாடுகளைப் பின்பற்றுவதற்கும் உரிய சுதந்திரம் வழங்கப் பட்டிருக்கிறது.

# 12. பண்பாடு, மற்றும் கல்வி கற்பதில் உரிமைகள்

## [திட்ட விதிகள் 29 & 30]

பண்பாடு, மற்றும் கல்வி கற்பதற்கான உரிமைகளைத் திட்ட விதிகள் 29-ம் 30-ம் உறுதியளிக்கின்றன. குடிமக்களில் ஒரு பகுதியினர், நாட்டின் எந்த மூலையில் குடியிருந்தாலும், தங்களுக்கெனத் தனி மொழியையும், வரி வடிவத்தையும், பண்பாட்டினையும் பின்பற்றலாகுமென்றும், அவைகளைக் காப்பாற்றும் சலுகையளிக்கப்படுமென்றும் திட்ட விதி 29-ன் பகுதி (1) உறுதி கூறுகின்றது. சமயம், இனம், ஜாதி, மொழி அல்லது அவைகளில் ஏதாவதொன்றை அடிப்படையாகக் கொண்டு துணைநாட்டுக் குடியுரிமையைத் தடுப்பதோ அல்லது அரசாங்க உதவியுடன் நடைபெற்றுவரும் பள்ளிகளில் அனுமதி வழங்குவதைத் தடுக்கவோ கூடாது என இரண்டாவது பகுதி கூறுகின்றது. 'சிறுபான்மையினர் யாவரும், சமயம் அல்லது மொழி என்ற அடிப்படையில் இருந்தாலும், கல்வி நிலையங்களை நிறுவுவதற்கும், அவைகளை இயக்குவதற்கும் அவர்களுக்கு முழுச் சுதந்திரம் உண்டு. (2) அரசாங்கம், மானியம் வழங்குவதிலும், ஒரு ஸ்தாபனம் குறிப்பிட்டதொரு சிறுபான்மையினரால் (மதம் அல்லது மொழி அடிப்படையில்) நடத்தப்பெறுகிறது என்ற அடிப்படையில் அதற்குரிய மானியங்களை வழங்காது நின்றுவிடக்கூடாது.

நிகரற்ற இவ்வேற்பாடுகள் ஐயத்திற்கிடமின்றி எடுத்துரைக்கப் பட்டிருக்கின்றன. அமெரிக்க நாட்டு அரசியலமைப்பிலுள்ள உரிமைச் சாசனத்தில் இதற்கு ஈடாக எதுவுமில்லை. திட்ட விதிகள் 29, மற்றும் 30-ல் கண்டிருக்கும் ஏற்பாடுகளை, ஆதார உரிமைகளைக் கொண்டிருக்கும் அதிகாரத்துடனும், மற்றும் சமயம், மொழி, மொழிவாரியான சிறுபான்மையினர், இனவாரியான சிறுபான்மையினர் ஆகியவர்களுக்குத் திட்டத்தில் அளிக்கப்பட்டிருக்கும் உறுதிமொழியுடனும் இணைத்து நோக்கும்போது, இவ்வேற்பாடுகள் சிறுபான்மையினருக்கு மீண்டும் உறுதியளிக்கின்ற வகையிலேயே அமைந்திருக்கின்றனவென்பது மிக

நன்ருக விளங்கும். சிறுபான்மையினர் இச் சலுகைகளைத் தங்கள் வாழ்க்கையின் ஆதாரத் தேவைகளாகக் கருதிவருகின்றனர் என்பதோடு, திட்டத்தில் அவைகள் மிகக் கவனமாகப் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன என்ற மன அமைதியும் பெறுகிருர்கள். சமயச் சுதந்திர உரிமைகளைப்பற்றிய இவைகளை, அவ்வுரிமையின் குறிப்பிட்டதொரு பகுதியின் விளக்கமென்று கூறுலாம். அதற்கு மேற்கோளாகத் தனியான கல்வி ஸ்தாபனங்களை நிறுவுவதுபோன்ற உரிமைகளை நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளோம். இவ்வேற்பாடுகளின் தனிச் சிறப்பு யாதெனில், 'சிறுபான்மையினர்' என்னும் சொல், பரந்த மக்கள் தொகையை உள்ளடக்கியிருககிறது. சமயம், மொழி, வரிவடிவம், பண்பாடு ஆகிய அடிப்படைகளில் 'சிறுபான்மையினர்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இந்திய நாட்டெல்லேக்குள், தோராயமாக ஒரு டஜனுக்கு மேற்பட்ட முழு வளர்ச்சியடைந்த மொழிகள் இருக்கின்றன என்பதை எண்ணிப் பார்க்கும்போது, இவ்வேற்பாட்டின் சிறப்பு மிக நன்ருக விளங்கும்.

29ஆம் திட்ட விதியின் முழுப் பொருளையும் விளக்கிக் கூறுகையில், இரு முக்கியக் கருத்துகளை அது கொண்டிருப்பதாகப் பம்பாய் உயர் நீதிமன்றம் கூறியது :

'அவைகளிலொன்று, அரசாங்கத்தினரால் நிறுவப்பெற்ற அல்லது அரசாங்க உதவியுடன் நடைபெறுகின்ற கல்வி ஸ்தாபனத்தைத் தேர்ந்தெடுக்கும் உரிமை குடிமகனுக்குண்டு என்பது. 'நான் அமைத்திருக்கும் பள்ளிக்கே நீ செல்ல வேண்டும், வேறு பள்ளிக்குச் செல்லக் கூடாது' என அரசாங்கம் குடிமகனுக்குக் கட்டளையிட முடியாது. குழந்தைகளின் கல்வியைக் கட்டுப்பாடு செய்வதற்குத் தாய், தந்தையருக்குள்ள உரிமை வலியுறுத்தப்படுவதை இங்குக் காணலாம்.'

சென்னை அரசாங்கத்தினரின் கல்வி நிலையங்களில் இடம் பெறுவதைக் குறித்த இரு வழக்குகளில், சென்னை உயர் நீதிமன்றம் வழங்கிய தீர்ப்புகளின் பெயரில் பெரு நீதிமன்றத்திற்கு அப்பீல்கள் எடுத்துச்செல்லப்பட்டன. திட்ட விதி 29 (2)ஐ நன்கு விளக்குவதற்குப் பெரு நீதிமன்றத்திற்கு நல்வாய்ப்புக் கிடைத்தது. அப்பீல்களை விளக்கமாகவும் தீவிரமாகவும் விசாரணை செய்த பின்னர் நீதிமன்றம் கூறியதாவது :

'திட்ட விதியின் பிரிவு (1) குடிமக்களின் ஒரு பகுதியினரின் மொழி, வரிவடிவம், பண்பு ஆகியவைகளைக் காப்பாற்றுகிறது. பிரிவு (2) குடிமகன் ஒருவனின் ஆதார உரிமைகளுக்குப் பாதுகாப்பளிக்கிறது. கல்வி ஸ்தாபமொன்றில் இடம் பெறுகின்ற வாய்ப்பு, [பிரிவு (2) ல் கூறப்பட்டிருப்பதைப்போன்றது] குடிமகன் என்ற முறையில்

ஒருவனுக்கு அளிக்கப்படுவதாகும். மக்களின் குறிப்பிட்ட சமூகத்தை அல்லது வகுப்பைச் சார்ந்தவன் என்பதால் இவ்வுரிமையை ஒருவன் பெறுவதில்லை. எனவே, சமயம், மொழி, இனம், சாதி அல்லது பிறிதொரு காரணத்தைக் காட்டிக் குடிமகனின் இவ்வுரிமையை மறுத்து விடக்கூடாது. அத்தகையதொரு கல்வி ஸ்தாபனத்தில் இடம்பெற விரும்புகின்ற ஒரு குடிமகனுக்குத் தேவையான யோக்கியதாம்சங்கள் இல்லையென்பதால் இடமளிக்கப்படவில்லையெனில், இத் திட்ட விதியைச் சுட்டிக்காட்டித் தனது ஆதார உரிமை பறிபோய்விட்டதாகக் குறைகூறுவதற்கு அவனுக்கு வாய்ப்புக் கிடையாது. இதற்கு மாறாக, தேவையான யோக்கியதாம்சங்களையுடைய ஒருவனுக்குச் சமயம், மொழி, இனம், சாதி அல்லது பிறிதொன்றின் அடிப்படையில் அனுமதி மறுக்கப்படுமெனில், அது ஐயத்திற்கிடமின்றி அவனது ஆதார உரிமையைப் பறிப்பதாகும்.'

திட்ட விதி 30ஐக் கல்வி உரிமைகள்பற்றியதொரு சாசனம் எனக் குறிப்பிடலாகும். மொழி அடிப்படையிலும், சமய அடிப்படையிலும், சிறுபான்மையினர் எனக் கருதப்படுவோருக்குத் தங்களிச்சைப்படிக் கல்வி ஸ்தாபனங்களை நிறுவுவதற்குள்ள உரிமையை இவ் விதி உறுதிப் படுத்துகின்றது. அவர்கள் சமயம், மொழி என்ற பாகுபாடின்றி அரசாங்கத்தினரிடம் மானியங்கள் கோரலாகும். ஆதார உரிமைகளைப் பற்றிக் கூறுகையில், திட்டத் தயாரிப்பாளர்கள் அதனுடன் பல கட்டுப் பாடுகளையும் கூறினர். ஆனால், இவ்வுரிமையைப் பொறுத்தவரையில், அவர்கள் எவ்விதக் கட்டுப்பாட்டையும் கூறாது விடுத்தமையால், இவ்வுரிமையை மக்கள் எவ்விதத் தடையுமின்றி அனுபவிக்கவேண்டு மென்று திட்டத் தயாரிப்பாளர்கள் விரும்பினர் என்பதும் தெளிவாகத் தெரிகிறது. ஆனால், கல்வியின் தரத்தைக் காப்பாற்றுவதற்கென்று அரசாங்கம் தேவையான தடைகளை விதிக்க முடியாது என்று இதற்குப் பொருள் கூறிவிடக்கூடாது. நீதிமன்றத் தீர்ப்புகள் இக் கருத்தை மிக நன்ருக விளக்கியுள்ளன.

இந்திய ஜனாதிபதி, திட்ட விதி 30ஐக் குறித்துச் சில ஐயப்பாடுகளைப் பெரு நீதிமன்றத்தினரின் கவனத்திற்குக் கொண்டுவந்தபோது, நீதி மன்றத்தினர் விரிவானதொரு விளக்கம் தந்தனர். 1957ஆம் ஆண்டில் கேரள நாட்டுக் கல்வித் திட்ட சட்டமொன்று ஜனாதிபதியின் ஒப்புதல் பெறுவதற்கென்று அனுப்பிவைக்கப்பெற்றது. அச் சட்டத்தின் உப விதிகள் சில அரசியல் திட்ட அடிப்படையில் அமைந்திருக்கின்றனவா என்பதைத் தெரிந்துகொள்வதற்காகவே ஜனாதிபதி சட்டத்தைப் பெரு நீதிமன்றத்திற்கு அனுப்பிவைத்தார். 1957ஆம் ஆண்டில் கேரள அசெம்பிளியில் இச் சட்டம் சமர்ப்பிக்கப்பட்டது முதல், அங்கு அதற்கு எதிர்ப்புகள் இருந்துவந்தன. அதை எதிர்த்தவர்கள் அச் சட்டம் ஆதார உரிமைகளுக்கு, அதிலும் குறிப்பாகத் திட்ட விதி 30-க்கு

முரணானது என்று கூறிவந்தனர். ஏழு அங்கத்தினருள், அறுவர் ஒப்புதல் பெற்றுச் சட்டத்தின் பகுதி 3 (5), செல்லத்தகாததென்று பெரு நீதிமன்றம் தீர்ப்பளித்தது. அச் சட்டப் பகுதியின் வாசகம் வருமாறு :

'இச் சட்டம், அமலாகத் தொடங்கிய பின்னர், புதிய பள்ளியொன்றை நிறுவுவதும், அல்லது தனியார் பள்ளியில் புதிய வகுப்பொன்றைத் துவக்குவதும் இச் சட்டவரம்பிற்கு உட்பட்டேயாக வேண்டும். அதற்கு மாறாக, இச் சட்ட வரம்பிற்குட்படாமல் துவக்கப் படும் பள்ளி அல்லது வகுப்புகளைத் துரைத்தனத்தார் அங்கீகரிக்க மாட்டார்கள்.'

மன்றத்தின் பெரும்பான்மையினர் சார்பாகப் பேசிய உயர் நீதிபதி தாஸ், திட்ட விதி 30 (1) பற்றிக் குறிப்பிட்டதாவது :

'சமயம், மற்றும் மொழி அடிப்படையிலுள்ள சிறுபான்மையினருக்குத் தங்களிச்சைப்படி கல்வி நிலையங்கள் அமைப்பதற்கு உரிமை வேண்டும் என்று மட்டிலும் அத் திட்ட விதி கூறுகிறது.

சமய அடிப்படையிலுள்ள சிறுபான்மையினர், சமயத்தைப் பரப்புவதற்கென்று பள்ளிகள் அமைக்கவேண்டுமென்றோ, அல்லது மொழி அடிப்படையிலுள்ள சிறுபான்மையினர், தங்கள் மொழியைமட்டிலும் போதிப்பதற்கென்று பள்ளிகள் அமைக்க வேண்டுமென்றோ இச் சட்டம் கூறுவதில்லை. சமய, மொழி அடிப்படையிலுள்ள சிறுபான்மையினர் தங்களிஷ்டப்படி கல்வி நிலையங்களை நிறுவிக்கொள்ளலாம் என்றே சட்டம் நினைத்தும் கூறியுமிருக்கிறது. தங்கள் குழந்தைகளும் சீரான முறையிலும், திறமைமிக்கவர்களாகவும், கல்லூரிப் படிப்பைக் கற்கும் திறனுடையவர்களாகவும் வளரவேண்டுமென்றே சிறுபான்மையினர் விரும்புவது இயற்கையாகும். அவர்கள் தேர்ந்தெடுக்கின்ற கல்வி நிலையங்கள் பொதுவான சமயச் சார்புள்ள கல்வியையும் அளிப்பவையாகவே இருக்கும்.'

மொழி அடிப்படையிலேனும் அல்லது சமய அடிப்படையிலேனும் உள்ள சிறுபான்மையினருக்கு இத் திட்ட விதி, தங்களிச்சைப்படி கல்வி நிலையங்களை நிறுவுவதற்கும், அவைகளை இயக்குவதற்குமான இரு உரிமைகளை அளிக்கிறது. இத் திட்ட விதியின் உண்மையான பொருளையும் உட்கருத்தையும் அறிந்துகொள்வதற்கு முக்கிய வழிகாட்டியாக 'அவர்கள் இச்சைப்படி தேர்வது' என்ற சொற்கள் விளங்குகின்றன.

திட்ட விதி 30 (1)-ன் அடிப்படையில் நிறுவப்பெற்றுச் செயற்படுத்தப் படுகின்ற கல்வி நிலையங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாமென்று உயர் நீதிபதி கூறினார் : - (1) அரசாங்கத்தினரிடமிருந்து மானியமோ

அல்லது அங்கீகாரமோ பெற முயற்சி செய்யாதவை, (2) மானியம் கோரியவை, (3) அங்கீகாரம் மட்டிலும் கோரியவை. இவைகளில், முதல் வகையைச் சார்ந்தவை, சட்டத்தின் 38ஆம் பிரிவின்படி, சட்ட வரம்பிற்கு அப்பாற்பட்டவை. இரண்டாம் வகையைப் பொறுத்த வரையில் அவைகளை மீண்டும் இரு சிறு பகுதிகளாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை வருமாறு: (1) திட்ட விதி அடிப்படையைக் கொண்டே ஐயத்திற்கிடமின்றி மானியம் பெறத்தக்கவை, (2) அவ்வித மாக மானியம் பெறுகின்ற வாய்ப்புப் பெறாதவை, ஆயினும் முயல்வு தற்கு அருகதையுடையவை.

1948ஆம் ஆண்டிற்கு முன்னதாக நிறுவப்பெற்ற ஆங்கிலோ-இந்தியப் பள்ளிகள், அக்காலத் துரைத்தனத்தாரிடமிருந்து மானியங் கள் பெற்றுவந்தன. இந்தத் தாராள நன்கொடையை, மேலும் பத்து ஆண்டுகளுக்கு, திட்ட விதி 337 அளித்துவந்தது. கேரளப் பகுதி யிலுள்ள ஆங்கிலோ-இந்தியக் கல்வி நிலையங்கள், இச் சட்டம் நிறை வேறுவதற்குமுன் சென்னைத் துரைத்தனத்தாரிடமிருந்தும், திருவிதாங் கூர்-கொச்சின் துரைத்தனத்தாரிடமிருந்தும் மானியங்களைப் பெற்று வந்திருக்கின்றன. கேரளம் என்ற துணைநாடு ஏற்பட்ட பின்னரும் இந் நன்கொடை நீடித்து அளிக்கப்பட்டது. இந்தச் சூழ்நிலையில் திட்ட விதி 337-ன் கீழ் ஆங்கிலோ-இந்தியப் பள்ளிகள் பெற்ற மானியங்களைச் சட்ட வரம்பிற்குட்பட்ட மானியங்களாகவே கருதவேண்டும். விதி 337ஐப் பயன்படுத்தி, மானியங்கள் பெற்று வந்த பள்ளிகளையும், உதவித் தொகை பெற்றுவருகின்ற பள்ளி வகைகளாகவே கருத வேண்டும்.

சிறுபான்மையினர் நடத்திவருகின்ற பள்ளிகளின்மீது எவ்விதக் கட்டுப்பாடுகளையும் விதிக்கக்கூடாதென்ற வாதத்திற்குப் பதிலளிக்கை யில், நன்முறையில் பள்ளி நடத்தும் உரிமை என்பதற்குத் தவறான முறையில் நடத்துகின்ற உரிமை என்றும் பொருள் கொள்ளலாகாது என உயர் நீதிபதி கூறினார். திட்ட அடிப்படையில், கல்வி ஸ்தாபனம் ஒன்றை நடத்துவதற்குரிய உரிமை என்று கூறியபோதும், அரசாங்கம் உதவித்தொகை வழங்குவதற்குமுன் தரத்தைப் பாதுகாப்பதற்காகத் தேவையான சில கட்டுப்பாடுகளை விதிப்பதென்பது, அவ்வுரிமைக்கு முரணானது என்று கூறிவிட இயலாது.

துரைத்தனத்தாரிடம் உதவித் தொகை பெற விரும்பாது அங்கீகாரம் மட்டிலும் பெற்றுவந்த கல்வி நிறுவனங்களைப் பொறுத்த வரையில், அத்தகைய அங்கீகாரமின்றித் தாங்கள் கருதிய குறிக்கோளை வெற்றிகரமாக அடைவதற்கு அந் நிறுவனங்களால் இயலாதென்று உயர் நீதிபதி கருதினார். கல்வி ஸ்தாபனங்களை நிறுவுகின்ற உரிமை என்று கூறும்போது, அவைகள் உண்மைச் சேவையைப் பூர்த்திசெய்யக்கூடிய

வைகளாக இருக்கவேண்டுமென்பதும் உள்ளடங்கியே இருக்கின்றன. அந் நிறுவனங்கள் சமூகத்தினருக்குப் பயன்படக்கூடியவையாகவும், அதில் பணி புரிகின்ற புலவர்களுக்கு ஏற்றவையாகவும் விளங்கவேண்டும். சட்ட அடிப்படையில் அவர்கள் பெற்ற உரிமையைப் பறிக்கின்ற வகையில் கட்டுப்பாடுகளை விதித்துக் கல்வி ஸ்தாபனங்களுக்கு அனுமதி வழங்க மறுப்பதால், உண்மையில் திட்ட விதி 30 (1)-ன்கீழ் சிறுபான்மையினருக்கு வழங்கப்பெற்றிருக்கும் உரிமையைப் பறிப்பதேயாகும்.

'இந்தியக் குடிமக்களாகிய நாம், நமக்கென இத் திட்டத்தை அமைத்திருக்கிறோம்' என்பதைக் கூறிய நீதிபதி, ஒரு குறிப்பிட்ட பகுதியினருக்கு மட்டுமன்றி அனைவருக்கும் என்ற கருத்தை நன்கு வலியுறுத்தினார். அதன் கீழுள்ள ஏற்பாடுகள் சிறுபான்மையினர், பெரும்பான்மையினர் ஆகிய யாவரையும் காப்பாற்றுவதற்கென்றே ஏற்பட்டவை. சிறுபான்மையினர் மிகவும் போற்றி வளர்த்த, மொழி, சமயம், பண்பாடு ஆகிய உரிமைகளைத் திட்டம் நன்கு காப்பாற்றியிருக்கிறது என்பதில் ஐயத்திற்கு ஒருசிறிதும் இடமில்லை. உறுதியான நற்காரணங்களைக்கொண்டே இச் சலுகைகள் அவர்களுக்கு வழங்கப்பட்டிருக்கவேண்டும்.

'இவ்வரசியலமைப்புத் திட்டம், மாறுதல்களுக்குட்படாமல் அவ்வாறே இருக்கின்றவரையில், ஆதார உரிமைகளை ஏற்றி, நம்மினத்தவரான சிறுபான்மையினருக்கு நாம் அளித்துள்ள வாக்குறுதிகளைக் காப்பாற்றுவது இந் நீதிமன்றத்தின் கடமையாகும். வெகு தொலைவிலுள்ள பகுதிகளிலிருந்தும், வெவ்வேறு வகையான சீதோஷ்ண நிலைகளில் வசித்தவர்கள் — ஆரியர், ஆரியரல்லாதவர், திராவிடர், சீனர், சித்தியர், ஹூணர், பத்தானியர், முகலாயர்—ஆகிய பல்வகையான மக்கள் பன்னெடுங்காலமாகப் பொங்கி எழுந்து இந் நாட்டின் வழியே பெருவெள்ளமெனப் பாய்ந்தோடியிருக்கின்றனர். அவர்கள் இனத்தாலும், பண்பாட்டினாலும், பிறப்பினாலும் மாறுபட்டவர்களேயாவர். அவர்கள் யாவரையும் இந் நாடு வரவேற்றிருக்கிறது. அவர்கள் சந்தித்து ஒன்றுகூடிக் கொண்டு, கொடுத்து, இரண்டறக் கலந்து ஒன்றாகிவிட்டனர். ஆகவே, இந்திய மரபின் சுருக்கமான சாராம்சம் பின்வரும் புனித வரிகளில் அடங்கியுள்ளது : 'மனிதக் கடலின் பரந்த கரையாக விளங்கும் இந்திய நாட்டிலிருந்து எவனும் வெளியேற்றப்படமாட்டான்' (தாகூர்). உலகிற்கு நல்லெண்ணம் என்ற உயரிய செய்தியைத் தனது நாட்டுப் பண்ணில் பொதிந்து இந்திய நாடு பலறசாற்றியிருக்கிறது. இந்திய நாடு பெற்றிருந்த நிறைமதியின் விளைவாக, எல்லா இனங்களிலும் பண்பாடுகளிலுமுள்ள உயரிய இலட்சியங்களைத் தன்வயமாக்கிப் பன்மையிலும் ஒருமை கண்டிருக்கிறது'.

சமயம், கல்வி, பண்பாடு ஆகிய துறைகளில் மக்களுக்களிக்கப் பட்டிருக்கும் உரிமைகளை முழுமையாக நோக்கும்போது, அவை மிகச் சுருக்கமாக வெளியிடப்பட்டிருப்பதும், சமயம், மொழி ஆகிய அடிப் படைகளிலுள்ள சிறுபான்மையினருக்கு உயர்ந்த அளவு சுதந்திரம் வழங்கியிருப்பதும் புலனாகும். அரசியலமைப்புத் திட்டத்தின் பகுதி III-ல், உள்ள பிற உரிமைகள், ஜாதி, சமய, இன, மொழி வேற்றுமை களின்றி இந்திய மக்கள் யாவரையும் உள்ளடக்கிப் பேசுவதும், இவ் வேற்பாடுகள் சிறுபான்மையினரை மட்டிலும் குறித்துப் பேசுவதும் நன்கு விளங்கும். இதுவே, இவ்வேற்பாட்டின் சிறப்பாகவும் விளங்கு கிறது. தங்களது சமய நம்பிக்கைகளையும் கல்வி, மற்றும் பண்பாட்டு நிறுவனங்களையும் போற்றிக் கடைப்பிடிப்பதற்குச் சிறுபான்மையின ருக்குப் போதிய பாதுகாப்பு அளிக்கத் தவறியிருந்தால், அரசியலமைப் புத் திட்டத்தின் ஜனநாயக அடிப்படை அழிந்துபோயிருக்கக்கூடும்; பெரும்பான்மையினரின் நலனைப் பெருக்குவதற்கும் மொழியை வளர்ப்பதற்கும் திட்டம் ஒரு கருவியாக விளங்குகிறது என்ற அபகீர்த்தி யும் ஏற்பட்டிருக்கக்கூடும். அத்தகைய நிலையைப் பின்பற்றி எழுகின்ற வெறுப்பு, நாடு முழுவதும் பரவியிருக்கவும் கூடும். சமயச் சிறுபான்மை யினர், நாட்டின் எல்லாப் பகுதியிலும் வாழ்ந்துவருவதாலும், மொழி அடிப்படையில் 200 மில்லியனுக்கும் அதிகமான சிறுபான்மையினர் இருந்துவருவதாலும், இவ் வெறுப்பு சுலபமாகப் பரவியிருக்கக்கூடும். அந்நியரை எதிர்த்து நடைபெற்ற தேசிய இயக்கத்தில் சமயம், மொழி ஆகியவைகளின் அடிப்படையிலுள்ள ஒவ்வொரு சிறுபான்மையினரும் பங்கு பெற்றனர். அப்போது, பெரும்பான்மையினரின் பேராட்கள், ஒத்துழைக்கின்ற சிறுபான்மையினரின் நேர்மையான உரிமைகள் யாவற்றையும் சுதந்திர இந்தியாவில் கொடுங்கோன்மையிலிருந்து பாதுகாப்பதாக உறுதியளித்தனர். இவ்வாறு நம் தேசியப் போராட் டத்தின் அடித்தளம் உருவாகியது. திட்டத்தில் சிறுபான்மையினரின் நன்மைகளைக் கருதாது விடுத்திருந்தால், தேசியப் போராட்டத்தின் அடித்தளம் முழுவதும் நாசமடைந்திருக்கும்.

# 13. சொத்துரிமை

## திட்ட விதி 31, 31A மற்றும் 31B

திருப்தியான ஒரு நிலையை அடைவதில், அரசியல் நிர்ணய சபையில் மிகுந்த குழப்பமுண்டாக்கிய திட்ட விதிகளில், சொத்துரிமையைக் குறித்துப் பேசிய திட்ட விதி 31 முக்கியமானதாகும். சொத்தைப் பெற்று வைத்துக்கொள்ளவும், விற்பனை செய்யவும் உள்ள உரிமைகளைக் குறித்துத் திட்ட விதி 19 கூறியவற்றை நாம் முன்னரே கண்டோம். அதே திட்ட விதி, எந்த ஒரு தொழிலையோ, வணிகத்தையோ அல்லது அலுவலையோ மேற்கொள்வதைக் குறித்தும் பேசுகிறது. இவைகளுடன் திருப்தியடைந்துவிடாமல் சொத்துரிமையைக் குறித்துத் தனியான பகுதியொன்றையும் இணைப்பது உசிதமென்று அரசியல் நிர்ணய சபை கருதியது. தனிக் குடிமகனொருவன் சொத்துகளைப் பெற்று அனுபவிப்பதிலுள்ள ஏராளமான சிக்கல்களைத் தீர்ப்பதற்குத் தனியான ஒரு பகுதி அரசியலமைப்புத் திட்டத்தில் இல்லையெனில் குழப்பமேற்படுமென்றும், அதனால் பொருளாதாரத் துறையில் தலையிட்டுத் தேவையான சீர்திருத்தங்களைச் செய்வது அரசியலாரின் கடமையென்றும் அரசியல் நிர்ணய சபை கருதியது. திட்ட விதி 31, 31A ஆகியவைகள், பொது நலன் கருதி அல்லது பொதுத்துறை ஊழியத்திற்கென்று அரசியலார் சொத்துகளை வாங்குவதாலும், தனியார் சொத்துகளை வைத்துக் கொள்வதாலும் ஏற்படுகின்ற முரண்பாடுகளைக் குறித்துப் பேசுகின்றன. இவ்விரண்டிற்கும் சமரசமேற்படுத்துவதற்கு அவை முயற்சி செய்கின்றன.

ஆதியில் நிறைவேறியபடி திட்ட விதி 31ன் வாசகம் வருமாறு:
31 (1) சட்ட அடிப்படையின்றி ஒரு மனிதனின் சொத்துகளைப் பறிமுதல் செய்யக்கூடாது.

2. ஜங்கம ஸ்தாவர சொத்துகள், சேரவேண்டிய வட்டித்தொகை, ஏதாவதொரு கம்பெனியிலிருந்து கிடைக்கவேண்டிய தொகை, தொழில் அல்லது வாணிபத்தின் மூலம் பெறக்கூடிய தொகை ஆகியவை

களைப் பொது நன்மையைக் கருதி அரசியலார் பெற்றுக்கொள்ள லாம். அதற்குச் சட்ட மூலமான அனுமதி வேண்டும். கைப்பற்றப் படும் சொத்திற்குத் தகுந்த ஈட்டைச் சட்டம் நிர்ணயிக்க வேண்டும். ஈட்டுப்பணத்தை மொத்தமாக நிர்ணயித்தோ, அல்லது எந்த முறையில் எவ்வகையில் நஷ்டஈடு செய்யப்படும் என்ற விவரங்கள் யாவையும் சட்ட மூலமாக எடுத்துரைக்கவேண்டும்.

3. நாம் 2ஆம் பிரிவில் கூறியிருக்கின்ற சட்டத்தை இராச்சிய சட்ட மன்றம் நிறைவேற்றிவிட்டால், அது உடன் அமலாகின்ற அந்தஸ்தைப் பெற்றுவிடாது. அது ஜனாதிபதியின் பார்வைக்கு அனுப்பப்பெற்று, அவரது அனுமதி பெற்றபின்னரே முழு வலிமை பெற்று விளங்கத் தொடங்குகிறது.

4. இவ்வரசியலமைப்புத் திட்டம் அமலாகத் தொடங்கும்போது, ஏதாவதொரு சட்டம் இராச்சிய சட்டமன்றத்தில் நிறைவேறுகின்ற தருணத்திலிருந்து, பின் அச் சட்டமன்றத்தினால் நிறைவேற்றப்பட்டு, ஜனாதிபதியினால் பார்வையிடப்பெற்று, அவரது அனுமதியையும் பெற்று விட்டபின், அரசியலமைப்புத் திட்டம் எவ்வகையாக அமைந்திருந்தாலும், அச் சட்டம், 2ஆம் பிரிவிற்கு முரணாக உள்ளது என்ற அடிப் படையில் அதன்மீது நீதிமன்றத்தில் வழக்குத் தொடரவியலாது.

5. பிரிவு (2) ல் உள்ள எந்த விதியும் (அ) நடைமுறையிலிருந்து வரும் எந்தச் சட்டத்தையும் (பிரிவு (6) ல் வரம்பிற்குட்பட்டவை நீங்கலாக) கட்டுப்படுத்தாது.

(ஆ) இராச்சியங்கள் எதிர்காலத்தில் நிறைவேற்றக் கூடிய சட்ட விதிகள் :

(i) புதிய வரி அல்லது அபராதம் விதித்து நிறைவேற்றப் படுபவை ;

(ii) பொதுச் சுகாதாரத்திற்கென்று அல்லது உயிர், சொத்துச் சேதங்களைத் தடுப்பதற்கு ;

(iii) இந்திய டொமினியன் அல்லது இந்திய அரசு, பிற நாடு களுடன் செய்துகொண்ட உடன்பாடுகளை நிறைவேற்று வதற்கென்றும், அகதிகளின் சொத்துகளைச் சட்ட அடிப் படையில் காப்பாற்றுவதற்குமுள்ள விதிகள் ஆகியவை கட்டுப்படுத்தமாட்டா.

6. 'அரசியலமைப்புத் திட்டம் அமலாவதற்குப் பதினெட்டு மாத காலத்திற்கு மேற்படாமல் துணை நாடுகளில் நிறைவேற்றப்பட்ட

சட்டத்தை, அரசியலமைப்புத் திட்டம் அமலாக்கத் தொடங்கிய மூன்று மாத காலத்திற்குள் ஜனாதிபதியின் ஒப்புதல் பெறுவதற்கென்று அனுப்பி வைக்கலாம். அதற்கு மேல் பொதுஜன அறிவிப்புச் செய்து, சட்டத்திற்கு ஜனாதிபதி ஒப்புதல் கொடுத்தால், அது இத் திட்ட விதியின் (2) பிரிவிற்கு முரணாக உள்ளது என்றோ அல்லது 1935ஆம் ஆண்டுச் சட்டத்தின் 299ஆம் பிரிவின் (2)ஆவது உப பிரிவிற்கு முரணாக உள்ளதென்றோ கூறவியலாது'

இவ்வாறாகப் பொதுவில், அரசியலமைப்புத் திட்டம் சொத்துகளுக்குப் பாதுகாப்பளிக்கிறது. சொத்துரிமைகளைப் பொறுத்த, குறிப்பிட்ட சில சட்டங்களின் ஆர்ச்சிதத் தன்மை நாம் மேலே எடுத்துரைத்த சில கட்டுப்பாடுகளை மீறுகிறதென்று கூறி, நீதிமன்றங்களில் வழக்குத் தொடரவியலாது என உபவிதி (4) (6) ஆகியவை திட்டவட்டமாக அறிவிக்கின்றன. பல்வேறு இராச்சியங்களின் ஜமீந்தாரி முறையையும், நிலத்தை நேரடியாகப் பயிர் செய்யாது இருப்பவரையும், அகற்றுவதற்கு இச் சட்டங்கள் பயன்பெற்றன. கேடுகள் நிறைந்த இம்முறைகளை அகற்றுவதற்கென்று பொதுநலச் சீர்த்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. அச் சீர்திருத்தங்களைக் குறித்து எவ்வித ஐயப்பாடுகள் எழாமலும், நிலக்கிழார்கள் நீதிமன்றங்களில் வழக்குத் தொடர்ந்து இன்னல்கள் விளைவிக்காமலிருக்கவேண்டும் என்பதாலும் இவ் விசேட ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. அரசியலமைப்புத் திட்ட விதி பிரிவு (5) ன் மூலம் பின் வருபவைகளுக்கு, நஷ்டஈட்டு விதியைப் பயன்படுத்தலாகாது என்றும் அறிவிக்கப்பட்டது. அவையாவன : (1) வரி அல்லது அபராதம் விதித்து நிறைவேற்றப்படுகின்ற சட்டங்கள். (2) பொதுஜன சுகாதார முன்னேற்றம் அல்லது உயிர், சொத்து ஆகியவைகளுக்கு நேரக்கூடிய ஆபத்துகளைத் தடுப்பதற்கான விதிகள். (3) விட்டோடிகளின் உடமையைப் பொறுத்த சட்டங்கள்.

ஜமீந்தாரி ஒழிப்புச் சட்டங்களுக்கென அளிக்கப்பெற்ற விசேட சலுகைகள் மிகப் பயனுள்ளவை எனக் கூறுவதற்கில்லை. அரசியலமைப்புத் திட்டம் அமலாக்கப்பட்டவுடன் சில ஜமீந்தார்கள், இச் சட்டங்களில் சிலவற்றை ஆதார உரிமைகளைக் காட்டி எதிர்த்தனர். இப் போராட்டத்தின் முதல் கட்டம் பாட்னா, அலகாபாத், நாக்பூர் உயர் நீதிமன்றங்களில் நடைபெற்றது. 1950ஆம் ஆண்டு பீஹார் நிலச் சீர்திருத்தச் சட்டம் செல்லத்தக்கதனெ, பாட்னா உயர் நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியதை இவர்கள் பெற்ற முதல் வெற்றியெனக் குறிப்பிடலாம். இது உயர் நீதிமன்றத்தின் ஏகமனத் தீர்ப்பாக இருந்தது. அரசியலமைப்புத் திட்டத்திலுள்ள சமத்துவ உரிமையை (திட்ட விதி 14) அடிப்படையாகக் கொண்டு, இத் தீர்ப்பு வழங்கப்பெற்றது. சொத்துரிமையைப் பொறுத்த விதியை (திட்ட விதி 31) நீதிமன்றம் கவனிக்கவேயில்லை. 1950ஆம் ஆண்டு உத்திரப்பிரதேச ஜமீந்தாரி ஒழிப்பு-நிலச்சீர்திருத்தச் சட்டத்தை, எவ்வகையிலும் செல்லாவண்ணியாகத்

தகுந்ததென்று அலகாபாத் உயர் நீதிமன்றம் ஒப்புக்கொண்டது. அதைப்போலவே நாகபுரி உயர் நீதிமன்றத்தின் தீர்ப்பும், இராச்சிய சட்டத்தை ஆமோதித்து அமைந்திருந்தது. ஆனால், ஜமீந்தார்கள் தளர்ந்துவிடவில்லை. அவர்கள் போராட்டத்தைப் பெரு நீதிமன்றத்திற்கு எடுத்துச் சென்றனர்.

## முதல் திருத்தம்

சட்ட அடிப்படையில் மூண்ட இப்போர் முடிவடைவதற்கு நெடுங் காலம் பிடிக்குமென்பதும், அதற்கிடையில் பொதுமக்கள் பீதியடைந்து அரசாங்கங்களின்மீது நம்பிக்கையிழந்துவிடுவார்கள் என்பதும் தெளிவாயின. தாழ்ந்து வருகின்ற நிலையைச் சமாளிப்பதற்கென்று, அரசாங்கம் புது முறைகளையும் வழிகளையும் தேடியலைந்தது. நீதி மன்றங்கள் அளிக்கின்ற தாற்காலிகத் தடைகளை நீக்கி, நிலச்சீர்திருத்தச் சட்டத்தை அமலாக்குவது உடன் நிறைவேறவேண்டுமென்றதற்காக, அரசியலமைப்புத் திட்டத்திலேயே மாறுதல் செய்வதென்று முடிவு செய்யப்பட்டது. அரசியல் திட்ட விதிக்கு முதல் திருத்தம் 1951 ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்டது. அதற்கிணங்க 31A, 31B என்ற இரு புதுப் பிரிவுகள் தோன்றின. திட்ட விதியில் காணப்படும் ஆதார உரிமைகளைக் காரணம் காட்டி, நிலச்சீர்திருத்தச் சட்டத்தின்மீது எவ்விதத் தாக்குதலும் ஏற்படக்கூடாதென்னும் நோக்கமுடன் இப் பிரிவுகள் தோன்றின. மேலும் அரசியலமைப்புத் திட்டத்திற்கு அனுபந்தம் ஒன்றும் சேர்க்கப்பட்டது. ஒன்பதாவது அனுபந்தமாகிய இதில், புதிய திருத்தத்தின் நோக்கங்கள் மிக விரிவாக எடுத்துரைக்கப் பட்டன. சட்டத் திருத்தத்தின் வாசகம் வருமாறு :

31A (1) துணை இராச்சியமொன்று, ஜமீன் அல்லது ஆதீனத்தையோ, அதனுடன் இணைந்த உரிமைகளையோ, அல்லது அவ்வுரிமையைப் பறித்தும் அல்லது ஏற்றவாறு மாற்றியமைத்தும், சட்டமியற்றலாம். ஏற்கெனவே இப்பகுதியில் நாம் எடுத்துக் கூறியிருக்கின்ற ஷரத்துகள் நீங்கலாக, இராச்சிய சர்க்கார் நிறைவேற்றும் அத்தகைய சட்டங்களை, அரசியல் திட்டத்தின் இப் பகுதியிலுள்ள ஏற்பாடுகளுக்கு முரணானவையென்றும், அல்லது உறுதி செய்யப்பட்டிருக்கின்ற உரிமைகளைக் குறைத்துவிடுகின்றனவென்றும் காரணம் காட்டி, செல்லத் தகாதவையென்று தள்ளிவிட முடியாது.

'அத்தகைய சட்டம், இராச்சிய சட்டமன்றத்தில் நிறைவேற்றப் பட்டு, ஜனாதிபதியின் பரிசீலனைக்குட்பட்டு, அவரது ஒப்புதல் பெற்று விட்டால், இத் திட்ட விதியின் ஷரத்துகளை மேற்கோளாகப் பயன் படுத்த இயலாது.

"(2) இந்தத் திட்ட விதியில் (அ) 'எஸ்டேட்' என்னும் சொல் அந்தந்தப் பிரதேசங்களில் என்ன பொருளில் ஆட்சியிலிருக்கின்றதோ, அதையே குறிக்கும். நடைமுறையிலிருந்து வருகின்ற நில உரிமைச் சட்டங்களில் இச் சொல் அல்லது அதற்கு ஈடான மாற்றுச் சொல் அந்தந்தப் பகுதிகளில் எப்பொருளில் ஆட்சி பெற்றிருக்கிறதோ, அதுவே இங்கும் பொருந்தும் என்பதோடு, ஜாகிர், இனும், முவாபீ போன்றவைகளும் இதன் வரம்பிற்குட்பட்டவைகளேயாகும்.

(ஆ) ஓர் எஸ்டேட்டைப் பொறுத்து 'உரிமைகள்' என்ற சொல்லில் முதலாளி, உப-முதலாளி, மானேஜர், நில-உரிமையாளர் அல்லது பிற இடைப் பொறுப்பாளர் ஆகியோர் நில-வரியைக் குறித்து அனுபவித்து வருகின்ற உரிமைகளும் சலுகைகளும் அடங்கிவிடுகின்றன.

31B. 'திட்ட விதி 31A-ல் அடங்கியிருக்கின்ற பொதுவிதிகளுக்கு முரண்பாடில்லாத, ஒன்பதாவது அனுபந்தத்தில் கண்டிருக்கிற ஆக்டு களும், கட்டுப்பாடுகளும், அதனுடன் இணைந்த் உபரிச் சலுகைகளும், இன்றும், என்றுமே செல்லத்தகாதவை எனக் கருதப்படலாகாது. அதற்குச் சட்டம்—திட்ட விதியின் இப்பகுதியில் கண்டிருக்கின்ற உரிமைகளுக்கு முரணானது என்ற காரணத்தையோ, அல்லது நீதி மன்றத் தீர்ப்பையோ, அல்லது டிக்ரியையோ (தீர்ப்பு) அல்லது நடுநிலை யாளரின் கட்டளையையோ காரணமாக எடுத்துரைக்கக் கூடாது. சட்டத்தில் கண்டிருக்கின்ற ஒவ்வோர் ஆக்டும், கட்டுப்பாடும், உரிமை பெற்ற சட்டமன்றம் ஒன்றினால் வாபஸ் பெறப்படுகின்ற அல்லது ஏற்ற முறையில் மாற்றப்படுகின்ற காலம் வரையிலும் அமலி லிருந்துவரும்.

முதலாவது திருத்தம் நிறைவேற்றப்பட்டபோது, பெரு நீதிமன்றம் தன் முன் எடுத்து வரப்பட்ட அப்பீலில் தீர்ப்பு வழங்கிவிடவில்லை. புதிய திருத்தத்தின் கீழ் நாட்டரசு மிக்க வலிமை பெற்றுவிடுமென்பதை ஜமீந்தார்கள் நன்கு உணர்ந்தனர். எனவே, திட்டத் திருத்தத்திற்கும் எதிராக அவர்கள் போராடத் தொடங்கினர். அப்போது உருப்பெற்ற பாராளுமன்றத்திற்கு இத்தகைய சீர்திருத்தத்தைச் செய்வதற்கு அதிகாரமில்லை என அவர்கள் எதிர்த்து நின்றனர். நீதிமன்றம் இவ் வழக்கில் தீர்ப்புக் கூறிவிட்டால், எல்லா வழக்கு அப்பீல்களின் தலைவிதிகளும் நிர்ணயமாகிவிடும். எனவே, அப்பீல்களை உடனடி யாக ஆராய்வதற்கு முற்படாமல், சட்டத் திருத்தத்தின் நேர்மையை ஆராய்வதற்கு நீதிமன்றம் முனைந்தது. இத்திருத்தத்தை நிறைவேற்றிய பாராளுமன்றத்தில் ஒரே சபை இருந்தது என்பது எதிர்த்தவர்களின் முக்கியக் குற்றச்சாட்டாக இருந்தது. ஆனால், அரசியலமைப்புத் திட்டத் தின்படி, சட்டத் திருத்தம் ஏற்படுவதற்குப் பாராளுமன்றத்தின் இரு சபைகளின் ஒப்புதல் வேண்டும், பொதுத் தேர்தலுக்குப்பின், பாராளு

மன்றத்தின் இரு சபைகளும் முறையாக அமர்த்தப்பட்ட பின்னரே திட்டத் திருத்தமொன்றைச் செய்வதற்குப் பாராளுமன்றம் முயல வேண்டுமென்று திட்டத் தயாரிப்பாளர்கள் எண்ணியிருக்கின்றனர். இந்த வாதத்தை நீதிமன்றம் ஏற்கவில்லை. தாற்காலிகப் பாராளுமன்றத்திற்கு, அரசியலமைப்புத் திட்டத்தைத் திருத்தியமைக்கும் அதிகாரம் உண்டென்பதை நீதிமன்றம் ஏகமனமாக ஒப்புக்கொண்டது.

1952ஆம் ஆண்டில் இறுதியாக நீதிமன்றம் அப்பீல்களையும் தள்ளி விட்டது. மிக்க தீவிரமான விவாதங்களுக்குட்பட்ட இந்தச் சட்ட விதிகளின்மீது இறுதி முத்திரையிடப்பட்டது. இருந்தபோதிலும் நீதி மன்றங்கள் அளித்த ஒரு சில விளக்கங்கள், அரசியல் நிர்ணயசபையில் சொத்துரிமைபற்றிய விதியைப் பிரேரேபணை செய்தபோது முதலமைச்சர் கூறிய விளக்கங்களுக்குச் சற்று முரணானவைகளாக இருந்தன. இம் முரண்பாடுகள் 'பொதுநலன்', 'நஷ்டஈடு' என்ற சொற்களைப்பற்றியவைகளாகவே இருந்தன. நீதிமன்றத்தின் கருத்து வருமாறு அமைந்தது :

'பொதுநலன்' என்ற ஒன்று இருக்கும்போது, கட்டாயமாகச் சொத்துகளைப் பெறுவதற்கு அரசாங்கத்திற்கு ஒரு வியாஜமாக அது அமைந்துவிடுகிறது. ஆனால், திட்ட விதி 31 (2) ஐ கவனிக்கும்போது, சொத்தைப் பெறுவதற்குப் பூர்வாங்கமாகப் பொதுநலனை அது வற்புறுத்துவதில்லை. பொதுநலன் கருதிக் கட்டாயமாகச் சொத்தைப் பெறலாம். சொத்தைப் பெறுவதில் அது அடங்கியிருக்கிறதெனத் திட்ட விதி கருதுகின்றது போலும். எனவே, கட்டாயமாகச் சொத்தை அடைவதற்கென்று திட்டப்படும் சட்டம் செலாவணியாகுமா என்பதை விசாரித்து அறிவதற்கு, நீதிமன்றத்திற்குள்ள அதிகாரத்தைத் திட்ட விதி 31 (4) தடுத்துக் கூறுவதில்லை. பொதுநலன் கருதியே அரசாங்கம் சொத்தைப் பெற்றுள்ளதா என்பதைத் தீர்மானிப்பதற்கும் நீதிமன்றத்திற்கு உரிமையுண்டு. இன்ன காரணத்திற்காகச் சொத்துக் கைப்பற்றப்படுகிறதென்பதைத் திட்டவட்டமாகச் சட்டத்திலேயே எடுத்துரைக்க வேண்டுமென்ற தேவையில்லை. சட்டத்தின் முழு நோக்கிலும், உள்ள கருத்திலும், குறிப்பிட்ட சொத்து அரசாங்கத்தினரால் கைப்பற்றப்படுகிறதென்றோ, பொதுநலன் கருதி கைப்பற்றப்படுகிறதென்றோ அல்லது சமூகத்தினரின் நன்மைக்காகக் கைப்பற்றப்படுகிறதென்றோ, ஊகிக்க இடமிருந்தால் அதுவே போதுமானது. சமூகத்தினருக்குப் பயன்தரத்தக்கவல்லது எது என்பதைச் சட்டமன்றத்தினரே தீர்மானிக்க இயலும். சமூகத்தினரின் வாக்குகளைப் பெற்றே அவர்கள் அதிகாரத்தைக் கைப்பற்றுகின்றனர். எனவே, சொத்தைக் கைப்பற்றுவதில் பொதுநலன் இல்லையென்று கூறவியலாது. 'பொதுநலன்' என்ற சொல்லிற்குச் சட்டமியற்றப்பட்ட காலதேசவர்த்தமானங்களை அனுசரித்துப் பொருள் கூறவேண்டும்....."

பொதுநன்மை எதுவென்று தீர்மானிக்கின்ற இறுதி அதிகாரம் நீதிமன்றத்தின் கையிலுள்ளது என்பது இத் தீர்ப்பினால் விளங்குகிறது. அதனுடன் சட்டத்தில் கண்டிருக்கின்றவாறு சட்டமன்றத்தினரின் உட்கிடக்கையையே நீதிமன்றம் ஆதரிக்குமென்பதும் ஒருவாறு துலங்குகிறது. இங்கு, நீதிமன்றமும் திட்டத் தயாரிப்பாளர்களின் கருத்தையொட்டியே தீர்ப்பளித்திருப்பதும் கவனத்திற்குரியதேயாகும்.

'நஷ்ட ஈடு' என்ற சொல்லைப் பொறுத்தவரையில், நிலை, முற்றிலும் மாறுப்பட்டதாக விளங்குகிறது. அரசியலமைப்புத் திட்டத்தில், 'முழு' நஷ்டஈடு, 'தேவையான' நஷ்ட ஈடு, 'போதுமான' நஷ்ட ஈடு என்று திட்டவட்டமாக எதுவும் குறிப்பிடப்படவில்லை. ஆனால், நீதிமன்றம், அன்றைய நிலையில் உள்ள சொத்தின் மதிப்பைப்பொறுத்து,'நியாயமான நஷ்ட ஈடு' என்று விளக்கியுள்ளது. நீதிமன்றம், மேலும் ஒருபடி அதிகமாகவே கூறிவிட்டது. சொத்தின் அன்றைய மதிப்பு நூற்றுக்கு நூறு கொடுக்கப்பட வேண்டுமென்பதோடு, கட்டாயமாகப் பறிமுதல் செய்யப்பட்டிருப்பதால், அதற்கான 15 சதவிகிதம் சமாதான ஈடும் கொடுக்கவேண்டுமென்று தீர்ப்பளித்துள்ளது. 1894ஆம் ஆண்டு நில ஆக்கிரமிப்புச் சட்டத்தின் கீழ் இத்தகைய சமாதான ஈட்டிற்கு வகை செய்யப்பட்டிருக்கிறதென்றும் எடுத்துக்காட்டியது. அலகாபாத் உயர் நீதிமன்றக் கருத்திற்கிணங்க :

'திட்ட விதி 31 (2) ல் 'நஷ்ட ஈடு' என்ற சொல்லிற்குக் கைப்பற்றப்பட்ட அல்லது பறிமுதல் செய்யப்பட்ட சொத்தின் மதிப்பு என்பதே பொருளாகும். அத்தகைய சொத்திற்கு ஈட்டுத் தொகையைச் செலுத்தவேண்டியதில்லை என்றும் பொருள்படும். மொத்த மதிப்பின் முழுத்தொகையையும் செலுத்தாவிடில், அதைச் சட்ட அடிப்படையில் ஈடு செய்ததாகக் கூறமுடியாது. எனவே, அது திட்ட விதிக்கு முரண்பட்ட செயலாகும்'. கல்கத்தா உயர் நீதிமன்றமும் சற்றேறக்குறைய இவ்விதக் கருத்தையே அறிவித்தது. 'கைப்பற்றப்பட்ட சொத்திற்கு ஈடாக நியாயமான தொகை அளிக்கப்பட வேண்டுமென்று திட்ட விதி 31 (பிரிவு 2) கூறுகின்றது. சட்ட அடிப்படையில் அளிக்கப்படுகின்ற தொகை நியாயமற்றது அல்லது நேர்மையற்றது என்றால், அதைச் சட்ட விதிப்படி செலுத்தப்பெற்ற நஷ்டஈடாகக் கருத முடியாது'.

பிற நீதிமன்றங்களும் இதே வகையான விளக்கங்களையே கொடுத்தன.

ஜமீந்தாரி ஒழிப்பு வழக்குகளில் தீர்ப்பு வழங்கிய பெரு நீதிமன்றம், உயர் நீதிமன்றங்களின் இவ்விளக்கங்களையே உறுதி செய்தது. திருமதி. பெல்லா பானர்ஜிக்கும், மேற்கு வங்காள அரசிற்கும் நடைபெற்ற வழக்கில் நீதிமன்றம் மேலும் ஒருபடி முன்னேறி, தீர்ப்பு வழங்கியது :

'கைப்பற்றப்பட்ட சொத்திற்கு ஈடாக இன்ன தொகையை இன்ன விதமாக வழங்குவதென்பதைத் தீர்மானிக்கும் அதிகாரம் சட்டமன்றத் தின் பொறுப்பிலேயே வழங்கியிருக்கிறோம் என்பது உண்மையாயினும், எதை எவ்வாறு வழங்குவதென்று சட்டமன்றம் தீர்மானிக்கிறதோ அது உண்மையில் நஷ்ட ஈடாக இருக்கவேண்டும். வேறு வகையில், இழப்பிற்கு ஈடான மதிப்புடையதாக இருக்கவேண்டுமென்று கூறலாம்'.

'துவாரகநாஸ் ஸ்ரீநிவாஸ் என்பவருக்கும், ஷோலாப்பூர் ஸ்பின்னிங் நெசவு ஆலைக்கும் நடந்த வழக்கிலும், நீதிமன்றம் திட்ட விதி 31 (1), மற்றும் 31 (2) ஆகியவைகளின் தொடர்பை ஆராய்ந்து கூறியதாவது :

திட்ட விதி 31-ன் பிரிவுகளில் பயன்படுத்தப்பட்டிருக்கும் வாசகங் களிலிருந்து, 'கைப்பற்றுதல்', 'சுவாதீனப்படுத்திக்கொள்ளுதல்' என்னும் சொற்களுக்கு (திட்ட விதி 31 (2) )த் திட்ட விதி 31 (1)-ல் 'பறிமுதல்' என்ற செல்லுக்குடைய பொருளையே நாம் கூறவேண்டும். திட்ட விதி 31-ல் சுவான்தாருக்கு இழப்பிற்குரிய பாதுகாப்பு மட்டிலும் கூறப்பட்டிருப்பதன்றி, அரசாங்கதினருக்குரிய பாதுகாப்பைக் குறித்து எதுவும் காணப்படவில்லை. இந்த வழக்கில் நீதிமன்றம் அளித்த தீர்ப்பினால், மத்திய அரசினரின் சட்டமொன்று பயனற்றதாகிவிட்டது. அதனால், நாம் மேலே குறித்த கம்பெனியைச் சர்க்கார் கைப்பற்றிக் கொண்டனர். இச் சட்டம் நியாயமான சமுதாயக் கட்டுப்பாட்டு வரம்பை மீறிவிட்டதென்றும், திட்ட விதி 31 (2) ன் கீழ்க் கம்பெனிக்கு அளிக்கப்பட்டுள்ள ஆதார உரிமையைப் பறிக்க முற்பட்டுவிட்ட தென்றும், அதனால் திட்டத்திற்கு முரணானதென்றும் நீதிமன்றம் கருதியது.

இத்தகைய தீர்ப்புகளினால் கடுமையான விளைவுகளேற்பட்டன. சமுதாயப் பொருளாதார நலன்களைப் பேணுவதற்கென்று சட்டங்கள் இயற்றித் தனியார் சொத்துக்களைக் கைப்பற்றுவது மிகவும் கடினமென்று அவை உறுதி செய்துவிட்டன. நஷ்டஈட்டுத் தொகை மிகவும் அதிகமாக நிர்ணயிக்கப்பெற்றதையே இதற்குக் காரணமாகக் கொள்ளவேண்டும். சமுதாயப் பொருளாதார நலன் கருதி முதலாவ தாக ஜமீந்தாரி ஒழிப்பு மேற்கொள்ளப்பட்டது. அது தொடர்ச்சியான தொரு திட்டத்தின் முதல் கட்டமெனக் கூறலாம். அதைப்போன்ற முக்கியமான சட்டபூர்வமான வேறு முறைகளும் கையாளப்பட இருந்தன. அவைகளில் சில வருமாறு : (1) ஒரு மனிதன் கைவசம் வைத்திருக்கக்கூடிய அல்லது ஆக்கிரமிக்கக்கூடிய பயிர் செய்யத் தகுந்த நிலத்தின் உச்ச வரம்பைக் கட்டுப்படுத்துவது, அவ் வுச்சவரம் பிற்கு மேற்பட்ட நிலத்தைக் கையிழக்கச் செய்வது, பயிர்த் தொழிலில்

நிலச்சுவான்தாருக்கும், பயிரிடுவோருக்குமிடையிலுள்ள உடன்பாடுகளைச் சீர்திருத்துவது; (2) நகர், நாட்டுப்புறங்களை ஒழுங்கான முறையில் திட்டமிட்டுச் சீர்திருத்தி அமைப்பது. காலியிடங்களையும் தரிசு நிலங்களையும் பயனுள்ளவைகளாகச் செய்து, சேரிகளை அகற்றுவது; (3) தேசியப் பொருளாதாரத்தை முன்னிட்டுத் தாதுப் பொருள்கள், எண்ணெய் முதலியவற்றை அரசாங்கத்தின் நேரடி நிர்வாகத்தில் வைத்துக்கொள்வது; (4) பொதுநலன் கருதித் தாற்காலிகமாக, வாணிப மற்றும் தொழில் நிலையங்களை அரசினரின் நேரடி நிர்வாகத்தில் கொண்டுவருவது, அல்லது அவைகளின் நிர்வாகத்தைச் சீர்திருத்துவதற்கு முற்படுவது; (5) கம்பெனிச் சட்டத்தைச் சீர்திருத்துவதும் மேலாண்மைக் கழக முறையை அகற்ற முயலுவதும்; (6) பொதுநலப் பணிகளைத் தேசியமயமாக்குதல்; (7) அரசியலமைப்புத் திட்டத்தின் நஷ்டஈட்டு விதி பெரு நீதிமன்றம் வழங்கிய தீர்ப்புக்கிணங்க இருக்குமேயெனில், துரைத்தனத்தாரின் பிரதிநிதிகள் கூறியதைப்போல, இந்த வகையில் எவ்வித முன்னேற்றமும் காண இயலாது. திட்டமிட்டுப் படிப்படியாக எதிர்நோக்கியுள்ள வளர்ச்சியைச் செயற்படுத்த இயலாதவாறு, நஷ்ட ஈட்டு விதியும், நீதிமன்றங்களின் அதிகாரமும் தடைசெய்து வந்தன. இத் தடைகளெல்லாவற்றையும் நீக்கிப் புதுச் சமுதாயம் சமைப்பதில் மிகுந்த சுதந்திரம் பெறவேண்டுமெனத் துரைத்தனத்தார் முயன்றனர். அரசியலமைப்புத் திட்டத்தைத் திருத்தியமைப்பதைத் தவிர இதற்கு வேறு வழியில்லை. இதன் விளைவாக 1955ஆம் ஆண்டு நான்காவது திருத்தம் எழுந்தது.

## நான்காவது திருத்தம்

திட்ட விதி 31-ன் அடிப்படையில் எழுகின்ற நஷ்டஈட்டைத் திட்ட அடிப்படையில் நீதிமன்றத் தீர்ப்புக்குட்பட்டதென இனியும் எண்ணலாகாது என்பதே இத் திருத்தத்தின் மிக முக்கியமான கோட்பாடாக இருந்தது. கட்டாயமாகக் கைப்பற்றப்படுகின்ற சொத்துகளுக்கு, எதிர்காலத்தில் எவ்வித நஷ்டஈடும் அளிக்கப்படமாட்டாது என இத்திருத்தம் கூறவில்லை, அல்லது நஷ்டஈடு அளிப்பதையே அறவே நீக்கிவிடவேண்டுமென்பது அதன் நோக்கமல்ல. கைப்பற்றப்படுகின்ற சொத்துகளுக்குக் கட்டாயமாக நஷ்டஈடு வழங்கவேண்டுமென்பதை ஒப்புக் கொள்வதோடு, நஷ்டஈடாகக் கொடுக்கப்பட வேண்டிய தொகையைத் தீர்மானிப்பதற்குச் சட்டமன்றத்திற்கே முழு அதிகாரம் உண்டென்பதையே திருத்தம் வற்புறுத்துகிறது. எவ்வித அடிப்படைகளில், எவ்வாறு நஷ்டஈடு வழங்கப்பட வேண்டுமென்பதைத் தீர்மானிப்பதற்கு, நீதிமன்றத்தின் தலையீடு தேவையில்லை என்பதே, திருத்தத்தின் நோக்கமாக அமைகின்றது. நீதிமன்ற அதிகார எல்லையிலிருந்து நஷ்டஈட்டுப் பிரச்சினை இவ்வாறுகப் பிரித்தெடுக்கப்படுகிறது. அதைத் தீர்மானிக்கின்ற முழு அதிகாரமும்,

சட்டமன்றத்திற்கே வழங்கப்படுகிறது. அரசியலமைப்புத் திட்டத் திருத்த வாசகம் வருமாறு அமைகின்றது :

'31 (2) பொதுநலன் கருதி, சட்ட அடிப்படையிலின்றி வேறு வகையில் சொத்தைக் கட்டாயமாகக் கைப்பற்றக்கூடாது. அவ்வாறு கைப்பற்றப்படுகின்ற அல்லது கோரப்படுகின்ற சொத்திற்கு உரிய நஷ்டஈடு அளிக்கப்படவேண்டும். சட்டம், எவ்வாறு, எவ்வகையில் நஷ்டஈடு அளிக்கப்படுமென்பதைத் தெளிவுபடுத்த வேண்டும். அச் சட்டம் அளிக்கின்ற நஷ்டஈடு, நிறைவாக இல்லை என்று கூறுவதற்கு எந்த நீதிமன்றத்திற்கும் அதிகாரமில்லை. சட்டமன்றத்தினரின் தீர்ப்பே முடிவானதாகும். (2A) அரசாங்கத்திற்கு அல்லது அரசாங்கத்தின் நிறுவனமொன்றிற்கு, சொத்தொன்றைப் பெறுவதற்கு அல்லது அனுபவிப்பதற்குச் சட்டபூர்வமான உரிமை அளிக்கப்படவில்லையெனில், அரசாங்கம், அச் சொத்தைக் கட்டாயமாகக் கோருவதற்கோ அல்லது பறிமுதல் செய்வதற்கோ அனுமதி பெற்றுவிட்டதாகக் கொள்ளக் கூடாது. அது தனி மனிதனின் சொத்துரிமையைப் பறிப்பதாகுமென்பதை நினைவில் கொள்ளவேண்டும்.'

'31A (1) 13ஆவது திட்டவிதியில் கண்டிருக்கின்ற விஷயம் நீங்கலாகப் பின்வருவனவற்றிற்கென எந்த சட்டமும், அது திட்ட விதி 14, 19, 31 ஆகியவற்றால் அளிக்கப்படுகின்ற உரிமைகளுக்கு முரணாக இருக்கிறதென்பதாலோ அல்லது குறைத்துவிடுகிறதென்பதாலோ அல்லது சுருக்கிவிடுகிறதென்பதாலோ செல்லத்தகாததெனக் கருதி விடலாகாது.

(அ) எந்த எஸ்டேட்டையும் அரசினர் கைப்பற்றுவதற்கு அல்லது அதன்மேலுள்ள உரிமையைப் பெறுவதற்கு, அல்லது ரத்து செய்வதற்கு அல்லது சீர்திருத்துவதற்கான அதிகாரம்

(ஆ) சொத்தொன்றைச் சீராக நிர்வாகம் செய்வதற்கு அல்லது பொதுநலனைக் கருதிச் சிறிது காலம் அரசினர் தமது நேரடி நிர்வாகத்தில் எடுத்துகொள்வதற்கு

(இ) ஒன்றுக்கு மேற்பட்ட நிறுவனங்களைச் சீராக நிர்வாகம் செய்வதற்கு அல்லது பொதுநலனைக் கருதி ஒன்றாக இணைப்பதற்கு அல்லது

(ஈ) மேலாண்மை ஏஜென்டுகள், செயலாளர்கள், பொக்கிஷதாரர்கள், செயலாண்மை டைரக்டர்கள், டைரக்டர்கள் அல்லது நிறுவனங்களின் மானேஜர்கள் ஆகியவர்களின் அதிகாரங்கள் அல்லது பங்குதாரர்களின் வாக்குரிமைகள் ஆகியவற்றைப் பறிமுதல் செய்துவிடுவது அல்லது உரிய முறையில் சீர்திருத்தியமைப்பது

(உ) உடன்பாடு, குத்தகை அல்லது தாதுப்பொருள், எண்ணெய் ஆகியவைகளைத் தேடி எடுப்பதற்கான லைசென்சு ஆகியவைகளின் அடிப்படையில் எழுகின்ற உரிமைகளைப் பறித்துவிடுவது, சீர்திருத்துவது கெடுவிற்கு முன்னதாகவே வாபஸ் பெற்றுவிடுவது, அல்லது ரத்து செய்துவிடுவது—ஆகியவைகளாம்.

'அச் சட்டம் ஒரு துணை நாட்டின் சட்டமன்றத்தால் இயற்றப் பட்டிருந்தால், இத் திட்ட விதியில் ஷரத்துகள் அங்கு ஏற்க இயலாது. அச் சட்டம் ஜனாதிபதியின் மேற்பார்வைக்குப்பின், ஒப்புதலுக்கென்று நிறுத்திவைக்கப்பட்டிருக்கின்ற நிலை ஒன்றையே இதற்கு விதி விலக்காகக் கருதலாம்'.

அத்தகையதொரு கட்டாய விதியை ஏற்பதற்கான காரணம் ரத்தன்மையதாக இருந்தாலும், நான்காவது திருத்தம், திட்டத் தயாரிப்பாளரின் கருத்துகளுக்கு எதிராக வெகுதூரம் சென்றுவிட்டதென்றே கூறவேண்டும். சொத்துரிமை என்பதைச் சட்ட அடிப்படையில் தீர்மானிக்க இயலாதென்றால், அதை ஓர் ஆதார உரிமையாகக் கருதவே முடியாது. நாம் முன்னரே எடுத்துக் கூறியுள்ளவாறு, ஆட்சித்துறையினரின் எதேச்சாதிகாரத்திலிருந்தும், சட்டமன்றப் பெரும்பான்மையினரின் கொடுமையிலிருந்தும் காப்பாற்றப்படுகின்றதென்பதாலேயே ஆதார உரிமை சிறப்புடையதாக விளங்குகிறது. அரசியலமைப்புத் திட்டத்தில் ஆதார உரிமைகளை எடுத்துரைக்கின்ற அதிகாரத்தில் பேசப்படுகின்ற சொத்துரிமையைப் பொறுத்தவரையில், இச் சிறப்பு, முற்றிலும் அற்றுவிட்டதெனத் திட்டமாகக் கூறலாம். இவ்வுரிமையைப் பொறுத்தவரையில் பாராளுமன்ற உயர்வொன்றே அடிப்படையாக விளங்குகின்றது எனக் கூறுவது மிகவும் பொருந்தும்.

# 14. அரசியலமைப்புக்குட்பட்டுப் பரிகாரம் தேடுகின்ற உரிமை

## (திட்ட விதி 32)

ஆதார உரிமைகளை அனுபவிப்பதற்கான வகைகளை அமைக்கவில்லையெனில், அதைப்பற்றியதொரு பிரகடனம் பொருளற்றதாகி விடும். ஆதலால் அரசியலமைப்புக்குட்பட்டு, பரிகாரம் தேடுகின்ற உரிமைகளை அளித்துச் சில விதிகளை ஏற்படுத்துவதில் திட்டத் தயாரிப்பாளர்கள் நாட்டங்கொண்டிருந்தனர். ஆதார உரிமைகளைக் கொண்ட, அதிகாரத்தில் கூறப்பட்டிருக்கின்ற பொதுக் கருத்துகளை ஒட்டியே இதுவும் அமைந்திருக்கிறது.

திட்ட விதி 32, நான்கு பகுதிகளைக் கொண்டது. முதல் பகுதி பொது நோக்குடையது. அதில் 'இப் பகுதியில் கூறப்பட்டுள்ள உரிமைகளை அனுபவிப்பதற்கென்று, உரிய முறையில் பெரு நீதிமன்றத்தின் உதவி கோருவது உறுதி செய்யப்படுகின்றது.' ஹேபியஸ் கார்ப்பஸ், ஆணைக் கட்டளை (மாண்டமஸ்), விலக்கு, குவோ-வாரன்டோ, சர்டியோரரிக் கட்டளை (பத்திரத்தைத் தாக்கல் செய்யக் கட்டளை) ஆகியவைகளைப் பிறப்பித்து, இவ்வாதார உரிமைகளை அனுபவிக்கின்ற வகை தேடுவதற்குப் பெரு நீதிமன்றத்திற்குள்ள அதிகாரத்தை இரண்டாவது பகுதி திட்டவட்டமாக எடுத்துரைக்கிறது. இத் துறையில், பெரு நீதிமன்றத்தின் அதிகாரத்திற்கு எவ்வித முரண்பாடுகளுமின்றிப் பாராளுமன்றம் ஆணைகளையும் உத்தரவுகளையும் பிறப்பித்துப் பிற நீதிமன்றங்களைக் கட்டுப்படுத்தலாகுமென்று மூன்றாவது பகுதி கூறுகிறது. எந்த நீதிமன்றத்தையும் கட்டுப்படுத்தி, ஆணை பிறப்பிக்கின்ற அதிகாரத்தை இதுகாறும் பாராளுமன்றம் பயன்படுத்தியதில்லை. எந்தச் சூழ்நிலையில், இவ்வுரிமையைத் தள்ளி வைக்கலாகுமென்பதைக் குறித்து இறுதியான பகுதியில் விளக்கியுரைக்கப்பட்டுள்ளது.

இத் திட்ட விதியின் முதல் மூன்று பகுதிகளையும் ஒருங்கே நோக்கும்போது, அது ஆதார உரிமைகளை உண்மையில் பயனுள்ளதாகச்

செய்கிறது எனக் கூறலாம். இவ்வதிகாரத்தின் மிக்க சிறப்பு வாய்ந்த பகுதியாகவும் அது அமைந்திருப்பதில் வியப்பே இல்லை. இத் திட்ட விதியின் தனிச்சிறப்பைக் குறிப்பிட்டுப் பேசுகையில், நிர்ணய சபையில் அம்பேத்கர் கீழ்வருமாறு கூறினர்: 'இந்த அரசியலமைப்புத் திட்டத்தின் மிகவும் முக்கியமான விதியைக் குறிப்பிடுவதற்கு எனக்கு வாய்ப்பளிக்கப்பட்டால், நான் இதையே குறிப்பிட்டு, இவ் விதி இல்லையெனில், திட்டமே பயனற்றது என்று உறுதியாகக் கூறுவேன். அது, திட்டத்தின் உயிராகவும் இருதயமாகவும் விளங்குகின்றதென்பதை, நிர்ணய சபை உணர்ந்திருக்கிறதென்பதைக் காண மகிழ்ச்சியடைகிறேன். இதற்குப் பின்னர், எந்த சட்டமன்றத்தாலும் இத் திட்ட விதியில் குறிப்பிட்டிருக்கும் ஆணைகளை வாபஸ் பெற்றுவிட முடியாது. சட்டமன்றம் தனது இச்சைப்படி சட்டமொன்றை இயற்றிப் பெரு நீதிமன்றத்திற்குத் தடையற்ற ஆணைகளைப் பிறப்பிக்கின்ற அதிகாரம் வழங்கி விட்டது என எண்ணுவதற்கில்லை. இந்த ஆணைகளை அரசியலமைப்புத் திட்டம் பெரு நீதிமன்றத்தின் வசம் ஒப்புவித்திருக்கிறது. சட்டமன்றங்கள் கூடித் தீர்மானிக்கின்ற வகையில், அரசியலமைப்புத் திட்டத்தையே திருத்தி அமைத்தாலன்றி இவ்வதிகாரத்தை வாபஸ் பெறுவதென்பது இயலாது. தனி மனிதன் ஒருவனுக்கு அளிக்கக் கூடிய பாதுகாப்பு, அரவணைப்பு ஆகியவைகளில் இது மிகச் சிறந்த தொன்ருகும் என்று என் அறிவிற்கு எட்டிய வரையில் நான் கூறுவேன்'.

வரைதிட்டக் கமிட்டித் தலைவரின் கருத்துகளைப் பல சந்தர்ப்பங்களில் பெரு நீதிமன்றம் ஏற்று வலியுறுத்தியிருக்கிறது. ரொமேஷ் தாப்பர் என்பவருக்கும் சென்னை அரசினருக்கும் நடைபெற்ற வழக்கில் நீதிமன்றம் கூறியதாவது :

'அரசியலமைப்புத் திட்டத்தின் மூன்ருவது பகுதியில் கூறப்பட்டிருக்கும் உரிமைகளுக்குத் திட்ட விதி 32 உறுதியளிக்கின்றது. பரிகாரம் தேடித் தருகின்ற இவ் விதியும், பகுதி III-ல் இடம் பெற்றிருப்பதால் ஆதார உரிமையாகவே மாறிவிடுகின்றது.

ஆதார உரிமைகளின் காவலன் என்ற முறையில் பெரு நீதிமன்றத்திற்கு இரு அதிகார எல்லை வரம்புகள் உண்டு. அவைகள் முறையே (1) மேல் முறையீடுபற்றிய பிரச்சினைகள், (2) இயற்கையில் எழுகின்ற பிரச்சினைகள் என்பவையாம். இயற்கையில் இந்திய நாட்டெல்லைக்குள் வாழுகின்ற குடிமகன் தனது ஆதார உரிமையை இழக்க நேரிட்டால், பெரு நீதிமன்றத்திற்கு வழக்கை எடுத்துச் சென்று, பரிகாரம் தேடலாம். உயர் நீதிமன்றங்களிலேயே அத்தகைய பரிகாரங்களை அவன் அடையலாகுமென்ருலும், வழக்கை நேரடியாகப் பெரு நீதிமன்றத்திற்கு எடுத்துச் செல்வதைத் தடுக்க இயலாது.

சில சூழ்நிலைகளில் சட்ட வரம்பிற்குட்பட்டுப் பரிகாரம் தேடுகின்ற உரிமை ஒத்தி வைக்கப்படலாகுமென்று முன்னர்க் கூறியுள்ளோம் [திட்ட விதி 32 (4)]. அரசியலமைப்புத் திட்டத்தின் 'நெருக்கடிச் சட்டங்கள்' என்ற தலைப்பின் கீழ், இச் சூழ்நிலைகள் விரித்துரைக்கப் பட்டிருப்பதை நாம் காணலாம். பொதுவில் இந் நெருக்கடி நிலைகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாகும். அவை யாவன—அந்நியர் படையெடுப்பு, உள்நாட்டுக் கலகங்கள், துணை நாட்டு அரசியலமைப்பு நிறுவனங்கள் செயற்படுவதில் குழப்பம். அத்தகைய சூழ்நிலைகளில், 'நெருக்கடி நிலைமை' நிலவுவதாக இந்திய ஜனாதிபதி அறிக்கை விடுக்கலாம். அத்தகைய நிலை இருந்து வரும்போது, ஆதார உரிமை குறித்துப் பெரு நீதிமன்றத்தில் வழக்குத் தொடருகின்ற சலுகையை, நெருக்கடி நிலை நீடிக்கின்ற காலம் வரையிலும், அனுபவிக்க இயலாது என ஒத்தி வைக்கலாம் (திட்ட விதி 359). அத்தகைய ஆணை ஒவ்வொன்றையும் கூடிய விரைவில் பாராளுமன்றச் சபை ஒவ்வொன்றின் பார்வைக்கும் அனுப்பி வைக்கவேண்டும்.

## ஆணைகளைப்பற்றிய குறிப்புகள்

ஹேபியஸ் கார்ப்பஸ்: (ஆளை நீதிமன்றம் கொணர இடுங் கட்டளை, சிறை வைத்திருப்பவரை நீதிமன்றத்திற்குக் கொண்டு வரும்படி இடும் கட்டளை).

'ஹேபியஸ் கார்ப்பஸ்' என்னும் லத்தீன் மொழிச் சொல்லிற்கு, 'நீ உடலை வைத்திருக்கலாம்' என்னும் பொருள் கூறலாகும். இச் சொல் ஆங்கிலேயர்களால் நெடுநாள் பயன்படுத்தப்பட்டு வந்தது. அதன் பயனாக முன்னுரிமையுள்ள ஆணையொன்றைக் குறிப்பதாக ஆயிற்று. சட்ட வரம்பிற்கு அப்பாற்பட்டுச் சிறைப்பிடிக்கப்பட்ட ஒருவன், இவ்வுரிமையை அடிப்படையாகக் கொண்டு விடுதலை கோரும் வழக்கமேற்பட்டது. பதினேன்காவது நூற்றாண்டு முதலாகவே ஆங்கில நாட்டில் இச் சொல் வழக்கிலிருந்தது. 1679ஆம் ஆண்டில் அப் பெயர் தாங்கிய சட்டமொன்றும் வெளியாயிற்று. இவ்வாணையைப் பயன்படுத்துகின்ற உரிமையை, மானிட வாழ்க்கையின் ஆதார உரிமைகளில் ஒன்றாகக் கருதினர். வாணிபத்திற்கென்றோ அல்லது குடியேறுவதற்கென்றோ எங்குச்சென்றாலும் பிரிட்டிஷ் குடிமகன் இவ்வாணையை அனுபவிக்க வேண்டுமென வற்புறுத்துவது வழக்கம். அமெரிக்காவிலுள்ள காலனிகள் தங்கள் சுதந்திரத்தைப் பெறுவதற்கென்று போராடி, திட்ட அடிப்படையில் புதிய அரசைத் தோற்றுவித்த போது, இவ்வுரிமையும் அவ்வரசியலமைப்புத் திட்டத்தில் இடம் பெற்றுவிட்டது.

இந்திய நாட்டில், 'ஹேபியஸ் கார்ப்பஸ்' ஆணையைப் பிறப்பிக்கின்ற அதிகாரம் உயர் நீதிமன்றங்களுக்கும், பெரு நீதிமன்றத்திற்கு

மட்டிலுமே அளிக்கப்பட்டிருக்கின்றது. மற்றொரு குடிமகனைச் சிறை பிடித்திருப்பவனுக்கு இடப் பெறுகின்ற நீதிமன்றக் கட்டளையாக இவ்வாணை விளங்குகிறது. சிறைப்பட்டவனை, தனது வசம் வைத்திருப்பவன் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட இடத்திற்கு, குறித்த காரணத்திற்கென்று ஆஜர்படுத்த வேண்டுமென இவ்வாணை உத்திரவிடும்.

'ஹேபியஸ் கார்ப்பஸ்' ஆணை நிறைவேற்றுகின்ற பணி ஒன்றேயாகும். சட்ட அடிப்படையில், தகுந்த காரணங்களின்றிச் சிறைப்பட்டிருக்குமொருவனுக்கு, விடுதலையளிப்பது அதன் நோக்கமாக உள்ளது. தவறிழைப்பவனை இவ்வாணை தண்டிப்பதில்லை. சிறை பிடித்தது தவறென்று மெய்ப்பிக்கப்பட்டால், ஆணையைப் பயன்படுத்தி விடுதலை பெறுகின்ற ஒருவன் தவறிழைத்தவனுக்கு எதிராக உரிய முறையில் வழக்குத் தொடரலாகும். அரசாங்க அதிகாரம் பெற்றவர்களுக்கு எதிராகவும், தனியார்களுக்கும் நிறுவனங்களுக்குமெதிராகவும் இவ்வாணையைப் பிறப்பிக்கின்ற அதிகாரம் நீதிமன்றங்களுக்கு உண்டு.

**'மாண்டமஸ்' (ஆணைக் கட்டளை, செய் என்னும் கட்டளை).**

'மாண்டமஸ்' என்னும் லத்தீன் மொழிச் சொல்லிற்கு, 'நாங்கள் கட்டளையிடுகின்றோ'மெனப் பொருள் கூறலாகும். குடிமகன் ஒருவனது கடமையை வலியுறுத்தி, அதை அவன் செய்யவேண்டுமென வற்புறுத்தி, ஹைகோர்ட் அல்லது பெரு நீதிமன்றம் பிறப்பிக்கின்ற ஆணையை 'மாண்டமஸ்' என்று கூறலாகும். சாதாரணமாக, அமைச்சுச் சார்ந்த பணியைக் குறித்தே இவ்வாணை பிறப்பிக்கப்படும். நிலவுகின்ற சூழ்நிலையைப் பொறுத்து, சட்ட அடிப்படையில் ஒருவனை அல்லது நிறுவனத்தைப் பணிபுரிய வைப்பதை அமைச்சுச் சார்ந்த பணி என்று கருதலாம். உதாரணமாக, லைசென்சு ஒன்றைப் பெற விரும்புகிறவன், அதற்குத் தேவையான யோக்கியதாம்சங்கள் யாவையும் பெற்றிருப்பானேயாகில், லைசென்சு வழங்குகின்ற அதிகாரி அதை மறுக்க இயலாது. அதைப்போலவே வேலையிலமர்த்துகின்ற அதிகாரம் பெற்றவர், மனுதாரர் ஒருவர், அவ் வேலைக்குத் தேவையான யோக்கியதாம்சங்களைப் பெற்று வேலையிலமருவதற்குத் தகுதியானவர் என்றால், வேலையிலமர்த்தி உத்தரவு வழங்க வேண்டும். இவ்வாறு தேவையான பரீட்சைகளையும் தகுதிகளையும் பெற்றிருப்பவர்களுக்கு லைசென்சு வழங்குகின்ற அதிகாரி, உரிய லைசென்சை வழங்கத் தவறினாலும் அல்லது வேலையில்மர்த்தும் அதிகாரம் பெற்றவர், உத்தரவு அளிக்க மறுத்தாலும், அவ்வாறு உரிமை மறுக்கப் பெற்றவர்கள் மாண்டமஸ் ஆணையைக் கோரிப் பரிகாரம் பெறலாகும்.

இத்தகைய ஆணை வழங்கப்படுவதற்கு மூன்று முக்கிய அடிப்படைகள் உண்டு. எடுத்துக் கொண்ட விஷயத்தில் மனுதாரருக்குத் தனிப்

பட்ட ஆர்வமும், திட்டவட்டமான சட்ட அடிப்படையில் உரிமையும் இருக்கவேண்டும். தான் செய்து முடிக்க வேண்டுமென்று எண்ணு கின்ற பணியில் சட்ட அடிப்படையில் தான் அருகதையுள்ளவன் என்பதை மெய்ப்பிக்க வேண்டும். இறுதியாக இதைத் தவிர, வலிமை யும் சக்தியும் வாய்ந்த உபயோகமுள்ள வேறு பரிகாரமில்லை என்பதை யும் மெய்ப்பிக்க வேண்டும்.

**விலக்கு ஆணை:** கீழ்த்தர நீதிமன்றமொன்று தனது வரம்பைக் கடந்து விடாமல் பாதுகாப்பதற்கென்று விலக்கு ஆணை பிறப்பிக்கப்படு கிறது. இயற்கை நியதிக்கு எதிராக நடந்து கொள்ளாது காப்பாற்ற வும் இவ்வாணை பயன்படும்—நீதிபதி ஒருவருக்கு, இலாபமுள்ள வழக்கை அவர் விசாரிக்காது தடுப்பதை இதற்கு ஒரு மேற்கோளாக நாம் கூறலாம். விசேஷமாக அமர்த்தப்படுகின்ற நடுவர் நீதிமன்றம், கமிஷனர்கள், மாஜிஸ்டிரேட்டுகள் மற்றும் சொத்துரிமையைப் பொறுத்து நீதி வழங்கும் அதிகாரம் பெற்ற அலுவலர்களையும் அல்லது சாதாரண நடைமுறையிலில்லாது விசேஷமாக அமர்த்தப்படுகின்ற நியாய ஸ்தலங்களையும் 'கீழ்த்தர நீதிமன்றங்கள்' என்ற வகையில் சேர்க் கலாம். நீதி வழங்கும் அதிகாரம் பெற்ற, அல்லது அத்துறையுடன் தொடர்பு கொண்ட நிறுவனங்களுக்கெதிராகவே இவ்வாணையைப் பயன்படுத்தலாகும். சட்டமன்ற அதிகாரங்களைக் கட்டுப்படுத்து வதற்கு இவ்வாணையைப் பயன்படுத்த இயலாது.

சர்டியோரரிக் கட்டளைக்கு எதிர்மறையாக இவ் விலக்கு ஆணை யைக் கொள்வது பொருத்தமுடையதாகும். சர்டியோரரிக் கட்டளை யும் கீழ்த்தர நீதிமன்றத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதற்கே பயன்படும். பெரு நீதிமன்ற நீதிபதி ஜஸ்டிஸ் வெங்கட்ராம அய்யர வர்கள் இவ்விரு ஆணைகளுக்குமிடையிலுள்ள வேற்றுமைகளை கீழ் வருமாறு விளக்கியுள்ளார்கள் :

'கீழ்த்தர நீதிமன்றமொன்று, தனது வரம்பிற்கப்பாற்பட்ட வழக்கொன்றை விசாரிக்க முற்படுகையில், வழக்கில் பிரதிவாதியாக உள்ளவர், பெருமன்றத்தின் உதவியை நாடி விலக்கு மனு பிறப்பிக்கு மாறு வேண்டிக்கொள்ளலாம். கீழ்த்தர கோர்ட் உடனடியாக நடவடிக்கைளை நிறுத்திவிட வேண்டுமென்று பெரு நீதிமன்றம் உத்தரவு பிறப்பிக்கலாகும். இதற்கு மேலாகக் கீழ்த்தர கோர்ட் வழக்கை விசாரணை செய்து, தீர்ப்பையும் வழங்கிவிட்டால் நலிவுற்றவர் கள் பெரு நீதிமன்றத்தின் உதவியை நாடி, சர்டியோரரிக் கட்டளை யொன்றைப் பிறப்பிக்கவேண்டுமெனக் கோரலாம். வரம் பிற்கப்பாற்பட்ட வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டுவிட்டதாகக் கூறிப் பெரு நீதிமன்றம் கீழ்த்தரக் கோர்ட்டின் தீர்ப்பைத் தள்ளுபடி செய்து விடக்கூடும்.'

'சர்டியோரரிக் கட்டளை' (பத்திரத்தைத் தாக்கல் செய்யக் கட்டளை)

கீழ்த்தர நீதிமன்றமொன்றிலிருந்து வழக்கொன்றை உயர் நீதிமன்றத்திற்கு மாற்றுவதற்குப் பயன்பட்டுவந்த புராதனச் சிறப்புரிமைகளில் சர்டியோரரிக கட்டளையும் ஒன்று. வழக்குத் தொடருவதற்கு முன்பாக, அதிகார எல்லையை மீறிவிடாமல் பாதுகாப்பதற்கோ, அல்லது சிந்தனை ஏற்படாமல் தடுப்பதற்கோ இதைப் பயன்படுத்தலாம். இயற்கை நியதிகளை மீறியும், அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டும், கீழ்த்தர நீதிமன்றமொன்றில் தீர்ப்பு வழங்கப்பட்டுவிட்டால், அதைத் தளளிவிடுவதற்கும் இக் கட்டளையை உபயோகிக்கலாம்.

பம்பாய் அரசாங்கத்திற்கும், அத்வானி என்பவருக்குமிடையில் நடைபெற்ற வழக்கொன்றில் இக் கட்டளையின் அதிகார வரம்பைக் குறிப்பிட்டுப் பேசுகையில் பெருநீதிமன்றம் கூறியதாவது :

"(i) மக்களின் உரிமைகளைப் பொறுத்த வழக்குகளில் தீர்ப்பு வழங்குகின்ற அதிகாரம்பெற்ற மக்கள் குழுவொன்று, அத்தகைய பணியை நிறைவேற்றுகின்ற வாய்ப்புப் பெற்றுப் பணியாற்றுகின்றபோது, தான் பெற்ற அதிகார வரம்பைக் கடந்துவிட்டால் சர்டியோரரிக் கட்டளையைப் பயன்படுத்துவதற்கான நிலை ஏற்பட்டுவிடுகிறது. அமைச்சைச் சார்ந்த கட்டளையொன்றையோ அல்லது ஆட்சித் துறையினர், மற்றும் அரசினரின் ஆணைகளையோ மறுத்துவிடுவதற்காக அது பயன்படுவதில்லை. (ii) 'நீதிமன்றம் சார்ந்த' என்ற சொல்லிற்கு, ஒரு நீதிபதியின் தீர்ப்பு என்றோ அல்லது சட்ட அதிகாரம் பெற்ற மாஜிஸ்டிரேட்டுகளால் சட்ட அடிப்படையில் அளிக்கப்பெற்ற தீர்ப்பு என்றோ பொருள் கொள்ளவேண்டிய தேவையில்லை. உரிய தொரு வர்க்கத்தினர் நீதியின் பெயரால் வழங்குகின்றவை யாவும் இதில் அடங்கலாம். சூழ்நிலைகளையும் வழக்கின் எடுத்துக் காட்டுகளையும் மனத்தில் கொண்டு அவர்கள் அளிக்கின்ற பொறுப்புகளும் பிறரது உரிமைகளைப் பறிக்கின்றவைகளும் இதன் வரம்பிற்குட்படுகின்றன."

சர்டியோரரிக் கட்டளையைக் கோருகின்றபோதெல்லாம், உடன் விலக்கு ஆணையும் சேர்த்தே கோரப்படும். இதனால் செல்லத்தகாததொன்றைப் பெருநீதிமன்றம் புனராய்வு செய்கின்ற வாய்ப்பும், (சர்டியோரரி) அது உடனடியாகச் செயல்படுவதைத் தடுக்கின்ற வாய்ப்பும் ஏற்பட்டுவிடுகிறது (விலக்கு). சர்டியோரரியும் விலக்கும் இவ்வாறு ஒன்றோடொன்று மிகவும்

இணைந்திருப்பதோடு, விலக்கு என்பது மாண்டமஸ் ஆணையின் எதிர்மறையாக விளங்குகிறது. ஒரு நீதிமன்றம் அல்லது அதிகாரம் பெற்ற பிற நிறுவனத்தை அதிகார வரம்பை மீறிவிடாமல் கட்டுப்படுத்துவதற்கென்று விலக்கு ஆணை கோரப்படுகிறது. அத்தகைய நீதிமன்றமோ, பிறநிறுவனமோ செய்யத் தவறி விடுகின்ற ஒரு செயலை, நிறைவேற்றவேண்டுமென வற்புறுத்துவதற்காக மாண்டமஸ் ஆணையின் உதவி நாடப்படுகிறது.

'குவோ வாரன்டோ'

இவ்வாணை, பன்னெடுங் காலமாக வழக்கிலிருந்துவருகின்ற எளிய சட்ட முறையாகும். ஒருவன் தனக்குரிமையில்லாத பணியொன்றில் அமர்ந்து செயல்படுவதைத் தடுப்பதற்கு இவ்வாணை பயன்படுத்தப்படும். அத்தகைய பணியொன்றிற்கு ஆள் தேவை என்றும் விளம்பரப்படுத்த இயலும். சுதந்திர ஆதிக்கம் பெற்ற ஓர் அலுவல், அல்லது பொதுப்பணியாற்றுவதுடன் தொடர்புடைய ஒரு வேலை—ஆகியவை ஆக்ரமிப்புச் செய்யப்பட்டிருக்கின்றனவா, அல்லது இயற்கையாக எழுந்தனவா என்பதைத் தீர்மானிப்பது, நீதிமன்றத்தின் வேலையாக விளங்குகிறது. சட்ட அடிப்படையில் நீதிமன்றத்தின் ஆய்வுக்குப் பின் அளிக்கப்படுகின்ற பரிகாரமென்று இதைக் கருத வேண்டுமேயல்லாது, சாதாரணமாக வழங்கப்படுகின்ற ஒன்ருக இதைக் கருதக்கூடாது.

பொதுத்துறை சார்ந்த ஒரு பணிச் சட்ட அடிப்படையில் உருவாகும்போது, குவோ வாரன்டோ ஆணையின் உதவியைக் கோரலாகுமேயன்றித் தனியார் நிறுவனங்களுக்கெதிராக இதன் உதவியைக் கோரமுடியாது. அத்தகைய குடும்பக் குழுக்களின் தீர்ப்புகளைத் தாக்குவதற்கு, அவை நல்லெண்ணத்துடன் மேற்கொள்ளப்பட்டவை அல்ல என்பதையோ, அல்லது சட்டத்திற்குப் புறம்பானவை என்பதையோ மெய்ப்பிக்கவேண்டும். இவ்வாருகச் சட்டமன்ற உறுப்பினர் ஒருவர் அச் சபையின் நாயகர் எந்த உரிமைகொண்டு அவ்வாறு பணியாற்றுகிருர் என்பதைக் கேட்டறியலாம். நல்லெண்ணத்துடன், சபாநாயகர் உரிமையற்றவர் என்று உறுப்பினர் கருதினுல், உடன் குவோ வாரன்டோ ஆணையின் உதவியை அவர் கோரலாகும்.

# 15. மதிப்பீடு

அரசியலமைப்புத் திட்டத்தில் இடம்பெற்ற நாள் முதலாக ஆதார உரிமைகள்அடங்கிய அதிகாரம் இந்திய நாட்டிலும் பிற இடங்களிலும் பலத்த குறைகூறுதல்களுக்குட்பட்டிருக்கிறது. பரவலாக, இவ்வாறு குறைகூறுபவர்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். ஆதார உரிமை எதுவும் திட்டத்தில் இடம்பெற்று விடவில்லை. அங்குக் கூறியிருப்பதெல்லாம் பெயரளவிலேயே என்று கூறுபவர் ஒரு சாரார். வேலை பெறும் வாய்ப்பு, கல்வி கற்கும் வாய்ப்பு ஆகியவை இதில் இடம்பெறவில்லை. அவைகள் புறக்கணிக்கப்பட்டுவிட்டன என்று அவர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். அமைதியைக் கருதிக் காவலில் வைப்பது, சட்ட அடிப்படையில் பரிகாரம் தேடுகின்ற உரிமையை நீக்கிவைப்பது, மற்றும் இதுபோன்ற ஏராளமான விசேஷ விதிகளைச் சேர்த்திருப்பதால் இவ்வதிகாரத்தின் பொதுச் சுவையே குன்றிவிட்டதென்றும், ஆதார உரிமைகள் பொருளற்றனவாகிவிடுகின்றனவென்றும் மற்றொரு சாரார் கூறுகின்றனர். ஒரு கையால் வழங்கி மறுகையால் அவைகளைப் பறித்துவிட்டனர் என்று இவர்கள் கூறுகின்றனர். பாதுகாவலுக்குட்படுத்தப்பட்டதாகக் கூறப்படும் ஆதார உரிமைகளைச் சுற்றியும் ஏராளமான விதிவிலக்குகளும், விளக்கங்களும், உபநடைகளும் வேலியிட்டதுபோல அமைந்திருப்பதால், ஆதார உரிமை என்ற பெயரால் உண்மையில் குடிமகனுக்குக் கிடைப்பது யாது என்ற ஐயமே எழுவதாக மூன்றுவது சாரார் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு குறைகூறியவர்களில் ஒருவர் இவ்வதிகாரத்திற்கு 'ஆதார உரிமைகளின் மீதுள்ள கட்டுப்பாடுகள் அல்லது ஆதார உரிமைகளும் அதன் மீதுள்ள தடைகளும்' என்று பெயரிட்டழைப்பது மிகவும் பொருந்தும் என்று ஏளனமாகக் குறிப்பிட்டார்.

வேலைவாய்ப்பு உரிமை, ஓய்வு, அமைதிபெறும் உரிமை, சொத்துகளின் பாதுகாவல் உரிமை—ஆகியவை ஆதார உரிமைகளடங்கிய அதிகாரத்தில் இடம்பெறவில்லை என்பது உண்மை.

கல்வி கற்கும் உரிமைகூட அப் பட்டியலில் இடம்பெறவில்லை. ஆனால், இவைகள் ஏன் இடம்பெறவில்லை என்று ஆராய்வது மிகச் சுலபமாகும். இவ்வதிகாரத்தில் கூறப்பட்டுள்ள உரிமை ஒவ்வொன்றையும், நீதிமன்றத்தில் வாதாடிப் பெறலாம். இவ் வுரிமைகள் பறிபோகும்போது சட்டபூர்வமான பரிகாரம் தேடிக்கொள்ளலாம். இதனால் இவை நடைமுறையில் பயன் படக்கூடியவைகளாக விளங்குகின்றன. இதற்கு மாறாக, உதாரணமாகக் கல்வி கற்கின்ற உரிமையை மேற்கோளாகக் கொள்வோம். 'பதினான்கு வயது நிரம்பப்பெறாத ஒவ்வொரு குழந்தைக்கும், இலவசக் கல்வி பெறுகின்ற வாய்ப்பு உண்டு.' இது மறுக்கமுடியாத உரிமை. இதை நடைமுறையில் கொண்டு வருவதற்கு அரசினர் நாடு முழுவதிலும் ஏராளமான பள்ளிகளை உடனடியாகத் திறக்கவேண்டும். திட்டத்தை ஏற்கும்போது இந்திய நாட்டில் நிலவிய சூழ்நிலையில் இந்த உரிமையை நடை முறையில் அனுபவிக்கச் செய்வது சாத்தியமாகுமா? சாத்தியமே இல்லை என்பது தேவையற்ற பதிலாகும். பல ஆண்டுகளுக்குப் பின்னரே, இவ்வுரிமையை ஒவ்வொருவரும் அனுபவிக்கின்ற வகை தேட இயலும். இது காரணம்பற்றியே கல்வி கற்கின்ற உரிமை, அரசினரின் நெறிசெய் நியதிக் கொள்கை என்ற அதிகா ரத்தில் இடம்பெற்றிருக்கிறது. அதனுடன், பத்தாண்டுகள்வரை காலக்கெடுவும் அளிக்கப்பட்டிருக்கிறது.

ஆதார உரிமைகளைச் சட்ட அடிப்படையில் பெறலாம் என்ற குணமே அதை நெறிசெய் நியதியினின்றும் வேறுபட்டதாகச் செய்கின்றது. ஆதார உரிமைகளை நீதிமன்றத்தில் வழக்காடிப் பெறலாகும். நெறிசெய் நியதிகளை அவ்வாறு பெற்றுவிடமுடி யாது என்பதால் சிலர் கூறுவதைப்போல அவை பயனற்றவை என்றும், பொருளற்றவை என்றும் கருதிவிடக்கூடாது. பத் தொன்பது, மற்றும் இருபதாவது நூற்றாண்டுகளில் ஆதார உரிமைகளைப்பற்றிய கருத்துகளும். நடைமுறையில் கடைப் பிடிக்கவேண்டிய வழிகளும் சிறுகச்சிறுக எவ்வாறு உருப்பெற் றன என்பதை நன்குணர்ந்துகொண்டால், இவ்விரண்டிற்கும் இடையிலுள்ள வேற்றுமைகள் மிக நன்றாகப் புலனாகும். ஐரோப் பிய நாட்டுத் தொழிற் புரட்சியின் விளைவாகத் தொழிலாளர் கூட்டத்தினர் அரசியலில் நாட்டங்கொள்ளலாயினர். தங்களது நலனைப் பெருக்கிககொள்வதற்குத் தாங்கள் விரும்பி ஈடேற்ற விரும்பும் சூழ்நிலையும, பதினேழு, மற்றும் பதினெட்டாவது நூற் றாண்டுகளில் மத்தியதர வகுப்பினர் தேவையென்று கருதி விரும் பிய சூழ்நிலைகளும் நேர்மாறானவை என்பதையும் அவர்கள் நன்கு உணர்ந்தனர். தொழிற்சாலைகளில் உழைப்பதற்கு ஏற்ற நல்ல

சூழ்நிலைகளைத் தொழிலாளர் விரும்பினர். குடியிருக்க வீட்டு வசதி, சுகாதார வசதிகள், மருத்துவ வசதி, சமுதாயப் பாது காப்பு ஆகியவைகளையே அவர்கள் விரும்பினர். தங்கள் குழந்தை களுக்குக் கல்வி வசதி வேண்டுமென்றும் அவர்கள் கோரினர். நேர்மையான செல்வப் பங்கீட்டையும், பணக்காரர்களுக்கு அதிக மாகவும் தாராளமாகவும் வரி விதிக்கப்படவேண்டுமென்பதையும் அவர்கள் விரும்பினர். பேச்சுரிமை, சமயத்தைக் கடைப்பிடிக்கும் உரிமை ஆகியவைகளையே மத்தியதர வகுப்பினர் கோரிவந்தனர். இவ் வுரிமைகளைப் பெற்றுத் தருவதற்கு, அரசாங்கம் நேரடியான முயற்சி மேற்கொள்ளவேண்டிய தேவை ஏற்படவில்லை. சில வேலைகளில் தலையிடாமல் அரசாங்கம் விலகிக்கொள்வதாலேயே இவ் வுரிமைகளைப் பெற்றுவிடும் வாய்ப்புகள் ஏற்படக்கூடும். உதாரணமாக, செய்தித்தாள்களின் மீது தேவையற்ற தடை விதிக் காமலும், சமயத்துறையில் தலையீடு செய்யாமலுமிருந்தாலும், இவ் வுரிமைகளை மக்கள் பெற்றுவிடக்கூடும். ஆனால், நல்வாழ்விற் கான தேவைகளைத் தொழிலாளர்கள் கோரியபோது அரசாங்கம் தீவிர நேரடி நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டிய தேவை ஏற்பட்டது. தொழிற்சாலைச் சட்டங்களை இயற்றுவது, கட்டாய இலவசக் கல்வி அளிப்பது, வயதுவந்தவர்களுக்குப் 'பென்ஷன்' வழங்குவது, வேலையற்றவர்களுக்கு உதவி மானியமளிப்பது ஆகிய வேலைகளையும் அரசினர் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. பதினேழு, பதினெட்டாவது நூற்றாண்டுகளில் நடுத்தர வகுப்பி னர் கோரிய உரிமைகளுக்கும், பத்தொன்பது இருபதாவது நூற் றாண்டுகளில் தொழிலாளர் சமூகம் கோரிய உரிமைகளுக்கும் இடையிலுள்ள தாரதம்மியங்களை நாம் தற்போது நன்கு உணர்ந்துகொள்ளலாம். நீதிமன்றங்களின்மூலம் பெற இய லாத உரிமைகளின் அருமைகளைப் போற்றுதவர்கள் இத் தார தம்மியங்களை அறிந்திலர் என்று கூறலாம். வேலை பெறுகின்ற உரிமையையும் கல்வியறிவு பெறுகின்ற உரிமையையும் ஒரு நீதிமன்றத்தின் வாயிலாகப் பாதுகாக்க இயலாது. அத் தகைய உரிமைகளைப் பாதுகாப்பதற்கு முற்பட்டால், அவை நீதிமன்றங்களாக விளங்கமுடியாது. இவ் வுரிமைகளைச் சட்ட மன்றங்களின் மூலமாகச் சட்டமியற்றியே வழங்க இயலும். நீதிமன்றத்தின் உதவியை நாடுவதற்கு அவை அருகதை யற்றவை. வயதுவந்த மக்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட பேராட்களைக்கொண்ட சட்டமன்றத்தின் வாயிலாகவே அவை களுக்குப் பரிகாரம் தேட இயலும். வயதுவந்தோருக்கு வாக் குரிமை என்ற அடிப்படையில் இயங்கும் ஜனநாயக ஆட்சிமுறை யில், சட்டமன்றங்கள் தகுந்த முயற்சிகளை மேற்கொண்டு, அவ் வுரிமைகள் வெறும் ஏட்டுச்சுரைக்காய்களாக இருந்துவிடாமல்,

நீதிமன்றவாயிலாக அமல் நடத்தும் வாய்ப்புள்ள உரிமைகள் போன்று விளங்கச் செய்ய இயலும்.

நெருக்கடி நிலைகள் நிலவுகின்றபோது அடிப்படையில் பரிகாரம் பெறுவதை ஒத்திவைப்பதையும் ஏற்றுச் சுலபமாக வாதிட இயலாது. ஆனால், அவைகளின் தேவைகளைக்குறித்து ஒருசில சமாதானங்களைக் கூறமுடியும். சமுதாய நலனைக் காப்பாற்றுவதற்கென்று, தனி மனிதனின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவது அவசியமென்று முன்னர் கூறியுள்ளோம். தாங்கள் உருவாக்குகின்ற குடியரசிற்கு உள்ள அபாயங்களையும், அதை நீடித்து நிலைபெறச் செய்வதிலுள்ள இடர்ப்பாடுகளையும் திட்டத் தயாரிப்பாளர்கள் மிக நன்ருக அறிவார்கள். நமது நாடு மிக்க குழப்பமான இடைக்கால நிலையைக் கடந்துவருகின்ற சூழ்நிலையிலேயே அவர்கள் குடியரசை உருவாக்குவதற்கு மிகுந்த முயற்சி செய்து வந்தனர். உருவாகிவருகின்ற அரசிற்கு வெளிப்படையாக எதிர்ப்புத் தெரிவிக்கின்ற கட்சிகளும் குழுக்களுமிருந்தன. காந்தியடிகள் கொலையுண்ட நிகழ்ச்சி, இச் சூழ்நிலையை விளக்குகின்ற தக்க சான்ருக அமையும். இவ்வாருகப் பலாத்காரத்தாலும் வலிமைக்கொள்கையாலும் தங்கள் இலட்சியங்களை அடைவதென்று உறுதிபூண்ட கட்சிகளும் குழுக்களுமிருக்கும்போது, ஜனநாயக நிறுவனங்களின் அடித்தளங்களையே அவை தாக்குகின்றபோது சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றமொன்றிற்கு நெருக்கடி நிலையில் சிறைப்பிடிக்கும் அதிகாரத்தை ஓர் அரசியலமைப்புத் திட்டம் வழங்குமென்ருல், அத்திட்டம் ஆதார உரிமைகளையே அடியோடு தகர்த்துவிட்டது என்று கூறுவது அணுவளவேனும் பொருந்தாது. இந்திய நாட்டில் வழங்குகின்ற ஆதார உரிமைகளைக்குறித்து பிரிட்டிஷ் எழுத்தாளர் ஒருவர் அறிவிக்கின்ற கருத்து பின்வருவாறு: ‘ நெருக்கடி நிலைகளில் சிறைப்பிடிப்பது என்பது இந்திய நாட்டின் ஆட்சித் தேவைகளில் ஒன்று. சில நபர்களை அவர்களது செயல்களுக்காக மாற்று முறைகளால் தண்டிப்பதால் என்ன வருத்தங்கள் நேரிடக்கூடுமோ, அதைக் காட்டிலும் இம் முறையால் ஏற்படுகின்ற வருந்தத்தக்க விளைவுகள் மிகக் குறைவாகவே இருக்கக்கூடும். அத்தகைய நபர்கள் பொதுஜன அமைதிக்கும் நல்வாழ்விற்கும் பங்கம் விளைவிக்கின்றவர்களாக இருந்தபோதிலும், அவர்களைச் சரியான முறையில் தண்டிக்க இயலாதுபோய்விடவும் கூடும். பொதுப் புரட்சியால் இந்திய நாட்டில் பேராபத்துகளும் அமைதிப் பங்கங்களும் அதிகமாக ஏற்படுகின்றன. தகரப்பெட்டிகளை ஓசைப்படுத்தும் புரட்சி வீரர்களுக்கும், சதித்திட்டம் தீட்டுகின்ற அரசியல் குழுவின் அங்கத்தினர்களுக்கும் இந்திய அரசாங்கம்,

பிரிட்டிஷ் குடிமகன் அனுபவிப்பது போன்ற எல்லா உரிமைகளையும் தாராளமாக வழங்கிவிட முடியாது.'

இந்திய நாட்டின் விஸ்தீரணத்தையும், மக்கள் தொகையையும், அந் நாட்டை எதிர்நோக்கியிருக்கின்ற பிரச்சினைகளையும், சென்ற இருபது ஆண்டுகளாக அவ்வரசாங்கத்திற்கு ஏற்பட்டுள்ள பல சிக்கலான சூழ்நிலைகளையும் எண்ணிப்பார்க்கும்போது, அவசர நெருக்கடியை முன்னிட்டுச் சிறையிலடைக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே இருக்கிறது. அரசியலடிப்படையில் பரிகாரம் தேடும் உரிமையை ஒத்திவைப்பதற்கு இன்றுவரை சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

ஆதார உரிமைகளை எடுத்துக்கூறியுள்ள முறை மிகவும் கடுமையான வாசகங்களைக்கொண்டது. எளிதில் அவைகளை மக்கள் புரிந்துகொள்ள இயலாது என்பது மூன்றாவது குற்றச்சாட்டு. அவ் வுரிமைகளைச் சுற்றிலும் வேலியமைப்பதுபோல ஏராளமான விதிவிலக்குகளும் உபவிதிகளும் நிறைந்திருக்கின்றன என்றும் கூறப்படுகிறது. இக் குற்றச்சாட்டுகளை ஏற்பதைத் தவிர வேறு வழியில்லை. இத்தகைய முறை அரசியலமைப்புத் திட்ட முழுவதும் கையாளப்பட்டிருப்பதை நாம் காணலாம். விமர்சகர் ஒருவர் கூறியதைப்போல, அது திட்டம் மட்டிலுமன்று; திட்டத்தைப்பற்றிய விரிவான விளக்க நூலாகவே விளங்குகிறது. இந்திய ஆதார உரிமைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அதைப்போன்ற அமெரிக்க நாட்டு உரிமைச் சாசனத்தைத் தெளிவிற்கும் சுருக்கத்திற்கும் மிகப் பெயர்பெற்ற அதிசயப் பொருள் என்றே கூறவேண்டும். அமெரிக்க அரசியலமைப்புத் திட்டத்தை உருவாக்கியவர்கள், ஆதார ' உரிமைகளைப்பற்றி மிக எளிய கருத்துகளைக் கொண்டிருந்தனர் என்பதோடு, அதை ஒரு சில எளிய வாக்கியங்களிலமைத்துத் திட்டத்துடன் இணைத்துவிட்டனர். அதையொட்டிய பல பிரச்சினைகளை நம்பிக்கையுடன் நீதிமன்றத்திற்கு விட்டுவிட்டனர். இதற்கு மாறாக, சட்டத்தைச் செயற்படுத்துவது, விளக்கம் தருவது ஆகிய வேலைகளை நீதிமன்றங்களிடம் ஒப்படைச்சாமல்,இந்திய அரசியல் நிர்ணயசபை, இவைகளுடன் ஒட்டிய விதிவிலக்குகளையும் வரம்புகளையும் எடுத்துரைக்க முற்பட்டு, அரசியலமைப்புத் திட்டத்தை ஒரு சுருக்க உரையாகவே உருவாக்கிவிட்டது. பலவகையான அரசியல் பிரச்சினைகளை நன்கு அறிந்துகொள்வதற்கு, மொழிப் பிரச்சினை ஒன்றுமட்டிலுமே முட்டுக்கட்டையாக இருக்கிறது என்ற கருத்தும் தவறானது என்று இச் சந்தர்ப்பத்தில் நினைவுகொள்ளுதல் நலம். புதியதோர் அரசியல் முறையைக் கையாளும்போதும் அப் பிரச்சினை எழுகின்றது. புதிய முறையை நன்றாகக் கற்று

அதை ஐயமற உணர்வதாலேயே அரசியல் திட்டத்தைத் தேசியச் சொத்தில் ஒன்ருக அமைக்க இயலும்.

ஆதார உரிமைகளடங்கிய அதிகாரத்தை உன்னிப்பாகக் கற்பவர்களுக்கு அது தொடர்ச்சியான வேதாந்தத்தால் விளைந்தது என்று கூறமுடியாது. மொழி, சமயம், பண்பாடு ஆகியவற்ருல் ஒன்றுபட்ட நாடுகளில், ஒரு நூற்ருண்டுக் காலத்திற்கு முன் அத்தகைய வேதாந்தம் ஒருகால் மதிப்புப் பெற்று விளங்கியிருக்கக்கூடும். ஆனுல், இந்திய நாட்டில் இதற்கு மாருக, சிக்கல்களும், பன்மைக் கூறுகளும், கருத்து வேற்றுமைகளும் நிறைந்திருந்தன; இவை யாவும் திட்டத்தில் பிரதிபலித்தேயாகவேண்டுமென்ற நிலையுமிருந்தது. அப் பிம்பங்களைக் காட்டுகின்ற நல்லதொரு கண்ணுடியாக ஆதார உரிமைகளைக்கொண்ட அதிகாரம் விளங்கியது. விமர்சகர் ஒருவர் அறிவிக்கின்ற பின் வரும் கருத்தில் ஓரளவு உண்மையிருக்கிறதென்று கூறலாம்; 'பத்தொன்பதாவது நூற்ருண்டு விமரிசகர் கொள்கையின் இழையொன்று இதனூடே செல்லுகின்றது. பிரிட்டனின் அரசியல் பிரச்சினைகளின் விளைவுகளை இங்குக் காணலாம்; பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகத் தோன்றிய கடுமையான எதிர்ப்புகளின் நினைவுகள் இதில் உண்டு; சூழ்நிலையாலும் காலநிலையாலும் இந்திய நாட்டில் வேருன்றிவிட்டசிலசமுதாய நிறுவனங்களைச் சீர்திருத்துகின்ற முயற்சியையும் இங்கு நாம் உணர்ந்துகொள்ளலாம். இதன் விளைவாக 24 திட்ட விதிகளைக் கொண்ட நுணுக்கமான சில சூத்திரங்கள் எழுந்துள்ளன. அவற்றுள் சில மிக நெடியவையாகவும் காணப்படுகின்றன. இவைகளை அடிப்படையாகக் கொண்டு ஏராளமான சிக்கல் நிறைந்த சட்ட வழக்குகள் வளருமென உறுதியாகக் கூறலாம்.'

ஆதார உரிமைகள் நீதிமன்றங்களால் காப்பாற்றப்படுபவை அல்ல. இறுதியாகப் பொதுஜன ஆதரவு பெற்று அவைகள் இலங்கவேண்டும் என்பது ஒப்புக்கொள்ளப்படவேண்டிய உண்மையாக இருக்கிறது. ஆனுல், பொதுமக்களின் ஆதரவு ஆதார உரிமைகளைக் காப்பாற்றுவதற்குப் பயன்படவேண்டுமெனில், ஒரு நாட்டில் பொதுஜனங்களின் வாக்குக் கட்டுப்பாட்டுடனும் வலிமைபெற்றதாகவும் வளரவேண்டும். இந்திய நாடு மிகுந்த விஸ்தீரணமுள்ளது ; ஏராளமான மக்களைக்கொண்டது. ஏழ்மையும் பிற்போக்கும் அங்குக் காணப்படுகின்றன. கல்வியறிவும் குடிமையுணர்வும் அந் நாட்டில் மேலும் வலுப்பெறவேண்டும். இதுபோன்ற ஒரு நாட்டில், பொதுஜன வாக்கைக் கட்டுப்பாடான முறையில் உருவாக்குவதற்குத் தேவையான முயற்சியைக் குறித்து மிகைப்படுத்திக் கூறவேண்டுவதில்லை.

இவ்வாறு வலிமையுள்ள பொதுஜன ஆதரவு இல்லையென்பதால், ஆதார உரிமைகளை ஆட்சித்துறையினரின் கையிலும், சட்ட மன்ற மெஜாரிட்டிகளின் கைகளிலும் ஒப்படைப்பது எத்துணை பயங்கர விளைவுகளைத் தோற்றுவிக்குமென்பதைக் கூறத் தேவையில்லை. ஆதார உரிமைகளை ஆதரிக்கும் வீரஞகைப் பொதுமக்களின் வாக்கு உருப்பெறுவதற்கு பிரிட்டனிலும்கூடப் பல நூற்றாண்டுகள் பிடித்தன. சட்ட அடிப்படையில், பரிகாரம் தேடுகின்ற சலுகையை ஆதார உரிமைகளுடன் இணைத்துக் கூறியமைக்கு இதைவிடச் சிறந்த விளக்கம் தேவையில்லை. இருந்தபோதிலும், ஆதார உரிமைகளைப் போற்றி வளர்ப்பதற்கு. இந்திய நாட்டில் சுறுசுறுப்பும் பொறுப்பும் வாய்ந்த பொதுமக்களின் ஆதரவை வளர்ப்பது இன்றியமையாத தேவைகளிலொன்ருக இருக்கிறது. நிலையான அமைதியைச் சுய உரிமையை விலையாகக் கொடுத்தே பெறமுடியும்.

ஆதார உரிமைகளடங்கிய பட்டியலொன்றைத் தயாரிப்பது அரசியல் நிர்ணய சபைக்கு மிகவும் கடினமானதொரு வேலையாகவே இருந்தது. இறுதியாக நாம் பெற்றிருப்பது சிக்கல் நிறைந்த சமரசத்தின் விளைவாக இருக்கிறது. நிர்ணயசபையின் அறிவுச் சிறப்பைக் குறித்துத் தீர்ப்பளிப்பதற்கு உரிய காலம் பூர்த்தியாகிவிடவில்லை. என்ருலும், ஒரு செய்தி மிகத் தெளிவாக விளங்குகிறது. இந்திய நாட்டின் பெருநீதிமன்றம் திட்ட அடிப்படையில், ஆதார உரிமைகளைப்பற்றிய வழக்குகளிலேயே அதிகமான தீர்ப்புகளை வழங்கியிருக்கின்றது. திட்ட அடிப்படையில் அதன்முன் எடுத்துச்செல்லப்பட்ட பிற வழக்குகளின் எண்ணிக்கை மிகவும் குறைவாக உள்ளது. இவ்வாதார உரிமைகளின் போஷகர் என்ற முறையில் நீதிமன்றங்கள் அளித்துள்ள தீர்ப்புகள், ஆட்சித்துறையினரிடமும் சட்டமன்றப் பெரும்பான்மையினரிடமும் இவ் வுரிமைகளுக்கு நன்மதிப்பையே பெற்றுத்தந்திருக்கின்றன. அந் நிறுவனங்கள், இவ் வுரிமைகளை உதாசீனம் செய்யாமலிருக்கவேண்டும் என்பதற்காகவே இவ் வேற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன என்பதை நாம் உணரவேண்டும். பாராளு மன்றம் இயற்றுகின்ற சட்டங்களையும், இராஜ்ய சட்டமன்றங்கள் இயற்றுகின்ற சட்டங்களையும் அவை வரம்பை மீறியவைகள் என்று மெய்ப்பிக்கப்பட்டால் அவை செல்லத்தகாதவை எனத் தீர்ப்பு வழங்குவதற்கு நீதிமன்றங்கள் தயங்கியதே இல்லை. சட்ட வரம்பிற்குட்பட்டுத் தனி மனிதனின் உரிமைகளைக் கட்டுப்படுத்துகின்ற வாய்ப்பினையே அவ்வரசியல் நிறுவனங்களுக்கு நீதிமன்றங்கள் வழங்கியிருக்கின்றன. அதைப்போலவே, பல சந்தர்ப்பங்களில் ஆட்சித்துறையினரின் அடாத செயல்களிலும், சட்ட

வரம்பை மீறிய நடவடிக்கைகளிலும், ஆட்சிப் பொறுப்பிற்கென்று அளிக்கப்பட்டுள்ள அதிகார வரம்பை மீறிய செயல்களிலும் நீதிமன்றம் தலையிட்டு நீதிவழங்கியுள்ளது. ஒவ்வொருமுறையும் குடிமகனின் ஆதார உரிமையைப் போற்றி நீதிமன்றங்கள் தீர்ப்பு வழங்குகின்றபோதெல்லாம், அதன் விளைவுகள் போற்றத்தக்கவையாகவும், நன்மை பயக்கத்தக்கவையாகவுமே இருந்திருக்கின்றன. அரசியல் திட்டத்தில் ஏற்பட்ட ஒருசில திருத்தங்களால், ஆதார உரிமைகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன வென்பது உண்மையென்றாலும், ஆதார உரிமைகளடங்கிய அதிகாரத்தை முழு நோக்காகப் பார்க்கும்போது, தனிமனிதனின் சுய உரிமையைக் காக்கும் இணையற்ற அரணாகவும், பொதுவாழ்வில் ஒழுக்கத்திற்கு ஓர் இலக்கணமாகவும், இந்தியக்குடியாட்சியின் வலிமைமிக்க, நிலையான அடித்தளமாகவும் விளங்குகின்றது என்பதில் ஐயமில்லை.

இருந்தபோதிலும், ஓர் எச்சரிக்கையும் இங்குப் பொருத்தமுடையதாகவே இருக்கும். ஆதார உரிமை பறிபோகும்போது, பெருநீதிமன்றத்தில் பரிகாரம் கிடைக்கும் என்பதால், எல்லோருக்கும் அப் பரிகாரம் கிடைத்துவிடுமென்று எண்ணிவிட வேண்டா. வழக்கை அப் பெருநீதி மன்றத்திற்கு எடுத்துச் செல்வதிலுள்ள பணச்செலவைக் கருதியே, இவ்வாறு கூறவேண்டியிருக்கிறது. நியாயம் மலிவாகவும், விரைவாகவும், எளிதாகவும் கிடைப்பதற்கு வழிவகுத்தாலன்றிச் சாதாரண இந்தியக் குடிமகனின் நோக்கிலிருந்து இவ்வாதார உரிமைகளைச் சீரான முறையில் அவனை அனுபவிக்கச் செய்வது அசாத்தியமாகிவிடும்.

# 16. நெறிசெய் நியதிகள்

தற்கால அரசியலமைப்பு வகைகளில் நமது திட்டத்திலுள்ள 4ஆம் பகுதியிலடங்கிய 'அரசினரின் நெறிசெய் நியதிகள்' என்ற ஏற்பாடு மிகவும் நூதனமானதாகவும் சிறப்பானதாகவும் இருக்கிறது. ஐரிஷ் குடியரசு அரசியலமைப்புத் திட்டத்திலும் இத்தகைய ஏற்பாடொன்று காணப்படுகிறது. அதற்கு 'சோஷலிசக் கொள்கையின் நெறிசெய் நியதிகள்' என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளது. இந்தியத் திட்டத் தயாரிப்பாளர்களை இம் முறை மிகவும் கவர்ந்திருக்கின்றதென்று கூறப்படுகிறது. ஆனால், ஸ்பானிய நாட்டுக் குடியரசு முறையில் கையாளப்பட்டிருப்பதையே ஐரிஷ் நாட்டினர் பின்பற்றியுள்ளனரெனத் தெரிகிறது. இத்தகையதோர் ஏற்பாட்டை அரசியலமைப்புத் திட்டத்தில் முதன்முதலாக இணைத்த பெருமை ஸ்பானிய நாட்டினரையே சாரும். ஃபிரெஞ்சுப் புரட்சியின்போது, தனி மனிதன், குடிமகன் ஆகியவர்களின் உரிமைகளைப் பிரகடனப்படுத்தியபோதும், அமெரிக்கக் காலனிகள் தங்கள் சுதந்திரப் பிரகடனத்தைச் செய்தபோதும், இவ்வெண்ணக் கருத்தின் கரு தோன்றிவிட்டதாக நாம் கூறலாம். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள மக்களின் மீது இப் பிரகடனங்களின் செல்வாக்கு மிக அதிகமாக இருந்தது. இதனால் ஊக்கம் மிகப் பெற்ற அம் மக்கள் எல்லா வகையான அரசியல் கொடுமைகளையும் களைந்தெடுப்பதற்கு முற்பட்டனர். மேலும், அக் காலங்களில் சாதாரணமானவை என்று கருதப்பெற்ற சமூக விரோதமான செயல்களையும் களைந்துவிடுவதற்கு அரசினர் போதிய நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டுமென்றும் வற்புறுத்தினர்.

தற்காலத்தில், நவீன சமுதாயத்தில் உள்ள கெடுதிகளையும் கொடுமைகளையும் களைந்துவிடுவதற்கு மார்க்சிய தத்துவத்தை ஒப்புக்கொள்ளாத அரசியல் சமுதாயச் சீர்திருத்தவாதிகள், அத்தகைய குறிக்கோள்கள் அரசினரின் வழிகாட்டிகளாக அமையவேண்டுமெனக் கருதுகின்றனர். ஜெரமி பென்தாம்

என்பவரின் கருத்துகளும்,லிபரல் மற்றும் புரட்சிமனப்பாங்குள்ள மேற்கு ஐரோப்பிய அரசியல் கட்சியினரின் கருத்துகளும் ஃபேபியன் சோஷலிசக் கொள்கையின் பெரும்பான்மையான அடிப்படைகளும், ஓரளவு கில்டு சோஷலிசக் கொள்கைகளும் நமது அரசிலமைப்புத் திட்டத்துடன் இணங்கிய கொள்கைகளாகவே காணப்படுகின்றன. சிட்னி, பியாட்ரிஸ் வெப் ஆகியவர்களின் ஆவி அரசியலமைப்புத் திட்ட முழுவதிலும் வட்டமிடுவதாகவும், அரசியலமைப்புத் திட்டத்தின் இப் பகுதி முழுவதும் 'சோஷலிசம்' என்ற சொல்லைப் பயன்படுத்தாது ஃபேபியன் சோஷலிசக் கருத்துகளையே கூறுவதாகவும், 'முதலீட்டுச் சாதனங்கள், வருமானப் பங்கீடு, பரிவர்த்தனை ஆகியவைகளைத் தேசியமயமாக்குவது ஒன்றே குன்றவாக உள்ளது என்றும்' ஸர் ஐவர் ஜென்னிங்ஸ் என்பவர் கூறுகிறுர். ஆனுல்,ஃபேபியன் ஆதிக்கத்தை இது மிகைபடக் கூறுவதாகும். சமீப காலத்தைச் சார்ந்த வேறு பல பிரகடனங்களும் ஏடுகளும் திட்டத் தயாரிப்பாளர்களை அதிகமாகக் கவர்ந்திருப்பது, கூர்ந்து கவனிப்போருக்குத் தெரியவரும். ஐரிஷ் நாட்டு அரசியலமைப்புத் திட்டத்தைக் குறித்து நாம் முன்னரே கூறிவிட்டோம். 1935ஆம் ஆண்டு இந்திய அரசியலமைப்புச் சட்டத்திலேயே, 'கட்டளைப் பத்திரமொன்று' இணைக்கப்பட்டிருந்தது மிகவும் பயன்தரவல்ல ஏற்பாடாக இருந்தது. இதைச் சூசகமாகக் குறிப்பிட்டு அம்பேத்கர் பின்வருமாறு கூறியுள்ளார் : "பிரிட்டிஷ் அரசினர் வெளியிட்ட 1935ஆம் ஆண்டு அரசியல் சட்டத்தில் கண்டுள்ள, காலனிகளின் கவர்னர்களுக்கும், கவர்னர்-ஜெனரல்களுக்கும், இந்திய நாட்டிற்கும் இடப்பட்ட 'கட்டளைப் பத்திரத்தை'ப்போன்று இந்நெறிசெய் நியதிகள் விளங்கும். 'நெறிசெய் நியதிகள்' என்று அழைக்கப்படுபவை 'கட்டளைப் பத்திரங்க'ளுக்குள்ள மறு பெயரேயாகும். இவை சட்டமன்றம், ஆட்சித்துறை ஆகியவைகளுக்கிடப்படுபவை என்பது ஒன்றே குறித்தற்குரிய வேற்றுமையாக இருக்கிறது. அதிகாரத்தைக் கைப்பற்றுபவர்கள் யாராக இருநதாலும் தங்களிச்சைப்படி ஆட்சி நடத்துவதற்கு அவர்களால் முடியாது. அதிகாரத்தைப் பயன்படுத்துகின்றபோது நெறிசெய் நியதிகள் என்ற பெயரில் வழங்குகின்ற இக் கட்டளைப் பத்திரங்களுக்கு அவர்கள் மரியாதை செலுத்தியாகவேண்டும். ஆட்சிப் பீடத்திலிருப்பவன் இவைகளைப் புறக்கணித்துவிட முடியாது.''

இவைகளைத் தவிர வேறு சில கருத்துகளும் செல்வாக்குப் பெற்றிருந்தன. ஐக்கிய நாட்டுச் சபையின் சாசனமும், மனித உரிமைச் சாசனப் பிரகடனமும் திட்டத் தயாரிப்பாளர்களை மிக அதிகமாகக் கவர்ந்திருந்தன. அரசியல் நிர்ணய சபை

அரசியலமைப்புத் திட்டத்தைக் குறித்து விவாதம் நடத்திவந்த போது, மனித உரிமைச் சாசனத்தைப்பற்றிய விவாதமும் நடைபெற்றுவந்தது.

இந்த அதிகாரத்தில் அடங்கியிருக்கின்ற விஷயங்கள் யாவும் அந்நிய நாட்டிலிருந்து கடனாகப் பெறப்பட்டவை என்றோ, அல்லது மேலைநாட்டு அரசியல்,சமுதாய தத்துவங்களின் தழுவல்கள் என்றோ கொள்வது மிகவும் தவறாக முடியும். இவைகளடங்கியுள்ள தத்துவங்களில் பெரும்பான்மையானவை இந்திய நாட்டைச் சார்ந்தவை ; அதிலும், குறிப்பாக, அவை இந்திய தேசியப் போராட்டத்தின் அடித்தளங்களாக விளங்கியவை. கிராமப் பஞ்சாயத்துகள், குடிசைத் தொழில்கள், மதுவிலக்கு, பசுவதைத் தடை, ஷெட்யூல் வகுப்பினர், ஷெட்யூல் இனத்தினர், மற்றும் சமுதாயக் கல்வியறிவில் பின்தங்கிய வகுப்பினர் ஆகிய இவை யாவும் நூற்றுக்கு நூறு, பழங்காலந்தொட்டே இந்திய நாட்டைச் சேர்ந்தவையாகும். இவைகளில் சிலவற்றைக் காந்தியடிகள் மிகவும் போற்றிவந்தார் என்றும், அவைகளைச் செயல்படுத்தி வைப்பதற்கு வாழ்நாள் முழுவதும் அவர் அரும்பாடுபட்டு வந்தார் என்பதையும் நாமெல்லோரும் நன்கு அறிவோம்.

இவ்வதிகாரத்தில் எடுத்துரைக்கப்பட்ட அடிப்படைகள், பல்வேறு அரசாங்கங்களுக்கும் அரசாங்கம் சார்ந்த நிறுவனங்களுக்கும் (கிராம பஞ்சாயத்துகள் உள்பட) நாட்டை ஆள்வதற்கு அடிப்படையாகக் கையாளப்படவேண்டுமென்று விதிக்கப்பெற்ற கட்டளைகள் என்ற அதிகாரத்தின் தலைப்பிலிருந்தே நாம் நன்கு அறிந்துகொள்ளலாம். சட்டமியற்றுவதில் இவ்வடிப்படைகளைக் கையாளுவது அரசாங்கத்தின் கடமையாகும். நாட்டின் ஆட்சிக்கெனப் புதிய சட்டமியற்றுகின்றபோது, அவ்வாறு சட்டமியற்றுகின்றவர்களுக்கு, ஏற்ற இலட்சியங்களாக இவை விளங்குகின்றன. தேச மக்களின் முழுத் திறமை பெற்ற அரசாங்கத்தின் பொறுப்புமிக்க பேராட்களாகச் செயல்படுகின்ற ஆட்சித் துறையினருக்கு அவை ஓர் ஒழுங்குப் பட்டியலாக அமைகின்றன. சுருங்கக் கூறுமளவில், இந்திய அரசாங்கம் எதை இலட்சியமாகக் கொண்டுள்ளதோ, அதை நிறைவேற்றி வைப்பதற்கான அடிப்படைகளை இந் நெறிசெய் நியதிகள் தாங்கி நிற்கின்றன. அரசியலமைப்புத் திட்டத்தின் முகப்பில், சமுதாய-பொருளாதார-அரசியல் நீதி, சுய உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய சிறந்த குறிக்கோள்கள் பறைசாற்றப்பட்டிருக்கின்றன. இப் புனிதக் குறிக்கோள்களைச் செயலாற்றுவதற்கு, நெறிசெய் நியதிகள் இந்திய மக்களுக்கு வழியமைத்துக்கொடுக்கின்ற கருவிகளாக விளங்குமென்பதில் ஐயமில்லை. இதை நன்கு

உணர்ந்த அரசியல் நிர்ணயசபையின் அங்கத்தினர் ஒருவர் இவ்வதிகாரத்தை, அரசியலமைப்புத் திட்டத்தின் முகப்பை அடுத்து அமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவ்வாறு செய்வதால் இதன் 'புனிதத்தன்மை' அதிகரிக்கக்கூடுமென்று அவர் கருதினர். இவ்வதிகாரத்தின் தலைப்பை 'அரசின் ஆதாரக் கோட்பாடுகள்' என மாற்றவேண்டுமென்றும் ஒரு பிரேரேபணை இருந்தது.

அரசியலமைப்புத் திட்டத்தில் 36-லிருந்து 51 வரையிலுள்ள பதினறு விதிகள் நெறிசெய் நியதிகளைப்பற்றிக் கூறுகின்றன. பொருளாதாரம், சமுதாயம், நீதி, கல்வி, உலக நாடுகளுடன் தொடர்பு ஆகிய பல துறைகளில் அரசாங்கம் மேற்கொள்ளும் செயல்கள் இதன் வரம்பிற்குட்படுத்தப்பட்டிருந்தன. பின்வருவனவற்றை அவைகளில் மிகவும் முக்கியமானவைகளாகக் குறிப்பிடலாம்:

(1) மக்களின் நலனுக்கென்று ஒரு சமுதாயத்தை உருவாக்குவதும் காப்பதும் (திட். விதி 38).

(2) குறிப்பாகக் கீழ்க்கண்டவைகளை அடைவதற்கு அரசாங்கம் வழிவகுக்கவேண்டும். (அ) குடிமக்கள் யாவருக்கும் தேவையான வாழ்க்கை வசதிகள்; (ஆ) சமுதாயத்தில் உற்பத்திக்கான வளப்பொருள்களைப் பொதுநலன் கருதி முறையாகப் பங்கீடு செய்வது; (இ) பொதுநலனைச் சீரழிக்கின்ற வகையில் பொருள் ஒருமுகமாகக் குவிந்துவிடாதவாறு வழிசெய்வது; (ஈ) ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரேவகையான வேலைக்கு ஒரேவகையான கூலி யளிப்பது; (உ) தொழிலாளிகளின் உடல் வலுவையும் சுகாதாரத்தையும் பாதுகாத்து, வயதிற்கும் வலிமைக்கும் பொருத்தமற்ற வேலைகளில் அவர்கள் ஈடுபடுகின்ற சூழ்நிலைகள் எழுந்துவிடாமல் பாதுகாப்பது; (ஊ) குழந்தைப் பருவம், இளமை ஆகியவைகளைச் சுரண்டலுக்கெதிராகப் பாதுகாப்பது, அல்லது ஒழுக்கம், செல்வம் ஆகியவற்றின் சீரழிவைத் தடுப்பது (திட். விதி 39).

(3) தல ஆட்சியின் அடிப்படைகளாகக் கிராமப் பஞ்சாயத்துகளை அமைப்பது (திட். விதி 40).

(4) வேலைவாய்ப்பு, கல்வி வாய்ப்பு ஆகியவைகளைத் தேடித் தருவது, வேலையின்மை, மூப்பு, பிணி ஆகியவற்றால் அவதியுறுபவருக்குப் பொது உதவி அளிப்பது (திட். விதி 41).

(5) தொழிலாளிகளுக்கு நியாயமான, மனித உணர்வுள்ள சூழ்நிலைகளைத் தேடித்தருவது, தாய்மைக்கு ஓய்வு தேடுவது (திட். விதி 42).

(6) வேலை தேடித்தருவது, வாழ்வதற்குப் போதுமான சம்பளம் கிடைக்கச் செய்வது, கௌரவமான வாழ்க்கைத் தரம் நிலவச் செய்வது, ஓய்வும் சமுதாயப் பண்பாட்டு வாய்ப்புகளும் மக்களுக்குக் கிடைக்கச் செய்வது, குறிப்பாகக் கிராமக் கைத் தொழில்கள் வளருவதற்கு உரிய வாய்ப்புகள் அளிப்பது (திட். விதி 43).

(7) நாடு முழுவதும் கடைப்பிடிக்கத்தகுந்த ஒரு வகையான சிவில் சட்டத் தொகுதியொன்றைத் தயாரிப்பது (திட். விதி 44).

(8) பதினான்கு வயதுவரையிலுள்ள எல்லாக் குழந்தைகளையும் திட்டம் தொடங்கிய பத்தாண்டுகளுக்குள்ளாக, இலவசக் கட்டாயக் கல்வி பெறச் செய்வது.

(9) மக்களில், பொருளாதார மற்றும் கல்வி நோக்கில் பின் தங்கிவிட்ட மக்களில், அதிலும் குறிப்பாக ஷெட்டியூல் சாதி, ஷெட்டியூல் வகுப்பின் நலனை அதிகரிக்கச் செய்வது.

(10) பொதுஜன சுகாதாரத்தை விருத்தி செய்வதும் போதை தரும் பானங்களையும் மருந்து வகைகளையும் தடை செய்வதும் (திட். விதி 47).

(11) உழவுத் தொழிலையும், கால்நடைகளைப் பேணுவதையும் விஞ்ஞான ரீதியில் அமைப்பது. உயர் ஜாதிக் கால்நடைகளைக் காப்பாற்றி வளர்ப்பது, பசுக்கள், கன்றுகள் மற்றும் கறவை, மலட்டுக் கன்றுகாலிகளையும் கொலை செய்வதைத் தடுப்பது, (திட். விதி 48).

(12) வரலாற்றுச் சார்புள்ள நினைவுச் சின்னங்களையும், தேசிய முக்கியத்துவம் பெற்ற சின்னங்களையும் பாதுகாப்பது (திட். விதி 49).

(13) நீதித்துறையை ஆட்சித்துறையிலிருந்து பிரித்தெடுப்பதற்கு முயற்சி செய்வது (திட். விதி 50).

(14) (அ) உலக நாடுகளிடையில் சமாதானமும் அமைதியும் வளரச்செய்வது, (ஆ) நாடுகளிடையில் கௌரவமும் நியாயமும் நிறைந்த தொடர்பு நிலவச் செய்வது, (இ) உலக நாடுகளிடையேயுள்ள வழக்குகளைச் சமரசமாகத் தீர்ப்பது ஆகியவைகளுக்காக முயற்சி செய்வது (திட். விதி 51).

முழு நோக்காகக் கூறும்போது, இவ்வடிப்படைகள், புதிய ஜனநாயக இந்தியா தோன்றுவதற்கான விதிகளை அமைக்கின்றன. குறுகிய காலத்தில் பெற்றுவிடவேண்டும் என இந்திய மக்கள் போற்றி வளர்க்கின்ற இலட்சிய ஆசைகளில் ஒரு சிலவற்றையே இவைகள் வெளியிடுகின்றன. இந்திய அரசு இவ் விதிகளை உண்மையுள்ளவைகளாக மாற்றினால்தான் ஒரு 'பொதுநல சமுதாயத்தை' உருவாக்கிவிட்டதாக இந்திய நாடு பெருமையடையலாம்.

இக் குறிக்கோள்களைச் செயல்படுத்துவதில் இந்திய நாடு அடைந்துள்ள முன்னேற்றம் யாது என்பதை இச் சந்தர்ப்பத்தில் நாம் கூறியாகவேண்டும். பொதுவாகக் கூறுமிடத்து, சென்ற பத்தாண்டுகளாகச் செயற்படுகின்ற அரசாங்கம் பொதுநல நாடு ஒன்றை ஏற்படுத்திவிடவில்லை. இருந்தபோதும், விருப்பு வெறுப்புகளற்ற பார்வையாளர் ஒருவர், அது சென்றுகொண்டிருக்கின்ற திசையைக் கவனிக்காது விட்டுவிட முடியாது. விரைவாக முன்னேறவில்லையென்றாலும், மெதுவாகச் சென்றுகொண்டிருப்பதையேனும் மறுக்கவொண்ணாது.

ஐந்தாண்டுத் திட்டங்களின் வாயிலாக இந் நெறிசெய் நியதிகளை உண்மையுள்ளவைகளாகச் செய்வதற்கு அரசாங்கம் முயன்று வருகிறது. அரசியலமைப்புத் திட்டம் ஏற்கப்பட்டதைத் தொடர்ந்து முதல் ஐந்தாண்டுத் திட்டம் தொடங்கப்பட்டுவிட்டது. இத் திட்ட வாயிலாக எழுகின்ற பொதுநெறியின் மையக் குறிக்கோளும் தேசிய முயற்சியும் விரைவான சமநிலையான பொருளாதார வளர்ச்சிக்கு உதவியிருக்கின்றன. அவை மக்களின் வாழ்க்கைத்தரங்களை உயர்த்தி, புதிய வாய்ப்புகளை அளித்து, வளமும் வகையும் நிறைந்த வாழ்விற்கு வழிவகுக்கின்றன. அத்தகைய வளர்ச்சி சமுதாயத்தின் உற்பத்திப் பெருக்கையும் அதிகரிக்குமென்பதோடு, மக்கள் வெவ்வேறு துறைகளில் பெற்றிருக்கின்ற அறிவையும், அவர்களுக்கு அவ்வப்போது கிடைக்கின்ற உள்ளுணர்வையும் செயல்படுத்துவதற்கேற்ற சூழ்நிலைகளையும் அமைத்துக் கொடுக்கிறது. எனவே, நடைமுறையில் ஏற்பட்டிருக்கின்ற வளர்ச்சித் திட்டம் கொண்ட இலட்சியக் குறிக்கோளை ஒட்டியே அமைந்திருக்கின்றது. அவ்வப்போது அரசாங்கம் திட்டமிடும்போது, இவைகள் மீண்டும் மீண்டும் விளக்கப்படுகின்றன. அதனால், அரசாங்கத்திற்கு வழிகாட்டியாக விளங்குவதோடு, திட்டமும் நெறிசெய் நியதிகளுக்கு முரண்படாமலும் தயாராவதற்கு உதவியளிக்கப்படுகிறது. அடிப்படைக் குறிக்கோள்களைச் சுருக்கமாக விளக்குவதற்கு அண்மையில் 'சோஷலிச சமுதாயம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. இச் சொல்லிற்

குரிய விளக்கத்தை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற் காணலாகும். அது வருமாறு :

'முன்னேற்றத்திற்குரிய வழிவகுப்பதன் அடிப்படையாகச் சமுதாய நலனையே கொள்ளவேண்டுமேயன்றித் தனியார் லாபத்தைக் கருதக்கூடாது. அவ்வாறே, முன்னேற்றத்தின் வகையையும், சமுதாயப் பொருளாதாரத் தொடர்புகளையும் திட்டமிடும்போது அவைகளைச் செயற்படுத்துவதால் நாட்டு வருவாய் அதிகமாகின்ற வகையையும்,வேலைவாய்ப்புகள் பெருகுகின்ற வகையையும், வருவாயிலும் செல்வத்திலும் சமத்துவம் வளருகின்ற வகையையும் தேடி மனத்தில் கொள்ளவேண்டும். உற்பத்தி, துய்ப்பு, முதலீடு ஆகியவைகளைக் குறித்த முடிவெய்துகின்றபோது உண்மையில், பொருள் செறிந்த சமுதாயப் பொருளாதாரத் தொடர்புகளைத் தீர்மானிக்கின்றபோது, சமுதாயத்துடன் தொடர்புள்ள நிறுவனங்களைக் கலந்தாலோசிக்கவேண்டும். பொருளாதார முன்னேற்றத்தால், ஏற்படுகின்ற விளைவுகளால், சமுதாயத்தின் கடைநிலையிலுள்ள மக்கள் பயன்பெறுகின்ற வகை தேடவேண்டும். செல்வம், பொருளாதிக்கம், வருவாய் ஆகியவை ஒரு சிலரிடம் குவிந்து வருவதைச் சிறுகச்சிறுகக் குறைத்துவிடவேண்டும். தடையற்ற வளர்ச்சியை அறிந்துகொள்வதற்கும், அவ் வளர்ச்சிக்கான முயற்சியில் பங்குபெறுவதற்கும் வாய்ப்புப் பெருத எளிய குடிமகனுக்கு, ஒன்றுகூடிய புது முயற்சியில் முழுப் பங்கு பெறவும், தனது வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்வதில் அதிக வாய்ப்புப் பெறுவதற்கும் நாட்டின் வளத்தை உயர்த்துவதற்கும் தனது திறனைப் பயன்படுத்தவும், ஏற்ற சூழ்நிலையை உருவாக்குவதே உண்மைப் பிரச்சினையாக இருக்கிறது. இச் சூழலினுல். அவனது சமுதாயப் பொருளாதார நிலைகள் உயர்ந்துவிடுகின்றன. சமுதாயத்தின் சார்பில் சிபாரிசு செய்வதிலும் செயற்படுவதிலும் முக்கிய நிறுவனமாக விளங்குகின்ற அரசாங்கம், இத்தகைய ஏற்ற சூழ்நிலைகளை உருவாக்குவதற்குத் தன்மீது மிகுதியான பொறுப்புகளைச் சுமத்திக்கொள்ளவேண்டும்.

இவ்வாறு, குறிக்கோள்கள் எடுத்துரைக்கப்பட்டிருப்பதிலிருந்து, நெறிசெய் நியதிகள் அரசியலமைப்புத் திட்டத்தில் இடம்பெற்றுள்ள ஏட்டுச் சுரைக்காய்களல்ல என்பது தெளிவாகிறது. இந்திய சமுதாயத்தை மாற்றியமைப்பதற்கென்றும், இந்திய நியதிகளுக்கேற்ப புதிய சமுதாயமொன்றைச் சமைப்பதற்கென்றும் திட்ட அடிப்படையில் இந் நியதிகள் செயற்படுத்தப்படுகின்றன. இதுகாறும், அரசாங்கம் மேற்கொண்டிருக்கின்ற முயற்சிகளையும், அதன் பயனுக எழுந்துள்ள விளைவுகளையும் இந் நூலில் விரித்துரைப்பதென்பது அசாத்தியமான வேலை

யாகும். ஆனால், நிலைமையை நன்றாக ஆலோசிப்பதன் பொருட்டுப் பரவலாகச் செயற்பாட்டு முறைகளின் போக்கை எடுத்துரைக்கலாம். சென்ற சில ஆண்டுகளாக, இராச்சியத்திலுள்ள சமூகத்திற்குச் சொந்தமான மூலப்பொருள்களைக் கைப்பற்றுவதிலும் கட்டுப்படுத்துவதிலும் கணிசமான கூடுதல் முயற்சி ஏற்பட்டிருக்கிறதென்பதை மேற்கோளாகக் கூறலாம் நாட்டின் ஆதாரப் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் உதவியுள்ள பகரா நங்கல், தாமோதர் நதிப் பள்ளத்தாக்கு, ஹிராக்கூட் அணை ஆகிய பன்முகத் திட்டங்களும்; பிலாய், ரூர்கேலா, துர்க்காப்பூர் போன்ற இரும்பு, எஃகு உற்பத்திக் கேந்திரங்களும், விசாகப்பட்டினம் போன்ற கப்பல் கட்டும் தளங்களும் மற்றும் சிந்திரி உரத் தொழில் ஆலை, இந்துஸ்தான் எயந்திர சாதன உற்பத்திச் சாலை, சித்தரஞ்சன் நீராவி எஞ்சின் தொழிற்சாலை, ஹிந்துஸ்தான் விமானத் தொழிற்சாலை ஆகிய நிறுவனங்களும் அரசினரின் ஆதிக்கத்திலும் நிர்வாகத்திலுமிருந்து வருகின்றன. இப் பொறுப்புகள் அநேகமாக, அரசினரின் தலையில் சுமத்தப்படுகின்றன. இதன் விளைவாக அரசினரும் புதிய பொருளாதார முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றனர்.

முழு வேலை வாய்ப்பு, மூப்பு மேலிட்டவருக்குப் பொது உதவி, பிணியால் வருந்துவோருக்கு மானியம் ஆகிய வசதிகளைச் செய்து தருவதில் அரசாங்கம் அதிகமாக முன்னேறிவிடவில்லை என்பது உண்மையாகவே இருக்கிறது. இருந்தபோதிலும், அவைகளில் பெரும்பாலானவை முன்னேற்றத் திட்டங்களில் இடம் பெற்றிருக்கின்றன. வேலை வாய்ப்புகள் தேடித்தருவதை, தற்போது மிக முக்கியமாகக் கருதிவருகின்றனர். வேலையற்றிருப்பவருக்கு இன்ஷூரன்ஸ் வசதிசெய்து தருவதற்கென்று திட்டமொன்றையும் உருவாக்கிவருகின்றனர். பிணி, விபத்து, நோய் ஆகியவைகளால் அவதியுறும் தொழிலாளர்களுக்கு ஓரளவு இன்ஷூரன்ஸ் வசதியுமளிக்கப்பட்டிருக்கிறது. அநேக தொழில்களைப் பொறுத்தமட்டில் குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு துறையிலும், வேலையின் அளவை அடிப்படையாகக்கொண்டு ஆணுக்கும் பெண்ணுக்கும் ஊதியம் வழங்குகின்ற பழக்கமேற்படுத்தப்பட்டிருக்கிறது. சமுதாய நலத் திட்டங்கள் நாட்டின் பல பகுதிகளிலும் செயற்பட்டு வருகின்றன. உழவுத் தொழிலையும், கால்நடைகளைப் பேணுவதையும், விஞ்ஞான அடிப்படையில் அமைத்து, கிராமியப் பொருளாதாரத்தின் தரத்தை உயர்த்துவதற்கு இவை முயன்றுவருகின்றன. இவைகள் நீங்கலாக, பசுக்கள், கன்றுகள், மற்றும் கறவை மாடுகளையும், பால்வற்றிய கால்நடைகளையும் கொல்வது கூடாதென

பல இராச்சிய அரசுகள் தடைவிதித்திருக்கின்றன. குழந்தைகளை யும் வாலிபர்களையும் ஏமாற்றி வேலைவாங்குவதைத் தடை செய்து ஏராளமான சட்டங்களைச் சில இராச்சிய சர்க்கார்கள் இயற்றியுள்ளனரென நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளோம். 1952ஆம் ஆண்டில் அமர்த்தப்பெற்ற மத்திய சுகாதார கவுன்சில், சுகாதாரம், சுத்தம், ஊட்டசக்தி ஆகியவைகளைப் பெருக்கு வதற்குத் தேசிய அடிப்படையில் முயன்றுவருகிறது. இந்திய நாட்டுக் கிராமங்கள் பல, தங்களுக்கென்று பஞ்சாயத்துகளைப் பெற்றுள்ளன. ஆட்சித்துறையின் அடித்தள அளவைகளாக இவை இயங்கிவருகின்றன.

இந்திய நாடெங்கிலும் கடைப்பிடிக்கப்படவேண்டுமென ஒரே வகையான சிவில் சட்டத் தொகுதியொன்றை இயற்றுவது கடினமான வேலையாகும். இந் நாட்டிலுள்ள ஒவ்வொரு மதத் திற்கும் தனிவகையான சட்டங்கள் இருந்துவருகின்றன. படிப் படியாக நிறைவேறிவருகின்ற இந்து சட்டத் தொகுதியை (உ-ம்: இந்து திருமணச்சட்டம் 1955, இந்து வாரிசுரிமைச் சட்டம் 1956) நாடு முழுவதிற்கும் தேவையான சிவில் சட்டத்தொகு தியை அமைப்பதில் உதவுகின்ற முதற்படியாகக் கொள்ளலாகும். குழந்தைகளுக்குக் கட்டாய, இலவசக் கல்வி அளிப்பதில் கணிச மான முன்னேற்ற மடைந்திருக்கிறோமென்றேகூறவேண்டும். ஆனால், திட்டத்தில் கூறியுள்ளபடி 10 வயது நிரம்புவதற்குள் ஒவ்வொரு குழந்தைக்கும் அத்தகைய கல்வி வசதி கிடைக்கச் செய்ய வேண்டுமென்பது கைகூடாத ஒரு முயற்சியென்று அனு பவவாயிலாக உணர்ந்து வருகிறோம். இன்னுமொரு பத்து ஆண்டுகளுக்குள் இம் முயற்சியில், இந்திய நாடு வெற்றிபெற்று விடுமென்று நாம் கருதுவதற்கு இடமுண்டு. ஷெட்யூல் சாதியி னர், ஷெட்யூல் இனத்தினர்போன்ற பின்தங்கிய வகுப்பினரைப் பொருளாதாரக் கல்வித்துறைகளில் முன்னேறச் செய்வதற்குப் பல முயற்சிகள் முன்னரே மேற்கொள்ளப்பட்டுவிட்டன. பொரு ளாதாரத் துறையில் பின்தங்கிவிட்ட வகுப்பினருக்கு, விசேஷ வாய்ப்புகள் அளிப்பதற்கென்று ஏராளமான குடிசைத் தொழில் களையும் சிற்றளவுத் தொழில்களையும் ஏற்படுத்துவதற்கும், அவர் கள் மேற்கொள்ளுகின்ற முயற்சிகளுக்குத் தாராளமான நிதி வசதிகள் செய்யவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. திட் டத்தை ஏற்ற நாள்முதல் மதுவிலக்கைத் தீவிரமாக அமல் செய்திருக்கின்றனர். போதை தரும் பொருள்களின் உபயோ கத்தை முழுவதிலும்ஒழித்துக்கட்டுவதில், ஒருசில இராச்சியங்கள் முழு வெற்றியடைந்திருக்கின்றன. மேலும் பல இராச்சியங்கள் இத் துறையில் கணிசமான வெற்றி கண்டிருக்கின்றன. நீதித்

துறையையும், ஆட்சித்துறையையும் ஒன்றேடொன்று தொடர்பற்றதாகச் செய்வதில் முழு வெற்றி கிடைத்தபாடில்லை என்றே கூறவேண்டும். ஆனால், இந்த வகையில் ஒவ்வோர் அரசாங்கமும் திட்டவட்டமான முயற்சிகளை மேற்கொண்டிருக்கின்றன. அத்திட்டத்தின்கீழ் ஒவ்வோர் ஆண்டிலும், சில மாவட்டங்களில் இவ் வேற்பாடுகள் நடைபெறுவதற்கானவழிகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. சர்வதேச நாடுகளிடையில், நல்லெண்ணம், சமாதானம், அமைதி ஆகியவைகளை நிலவச்செய்வதில் இந்திய நாடு மேற்கொண்டிருக்கிற முயற்சிகளைப்பற்றி நாம் விரித்துரைக்க முற்படுவதுதேவைக்கதிகமான செயலாகும். உலகிலுள்ள எல்லா நாடுகளும், இவ்விலட்சியங்களைப் பெறுவதற்கு இந்திய நாடு ஆற்றிவரும் தொண்டினை நன்றிப்பெருக்கோடு ஏற்றுக்கொள்ளுகின்றன என்று கூறுவதே போதுமானது என்று எண்ணுகிறேன்.

திட்ட விதி 37-க்கு இணங்க, நெறிசெய் நியதிகள் நாட்டை ஆள்வதற்குள்ள ஆதார விதிகளாக இருக்கின்றன. சட்டமியற்றும் இவ்வாதார விதிகளை அரசாங்கம் கடைப்பிடிக்கவேண்டும். இருந்தபோதிலும், இந் நியதிகளின் அடிப்படையில் நீதிமன்றங்களில் நிவாரணம் தேட இயலாது. பெரு நீதிமன்றம் உட்பட, இந்திய நாட்டிலுள்ள நீதிமன்றங்களால் இந் நியதிகளைக் காட்டித் தீர்ப்புகள் வழங்கமுடியாது. நீதிமன்றங்கள் வற்புறுத்தக்கூடிய ஆதார உரிமைகளிலிருந்து இவை இவ்வாறு வேறுபட்டு விளங்குகின்றன. ஆதார உரிமைகளை அரசாங்கம் கைவிடும்போது, நீதிமன்றங்களில் வழக்குத் தொடர்ந்து அவைகளைப் பெற்றுவிடலாம். ஆனால், நெறிசெய் நியதிகளை அரசாங்கம் கடைப்பிடிக்கவில்லையெனில், நீதிமன்றங்கள் வாயிலாக அதை வற்புறுத்த முடியாது. எளிதில் ஏமாறக்கூடிய இந்திய மக்களை ஏமாற்றுவதற்கென்று புத்திகூர்மையுள்ள அரசியலறிஞர்கள் ஏற்பாடு செய்த ஏட்டுச் சுரைக்காய்கள் என இந் நியதிகளை நாம் கருதலாகுமா? நாட்டு நிர்வாகத்தின் அடிப்படைகளாக விளங்குகின்ற இந் நியதிகளை அதிகாரம்பெற்ற ஓர் அரசாங்கம் புறக்கணித்தாலோ அல்லது காற்றில் பறக்க விட்டுவிட்டாலோ, அதற்குத் தகுந்த பரிகாரம் எதுவும் தேட இயலாதா? முதல் கேள்விக்கு, 'இல்லை' என்றே பதிலளிக்க வேண்டுமென்றாலும், இரண்டாவது கேள்விக்கு, 'உண்டு' என்று விடையிறுக்கலாம். நேரடியாக, நீதிமன்றங்கள் வாயிலாகப் பரிகாரம் தேட இயலாது. என்றாலும், வேறு பரிகாரங்களிருக்கின்றன; நியாயமான அளவில், அவை வலிமைபெற்றும் விளங்குகின்றன.

அரசியலமைப்புத் திட்டம், மக்களின் பேராட்களைக் கொண்ட ஜனநாயகமுறை ஆட்சியை ஏற்படுத்துகின்றது என்

பதை நினைவில் கொள்ளவேண்டும். அது பொறுப்புள்ள ஆட்சியாகவுமிருக்கும். அவ்வரசாங்கம் எப்பொழுதும் தனது செய்கைகளுக்கு மக்களின் பேராட்களுக்கு உத்தரம் சொல்லக் கடன்பட்டிருக்கிறது. அவர்கள் மூலமாகப் பொதுமக்களுக்குப் பொறுப்புள்ளதாகிறது. வயதுவந்த இந்திய மக்கள் அதிகாரம் பெற்று, அவ் வதிகாரத்தை ஆட்சியாளருக்கு அளித்ததாலேயே, அதிகாரம் பெற்று அவர்கள் ஆட்சியிலமர்ந்திருக்கின்றனர். பேராட்கள் மக்களின் எஜமானர்களல்லர்; அவர்களது 'பணியாட்கள்' ஆகின்றனர். திட்ட விதிகளை மக்கள் தங்களுக்கென்றே தேர்ந்திருக்கின்றனர். அதில் கண்டிருப்பவைகளை மக்கள் சார்பில் செயற்படுத்துவதே அப் பேராட்களின் கடமை. இப் புனிதமான பணியில் அவர்கள் தவறிவிடுவார்களெனின், அதிகாரத்தைக் கைப்பற்றி ஆட்சியிலமர்வதற்கு அவர்கள் அருகதையற்றவர்களாகின்றனர். ஐந்தாண்டுகளுக்குப்பின் நாட்டில் பொதுத் தேர்தல்கள் நடைபெறும்போது, அக் காலவரையறையில் ஆட்சிப் பொறுப்பாளர்களின் செயல்களைப்பற்றிய கணக்கெடுக்கும்போது, திருப்தியில்லையெனில் அவர்கள் ஆட்சியினின்றும் நீக்கப்படுவார்கள். வெவ்வேறு திட்டங்களையும் கொள்கைகளையுமுடைய மக்களிடையிலிருந்து, எவ்விதத் தடையுமின்றிப் பேராட்களைத் தேர்ந்தெடுக்கின்ற வாய்ப்பு அளிக்கப்பட்டிருப்பதால், திட்ட அடிப்படைகளைச் செயற்படுத்துகின்ற ஆற்றல் அவர்களில் எவருக்கிருக்கின்றதோ, அவர்களையே தேர்ந்தெடுக்கின்ற உரிமை மக்களுக்கு உண்டு. இக் கண்ணுடன் நோக்கும்போது, நெறிசெய் நியதிகள் தேசிய மனப்பாங்கின் அடிப்படை அளவைகளாகத் தென்படுகின்றன. அவைகளைப் புறக்கணிப்பவர்கள், அவர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் பொறுப்புள்ள பதவிகளை இழக்கத் துணிந்தே அவ்வாறு செயலாற்ற முற்படவேண்டும். இக் கோட்பாடுகளை மீறுகின்ற அரசாங்க அலுவலர்கள் சின்னாட்களுக்கு நீதிமன்றங்களின் பிடியிலிருந்து தப்பிவிடலாம். ஆனால், அதிகச் சக்திவாய்ந்த உயர்ந்த நீதிமன்றம் ஒன்றின் பிடியிலிருந்து அவர்களால் தப்புவது இயலாது. அந் நீதிமன்றம் குறிப்பிட்ட காலவரையறைகளில் இவர்களது செயல்களைக் கணக்கிட்டுவரும் அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினரொருவர், நெறிசெய் நியதிகளை, நீதிமன்றங்களில் நிலைநிறுத்துகின்ற வாய்ப்புத் தேவை என்று கோரி, திட்டத்தில் திருத்தம் தேவை என்று வாதாடினார். அப்போது மற்றோர் அங்கத்தினர் பின்வருமாறு உரைத்தார்:

'ஆசாபாசங்களுக்கு இடமளிப்பதால் பயன் எதுவுமில்லை. நாம் நிலையை நன்கு அறிந்து செயற்படவேண்டும். பொதுஜனங்களின் கருத்துகளைப் புறக்கணிக்கும் எந்த அரசாங்கமும்

ஏற்க விரும்பாத பல விதிகளை இங்கு நாம் நிறைவேற்றலாம். இந்த விதிகள் அல்லது உரிமைகளை எந்த நீதிமன்றத்தாலும் வற்புறுத்த முடியாது. ஒரு வேண்டுகோளின் பக்கபலமாக விளங்குகின்ற பொதுமக்களின் எண்ணம் அல்லது ஆதரவு ஆகியவைகளுக்கே வேண்டுகோளை நிறைவேற்றும் சக்தியுண்டு. நான்கு (அல்லது ஐந்து) ஆண்டுகளுக்கொருமுறை, பொதுத் தேர்தல்கள் நடைபெறும். பொதுமக்களின் கருத்தைப் புறக் கணித்துவிட்ட அதே பேராட்களை, மீண்டும் தேர்ந்து எடுக் காமல் ஒதுக்கிவிடுகின்ற வாய்ப்பு மக்களுக்குண்டு. ஒரு நீதிமன் றம் இடுகின்ற உத்தரவைக் காட்டிலும் இதுவே அதிக சக்தி பெற்று விளங்குகிறது.

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் அக்கறைகொண்ட ஒருசிலரின் உள்ளங்களில் குழப்பமுண்டாக்குகின்ற இரு பிரச் சினைகள் உண்டு. அவ்விரண்டும் இந் நெறிசெய் நியதிகளை நீதி மன்றத்தாரால் பயன்படுத்தமுடியாது என்ற கருத்துடன் ஒட்டி யவையாகும். இந் நியதிகளுக்குப் புறம்பான சட்டமொன்றைக் குறித்து, கவர்னர் அல்லது ஜனாதிபதி எத்தகைய கருத்துடனிருக் கிறார் என்பதையறிந்து முதல் குழப்பம் உண்டாகிறது. ஒரு கவர்னர் அல்லது ஜனாதிபதி அரசியலமைப்புத் திட்டத்தைப் பாதுகாப்பதென்று சூளுரைக்கின்றார். ஆகவே, அதற்குப் புறம் பான எச் செயல்களையும் தடைசெய்ய வேண்டியது அவர்கள் கடமையென்று ஒரு சாரார் கூறுகின்றனர். இக் கருத்தை 'ஆபத்தான கொள்கை' என்று சித்திரித்த அம்பேத்கர், 'அரசிய லமைப்புத் திட்டம் அதை எதிர்நோக்கவில்லை' என்று கூறி எதிர்ப்புத் தெரிவித்தார். இந் நியதிகளை அடிப்படையாகக் கொண்டு, ஜனாதிபதிக்கும் முதலமைச்சருக்குமிடையில் அல்லது கவர்னருக்கும் மாகாண அமைச்சர்களுக்குமிடையில் கருத்து வேற்றுமைகள் ஏற்படக்கூடுமென்று அரசியல் நிர்ணய சபையி லேயே கருத்துகளறிவித்தனர். 'இந்தக் கட்டளைகளை இந்திய முதலமைச்சர் புறக்கணித்துவிட்டால், என்னவது?' ஆனால், இதுகாறும் அத்தகைய கருத்துவேற்றுமைகள் ஏற்படவில்லை. ஆனால், பிரச்சினை எழுந்தால், அந்நேரத்தில் அதைத் தீர்ப்ப தற்குத தகுந்த வழி ஏற்படுத்தவேண்டும். இச் சந்தர்ப்பத்தில் அரசியலமைப்புத் திட்டம் ஏற்படுத்த விரும்புகின்ற அரசாங்க வகையைத் தம் மனத்தில் கொள்ளவேண்டும். சட்டத் துறையின ருக்குப் பொறுப்புள்ள ஆட்சித் துறையினரைக் கொண்ட பாராளுமன்ற ஆட்சி முறையையே திட்டம் ஏற்படுத்த விரும்பு கிறது. ஆட்சித்துறையினரிடத்தில், சட்ட மன்றத்தினருக்கு நம்பிக்கை இருக்கும்வரையிலும் துரைத்தனத்தில் அரசியல்

தலைவரால் சட்டமன்றத்தினரின் விருப்பத்திற்கு எதிராகச் செல்லமுடியாது.

ஜனாதிபதி, மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதில்லை என்பதையும் நாம் நினைவில் வைத்துக்கொள்வது நலம். அவருக்கு நேரடியாக 'மாண்டேட்' அல்லது உயர்கட்டளையிடும் வாய்ப்புக் கிடையாது. பாராளுமன்றமோ, அல்லது இராச்சியசட்டமன்றங்களோ நெறிசெய் நியதியைப் புறக்கணித்துச் சட்டமியற்றுவதற்குத் துணிவதென்றால், அதற்குத் தகுந்த காரணங்களிருக்க வேண்டும். தீவிர ஆலோசனைக்குப் பின், அத்தகைய சட்டமியற்ற வேண்டுமென்று சட்டமன்றம் தீர்மானித்துக் கணிசமான பெரும்பான்மையினர் அதை ஆமோதிப்பதாகவுமிருந்தால், அச் சட்டத்தை மறுத்துரைப்பதற்கு, ஜனாதிபதிக்குப் போதிய அதிகார வலிமை யிருக்கமுடியாது. தனது எதிர்மறையான கருத்துகளை எடுத்துக்கூறி, மீண்டும் பரிசீலனை செய்யப்படுவதற்கென்று அச் சட்டததை அவர் பாராளுமன்றத்திற்கு அனுப்பிவைக்கக்கூடும். இரண்டாவது முறையாகவும் பாராளுமன்றம் அச் சட்டத்தை நிறைவேற்றிவிடுமெனில் தனது ஒப்புதலைக் கொடுப்பதற்கு ஜனாதிபதி மேலும் தயங்கமுடியாது. மேலும் கூறுவதென்றால் அரசியலமைப்பில் திருத்தம் ஒன்றைச் செய்து, நெறிசெய் நியதியையே மாற்றிவிடுவதற்குப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. மேலும், இன்று அடிப்படைகளாக விளங்குகின்ற இந் நியதிகள் என்றுமே அவ்வாறிருக்க வேண்டுமென்ற கட்டாயமுமில்லை. அசைக்கவியலாத நிலையான உண்மைகளை அவைகள் கொண்டிருப்பதாகக் கூறவே முடியாது. சமுதாயத்தின் நிலையில் மாறுதல்களேற்படும்போது அதன் தேவைகளிலும் மாறுதல்கள் ஏற்பட்டேயாகவேண்டும். இன்று அடிப்படைகளாகவும் இன்றியமையாதவைகளாகவும் விளங்குபவை, நூறாண்டுகளுக்கு முன்னால் அவ்வாறு இருந்திருக்கவேண்டுமென்பதோ அல்லது நூறாண்டுகளுக்குப் பின்னால் அவ்வாறிருக்கவேண்டுமென்ற கட்டாயமோ இல்லை. ஜனநாயக ஆட்சிமுறையில், முதலாவதாக, இப் பிரச்சினைகளை மக்களின் பேராட்கள் ஆராயவேண்டும்; அதற்குப் பின்னர் மக்களே அவைகளில் கவனம் செலுத்தவேண்டும். எனவே, நெறிசெய் நியதிக்குப் புறம்பாக இருக்கிறதென்ற ஒரு காரணத்தால் சட்டமன்றம் நிறைவேற்றும் ஒரு சட்டத்திற்குத் தனது மறுப்பாணையை (வீடோ), ஜனாதிபதி பயன்படுத்துவது போற்றத் தக்கதொரு செயலாகாது.

இரண்டாவது கேள்வி வருமாறு: ஆதார உரிமைக்கும் நெறிசெய் நியதியைச் செயற்படுத்துவதால் ஏற்படும் விளைவுக்கும் முரண்பாடு இருந்தால், எதை ஏற்பது? இக் கேள்விக்கு சம்பகம்

துரைராஜன் (1952) வழக்கில் முதன்முறையாகப் பெருநீதிமன்றம் விடை அளித்தது. கருத்து வேற்றுமையற்ற மன்றச்சார்பாக ஜஸ்டிஸ் எஸ்.ஆர்.தாஸ் கூறியதாவது : 'அரசாங்கத் திட்டத்தின் நெறிசெய் நியதிகளை நீதிமன்ற வாயிலாகச் செயற்படுத்த இயலாது எனத் திட்ட விதி 37, திட்டவட்டமாக அறிவிக்கின்றது. பிற விதிகள் நீங்கலாக IIIஆம் பகுதியிலுள்ள விதிகளை ஆணைகள் மற்றும் கட்டளைகள், அல்லது திட்டவிதி 32-ன் அடிப்படையில் மதியுரைகள் மூலமாகச் செயற்படுத்த இயலும். பின்னர்க் கூறியவற்றை நெறிசெய் நியதிகள் பின்னடையச் செய்துவிட முடியாது. அடிப்படை உரிமைகளைக்கொண்ட அதிகாரம் மிகவும் புனிதமானது. அதைச் சுருக்கியுரைப்பதற்கு ஒரு சட்டமன்றம் அல்லது ஆட்சித்துறையின் விதியினாலாகாது. அவ்வாறு இயற்றப்படும் சட்டமோ அல்லது ஆணையோ, மூன்றும் பகுதியில் இதைப்பற்றிப் பேசுகின்ற குறிப்பிட்ட திட்ட விதியின் வரம்பிற்கு உட்பட்டேயிருக்கவேண்டும். அரசாங்க நெறிசெய் நியதிகள், ஆதார உரிமைகளை ஒட்டியவைகளாகவும் அவைகளைத் தழுவியவைகளாகவுமே இருக்கவேண்டும். எங்கள் அறிவிற்கு எட்டியவரையிலும் பகுதி III, மற்றும் பகுதி IV ஆகியவைகளிலுள்ள விதிகளை இவ்வாறே புரிந்துகொள்ளவேண்டும்.'

நீதிமன்றத்தின் இத் தீர்ப்பைத் தொடர்ந்து 1951ஆம் ஆண்டில், திட்ட விதி 15-க்குத் திருத்தமொன்று ஏற்பட்டது. அதனடிப்படையில், சமுதாய நோக்கிலும் கல்வியறிவிலும் பின்தங்கிய வகுப்பினருக்கு அவரது நலன்களைப் பேணுவதற்கான விசேட ஏற்பாடுகளைச் செய்வதற்கு இராச்சிய அரசாங்கங்களுக்கு அனுமதி வழங்கப்பட்டது. ஓராண்டுக்குப் பின், ஜமீந்தாரி ஒழிப்பு வழக்குகளை விசாரித்தபோது, நீதிமன்றங்களின் போக்கு மிக்க மாறுதலடைந்திருந்தது. பீகார் அரசாங்கத்திற்கும் காமேஸ்வர் சிங் என்பவருக்குமிடையில் எழுந்த வழக்கில், பீகார் சட்டத்தின் செல்லுபடியாகும் தன்மையை நுணுக்கமாக ஆராயவேண்டிய நிலை ஏற்பட்டது. அதற்கு, நெறிசெய் நியதியையே வழிகாட்டியாக நீதிமன்றம் ஏற்றுக்கொண்டது. தனியாருக்குச் சொந்தமான நிலப்பரப்புகளைச் சர்க்கார்தன் மயமாக்கிக்கொள்வதில் 'பொது நன்மை' ஏதாவது ஏற்பட்டிருக்கிறதோ என்பதே, பிரச்சினையில் அடங்கியிருந்த சிக்கலாக இருந்தது. இவ் வினாவிற்கு விடையளிக்கையில் திட்ட விதி 37-ஐ எடுத்துக் காட்டி, ஜஸ்டிஸ் மஹாஜன் கூறியதாவது : 'ஒருசில தனி நபர்களிடம் பெரு நிலப்பரப்புகள் சிக்கியிருப்பது, இந்திய அரசியலமைப்புத் திட்டத்தின் அடிப்படைகளுக்கே முரணானது. பரந்த நிலப்பகுதிகள் ஒருசிலரிடம் தங்கிவிடாமலும், அதனால் உற்பத்தி

சாதனங்கள் ஒருசிலரது உடைமைகளாகிவிடாமல் பாதுகாப்பதற்கென்றே இச் சட்டத்தின்மூலமாக நில ஆக்கிரமிப்புச் செய்யப்படுகிறது. பொதுநலனைப் பேணுகின்ற அரசாங்கம் இவ்வுற்பத்தி சாதனங்களின் உடைமைகளையும், கட்டுப்பாடுகளையும் பங்கீடு செய்து சிறந்த முறையில் ஒழுங்கு செய்யவேண்டிய பொறுப்புகளை ஏற்றிருக்கிறது.'

இங்கு நீதிபதி நெறிசெய் நியதிகளையே முழுவதுமாகப் பின்பற்றியுள்ளார்.

இதே வழக்கில், இதே வகையில், ஜஸ்டிஸ் எஸ். ஆர். தாஸ் அவர்கள் தீர்ப்பு வழங்கியிருக்கிறார். நெறிசெய் நியதிகளைக் கொண்ட அதிகாரத்திலுள்ள திட்டவிதிகள் 38, 39 ஆகியவற்றை எடுத்துக்காட்டி அவர் கூறியதாவது: 'இப் புதிய நோக்கில் நான் எழுப்புகின்ற வினா வருமாறு: ஜமீந்தாரி நிலங்களை ஆக்ரமிப்புச் செய்வதில், அரசாங்கம் மற்றும் இடையிலுள்ளவர்களின் உண்மையான நோக்கம் என்ன? சமுதாயத்திற்கு உணவு அளித்து வாழச்செய்வதும், தனது காடுகளில் செல்வம் பெருகச் செய்வதும், தாதுப் பொருள் மற்றும் சாதனங்களை அளிப்பதும் ஆகிய பரந்த நிலப்பகுதியை அரசினருக்குச் சொந்தமாக்கி, அவரது கட்டுப்பாட்டில் அமைத்துப் பொதுமக்களுக்கு மிகச் சிறந்தவகையில் தொண்டாற்றுவதே அதன் நோக்கமாக இருக்கிறது. நெறிசெய் நியதிகளைச் செயற்படுத்துவதற்கு, அரசினர் நிலப்பகுதிகளைச் சொந்தமாக்கிக் கொள்வதும், கட்டுப்படுத்த முயல்வதும் முதற்படியாக அமைகின்றன. எனவே, பொது நலனைத் தவிர இச் செயலுக்கு வேறெவ்வித காரணமும் இருக்கமுடியாது.'

கேரள நாட்டுக் கல்விச் சட்டத்தை (1958) ஜனாதிபதி பெரு நீதிமன்றத்தின் ஆய்வுக்கு அனுப்பிவைத்தபோது, அங்கு எழுந்த விவாதங்களில் இப் பிரச்சினை மீண்டும் எழுந்தது. 'நெறிசெய் நியதிகளை நீதிமன்றங்களின் துணைகொண்டு செயற்படுத்த இயலாதென்றாலும், அவைகளைப் புறக்கணித்துவிட முடியாது' என்று ஜமீந்தாரி ஒழிப்பு வழக்குகளில் தீர்ப்பு வழங்கியபோது, தான் கொண்ட கருத்தையே இங்கு மீண்டும் வலியுறுத்துவதற்கு நீதிமன்றம் பின்வாங்கவில்லை.

அரசியலமைப்புத் திட்டத்தின் நான்காவது திருத்தத்தை வற்புறுத்தி, பாராளுமன்றத்தில் சமர்ப்பித்துப் பேசுகையில், பிரதம மந்திரி நேரு அவர்கள் ஆதார உரிமைக்கும் நெறிசெய் நியதிக்கும் முரண்பாடுகள் ஏற்படும்போது நெறிசெய் நியதியை

ஏற்கவேண்டுமெனக் குறிப்பிட்டார்கள். பெருநீதிமன்றத்தின் கருத்திற்கு எதிர்மறையான கருத்தாக இது தென்படலாம். ஆனால். உற்று நோக்குபவருக்கு அத்தகைய முரண்பாடென்பது கற்பனையென்பது நன்கு விளங்கும். ஆதார உரிமை நீதிமன்ற வரம்பிற்குட்பட்டது. நெறிசெய் நியதி அதன் வரம்பிற் கப்பாற்பட்டது என்பதால், பெருநீதிமன்றத்தைப் பொறுத்த வரையில் இவ்விரண்டிற்கும் முரண்பாடு ஏற்படுகையில், ஆதார உரிமையையே நீதிமன்றம் ஏற்றிப் போற்றவேண்டும். ஆனால், பிரச்சினையைத் தீர்ப்பதற்குள்ள இவ் வழி சட்ட அடிப்படையில் எழுந்தது. நீதிமன்றங்கள் இதற்கப்பால் அடியெடுத்து வைக்க முடியாது. ஆனால், பாராளுமன்றம் மேலும் அடியெடுத்து வைக்கக்கூடும். சட்ட அடிப்படையைக் கொண்ட உரிமைக்கும், அவ்வாறில்லாத சலுகையொன்றிற்கும் சமுதாய மோதல் ஏற்படுகின்றபோதிலேயே, பிரச்சினையைத் தீர்க்கக்கூடிய உண்மையான வழி பிறக்கக்கூடும். தனியாரின் நலனைவிடச் சமுதாயத்தின் நலனே உயர்ந்தது என்பதே இங்கு வழிகாட்டியான தத்துவமாக அமைகின்றது. இக் கோட்பாட்டை நடைமுறையில் செயற்படுவதற்காக அனுமதிப்பதற்காக அரசியலமைப்புத் திட்டத்தில் திருத்தமேற்படுத்தவேண்டிய தேவை ஏற்படலாகும். நெறிசெய் நியதியே இறுதியில் தலைதூக்கி நிற்கும். இக் குறிக்கோளைக் கருத்திலிருத்தித் திட்டத்தில் மூன்று திருத்தங்களை ஏற்படுத்தினர் (முதல், இரண்டாவது, நான்காவது திருத்தங்கள்). ஆதார உரிமைக்கும் நெறிசெய் நியதிக்கும் முரண்பாடு தோன்றுகின்ற வழக்குகளில் தீர்ப்பு வழங்குகின்ற வாய்ப்புகள் ஏற்படுகின்றபோதெல்லாம், அரசியலமைப்புத் திட்டத்தின் இலட்சியத்தை மனத்தில் கொண்டே தீர்ப்பு வழங்க வேண்டியது அதன் கடமையாயிற்று. மேலும், வேற்றுமைகளைக் கூடியவரையிலும் தீர்த்துவைத்து, இயன்ற அளவில் சமரசமேற்படுத்துவதும் நீதிமன்றத்தின் பொறுப்புகளாயின.

இந் நெறிசெய் நியதிகளை அரசியலமைப்புத் திட்டத்தின் பிரிக்கவியலா ஒரு பகுதியாகத் திட்டத் தயாரிப்பாளர்கள் எந்த நோக்கமுடன் செய்தனர் என்பதை வைத்து, ஆதா உரிமைகளுக்கும் நெறிசெய் நியதிகளுக்குமுள்ள தொடர்பை நாம் ஒருவாறு அறிந்துகொள்ள முடியும். பொதுநல நாடொன்றை உருவாக்குவதற்கேற்ற அடிப்படைத் தத்துவங்களாக இவை விளங்குகின்றன என்று நாம் முன்னர் குறித்திருக்கிறோம். பொருளாதாரச் சமுதாய அடிப்படைகளில், ஜனநாயகத்தை உருவாக்குவதற்கு இவை யாவும் ஒருசாசனம்போல் விளங்குகின்றன. தாங்கள் எதை எதிர்பார்க்க வேண்டுமென்று

மக்களுக்கு, ஒருபால் அறிவுறுத்துகின்றதாக அஃது அமைகிறது. மற்றுமொருபால், நடுஅரசு மட்டும் நாட்டரசுகளுக்கு அவை என்ன நெறிகளைக் கடைப்பிடிக்கவேண்டுமென்று வற்புறுத்துவதுபோலும் அமைகின்றது. இந்நியதிகளை ஏட்டளவில் புனித மந்திரங்களாக மட்டிலும் வைத்திருப்பது மக்களை ஏமாற்றுவதோடன்றி அரசியலமைப்புத் திட்டத்திற்கே முரணானது. மக்களின் பேராட்களும், அரசாங்க அலுவலர்களும் இவைகளைப் பயனுள்ளவைகளாகச் செய்வதற்கு முழுமனத்துடன் உழைக்கவேண்டும். தனி மகனுக்கு, உறுதியளிக்கப்பட்டுள்ள ஆதார உரிமை உட்பட, இச் செயற்பாட்டிற்கு எவ்விதத் தடையுமிருக்கக் கூடாது. ஒரு தனிமனிதனின் விருப்புகளுக்கு அதிக மதிப்பளித்ததற்காக ஒரு சமுதாயத்தின் முன்னேற்றமும் நலனும் கெட்டுவிடக்கூடாதென்பது முழுவதும் உண்மையாக இருக்கிறது அல்லவா? இதன் காரணமாகவே, பொதுநலனைக் கருதி ஆதார உரிமை ஒவ்வொன்றும் தகுந்த கட்டுப்பாடுடன் இயங்கவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. அவ்வுரிமைகளின் மீதுள்ள கட்டுப்பாடுகள் ஒழுங்கு, நன்னடத்தை, கௌரவம், சுகாதாரம் அல்லது மற்றவைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். ஆதார உரிமைகள், நெறிசெய் நியதிகளைத் தழுவியே செயற்படவேண்டுமென்று குறித்தது இந்த நோக்கமுடனேயாகும். உண்மையில் இவையிரண்டிற்குமிடையில் எவ்வித முரண்பாடுகளும் இருக்கமுடியாது. அவை ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புகொண்டவை; இணைபிரியாதவைகளாகவுமிருக்கின்றன.

இருபதாவது நூற்றாண்டின் இடையில் உருப்பெற்றெழுகின்ற அரசியலமைப்புத் திட்டமொன்றில், இந்தியத் திட்டத்திலுள்ளதைப்போல, நெறிசெய் நியதிகளைப்பற்றிய ஓர் அதிகாரம் ஐயமின்றி இடம் பெற்றிருக்கும். அரசியலில் ஜனநாயக முறையை ஏற்படுத்துவது, திட்டத்தின் அடிப்படை நோக்கமாக இருக்கிறது. ஆனால், அதனுடன் நின்றுவிடலாகாது. அத்தகைய ஜனநாயக அரசியலை வளர்க்கின்ற சக்திகளைச் சிறுகச் சிறுகக் கவனமுடன் பெருக்கி வரவேண்டும். ஜனநாயக அடிப்படையில் அமைகின்ற பொருளாதாரச் சூழ்நிலை, அரசியல் ஜனநாயகத்தை நீடிக்கச் செய்கின்ற மாபெருஞ் சக்தியாக விளங்குகிறது. பொருளாதாரச் சுதந்திரம் இல்லையெனில், ஜனநாயக அரசியல் அதிவிரைவில் சர்வாதிகாரியின் ஆட்சியாக மாறிவிடக்கூடும். ஆதார உரிமைகளை, இந்திய நாட்டில் ஜனநாயக அரசியலை உருவாக்குகின்ற சக்திகளென்று கொள்வோமேயாகில், நெறிசெய் நியதிகளை, ஜனநாயக அரசியலின்

.ஊட்ட சத்துகளாக விளங்குகின்ற பொருளாதாரச் சுதந்திரத்தைப் பெற்றுத்தருகின்ற ஜீவசக்திகளாகக் கருதவேண்டும். இவ்வுண்மைகளையெல்லாம் கசடற அறிந்தும், நெறிசெய் நியதிகளைச் சட்ட மதிப்புப் பெறாத தேர்தல் பிரசார மொழிகள் என்றோ, நிச்சயமும் தெளிவுமற்ற பயனற்ற வார்த்தைகள் என்றோ அல்லது அறம்சார்ந்த புனிதக் கூற்றுகள் என்றோ கூறுவது அறிவுடைமையாகாது. சென்ற பத்தாண்டுகளில் நாம் பெற்றுள்ள அனுபவவாயிலாக, இக் குற்றச்சாட்டுகள் பொருளற்றவை என்றும், பொருத்தமற்றவை என்றும் நாம் அறியலாகும். இந் நெறிசெய் நியதிகள் வங்கியொன்றின்மீது, அதன் வசதிபோல் பணம் கொடுக்குமாறு பணித்து வழங்கப்பெற்ற 'செக்குகள்' போன்றவை வங்கியின் பொருளாதார வசதியைப் பொறுத்து இச் செக்குகளை மாற்ற இயலும் என்று K. T. ஷா என்பவர் அரசியல் நிர்ணய சபையில் கூறினார். அவர் உயிருடனிருந்திருந்தால், தற்போது தனது எண்ணத்தை மாற்றிக் கொண்டிருப்பார் என்பதில் ஐயமில்லை.

நெறிசெய் நியதிகளைக் குறித்துப் பேசப்படுகின்ற மற்றுமொரு குறைபாடு வருமாறு அமைகின்றது: பத்தொன்பதாம் நூற்றாண்டில், ஆங்கில நாடு அல்லது மேற்கு ஐரோப்பா பெற்ற அனுபவங்களை, அரசியல் விதிகளாக வடித்து, 20ஆம் நூற்றாண்டின் மத்தியில் இன்று உருவாக்கப்பெறுகின்ற ஓர் அரசியலமைப்புத் திட்டத்தில் இடம்பெறச் செய்து, அவை இந்திய நாட்டிற்கு மிகவும் ஏற்றவையெனக் கூறுவது தேவையா? என்ற கேள்வி எழுப்பப்படுகிறது. உண்மையில் திட்டம் செயற்படும்போது 21ஆம் நூற்றாண்டில் இவ்வேறுபாடு பொருந்துமா? என்ற வினாவிற்கு விடையளிப்பது மிகக் கடினமாகும். அதற்குள்ளாகவே, இவை காலத்தால் பின்தங்கிவிடக்கூடும். ஓர் அணு அல்லது ஹைட்ரஜன் யுகத்தின் அரிய சக்திகளை மதிப்பிடுவதற்கு யாரால் இயலும்? இந்திய நாட்டின், இன்றைய பொருளாதாரச் சூழ்நிலையில் புரட்சிகரமான மாறுதலேற்படக்கூடும். அதன் பயனாக மக்களின் சடப்பொருள்கள் தேவையைப் பூர்த்தி செய்யவல்ல வளமிக்க நாடாக இந்தியா மாறிவிடுவதும் சாத்தியமாகும். அத்தகைய சூழ்நிலையில், நெறிசெய் நியதிகள் காலத்தால் பின்தங்கிவிடக்கூடுமென்பதோடன்றி, புரட்சிக் கொள்கைகளாகவும் மாறிவிடக்கூடும். இருபதாம் நூற்றாண்டுச் சூழ்நிலையைப் பொறுத்தமட்டில், பொருளாதாரத் துறைகள் பலவற்றில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேற்கு ஐரோப்பாவில் நிலவிய தரத்தை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இந்திய நாட்டிற்கு அதிகமான முன்னேற்றம் தேவையென்றே நாம்

உறுதிசெய்ய வேண்டியிருக்கிறது. இவ்வாறாக, நெறிசெய் நியதிகள் பத்தொன்பதாவது நூற்றாண்டு ஐரோப்பிய அரசியல் அனுபவங்களைத் தழுவியவை என்று கொண்டாலும், இருபதாவது நூற்றாண்டில் இந்திய நாட்டிற்கு அவை தேவையற்று விடவில்லை என்று கூறலாம். தவிர இக் கொள்கைகளை, ஐரோப்பிய நாட்டிலிருந்து கடனாகப் பெறப்பட்டவை என்று கருதுவதும் பொருத்தமற்றது. நாம் வேறொரு சந்தர்ப்பத்தில் கூறியவாறு, இவ்வதிகாரத்தில் கண்டுள்ள விதிகள் பல, திட்டத் தயாரிப்பாளர்களின் சமமான புத்திகூர்மைக்கும், இந்திய மக்களின் வளம் செறிந்த அறிவிற்கும் சான்று பகர்கின்றன.

நெறிசெய் நியதிகள் காலத்தால் பிற்பட்ட நியதியை அடையுமெனில், அந்நிலையை அடையும்போது, அவைகளைத் திருத்தியமைத்துக் கொள்ளலாம். அல்லது அறவே ஒழித்து விடலாம். இந் நியதிகளைச் சுயமாக மாற்றியமைத்துவிடலாம். அந் நிலை ஏற்படுவதற்குள் இந் நெறிகளால் இந்திய நாடு மிகவும் பயனடைந்திருக்கும். அப்போது பொருளாதாரச் சுதந்திரம் இந்திய மண்ணில் வேரூன்றியிருக்கும். இந் நியதிகள் எவ்வித இலட்சியங்களுக்காக நிறுவப்பட்டனவோ அவ் இலட்சியங்களும் ஈடேறியிருக்கக்கூடும். மேலும், இந்திய மரபின் பகுதிகளாக இந் நியதிகளும் நாட்டுப் பண்புகளுடன் கலந்துவிட்டிருக்கும். இந் நியதிகள் எத்தகைய அறிவு புகட்டவல்லவை என்பதை இதிலிருந்து மிக நன்றாக அறியலாம். வருங்கால குடிமக்களான இந்திய யுவர்களின் சிந்தனைகளில், நிலையான அரசியலும், நிலை பேறுக்கம் பெற்ற பொருளாதாரச் சூழ்நிலையும், எத்துணை அவசியமென்பதை இவை பசுமரத்தாணிபோல் பதிய வைக்கின்றன. ஓர் அரசியலமைப்புத் திட்டத்தில் தற்கால நிலையே முதலிடம் பெறுகிறது. நிகழ்கால ஏற்பாடுகள் நன்கு அமைந்துவிட்டால், எதிர்காலத்தைக் குறித்து நாம் கவலைப்படவேண்டியதில்லை. எனவே, அரசியலமைப்புத் திட்ட விதிகளை அடிப்படையாகக்கொண்டு, தொலைவிலிருக்கின்ற எதிர்காலத்தைக் குறித்து நாம் சிந்தனை செய்வது தேவையில்லை என்றே எண்ண வேண்டும்.

அரசாங்கம் மக்களுக்கு ஆற்றவேண்டிய கடனைத் திட்ட வட்டமாக எடுத்துரைப்பது இந் நெறிசெய் நியதிகளின் மிகச் சிறந்த இயல்பாக விளங்குகிறது. இக் கடமைகள் மிகவும் எளிமையானவைகள் என்றாவது, அல்லது அக் கடமைகளைச் சரிவர நிறைவேற்றிய பின்னரும் இந்தியச் சமுதாய முன்னேற்றம் ஏற்படப் போவதில்லை என்றாவது ஒருவராலும் கூற முடி

யாது. உண்மையில் அவை புரட்சிகரமானவைகளேயென்றாலும் சட்ட அடிப்படையிலேயே அவைகளை நிறைவேற்றவேண்டும். அரசியலமைப்புத் திட்டத்தின் ஒரு பகுதியாக இவைகளை இணைத்தமைக்கு உண்மையான விளக்கத்தை நாம் இங்குக் காண இயலும். தனி மகனின் சுயவுரிமையை அழித்துவிடும் மக்களின் சர்வாதிகாரமற்ற தவிர்க்கமுடியாத நிலைக்கும் எளிய மக்களின் பொருளாதார வாழ்க்கையைச் சீர்கெடுக்கும் பிரபுக்களாட்சி என்ற மற்றுமொரு கோடிக்கும் இடைப்பட்டதொரு சமநிலையை இந் நெறிசெய் நியதிகளின் துணைகொண்டு இந்திய அரசியலமைப் புத் திட்டம் ஏற்படுத்தும் என்பது திண்ணம்.

பகுதி IV

# அரசியல் இயந்திரம்-மத்திய அரசு முறை

## 17. மத்திய அரசு-ஆட்சித்துறை

பிரிட்டனில் நடைபெற்று வருவதைப்போல, பொறுப்புள்ள காபினெட் முறை அரசியலை இந்தியத் திட்டம் ஏற்றிருக்கிறது. எத்தகைய துரைத்தனத்தை ஏற்படுத்துவது என்பதைக் குறித்து அரசியல் நிர்ணய சபையில் ஆதியில் கருத்து வேற்றுமைகள் நிறைந்திருந்தன. ஐக்கிய அமெரிக்க நாடுகளில் இருப்பதைப் போல, ஜனாதிபதி ஆட்சி முறையை ஏற்படுத்த வேண்டுமென்று ஒரு சில அங்கத்தினர்கள் கருதினர். அக் கருத்துடையவர்கள் ஒரு சிலரேயிருந்தனர். சுவிட்சர்லாந்தில் நடைபெற்று வருவதைப்போலக் கூட்டுச் செயற்குழு அமைக்கவேண்டுமென்று ஒரே ஓர் அங்கத்தினர் விருப்பம் தெரிவித்தார். பாராளுமன்ற ஆட்சி முறை போன்ற நிலைத்தன்மையையும், ஜனாதிபதி ஆட்சிமுறையி லுள்ளதைப்போன்ற பொறுப்பையும் ஒரே சமயத்தில் இக் கூட்டுச் செயற்குழு முறை உருவாக்குகிறது. இவைகளுக்கு எதிராக, நிர்ணய சபையில் பெரும்பான்மையினர் காபினெட் முறை அரசையே மிகவும் விரும்பினர்.

நிர்ணய சபை முன்னொருகால் கூடியபோது காபினெட் அரசு முறையையே விரும்பியதால் அது மீண்டும் வலியுறுத்தப் பெற்றது. மேலும் நேருவைத் தலைவராகக் கொண்ட வரைத் திட்டக்கமிட்டியின் (மத்திய அரசிற்கு) சாதகமான சிபாரிசும் இதன்பாலிருந்தது. விவாதத்தின்போது எழுப்பப்பெற்ற இரு பிரச்சினைகள் வருமாறு: (1) ஜனநாயக ஆட்சிக்குத் தேவையான மிக்க வலிமைபெற்ற ஆட்சித்துறையை எவ்வாறு அமைப்பது? (2) இந் நாட்டின் சூழ்நிலைகளுக்கேற்றவாறு இயங்குகின்ற ஆட்சித் துறையை எவ்வாறு அமைப்பது? இவ்வினாக்களுக்கு விடையளிக்கின்ற வகையில் கே. எம். முன்ஷி அவர்கள் கூறியதாவது: 'வலிமை மிக்க துரைத்தனத்தையும் நெகிழ்ச்சி மிக்க ஆட்சித் துறையையும் நாம் பிரிட்டனில் காண்கிறோம். அரசியலடிப்படையில், நிதி நிர்வாக அதிகாரத்தைப் பெற்ற மக்கள் சபையின் பெரும்பான்மை அங்கத்தினர் தேர்ந்தெடுக்கின்ற காபினெட்

என்ற குழுவின் வசம் ஆட்சி நிர்வாகப் பொறுப்பு இருப்பதால் அங்கு அந்நிலை இருந்து வருகிறது. இது சட்டமன்றத்தின் பெரும்பான்மையினரின் ஆட்சி விளைவேயாகும். நாட்டுத் தலைவனை, அரசனுக்கு மதியாலோசனை வழங்குகின்ற காபினெட் தலைவர்களைச் சட்டமன்றம் ஆதரிக்கின்றது. அரசியல் கட்சிகளுக்கு மன்னன் அப்பாற்பட்டவனாகி விடுகிறான். அரசியலமைப்பின், விருப்பு வெறுப்பற்ற தலைமைச் சின்னமாக அவன் விளங்குகிறான். ஆங்கில நாட்டுத் துரைத்தனம் எல்லாச் சூழ்நிலைகளிலும் வலிமைமிக்கதாகவும் நிகழ்ச்சி நிறைந்ததாகவுமே விளங்குகிறது.'

சென்ற நூற்றாண்டுகளாக இந்திய மக்களின் பொதுவாழ்க்கை, பிரிட்டன் சட்டமுறைகளை அடிப்படையாகக்கொண்டே இயங்கி வந்திருக்கின்றது என்னும் மிக முக்கியமான செய்தியை நாம் மறந்துவிடக்கூடாது. பிரிட்டிஷார் வருகின்ற வழியே சாலச் சிறந்ததென்று நம்முள் பலர் எண்ணியிருந்தோம். சென்ற முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளாக நாட்டு நிர்வாகத்தில் ஏதோ முழுவகையான பொறுப்பும் ஏற்பட்டுவிட்டது. பாராளுமன்ற ஆட்சி முறைகளையே நாம் பண்புகளாக ஏற்றுவிட்டோம். நமது துணைநாடுகள் யாவும் சற்றேறக்குறைய பிரிட்டிஷாரின் அடிச்சுவடுகளைப் பின்பற்றியே ஆட்சி நடத்திவருகின்றன. இன்று இந்திய டொமினியனின் துரைத்தனம், முழுமைபெற்ற பாராளுமன்ற ஆட்சியாக நடைபெற்று வருகிறது. இத்துணை அனுபவம் பெற்றபின், நூற்றாண்டுகளுக்கு மேலாகப் பண்பு ஒன்றை வளர்த்து பின் அதைப் புறக்கணித்துவிட்டுப் புதுமையை நாடி நாம் ஏன் செல்லவேண்டும்?

## ஜனாதிபதியின் பதவி

திட்ட அடிப்படையில் இந்தியநாடு ஒரு குடியரசு என்பதால் இந்திய ஜனாதிபதி ஒருவர் அதன் தலைவராக அமர்த்தப்பட்டிருக்கிறார். நாட்டின் பாதுகாப்புப் படைகளுட்பட மத்திய அரசின் ஆட்சி அதிகாரப் பொறுப்புகள் யாவும் அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. ஜனாதிபதியாக நியமனம் பெறுவதற்கு மிக எளிய யோக்யதாம்சங்களையே திட்டம் விதிக்கின்றது. அப்பதவியைப் பெற விரும்புகிறவர், 35 வயது கடந்தவராகவும், மக்கள் சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு அருகதையுள்ளவராகவும் இருத்தல் வேண்டும். இந்திய அரசாங்கம் இராச்சிய அரசாங்கம் அல்லது தலநிறுவனம் ஆகியவற்றில் ஊதியம்பெற்றுத் தொழில்புரிபவர் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு அருகதையற்றவராவார். துரைத்தனத்தில், சில

உத்தியோகங்கள் இவ் விதிக்கு விலக்குகளாகவும் கருதப்படுகின்றன. ஜனாதிபதி, உபஜனாதிபதி, கவர்னர்கள், மத்திய மாநில அமைச்சர்களாகவும் பணியாற்றுகின்றவர்களுக்கு விதிவிலக்கு அளிக்கப்படும். ஜனாதிபதி, பாராளுமன்றத்தின் உறுப்பினராகவோ அல்லது மாநில மன்றங்களின் உறுப்பினராகவோ இருக்கமுடியாது. சட்டமன்ற உறுப்பினர் ஒருவர், ஜனாதிபதியாக நியமனம் பெற்றுவிட்டால், அந்த நாள் முதலாக அவர் அச் சலுகையை இழந்துவிட நேரிடும். வேறு எந்தவகையான ஊதியத்தையும், வேலைக்கமர்ந்து பெறலாகாது. பணி புரிவதற்கென்று வாடகையில்லாமல் அவருக்கு மாளிகை வசதி அளிக்கப்படும். பாராளுமன்றத்தினர் நிர்ணயிக்கின்ற சம்பளம், படி, சலுகைகள் ஆகியவற்றை அவர் பெறுவார். தற்போது மாதமொன்றுக்கு ரூ. 10,000 அவர் ஊதியமாகப் பெறுகின்றார். அவர் பதவியிலிருக்கின்றவரையில் அவரது சம்பளத்தையோ, படியையோ குறைக்க இயலாது.

## தேர்வு

ஐந்தாண்டுகளுக்குப் பதவி வகிப்பதற்கென்று, தேர்வுக் குழு ஒன்றினால் அவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். (அ) பாராளுமன்றத்தினரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும், (ஆ) மாநிலச்சட்டமன்றத்தினரால் தேர்ந்தெடுக்கப்படுகின்றவர்களும் அத்தேர்வுக் குழுவில் இடம் பெறுகின்றனர். ஜனாதிபதியைத் தேர்வதில், எல்லா மாநிலங்களுக்கும் ஒரேவகையான வாய்ப்பு அளிப்பதற்கும், மாநில மத்திய அரசுகளிடையிலுள்ள தாரதம்மியங்களைக் கருத்திற்கொண்டும், இந்திய அரசியலமைப்புத் திட்டம் மிக அருமையான வழியொன்றை வகுத்திருக்கிறது. தேர்தல் குழுவின் அங்கத்தினர்களுக்குத் தலைக்கு ஒரு ஓட்டு வீதம் அளித்து, இவ்வொருமைப்பாட்டை எளிதில் நிலைநிறுத்தியிருக்கலாம். ஆனால், அவ் வேறுபாடு முற்றிலும் ஏற்கக்கூடியதாக விளங்கி இருக்கமுடியாது. மக்கள் தொகைக்கும் அவர்களின் பேராட்களுககுமுள்ள விகிதம் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபட்டிருந்தது. உதாரணமாக ஒரு மாநிலத்தில் 50,000 மக்களுக்கு ஒரு பேராள் விகிதமும், மற்றுமொரு மாநிலத்தில் 75,000-ததிற்கு ஒரு பேராள் விகிதமோ அல்லது அதற்குமேலாகவோ இருந்திருக்கக்கூடும். இந்திய யூனியனில் மிகவும் அதிகமான மககள் தொகையைப் பெற்றுள்ள உத்தரப் பிரதேசத்தில் 63 மில்லியனுக்கும் அதிகமான மக்களுக்குச் சட்டமன்றத்தில் 430 அங்கத்தினர்களே இருக்கின்றனர். ஆனால், 9 மில்லியன் மக்களைக் கொண்ட அஸ்ஸாமிலோவென்றால், 108 பேராட்கள் இடம் பெற்றிருக்கின்றனர். நிலை இவ்வாறிருப்பதால் ஜனாதிபதி

தேர்தல் குழு அங்கத்தினர்களின் ஓட்டு மக்கள் பெற்றிருக்கின்ற மொத்த ஓட்டுகளை அடிப்படையாகக் கொண்டு, அதே விகிதத்தில் அமையவேண்டுமெனத் திட்டத் தயாரிப்பாளர்கள் இவ் வேறுபாட்டைச் செய்துள்ளனர்.

இதைச் செயற்படுத்துவதற்கென்று அமைக்கப்பெற்ற தனி வழியின்படி, மாநில மன்றங்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் குறிப்பிட்ட அளவுள்ள வாக்குரிமைகள் உண்டு. அவ் வாச்குரிமைகளின் மொத்த எண்ணிக்கை, மாநிலத்தின் மொத்த மக்கள் தொகைக்கு மன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பேராட்களின் தொகைக்குமுள்ள விகிதத்தைப் பொறுத்தே அமைந்திருக்கும். மொத்த எண்ணிக்கை வருமாறு கணக்கிடப்படுகிறது. முதலாவதாக, மாநில மக்களின் மொத்த எண்ணிக்கையை, மன்றத்தில் இடம் பெற்றிருக்கின்ற பேராட்களின் மொத்த எண்ணிக்கையால் வகுக்கவேண்டும். இவ்வாறு கிடைக்கின்ற ஈவுத்தொகையை ஆயிரம் ஆயிரமாகப் பிரிக்க வேண்டும். அரை அல்லது அதற்கு மேற்பட்ட தசாம்சங்களை முழுமையாகக் கணக்கிட்டு, ஈவுத்தொகையுடன் கூட்டுவதால், சட்டமன்றத்தின் ஒவ்வோர் உறுப்பினரும் ஜனாதிபதியின் தேர்வுக்கென்று பெறக்கூடிய வாக்குரிமைகளின் மொத்த எண்ணிக்கை கிட்டும்.

இம் முறையை, மேலும் தெளிவாக விளக்குவதற்குக் கீழ்க் காணும் உதாரணம் கொடுக்கப்பட்டுள்ளது. 1957ஆம் ஆண்டு நடைபெற்ற ஜனாதிபதித் தேர்வில், உத்தரப் பிரதேச சட்டமன்ற உறுப்பினர் ஒருவர் பெற்ற வாக்குரிமைகளின் திட்டமான எண்ணிக்கையை நாம் கணக்கிட்டுக் கூறுவோம்.

| | |
|---|---|
| உத்தரப்பிரதேச மக்களின் மொத்த எண்ணிக்கை. | 63,215,742 |
| சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பேராட்களின் மொத்த எண்ணிக்கை. | 430 |
| ஒவ்வோர் உறுப்பினரது மொத்த வாக்குரிமைகள். | $\frac{63,215,742}{430 \times 1000}$ |

$$=147\frac{13}{1000}=147$$

பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர் ஒவ்வொருவரும் ஜனாதிபதியைத் தேர்ந்தெடுப்பதற்கு என்று பெறுகின்ற வாக்குகளின் மொத்த எண்ணிக்கை, மாநிலச் சட்டமன்றப் பிரதிநிதிகளுக்கு அளிக்கப்படும் ஓட்டுகளின்

மொத்த எண்ணிக்கையை, பாராளுமன்றத்தின் இரு சபைகளிலுமுள்ள அங்கத்தினர்களின் மொத்த எண்ணிக்கையால் வகுத்துப் பெறப்படுகிறது. தலைக்கு ஒரு மாற்றக்கூடிய ஓட்டு என்ற அடிப்படையில் விகிதப் பிரதிநிதித்துவ முறையில் தேர்தல் நடத்தப்படுகிறது. தேர்தலின்போது இரகசிய ஓட்டளிப்பு முறையே கையாளப்படும். பொதுவாகக் கூறுமிடத்து ஜனாதிபதியைத் தேர்ந்தெடுப்பதற்குக் கடைப்பிடிக்கப்படும் இம்முறை மிக நூதனமானது. இத்தகைய முறையைக் கடைப்பிடிப்பதற்குத் திட்டத்தயாரிப்பாளர்களைத் தூண்டிய சக்தி யாது என்ற கேள்வி யாவருள்ளத்திலும் எழுகின்றது.

காபினெட் முறை அரசியலை ஏற்றுக்கொண்டுவிட்டதால், ஜனாதிபதி நாட்டின் அதிகாரம் பெற்ற தலைவராகப் பணியாற்ற வேண்டுமென்பது உறுதியாகிவிட்டது. எனவே, ஐக்கிய அமெரிக்க நாடுகளில் வழக்கிலிருப்பதுபோல மக்கள் முழுவதும் ஓட்டளித்துத் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பது தேவையற்றதென்பதோடு, அவசியமற்றதென்றும் கருதப்பட்டது. எனவே, கூடியவரையில், மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு சபையினரால் ஜனாதிபதியைத் தேர்வதே சிறந்ததென்று கருதினர். இவ்விரு இலட்சியங்களையுமே நடைமுறையிலிருந்துவரும் திட்டம் நிறைவேற்றிவிட்டதெனலாம். மாநிலச் சட்டமன்றங்கள், பாராளுமன்றம் ஆகியவற்றில் இடம்பெற்றுள்ள மக்களின் பேராட்களே ஜனாதிபதியைத் தேர்ந்தெடுப்பதால், தேர்வுமுறை மறைமுகமானதாகவும், எளிமை மிக்கதாகவும் அமைந்துவிடுகிறது. குடிமக்களில் வாக்குரிமை பெற்ற வயதுவந்தவர்களே, மாநிலச் சட்டமன்றங்களுக்குப் பேராட்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். பாராளுமன்றத்தின் மக்கள் சபைக்கும் அம் முறையாலேயே மக்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மேல்சபையின் அங்கத்திவர்கள் மாநிலச் சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்; மாநிலச் சட்டமன்ற உறுப்பினரும், வயதுவந்த வாக்குரிமை பெற்ற மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவ்வாறு ஜனாதிபதியின் தேர்விற்கென்று அமைக்கப்படும் குழு பல்வேறு ஆட்களைக் கொண்டதாக இருப்பதோடு அதிகமான அங்கத்தினர்களையும் கொண்டிருக்கிறது.

இவ்வாறு பாராளுமன்ற உறுப்பினர்களை மட்டிலுமன்றி, மாநில மன்றங்களின் உறுப்பினரையும் கொண்டு தேர்வுக் குழு அமைக்கப்பட்டிருப்பதன் தத்துவத்தைச் சற்று விரித்துரைக்க வேண்டும். ஒரு நாட்டின் தலைவரை அமர்த்துவதற்கான தேர்வில் பாராளுமன்ற உறுப்பினர்கள் மட்டிலுமே பங்குபெறுவார்களென்றால் பாராளுமன்றத்தின் பெரும்பான்மையினராக விளங்கு

கின்ற ஒரு கட்சியினர் தங்கள் அங்கத்தினர் ஒருவரைச் சுலப மாகத் தலைவராகச் சேர்த்துவிட முடியும். மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களும் அத் தேர்வில் பங்குபெறுகின்றபோது இந் நிலை கணிசமான மாறுதலுக்குட்படுகிறது. அஃது எவ்வாறெனில், பாராளுமன்றத்தில் பெரும்பான்மையினரைக் கொண்ட கட்சி ஒன்று, அநேக மாநிலச் சட்டமன்றங்களில், அல்லது எல்லா மாநிலச் சட்டமன்றங்களிலுமே சிறுபான்மைக் கட்சியாகவும் இருக்கலாம். அத்தகைய சூழ்நிலைகளில் பாராளுமன்றப் பெரும் பான்மையினரின் ஆதரவு பெற்ற கட்சி தனித்து நின்று, தனது பேராளையே தேர்ந்துவிடுவதென்பது இயலாது.

'விகிதப் பிரதிநிதித்துவம்' என்ற சொல்லைப் பயன்படுத்து வதற்கு நிர்ணய சபையில் பலத்த எதிர்ப்பு இருந்தது. ஒருவ ரையே ஜனாதிபதியாகத் தேர்வதால், இச் சொல் பொருத்த மற்றது எனக் கருதினர்கள். 'பல அங்கத்தினரைக் கொண்ட தொகுதி இல்லாதபோது இச் சொல்லிற்கு என்ன பொருளிருக் கிறது?' எனக் குறைகூறுபவர்கள் சுட்டிக்காட்டினர். ஆனால், இச்சொல் முற்றிலும் பொருத்தமுள்ளது என்பதை நாம் மெய்ப் பிக்கலாம். தேர்ந்தெடுக்கப்படவேண்டிய அபேட்சகரின் சார்பில் மெஜாரிட்டியான வாக்குரிமைகள் பெறுவதோ, அல்லது பாராளுமன்றம், மற்றும் மாநில மன்றங்களுக்குத் தேர்ந்தெடுக் கப்படுவதுபோலப் பன்மை ஓட்டுகளின் மூலமாகத் தேர்ந்தெடுப் பதோ அன்றி, பயன்படுத்தப்பட்ட மொத்த வாக்குரிமைகளில் ஐயமற்ற பெரும்பான்மை ஓட்டுகள் ஜனாதிபதியாகப் பதவி பெற விரும்புபவர் பெறவேண்டுமென்று இம் முறை உறுதியளிக்கிறது. ஜனாதிபதி நாட்டின் தலைவராவார். நாட்டின்கண்ணுள்ள எல்லாக்கட்சிகளும் பிரிவுகளும் இந்திய நாட்டைச் சேர்ந்தவைக ளாகும். ஜனாதிபதி, கட்சி அரசியல்களுக்கு அப்பாற்பட்டவராக இருக்கவேண்டுமென்பதால் கூடியவரை, பெரும்பான்மையான வாக்குரிமைகளைப் பெற்று அவரைத் தேர்ந்தெடுப்பதே முறை யாகும். அபேட்சகரின் சார்பாகச் சாதாரணப் பெரும்பான்மை ஓட்டுகளைப்பெறும் தேர்தல் முறையில் இத்தகைய பாதுகாப்புக் கிடையாது. வழக்கிலுள்ள முறையால, ஐயமற்ற பெரும் பான்மை வாக்குகளை அவர் பெறவேண்டுமென்பது உறுதியாகி விடுகிறது. இரண்டாவதாகப் பாராளுமன்றத்திலோ, அல்லது சில மாநிலச் சட்டமன்றங்களில் மட்டிலுமோ சிறுபான்மையின ராக விளங்கும் கட்சியினருக்கு அல்லது மாநிலங்களில்மட்டிலும் அதிகச் செல்வாக்கைப்பெற்று விளங்கும் கட்சியினருக்கு, ஜனாதி பதியின் தேர்வில் உரிய பங்கு பெறுவதற்கு வாய்ப்புக் கிட்டு கின்றது. தேர்வுக் குழுவிலுள்ள வாக்குரிமைகளின் மொத்த

எண்ணிக்கையில், ஐயமற்ற பெரும்பான்மைபெறும் வாய்ப்புப் பெற்ற கட்சியில்லை எனில், பதவிபெற விரும்புகின்ற அபேட்சகர் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கட்சியினரின் உதவியை நாடவேண்டியிருக்கும். அதிகச் செல்வாக்குப் பெற்றிராத கட்சிகளுக்கும் தேர்வை நிர்ணயிக்கின்ற வாய்ப்பு இதனுல் அளிக்கப் படுகிறது.

ஜனுதிபதியைத் தேர்ந்தெடுக்கின்ற முறையை வர்ணிக்கின்ற போது மிக்க சிக்கல் நிறைந்ததாகத் தென்பட்டபோதிலும், உண்மையில் அது சுலபமாகவே நடைபெற்றுவிடுகிறது. மேலும், ஐக்கிய அமெரிக்க நாடுகளில் இருப்பதைவிடக் கூட்டாட்சி அரசியல் முறையை இது மிகவும் ஒத்திருப்பதாகவும் தெரிய வருகின்றது. ஐக்கிய அமெரிக்க நாடுகளில் தேர்தல் குழு நாட்டுத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதாகக் கூறப்படுகிறது; ஆனுல், உண்மையில் மக்களே அவர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். ஒரு நாட்டுத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்கு உலகில் எந்த நாட்டிலும் இல்லாத வகையில் ஒரு மாபெரு அரசியல் போராட்டத்தையே அமெரிக்க நாட்டில் நடத்தி விடுகின்றனர். அத்தகையதொரு போட்டி இந்திய நாட்டில் ஓசை ஒரு சிறிதுமின்றிப் பொதுஜன அமைதிக்குப் பங்கமின்றி நடைபெற்றுவிடும். என்றுலும், தேர்தல் இந்திய நாடு முழுவதையும் பொறுத்த விஷயமென்பதிலும் ஐயமில்லை. இருந்தபோதிலும், அதில் நேரடியாகப் பங்குகொள்பவர்களின் எண்ணிக்கை. ஒரு சில ஆயிரங்களுக்குள் அடங்கிவிடுவதால் (தோராயமாக 4000) காரியத்திலேயே கண்ணுக, அஃது அமைதியாக முடிந்துவிடுகிறது.

ஜனுதிபதி, அரசியலமைப்பின் அடிப்படையில் அமர்த்தப் படுகின்ற நாட்டுத் தலைவரென்றுலும், மிக்க செல்வாக்குள்ள அதிகாரங்கள் அவர் கையில் இல்லை. ஜனுதிபதி என்ற பதவிக்கு மிகுந்த கௌரவமும் மரியாதையுமிருந்துவருகின்றன. ஜனுதிபதிக்குச் சட்ட அடிப்படையில் அளிக்கப்பட்டிருக்கும் சலுகைகளை நோக்கும்போது இது புலனுகும். ஜனுதிபதி என்ற முறையில் அவராற்றுகின்ற செயல்களுக்கும், அதிகாரங்களைப் பயன் படுத்துவதிலும், எந்த நீதிமன்றத்தின் துணையையும் தேட வேண்டியதில்லை. அவர்மீது எவ்விதமான கிரிமினல் சட்ட வழக்கும் தொடர முடியாது. அவர் பதவியிலிருக்கின்றவரை, அவரைக் கைது செய்யவோ, சிறையிலிடவோ முடியாது. சிவில் வழக்கும் அவர்மீது தொடர முடியாது. அவ்வாறு தொடர வேண்டுமெனில், இரண்டுமாதக் கெடுவில் எழுத்துமூலமான அறிவிப்புச் செய்யவேண்டும். பதவியேற்பதற்குமுன் பெரு நீதிமன்ற நீதிபதியின்முன், வாக்குறுதிசெய்து, பிரதிக்ஞை

எடுக்கவேண்டும். ஜனாதிபதி என்ற முறையில் 'அரசியலமைப்புத் திட்டத்தையும் சட்ட முறைகளையும் போற்றிக் காப்பாற்றுவதாகவும், இந்திய மக்களின் நல்வாழ்விற்காகத் தொண்டு செய்து தம்மை அர்ப்பணித்துக் கொள்வதாகவும் ' அவரளிக்கின்ற வாக்குறுதியின் வாசகம் அமைகின்றது.

சாதாரணமாக, மரணம், ராஜினமா அல்லது துரோகக் குற்ற விசாரணையின் விளைவு என்ற மூன்று காரணங்களுக்காக, ஜனாதிபதியின் பதவி காலியாகக்கூடும். ஜனாதிபதியின் மீது துரோக விசாரணைக் குற்றச்சாட்டிற்கென விரிவான முறையொன்றைத் திட்டவிதி அமைத்துள்ளது. குறிப்பிடத்தக்க ஒரேயொரு மாறுதல் நீங்கலாக இம் முறை ஐக்கிய அமெரிக்க நாட்டிலுள்ளதைப் போன்றே இருக்கிறது. இந்திய நாட்டில், குற்றப்பத்திரத்தைப் பாராளுமன்றச் சபைகளில் ஏதாவதொன்றில் தாக்கல் செய்யலாம். ஆனால், அமெரிக்க நாட்டில் பிரதிநிதிகள் சபையில் மட்டிலுமே அக் குற்றச்சாட்டைத் தாக்கல் செய்யமுடியும். அரசியலமைப்புத் திட்டத்தை மதிக்கத் தவறிவிட்டார் என்ற ஒரு காரணத்திற்கு மட்டிலுமே ஜனாதிபதியைக் குற்றம் சாட்டமுடியும். பொதுவில், இவ்வாறு கூறுகின்றபோது, துரோகம், லஞ்சம் முதலிய பலவகையான குற்றங்களும் இதிலடங்கிவிடும். பாராளுமன்றத்தின் சபைகளில் ஏதாவதொன்று, குற்றத் தாக்கலை அனுமதித்த பின்னர், ஏற்பாட்டை ஒரு தீர்மானமாகச் செய்து, பதினுன்கு நாட்கள் முன்னறிவிப்புச் செய்து பிரேரேபிக்கவேண்டும். இந்த முன்னறிவிப்பில் மன்றத்திலுள்ள மொத்த அங்கத்தினர் எண்ணிக்கையில் நான்கில் ஒரு பங்கினராவது கையெழுத்துச் செய்திருக்கவேண்டும். குற்றத் தாக்கலை அனுமதிப்பதற்கு, அத் தீர்மானத்தைச் சபையிலுள்ள அங்கத்தினரின் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்கினர் ஒப்புக்கொடுக்கவேண்டும். அறிவிப்பில் மன்றத்தின் மொத்த அங்கத்தினர் எண்ணிக்கையில், நான்கில் ஒரு பங்கினராவது கையெழுத்துச் செயதிருக்கவேண்டும். குற்றச்சாட்டு ஏற்கப்படுவதற்கு, அத் தீர்மானத்தை மன்ற உறுப்பினரின் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்கினர் ஒப்புக்கொடுத்து நிறைவேற்ற வேண்டும். இவ்வாறு மன்றத்தின் சபைகளிலொன்றில் குற்றப்பத்திரத்தைத் தாக்கல்செய்ய அனுமதி பெற்றதும், மற்றுள்ள சபை குற்றத்தை ஆராய்வதில் ஈடுபடும், அல்லது தனியொரு குழுவினரிடம் அவ் வேலையை ஒப்படைத்துவிடும். இவ்வாராய்ச்சியின் பயனாகத் தாக்கல் செய்யப்பெற்ற குற்றம் மெய்யானதென்று ஏற்பட்டு, அதை ஆமோதித்து, மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையினரைக் கொண்ட

சபையினரால் தீர்மானம் நிறைவேற்றப்படுமெனில், அத் தீர்மானம் நிறைவேறிய நாளிலிருந்து குறிப்பிட்ட நபர் இந்திய நாட்டு ஜனாதிபதி பதவியிலிருந்து நீக்கப்பட்டுவிடுவார்.

நாம் மேலே கூறிய ஏதாவதொரு காரணம்பற்றி ஜனாதிபதி பீடம் காலியாகும்போது, உபஜனாதிபதி அப்பொறுப்பை ஏற்றுப் புதிய ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்படும்வரையில் பணியாற்றி வருவார். ஆனால், இவ்வாறு வேலை காலியானதும், ஆறுமாதங்களுக்குள்ளாகப் புதிய ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கவேண்டும். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகின்ற புதிய ஜனாதிபதி பதவி ஏற்றதிலிருந்து ஐந்தாண்டுகளுக்குத் தொழில் புரிவார். ஜனாதிபதியொருவரை அதே பதவிக்கு மீண்டும் தேர்வதற்குத் திட்ட அடிப்படையில் தடையேதுமில்லை. தலைவர் தேர்வின்போது ஏற்படுகின்ற ஐயப்பாடுகளுக்கும் விளையும் சச்சரவுகளுக்கும் இறுதியான விளக்கமோ அல்லது தீர்ப்போ வழங்குகின்ற அதிகாரம் இந்திய நாட்டு உயர்நீதிமன்றத்திற்கே உண்டு.

## ஜனாதிபதியின் அதிகாரங்கள்

திட்டத்தின் 53ஆம் விதிக்கிணங்க, நடு அரசின் ஆட்சிப் பொறுப்பு ஜனாதிபதியிடம் ஒப்புவிக்கப்படுகிறது. அவ் அதிகாரத்தை அவர் நேரிடையாகவும், அல்லது கீழ்ப்படிதலிலுள்ள அலுவலர்கள்மூலமாகவும் செலுத்தலாம். திட்டம் ஜனாதிபதிக்கு அளிக்கின்ற அதிகாரங்களைக் கொண்ட பட்டியல் நீண்டதாகவும் வியப்பூட்டுவதாகவும் இருக்கிறது. அதில் கண்டிருக்கின்ற அதிகாரங்களை, ஆட்சித்துறை, சட்டமியற்றும் துறை, மற்றும் நெருக்கடியான நிலை என்று பரவலாக மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

## ஆட்சித்துறை அதிகாரங்கள்

மத்திய அரசின் ஆட்சித்துறை அதிகாரங்கள் அதற்கு அளிக்கப்பட்டிருக்கும் சட்டமியற்றும் அதிகாரங்களுடன் ஒட்டியவை என்ற பொது ஏற்பாட்டைத் திட்டம் விதிக்கிறது. இவ்வதிகார எல்லையை நிர்ணயித்துக் கூறிய பெரு நீதிமன்றத்தின் கருத்திற்கிணங்கப் பாராளுமன்றம் இதுகாறும் நிறைவேற்றிய சட்டங்கள் உட்பட•மேலும் அதன் அதிகாரத்திற்குட்பட்டு நிறைவேற்றக் கூடிய சட்டங்களும் இவ்வதிகார வரம்பிற்குள் அடங்குகின்றன• மத்திய அரசு ஆட்சித்துறையின் தலைவராக ஜனாதிபதி விளங்குவதால், அவரது ஆட்சி அதிகாரங்கள் மத்திய அரசு மேற்கொள்ளும் எல்லா நடவடிக்கைகளின்மீதும் செலுத்தப்படும். பாதுகாப்புப் படைகளின் உயர்சேனாதிபதியாகவும் அவர்

விளங்குகின்றார் என நாம் முன்னரே கூறியுள்ளோம். இவ்வாறு ஜனாதிபதியைச் சேனாதிபதியாகவும் அமர்த்திவிட்டதால், அரசியலமைப்புத் திட்டம் ஆயுதம் தாங்கிய நாட்டுப் படைகள் யாவும் என்றுமே சிவில்துறைக்குக் கீழ்ப்படிந்தவையாக அமைந்துவிடுகின்றன. இதற்குமேலாக ஆட்களை வேலைக் கமர்த்துவதற்கும் ஜனாதிபதிக்கு ஏராளமான அதிகாரமுண்டு. முதலமைச்சரையும் அமைச்சர் குழு அங்கத்தினர்களையும் அவர் பதவியிலமர்த்துகிறார். இந்தியத் துரைத்தனத்தார் புரிய வேண்டிய பணிகளையும் அவர் திட்டமிடுகிறார். அமைச்சர் குழுவிலுள்ள ஒவ்வோர் அங்கத்தினரும் ஆற்றவேண்டிய பணிகளையும் அவர் பகிர்ந்தளிக்கிறார். அட்டர்னி ஜெனரல் (வழக்குத் துறைத்தலைவர்), தலைமை நீதிபதி, பெருநீதிமன்றம்,மற்றும் உயர் நீதிமன்றங்களின் நீதிபதிகள், பொதுப் பணியாளரைப் பொறுக்கும் மத்திய அரசாங்க ஆணைக்கழகத்தின் அங்கத்தினர்கள், தேர்தல் கமிஷன் உறுப்பினர்கள், கம்ட்ரோலர் அண்டு ஆடிட்டர் ஜெனரல் (அரசாங்கத் தணிக்கைத் தலைவர்), ஸ்தானிகர்கள், மற்றும் வெளிநாட்டிலுள்ள இந்தியத் தூதாண்மைப் பிரதிநிதிகள், ஷெட்யூல் சாதியினர், மற்றும் பின்தங்கிய சாதி-இனத்தினருக்கான கமிஷனர், கவர்னர்கள், யூனியன் பகுதிக்கான சீப் கமிஷனர்கள், நிதிக்குழு, மற்றும் நாட்டரசுக் குழுவின் அங்கத்தினர்கள் ஆகிய யாவரும் ஜனாதிபதியின் அரசியலதிகாரத்தைப் பயன்படுத்தி அல்லது பெயரால் அமர்த்தப்படுகின்றனர். நாம் மேலே குறிப்பிட்ட அலுவலர்களுக்கு வேலை வழங்கும் உத்தரவு 'ஜனாதிபதியின் முத்திரையும் கையெழுத்தும் கொண்ட' ஆணையாக இருக்கும்.

திட்டவிதி 72-க்கு இணங்க, மன்னிப்பு வழங்குகின்ற அதிகாரமும் ஜனாதிபதிக்கு உண்டு. ராணுவக் கோர்ட்டுகள் வழங்குகின்ற தீர்ப்பிலும், மற்றும் இந்திய யூனியன் விதிகளை மீறியதற்காகப் பிற நீதிமன்றங்களால் தண்டனை வழங்கப்பட்டபோதும், குற்றவாளியை மன்னித்துவிடுவதற்கும் அல்லது தண்டனையை நிறுத்திவைக்கவும் பரிசிரமத்திற்குக் கால இடைவெளி அளிப்பதற்கும், தண்டனையைக் குறைப்பதற்கும், அல்லது தள்ளிவைப்பதற்கும் அல்லது தண்டனையை மாற்றுவதற்கும் ஜனாதிபதிக்கு அதிகாரமுண்டு.

## சட்டமியற்றும் அதிகாரங்கள்

சட்டமியற்றுகின்ற துறையிலும் ஜனாதிபதிக்கு முக்கியமான அதிகாரங்கள் உண்டு. உண்மையில் சட்டமியற்றுவதற்கு ஜனாதிபதியும் உடந்தையாகவே இருக்கிறார்; அவரது ஒப்புதல் பெறாத

எந்த மத்திய அரசாங்க மசோதாவும் சட்டத்தின் வலிமையைப் பெற்றுவிட முடியாது. பார்ராளுமன்றச் சபைகளுக்கு அவர் அழைப்பு விடுக்கிறார். கூட்டத்தை ஒத்திவைப்பதற்கும், மக்கள் சபையைக் கலைத்துவிடுவதற்கும் அவருக்கு அதிகாரமுண்டு. பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் தனித்தனியாக அவர் பிரசங்கம் நிகழ்த்தலாம். அல்லது இரு சபைகளையும் ஒன்று கூட்டிப் பிரசங்கம் நிகழ்த்தவும், அவைகளுககுச் செய்திகள் விடுக்கவும் அவருக்கு அதிகாரமுண்டு. மத்திய அரசாங்க மன்றத்திற்கு அவர் 12 அங்கத்தினர்களை அமர்த்துகிறார்; ஆங்கிலோ-இந்திய சமூகத்தினருக்கென்று இரண்டு அங்கத்தினர்களை மக்கள் சபைக்கு அமர்த்துவதற்கும் அதிகாரமுண்டு. பாராளுமன்றத்தினரால் நிறைவேற்றப்படுகின்ற மசோதா ஒவ்வொன்றும், ஜனாதிபதியின் ஒப்புதல் பெறுவதற்கென்று அனுப்பிவைக்கப்பட வேண்டும். அவர் ஒப்புக் கொடுக்காமல் மறுக்கக்கூடும். அல்லது மசோதாவைப் பாராளுமன்றத்தினரின் புனராய்வுக்கென்று அனுப்பிவைக்கவும் கூடும். ஒவ்வோர் ஆண்டிற்கும் யூனியன் துரைத்தனத்தின் வருவாயையும், செலவுகளையும் காட்டித் தயாரிக்கப்படுகின்ற வருடாந்தர பட்ஜெட்டைப் பாராளுமன்றத்தின்முன் சமர்ப்பிப்பதற்கு அவர் வழியமைக்கிறார். அவரது சிபாரிசின்றிப் பாராளுமன்றத்தில் நிதிமானியங்களைக் கோரவியலாது.

திட்டவிதி 123-ன் அடிப்படையில் அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்க அவர் பெற்றிருக்கின்ற அதிகாரத்தையே மிகச்சிறந்ததெனக் குறிப்பிடவேண்டும். பாராளுமன்றங்களின் இரு சபைகளும் செயல்படும் காலம் நீங்கலாகப் பிற நேரங்களில் நிலவியிருக்கின்ற சூழ்நிலையில் தனது தலையீடு தேவை என்று ஜனாதிபதி உணர்ந்தால், அவர் இவ்வுடனடிச் சட்டங்களைப் பிரகடனம் செய்யலாகும். ஜனாதிபதியின் இத்தகைய கட்டளைகளுக்குப் பாராளுமன்றச் சட்டத்தின் உரிமை உண்டு. பாராளுமன்றம் மீண்டும் கூடுகின்ற ஆறு வார காலத்திற்குள்ளாக, உடனடிச் சட்டங்கள் மன்றத்தின் முன் சமர்ப்பிக்கப்படவேண்டும். இந்த நிபந்தனை நிறைவேற்றப்படவில்லையென்றாலும், அல்லது ஆறு வார காலத்திற்குள்ளாகப் பாராளுமன்றம் இதை ஒப்புக் கொள்ளவில்லையென்றாலும் அவசரச் சட்டம் செல்லாக்கிழந்துவிடும் அவசரச் சட்டத்தை எந்த நேரத்திலும் வாபஸ் பெற்றுவிடுவதற்கும் ஜனாதிபதிக்கு அதிகாரம் உண்டு

## நெருக்கடிகால அதிகாரங்கள்

நெருக்கடி நிலைகளை மூன்று வகைப்படுத்தி அறிவிப்பதற்கு ஜனாதிபதிக்கு அதிகாரம் உண்டு. உள்நாட்டுக் கலகம் ஏற்படலா

மென்று கருதியும், அல்லது அந்நியர் படையெடுப்பு ஏற்படு கின்ற காலங்களிலும், நெருக்கடி நிலை ஏற்பட்டிருப்பதாக, ஜனாதி பதி பிரகடனம் செய்துவிடலாம். இந்திய நாடு முழுவதையும் அல்லது ஒரு பகுதியை இப்பிரகடனத்தின் வரம்பிற்குஉட்படுத்த லாகும். ஏதாவது ஓர் இராச்சியத்திலோ அல்லது மத்திய அரசிலோ அதிகாரபூர்வமான ஆட்சி யந்திரம் பழுதடைந்து விட்டாலும், நெருக்கடி நிலை ஏற்பட்டுவிட்டதாக அவர் அறி வித்துவிடலாம். நாட்டின் நிதிநிலைமை மோசமாகிவிட்டதென் றாலும், நிதி நெருக்கடி ஏற்பட்டுவிட்டதென்று அவர் விளம்பரப் படுத்திவிடலாம். [இவ்வதிகாரங்களும் அவைகளுக்குரிய விளக் கங்களும் தனியானதோர் அதிகாரத்தில் கண்டிருப்பதால், அவைகளை இங்கு விரித்துக்கூறும் நோக்கமில்லை].

## ஜனாதிபதி, அரசியலடிப்படையில் அமர்த்தப்பட்ட நாட்டுத் தலைவர்

ஜனாதிபதிக்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களை முழுமை யாகவும், முகமதிப்பிலும் கொண்டால் அவை கணக்கிலடங்காத வைகளாக இருக்கின்றன. ஆட்சித் துறையின் தலைவருக்கு இத்தகைய விரிவான ஏராளமான அதிகாரங்களை வேறு எந்த அரசியல் திட்டமும் வழங்கியதில்லை. இவ்வதிகாரங்கள் அல்லது அவற்றில் பெரும்பாலானவைகளை அவர் எவ்வாறு பயன்படுத்து கிறார் என்பதே பிரச்சினையாகும். இக் கேள்விக்குக் கிடைக்கும் விடையைப் பொறுத்தே திட்ட அடிப்படையில் ஜனாதிபதியின் உண்மைநிலையை நாம் மதிப்பிடமுடியும். திட்டவிதிகளைப் படித்துத் திருப்தி அடைந்துவிடுவதால் மட்டிலும் நமக்கு ஜனாதி பதியின் உண்மை அந்தஸ்து புலனாகாது. இச் சந்தர்ப்பத்தை யொட்டி நாம் இந்தியத் துரைத்தனத்தின் தன்மையையும் செயற்படுமுறையையும் ஆராயவேண்டும். அரசியலமைப்புத் திட்டம் ஏற்படுத்த விரும்புகின்ற துரைத்தனம் பிரிட்டிஷ் பாராளுமன்ற அல்லது காபினெட் ஆட்சியைப் போன்றதென் றும் அமெரிக்க நாட்டிலுள்ள ஜனாதிபதி ஆட்சிமுறையல்லவென் றும் நாம் முன்னர் கூறினோம். பிரிட்டிஷ் ஆட்சிமுறையில் முடி மன்னர் (அரசன் அல்லது அரசி) ஒருவரே நாட்டின் தலைமைப் பீடத்தை அலங்கரிக்கிறார். அவருக்குக் கணக்கிலடங்காத அதிகாரங்கள் ஏட்டளவில் அளிக்கப்பட்டிருக்கின்றன. அவை யாவும் 'நடைமுறையில்' மிகவும் சாதுரியமாக 'கிரௌன்' (அரசு) என்ற பெயரிட்டு அழைக்கப்படுகின்றன. ஏட்டளவில் 'கிரௌனுக்கு' அளிக்கப்பட்டிருக்கின்ற அதிகாரங்கள் யாவை யும், நடைமுறையில் 'காபினெட்' என்ற குழுவே கையாண்டு வருகிறது. இந்திய அரசியலமைப்புத் திட்டத்திலும் நிலைமை

இவ்வாறே அமைந்திருக்கின்றது. திட்ட அடிப்படையில் நாட்டின் தனித்தலைவராக ஜனாதிபதி விளங்குகிறார். காபினெட் முறை அரசின் இன்றியமையாத உறுப்பென அவர் விளங்குகிறார். அவரது நிலையும், அவருக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களும் தோராயமாக பிரிட்டிஷ் மன்னருக்கு உள்ளது போன்றே அமைந்துள்ளன.

அரசியல் நிர்ணய சபையில் இப் பிரச்சினை பல முறைகள் மிகவும் விரிவாக ஆலோசிக்கப்பட்டது. திட்ட சம்மதம் பெற்று விளங்கும் ஜனாதிபதியின் அரசியல் அந்தஸ்து வற்புறுத்தப்பட்டது. வரைதிட்டத்தை அறிமுகம் செய்வித்து அம்பேத்கர் பேசியதாவது: 'வரை திட்டம், இந்திய நாட்டில் அரசியல் தலைவரென, ஜனாதிபதி என்ற அலுவலரை அமர்த்துகின்றது. பெயரைக் கேட்குமளவில் நமக்கு அமெரிக்க நாட்டு ஜனாதிபதியின் நினைவே முன் நிற்கிறது. இப் பெயர் ஒற்றுமையைத் தவிர அமெரிக்க நாட்டில் நிலவுகின்ற அரசுமுறைக்கும், நம் வரை திட்டம் கூறுகின்ற அரசுமுறைக்கும் வேறெவ்விதமான ஒருமைப்பாடுகளும் இல்லை. இவ்விரண்டும் அடிப்படையிலேயே மாறுபட்டவை. அமெரிக்க நாட்டுத் தலைவர்முறைத் துரைத்தனத்தில் ஜனாதிபதி ஆட்சித்துறையின் தலைவராக விளங்குகிறார்; ஆட்சிப் பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. ஆங்கில நாட்டில் அரசனுக்குள்ள அரசியல் அந்தஸ்தைப் போலவே, வரைதிட்டம் இந்திய ஜனாதிபதியை அமர்த்த எண்ணுகிறது. இந்திய ஜனாதிபதி நாட்டின் தலைவராவார். ஆனால், ஆட்சித் துறையின் தலைவராக முடியாது. தேசத்தின் பிரதிநிதியாக அவர் விளங்குகிறாரேயன்றி, தேசத்தை அவரால் ஆளமுடியாது. தேசத்தின் சின்னமாக அவர் விளங்குகிறார். நாட்டு மக்கள் தங்கள் பேராட்களின் வாயிலாக முடிவு செய்யும் தீர்மானங்களை விளம்பரப்படுத்துவதற்குப் பயன்படுகின்ற அலங்கார முத்திரையாகவே ஆட்சித்துறையில் அவர் இடம் பெற்றிருக்கிறார்.

இவ் விவாதங்கள் முடியுந் தறுவாயில், அரசியல் நிர்ணய சபையின் விமர்சனத்தில் பங்குகொண்ட ஜனாதிபதி பிரசாத் கூறியதாவது: 'சட்டமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்ததுபோல, ஜனாதிபதியொருவரையும் தேர்ந்தெடுத்தே நாம் திருப்தியடையவேண்டும். அவ்வாறு செய்வதில் தோராயமாக, நமது ஜனாதிபதிக்கு பிரிட்டிஷ் மன்னரைப் போன்ற கௌரவத்தையே வழங்கியிருக்கிறோம்——அரசியலதிகாரம் பெற்ற நாட்டுத் தலைவராக அவர் விளங்குகிறார். பிறகு அமைச்சர்களைக் கவனிப்போம். அவர்கள், ஐயமின்றி மன்றத்திற்குப் பொறுப்புள்ள

வர்கள். ஜனாதிபதிக்கு மதியுரை வழங்கக் கடமைப்பட்டவர்கள்; ஜனாதிபதியும் அவ்வுரைகளுக்குச் செவிசாய்ப்பார். என் அறிவிற்கு எட்டியவரையிலும், அமைச்சர்களின் மதியுரைகளுக்குச் செவிசாய்க்கவேண்டுமென்று ஜனாதிபதியைக் கட்டுப்படுத்துகின்ற திட்டவட்டமான விதிகளெதுவும் இல்லை இங்கிலாந்தில் அமைச்சர்களின் விருப்பத்திற்கிணங்கி, மன்னர் செயற்படுகின்ற வழக்காறு இருந்துவருகிறது. அதே வழக்கம், இந் நாட்டிலும் கடைப்பிடிக்கப்படுமென்று நான் எண்ணுகிறேன் எனவே, திட்டவட்டமான சட்ட அடிப்படையில்லாது, அருமையான இந்த வழக்காற்றைப் பின்பற்றி இந்திய ஜனாதிபதியும் எல்லா வகைகளிலும் நாட்டின் அரசியல் தலைவராக விளங்குவார் என்று எண்ணுகிறேன்.'

அமைச்சர் மன்றத்திற்கும், ஜனாதிபதிக்குமுள்ள தொடர்புகளை, இச் சூழ்நிலையை மனத்தில் கொண்டு நாம் ஆராயப் புகுந்தால் இப் பெருமை எவ்வளவில் உள்ளது என்பது விளங்கும். இவ்வகையில், திட்ட விதிகள் 74, 75, 78 ஆகியவை மிக முக்கியமானவைகளாக இருக்கின்றன. அவ் விதிகளுக்கிணங்க (1) முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சர் மன்றமொன்று ஜனாதிபதிக்கு மதியாலோசனை வழங்கவும் உதவி செய்யவும் வேண்டும். (2) அமைச்சர்கள், ஏதாவது மதியுரை வழங்கினரா என்பதை விசாரித்து அறிவதற்கும், அது எத்தகைய மதியுரை என்று தெரிந்துகொள்வதற்கும், எத்தகைய தொரு நீதிமன்றத்திற்கும் உரிமை கிடையாது. (3) முதலமைச்சரை ஜனாதிபதி அமர்த்துவார். முதலமைச்சருடன் கலந்தாலோசித்து, ஜனாதிபதி பிற அமைச்சர்களையும் அமர்த்துவார். (4) இவ்வமைச்சர்கள், ஜனாதிபதி நல்லாசி பெற்றிருக்கும் நாள் வரையில் பதவியிலிருப்பார்கள். (5) அமைச்சர் மன்றம் கூட்டாக மக்கள் சபைக்குப் பொறுப்புள்ளதாக இருக்கும். (6) முதலமைச்சர் பின்வரும் கடமைகளாற்றக் கடன்பட்டவர்: (அ) அமைச்சர் மன்றத்தினரின் தீர்மானங்கள் யாவையும் ஜனாதிபதிக்குத் தெரிவிப்பது; (ஆ) யூனியனின் ஆட்சி நிர்வாகத்தைப்பற்றிய தேவையான தகவல்களை அளிப்பது, மற்றும் சட்டமியற்றுவதற்கான விவரங்களையும் அளிப்பது; (இ) ஓர் அமைச்சர் தீர்மானிக்கவேண்டிய விஷயமாகவிருந்து அதைக் கவுன்சில் ஆராயாமலிருந்தால், ஜனாதிபதி விரும்பினால் குறிப்பிட்ட விஷயத்தைக் கவுன்சிலின் ஆய்வுக்கு அனுப்புவது.

திட்டத் தயாரிப்பாளர், பிரிட்டனின் வழக்கிலிருந்து வருகின்ற காபினெட் முறையைக் கடைப்பிடிக்க விரும்பினர் என்று

அம்பேத்கரும், அவரது சகாக்களும் கொண்டாடிய பெருமை ஓரளவு உண்மையானதென்றே தெரியவருகிறது. அதே சந்தர்ப்பத்தில் பொருத்தமற்ற பதங்களை அளவுக்கு மீறி உபயோகப் படுத்தி, பிரிட்டிஷ் முறையின் இருதயமாகவும் உயிராகவும் விளங்குகின்ற நெகிழ்வைக் கெடுத்துவிடவும் திட்டத் தயாரிப்பாளர்கள் விரும்பவில்லையென்பதும் தெரியவருகிறது. பிரிட்டனின் அரசனுக்கும் காபினெட்டுக்குமிடையில் நிலவுகின்ற உறவு முறைகளைக் கட்டுப்படுத்தும் வேரூன்றிவிட்ட வழக்காறுகளை எழுதிவைக்கப்பெறும அரசியலமைப்பு ஒன்றில், திட்டவட்டமாக எடுத்துரைப்பது வரைதிட்டக் கமிட்டியினருக்குப் பெருஞ்சோதனையாக இருந்தது, அதனாலேயே திட்டத்தின் விதிகள் சில தெளிவாக எடுத்துரைக்கப்பட்டிருக்கும்போது, மற்றும் சில ஐயத்திற்கிடமளிக்கின்ற வகையிலேயே அமைக்கப் பெற்றிருக்கின்றன. ஜனாதிபதிக்கு உதவியளிக்கவும். மதியுரை வழங்கவும் முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சர் மன்றம் இருக்கவேண்டுமென்பது திட்டவட்டமாகத் தெரியவருகிறது. இதனால், மன்றத்தின் மதியுரைகளுக்கு ஜனாதிபதி எப்பொழுதும் செவிசாய்க்க வேண்டுமென்று ஏற்படுகிறதா? 'ஆம்' என்றே அம்பேத்கர் பதிலளித்துள்ளார். 'இந்திய யூனியனின் ஜனாதிபதி அமைச்சர்களின் மதியுரைகளைப் பொதுவாக மதித்து நடக்கக் கடமைப்பட்டவர்; அவர்களது மதியுரைகளைப் புறக்கணித்து, அவரால் ஒன்றும் செய்ய இயலாது; அல்லது அவரது மதியுரைகளின்றியும் அவரால் செயலாற்ற முடியாது.'

அம்பேத்கரை ஆதரித்தவர்களின் கருத்துகளுக்கிணங்க, துணை அமைச்சர்களுடைய உதவியுடன் நாட்டை ஆள்வது முதலமைச்சரின் கடமையாகும். அவ்வப்போது அமைச்சர் மன்றத்திற்குத் துணை புரியவும், மதியாலோசனை வழங்கவும் ஜனாதிபதியை அனுமதிக்கலாம். வழக்காறுகளின் விளைவாக எழுந்தவற்றின் கருத்தை நாம் உணரவேண்டுமேயல்லாது, வெறும் சொற்களை மட்டிலும் மதிப்பதோடு நின்றுவிடக் கூடாது.' அவ்வாறெனின், தற்போதைய நிலை என்ன? ஜனாதிபதியை அமைச்சர் மன்ற ஆலோசனைகள் கட்டுப் படுத்துகின்றனவா? பொதுவாகக் கூறுமிடத்து, 'ஆம்' என்றே பதிலளிக்கவேண்டும்.

பாராளுமன்றமுறைத் துரைத்தனத்தில் ஆட்சித்துறையினர் சட்டமன்றத்தினருக்குப் பொறுப்புள்ளவர்களாவார்கள். அமைச்சர் மன்ற உறுப்பினர்கள், ஜனாதிபதியின் கருணையால் (அவர் விரும்பும்வரை) பதவியில் அமர்ந்திருக்கவில்லை. பாராளு-

மன்றத்தினரின் நம்பிக்கையைப் பெற்றிருக்கின்ற வரையிலேயே அவர்கள் பதவியில் அமர்ந்திருக்கின்றனர். ஜனாதிபதிக்கு அவர்களிடம் நம்பிக்கை குறைந்துவிடுவதால் அவர்கள் பதவியிலிருந்து விலகிவிடவேண்டுமென்பதில்லை. அவர்கள் பாராளுமன்றத்தினருக்குக் கூட்டாகவும் நேரடியாகவும் பொறுப்புள்ளவர்கள். எனவே, பாராளுமன்றத்தினரின் நம்பிக்கையை இழந்துவிடும்போது மட்டிலுமே அவர்கள் பதவியிழக்க நேரிடும். பாராளுமன்ற உறுப்பினர் ஓட்டுரிமை பெற்ற மக்களின் பேராட்களாவார்கள். எனவே, ஜனாதிபதியின் கருத்துகளுக்கும் பாராளுமன்றத்தினரின் விருப்புகளுக்கும் அதிக வேற்றுமைகள் இருக்க முடியாது. அத்தகைய வேற்றுமைகள் தோன்றினால் பாராளுமன்றம் விரும்பியவைகளே ஈடேற்றத் தக்கவையாகிவிடுகின்றன. இதன் காரணம் பற்றியே, ஜனாதிபதியின்மீது துரோகக் குற்றம் சாட்டும் சலுகை பாராளுமன்றத்தினருக்கு வழங்கப்பட்டிருக்கிறது. எனவே, அமைச்சர் மன்றத்தினர் பாராளுமன்றத்தின் நம்பிக்கைபெற்று விளங்குகின்றவரையிலும் ஜனாதிபதி அவரது மதியுரைகளை மதித்தே நடக்கக் கடமைப்பட்டவராவார். ஆகவே, உண்மையில் மதியுரைப்பவராக ஜனாதிபதியே செயலாற்றுகின்றார் என்பது தெளிவாகிறது.

அமைச்சர் மன்ற உறுப்பினருடன் ஒத்து நோக்குகிறபோது ஜனாதிபதியின் உண்மை நிலையைப்பற்றிய இக் கருத்தைப் பெருநீதிமன்றமும் ஆதரித்துப் பின்வருமாறு உரைக்கின்றது: 'ஆங்கில நாட்டைப் போலவே இந்தியாவிலும் ஆட்சித்துறை, சட்டமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குள்ளேயே அடங்கியிருக்கின்றது. ஆனால், கட்டுப்படுத்தும் இச் சலுகையைச் சட்டமன்றம் எவ்வாறு பயன்படுத்துகிறது? நமது அரசியலமைப்புத் திட்டத்தின் விதி 53 (1)-ன்படி யூனியனின் ஆட்சி அதிகாரம் ஜனாதிபதிக்கு வழங்கப்பட்டிருக்கிறது. அப் பணிபுரிவதில் அவருக்கு உதவியாகவும், மதிவழங்கவும் அமைச்சர் மன்றத்தினரும் அதன் தலைவராக முதலமைச்சரும் அமர்த்தப்படவேண்டுமென்று திட்டவிதி 75 கூறுகிறது. இவ்வாறாக, அரசியலனுமதி பெற்ற ஆட்சித்துறையின் தலைவராகப் பெயரளவில் ஜனாதிபதி அமர்த்தப் பெற்றிருக்கிறார். ஆனால், உண்மையில் அரசியலதிகாரங்கள் யாவும் அமைச்சரின் கைகளிலோ அல்லது காபினெட்குழுவிடமோ ஒப்படைக்கப்பட்டிருக்கிறது....எனவே, இந்திய அரசியலமைப்புத் திட்டத்திலும் ஆங்கில நாட்டில் உள்ளதைப்போல பாராளுமன்றத்தினருக்குப் பொறுப்புள்ள ஆட்சிக்குழு அமைக்கப் பெற்றிருக்கிறது. சட்டமன்ற உறுப்பினர்களையே அங்கத்தினர்களாகக் கொண்ட அமைச்சர் மன்றம் பிரிட்டிஷ் காபினெட்டைப்

போன்று 'நாட்டின் சட்டமன்றத்தையும் ஆட்சித்துறையையும் பிணைக்கின்ற இடைக் குறியாகவும், ஒருங்குசேரக் கட்டுகின்ற ஒட்டியாணமாகவும் விளங்குகிறது'. சட்டமன்றத்தில் பெரும்பான்மையினரின் ஆதரவுபெற்று விளங்குகின்ற காபினெட் நடைமுறையில் ஆட்சித்துறையையும், சட்டமியற்றுவதையும் ஒருங்கே கட்டுப்படுத்திவிடுகிறது. காபினெட்டின் உறுப்பினர்களான அமைச்சர்களிடையில் கருத்து ஒற்றுமையும் கூட்டுப் பொறுப்புணர்ச்சியும் இருப்பதால், முக்கியப் பிரச்சினைகளடங்கிய ஆட்சித் திட்டம் முழுவதையும் அவர்களே தீர்மானித்துவிடுகின்றனர்.

ஜனாதிபதி, நடைமுறையில் நாட்டின் தலைவரென்ற முறையில் இருந்து வருகிறார் என்று கடந்த பன்னிரண்டு ஆண்டுகள் அனுபவவாயிலாகவும் நாம் அறிகிறோம். இக் கால இடைவெளி மிகக் குறைவென்பது உண்மையேயாகும். 1951-52ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தல்கள் நடைபெற இருக்கும்போது, இந்துச் சட்ட மசோதாவைப் பாராளுமன்றம் ஆய்ந்துவந்தது. அப் பாராளுமன்றத்திற்கு மசோதாவைப்பற்றிய தமது கருத்துகளை ஜனாதிபதி இராஜேந்திர பிரசாத் அனுப்பிவைத்தார். தனிப்பட்ட முறையில், அம் மசோதா நிறைவேறுவதில் தமக்கு விருப்பமில்லை என அவர் அறிவித்திருந்தார். தமக்கு அதன்மீது எத்தகைய வெறுப்பிருந்தாலும், பாராளுமன்றத்தினரின் ஒப்புப் பெற்றுவிட்டால் தமது அனுமதியை வழங்குவதில் தடையில்லை என்றும் அவர் குறிப்பிட்டிருந்தார். சென்ற ஒன்பது ஆண்டுகளில் நாட்டில் இரு பொதுத் தேர்தல்கள் நடைபெற்றுவிட்டன. ஒவ்வொரு தேர்தலையடுத்துப் புதிய அமைச்சர் மன்றங்கள் உருவாகியிருந்தன. இக் காலவரையறைக்கும் குறிப்பிடத்தக்க அரசியல் மாறுதல்களும், பொருளாதார முன்னேற்றங்களும் ஏற்பட்டிருந்தன. 1956ஆம் ஆண்டு இராச்சியப் புனரமைப்புச் சட்டம், இந்திய நாட்டு அரசியல் வரைபடத்தையே மாற்றியமைத்துவிட்டது. தோராயமாக அரசியலமைப்புத் திட்டத்தில் ஒன்பது திருத்தங்கள் வரையிலும் ஏற்பட்டுவிட்டன. அவற்றுள் சில எதிர்பாராத விளைவுகளையும் தோற்றுவித்தன. இவைகள் யாவற்றிலும் அமைச்சர் குழுவே (காபினெட்) தீர்ப்பு வழங்கியிருந்தது. 'ஜனாதிபதி ஆட்சிப் பொறுப்பை நிறைவேற்றுவதாகவும், அமைச்சர்கள் அவருக்கு மதியுரைப்பதாகவும்' எங்குமே காணப்படவில்லை.

அதிர்ஷ்டவசமாக இந் நாட்களில் இந்தியத் துரைத்தனம் நிலைத்திருந்தது. பாராளுமன்றத்தினரின் நம்பிக்கையை அது எப்போதும் பெற்றிருந்தது. அத்தகைய மனோகரமான சூழ்நிலை

எப்பொழுதும் நீடித்திருக்குமென எதிர்பார்ப்பதற்கில்லை. அமைச்சர் மன்றம் பாராளுமன்றத்தினரின் நம்பிக்கையை இழந்துவிடுகிறதென்று வைத்துக்கொள்வோம்; அல்லது நம்பிக்கையை நாசப்படுத்துகின்ற வகையில் பூசல்களும் குழப்பங்களும் நிறைந்திருக்கின்றனவென்று எண்ணுவோம். இத்தகைய சூழ்நிலையில் ஜனாதிபதி அமைச்சர் மன்றத்துடன் உறவுகொள்வதில் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டும். அமைச்சர் மன்றத்திற்கும் பாராளுமன்றத்தினருக்கும் இடையில் உள்ள உறவு முறைகளை ஜனாதிபதி மிக்க கவனமுடன் பார்த்துவரவேண்டும். அதைப்போலவே, முதலமைச்சர் அமைச்சர்களிடம் பெற்றிருக்கின்ற செல்வாக்கையும் கவனித்து வரவேண்டும். பாராளுமன்றத்தினரின் நம்பிக்கையை இழந்துவிடுகின்ற அமைச்சர் மன்றம் உடனடியாக ராஜினாமா செய்ய மறுத்து, மக்கள் சபையைக் கலைத்துவிடுமாறு ஜனாதிபதிக்கு மதியுரை வழங்குகின்றதென்று கொள்வோம். ஜனாதிபதி இம் மதியுரையை ஏற்கலாகுமா? அல்லது, அமைச்சர் மன்றத்தின் பெரும்பான்மையினர் ஓர் அமைச்சரின் தலைமையில் ஒன்றுகூடி முதலமைச்சரை எதிர்க்கின்றனர் எனக் கொள்வோம். அமைச்சர் மன்றம் முழுவதையும் ராஜினாமா கொடுக்குமாறு கட்டளையிட்டுப் புதிய குழுவொன்றைத் தொடங்குவதற்கு ஜனாதிபதி முற்படலாகுமா? இத்தகைய கேள்விகளுக்கெல்லாம் ஜனாதிபதி விடையளிக்கமுடியாதென்றும், பாராளுமன்றத்தில் செல்வாக்குப் பெற்றிருக்கின்ற அரசியல் கட்சியே விடையளிக்கவேண்டுமென்றும் மிகச் சுலபமாகக் கூறிவிடலாம். ஆனால், மிகவும் நெருக்கடியான நேரத்தில் ஜனாதிபதி மேற்கொள்ளும் முயற்சி படிகோலை (தராசு) ஏதாவது ஒருபுறம் சாய்த்து, நிலைமையை முடிவுகட்டுவதில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுவிடவும் கூடும். அரசியல் செல்வாக்குப் பெறுவதில் பேராசை கொண்ட ஜனாதிபதியாக இருப்பாரேயெனில், இந் நெருக்கடி நிலையைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுவார். அமைச்சவைகளை அமைப்பதிலும், கலைப்பதிலும் அரசியல் சலுகைகளை அளித்து விளையாடத் துணிந்துவிடுவார்.

இவ்வாறு இரண்டுவகையான கட்டுப்பாடுகள் உண்டு என்று கூறத்துணியலாம். அமைச்சர் மன்றத்திற்குச் செவிசாய்த்து வரும் ஜனாதிபதி, உள்துறைக் கட்டுப்பாட்டு வரம்பிற்கடங்கியவர். வேறு அமைச்சர் குழு அமைப்பதற்கும் வகையின்றி, ஆட்சியைச் சரிவர நடத்த இயலாமலும் குழுவினரின் மதியுரையை ஏற்காமல் துரோகக் குற்றச்சாட்டிற்கும் இலக்காகின்ற நிலை எய்துவதை, வெளித்துறைக் கட்டுப்பாடு என்று கூறலாகும். இவ்விரு கட்டுப்

பாடுகளுக்கும் நடுவில் இடைவெளி ஒன்று உண்டு. இவ்விடைவெளி மிகவும் குறுகலானதென்றாலும், அப் பிரதேசத்திற்கு ஏக போக உரிமையுடைய தலைவராக ஜனாதிபதி விளங்குகிறார். அங்கு அமைச்சர் மன்ற மதியுரை அவரைக் கட்டுப்படுத்துவதில்லை. அவர்மீது வெற்றிகரமாகக் குற்றஞ்சாட்டுபவரும் அங்கு எவருமிலர். இவ் வட்டாரத்தில் தம் புத்திக்கெட்டியவாறு அவர் நடந்துகொள்ளலாம். அமைச்சர் மன்றத்தின் மதியுரையை முழுவதுமாகப் புறக்கணித்துவிட்டுப் பதவியேற்பதற்கு முன் தாம் எடுத்துக்கொண்ட விசுவாசப் பிரமாணத்திற்கு முரண்பாடில்லாமல் அதனடிப்படையிலேயே செயற்படவும், 'நன்றிப் பெருக்குடன் ஜனாதிபதி என்ற முறையில் பணியாற்றவும், திட்டத்தையும் சட்டமுறைகளையும் போற்றிக் காத்து இரட்சிக்கவும், இந்திய மக்களின் நலன் பெருகுவதற்கென்று முழுமனத்துடன் 'உழைக்கவும்' அவரால் இயலும். எல்லாச் சூழ்நிலைகளிலும் அமைச்சர் மன்றத்தின் மதியுரைகளை ஏற்று நடத்தவேண்டுமென்று திட்டத்தில் கண்டிப்பாக விதிக்கப்பெற்றிருக்குமேயெனில், ஜனாதிபதி மிகவும் கட்டுண்டு அவதியுற்றிருப்பார் என்பதோடு, தெளிந்த 'தமது மதியைப் பயன்படுத்துகின்ற வாய்ப்பும் அவருக்கு இல்லாது ஒழிந்திருக்கும்.

வேறு ஒரு காரணம்பற்றியும் திட்டத் தயாரிப்பாளர்கள் இவ் வேற்பாட்டைச் செய்திருக்கக்கூடும். அமைச்சர் குழுவினரின் ஆலோசனைப்படி, ஜனாதிபதி நடக்கவேண்டுமென்று திட்டம் விதிக்கிறது என்று.கொண்டாலும், அவர் தவறிவிட்டால், அச் சூழ்நிலையில் நியாயமன்றம் மூலமாக எவ்வாறு பரிகாரம் தேட இயலும்? திட்டவிதி 74(2)-க்கு ஏற்ப, பிரச்சினை ஏதாவது இருந்தாலும், அந்தப் பிரச்சினை யாதென்று அறியவோ, அல்லது அமைச்சர்கள் வழங்கிய மதியுரையைப்பற்றி அறிந்து கொள்ளவோ எந்த நீதிமன்றத்திற்கும் அதிகாரமில்லை. எனவே, சட்டமன்ற மூலமாகப் பரிகாரம இல்லையென்றே கூறவேண்டும். எனவே, இதற்கு அரசியல பரிகாரமே சிறந்ததாகிறது. அமைச்சவை ஓர் அரசியல் விபத்தை ஏற்படுத்திவிடுகிறது. அச் சூழ்நிலையில் பாராளுமன்றத்தின் நம்பிக்கையைப் பெற்ற வேறு அமைச்சவையை ஜனாதிபதியால் அமைக்க இயலாது; அல்லது அமைச்சவை ஜனாதிபதியின்மீது துரோகக் குற்றச் சாட்டைத் தொடர்ந்துவிடும. ஜனாதிபதியை அமைச்சவையின் ஆலோசனையுடன் பிணைக்கின்ற திட்டவட்டமான விதிகள் இல்லையென்றாலும், இவ்விரு உபாயங்களும் எப்பொழுதும் பயன்படுத்துவதற்குத் தயாராக உள்ளன. திட்ட அமைப்பில் பயன்படுத்தப்பட்டுள்ள வாசகம், இவ்வரசியல் சூழ்நிலைகளுக்கேற்ற நெகிழ்ச்சிகளுக்

கெல்லாம் இடமளித்து, தேவையற்ற அழுத்தத்தை நீக்கியிருக்கின்றன. நிலையை நன்குணர்ந்து, ஜனாதிபதி தமது விவேகத்தைப் பயன்படுத்திக்கொள்ளலாம். நாட்டின் நலன்பேணி, திட்ட அடிப்படையில் செயற்படுவதற்கு அவருக்கு நல்ல வாய்ப்பளிக்கப்பட்டிருக்கிறது.

ஜனாதிபதி தம் விவேகத்தைக் கையாண்டு செயற்படக்கூடிய சலுகையின் வரம்பு யாது? அம்பேத்கரின் கருத்திற்கிணங்க, அத்தகைய வாய்ப்புகளே ஜனாதிபதிக்குக் கிடையாது. அவருக்கு ஒருசில சிறப்புரிமைகள் மட்டிலுமே வழங்கப்பட்டிருக்கின்றன. அம்பேத்கர் கூறியதாவது: 'பாராளுமன்ற ஆட்சி முறையில், அரசன் அல்லது நாட்டுத் தலைவன் கையாளக்கூடிய சிறப்புரிமைகள் இரண்டு உண்டு. அவைகளிலொன்று, முதல் அமச்சரை அமர்த்துவதும், மற்றொன்று பாராளுமன்றத்தைக் கலைப்பதுமாகும். முதலமைச்சரைப் பதவியிலமர்த்துவதைப் பொறுத்தவரையிலும் இவ்வதிகாரத்தை ஜனாதிபதியிடம் ஒப்புவிப்பதைத் தவிர வேறு வழியில்லை. இதற்கு மாறாக ஒரு வழி தேவையென்றால். முதலில் சபையைத் தலைவரைத் தேர்ந்தெடுக்கச் செய்யவேண்டும். தேர்வு முடிந்ததும், ஜனாதிபதியை முதலமைச்சரை அமர்த்துமாறு வேண்டி, ஒரு பிரேரபணையையோ அல்லது தீர்மானத்தையோ நிறைவேற்றச் செய்யவேண்டும். ஆனால், இவை யாவும் தேவையற்றவை என்பது கண்கூடாக விளங்கும்.' இரண்டு வகையிலும், புதிய முதலமைச்சரிடம் பாராளுமன்றத்தினருக்குள்ள நம்பிக்கையைச் சோதிப்பதொன்றே நோக்கமாக உள்ளது. நாம் முன்னர்க் குறிப்பிட்டது போல், பதவியேற்குமுன் நிறைவேற்றப்படுகின்ற ஒரு தீர்மானத்தின்மூலமாக அல்லது பதவியேற்றபின் நிறைவேற்றப்படும் நம்பிக்கையில்லாத் தீர்மான வாயிலாக அந் நம்பிக்கை பிரதிபலிககப்படுகிறது. 'இரண்டு வகைகளுமே, சாலச்சிறந்தவை என்பதால் பொறுப்பை ஜனாதிபதியின் விவேகத்திற்கே விட்டுவிடுவது நலமென்று உணர்ந்தனர்போலும்.'

'சபையைக் கலைத்துவிடுவதைப் பொறுத்தும், பிரிட்டிஷ் அரசியல் நிபுணர்களைப் பொறுத்தமட்டிலும் திட்டவட்டமான கருத்துகள் இல்லை. பாராளுமனறம் அத்துமீறி நடந்துகொண்டாலும் அல்லது மக்களின் விருப்பத்திற்கிணங்க அது செயலாற்றவில்லையென்றாலும். ஜனாதிபதி அல்லது அரசர் முதலமைச்சரின் ஆலோசனையை நாடவேண்டுமென்று ஒருசாரார் கூறுகின்றனர். பாராளுமன்றம் மக்களின் விருப்பத்திற்கிணங்கச் செயற்படவில்லை என்றால், தன் முயற்சியாகவே இச்சைப்படி மன்றத்தைக் கலைத்துவிடலாம் என்ற கருத்தும் நிலவுகின்றது. இதற்கு

முதலமைச்சரின் மதியுரையோ அல்லது அமைச்சவையின் ஆலோசனையோ தேவையில்லை. இவைகள் நூற்றுக்கு நூறு சிறப்புரிமைகளாகின்றன. நாட்டின் ஆட்சி நிர்வாகத்திற்கும் இவைகளுக்கும் எவ்விதத் தொடர்புமில்லை.'

இருந்தபோதிலும், இவை சமயோசிதமாகப் பயன்படுத்த வேண்டிய சலுகைகளாக விளங்குகின்றன. இந் நாட்டின் பாராளுமன்றத் துரைத்தனப் பங்கை அவை வெகு எளிதில் அழித்துவிடக்கூடும். நாட்கள் செல்லச் செல்ல, இச் சிறப்புரிமை களைச் சமயோசிதமாகப் பயன்படுத்தி, ஜனாதிபதிகள் ஏற்படுத்து கின்ற வழக்காறு மரபுகளையொட்டியே, இந்திய அரசியலில் காபினெட் முறை பெற இருக்கின்ற வெற்றியோ அல்லது தோல் வியோ தீர்மானிக்கப்படவேண்டும். அமைச்சர் மன்றத்தின் ஆலோசனைகளைப் புறக்கணிப்பதில் மிகவும் எச்சரிக்கையாகவும், நிலைகளைச் சீர் தூக்கியும் ஜனாதிபதி ஒரு முடிவெய்த வேண்டும். ஜனாதிபதி பெற்றிருக்கின்ற பெருமதிப்பு, செல்வாக்கு, நாட்டு மக்கள் அவருக்குச் செலுத்துகின்ற மரியாதை ஆகிய யாவும் அத்தகைய சூழ்நிலைகளில், மிகவும் பயனுள்ளவைகளாக விளங்கக் கூடும். திட்டத்தை நடைமுறையில் பயன்படுத்துவதில் மிகுதியாக வாய்ப்புகள் ஏற்படக்கூடும். நாளடைவில் வழக்காறுகளும் ஏற் பட்டுத் திட்டத்தின் கூரிய முனைகளைச் சமனப்படுத்தவும் கூடும். ஆனால், திட்ட அடிப்படைகளின்மீதே உற்ற வழக்காறுகளைச் சமைக்க இயலும். அவைகளை வளர்ப்பதற்குப் பல நாட்கள் செல்லக்கூடுமெனபதோடு வளர்ப்பதும் மிகவும் கடினமேயாகும்.

திட்டம் செயற்படத் தொடங்கிய, பத்து ஆண்டுகளுக்குப் பின், 1960ஆம் ஆண்டு நவம்பர், மாதம் இந்தியச் சட்ட இன்ஸ்டி டியூட்டிற்கு அடிக்கல் நாட்டியபோது நிகழ்த்திய உரையில் ஜனாதி பதியின் வேலைகளையும், அவருக்களிக்கப்பட்டிருக்கும் சலுகை களையும் குறித்து அக் கழகம் ஆராய்ச்சி நடத்தவேண்டுமென்றும், மகாபிரிட்டனின் அரசனது நிலையுடன் இவைகளை ஒப்புநோக்கி வேற்றுமைகளைக் கண்டறியவேண்டுமென்றும் திரு. இராஜேந்திர பிரசாத் அவர்கள் கோரினர். உரை நிகழ்த்துகையில், அமைச்சர் மன்றத்தினரின் ஆலோசனையை ஏற்று ஜனாதிபதி நடக்கவேண்டு மென்று அரசியலமைப்புத் திட்டத்தில் திட்டவட்டமான விதி யொன்றுமில்லை என்பதையும் அவர் குறிப்பிட்டார். இந்திய நாடு பிரிட்டனிலிருநதும் மாறுபட்டது. 'ஆங்கில நாட்டில் அவ்வப்போது வெளிவரும் கருத்துகளையும் விளக்கங்களையும் மாறுதல் எதுவுமின்றி நாம் அவ்வாறே கடைப்பிடிப்பது மிகவும் விரும்பத்தக்கதாக இருக்கமுடியாது' என்பதையும் அவர் சுட்டிக்காட்டினர்.

திட்ட அமைப்பில் ஜனாதிபதிக்குரிய அதிகாரங்கள் யாவை என்ற கருத்து வேற்றுமை நிறைந்த விஷயத்தைக் குறித்து, ஜனாதிபதியின் இக் கருத்துகள் விளக்கின. இவ் விஷயத்தைப் பொறுத்துக் கருத்துகள் வெளியிட்ட அரசியல் சட்ட நிபுணர் களுக்குள் தீவிரமான வேற்றுமைகள் நிறைந்திருந்தன. துரைத் தனத்தில் தீவிரப் பங்குகொள்வதைவிடச் சாதாரணமாக ஓர் அரசியலதிகாரம் பெற்ற நாட்டுத் தலைவராக, ஜனாதிபதி விளங்கு வதே சாலச்சிறந்ததென்ற தெளிவான கருத்தையே பெரும் பான்மையினர் வெளியிட்டிருக்கின்றனர்.

இருந்தபோதிலும், காலப்போக்கில் இதில் எழக்கூடிய ஐயப் பாடுகளை நீக்குவதற்கென்று திட்டத்தில் ஒரு திருத்தம் வேண்டு மென்று பலர் ஆலோசனை கூறினர் இதனால் எல்லாச் சந்தர்ப் பங்களிலும், அமைச்சர் மன்றத்தினரின் ஆலோசனையை மதித்து ஜனாதிபதி செயற்படவேண்டுமென்பதும் உறுதியாகிவிடும் என அவர்கள் கருதினர். பாராளு மன்ற அங்கத்தினர் ஒருவர் மத்திய அரசாங்க மன்றத்தில் அரசியலமைப்புத் திட்டத்தை இவ்வாறாக திருத்தியமைக்கவேண்டுமென்று மசோதா ஒன்றையும் பிரேரே பித்தார். ஆனால், மசோதாவை நிறைவேற்றுவதற்குப் போதிய ஆதரவை அவரால் பெறமுடியவில்லை. லோகசபையில் (மக்கள் சபை) மற்றுமோர் அங்கத்தினர் இவ் விஷயத்தைப் பெருநீதி மன்றத்தின் ஆய்வுக்கு அனுப்பவேண்டுமென்று கோரினார். பொதுவாக, இவ்வேற்பாட்டிற்கும் அங்கத்தினர்களின் ஆதரவு அதிகமாக இல்லை. இதைப்பற்றி அரசியலமைப்புத் திட்டம் தெளிவாகக் கூறியிருக்கிறதென்றும், இதுவரை அமைதியாகவே துரைத்தனம் நடைபெற்று வருகின்றதென்றும், சாதாரணமாக அமைச்சர் மன்றத்தின் ஆலோசனைப்படியே ஜனாதிபதி செயற்பட வேண்டுமென்பது தெளிவாக இருக்கிறதென்றும் புதிய பிரேரே பணைகளை மறுத்தவர்கள் கூறினர். இவ் விஷயத்தைக் குறித்துக் கருத்து அறிவித்தவர்கள் யாவரும், ஜனாதிபதிக்கும் அமைச்சர் மன்றத்திற்கும் உள்ள தொடர்பைக் கட்டுப்படுத்துகின்ற வழக் காறுகள் நன்முறையில் வளரவேண்டுவது இன்றியமையாதது என்றே வற்புறுத்தினர்.

எத்தகைய சந்தர்ப்பங்களில் தமது மதியூகத்தால் நிலையை அறிந்து ஜனாதிபதி திட்டவட்டமாகத் தமது அதிகாரத்தைப் பயன்படுத்தமுடியும் என்ற விவாதத்துடன் இவ் விமரிசனத்தை முடிப்போம்.

(1) பாராளுமன்றத்துல் (மேலும் தெளிவாக மக்கள்சபை யில்) எந்த அரசியல் கட்சியும் ஐயமின்றிப் பெரும்பான்மைக்

கட்சியாக விளங்கக்கூடாது. அப்போது ஒரு நபரை முதலமைச்சராக ஜனாதிபதி அமர்த்துகின்றபோது, தராசின் முள் அங்குமிங்குமாக அசைந்தாடும். ஃபிரெஞ்சு நாட்டுப் பாராளுமன்றத்தில் ஏராளமான சிறு அரசியல் கட்சிகள் இருப்பதால் ஒரு கட்சியாலும் நிலையான அரசை ஏற்படுத்த இயலாமல் அரசியல் குழப்பம் அங்கு நீடித்து வரும். அதைப்போன்ற நிலை இந்திய நாட்டிலும் நீடிக்குமேயெனில், முதலமைச்சருக்கு அல்லது முதலமைச்சராக இருக்கும் நபருக்கு பேராசையுள்ள ஜனாதிபதியொருவர் கட்டளைகளைப் பிறப்பிக்க முடியும்.

(2) அதிகாரத்தைக் கைப்பற்றியிருக்கின்ற பெரும்பான்மைக் கட்சியினருக்குள் பிளவுகளும் சண்டைகளும் நிறைந்திருக்கும்போது, ஏதாவது ஒரு தலைவரை ஜனாதிபதி ஆதரித்தாலும் அல்லது தூற்றினாலும், அதன் விளைவுகள் வலிமை மிக்கவையாக இருக்கக்கூடும். ஆட்சிபீடத்தில் அமர்ந்திருக்கின்ற கட்சியில் கட்டுப்பாடு குறைந்தாலும், குழுக்களும் பிளவுகளும் தோன்றிக் கட்சியின் ஒற்றுமையைச் சீர்கெடுத்தாலும், நேர்மையற்ற நெஞ்சழுத்தம் கொண்ட குழுத்தலைவர்கள் மிகக் கீழ்த்தரமான வழிகளில் பதவியைக் கைப்பற்ற எண்ணும்போதும், இறுதியாக, இலஞ்சப் பேயின் வலையில் சிக்கிச் செல்வாக்குப் பெற்றுள்ள கட்சியின் புகழ் மங்கிவிடும்போதும், துரைத்தன யந்திரத்தைத் தன்னிச்சைப்படி இயக்குவதற்கு ஜனாதிபதிக்கு ஏராளமான வாய்ப்புகள் கிடைக்கின்றன. முடிவாகக் கூறவேண்டுமானால், அரசியல் சூழ்நிலையாலேயே ஜனாதிபதியின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்த இயலும்.

# 18. அமைச்சர்கள் மன்றமும் முதலமைச்சரும்

அமைச்சர் மன்றத்திற்கும் நாட்டுத் தலைவருக்கும் இடையி லுள்ள தொடர்பை நாம் முன்னர்க் குறித்தோம். தொடர்ந்து அமைச்சர் மன்றத்தின் தலைவர் என்ற முறையில் முதலமைச் சருக்கு அளிக்கப்பட்டிருக்கும் விசேஷ கௌரவத்தையும் கண்டோம். திட்ட விதி 75 (3)-ல் கண்டுள்ளவாறு, இம் மன்றம் மக்கள் சபைக்குக் கூட்டாகப் பொறுப்பேற்று உத்தரம் கூறுவ தற்குக் கடன்பட்டிருக்கிறது. அதைச் சரிவர நிறைவேற்றுவ தற்கு முதலமைச்சருக்கு இத்தகைய விசேஷ கௌரவமும் வழங்குவது மிகவும் தேவையாகிறது. பொதுமக்களிடம் தொடர்புகொள்ளும்போது அமைச்சர்கள் யாவரும் கருத்து வேற்றுமையின்றி ஒரே குரலில் பேசவேண்டுமென்பது கூட்டுப் பொறுப்பின் தலையாய கூறாக விளங்குகிறது இதனால், அமைச் சவையின் முன் எழுகின்ற பிரச்சினைகளைத் தீர்ப்பதில் யாவரும் ஒருமுகமான கருத்துடனே விளங்கவேண்டுமென்று பொருள் கூறவும் தேவையில்லை. மன்றக் கூட்டங்களில், பல்வேறு கருத்துகளை எடுத்துரைத்து, அதன் விளைவாகத் தெளிவான முடிவெய்துவது வழக்கமாக இருந்துவருகிறது. அவ்வாறு முடிவு எய்தியபின், ஒவ்வோர் அமைச்சரும் விதிவிலக்கின்றி அம் முடிவையே கடைப்பிடிக்கவேண்டும். இவ்வாறு அரசாங்கம் மேற்கொள்ளும் வேலைகளுக்கு அமைச்சவையே கூட்டாகப் பொறுப்பேற்றிருக்கிறது. எனவே, ஒரே அளவையாக அமைச் சவை அரசியல் 'பிரயாணம் நடத்துகிறது அல்லது மூழ்கிவிடு கிறது.'

இருந்தபோதிலும், அமைச்சவையின் ஏகமனதான முடிவைத் தனி ஓர் அமைச்சர் குறைகூறுவாரெனில், அவரை நீதிமன்றம் ஒன்றின் வாயிலாகக் கட்டுப்பாட்டை மீறிவிட்டாரெனத் தண்டிக்கவியலாது. எனவே, இக் கூட்டுப் பொறுப்புச் சட்ட அடிப்படையில் தோன்றியதல்ல என்பது தெளிவாகிறது. தனி

யோர் அமைச்சர் அரசாங்க நடவடிக்கைகள் நேர்மையற்றவை என்று கருதினாலோ அல்லது மனச்சாட்சியுடன் பிற அமைச்சர்களோடு ஒன்றுகூடிப் பணியாற்றுவது கடினம் என்று கண்டாலோ, அவர் பதவியை ராஜிநாமா செய்து துறந்துவிடவேண்டுமென்றே பொதுவாக எதிர்பார்க்கப்படுகிறது. அவ்வாறு நடைபெறவில்லையெனில், இரண்டிலொரு வகையைக் கையாண்டு முதலமைச்சர் கூட்டுப் பொறுப்பை வற்புறுத்த இயலும். முதலமைச்சரின் ஆலோசனைப்படியே நாட்டுத் தலைவர் பிற அமைச்சர்களை அமர்த்துகிறார். இச் சூழ்நிலைகளில் முதலமைச்சரின் ஆலோசனைகள்பேரில் கருத்து வேற்றுமையுள்ள அமைச்சரைத் தலைவர் நீக்கிவிடலாம். இத்தகையதோர் உபாயத்தைக் கடைப்பிடிப்பதில் முதலமைச்சருக்கு விருப்பமில்லையென்றால், அமைச்சவை முழுவதையுமே கலைத்துவிட்டு, ஒத்துழைக்க விருப்பமில்லாத அமைச்சர் நீங்கலாகப் புதியதோர் அமைச்சவையைத் தோற்றுவிக்கலாம். இவ்வாறு அமைச்சர்களை அமர்த்துவது, நீக்குவது ஆகிய இரு பொறுப்புகளையும் முதலமைச்சருக்கு அளித்து, கூட்டுப் பொறுப்பேற்று இயங்கவேண்டுமென்ற நியதி உறுதியாகப் போற்றிக் கடைப்பிடிக்கப்படுகிறது.

ஆட்சிக் குழுவில் சிறந்த பதவி வகிக்கின்ற அமைச்சர்கள் பாராளுமன்ற அங்கத்தினர்களாகவும் இருக்கின்றனர். இதைக் காபினெட் அரசுமுறையின் சிறந்ததொரு கூறாகக் கொள்ளலாம். ஆனால், இம் முறையை மிக்க ஆர்வமுடன் கடைப்பிடிப்பதால், ஆட்சிக் குழுவிற்குத் திறமைசாலிகளின சேவை கிடைப்பது அரிதாகிவிடும். அத்தகைய திறனுடையவர்கள் பாராளுமன்ற அங்கத்தினராகத் தேர்வுபெறுவது தேவையான அந் நேரத்தில் கைகூடாதொழியவும் கூடும். எனவே, பதவி பெறுகின்ற அமைச்சர் ஒருவர் பதவி ஏற்கின்றபோது சட்டமன்ற உறுப்பினராக இல்லையென்றாலும், பதவி ஏற்ற ஆறு மாத காலத்திற்குள் அத்தகைய வாய்ப்பினைப் பெற்றுவிடலாம் என்று அரசியல் திட்டம் அனுமதிக்கின்றது.

முதலமைச்சர் என்ற பதவிக்கு நமது அரசியல் திட்டம் எத்துணைச் சிறப்பு வழங்கியிருக்கிறதென்று நாம் முன்னரே கண்டோம். பெயரளவிலேயேஅவரை நாட்டுத் தலைவர் அமர்த்துகின்றார் எனக் கூறவேண்டும். அது ஒரு சடங்கேயன்றி வேறன்று. அரசியல் செல்வாக்கும் பாராளுமன்றத்தினரின் ஆதரவும் பெற்றிருக்கின்ற ஒரு நபருக்கு அப் பதவியைப் பெறுவது உரிமையென்றே கூறிவிடலாம். பிற அமைச்சர்களைத் தலைவர் அமர்த்துவதையும் நாம் அவ்வாறே கருதவேண்டும். அவர்கள் முதலமைச்சரின் ஆலோசனைப்படியே அமர்த்தப்படுகின்றனர். உண்மையில் அவர்கள் முதலமைச்சரின் கையாள்களென்றே

கருதலாம். அமைச்சவையின் முடிவுகளையும் தீர்மானங்களையும் முதலமைச்சரே நாட்டுத் தலைவருக்கு எடுத்துரைக்கிறார். மேலும், அமைச்சவை மக்கள் சபைக்குக் கூட்டாக உத்தரம் சொல்லக் கடன்பட்டுள்ளது. முதலமைச்சரே மக்கள் சபையின் தலைவராகவும் விளங்குகிறார். இவ்வாறு ஒருவகையில் நாட்டுத் தலைவருக்கும் அமைச்சவைக்கும் தொடர்பு ஏற்படுத்துபவராகவும் மற்றும் ஒரு வகையில் அமைச்சவைக்கும் பாராளுமன்றத்திற்கும் தொடர்பு ஏற்படுத்துபவராகவும் முதலமைச்சர் விளங்குகிறார். இவ்வாறு பாராளுமன்றத்திலும் அரசாங்கத்திலும் முதலமைச்சர் மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்குகிறார். எனவே, இந்திய அரசியலமைப்புத் திட்டத்தில் இது ஒரு சிறந்த பதவியாக விளங்குகிறது.

நாட்டுத் தலைவருக்கென்று வழங்கப்பட்டிருக்கும் அதிகாரப் பட்டியலிலுள்ள பெருவாரியான அதிகாரங்களையும் உண்மையில் முதலமைச்சரே கையாண்டுவருகிறார். பாராளுமன்ற உறுப்பினர்களில் பெரும்பான்மையினரைக் கொண்ட கட்சியைச் சார்ந்தவர் என்பதால் பாராளுமன்றத்தின் தலைவராகவும், மேலும் அமைச்சவையின் தலைவர் என்பதால் நடைமுறையில் அமைச்சர் குழாத்தையும், பாராளுமன்றத்தையும், தேசத்தையும் நடத்திச் செல்லுகின்ற தலைவராகவும் அவர் விளங்குகிறார். அரசியலமைப்புத் திட்டம் உருவாக்கிய அரசாங்க ஊழியர்களில் மிக்க சிறப்பு வாய்ந்தவராக இக் காரணங்களால் அவர் உயர்ந்து விடுகிறார். நெருக்கடியான காலங்களில் அவரது செல்வாக்கு மேலும் உயர்ந்துவிடுகிறது. அக் காலங்களில் அப் பகுதிகளின் நிர்வாகப் பொறுப்பை மத்திய அரசாங்கம் நேரடியாக ஏற்றுவருவதையே முதலமைச்சரின் சிறப்பு ஓங்கி வளருவதற்கு உற்ற காரணமாகக் கூறலாம். இயற்கையாகத் தமது செல்வாக்கைப் பயனுறுத்தி நாட்டுத் தலைவரின் அதிகாரத்தைப் பெருக்குவதற்கும், அல்லது சட்டவரம்பில் கட்டுப்படுத்தி இயக்குவதற்கும் முதலமைச்சருக்கு ஏராளமான வாய்ப்புகள் உண்டு.

பாராளுமன்ற அரசுமுறை நன்கு இயங்குவதற்கு அடிப்படைத் தேவையான கட்சிமுறை அரசியல் இந்திய நாட்டில் விரைவாகச் செல்வாக்குப் பெற்று வளர்ந்துவருகிறது. ஐக்கிய அமெரிக்க நாடுகளில் நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடத்தப்படும் தேர்தலின்மூலம் நாட்டுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். அவர் சமுதாயத்தின் தலைவராகவும் ஆட்சிக் குழுவின் தலைவராகவும் அமர்ந்து பணியாற்றுவார். இந்திய நாட்டில் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் பொதுத்தேர்தல் உண்மையில் சமர்போன்று நடைபெறுகிறது. அடுத்து வரும் ஐந்தாண்டுகளுக்கு ஆட்சிப் பொறுப்பேற்கின்ற அரசியல் கட்சி

யைத் தேர்தல் தீர்மானிக்கிறது. ஓரளவில் இந்திய நாட்டு முதலமைச்சரையும் அது உறுதிப்படுத்திவிடுகிறது எனலாம். பாராளுமன்றத்தில் பெரும்பான்மையான இடங்களைக் கைப்பற்றுகின்ற அரசியல் கட்சி, தனது தலைவரை நாட்டுத் தலைவரின் ஒப்புதல்பெற்று முதலமைச்சராகத் தேர்ந்துவிடும். உண்மையில் நாட்டுத் தலைவரும் செல்வாக்குப் பெற்று விளங்கும் அரசியல் கட்சியின் பிரதிநிதியேயாவார். எனவே, அவ்வரசியல் கட்சியின் தலைவருக்குப் பிரசிடென்ட் (நாட்டுத் தலைவர்) தேர்விலும் நல்ல செல்வாக்கு இருப்பது இயற்கையாகும்.

இருந்தபோதிலும், நாட்டுத் தலைவர் என்னும் பதவிக்கு நல்ல செல்வாக்கும் கௌரவமும் உண்டு. ஆங்கில நாட்டு மன்னரும் அரசியலமைப்பின் அடிப்படையிலேயே அதிகாரம் பெற்றுப் பதவி ஏற்றுள்ளார். எனினும், வாழையடி வாழையாக அப் பெரும் பதவிக்கு வழங்கிவருகின்ற செல்வாக்கினாலேயே அம் மன்னர் மரியாதைக்குரியவராகின்றார். அம் மன்னர் பதவியின் வரலாறு மிகப் பழமையானது. எனவே, சிறப்புற்று விளங்குகிறது. ஆனால், மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படும் நாட்டுத் தலைவர் ஒருவர், ஐந்தாண்டுகளுக்கே பதவியிலிருக்கும் வாய்ப்புப் பெற்றுள்ளார். இதனால், ஃபிரெஞ்சு நாட்டின் நான்காவது குடியரசின் தலைவரைப்போல அவர் அலங்காரப் பொம்மையாகவே மாறிவிடுகிறார். நம் நாட்டு அரசியல் திட்டத்தை உருவாக்கியவர்களுக்குத் திட்ட அடிப்படையில் நாட்டுத் தலைவரின் ஸ்தானத்தை சிருஷ்டிப்பது பெரும் பிரச்சினையாகிவிட்டது. ஆங்கில நாட்டு மன்னரைப்போலன்றி, இவரைத் தேர்வின் வாயிலாகவே அமர்த்தவேண்டியிருந்தது. ஆனால், அம் மன்னருக்குச் சமமான கௌரவத்தை இவருக்கு வழங்க வேண்டியிருந்தது. இதைக் குறித்துப் பண்டிதநேரு பின்வருமாறு கூறியுள்ளார்: 'அமைச்சவையின் வாயிலாக அரசு நடைபெறும் என்பதை நாம் வற்புறுத்த விரும்புகின்றோம். இதனால் உண்மை அதிகாரம் அமைச்சர்களிடமும் சட்டமன்றத்திடமும் அமைந்துவிடும். நாட்டுத்தலைவருக்கு அதிகாரத்தை அளித்துவிடமுடியாது. அதே நேரத்தில், ஃபிரெஞ்சு நாட்டுத் தலைவரைப்போல நம் நாட்டுத் தலைவரை நாம் ஓர் அரசியல் பொம்மையாக சிருஷ்டி செய்துவிடக்கூடாது. எனவே, நம் நாட்டுத் தலைவருக்கு உண்மையாக அதிகாரங்களை நாம் வழங்கிவிடவில்லை. ஆனால், அப் பதவிக்கு மிகுந்த செல்வாக்கையும் கௌரவத்தையும் வழங்கியிருக்கிறோம்.' இதுகாறும், அரசியல் திட்டம் நடைமுறையில் இயங்குவதிலிருந்து, திட்டத் தயாரிப்பாளர்களின் எண்ணம் நிறைவேறியிருக்கின்றது என்றே நாம் கூறவேண்டும்.

## அமைச்சர் மன்றமும் மந்திரி சபையும்

அரசாங்கம் செயற்படுவதை விரித்துரைக்கும்போது 'அமைச்சர் மன்றம்', 'மந்திரிசபை' என்ற சொற்களைப் பயன் படுத்துவதில் குழப்பமேற்படுவது இயற்கை. அநேகமாக ஒன்றுக்குப் பதிலாக மற்றொன்றைப் பயன்படுத்திவிடுவது வழக்கம். உண்மையில் அது தவருகும். இந்திய அரசாங்கத்தின் பல்வேறு அமைச்சர்களும் இவ் அமைச்சர் மன்றத்தின் உறுப்பின ராவார்கள். இவ்வமைச்சர்களைத் தற்போது மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். அவர்கள் முறையே, காபினெட் அமைச்சர்கள், துணை நாட்டு அமைச்சர்கள், துணைமந்திரிகள் ஆவர். இவர்களுள் காபினெட் அமைச்சர்கள் தங்களுக்குள்ளாகத் தனியொரு குழு அமைத்துக்கொள்வர்—இதை அமைச்சர் மன்றத்தின் கருவூல மென்று கூறலாம். அரசியலமைப்புத் திட்டத்தில் 'காபினெட்' என்ற நிறுவனத்தைப் பொறுத்த குறிப்புகள் இல்லை. அமைச்சர் மன்றமே திட்டத்தில் இடம்பெற்றிருக்கின்றது. ஆனல், நடை முறையில் மந்திரி சபையின் அலுவல்கள் யாவும் திட்ட அடிப் படையில் ஒப்புப்பெற்று விளங்குகின்ற அமைச்சர் மன்றத்தின் பெயராலேயே நடைபெற்றுவருகின்றன.

நமது அரசியலமைப்புத் திட்டம் செயற்படத் தொடங்கியது முதல் இதுகாறும் எழுந்துள்ள வழக்காறுகளுக்குச் சிறந்த இலக் கணமாகக் காபினெட் விளங்கிவருகிறது, பிரிட்டிஷ் காபினெட், இதன் அமைப்பிற்கும் செயற்பாடடிற்கும் உதாரணமாக விளங்கி வருவது உண்மையேயாகும். இருந்தபோதிலும், இந்திய காபி னெட்டை பிரிட்டிஷ் காபினெட்டின் அச்சுப்பிரதியாகக் கருதி விடக்கூடாது. இந் நாட்டின் சூழ்நிலைகளையொட்டி நமது காபி னெட் வளர்ந்திருக்கிறது. 1947ஆம் ஆண்டில் அரசியலதிகாரம் இந்தியரின் கைகளுக்கு மாற்றியளிக்கப்பட்டபோது, காபினெட் என்றதோர் அரசியல் நிறுவனம் இந்திய நாட்டில் இல்லை. அக் காலத்திலிருந்த கவர்னர்-ஜெனரலின் 'எக்ஸிக்யூடிவ்-கௌன்சில்' என்ற நிறுவனத்தை ஓரளவில் தற்காலக் காபினெட்டுடன் ஒப்பிட்டுக் கூறலாம். 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதிமுதல் 'எக்ஸிக்யூடிவ் கௌன்சில்' என்ற நிறுவனம், பாராளு மன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சவையாக மாற்றப்பட்டு விட்டது. இம் மாறுதலையடுத்து, அமைச்சவை கூட்டுப் பொறுப்பை ஏற்று இயங்கவேண்டுமென்றும், முதலமைச்சரைத் தலைவராகக் கொள்ளவேண்டுமென்றும் இரு வழக்காறுகள் தோன்றின. இவ்விரு விளைவுகளையும் நாம் முக்கியமாகக் குறிப் பிடவேண்டும். 'அமைச்சவை' என்ற சொல்லிற்குப் பதிலாகக் 'காபினெட்' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்ற வழக்கமும்

ஏற்பட்டது. இதனால் இவ்விரு சொற்களையும் ஒரே பொருளைக் குறிப்பதற்குப் பயன்படுத்துகின்ற நிலையுமிருந்துவந்தது. முதலமைச்சர் நீங்கலாக அமைச்சவை அல்லது காபினெட்டின் உறுப்பினர்கள் யாவரும் சம அந்தஸ்துடையவர்களாக விளங்கினர். ஆனால், மந்திரிசபைக்கு ஜூனியர் மந்திரிகளை உறுப்பினராக்கும் முறை ஏற்படத் தொடங்கியதும், இந் நிலை சற்று மாறுபடத் தொடங்கியது.

இவைகளையொட்டி மூன்றடுக்குள்ள மந்திரிகளின் கூட்டம் உருப்பெற்று எழுந்தது. அமைச்சவை உறுப்பினர்கள் முதல் தரமானவராகவும், 'நாட்டமைச்சர்கள் மத்திய வகுப்பினராகவும், துணை அமைச்சர்கள் மூன்றாவது பிரிவினராகவும் கருதப்படலாயினர். காபினெட் அமைச்சர்களைப் பிற அமைச்சர்களிலிருந்து தனியாகப் பிரித்துப் பேசும் வழக்கமும் ஏற்பட்டது. 'காபினெட்' என்னும் அவையில், முதிர்ந்த அனுபவமுடைய அமைச்சர்கள் இடம்பெற்றனர். அவர்கள் தனித்துறைகளின் தலைவர்களாக மட்டிலும் செயற்படுவதோடு நின்றுவிடாமல், ஆட்சி முழுவதற்கும் பொறுப்புடையவர்களாகச் செயற்படத் தொடங்கினர். இயற்கையில் உருவத்தில் சிறிதாகவும் செல்வாக்கில் இணையற்றதாகவும் அது வளர்ந்துவந்தது. இவ்வாறு, மந்திரிகள் மன்றத்திலிருந்து அமைச்சவை அல்லது காபினெட் தனியொரு நிறுவனமாக வளர்ந்தமைக்கு நிர்வாக அமைப்பின் அடிப்படை விதிகளைச் செயற்படுத்தியதையே காரணமாகக் கூறவேண்டும். அதிவிரைவில் தனியொரு நிறுவனமாக வளர்ந்ததோடு, தனது நிர்வாகத்திற்கும் வளர்ச்சிக்குமேற்ற தனி விதிகளையும் நாளடைவில் அது உருவாக்கிக்கொண்டது. இத்தகைய மாறுதலேற்பட்டபோது, அரசியலமைப்புத் திட்டம் கௌன்சிலுக்கு அளித்திருந்த பல அதிகாரங்களையும் காபினெட் கைப்பற்றிக்கொண்டுவிட்டது. நாட்டுத் தலைவருக்கு மதியுரைக்கும் உரிமை கௌன்சிலுக்கு வழங்கப்பட்டிருந்ததை இதற்குரிய மேற்கோளாகக் கூறலாம். ஆனால், இவ் வுரிமையை இன்று காபினெட் முழுமையாக அனுபவித்துவருகிறது.

## காபினெட்டும் பாராளுமன்றமும்

தொடர்ச்சியாகவும் ஐயப்பாடுகளின்றியும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாகக் காபினெட் பணியாற்றிவருவதை மக்களாட்சி அரசியல்முறையின் தனிப்பெருஞ் சிறப்பாக நாம் எடுத்துக்கூறலாம். முதற்கண் இம் முறையில் அமைச்சர்கள் கூட்டாகப் பொறுப்பேற்று ஆட்சிபுரிகின்றனர். இரண்டாவதாக, ஒவ்வோர் அமைச்சரும் தமக்கென அளிக்கப்பட்டிருக்கும்

நிர்வாகப் பிரிவின் தலைவராகப் பொறுப்புடன் பணியாற்றுகின்றனர். திட்ட அடிப்படையில் அமைச்சவை பாராளுமன்றத்தின் கீழ்ச்சபையான மக்கள் மன்றத்திற்குப் பொறுப்புடையதாகிறது. அம் மன்றத்தின் உறுப்பினர்கள் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுச் செல்வாக்குப் பெற்றிருப்பதையே இதற்குற்ற காரணமாகக் கூறவேண்டும். பாராளுமன்றத்தின் மேல் சபையான கௌன்சில் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களைக் கொண்டிருப்பதால், அதற்கு அத்துணைச் செல்வாக்கு இல்லை.

பாராளுமன்றஅரசியல்முறை இந் நாட்டில் இயங்கிவருவதில் இரு தனிச் சிறப்புகளை நாம் காணலாம். பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் உறுப்பினரல்லாத ஒருவர் அமைச்சராகப் பணியாற்றலாம். இரண்டாவதாக, அமைச்சர் ஒருவர் ஏதாவதொரு மன்றத்தின் உறுப்பினராக இருந்தால் மற்றொரு மன்றத்திலும் அவர் பிரசன்னமாக இருக்கலாம். ஆனால், ஓட்டளிக்கும் உரிமை அவருக்குக் கிடையாது. மறு சபையின் நடவடிக்கைகளிலும் அவர் பங்குகொள்ளக்கூடும். அனுபவத்தில், இதுகாறும், முதலமைச்சர் மக்கள் சபையின் உறுப்பினராகவே இருந்திருக்கிறார். காபினெட் சபையில் அங்கம் வகிக்கின்ற அனுபவம் மிக்க அவரது தோழர்களில் ஒருவர் அல்லது பலர் இராச்சிய சபையிலும் இடம் பெற்றிருந்திருக்கின்றனர். இதனால் அவர்கள அச் சபையின் தலைவராகின்ற வாய்ப்பும் கிட்டியுள்ளது.

மந்திரிகளைப் பொறுப்புள்ளவர்களாகச் செய்வதற்குப் பாராளுமன்றம் பல உபாயங்களைக் கையாளுகின்றது. பாராளுமன்றத்தில் எழுப்பப்படும வினாக்கள, பட்ஜெட் விவாதங்கள், ஒத்திவைப்புத் தீர்மானங்கள், பல்வேறு துறைகள் அனுப்புகின்ற அறிக்கைகள்பற்றிய விவாதங்கள் ஆகியவை சாதாரணமாகக் கையாளப்படுகின்றன. இதனால் பொறுப்புணர்ச்சி வளருவதற்கு வழியேற்படுகின்றது. மந்திரி சபையின்மீது பாராளுமன்றத்திற்கு உள்ள நம்பிக்கையை அளவிடுவதற்கு, 'நம்பிக்கையில்லாத் தீர்மானம்' என்ற உபாயமொன்று பாராளுமன்றத்தினரின் கையில் எப்பொழுதுமிருந்துவருகிறது. நம்பிக்கையில்லாத் தீர்மானமொன்று வெற்றியாக நிறைவேற்றப்பட்டால், அமைச்சவை வீழ்ந்துவிடுவதோடு வெளியேற்றவும்படும். இவ்வாறாகப் பாராளுமன்ற அரசுமுறையில் காபினெட் பாராளுமன்றத்தின் சிருஷ்டியாக விளங்குகிறது. ஆனால், அது செயற்படுவதைக் கவனித்தால், பாராளுமன்றத்தால் காபினெட் உருவாக்கப்படுகிறதென்றாலும், சிருஷ்டிகர்த்தாவையே நடத்திச் செல்லும் சிருஷ்டியாக அது விளங்குவதைக் காணலாம்.

## 19. உபஜனாதிபதியும் அட்டார்னி-ஜெனரலும்

திட்ட அடிப்படையில் உபஜனாதிபதி ஒருவருக்கு இடமளிக்கப்பட்டிருக்கிறது. நிர்வாகத்தில் அதிகப் பங்கு பெறுகின்ற வாய்ப்பு அவருக்கில்லை. அரசியல் திட்டம் அவருக்களித்திருக்கும் அதிகாரப் பட்டியலைக் கவனமாகப் படிப்பவர்களுக்கு, அமெரிக்க உபஜனாதிபதிக்கும் இவருக்குமிடையிலுள்ள ஒற்றுமை நன்கு புலனாகும். அமெரிக்க நாட்டு உபஜனாதிபதியை வேடிக்கையாக 'மேன்மைதங்கிய உபரியான கனவான்' என்றழைப்பதுண்டு. ஆட்சி நிர்வாகத்தில் அதிகப் பொறுப்புகள் அவருக்கில்லை என்பது இதற்குக் காரணமாகும். ஆனால், உபஜனாதிபதியை மிக்க செல்வாக்குப் பெற்றவராக விளங்கச்செய்யும் விதியொன்று அமெரிக்க நாட்டு அரசியலமைப்புத் திட்டத்தில் காணப்படுகிறது. பதவிக் காலம் முடிவடைவதற்குள் ஜனாதிபதி இறந்துவிட்டால், உபஜனாதிபதி அதிகாரப் பொறுப்பை ஏற்கலாம். எஞ்சியிருக்கின்ற பதவிக் காலம் முழுவதும் அவர் அவ்வாறு பதவியிலிருக்கக்கூடும். இந்தியத் திட்ட அடிப்படையில் ஜனாதிபதி இறந்துவிடுவதாலோ அல்லது செயலாற்றவியலாது போய்விடுவதாலோ அல்லது இராஜினாமா செய்துவிடுவதாலோ அப் பதவி காலியாக நேரிடுமேயெனில், உபஜனாதிபதி அதிகபட்சமாக ஆறு மாத காலத்திற்கே அப் பதவி வகிக்கக்கூடும். அமெரிக்க நாட்டைப்போலவே, இந் நாட்டிலும் ஜனாதிபதியின் முக்கிய அலுவல் இராச்சிய சபைக்குத் தலைமை வகிப்பதேயாகும். அச் சபையின் நிரந்தரத் தலைவராக அவர் விளங்குகிறார்.

பாராளுமன்றத்தின் இரு சபைகளின் அங்கத்தினர்களும் ஒன்றுகூடி உபஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கின்றனர். இத் தேர்வு விகிதப் பிரதிநிதித்துவ அடிப்படையில் தலைக்கு மாறி வரும் ஓர் ஓட்டு என்ற முறையில் நடைபெறும். ஓட்டளிப்பதில் இரகசிய முறை கையாளப்படும்.

நாட்டுத் தலைவரின் அதிகாரங்களை நான்கு நெருக்கடியான சந்தர்ப்பங்களில் உபதலைவர் கையாண்டு ஆட்சி செலுத்தக் கூடும். அத்தகைய சந்தர்ப்பங்கள் வருமாறு: (1) நாட்டுத் தலைவரின் திடீர் மரணம்; (2) அரசாங்க துரோக விசாரணைக் குற்றச்சாட்டினுல் அல்லது வேறு காரணங்களால் தலைவர் பதவி யிழத்தல்; (3) உடல்நலக் குறைவு ; அல்லது (4) நேரில் அலுவலர்களைக் கவனிக்கமுடியாத நிலை ஏற்படுதல். இவைகளில் நான்காவதாகக் குறிப்பிடப்பெற்றிருக்கும் காரணத்தை எண்ணிப்பார்க்கும்போது, தாற்காலிகமாக ஏதாவதொரு காரணத்தால் நாட்டுத் தலைவர் தமது கடமையைச் செய்யஇயலாத நேரங்களிலும் உபஜனதிபதி பதவியேற்கக்கூடுமென்பது தெளிவாகின்றது.

ஜனதிபதியின் அலுவல்களை மேற்கொள்ளும்போது. உப ஜனதிபதிக்கு, ஜனதிபதிக்குள்ள அதிகாரங்களும் பிற பாதுகாப்புகளும் அளிக்கப்படும். இதற்கெனப் பாராளுமன்றத்தினர் கூடி, சட்டபூர்வமாக முடிவுசெய்கின்ற சலுகைகளையும், ஊதியம், படி முதலியவைகளையும் அடைவதற்கு உபஜனதிபதிக்கு உரிமையுண்டு. தற்போது அரசியலமைப்புத் திட்டத்தின் இரண்டாவது அட்டவணைக்கு இணங்க, ஜனதிபதியின் அலுவல்களை ஏற்று நடத்தும்போது அல்லது அப் பதவியிலமர்ந்து பணியாற்றும்போது அப் பதவிக்குரிய சம்பளம், படி மற்றும் சலுகைகள் முதலியவற்றை அனுபவிப்பதற்கு உபஜனதிபதிக்கு உரிமையுண்டு.

மத்திய அரசாங்க மன்றத் தேர்வில் பங்குகொள்ளும் உரிமையுடைய முப்பத்தைந்து வயது நிரம்பிய இந்தியக் குடிமகனுக்கு உபஜனதிபதியாகப் பதவி ஏற்கின்ற வாய்ப்பு உண்டு. இந்திய அரசாங்கம் மாநில அரசாங்கம் அல்லது தலஸ்தாபனங்களில் ஊதியம் பெற்று அலுவலனுகப் பணியாற்றுகின்ற ஒருவன் அப் பதவியை அடைய இயலாது. பாராளுமன்றச் சபைகளில் உறுப்பினராகவோ அல்லது மாநிலச் சபைகளில் உறுப்பினராகவோ உபஜனதிபதி இருக்கவியலாது. மத்திய அரசாங்க மன்றத்தினருள் பெரும்பான்மையினர் ஒன்று கூடித் தீர்மானித்து, மக்கள் சபையினரும் அத் தீர்மானத்தை ஏற்கும்போது, உபஜனதிபதி பதவியிலிருந்து விலக்கப்படுவார். ஆனல், உபஜனதிபதி நாட்டுத் தலைவரின் சார்பாகப் பணிபுரியும் போது இவ் வுபாயத்தினுல்மட்டும் அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிடமுடியாது. அச் சமயங்களில், ஜனதிபதியைப் பதவி நீக்கம் செய்வதற்கென விதிக்கப்பெற்றிருக்கும் துரோக

விசாரணைக் குற்றச்சாட்டுகள் போன்ற முறைகளையே கடைப்பிடிக்க நேரிடும்.

அரசியலமைப்புத் திட்ட அடிப்படையில், இதுகாறும் இரு ஜனாதிபதித் தேர்தல்களும் இரு உபஜனாதிபதித் தேர்தல்களும் நடைபெற்றிருக்கின்றன. இவ்விரு சந்தர்ப்பங்களிலும், உப ஜனாதிபதி போட்டியின்றி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார். இவ்விரு சந்தர்ப்பங்களிலும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பெற்ற சர்வபள்ளி இராதாகிருஷ்ணன் என்பவர் அரசியல் நிர்ணயசபையின் அங்கத்தினராகவும் இருந்திருக்கிறார்.

அரசியலமைப்புத் திட்டம் ஜனாதிபதிக்கு வழங்கியிருப்பது போல் உபஜனாதிபதிக்குப் பெரும் பதவிகளையும் செல்வாக்கையும் வழங்கவில்லை என்றாலும், அப் பதவி கௌரவமும் சிறப்பும் நிரம்பியதொன்றாகவே இருந்துவருகிறது. தற்போது, அப்பதவி வகிப்பவரின்[1] செல்வாக்கை இதற்குற்ற பெருங் காரணங்களில் ஒன்றாகக் குறிப்பிடலாம். அப் பதவிக்கு ஏற்பட்டுள்ள கௌரவமும் சிறப்பும் மேலும் பல்லாண்டுகளுக்கு நிலைத்திருக்குமென நாம் எதிர்நோக்கலாம்.

## அட்டார்னி-ஜெனரல்

மத்திய அரசினருக்குச் சட்ட ஆலோசனைகள் வழங்குவதற்கென்றும், ஜனாதிபதியால் உத்தரவிடப்படும்போது வழக்குகளைப் பொறுப்புடன் நடத்துவதற்கென்றும் இந்திய அட்டார்னி-ஜெனரல் என்ற ஒருவர் அமர்த்தப்பட்டுள்ளார். அட்டார்னி-ஜெனரலாக நியமனம் பெறுவதற்குப் பெருநீதி மன்ற நீதிபதியாக நியமனம் பெறுவதற்குரிய யோக்யதாம்சங்களைப் பெற்றிருக்கவேண்டும். ஜனாதிபதியால் அமர்த்தப்படுகின்ற இவர், ஜனாதிபதியின் நன்மதிப்பைப் பெற்றிருக்கும்வரை பதவியிலிருக்கலாம். அட்டார்னி-ஜெனரலுக்கு அளிக்கப்படவேண்டிய ஊதியத் தொகையை ஜனாதிபதி முடிவுசெய்வார்.

பிரிட்டனில் அட்டார்னி-ஜெனரலாகப் பதவி வகிப்பவர் காபினெட் சபையின் உறுப்பினராவார். ஆனால், அரசாங்க நிலையில், சட்டத் தொடர்புள்ள வழக்குகளைக் கவனிப்பதற்கு இந்திய நாட்டுக் காபினெட்டுகளில் சட்ட மந்திரியொருவர் இடம்பெற்

1 இதன் மூலநூல் 1962ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது.

திருக்கிறார். சட்டமன்றத்தில் இடம்பெறுகின்ற வாய்ப்பில்லை என்றாலும், ஓர் அமைச்சரைப்போன்று பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் பிரசங்கம் செய்கின்ற உரிமை இவருக்குண்டு. பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு வழங்கப்பெற்றிருக்கும் உரிமைகளும் பாதுகாவல்களும் இவருக்கும் வழங்கப்பெற்றிருக்கின்றன. தமது கடமையை நிறைவேற்றுவதற்கென்று இந்திய நாட்டிலுள்ள நீதிமன்றங்களில் இவர் பிரசன்னமாக இருக்கலாமெனச் சட்டபூர்வமான சலுகை இவருக்கு வழங்கப்பெற்றிருக்கிறது.

# 20. மத்திய சட்டசபை—இந்திய நாட்டுப் பாராளுமன்றம்

இந்திய நாட்டுச் சட்டசபைக்குத் திட்டம் 'பாராளுமன்றம்' என்ற பெயர் சூட்டியிருக்கிறது. ஈரங்கச் சட்டசபை முறையைப் பின்பற்றி இப் பாராளுமன்றம் இரு சபைகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. திட்ட அடிப்படையில் கூட்டாட்சி அரசியல் முறை ஏற்கப்பட்டுவிட்டது. இதனால் மக்கள் நேரடியாக ஆட்சியில் பங்குபெறுவதும், மறைமுகமாகப் பல நிறுவனங்களின் மூலமாகப் பங்குபெறுவதும், சமமாக இயங்கவேண்டுமென்ற கருத்தும் ஏகமனதாக ஒப்புக்கொள்ளப்பட்டன. எனவே, ஈரங்கச் சட்டசபை முறையைப் பின்பற்றி மக்கள் பிரதிநிதிகளுக் கென்று ஒரு சபையும், துணைநாட்டுப் பிரதிநிதிகளுக்கென்று ஒரு சபையும் ஆக இரு சபைகள் ஏற்பட்டுவிட்டன. இவ்விரு சபை களும் முறையே மக்கள்சபை (லோகசபை) .என்றும், இராச்சிய மன்றம் (ராச்சிய சபை) என்றும் அழைக்கப்படுகின்றன. இச் சபைகளின் தன்மைகளை அவைகள் பெற்றிருக்கின்ற பெயர் வாயிலாக ஒருவாறு நாம் நன்கறியலாம். லோக சபையின் அங்கத்தினர்கள், நாட்டெல்லை அடிப்படையில், வயதுவந்த ஒவ்வொருவருக்கும் வாக்குரிமை ஒன்று என்ற முறையைக் கடைப்பிடித்து, நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். துணைநாட்டு அசெம்பிளிகளால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதி கள் இராச்சிய சபையில் இடம்பெறுகின்றனர்.

ஜனாதிபதி, பாராளுமன்றத்தின் இணைபிரியாத ஓர் அங்க மென்று நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளோம். திட்ட விதி 79-க்கு இணங்க, ஜனாதிபதியையும் இரு சபைகளையும் கொண்டதே பாராளுமன்றமாகும். பாராளுமன்ற அரசுமுறை மரபுகளைப் பின்பற்றியே, ஜனாதிபதியைப் பாராளுமன்றத்தின் உறுப்பாக நாட்டு அரசியல் திட்டம் ஏற்றிருக்கிறது. ஆங்கில நாட்டுப் பாராளுமன்றமென்பது மன்னன், பிரபுக்கள் சபை, மக்கள் சபை

ஆகியவற்றைக்கொண்டது. இதற்கு மாறாக, அமெரிக்க நாட்டுக் காங்கிரசில் அந் நாட்டு ஜனாதிபதி இடம்பெறவில்லை. தலைவர் முறைத் துரைத்தனத்தில்,ஆட்சித்துறை,சட்டமன்றம் ஆகியவைகளுக்குள்ள அதிகாரங்களைத் தனித்தனியே பிரித்தளிப்பது கையாளப்படுகிறது. பாராளுமன்ற துரைத்தனமுறை இதற்கு மாறாக, இவ்விரு துறைகளுக்கும் நெருங்கிய தொடர்பேற்படுத்துவதற்கும் ஒன்றையொன்று சார்ந்திருக்கச் செய்வதற்கும் மிகவும் முயற்சி செய்கிறது. அரசாங்க உறுப்பினர்கள் சட்டமன்றங்களிலும் இடம்பெறுவர். ஜனாதிபதி சட்டமன்றத்தின் உறுப்பினராக இடம் பெறவில்லையென்றாலும், அவரைப் பாராளுமன்றத்தில் இடம்பெறச் செய்வதால் சட்டமியற்றுகின்ற பணியில் அவருக்குரிய பங்குகொள்ளும் வாய்ப்புக் கிட்டுகிறது. அவர் ஆட்சித்துறையின் தலைவராவார். ஆட்சி செலுத்துகின்ற பொறுப்பு, சட்டமன்ற அதிகாரத்துடன் இணைந்து விளங்குகிறது. எனவே, சட்டமன்றத்துடனும் ஜனாதிபதி நெருங்கிய தொடர்புகொள்ளவேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

## மக்கள் சபை (லோக சபை)

பொது வழக்கில் மக்கள் சபை, பாராளுமன்றத்தின் 'கீழ்ச் சபை' என்றழைக்கப்படுகிறது. அதன் அங்கத்தினர்கள், மக்களால் நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பிற நாட்டு அரசியலமைப்புத் திட்டங்களைப்போலன்றி, லோக சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படவேண்டிய உயர்ந்தபட்ச அங்கத்தினர் எண்ணிக்கையை நம் அரசியலமைப்புத் திட்டம் வரையறுத்துக் கூறுகின்றது. ஆதியில் இவ்வெண்ணிக்கை 500ஆக இருந்தது. 1956ஆம் ஆண்டில் இராச்சியப் புனரமைப்புத் திட்டத்தையொட்டிய அரசியல் திட்டத்தின் பதினேழாவது திருத்தம் மொத்த எண்ணிக்கையை 520ஆக உயர்த்தியது (திட். விதி : 81). இவைகளில் உச்சவரம்பாக இருபது ஸ்தானங்கள் துணைநாட்டுப் பகுதி அங்கத்தினர்களுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ளன. சட்டபூர்வமாகப் பாராளுமன்றம் எதை அனுமதிக்கிறதோ, அதைக் கடைப்பிடித்து இவர்களை நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கலாம். எஞ்சியுள்ள அங்கத்தினர்கள் நாட்டெல்லைப் பகுதிகளிலிருந்து நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நாட்டின் மக்கள் தொகையை ஆதாரமாகக்கொண்டு ஒவ்வொரு துணைநாட்டின் மக்கள் தொகையையும் கணக்கிட்டு, அவ் விகிதாசாரப்படி ஒவ்வொரு துணைநாட்டிற்குரிய ஸ்தானங்கள் கணக்கிடப்பட்டு ஒதுக்கப்பட்டுள்ளன. தேர்தல் நடத்துவதற்கென்று மக்கள் தொகையை ஆதாரமாகக்கொண்டு ஒவ்வொரு துணைநாடும் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன,

தற்போது[1] பாராளுமன்ற அங்கத்தினர்களின் மொத்த எண்ணிக்கை 505 ஆகும். இவர்களில் ஆங்கிலோ-இந்திய வகுப்பைச் சார்ந்த இருவரும் அடங்கியுள்ளனர். அவர்கள் ஜனாதிபதியின் சிபாரிசு பெற்று, சபையில் இடம்பெறுகின்றனர். அவ் வகுப்பைச் சார்ந்த எவரும் லோக சபையில் தேர்வுமூலம் இடம்பெறவில்லையெனில், அவ் வகுப்பைச் சார்ந்த இருவரை ஜனாதிபதி அங்கத்தினர்களாகச் சிபாரிசு செய்யலாமெனத் திட்டம் அனுமதிக்கிறது. இவ்வனுமதி, நமது அரசியலமைப்புத் திட்டத்தின் சிறப்பு அம்சங்களில் ஒன்றாகும். 1951ஆம் ஆண்டில் மேற்கொள்ளப்பெற்ற, குடிக்கணக்குப் புள்ளிவிவரங்களுக்கேற்ப இந்திய நாட்டு மக்கள்தொகை 360 மில்லியன்களாகும்.[2]

தற்போது மன்றத்தில் 503 தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் உள்ளனரெனக் குறித்தோம். 700,000 மக்களுக்கு ஒரு பிரதிநிதி என்ற கணக்கில் இது அடங்குகிறது. இவ் விகிதம் திருப்திகரமற்றதென்றே கூறவேண்டும். கீழே காணப்படும் அட்டவணையில் ஒவ்வொரு மாகாணத்திற்கும் அளிக்கப்பட்டிருக்கும் பிரதிநிதிகளின் எண்ணிக்கையைக் காணலாம்.

### மக்கள் சபை

| துணை நாட்டின் பெயர் | அங்கத்தினர் எண்ணிக்கை |
|---|---|
| 1. ஆந்திரப் பிரதேசம் | 43 |
| 2. அஸ்ஸாம் | 13 |
| 3. பீகார் | 53 |
| 4. குஜராத் | 22 |
| 5. ஜம்முவும் காஷ்மீரமும் | 6 |
| 6. கேரளம் | 18 |
| 7. மத்தியப் பிரதேசம் | 36 |
| 8. சென்னை | 41 |
| 9. மகாராஷ்டிரம் | 44 |
| 10. மைசூர் | 26 |
| 11. ஒரிசா | 20 |
| 12. பஞ்சாப் | 22 |
| 13. ராஜஸ்தான் | 22 |
| 14. உத்தரப் பிரதேசம் | 86 |
| 15. மேற்கு வங்காளம் | 36 |

[1] இதன் மூல நூல் 1962ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது.

[2] 1961ஆம் ஆண்டுக் குடிக்கணக்கின்படி, இந் நாட்டு மக்கள்தொகை 440 மில்லியன்களாகும்.

| யூனியன் நாடுகள் | எண்ணிக்கை |
|---|---|
| 1. டில்லி | 5 |
| 2. ஹிமாசலப் பிரதேசம் | 4 |
| 3. மணிபுரி | 2 |
| 4. திரிபுரம் | 2 |
| 5. அந்தமான்-நிக்கோபார் தீவுகள் | 1 |
| 6. லக்கடிவ், மினிகாய், அமிந்திவி தீவுகள் | 1 |
| விசேஷப் பிரதிநிதித்துவம் | |
| ஆங்கிலோ-இந்தியர்கள் | 2 |
| | 505 |

வயதுவந்தவருக்கு, வாக்குரிமை என்ற அடிப்படையில் மன்றத்திற்கான தேர்வு நடைபெறுகிறது. 21 வயது பூர்த்தியான ஆண், பெண் ஒவ்வொருவருக்கும் வாக்குரிமை பெறுகின்ற வாய்ப்பு உண்டு. தற்போது அமலிலிருந்துவருகின்ற முறைக்கேற்ப, அதிகப்படியான ஓட்டுகள் பெறுபவர் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்படுகிறது. ஓட்டளிப்பு இரகசியமாக நடைபெறும். லோக சபைக்கும் பேராளர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு, விகிதப் பிரதிநிதித்துவ முறையைக் கையாளவேண்டுமென அங்கத்தினருள் சிலர் கருத்தறிவித்தனர். அம் முறையைக் கடைப்பிடிப்பதற்குத் தேவையான அளவில் கல்வியறிவு பரவவில்லை என எடுத்துக்காட்டி, அம்பேத்கர் அக் கருத்தை ஏற்கவில்லை. மேலும், விகிதப் பிரதிநிதித்துவ முறையைக் கடைப்பிடிப்பதால் ஏராளமான அரசியல் கட்சிகளும், அரசில் நிரந்தரமான குழப்பநிலையும் ஏற்படக்கூடுமென்றும் கருதினர்.

முதன்முறை கூடுவதிலிருந்து ஐந்தாண்டுகளுக்கு மக்கள் சபையின் பதவிக் காலம் நீடித்திருக்கும். ஜனாதிபதிக்கு அதற்கு முன்பாக அதைக் கலைத்துவிடும் அதிகாரம் உண்டு. தேசிய நெருக்கடி காலங்களில் அதன் பதவிக் காலத்தை மேலும் ஓராண்டு நீடிப்பதற்கும் அவருக்கு அதிகாரம் உண்டு. எத்தகைய சூழ்நிலையிலும் நெருக்கடி தீர்ந்தபின், மேலும் ஆறு மாத காலத்திற்குமேல் சபையின் பதவிக் காலத்தை நீடிக்க இயலாது. ஆண்டுக்கு இரு முறைகளாவது சபை கூடவேண்டும். சபையின் இரு கூட்டங்களுக்குமுள்ள இடைவெளி ஆறு மாத காலத்திற்குக் குறைவாகவே இருக்கவேண்டும். அவையைக் கூட்டுகின்ற ஜனாதிபதி, அது கூடவேண்டிய நேரத்தையும் இடத்தையும் குறிப்பிடுவார். கூட்டத் தேதியை ஒத்திவைப்பதற்கும் ஜனாதிபதிக்கு அதிகாரமுண்டு.

பாராளுமன்றஅங்கத்தினனுவதற்கு விரும்புகிறவன் இந்தியக் குடிமகனுக இருக்கவேண்டும். லோகசபையில் இடம் பெறுவதற்கு இருபத்தைந்து ஆண்டுகளையும், ராஜ்யசபையில் இடம் பெறுவதற்கு முப்பதாண்டுகளையும் அடைந்திருக்கவேண்டும். இவைகளைத் தவிர, இந்திய அரசியல் திட்டம் வேறு நிபந்தனைகளை விதிப்பதில்லை. லோகசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட விரும்பும் ஒருவன், இந்திய நாட்டின் ஏதாவதொரு மாகாணத்திலுள்ள பாராளுமன்றத் தொகுதியிலிருந்து போட்டியிடலாம். இதை இந்திய நாட்டுத் தேர்தல் முறையின் சிறப்பியல்பெனக் குறிப்பிடலாம். கூட்டாட்சி முறை அரசியலைக் கடைப்பிடிக்கும் எந்த நாட்டிலும் இத்தகைய வாய்ப்பு அளிக்கப்படவில்லை. 'ஏக குடியுரிமை' என்ற அடிப்படை விதியையும் நாட்டின் ஒற்றுமையையும் இது வலியுறுத்துகின்றது எனலாம். உதாரணமாக, அமெரிக்க நாட்டில், பிரதிநிதிகள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட விரும்புகின்ற ஒருவன், அவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும்போது 'எந்த மாநிலத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகிறுனே அதில் வசிப்பவனுக இருக்கவேண்டும்'. இஃது எவ்வாறுக இருப்பினும், ராஜ்யசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட விரும்புகின்ற ஒருவன், அவன் போட்டியிடும் மாநிலத்தின் ஏதாவதொரு பாராளுமன்றத் தொகுதியின் வாக்குரிமை பெற்றவனுக இருத்தல் வேண்டும். இராச்சிய சபை, மாநிலங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கிறதென்பது, இதனுல் தெளிவாகிறது.

அங்கத்தினர் பெறத்தகாத யோக்கியதாம்சங்கள் சிலவற்றை அரசியலமைப்புத் திட்டம் விதித்திருக்கிறது: (1) பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் அங்கத்தினனுகவோ அல்லது மாநில மன்றம், பாராளுமன்றம் ஆகிய இரண்டிலும் அங்கத்தினனுகவோ குடிமகன் ஒருவனுல் இருக்க முடியாது. ஆனுல், ஒரே சமயத்தில் பல பதவிகளுக்குப் போட்டியிடவோ அல்லது பல மன்றங்களில் உறுப்பினராவதற்கு முயற்சி செய்யவோ கூடும். போட்டியிடும் பதவிகள் யாவும் கிடைத்தால், தமது இச்சைப்படி ஏதாவதொன்றை ஊர்ஜிதம் செய்து பிறவற்றைத் துறந்துவிடவேண்டும். ஓர் அபேட்சகர், பாராளுமன்றம், மாநில மன்றம் ஆகிய இரு சபைகளிலும். இடம்பெறுவாரெனில், குறிப்பிட்ட காலவரையறைக்குள், மாநில மன்றத்தில் தமக்குக் கிடைத்த பதவியை இராஜிஞமா செய்துவிடவேண்டும் அல்லது பாராளுமன்றத்தில் அவரது ஸ்தானம் காலியாகிவிடும். (2) சபையின் அனுமதியின்றிச் சபைக் கூட்டங்களில் அறுபது நாட்களுக்கு மேலாக அங்கத்தினரொருவர் ஆஜராகாது இருப்பாரேயெனில், அவர் உரிமையை இழந்தவராவார். (3) அவ்வாறே,

இந்திய அரசாங்கத்தில் ஊதியம் பெற்று அலுவலில் அமர்ந்தாலும், (4) சித்த ஸ்வாதீனமற்று இருந்தாலும், (5) நீக்கப்பெருத பாப்பராக (இன்சால்வென்ட்) இருந்தாலும், (6) பிற நாட்டுக் குடியுரிமையை விரும்பிப் பெற்ருலும் அல்லது அந்நிய நாடொன்றிற்கு ஏதாவதொரு வகையில் கட்டுப்பட்டிருந்தாலும்—பாராளுமன்ற அங்கத்தினர் உரிமையை இழந்துவிடுவார்.

திட்ட விதி 327 தேர்தலுக்கான மேலும் சில கட்டுப்பாடுகளை விதித்திருக்கின்றது. அதை அடிப்படையாகக் கொண்டு 1951ஆம் ஆண்டில் பாராளுமன்றம் மக்கள் பிரதிநிதித்துவ சட்டமொன்றைப் பிறப்பித்தது. அச் சட்டத்தின்மூலமாகச் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பெற்றன. அவைகள் வருமாறு: (1) தேர்தலில் வெற்றிபெறும் ஒருவர், தேர்தல் குற்றங்கள் புரிந்துவிட்டார் என்ரே அல்லது இலஞ்சம் முதலியவைகளைக் கையாண்டு வெற்றி பெற்றுவிட்டார் என்ரே ஒரு நீதிமன்றம் அல்லது தேர்வு நீதிமன்றத்தால் தண்டிக்கப்பட்டிருக்கலாகாது. (2) இந்திய நீதிமன்றங்களில் ஏதாவதொன்றிஞல் தண்டிக்கப் பெற்று இரண்டு ஆண்டுகளுக்குக் குறையாத சிறைவாச தண்டனை பெற்றிருக்கக்கூடாது. (3) தேர்ந்தெடுக்கப்படுவதற்கென்று செலவு செய்த பணத்திற்கான வரவுசெலவு கணக்குகளைக் குறித்தகாலத்தில், குறிப்பிட்ட வகையில் தாக்கல் செய்திருக்க வேண்டும். (4) அரசாங்க ஊழியத்திலிருந்து இலஞ்சக் குற்றத்திற்கென்ரே அல்லது விசுவாசமற்றவர் என்ரே நீக்கப்பட்டிருக்கக்கூடாது. (5) அரசினரது, முதலீட்டுடன் நடைபெறுகின்ற ஏதாவதொரு தொழில் ஸ்தாபனத்தில் டைரக்டராகவோ, அல்லது மேலாண்மைக் கழக உறுப்பினராகவோ, அல்லது ஊதியம் பெறுகின்ற அலுவலராகவோ இருக்கக்கூடாது. (6) சர்க்காருடன் எவ்வித உடன்பாட்டையும் கொண்டிருக்கக் கூடாது; சர்க்காருக்கான வேலைகளையோ அல்லது ஊழியத்தையோ மேற்கொண்டிருக்கவும் கூடாது. தேர்வுக்கான பதிவுப் பத்திரத்தைத் தாக்கல் செய்கின்றபோதும், முடிவுகள் வெளியாகின்றபோதும் அபேட்சகர் மேலே குறிக்கப்பெற்றுள்ள குறைபாடுள்ளவராக இருக்கக்கூடாது.

## பாராளுமன்ற அலுவலர்கள்

### மன்றத் தலைவர்

லோகசபைக் கூட்டங்களுக்குத் தலைமை வகிப்பதற்கென்று மன்றத் தலைவர் ஒருவர் உண்டு. மன்ற அங்கத்தினர்கள் தங்களுக்குள்ளாக ஒருவரை இப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கின்றனர் ஆங்கில நாட்டில் பாராளுமன்ற அரசியல் முறை முன்னூறு

ஆண்டுகளுக்கு மேலாகவே நடைபெற்றுவருகிறது. இக் கால முழுவதும் மன்றத் தலைவர் பதவிக்கு மிகுந்த கண்ணியம் அளிக்கப்பட்டிருக்கிறது. தலைமை தாங்கி மிகக் கவனமுடன் பணிசெய்துவந்த மன்றத் தலைவர்களின் முயற்சியையே, பதவியின் கௌரவத்திற்குற்ற காரணமெனக் கூறலாம். மன்றத் தலைவர்கள் விருப்புவெறுப்புகளின்றி, நேர்மையுடன் நெறிகளைத் தீர்மானித்து முடிவு செய்திருக்கின்றனர். மன்றத்தின் தலைவர் இவ்வாறு நடுநிலை தவறுதவராக இருக்கவேண்டுமென்பதைத் திட்டத் தயாரிப்பாளர்கள், முன்னதாகவே எதிர்நோக்கியுள்ளனர். அவ்வலுவலரைப்பற்றி விரித்துரைக்கும் அத்தியாயத்தைக் கூர்ந்து நோக்கினுல் இது நன்கு விளங்கும். உதாரணமாக, மன்றத் தலைவரைப் பதவிநீக்கம் செய்வதற்கான வழியைத் திட்ட விதி 94 (c) குறிப்பிடுகிறது. மன்ற உறுப்பினர்கள் தீர்மானித்து, அந்நேரத்தில் மன்றத்திலுள்ள உறுப்பினருள் பெரும்பான்மையினர் அதை ஒப்புக்கொண்டால், பதவிநீக்கம் செய்யலாகும். இவ்வாறு தனி முறையில் தீர்மானங்களை நிறைவேற்றிப் பெரும்பான்மையான அங்கத்தினர்களின் ஒப்புதல் பெற்றுப் பதவிநீக்கம் செய்யப்படும் முறையை ஒருசில அலுவலர்களின் சார்பிலேயே கடைப்பிடிக்கலாம். ஜனுதிபதி, உபஜனுதிபதி, பாராளுமன்ற இரு சபைகளின் தலைவர்கள், பெருநீதிமன்ற நீதிபதிகள் முதலியவர்களே இவ்வகையிலுள்ள பட்டியலில் அடங்குவர். இத்தகைய அலுவலர்கள், அரசியல், மற்றும் கட்சிச் சார்புகளின்றிப் பணிபுரிவர் என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

மன்றத் தலைவருக்கு வழங்கப்பட்டிருக்கும் செல்வாக்கையும் அவர் புரியும் பணிகளையும் கவனித்தால், அப் பதவிக்குரிய கௌரவம் மிக நன்ருக விளங்கும். மன்றக் கூட்டங்களுக்கு அவர் தலைமை வகிப்பார். போதிய அங்கத்தினர்கள் கூடவில்லையெனில், சபைக் கூட்டத்தை நிராகரித்துவிடுவதற்கோ அல்லது ஒத்திவைப்பதற்கோ அவருக்கு அதிகாரமுண்டு. பிரச்சினைகளை ஆய்ந்து மன்றம் முடிவுகளெய்தும்போது ஓட்டளிப்பதில் மன்றத் தலைவர் முதலில் கலந்துகொள்வதில்லை. (அவர் நடுநிலை வகிப்பவர் என்பது இதனுல் உறுதியாகும்.) ஆனுல், பிரச்சினைகளுக்கு முடிவுகட்ட இயலாமல் சமநிலை நிலவுகின்றபோது முடிவான வாக்களிப்பதற்கு அவருக்கு அதிகாரமுண்டு. மன்ற உறுப்பினர் ஒருவர் தமது பதவியை ராஜினுமா செய்யும்போது அவ்வறிக்கையை மன்றத் தலைவரிடமே சமர்ப்பிக்கவேண்டும். மசோதா ஒன்று நிதி நிர்வாகத்தைச் சார்ந்ததா அல்லது பிற தன்மையுடையதா என்பதை முடிவுசெய்வதும் அவரது வேலையாகும். அத்தகைய மசோதாவை இராச்சிய சபைக்கு அனுப்பிவைக்கும்

போதும், ஜனாதிபதியின் ஒப்புதலுக்கு அனுப்பிவைக்கும்போதும் மன்றத் தலைவரின் கையெழுத்துடனேயே அனுமதிக்கப்படும். பாராளுமன்றத்தின் இரு சபைகளையும் ஒன்றாகக் கூட்ட விரும்பும் ஜனாதிபதி, இராச்சிய சபைத் தலைவருடன் சட்டமன்றத் தலைவரையும் கலந்தாலோசிப்பார். அத்தகைய கூட்டங்களுக்குத் தலைமை தாங்குகின்ற உரிமையும் மன்றத் தலைவரைச் சார்ந்ததேயாகும். இந்தி அல்லது ஆங்கில மொழியில் தேவையான பயிற்சி இல்லாத ஓர் அங்கத்தினரைத் தமது தாய்மொழியிலேயே பேசுமாறு அனுமதிப்பதற்கு மன்றத் தலைவருக்கு அதிகாரமுண்டு. மன்ற அலுவல்களைக் கவனிப்பதற்குத் தேவையான அதிகாரங்களில் இதுவுமொன்று. தமது செல்வாக்கைப் பயன்படுத்துவதிலும் செயல்படுத்துவதிலும் மன்றம் நீங்கலாகப் பிறிதொருவருக்குத் தலைவர் உத்தரம் சொல்லத் தேவையில்லை. விதியொன்றைக்குறித்து அவர் செய்யும் தீர்மானத்தை எவ்வித நீதிமன்றத்தாலும் புனராய்வு செய்ய இயலாது.

மன்றத் தலைவருக்கு நாம் மேலே குறிப்பிட்ட அதிகாரங்கள் யாவும் திட்டத்தால் அளிக்கப்பட்டிருக்கின்றன. இவை நீங்கலாக, அவை செயல்படுவதற்கான விதிமுறைகள் அவருக்கு ஏராளமான அதிகாரங்களை வழங்குகின்றன. விரிவான இவ் வழிமுறைகள் அவை நன்முறையில் செயல்படுவதற்குத் தேவையாகின்றன. கேள்விகள், பிரேரணைகள், தீர்மானங்கள், மசோதாக்கள், திருத்தங்கள் ஆகியவைகளைப்பொறுத்த அறிக்கைகளைக் குறித்து மன்றத் தலைவரின் முடிவு இறுதியானதாகும் இவ் அறிக்கைகளை அனுமதித்து முடிவுசெய்வதற்கென்று நடைமுறை விதிகள் வழிவகுக்கின்றன. இவ் விதிகளுக்கு விளக்கம் கூறுவதும், குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் செயல்படுத்துவதும் மன்றத் தலைவரின் விசேஷ உரிமைகளாகின்றன. நாட்டின் பொதுநலத்தை மனத்திற்கொண்டு, ஒரு விஷயத்தை மிக அவசரமானதென்று தீர்மானித்து, அதற்கு முதலிடம் வழங்குவதற்கு அவருக்கு முழு அதிகாரமுண்டு. அவ்வாறு தாம் மேற்கொள்ளும் முடிவுகளுக்கு அவர் காரணம் காட்டி மெய்ப்பிக்கவேண்டுவதில்லை. அம் முடிவுகளை எதிர்ப்பதற்கு உறுப்பினருக்கு அதிகாரமில்லை. அவையின் கட்டுப்பாட்டை அமல் செய்வதற்கென்றும், விதிமுறைகளுக்குட்பட்டு அதைச் செயல்படச் செய்வதற்கென்றும் அவருக்கு ஏராளமான அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. அதைப்போலவே அரசியல் திட்டத்தைப் பொறுத்தும், மற்றும் பாராளுமன்றக் கமிட்டிகள் செயல்படுவதைப் பொறுத்தும் அவருக்குப் பெருவாரியான அதிகாரங்கள் உண்டு. இவ்வாறாகத் தனிப்பட்ட முறையிலும், கூட்டு அல்லது கட்சி அடிப்படைகளிலும் அங்கத்

தினர்களின் உரிமைகளுக்கும் சலுகைகளுக்கும் பொறுப்பானவ ராகவும் பாதுகாவலராகவும் மன்றத் தலைவர் விளங்கிவருகிறார். சுருக்கமாகக் கூறவேண்டுமெனில், மன்றத்தின் செல்வாக்கு, நடைமுறை, கௌரவம் ஆகிய யாவும் மன்றத் தலைவரைப் பொறுத்தே அமைகின்றன.

மன்றத் தலைவர் பதவிக்கென்றே தனிச் சிறப்பு ஒன்று உண்டு. மன்றத்தைக் கலைத்துவிட்ட பிறகும் தலைவர் பதவியி லிருந்து நீங்குவதில்லை. புதிய அங்கத்தினர்கள் கூடி மற்றுமொரு தலைவரைத் தேர்ந்தெடுக்கும்வரை, பழைய தலைவரே பதவியி லிருந்துவருவார். மன்றத் தலைவருக்கான ஊதியம், படி ஆகியவை களைத் தீர்மானிப்பதற்குப் பாராளுமன்றத்திற்கு அதிகார முண்டு. இவை இந்தியத் திரட்டு நிதியிலிருந்து வழங்கப்படு கின்றன.

மன்றத் தலைவரின் பதவியேற்பட்டு ஒரு பத்தாண்டுகள் சென்றிருக்கின்றன. இக் குறுகிய கால அளவிற்குள் மிக முக்கிய மான வழக்காறுகள் ஏற்பட்டுவிட்டன. மன்றத்தின் கௌரவத் திற்கும் சுதந்திரத்திற்கும் ஏற்ற உண்மையான சின்னமாகத் தலை வர் விளங்குகிறார். அங்கத்தினரின் சலுகைகளையும் உரிமைகளை யும் அவர் பாதுகாத்துவருகிறார்.

### மன்றத் துணைத்தலைவர்

தலைவர் ஆஜராகாத நேரங்களில் மன்றக் கூட்டங்களுக்கு இவர் தலைமை தாங்குவார். மன்றத் தலைவரைத் தேர்ந்தெடுப் பதுபோலவே இவரையும் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கின்றனர். இவரைப் பதவிநீக்கம் செய்வதற்கும் அதே முறை கையாளப் படுகிறது. மன்றத் தலைவரின் இடத்தில் அமரும்போது, அவ் வதிகாரங்கள் முழுவதையும் பெற்றுவிடுகிறார். அவரது அலுவல் களை இவர் செய்து முடிப்பார். பாராளுமன்றக் கமிட்டியொன் றில் இவர் இடம்பெறும்போது இயற்கையாக அதன் தலைவராகி விடுவார். இதை இவர் பெற்றிருக்கின்ற விசேஷ சலுகையாகக் குறிப்பிடலாம். விருப்பமிருந்தால் கமிட்டியின் கூட்டங்களில் பங்குபெறவும், விவாதங்களுக்குத் தலைமை தாங்கவும் இவருக்கு உரிமையுண்டு. இவைகளை, இவரது பதவிக்குரிய தனிச் சலுகைக ளாகக் குறிப்பிடலாம். பொதுவில் இவரது தீர்ப்புகள் முடி வானவையாகும். விவாதத்திற்குரிய விஷயங்களைப் பொறுத்த வரையில் இவை உண்மையேயாயினும், நடைமுறையின் ஒருமைப் பாட்டைக் கருதி, மன்றத் தலைவர் அவ்வப்போது வழிகாட்ட லாகும். மன்றத் துணைத்தலைவருக்கு ஐயப்பாடுகள் தோன்றும்

போது, தீர்ப்பளிக்கின்ற பொறுப்பைத் தலைவருக்கே விட்டு விடுவார்.

இவை நீங்கலாக, மன்றத் தலைவர் தலைமை தாங்கும்போது, துணைத்தலைவர் பிற அங்கத்தினர்களைப்போன்று அமர்ந்திருப்பார். பேசுவதற்கும், கட்சிப் பற்றைக் கடைப்பிடிப்பதற்கும், மன்றத்தின் முன்னுள்ள பிரேரேபணைகளில் வாக்களிப்பதற்கும் பிற அங்கத்தினர்களைப் போன்று இவருக்கு உரிமைகளுண்டு. முறையான ஊதியம் பெறுவதற்கும் இவர் அருகதையுள்ளவர்.

தலைவர் பட்டியல்

மன்றத் தலைவர், உபதலைவர் ஆகிய இருவரும் ஆஜராகாத நேரங்களில் மன்றத்தின் வேலைகள் நடைபெறுவதற்கென்றும், அதன் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குவதற்கென்றும் ஆறு நபர்கள் கொண்ட பட்டியலொன்றிலிருந்து, மன்றத் தலைவர் அவ்வப்போது ஒருவரை அமர்த்துவார் துணைத்தலைவர், மன்றத் தலைவரின் பதவியேற்கும்போது, மன்றத் தலைவரின் சார்பில் செயல்படும்போது, பின்னவரின் அதிகாரங்கள் யாவற்றையும் பெற்றுவிடுவதைப்போல தலைமைப் பதவிக்கு அமர்த்தப்படுபவரும் அவ்வாறே அதிகாரங்கள் யாவற்றையும் பெற்றுவிடுவார். மன்றத் தலைவரின் பதவியேற்கும் காலம் முடிந்ததும், அவ் வுறுப்பினர் பழைய நிலையை அடைந்துவிடுவார். எந்தக் கட்சியைச் சார்ந்தவராயிருப்பினும், உறுப்பினர்களிலிருந்து தலைவர்கள் அடங்கிய பட்டியலைத் தயாரிப்பதற்கு மன்றத் தலைவருக்கு அதிகாரமுண்டு. இது போற்றுதற்குரிய சிறந்த வழக்கமாகும். இதன் விளைவாக, எதிர்க் கட்சியைச் சார்ந்த ஒருசில உறுப்பினர்களும் பட்டியலில் இடம்பெறுகின்றனர்.

காரியதரிசி (செயலாளர்)

பாராளுமன்ற அவை ஒவ்வொன்றும் தனக்கெனச் செயலாண்மைத் துறைப் பணியாளர்களை அமர்த்திக்கொள்வதற்கும், அப் பணியாளரிடம் வேலை வாங்குவதற்கேற்ற சட்டதிட்டங்களை அமைத்துக்கொள்வதற்கும் அரசியலமைப்புத் திட்டம் அனுமதி வழங்குகிறது. லோகசபையின் செயலாண்மைத் துறைக்குச் செயலாளர் ஒருவர் நிலையான தலைவராக இருந்துவருகிறார். மன்றத்தின் ஆட்சிப் பொறுப்புகளையும்,பிற நிர்வாகப் பொறுப்புகளையும் மன்றத் தலைவர் சார்பில் இவர் ஏற்றுச் செயல்படுவார். மன்றத்திற்கும், அதன் கமிட்டிகளுக்கும், தலைவருக்கும், துணைத் தலைவருக்கும், பிற தனி உறுப்பினர்களுக்கும் பல வகைகளில் இவர் ஆலோசகராகப் பணியாற்றிவருகின்றார். மன்றத்தைப்

பொறுத்தவரையில், இந்திய அரசாங்க செயலாண்மைத்துறைச் சிரியல் அலுவலராக இவர் விளங்குகின்றார். பணியாற்றி வருகின்றபோது, அங்கத்தினர்களின் கட்சிச் சார்புகளைப் பற்றியோ அல்லது அவைக்குள்ளாக நிலவும் அரசியல் கருத்துப் பரிவர்த்தனைகளைப்பற்றியோ அவருக்கு ஒருசிறிதும் அக்கறை இல்லை.

**இராச்சிய சபையின் தலைவரும் உபதலைவரும்**

லோகசபைக்குத் தலைமை தாங்குபவர்களை 'ஸ்பீக்கர்' என்றும் 'துணை ஸ்பீக்கர்' என்றும் அழைப்பதுபோல, அவர்களைப் போன்று இராச்சிய சபையில் பணியாற்றிவருபவர்களைச் 'சேர்மென்' என்றும் 'உதவி சேர்மென்' என்றும் அழைக்கிறோம். இந்திய நாட்டின் உபஜனாதிபதி இராச்சிய சபையின் அலுவல் பற்றிய தலைவராவார் என்று நாம் முன்னரே குறித்துள்ளோம். இந்த முறையில் அவர் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகிறார் என்பதையும், அவரது பதவி,செல்வாக்கு ஆகியவைகளைப் பறித்து அவரை எவ்வாறு பதவிநீக்கம் செய்யலாகும் என்பதையும் முன்னர்க் கூறினோம். இராச்சிய சபையின் தலைவர் என்ற முறையில் அவரது அலுவல்களும் சலுகைகளும் மன்றத் தலைவரது (ஸ்பீக்கர்) அலுவல்களையும் பணிகளையும் ஒத்திருக்கின்றன. ஆனால், அவர் சபையின் உறுப்பினரல்லர். நெருக்கடியான சில சந்தர்ப்பங்களில் நாட்டுத் தலைவருக்குப் பதிலாக உபதலைவர் எவ்வாறு பணியாற்றுவார் என்பதையும் நாம் குறிப்பிட்டுள்ளோம். அத்தகைய சந்தர்ப்பங்களில் இராச்சிய சபைத் தலைவருக்குரிய பணிகளில் அவர் ஈடுபடுவதில்லை என்பதோடு, அதற்கான ஊதியம், படி ஆகியவைகளையும் அவர் பெறுவதில்லை.

சேர்மென் (தலைவர்) ஆஜராக இல்லாத நேரங்களில் உதவி சேர்மென், சபைக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குவார். சபையின் உறுப்பினரான அவர், அங்கத்தினர்களால் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். சபை அங்கத்தினராக இருக்கும் வாய்ப்பை இழக்கும்போது, இயற்கையாகவே அவர் தமது பதவியையும் இழந்துவிடுகிறார். தலைவருக்கு (சேர்மென்) எழுத்துமூலமாக அறிவித்து, அவர் தம் பதவியை இராஜினாமா செய்துவிடலாம். இராச்சியசபையின் தற்காலிகஅங்கத்தினர்களில் பெரும்பான்மையினர் ஒன்றுகூடித் தீர்மானமொன்றை நிறைவேற்றி அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிடலாம். உபஜனாதிபதி, ஜனாதிபதியின் அலுவல்களை ஏற்றுப் பணிபுரிகின்றபோதும், சபையின் தலைவர் (சேர்மென்) ஆஜராகவியலாத நிலை ஏற்படும் பிற சமயங்களிலும் உதவி சேர்மென், தலைவரது (சேர்மென்) எல்லா

அலுவல்களேயும் ஏற்றுப் பணிபுரியும் வாய்ப்பைப் பெறுவார். சபையின் தலைவர் என்ற முறையில் இவருக்கு முறையான ஊதியமும், அத்துடன் கூடிய படி முதலியவைகளும் அளிக்கப் படும். அவைகளைப் பாராளுமன்றம் சட்டவாயிலாக நிர்ணயித்து விடும். ராஜ்யசபைக்கும் தலைமை தாங்குவதற்கு அருகதையுள்ள வர்களின் பட்டியல் ஒன்றுண்டு. அப் பட்டியல் 'உபதலைவர் (சேர்மென்) பட்டியல்' என்றழைக்கப்படுகிறது. சேர்மென், உதவி சேர்மென் ஆகிய இருவரும் ஆஜராகவியலாத நிலை ஏற்படும்போது, சபைக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குவதற் கென்று இவர்கள் அமர்த்தப்படுகின்றனர். லோகசபையைப் போலவே இராச்சிய சபையிலுமுள்ள செயலாண்மைத்துறையின் தலைவராகச் 'செயலர்' ஒருவர் உண்டு. இவரது அலுவல்களும் லோகசபைச் செயலரின் அலுவல்களைப் போன்றவையேயாகும்.

## மத்திய அரசாங்க மன்றம்

பாராளுமன்றத்தின் 'மேல்சபையான' மத்திய அரசாங்க மன்றத்தை 'முதியோர் சபை' என்ற பெயராலும் அழைப்ப துண்டு. மேல்சபைகளை அமைப்பதைக் குறித்துக் கல்வி நிலையங் களிலும் பிற ஏடுகளிலும் குறைகள்பலஎடுத்துரைக்கப்படுகின்றன என்றாலும், நமது அரசியல் நிர்ணய சபையினர், மத்திய அரசின் பொதுத்திட்டத்தில் மத்திய அரசாங்க மன்றம் ஓர் இணைபிரியாத அங்கமாக இருக்கவேண்டுமென்பதில் கருத்து வேற்றுமைகளின்றி ஒருமுகமான முடிவையே கொண்டனர். இருந்தபோதிலும், அதை எவ்வாறு அமைப்பது, அங்கத்தினரின் மொத்த எண்ணிக் கையை எவ்வாறு முடிவுசெய்வது, அதன் பணிகள் யாவை என்ற பிரச்சினைகளைக் குறித்துக் கருத்து வேற்றுமைகள் பல நிலவி யிருந்தன. அங்கத்தினருள் ஒருவர் மன்றம் 150 உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்கவேண்டும் என்று குறிப்பிட்டார். இவ்வாறு, அவை அமைப்பதைக் குறித்துக் கருத்து வேற்றுமை கள் இருந்தன. பிரதிநிதித்துவம் அளிப்பதில் துணைநாடுகளுக்குச் சமத்துவம் வழங்கவேண்டுமென்றும் கூறினர்கள். மற்றும் பலர், அது மக்களாட்சிமுறைக்கு முரணனதென்றும், வழக்கொழிந்த ஒரு பழக்கமென்றும் கூறி அதை எதிர்த்தனர். உறுப்பினர்களை அமர்த்துவதை ஒரு சாரார் கண்டித்தனர். தொழில்வகைப் பிரதி நிதித்துவம் வேண்டுமெண்டுமென்று மற்றுமொரு சாரார் கூறி னர். மறைமுகத் தேர்தலை மற்றும் சிலர் எதிர்த்தனர். மற்றும் பலர் விகிதமுறைப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று விரும்பினர். பாராளுமன்றத்திற்கு மதியுரை வழங்குவதற்கென்று தொழில் நிபுணர்களையும் தனித்துறை அதிபர்களையும் கொண்ட சபை

யொன்றை அமைக்கவேண்டுமென்று அங்கத்தினர் ஒருவர் பிரே ரேபித்தார். இவ்வகையான ஆலோசனைகளாலும் கருத்துகளா லும் ஏராளமான திருத்தங்கள் ஏற்கப்பட்டன என்றாலும், வரை திட்டத்திலுள்ள ஷரத்துகள் யாவும் அதிக திருத்தங்களின்றி ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கின்ற முறைகளில் மட்டிலும் ஒருசில திருத்தங்கள் ஏற்பட்டன.

மன்றத்தின் உயர்ந்தபட்ச அங்கத்தினர் தொகை 250 என வரையறுக்கப்பட்டது. லோக சபைக்ென்று ஆதியில் பிரேரே பிக்கப்பட்ட அங்கத்தினர் தொகையில் இது சற்றேறக்குறைய 50 சதவீதமாகும். இதன் அமைப்பு தனிச்சிறப்பு வாய்ந்தது. சட்டமியற்றும் நிறுவனமொன்றை அமைப்பதில் பிரதிநிதித் துவ முறையின் சூத்திரங்கள் யாவையும் ஒருமுகமாகப் பயன் படுத்த மேற்கொள்ளப்பெற்ற முயற்சியென்று இதைக் குறிப் பிடலாம். துணைநாடுகளுக்குச் சமத்துவம் அளிக்கவேண்டும் என்ற அமெரிக்கக் கோட்பாடு பல கூட்டாட்சி அரசியல் திட்டங் களில் ஏற்கப்பட்டுள்ளது என்றாலும், மக்களாட்சி முறைக்கு முரணானது என்று அதை நமது தயாரிப்பாளர்கள் ஒதுக்கிவிட் டனர். அதே சமயத்தில், பெரும்பாலான அங்கத்தினர்களைத் துணைநாட்டு அசெம்பிளிகள் தேர்ந்தெடுக்கவேண்டும் என்ற கொள்கை ஏற்கப்பட்டுள்ளது. இது கூட்டாட்சி அரசியல் முறையை ஒட்டியதாகும். அங்கத்தினர் சிலரை நியமிப்பது என்ற விதியும் கடைப்பிடிக்கப்படுகிறது. இதனால், சிறந்த அறிவாளிகளும் விசேஷத் திறமை வாய்ந்தவர்களும் மன்றத்தில் இடம்பெறுவது சாத்தியமாகிறது. அத்தகைய சிறப்புப் பெற்ற வர்கள் வேறு வகையில் மன்றத்தில் இடம் பெறுவதற்கு விரும்ப மாட்டார்கள்.

மன்ற அங்கத்தினரின் தற்போதைய மொத்த எண்ணிக்கை 235 ஆகும். இவர்களில், 223 அங்கத்தினர்களைப் பல்வேறு துணை நாட்டுச் சட்டமன்றங்கள் தேர்ந்தெடுக்கின்றன. இவ்வாறு, மன்றம் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் களைக் கொண்ட நிறுவனமாகிறது. இவ்வகையான தேர்வு நடைபெறுவதன் பொருட்டு ஒவ்வொரு மாநிலத்திற்கென்றும் ஒருசில ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. மாநிலத்தின் மக்கள்தொகையை அடிப்படையாகக்கொண்டு ஸ்தானங்கள் ஒதுக்கப்படுகின்றன. இது நீங்கலாகப் பிற காரணங்களுக் கென்றும் இடங்களை ஒதுக்குவதுண்டு. போதிய மக்கள்தொகை இல்லாத சிறு நாடுகளுக்குச் சலுகைகள் அளிக்கப்பட்டிருக்கின் றன. உதாரணமாக, 63 மில்லியனுக்கும் அதிகமான மக்கள்

தொகையைக் கொண்ட உத்தரப் பிரதேசத்திற்கு 34 ஸ்தானங்களே ஒதுக்கப்பட்டுள்ளன. 9 மில்லியனுக்குச் சற்று அதிகமான மக்கள்தொகையைக் கொண்ட அஸ்ஸாமிற்கு 7 ஸ்தானங்களே அளிக்கப்பட்டிருக்கின்றன. 13·5 மில்லியன் மக்களைக்கொண்ட கேரளத்திற்கு 9 ஸ்தானங்கள் வழங்கப்பட்டிருக்கும்போது, 35 மில்லியனுக்கும் அதிகமான மக்களைக்கொண்ட ஆந்திரப் பிரதேசத்திற்கு 18 ஸ்தானங்களே வழங்கப்பட்டுள்ளன. பாரபட்சத்தை நன்கு விளக்கக்கூடிய மற்றுமொரு மேற்கோளாக டெல்லி, பீகார் ஆகியவைகளைக் கூறலாம். மூன்று மில்லியனுக்கும் குறைவான மக்கள்தொகையைக்கொண்ட டெல்லிக்கு 3 ஸ்தானங்களும் 35 மில்லியனுக்கும் அதிகமான மக்களைக் கொண்டிருந்தபோதும் பீகாருக்கு 22 ஸ்தானங்களும் வழங்கப் பட்டுள்ளன.

ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒதுக்கப்பட்டுள்ள ஸ்தானங்களைப் பூர்த்தி செய்வதற்கென்று அம் மாநிலச் சட்டமன்ற அங்கத்தினர்களடங்கிய தேர்தல் தொகுதி அமைகிறது. இவ்வாறு, பாராளுமன்றத்தின் 'மேல்சபைக்கு' மாநிலப் பிரதிநிதித்துவத் தேவை பூர்த்தி செய்யப்படுகின்றது. மாநில அசெம்பிளிகளிலிருந்து, மன்றத்திற்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு, விகிதப் பிரதிநிதித்துவ முறை கையாளப் படுகிறது. தலைக்கு ஒரு மாறிவரும் ஓட்டு என்ற முறையில் தேர்வு நடைபெறும் இரகசிய வாக்களிப்பு முறை கையாளப் படுகிறது.

திறமை, அனுபவம், சேவை ஆகியவைகளை நன்கு மதித்து, மன்றத்தில் அவைகளை இடம்பெறச் செய்திருப்பதைச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும். ஐரிஷ் குடியரசின் 'மேல்சபை' அமைப்பு ('சீனட் ஐரான்') முறை நமது திட்டத் தயாரிப்பாளர்களை மிக அதிகமாகக் கவர்ந்திருக்கிறது. இருந்தபோதிலும், தேர்ந்தெடுக்கப்படுகின்ற அங்கத்தினர் தொகையை ஒப்புநோக்கும் போது, மன்றத்திற்கு, ஜனாதிபதி அமர்த்துகின்ற அங்கத்தினர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே உள்ளது. இவ்வாறு அமர்த்தப்படுகின்ற அங்கத்தினர்களின் மொத்த எண்ணிக்கை பன்னிரண்டிற்கு மேற்படக்கூடாதெனத் திட்டம் விதிக்கிறது. இலக்கியம், விஞ்ஞானம், கலை, சமூக சேவை ஆகிய துறைகளில் தேர்ந்தவர்களையும், மிக்க அனுபவம் பெற்றவர்களையும் அவ்வாறு அமர்த்தலாம். இராச்சிய மன்றத்திற்கு மாநிலவாரியாக அளிக்கப்பெற்றிருக்கும் பிரதிநிதித்துவ விகிதங்களைக் பின்வரும் அட்டவணை நன்கு விளக்குகிறது.

## மத்திய அரசாங்க மன்றம்

| மாநிலத்தின் பெயர் | அங்கத்தினர் எண்ணிக்கை |
|---|---|
| 1. ஆந்திரப் பிரதேசம் | 18 |
| 2. அஸ்ஸாம் | 7 |
| 3. பீகார் | 22 |
| 4. குஜராத் | 11 |
| 5. ஜம்மு-காஷ்மீரம் | 4 |
| 6. கேரளம் | 9 |
| 7. மத்தியப் பிரதேசம் | 16 |
| 8. சென்னை | 17 |
| 9. மகாராஷ்டிரம் | 19 |
| 10. மைசூர் | 12 |
| 11. ஒரிசா | 10 |
| 12. பஞ்சாப் | 11 |
| 13. ராஜஸ்தானம் | 10 |
| 14. உத்தரப் பிரதேசம் | 34 |
| 15. மேற்கு வங்காளம் | 16 |
| 16. டெல்லி | 3 |
| 17. ஹிமாச்சலப் பிரதேசம் | 2 |
| 18. மணிபுரி | 1 |
| 19. திரிபுரம் | 1 |
| | 223 |

இந்திய நாட்டு மத்திய அரசாங்க மன்றம் அமெரிக்க செனெட்டைப்போல நிரந்தரமான ஒரு நிறுவனமாகும். செனெட் அங்கத்தினர்களைப்போலவே இராச்சிய சபை அங்கத்தினர்களும் ஆறு ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இரண்டாவது ஆண்டின் இறுதியில் மூன்றில் ஒரு பங்கு அங்கத்தினர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இதனால் லோகசபையைக் காட்டிலும் மன்றம் தனது அரசியல் புறத்தோற்றத்தை நன்கு பாதுகாத்துக்கொள்வதற்கு இடமேற்படுகிறது. ஒவ்வொரு தேர்தலுக்குப் பின்னும் மக்கள் சபை புதிய உருப்பெற்றுவிடுகிறது.

### இரு சபைகளுக்கும் இடையேயுள்ள உறவுமுறை

சட்டமியற்றுவதற்கு இரு சபைகளும் ஒன்றுகூடி ஈடுபடுவது மிகவும் தேவையாகும். அத்தகைய ஒத்துழைப்பு இல்லை

யெனின் சட்டமியற்ற இயலாது. இருந்தபோதிலும், மன்றத்தைக் காட்டிலும் மக்கள் சபைக்கு அரசியலமைப்புத் திட்டம் சில சிறப்புகளை வழங்கியுள்ளது. பாராளுமன்றத்திற்கும் அமைச்சர் குழுவிற்கும் இடையில் ஏற்பட்டுள்ள தொடர்பை இவற்றுள் முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். 'மேல்சபை' செயல்படுவதில் மக்கள் சபைக்குப் பொறுப்புள்ளது. இதனால், அமைச்சர்கள் தங்கள் இச்சைப்படி மன்றத்தைப் புறக்கணித்து விட இயலாது. தன்முன் எழுகின்ற அரசாங்க அலுவலர்களைப் பற்றிய பிரச்சினைகள் யாவற்றையும் குறித்த முழு விவரங்களையும் பெறுவதற்கு மன்றத்திற்கு முழு உரிமையுண்டு. ஆனால், அரசு செலுத்திவருகின்ற அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் குறித்துக் கண்டன மசோதா ஒன்றை எழுப்ப இயலாது. மக்கள் சபையின் தன்னம்பிக்கையையே பாராளுமன்றத்தின் தன்னம்பிக்கை என்று பொருள் கொள்ளவேண்டும். அதைப்போலவே, ஆட்சித் துறையினரின் பொறுப்பு என்பதற்கு, மக்கள் மன்றத்திற்கு, ஆட்சித்துறையின் பொறுப்பு எனப் பொருள் கொள்ள வேண்டும். மக்கள் சபை மிகச் செல்வாக்குப் பெற்று விளங்குவதாலேயே அதற்கு இத்துணைச் சிறப்புகள் வழங்கப்பட்டிருக்கின்றன. பாராளுமன்ற ஆட்சிமுறையைக் கடைப்பிடிக்கின்ற குடியரசில் செயல்படுகின்ற அரசாங்கம் மக்களுக்குப் பொறுப்புள்ளதாக இருக்கவேண்டும். அரசாங்கம் என்ற யந்திர அமைப்பில், ஆட்சியாளர்களை மக்களின் பேராள்களுக்குப் பொறுப்புடையவர்களாகச் செய்வதே சாத்தியமாகிறது. மக்கள் சபை ஒன்றிலேயே, மக்களால் நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப்படும் பேராள்கள் இருக்கின்றனர். காபினெட் சபையை, மக்கள் சபைக்குப் பொறுப்புடையதாகச் செய்து இவ் வழக்காற்றை ஏற்படுத்திய பெருமை கிரேட் பிரிட்டனைச் சாரும். இன்று, சட்டசபையின் உதவியுடன் செயல்பட்டுவருகின்ற நாடுகளிலெல்லாம், இந்திய நாடு உட்பட, இவ் வழக்காறு பின்பற்றப்படுகிறது.

பண மசோதாக்களைப் பொறுத்தவரையில், மன்றத்திற்குச் செல்வாக்கெதுவுமில்லை என்பதை இரண்டாவதாகக் குறிப்பிட வேண்டும். பண மசோதா ஒவ்வொன்றையும் மக்கள் சபையிலேயே பிரேரேபிக்கவேண்டும். மக்களின்மீது விதிக்கப்படுகின்ற வரி ஒவ்வொன்றிற்கும் மக்களின் ஒப்புதல் தேவையென்பது வரி விதிக்கும் இலக்கணத்தின் அடிப்படை நியதியாகும். மக்களாட்சியில், வருமானம் பெறுவதற்கும், பெற்ற வருமானத்தைச் செலவிடுவதற்கும் மக்களின் ஒப்புதல் தேவையாகும். மக்களின் கருத்தை அவர்கள் தங்கள் பேராள்களின் வாயிலாகவே வெளியிடக்கூடும். நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற பேராள்களைக் கொண்ட மக்கள் சபையே இதற்கு ஏற்றதாக விளங்குகிறது.

இவ்வாறு திட்ட அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டுள்ள வழி முறையில் மன்றத்திற்குப் பண மசோதாக்களை அலசி ஆராயும் உரிமை அடியோடு மறுக்கப்படவில்லை. அவைகளைக் குறித்து மதியுரை வழங்குகின்ற அதிகாரம் மட்டிலும் மன்றத்திற்கு வழங்கப்பட்டுள்ளது. லோக சபையினரால் அங்கீகரிக்கப்படும் பண மசோதா ஒவ்வொன்றும் மன்றத்தின் பரிசீலனைக்கென்று அனுப்பப்படும். மசோதோ வரப்பெற்ற பதினுன்கு நாள்களுக்குள்ளாக அதைக்குறித்துத் தான் விரும்புகின்ற நடவடிக்கையை மன்றம் மேற்கொள்ளவேண்டும். மன்றத்தினர் அதை அங்கீகரித்தால் மசோதா ஜனாதிபதியின் ஒப்புதல் பெறுவதற்கென்று அனுப்பிவைக்கப்படும். மன்றத்தினர் மசோதாவை ஏற்காவிடினே அல்லது அதில் மாறுதல்களேற்படுத்தினாலோ, மசோதா மீண்டும் லோகசபைக்கு அனுப்பிவைக்கப்படும். அங்கு மசோதா மீண்டும் பரிசீலிக்கப்பட்டு அங்கத்தினருள் பெரும்பான்மையினரால் ஒப்புக்கொள்ளப்பட்டால், ஜனாதிபதியின் ஒப்புதல் பெறுவதற்கு அனுப்பிவைக்கப்படும். பண விஷயங்களில் மன்றத்தினருக்கு மதியுரை வழங்கும் அதிகாரமே உள்ளதென்பதும், லோக சபையினருக்கு அவைகளைத் தீர்மானித்து முடிவுசெய்யும் உரிமையே உண்டென்பதும் நன்கு விளங்கும்.

இவை நீங்கலாக, அரசியலமைப்புத் திட்டத்தை மாற்றியமைக்கின்ற சலுகை உட்படச் சட்டமியற்றுகின்ற பிற துறைகளில் மன்றத்திற்கும் லோசபையைப்போன்ற அதிகாரமுண்டு. ஒரு மசோதாவை லோகசபையிலோ அல்லது மன்றத்திலோ துவக்கலாம். லோகசபையினர் ஏற்று அங்கீகரிக்கும் மசோதா ஒன்றில் திருத்தங்கள் செய்வதற்கோ அல்லது ஏற்காது மறுத்துவிடுவதற்கோ மன்றத்தினருக்கு உரிமையுண்டு. லோகசபையினர் மன்றத்தினரின் கருத்துகளை ஏற்க விரும்பவில்லையெனில், வேற்றுமைக்குள்ளாகிய மசோதாவைப் பரிசீலிப்பதற்கென்று இரண்டு அவையினரும் ஒன்றுகக் கூடுவார்கள். மசோதா, பரிசீலனைக்குப் பின்னர் அங்குள்ள பெரும்பான்மையினரால் ஒப்புக்கொள்ளப்பட்டுச் சட்டமாகிவிடும். லோகசபை அங்கத்தினரின் மொத்த எண்ணிக்கையைப்போல அரைமடங்கிற்கும் குறைவாகவே மன்றத்தினரின் எண்ணிக்கையுள்ளது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். எனவே, இத்தகைய கருத்து வேற்றுமைகள் தோன்றும்போது மக்கள் சபையினருக்கே வெற்றி கிடைக்கும் என்பது உறுதியாகிவிடுகிறது.[2] இரு அவைகளும் ஒன்றுகூடி விவாதித்த

[2] இவ்வாறு இதுகாறும் இரு அவைகளும் ஒரே ஒரு முறை ஒன்றுகூடின (1961). 1960ஆம் ஆண்டில் எழுந்த சீதன ஒழிப்பு மசோதாவைக்குறித்து விளைந்த கருத்து வேற்றுமைகளை ஆராய்வதற்கென்று இரு அவைகளும் ஒன்றுகூடின. ஒன்று கூடிய அவைகள் இரண்டு நாள்களாகப் பரிசீலித்து, சமரசம் ஏற்பட்ட பின்னர் மசோதா சட்டமாக்கப்பட்டது.

பின்னர், ஜனாதிபதியின் ஒப்புதல் பெறுவதற்கென்று மசோதா அனுப்பிவைக்கப்படும். இவ்வகையில், மன்றத்தைப்போன்ற அமெரிக்க நாட்டு மேல்சபையுடன் ஒப்புநோக்குகின்றபோது, இந்திய நாட்டு மன்றத்தின் செல்வாக்குச் சற்றுக் குறைவான தென்றே கூறவேண்டும். வழக்கமான சட்டமியற்றும் அதிகாரத்துடன் அலுவலர்களை அமர்த்துவதிலும், உடன்படிக்கைகளை ஏற்பதிலும் அமெரிக்க நாட்டு மேல்சபைக்கு விசேஷ அதிகாரங்கள் உண்டு. அவைகளையெல்லாம் எண்ணிப்பார்க்கும்போது, 'பிரதிநிதிகள் சபை' அல்லது 'அமெரிக்க காங்கிரசை'க்காட்டிலும் 'செனட்' மிக்க சக்தி வாய்ந்ததென்றும், உலகிலுள்ள மேல்சபைகளிலேயே மிக்க செல்வாக்குப் பெற்றிருப்பதென்றும் ஐயமின்றிக் கூறிவிடலாம். பிரபுக்கள் சபையையொட்டி அமைத்து அதிகாரத்தைப் பொறுத்தவரை மறுகோடியில் நிற்கின்ற கானடா நாட்டு செனட்டை இதற்கு எதிர்மறையாகக் குறிப்பிடலாம்.

பாகிஸ்தான் நீங்கலாக உள்ள கூட்டரசு நாடுகள் யாவும் பாராளுமன்ற அரசு முறையையே கடைப்பிடிக்கின்றன. அத்தகைய நாடுகளில் அமையப்பெற்றிருக்கின்ற மேல்சபைகள் யாவற்றிலும் ஆஸ்திரேலிய நாட்டு 'செனட்' மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்குகிறது. பிரதிநிதிகள் சபையுடன் சம அளவில் அது செல்வாக்குப் பெற்றிருக்கிறது. பண மசோதாக்களையும் ஏற்க மறுப்பதற்கு அதற்கு அதிகாரமுண்டு. இவ்வுரிமையை வற்புறுத்தி இரண்டு அவைகளையுமே கலைத்துவிடவும் கூடும். இவ்வாறு விசேடச் சலுகை பெற்றிருப்பதையோ அல்லது பிரதிநிதி சபையுடன் போட்டி மனப்பான்மையையோ ஆஸ்திரேலிய செனட் இதுவரை வெளிப்படுத்தியதில்லை.

லோக சபையைப் பொறுத்து, இந்திய நாட்டு மன்றம் பெற்றிருக்கின்ற சலுகைகளையும் உரிமைகளையும், அமெரிக்க அல்லது ஆஸ்திரேலிய நாட்டு மேல்சபைகள் பெற்றிருக்கின்ற உரிமைகளோடும் சலுகைகளோடும் ஒப்பிடுவதற்கில்லை. என்றாலும், கானடா நாட்டு செனட்டைக்காட்டிலும் நமது மன்றம் மிக்க செல்வாக்குப் பெற்றது. சில துறைகளைப் பொறுத்தமட்டில் மன்றத்தைக்காட்டிலும் லோகசபை மிக்க செல்வாக்குப் பெற்றதென்பது திட்ட அடிப்படையில் உறுதிசெய்யப்படுகின்றது. ஆனால், எல்லாத் துறைகளிலும் அத்தகைய விசேட அதிகாரம் லோகசபைக்கு வழங்கப்படவில்லை. திட்ட விதிகளின் மாற்றங்களை ஏற்படுத்துவதில் இரு அவைகளுக்கும் சமமான செல்வாக்கு உண்டென்பது குறிப்பிடத்தக்கதாகும். துணைநாடுகளின் பிரதி

நிதியாக விளங்குகின்ற மத்திய அரசாங்க மன்றம் ஒப்புக்கொண்டாலன்றி, அரசியலமைப்பில் மாற்றங்கள் ஏற்படுத்த இயலாது என்பது இதனால் உறுதியாகிறது. மன்றத்திற்கு எத்தகைய கௌரவமும் செல்வாக்கும் திட்டத் தயாரிப்பாளர்கள் வழங்கியிருக்கின்றனரென்பது இவ்வோர் ஏற்பாட்டின் வாயிலாக நன்கு விளங்குகிறது. இது நீங்கலாகப் பணவிஷயம் ஒன்றைத் தவிரச் சட்டமியற்றும் பிற துறைகளில் மன்றம், லோகசபையைப் போன்று, சமவுரிமைகள் பெற்று விளங்குகிறது.

மேலும், மன்றத்தை, மாநிலங்களின் தனியுரிமை பெற்ற பிரதிநிதித்துவம் உடையதாகச் செய்யும் இரு விதிகளும் உண்டு. இத்தகைய சலுகைகள் லோகசபைக்கு அளிக்கப்படவில்லை. அரசியலமைப்பு அடிப்படையில் இவைகளை மிக முக்கியமான அவைகளாகக் குறிப்பிடலாம். மாநிலச் சட்டமன்றப் பட்டியலில் அடங்கிய ஒரு விஷயத்தைக் குறித்து, தேச நலனை முன்னிட்டுப் பாராளுமன்றம் சட்டமியற்றவேண்டுமெனக் கூடி வாக்களிக்கின்ற மூன்றில் இரண்டு பங்கு அங்கத்தினரின் மன்றப் பெரும்பான்மையினர் வாயிலாக முடிவு செய்வதற்கு அரசியலமைப்புத் திட்ட விதி 249 அதிகாரமளிக்கிறது. இவ்வகையான தீர்மானம் நிறைவேற்றப்பட்டதும், குறிப்பிட்ட விஷயத்தைப் பொறுத்து, இந்திய நாடு முழுவதிலும், அல்லது ஒரு பகுதியில் அமல் நடத்தக்கூடிய சட்டங்களை ஓராண்டுக் காலம் உருவாக்குவதற்கான உரிமையை பாராளுமன்றம் பெற்றுவிடுகிறது.

அகில இந்திய சர்வீஸ்களை அமைப்பதில் மன்றத்திற்கு வழங்கப்பட்டுள்ள தனிச்சலுகையை இரண்டாவதாகக் குறிப்பிடவேண்டும். மத்திய அரசு, நாடுகள் ஆகிய இரண்டிற்கும் பொதுவாக அகில இந்திய சர்வீஸ் அமைந்திருப்பதைச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும். இதனால் துணைநாடுகளின் செல்வாக்கு ஓரளவு குறைந்துவிடுகிறது. அதை மனத்தில் கொண்டு அத்தகைய சர்வீஸ்களை அமைப்பதில் மன்றத்திற்கும் உரிய பங்களிக்கப்பட்டிருக்கிறது. அத்தகைய பிரச்சினைகளை முடிவு செய்வதற்கு மன்றம் ஒன்றுகூடி மூன்றில் இரண்டு பங்கு அங்கத்தினர்களின் ஒப்புதல் பெறவேண்டும். அத்தகைய சர்வீஸ்களைத் துவக்குவதற்குத் தேவையான சட்டங்களை நிறைவேற்றுவதற்கு மன்றத்தின் ஒத்துழைப்பு மிகவும் அவசியமாகிறது. இவ்விரு சந்தர்ப்பங்களிலும், மன்றம் செயல்படத் தொடங்கிய பின்னரே, லோகசபை அரங்கில் பிரவேசிக்கிறது. இரு சந்தர்ப்பங்களிலும் எத்தகைய செயல்பாடு தேவை என்பதை முடிவு செய்வதிலும் மன்றம் லோக சபையுடன் தனது செல்வாக்கைப் பகிர்ந்து கொள்வதில்லை.

மன்றத்திற்கு வழங்கப்பட்டிருக்கின்ற இவ்வகையான சலுகைகளால் அரசாங்கத்திற்கு முக்கியமானதோர் உறுப்பாக மன்றம் விளங்குகிறது. தேவையற்றதோர் இணைப்பாகவோ, அல்லது அலங்காரச் சின்னமாகவோ, அது இடம்பெற்றிருக்கவில்லை. கீழ்ப்படிதலிலுள்ள மதியாலோசகராக விளங்கவேண்டுமென்று அதை உருவாக்கவில்லை. ஒவ்வொரு சமயத்தில் சிந்தனையற்ற சட்டமியற்றுவதைக் கண்காணிப்பதற்கென்றும் அதை நிறுவவில்லை. ஒப்புநோக்கும்போது, உருவத்தில் சிறியதாகத் தோற்றமளித்தாலும், ஒற்றுமையாகச் செயல்படுவதற்கு ஏற்ற வடிவமுடைய அச் சபை நிலையானதாகும். சிந்தனை, செயல் ஆகிய இரண்டும் தொடர்ச்சியாகவும் நிரந்தரமாகவும் நடைபெறுவதற்கு ஓரளவு இம் மன்றம் உதவுகிறது. மனத்தில் 'முதிய ராஜதந்திரிகள்' பலர் இடம் பெற்றிருக்கின்றனர். பரந்த நாட்டின் பல பகுதிகளின் பேராள்கள் அதில் இடம் பெற்றிருக்கின்றனர். இக் குணதிசயங்களைக் கொண்டிருக்கும் அச் சபை, நாளடை.வில் மிகுந்த கௌரவத்தைப் பெற்றுவிடுமென்பதோடு, லோக்சபையுடன் ஒப்பிடத்தக்கதாக வளர இயலாதெனினும், மிக்க செல்வாக்குடையதாகவும் பயனுள்ளதாகவும் விளங்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## செயல்முறைகள்

ஒவ்வொரு சபையிலும் அங்கத்தினர்கள் அடங்கிய பட்டியல் ஒன்று உண்டு. தன் இருக்கையிலமருவதற்கு முன்பாக, ஒவ்வோர் அங்கத்தினரும் பட்டியலில் கையெழுத்துச் செய்கிறார். தனது இடத்தை ஏற்பதற்குமுன் ஒவ்வோர் அங்கத்தினரும் விசுவாசப் பிரமாணம் அல்லது உறுதிப்பாடு எடுத்துக்கொள்ளவேண்டும்; அல்லது அதற்கு ஒப்புக்கொடுக்க வேண்டும். மன்றத் தலைவர், அல்லது உரிய தலைவர் ஒருவர் தலைமை தாங்கி, மொத்த உறுப்பினருள் பத்தில் ஒரு பகுதி கூடியிருந்தால் மன்றம் செயல்படத் தொடங்கும். ஏதேனுமொரு சந்தர்ப்பத்தில் அங்கத்தினரின் மொத்த எண்ணிக்கை விதிக்கப்பெற்றிருக்கும் குறைவெண்ணிற்கும் குறைவாக இருந்தால், தலைமை தாங்குபவர் அலுவல்களை ஒத்திவைப்பார் அல்லது அவையைக் கலைத்துவிடுவார். சாதாரணமாக, ஆஜராகி வாக்களிக்கின்ற அங்கத்தினர்களில் பெரும்பான்மையினரின் ஆதரவைக்கொண்டே பிரச்சினைகள் முடிவுயெய்யப்படுகின்றன. பிரச்சினைகளை முறையே, ஏற்றும் மறுத்தும் வாக்களிக்கின்ற அங்கத்தினர்களின் மொத்த எண்ணிக்கை சமமாக இருக்கும் நேரங்களில்மட்டிலுமே தலைவர் ஓட்டளிப்பதுண்டு.

ஒவ்வொரு கூட்டத்தின் தொடக்கத்திலும், பராளுமன்றப் பிரச்சினைகளுக்கென்றும் வினுக்களுக்கென்றும் ஒரு மணி நேரம் செலவிடப்படுகிறது. இந் நேரத்தில் அவையில் உற்சாகம் மிகுதியாகக் காணப்படும். செய்திகளை அறிந்துகொள்வதும், பொது நலனைப் பொறுத்த விஷயங்களில் கவனத்தை ஈர்ப்பதும் வினுக்களின் முக்கிய நோக்கங்களாக இருந்துவருகின்றன. வினுக்களை அனுமதிப்பதற்கென்று தெளிவான அடிப்படை விதிகள் வகுக்கப் பெற்றிருக்கின்றன. இந்த முறையில் மன்றத் தலைவரின் தீர்ப்பு இறுதியானதாகும். வழக்கமாக, ஒவ்வொரு வினுவையும், மன்றம் கூடுவதற்குப் பல நாள்களுக்கு முன்னதாகவே அனுப்பி விடுவது வழக்கம். வினுவையொட்டிய செய்திகள் யாவற்றையும் திரட்டியளிப்பதற்கு, குறிப்பிட்ட துறையினருக்கு இதனுல் போதிய அவகாசம் கிடைக்கிறது. தொடர்புடைய செய்தி விவரங்கள் யாவும் மன்றத்திற்கு அனுப்பிவைக்கப்படுகின்றன. சில விசேட சந்தர்ப்பங்களில், முன்னறிக்கை இல்லாது வினுக்களை அனுமதிப்பதற்கும் அனுமதி வழங்கலாம்.

வினுக்களுக்கென்று ஒதுக்கப்பெற்றிருக்கும் நேரம் முடிந்தவுடன், குறிப்பிட்ட நாளில் நடைபெறவேண்டிய வேலைகளை மன்றம் ஒவ்வொன்ருகக் கவனிக்கத் தொடங்கும். அலுவல்கள் பல்வகையானவை—எனவே, ஒவ்வொரு வகை அலுவலையும் கவனிப்பதற்கென்று வெவ்வேறு விதமான வழிமுறைகள் வகுக்கப் பெற்றிருக்கின்றன. இவ் வகையைச் சார்ந்த ஒத்திவைப்பிற்கான பிரேரேபணைகள், தீர்மானங்கள், நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள், விவாதத்திற்குரிய பிரேரேபணைகள், சட்டமியற்றும் அலுவல், நிதித்துறையைச் சார்ந்த அலுவல் ஆகியவைகளைச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும். அவ்வப்போது அமைச்சர்கள் வெளியிடும் நடைமுறையைப்பற்றிய கருத்துகள், விசேடப் பத்திரங்களையும், பிற அரசாங்க உத்தரவுகளையும் பரிசீலித்தல் என்ற பிறவகையான அலுவல்களும் கவனிக்கப்படுகின்றன. பின் கூறிய அலுவலைக் கவனிக்கும்போது, அமைச்சர் தமது இருக்கையிலிருந்து எழுந்து, பரிசீலனைக்கென்று வைக்கப்பட்டிருக்கும் பத்திரத்தை அவையினரின் கவனத்திற்குக் கொண்டுவருவார்.

பிரேரேபணைகளை அபூர்வமாக ஒத்திவைப்பதுண்டு; திடீரென எழுகின்ற முக்கியமான சமுதாயப் பிரச்சினைகளைக்குறித்து மன்றத்தில் கவனத்தை ஈர்ப்பதற்கென்று பிரேரேபணைகளை ஒத்திவைப்பதற்கான கோரிக்கைகள் அனுமதிக்கப்படுகின்றன. அத்தகைய பிரச்சினைகளுக்கு உடனடியாக நிவாரணம் தேடவேண்டியிருக்கும். சமுதாய முக்கியத்துவம் வாய்ந்த அண்மையில் நடந்த ஏதாவதொரு சம்பவத்தை அப் பிரேரேபணை குறிப்ப

தாக இருக்கவேண்டும். அரசாங்கத்தின் செயல் அல்லது செயலின்மை ஆகியவைகளைப் பொறுத்து மன்றத்தினரின் கவனத்தை அப் பிரேரேபணை கவருவதாக இருக்கவேண்டும். எழுகின்ற சமுதாயத் தேவையைப் பூர்த்தி செய்கின்ற வகையில் அரசாங்கம் செயல்படவேண்டுமென்றும், அவ்வாறில்லையேல் மன்றத்தினரின் நம்பிக்கையை இழக்கவேண்டியிருக்குமெனவும் அப் பிரேரேபணை வற்புறுத்துவதாக இருக்கவேண்டும்.

ஏதாவதொரு பிரச்சினையைக் குறித்து மன்றம் கொண்டிருக்கும் கருத்தை வெளியிடுவதற்குத் 'தீர்மானம்' என்று பெயர். 'தீர்மானம்' குறிப்பிட்டதொரு விஷயத்தையே கூறுவதாக இருக்கவேண்டும். கருத்தைத் தெளிவாக ஐயமற்ற வகையில் எடுத்துரைக்க வேண்டும். விவாதங்கள், ஊகங்கள், பழிச்சொற்கள் ஆகியவைகளுக்குத் தீர்மானத்தில் இடமில்லை. சமுதாய ஊழியர், அல்லது அரசாங்க ஊழியர் என்ற அடிப்படையிலன்றிப் பிற வகைகளில் தனி நபர்களைக் குறித்த கருத்துகள் தீர்மானத்தில் இடம்பெறுவது கூடாது.

நம்பிக்கையில்லாத் தீர்மானம், கண்டன மசோதாக்கள் ஆகியவை மிக்க அபூர்வமாகக் கையாளப்படுகின்றன. செயல்படுகின்ற அமைச்சவையின்மீது நம்பிக்கைக் குறைவேற்படும் போது, கண்டன மசோதா எழுவதற்கு இடம் ஏற்படுகிறது. மன்ற உறுப்பினர்களில் குறைந்த அளவில் 50 சதவிகிதத்தினரின் ஆதரவு பெற்ற மசோதாக்களுக்கே அனுமதி வழங்கப்படும். மசோதா அனுமதிக்கப்படுமேயேனில், விவாதத்திற்கு என்று நாளொன்றும் குறிப்பிடப்படும். இதற்கென்று ஓரிரு நாள்களை மன்றத் தலைவர் ஒதுக்குவார். அமைச்சவையைப் பதவியிழக்கச் செய்யலாம் என்ற துணிவு எதிர்க்கட்சியினருக்கு ஏற்பட்டாலன்றிச் சாதாரணமாக நம்பிக்கையில்லாத் தீர்மானம் எழுவதில்லை. சில சமயங்களில் செயல்படுகின்ற அமைச்சவைக்கு மதிப்புக் குறைவு ஏற்படவேண்டுமென்றோ அல்லது அவ் அமைச்சவையின் தவறுகள் யாவற்றையும் விளம்பரம் செய்து, பொதுமக்களின் கவனத்தை ஈர்த்து, அவையின் கௌரவத்தைக் குறைக்க வேண்டுமென்றோ நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை ஓர் அரசியல் கருவியாகவும் உபயோகிப்பதுண்டு. இந்தியப் பாராளுமன்ற வரலாற்றில் இதுகாறும் அரசாங்கத்திற்கெதிரான கண்டன மசோதா ஒன்று எழுந்ததில்லை.

நடவடிக்கைகளுக்கான விதிகளுக்கிணங்க, அங்கத்தினர் ஒருவர் மன்றத் தலைவரின் சம்மதம் பெற்று, பொதுஜன நலனைக் குறித்த பிரேரேபணை ஒன்றை விவாதத்திற்கென்று தொடங்

கலாம். அனுமதி பெற்றால், அதற்கென ஓரிரண்டு நாள்களை மன்றத் தலைவர் ஒதுக்குவார். குறித்த நேரத்தில் மன்றம் கூடும்போது, போதிய அவகாசமிருந்தால், இப் பிரேரேபணைகள் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும். மிகவும் முக்கியப் பிரச்சினையாக இருந்தால், தன்மையைக் கருதி அரசாங்கமே அத்தகைய பிரேரேபணைகளை மன்றத்தின்முன் கொண்டுவரக் கூடும். பாராளுமன்ற அலுவல்கள் அல்லது சட்டமியற்றுவதற்கான ஆலோசனைகள் என்ற தலைப்புகளின்கீழ் இடம்பெறாத முக்கியப் பொதுநலப் பிரச்சினைகளை மன்றத்தின் கவனத்திற்குக் கொண்டுவருவதற்கு இது அங்கத்தினர்களுக்கும் அரசாங்கத்திற்கும் நல்வாய்ப்பு அளிக்கிறது.

ஒரு பிரச்சினையைக் குறித்த விவாதத்தை முடிப்பதற்கென்றும் முடிவுகட்டும் பிரேரேபணையைத் தொடங்கலாம். மன்றத்தின் உறுப்பினர் ஒருவர் இப் பிரேரேபணையைத் தொடங்கலாம். மன்றம் அதை ஏற்றுக்கொண்டால், விவாதத்தை உடனே முடித்து, இப்பிரச்சினைக்கு முடிவுகட்டுவதற்கான ஓட்டளிப்புத் துவங்கிவிடும். சில சந்தர்ப்பங்களில், ஒரு பிரச்சினையின் விவாதத்திற்கென்று ஒதுக்கப்பட்டுள்ள நேரம் பிரச்சினையைக் குறித்த முழு ஆராய்ச்சிக்குப் போதிய அவகாசமின்றி முடிந்துவிடும். அந் நேரத்திலும் பிரேரேபணையைக் குறித்து வாக்கெடுப்பு நடைபெறும். மேலும், தொடர்ந்த விவாதமின்றிப் பிரச்சினையின் எஞ்சியிருக்கின்ற ஷரத்துகளைப் பொறுத்து வாக்கெடுப்பு நடைபெறும். இம் முறையைக் 'கில்லட்டீன்' என்று வர்ணிப்பதுண்டு.

மன்றத்தின் ஒவ்வொரு செயலையும் உள்ளடக்கிச் செயல்பாட்டு முறையைக் கட்டுப்படுத்தும் 389 விதிகள் தற்போது காணப்படுகின்றன. 'மன்றத் தலைவரின் வழிகாட்டு முறைகள்' இவைகளுக்குத் துணைசெய்கின்றன. அத்தகைய வழிகாட்டுமுறைகள் 123ஐயும் வகைப்படுத்தி, அங்கத்தினர், மற்றும் பிறரின் உபயோகத்திற்கெனத் தொகுத்தளித்திருக்கின்றனர். இவை யாவும், ஒருங்கே இன்று இந்தியப் பாராளுமன்றச் செயல்பாட்டு விதிகளாக விளங்கிவருகின்றன. பாராளுமன்றம் அமைதியாகச் செயல்படுவதற்கு இவை உதவுகின்றன. ஆனால், இவைகளை அறிவதால்மட்டிலும் நாம் முழு விவரங்களையும் கண்டுகொள்ள இயலாது. தலைமை அலுவலர்களின் முடிவுகளையும், வழக்காறு, மற்றும் முன்னோடியான பழக்கங்களையும் இத்துடன் நாம் அறிந்துகொள்ளவேண்டும். இவை யாவும், கணிசமான அளவில், பாராளுமன்றம் நன்முறையில் செயல்படுவதற்கு உறுதுணைகளாக விளங்குகின்றன.

# 21. சட்டமியற்றுவதற்கான முறை

சட்டமியற்றுவது பாராளுமன்றத்தின் முக்கியக் கடமையாகும். வரலாற்று அடிப்படையிலும் சட்டமியற்றுகின்ற பணியை மேற்கொண்டதாலேயே, அரசாங்கத்தின் தனியொரு துறையாகச் சட்டமன்றம் விளங்கலாயிற்று. நவீன அரசாங்கத்தின் பணிகள் பல்வகையாகப் பெருகிவிட்டதால், பாராளுமன்றம் வகை வகையான அலுவல்களை மேற்கொள்ள நேரிட்டது. இருந்த போதிலும், சட்டமியற்றுவதொன்றே அதன் தலையாய கடமையாக இருந்துவருகிறது. வேறு எந்த வகையான அலுவல்களில் ஈடுபட்டிருந்தாலும், சட்டமியற்றும் பணியில் ஈடுபடாத பாராளுமன்றம் தனது உண்மையான மதிப்பைப் பெறமுடியாது.

கடந்த கால அனுபவத்தில் ஆழ்ந்திருக்க வேண்டுமென்றாலும், சட்டமியற்றுபவர் எதிர்காலத்தை நினைவில் கொண்டிருக்க வேண்டும். தாமியற்றும் சட்டங்கள் சூழ்நிலைகளுக்கும் விதிமுறைகளுக்கும் பொருத்தமுடையவையாகுமா என்பதை அவர் சிந்தனை செய்யவேண்டும். நவீன காலச் சமுதாய வாழ்க்கையில் சிக்கல்கள் நிறைந்துவிட்டன. அச் சமுதாய ஆட்சிக்கென்றே விளைகின்ற சட்டங்களும் அவ்வாறே மிக நுணுக்கமானவைகளாகின்றன. சட்டமியற்றுவதும் கடின முயற்சியாகிவிடுகிறது. இந்திய அரசியலமைப்புத் திட்டம் சட்டமியற்றுவதற்கென்று அமைத்திருக்கும் விதிகளை ஆராய்வதால் இந் நிலை மிகவும் தெளிவுபெறும்.

சட்டமியற்றுவதன் முதற் படியாக, நிறைவேற்றப்படவிருக்கும் சட்டத்தின் ஷரத்துக்களை உள்ளடக்கிய மசோதா ஒன்று அறிமுகப்படுத்தப்படும். 'நோக்கங்களும் காரணங்களும் கொண்ட அறிக்கை ஒன்றும் துணையாகச் சமர்ப்பிக்கப்படும். தனி உறுப்பினர் ஒருவர், மசோதா ஒன்றை அறிமுகப்படுத்த விரும்பினால், தமது கருத்தை அறிவித்து அனுமதி கோரி மன்றத்

தலைவருக்கு அறிவிக்கவேண்டும். மன்றத்தில் அறிமுகமாகும் மசோதா ஒவ்வொன்றும் கெஜெட்டில் பிரசுரிக்கப்படவேண்டும். மன்றத்தில் அறிமுகமாவதற்கு முன்பே தலைவரின் அனுமதி யுடன் மசோதாவைப் பிரசுரிப்பதற்கும் வகையுண்டு. சாதாரண மாக, மசோதா அறிமுகமாகும்போது அதைக்குறித்த விவாதம் நடைபெறுவதில்லை. மசோதாவை அறிமுகப்படுத்துவதற்கு அனுமதி பெறுபவர் விரும்புவாரேயெனில், அம் மசோதாவின் குறிக்கோள்களையும் நோக்கங்களையும் பொதுவாகக் குறிப்பிட்டுச் சிறு விளக்கமொன்றைக் கூறலாம். ஆனால், மசோதா அறிமுகத் திற்கே எதிர்ப்பு இருக்குமெனில், எதிர்க்கும் அங்கத்தினருள் ஒருவரை எதிர்ப்பிற்கான காரணங்களை எடுத்துரைக்குமாறு தலைவர் அனுமதிப்பார். அதன்பிறகு அனுமதிப் பிரச்சினையைக் குறித்து வாக்களிப்பு நடைபெறும். மசோதா அறிமுகத்தை மன்றம் ஏற்பதற்குத் தயாரானவுடன், மசோதா தனது பிரயா ணத்தின் அடுத்த நிலையை அடைகிறது. இவ்வாறு, மசோதா அறிமுகமாவதை, அம் மசோதாவைக் குறித்த முதல் பரிசீலனை என்றும் கொள்வதுண்டு.

மசோதா, சட்டமாக மாறுகின்ற இரண்டாவது நிலையில் எதிர்மறையான நான்கு வகையான செயல்பாட்டு முறைகளைக் கடைப்பிடிக்கலாம். ஆய்வுக்கென்று மசோதாவை எடுத்துக் கொள்ளலாம்; மன்ற உறுப்பினரடங்கிய பொறுக்குக் கமிட்டி (குழு)யினரின் பார்வைக்கு அனுப்பிவைக்கலாம்; இரு சபைகளும் அடங்கிய கமிட்டியின் பரிசீலனைக்கு அனுப்பிவைக்கலாம்; அல்லது மசோதாவைக் குறித்துப் பொதுமக்களின் எண்ணக் கருத்துகளை அறிந்துகொள்வதற்கென்று சுற்றறிக்கைகளும் வெளியிடலாம். மேற்கொள்ளப்படவிருக்கும் சட்டமொன்று பொதுமக்களிடையில் கருத்து வேறுபாடுகளை ஏற்படுத்தக் கூடியதாகவோ, அல்லது மனக்கிளர்ச்சி உண்டுபண்ணக்கூடிய தாகவோ இருக்குமெனில், நாம் இறுதியாகக் கூறியிருக்கின்ற முறையை அநேகமாகக் கடைப்பிடிப்பதுண்டு. ஆனால், சில மசோதாக்கள் எளிமையானவையாகவும், முறையான விஷயங் களைப் பொறுத்தும் இருக்கக்கூடும். மற்றும் சில உடனடியாக நிறைவேற்றப்படவேண்டியவைகளாகவும் இருக்கலாம்; அவை களை நிறைவேற்றுவதில் காலம் கடத்துவதென்பது இயலாததாக வுமிருக்கலாம். அவைகளைப் பொறுத்தமட்டில் நாம் கூறிய முதல் மூன்று முறைகளில் ஏதாவதொன்றைக் கடைப் பிடிக்கலாம்.

பொக்றுகுக் கமிட்டி அல்லது கூட்டுக் கமிட்டி, தனது கருத்துகளடங்கிய யாதாஸ்தைக் குறிப்பிட்டதொரு நாளுக்குள்

ளாகச் சமர்ப்பித்துவிடவேண்டும். குறிப்பிட்ட துறையில் அதிக அனுபவம் உள்ளவர்களையும், விசேஷ அறிவு படைத்தவர்களையும் பொறுக்குக் கமிட்டியின் அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுப்பது வழக்கம். சாதாரணமாக, மசோதாவை அறிமுகப்படுத்துபவரே, பொறுக்குக் கமிட்டியின் அங்கத்தினராக வேண்டியவர்களின் பெயர்களைக் குறிப்பிடுவார். மன்றம் அவர்களை ஏற்றுக் கொள்ளும். எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பொறுக்குக் கமிட்டியில் தாராளமாக இடம் பெற்றிருப்பார்கள். கூட்டுக் கமிட்டி அமைக்கவேண்டுமெனில், மற்ற சபையின் ஒப்புதலையும் பெற வேண்டும். கூட்டுக் கமிட்டியில் இடம் பெறுகின்ற மொத்த அங்கத்தினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினர் லோகசபையைச் சார்ந்தவர்களாகவும், மூன்றில் ஒரு பகுதியினர் ராஜ்ய சபையைச் சார்ந்தவர்களாகவுமிருப்பார்கள். கமிட்டியினர் ஏகமனதாக அறிக்கையைச் சமர்ப்பிக்கலாம்; அல்லது பெரும்பான்மையினரின் அனுமதி பெற்று அறிக்கையைச் சமர்ப்பிக்கலாம். பிற்கூறிய வகையைச் சார்ந்த அறிக்கையாக இருந்தால், சிறுபான்மையினரான அங்கத்தினர்கள் 'மாறுபாட்டுக் குறிப்பு' (Minute of Dissent) ஒன்றைச் சமர்ப்பிக்கலாம். இவ்வாறு கமிட்டியினர் அறிக்கை சமர்ப்பிப்பதை, மசோதா சட்டமாக மாறுவதன் மூன்றாவது நிலையாகக் குறிப்பிடலாம். இந்த நிலையில் மன்ற உறுப்பினர்கள், மசோதாவின் வெவ்வேறு ஷரத்துகளைக் குறித்துச் சீர்திருத்தங்களை அனுப்பி வைக்கலாம்.

கமிட்டியின் அறிக்கையைப் பரிசீலித்து, கமிட்டியினரால் அங்கீகரிக்கப்பெற்ற மசோதாவை அனுமதிக்கலாமென்ற முடிவெய்தியபின், நான்காவது நிலையை மசோதா எய்துகிறதென்று கூறலாம். இந் நிலையில், மசோதாவின் ஒவ்வொரு வரியும் நுணுக்கமான ஆராய்ச்சிக்குட்படுத்தப்படும். ஒவ்வொரு ஷரத்தையும் மன்றம் பரிசீலிக்கின்றபோது, தேவையான திருத்தங்களும் பிரேரேபிக்கப்படுகின்றன. அவைகளைப் பரிசிலித்து முடிவு கட்டுவார்கள். மன்றத்தில் பிரேரேபிக்கப்படுகின்ற திருத்தங்கள் யாவும் முன்னதாகவே, செயலாண்மைத் துறையினரால் பரிசீலிக்கப்பட்டவைகளேயாகும். திருத்தங்கள், மசோதாவை ஒட்டியவைகளாகவும் அதன் வரம்பிற்குட்பட்டவைகளாகவும், அனுமதிக்கப்படுவதற்கென்று அமைந்திருக்கும் விதிகளுக்குட்பட்டவைகளாகவும் இருக்கின்றனவா என்பவைகளைச் செயலாண்மைத் துறை பரிசீலித்துவிடும். இந் நிலையில், தேவையான பல திருத்தங்கள் புகுத்தப்பட்டு, மசோதா பலத்த மாறுதல்களுக்குட்பட்டுவிடும். இயற்கையாகவே, இம் மாறுதல்களேற்படுவதற்கும் அதிக நேரம் பிடிக்கிறது. ஷரத்துகள்

ஒவ்வொன்றையும் முறையாக ஆராய்ந்த பின்னர், அவைகளைப் பொறுத்து வாக்களிப்பு நடைபெறும். இவ்வாறு மசோதாவின் இரண்டாம் பரிசீலனை நடைபெறுகிறது.

இதையடுத்து, மசோதாவைப் பிரேரேபித்த அங்கத்தினர் 'மசோதா சட்டமாக ஏற்கப்படவேண்டும்' என்று கோருவார். இவ்வாறு, மசோதாவின் மூன்ருவது பரிசீலனை தொடங்குகிறது. மசோதாவைச் சட்டமாக ஏற்பதற்கான கோரிக்கையை, இரண்டாம் பரிசீலனையை அடுத்து அல்லது பிறிதொரு நாளில் சமர்ப்பிக்கலாம். மிக நெருக்கடியான நிலையிருந்தாலன்றி, மூன்ருவது முறையாகப் பரிசீலனையைத் தொடங்குவதற்குமுன் இரண்டாவது பரிசீலனைக்குப்பின் ஏற்கப்பெற்ற திருத்தங்களோடிகூடிய மசோதாவை நன்கு ஆராய்வதற்கு அங்கத்தினர்களுக்குப் போதிய அவகாசம் அளிக்கப்படுகிறது. மசோதாவை மூன்ருவது முறையாகப் பரிசீலிக்கும்போது, பொதுவாக, வாசகங்களைப்பற்றிய சாதாரண சிறு திருத்தங்களே பிரேரேபிக்கப் படுகின்றன. இதனுல், விவாதம் குறுகிய அளவில் நடைபெறுகிறது; அலுவல்கள் விரைவாக நடைபெறுகின்றன. திருத்தங்களைக் குறித்து ஒரு முடிவு எய்தி பின்னர், இறுதியாக மசோதா முழுவதும் நிறைவேற்றப்படுகிறது. இவ்வாறு, ஒரு சபையில், மசோதாவைப் பொறுத்துள்ள சடங்குகள் யாவும் மேற்கொள்ளப்பட்டபின், மறுசபையினரின் பரிசீலனைக்கென்று மசோதா அனுப்பிவைக்கப்படும்.

மறு சபையினர் மசோதாவைப் பரிசீலிக்கத் தொடங்குவதை ஆருவது நிலையென்று கூறலாம். இச் சபையிலும், மசோதாவைப் பொறுத்து, முன்னரே நிறைவேற்றப்பட்ட சடங்குகள் யாவும் மீண்டுமொரு முறை மேற்கொள்ளப்படுகின்றன. தற்போது அவை மூன்று வகைகளில் செயல்படக்கூடும். மசோதாவைத் தொடங்கிவைத்த சபை, எந் நிலையில் மசோதாவை அனுப்பிவைத்ததோ,அவ்வாறே அதை ஏற்கலாம், மசோதாவில் மீண்டும் திருத்தங்களை ஏற்படுத்தலாம் அல்லது மசோதாவைத் தள்ளிவிடலாம். பின் கூறிய இரு வழிகளைக் கடைப்பிடிப்பதானுல், மசோதாவை மீண்டும் தொடங்கிய சபையினருக்கே அனுப்பிவைப்பார்கள்; அல்லது மசோதாவைப் பெற்ற தேதியிலிருந்து ஆறு மாத காலத்திற்கு மீண்டும் அனுப்பாமலும் இருந்துவிடக்கூடும். இவ் வழியைக் கடைப்பிடித்தாலும், மசோதாவைத் தள்ளிவிட்டதாகவே பொருள்படும்.

வாபஸ் பெற்ற மசோதாவை, அடுத்த அவையினர் அளித்துள்ள குறிப்புகளுடன் மசோதாவைத் துவக்கிய அவை பரிசீலிப்

பதை, மசோதா சட்டமாக மாறுவதன் ஏழாவது நிலையாகக் கூறலாம். திருத்தங்களை ஏற்றுக்கொண்டால், தனது முடிவை அடுத்த அவைக்கு அறிவித்துவிடுவது வழக்கம். திருத்தங்களை ஏற்காவிட்டாலும் அவ்வாறான தங்கள் முடிவைக் குறித்தும் அடுத்த அவைக்கு அறிவித்துவிடுவது வழக்கம். இவ்வாறு, அங்குமிங்குமாக மசோதாவை அனுப்பிய பின்னரும் இரு அவைகளும் கூடி ஒரு முடிவிற்கு வர இயலவில்லையென்றால், ஜனாதிபதி இரு அவைகளையும் ஒன்றுகூட்டுவதொன்றே மேற்கொள்ளக்கூடிய உரிய வழியாகும். அக் கூட்டத்தில் பிரசன்னமாயிருந்து வாக்களிக்கின்ற பெரும்பான்மையினரின் ஆதரவு பெற்று சர்ச்சைக்குரிய மசோதாவின் ஷரத்து ஏற்கப்படும் அல்லது தள்ளிவிடப்படும்.

இவ்வாறு இரு சபையினராலும் அங்கீகரிக்கப்பட்ட மசோதா, இறுதியாக மன்றத் தலைவரின் கையெழுத்துடன் ஜனாதிபதியின் ஒப்புதல் பெறுவதற்காக அனுப்பிவைக்கப்படும். சாதாரணமாக, இதை மசோதாவின் பிரயாணத்தில் இறுதிக் கட்டமாகக் கருதலாம். ஜனாதிபதியின் ஒப்புதலையும் பெற்றுவிட்டால், மசோதா, சட்டத்தின் அந்தஸ்து பெற்றுச் சட்டப் புத்தகத்தில் இடம்பெற்றுவிடும். ஆனால், இந்த இறுதிக் கட்டத்திலும் மசோதா சட்டமாக மாறுவதைத் தடுத்துவிடலாம். நாம் முன்னரே கண்டுள்ளவாறு, மனமில்லையேல் தலைவர் தன்னிடம் அனுப்பிவைக்கப்படும் மசோதாவிற்கு ஒப்புதலளிக்க மறுத்துவிடக்கூடும். மசோதாவைப் புனராலோசனை செய்வதற்கென்று அவர் பாராளுமன்றத்திற்கே திருப்பி அனுப்பவும் கூடும். மீண்டும் உரிய சடங்குகள் யாவற்றையும்கடைப்பிடிக்கவேண்டும். திருத்தங்களுடனோ அல்லது திருத்தங்களின்றியோ இரண்டாவது முறையாக மசோதா ஜனாதிபதிக்கு அனுப்பி வைக்கப்படும். இந் நிலையில் ஒப்புதலளிக்க ஜனாதிபதி மறுக்கக்கூடாது. இவ்வாறு, சமீப காலங்களில் ஒரு மசோதா சட்டமாவதற்கு எத்தகைய விரிவான வழிமுறைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன என்பதும், எத்துணைக் காலம் பிடிக்கிறதென்பதும், மிகக்குறுகிய காலத்தில் ஒரு மசோதாவை அங்கீகரிப்பது எத்துணைக் கடினமானது என்பதும் நன்கு விளங்குகின்றன. ஆண்டுதோறும் பாராளுமன்றம் இயற்றுகின்ற சட்டங்களை ஒருவன் எண்ணிப் பார்த்தால், இவ் அலுவலின் பரிமாணம் மிக நன்றாக விளங்கும். சட்டத்தைச் சிறப்பாக வரையவேண்டிய தேவையும், அது திறமைமிக்க நுண்ணிய வேலை என்பதும் இதிலிருந்து நன்கு தெரியவரும். மொழி, இலக்கணம், பொருளடக்கம், ஷரத்துகளை வரிசைப்படுத்தி எண்களை அளிப்பது, மொழியிலக்கணக் குறிகள்

ஆகிய சாதாரண விஷயங்களைக் குறித்துத் தேவையற்ற விவாதங்களைத் தவிர்க்கலாம். துவக்கிவைக்கின்றபோதே மசோதாவை நன்கு வரைந்துவிட்டால், அதிக விவாதமின்றிச் சுலபமாக அது அங்கீகாரம் பெற்றுவிடும். அம் மசோதாவை அவையில் எடுத்துரைக்கின்றபோதும் சாதுரியமாக நடந்துகொண்டால்,வெற்றிகரமாகவும் அதிக எதிர்ப்பின்றியும் சட்டம் இயற்றும் வேலை நடைபெறும். அவ்வாறு நடந்துகொள்வதால் மசோதாவிற்கு அங்கத்தினர்கள் பெரும்பான்மையினரின் ஆதரவை, அதிலும் குறிப்பாக எதிர்க்கட்சியினரின் ஆதரவைச் சுலபத்தில் பெற்றுவிடலாம்.

## நிதிபற்றிய நடைமுறை

பொறுப்புமிக்க அரசாங்கம் நடைபெறும்போது, மக்களின் சம்மதத்துடன் பொதுநிதி திரட்டுவதும், அவ்வாறு திரட்டப்பெறும் தேசிய வருவாயை அவ்வரசாங்கம் செலவு செய்வதைக் கண்காணித்துக் கட்டுப்படுத்துவதும் பாராளுமன்றத்தின் மறுக்கவியலாத உண்மைகளாகும். பொதுநிதி இயலுக்கு வழிகாட்டியாக விதிகளை அமைக்கும்போதும், நிதியைப் பொறுத்த அரசாங்க நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதற்கென்று விதி வகுக்கும்போதும், நாம் மேற்கூறிய அடிப்படைக் கருத்துகளைத் திட்டத்தயாரிப்பாளர்கள் மனத்தில்கொண்டிருந்திருக்கின்றனர். நிதித்துறை நிர்வாகத்தைப் பொறுத்து அரசியல் திட்டம் எடுத்துரைக்கின்ற ஆதார விதிகள் வருமாறு: (1) சட்டத்தின் அனுமதியின்றி எவ்வகையான வரிவிதிப்பும் இருக்கக்கூடாது. மக்களிடமிருந்து ஏதாவது வரி வசூலிக்கவேண்டுமென்றால் சட்டம் அதை அனுமதிக்கவேண்டும். (2) பாராளுமன்றத்தின் ஒப்புதலின்றி எவ்வகையிலும் செலவுகளேற்படக்கூடாது. செலவு செய்வதற்கான அதிகாரம், பாராளுமன்றச் சட்டமொன்றின் வாயிலாக அளிக்கப்பட்டிருக்கவேண்டும். சாதாரணத் தீர்மானங்கள் வாயிலாக அத்தகைய அனுமதிகளை வழங்கலாகாது. (3) நிதி நிர்வாகத்தை மேற்பார்வையிடுவதற்கும், பரிசீலிப்பதற்கும், கட்டுப்படுத்துவதற்கும், நிர்வாகத்திற்கான விதிகள் அமைப்பதற்கும் பாராளுமன்றத்திற்குத் தடையற்ற அதிகாரம் வழங்கப்படவேண்டும். இது, தேசிய நிதியைப் பொறுப்புடன் வரவு-செலவு செய்வதற்குத் தேவையான முக்கிய அதிகாரமாகும். (4) வரி, மற்றும் செலவுத் திட்டத்தைத் தொடங்குவதற்கு ஆட்சித்துறையினருக்கே சலுகை வழங்கப்படவேண்டும். அத்தகைய பிரேரேபணைகளைத் தொடங்குவதற்குத் தனி உறுப்பினர்களுக்கு உரிமை கிடையாது. (5) நிதித்துறை விவகாரங்களில் இராச்சிய சபையினரின்மீது மக்கள் சபையினருக்கு நல்

லாதிக்கம் இருக்கவேண்டும். (6) மத்திய அரசினர் பெறுகின்ற வருவாய் முழுவதும் 'இந்தியத் திரட்டு நிதி'யைச் சேரும். தனது செலவுகளுக்கும், கடன் தொகைகளைத் திருப்பியளிப்பதற்கும் திரட்டு நிதியிலிருந்தே அரசாங்கம் தனக்குத் தேவையான பணத்தைப் பெறவேண்டும். (7) எதிர்பாராத காரணங்களால் அனுமதிக்கப்பெற்ற தொகையைக் காட்டிலும் அதிகமாகச் செலவிட நேருகின்றபோது, தேவையைப் பூர்த்திசெய்வதற்கென்று 'இடைப்பாட்டுச் செலவின நிதி'யொன்றிலிருந்து வேண்டிய தொகையை அரசாங்கம் பெறலாம். அவசர நிமித்தமாக இவ்வாறு பெறுகின்ற தொகைகளுக்கும் பின்னர் முறையான கணக்குவழக்குகளை அரசாங்கம் வைத்திருக்கவேண்டும். (8) பாராளுமன்றத்தினர் அங்கீகரிக்கின்ற நிதி மசோதாவை ஒப்புக்கொள்வதற்கு ஜனதிபதி மறுதலிக்கக்கூடாது. நிதியைப் பொறுத்தமட்டில் பாராளுமன்றத்தினரின் முடிவே இறுதியானது.

இத்தகைய பொது விதிகளை அடிப்படையாகக்கொண்டு விரிவான நிதிபற்றிய நடைமுறைகளை வகுப்பதற்கு அரசியல் திட்டம் முற்படுகிறது. அத்தகைய முறைகளை வகுக்கும்போது, வழக்கமாகக் கையாளப்படுகின்ற சில விதிகளையும் திட்டத் தயாரிப்பாளர்கள் மனத்தில் கொண்டிருந்தனர். அவைகளாவன:

(1) கடைப்பிடிக்கப்படும் வழிமுறைகள் ஆதாரப் பிரச்சினைகளை மறைத்துவிடக்கூடியவைகளாக இருக்கக் கூடாது.

(2) ஆட்சித்துறையினர் பொறுப்பற்ற அல்லது தீங்கு விளைவிக்கக்கூடிய முடிவுகளெய்திவிடாதவாறு வழிமுறைகள் அமையவேண்டும்.

(3) வரவு-செலவுத் திட்டத்தை முழுமையாகவும் தேசியக் கணக்குவழக்குகளின் ஒரு பகுதியாகவும் எண்ணுவதற்கு வழிமுறைகள் வகைசெய்ய வேண்டும். ஒன்ருேடொன்று தொடர்பில்லாத தனித் திட்டங்களாக அவைகள் இருக்கக்கூடாது.

(4) கிடைக்கக்கூடிய வருவாயையும் செலவினங்களையும் தொடர்ச்சியாக எடுத்துக்காட்ட வல்லவைகளாக வழிமுறைகள் அமைக்கப்படவேண்டும். வருவாய், செலவினங்கள் ஆகியவைகளிடையேயுள்ள தொடர்பு நன்கு விளக்கப்பட்டிருக்கவேண்டும்.

(5) நெடுங்காலப் பொருளாதாரத் திட்டத்திற்கும் வளர்ச்சிக்கும் வழிமுறைகள் போதிய அவகாசம் அளிப்பவைகளாக இருக்கவேண்டும். வருடாந்தர நிதிப் பங்கீடுகளையும் ஒப்புறுதிகளையும் அத்தகைய திட்டங்கள், மற்றும் வளர்ச்சியைப் பிணைப்பவைக ளாகக் கருதி அமைக்கவேண்டும்.

இவ் விதிகள் யாவையும் கருத்திற்கொண்டு, நிதிபற்றிய நடைமுறைகள் எவ்வாறு கடைப்பிடிக்கப்படுகின்றன என்பதை நாம் ஆராயத் தொடங்கலாம். 'வருடாந்தர வரவுசெலவு அறிக் கையைப்' பாராளுமன்றத்தின் இரு அவையினரின் முன்பாகச் சமர்ப்பணம் செய்வதற்கு, ஆண்டுதோறும் ஜனாதிபதி வகை செய்யவேண்டுமெனத் திட்ட விதி 112 கூறுகிறது. இந்த அறிக்கை,பட்ஜெட் எனப்பெயர்பெறுகிறது. நிதி மந்திரி என்ற ஒருவரின் மூலமாக ஜனாதிபதி இதை நடத்தி வைக்கிறார். தேசத்தின் நிதிநிலைக்கு அவரே பாதுகாவலராக இருக்கிறார். நிதியாண்டில் எதிர்நோக்கப்படும் வரவுசெலவுகளைப் பட்ஜெட் எடுத்துக்காட்டும். மரபையொட்டி பிப்ரவரி மாதம் இறுதி நாளில் பட்ஜெட்டைச் சமர்ப்பிப்பது வழக்கமாக இருந்து வருகிறது. இதனால், பிரேரேபணைகளைப் பொதுவில் பரிசீலிப் பதற்குப் பாராளுமன்றத்திற்குப் போதிய அவகாசம் கிடைக் கிறது. ஏப்ரல் மாதம் முதல் தேதியன்று புதிய நிதியாண்டு தொடங்கிவிடும். ஆகவே, அதற்குள்ளாகச் செலவுகளுக்கான ஒதுக்கீடுகளை ஏற்பதற்கும், போதிய அவகாசம் கிடைத்துவிடும். பாராளுமன்றத்தின் பார்வைக்கென பட்ஜெட் சமர்ப்பிக்கப்படும் நாளில் அதைக் குறித்த விவாதங்களெதுவும் நடைபெறாது. பட்ஜெட் விவாதம் தொடங்குவதற்கு முன்பாக, அதை நன்கு பரிசீலிப்பதற்கு, அங்கத்தினர்களுக்குப் போதிய அவகாசம் அளிக்கப்படுகிறது.

பட்ஜெட்டில் அடங்கியுள்ள செலவுத் தொகைகளை இரண்டு பகுதிகளாகப் பிரித்துக் கூறுவதுண்டு. 'இந்தியத் திரட்டு நிதி' யிலிருந்து செலவிடப்படவேண்டியவை இவற்றுள் ஒரு பகுதி யாகும். அவைகளைப் பொறுத்து வாக்கெடுப்பு தேவையில்லை. இவை நீங்கலாக உள்ள செலவினங்களுக்குத் திரட்டு நிதியி லிருந்து நிதி பெறுவதற்கு வாக்கெடுப்பு தேவையாகின் றது. பின்வருபவைகளைத் 'தவிர்க்கவியலாத செலவினங்கள்' என்ற தலைப்பில் கூறலாம் :

(அ) ஜனாதிபதியின் சம்பளம், மற்றும் படிகள் முதலியன.

(ஆ) பாராளுமன்ற அவைகளில் தலைவர்களுக்கான சம்பளம், படிகள் முதலியன.

(இ) இந்திய அரசாங்கத்தினரின் கடன் பொறுப்புகள்.

(ஈ) பெரு நீதிமன்றம், உயர்நீதி மன்றங்கள் ஆகியவற்றின் நீதிபதிகள், ஆடிட்டர் ஜெனரல், உயர் தணிக்கையாளர், ஃபெடரல் நீதிமன்றத்திலிருந்து ஓய்வுபெற்ற நீதிபதிகளின் பென்ஷன் தொகை.

(உ) ஏதாவதொரு நீதிமன்றத்தின் வாயிலாக வழங்கப்பெற்ற தொகை அல்லது தீர்ப்பு ஆகியவற்றின் தொகை, மற்றும் பாராளுமன்றம், அரசியலமைப்புத் திட்டம் ஆகியவை ஏற்று அறிவிக்கின்ற செலவினங்கள்.

இத்தகைய செலவு வகைகளைக் குறித்துப் பாராளுமன்றத்தில் வாக்கெடுப்பு நடைபெறுவதில்லை. இவைகளுக்கு அரசியலமைப்புத் திட்டமே உத்தரவாதமளித்துவிடுகிறது. மன்றத்தின் இரு சபைகளிலும் ஏதாவதொன்று இதைக் குறித்து விவாதம் நடத்துவதிலும் தடையேதுமில்லை. செலவினங்களின் இரண்டாவது பகுதியைப் பொறுத்தமட்டில், தேவையான நிதி ஒதுக்கவேண்டுமென்ற கோரிக்கை உரிய மதிப்பீடுகளுடன் லோகசபையில் சமர்ப்பிக்கப்படும். அக் கோரிக்கைகளுக்கு இணங்குவதற்கோ, அல்லது மதிப்பீட்டைக் குறைப்பதற்கோ, அல்லது மறுதலித்துத் தள்ளிவிடுவதற்கோ லோக சபையினருக்கு அதிகாரமுண்டு. மானியத் தேவையைப் பொறுத்த ஒவ்வொரு கோரிக்கையும் ஜனாதிபதியின் சிபாரிசைப் பெற்றிருக்கவேண்டும்.

வழிமுறைக்கான திட்டங்களின்படி, சாதாரணமாக ஒவ்வோர் அமைச்சர் துறையும், அதற்குத் தேவையான நிதியைப் பெறுவதற்குத் தனித்தனியாக விண்ணப்பம் செய்யவேண்டும். ஒவ்வொரு கோரிக்கையிலும், தேவையான மானியங்களின் மொத்தத் தொகை கண்டிருப்பதோடு, ஒவ்வொரு தலைப்பின் கீழும் செலவிடப்படவேண்டிய தொகையைப்பற்றிய முழு விவரங்களும்அளிக்கப்படவேண்டும். பட்ஜெட்விவாதத்தைசாதாரணமாக இரு பகுதிகளாகப் பிரித்துக்கூறலாம். பொது நோக்குடை விவாதம் பரவலான முறையில் விரிவாக நடைபெறும். மன்றத்தின்முன் தனிக் கோரிக்கைகள் சமர்ப்பிக்கப்படுகின்ற ஒவ்வொரு முறையும் இத்தகைய விவாதம் நடைபெறும். இவ்வாறான பொது விவாதத்தின்போது, தேசத்தின் நிதி நிலவரங்களைப் பொறுத்த பிரச்சினைகளிலும், பட்ஜெட்டில் கண்டுள்ள

செலவினங்களைக் குறித்த பிரச்சினைகளிலும் விசேட கவனம் செலுத்தப்படும். விவாதம் முடிந்த பின்னர், இறுதியாகப் பதிலளிப்பதற்கு நிதிமந்திரிக்கு உரிமையுண்டு.

இரண்டாவது நிலையிலேயே வெட்டுப் பிரேரேபணைகளையும், மற்றும் கோரியுள்ள தொகைகளைக் குறைக்கும் யோசனைகளையும் வெளியிடுவதற்கு மன்ற உறுப்பினர்கள் வாய்ப்புப் பெறுகின்றனர். மானியங்களைப்பற்றிய கோரிக்கையில் வெட்டுப் பிரேரேபணை ஒவ்வொன்றும் அக் கோரிக்கையை அடிப்படையாகக் கொண்ட அரசாங்கத்தின் கொள்கையையோ அல்லது அரசாங்கம் செயல்படுகின்ற முறையையோ அங்கத்தினர்கள் ஒப்புக் கொள்ளவில்லை என்பதைத் தெளிவுபடுத்தும். நடைமுறையில், மூன்று வகையான வெட்டுப் பிரேரேபணைகள் கடைப்பிடிக்கப் படுகின்றன. கோரப்படுகின்ற மானியத் தொகையில் ஒரு ரூபாய் குறைக்கப்படுமெனில், அப் பிரேரேபணைக்கு 'ஒப்புதல் பெறுத அரசாங்க முறை வெட்டு' என்று பெயர். எந்த வகைக்காக மானியம் கோரப்படுகிறதோ அவ்வடிப்படையை மன்றத்தினர் ஒப்புக்கொள்ளவில்லை என்பதைப் பிரேரேபணை சுட்டிக் காட்டுகிறது. மானியத் தொகையில் ஏற்படும் வெட்டு முழுத் தொகையாகவோ, ஒதுக்கப்படுவதாகவோ, அல்லது குறைப்பதாகவோ இருந்தால், அத்தகைய கருத்துகளை அடிப்படையாகக் கொண்ட பிரேரேபணைக்குச் 'சிக்கன வெட்டு' (Economy Cut) என்று பெயர். அரசாங்கச் செலவுகளில் சிக்கன மேற்படுத்துவது, இத்தகைய பிரேரேபணைகளின் நோக்கமாகும். கோரப்படுகின்ற மானியத் தொகையில் ரூ. 100 குறிக்கப்பட வேண்டுமென்று பிரேரேபணை கோரினுல், குறிப்பிட்டதொரு குறைபாட்டை எடுத்தியம்பும் விருப்பம் அதனுல் வெளியாகிறது. அத்தகைய குறைபாடு, பொறுப்புள்ள அரசாங்கத்தின் எல்லைக் குட்பட்டதேயாகும். அத்தகைய பிரேரபணைக்கு 'அடையாள வெட்டு' (Token Cut) என்று பெயர். இத்தகைய வெட்டுப் பிரேரேபணைகளை அனுமதிப்பதற்கென்று தனியான சட்ட திட்டங்கள் உண்டு. பட்ஜெட்டின் ஒவ்வொரு பகுதியையும் ஆராய்வதற்கும், அதிலுள்ள குறைபாடுகளை விரிவாக எடுத்துரைப்பதற்கும், அதைச் சீர்த்திருத்துவதற்கான தேவையான மதியாலோசனைகளை வெளியிடுவதற்கும் அங்கத்தினர்களுக்கு இவ் வெட்டுப் பிரேரேபணைகள் மிக அதிகமான வாய்ப்புகளை அளிக்கின்றன.

அரசாங்க நிதிகளைப்பற்றிய, நிபந்தனைகளையொட்டிய சடங்குகள், மானியங்களைப் பொறுத்து ஓட்டளிப்பதுடன்

முடிவடைவதில்லை. இந்தியத் திரட்டு நிதியிலிருந்து தேவையான நிதி ஒதுக்கல்களைப் பெறுவதற்குச் சட்டபூர்வமான அனுமதியும் தேவையாகிறது. இவ்வகையான சடங்குகளைப் பூர்த்தி செய்வதற்கென்று, வழி முறையில் இரு வகையான நிதித்துறை சார்ந்த சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. அவைகளுக்கு முறையே 'நிதி ஒதுக்கீடு சட்டம்' என்றும், 'நிதிச் சட்டம்' என்றும் பெயர். ஒவ்வொரு மானியத் தலைப்பின்கீழுள்ள நிதித் தொகையையும் இந்தியத் திரட்டு நிதியிலிருந்து பெறுவதற்கு வசதியாகத் தொகையை நிதி ஒதுக்கீடு சட்டம் நிர்ணயிக்கிறது. இச் சட்ட வாயிலாக நிர்ணயிக்கப்படுகின்ற தொகையைக்காட்டிலும் கூடுதலான தொகையைப் பெறுவதற்கு அரசியலமைப்புத் திட்டம் அனுமதிக்கவில்லை. நடப்பு ஆண்டு நிதிப் பிரேரபணைகளில் கண்டுள்ளவாறு, வரிகளின்மூலமாகத் தேவையான தொகையை வசூலிப்பதற்குத் 'தேவையான சட்டங்கள், நிதிச் சட்டத்தின் வரம்பிற்குள் அடங்குகின்றன.

சட்ட அனுமதி பெற்ற ஒதுக்கீடுகளைத் தவிர, இந்தியத் திரட்டு நிதியிலிருந்து வேறு வகைகளில் நிதி பெறுவதை இந்திய அரசியலமைப்புத் திட்டம் தடைசெய்கிறது என்ற விவரத்தை நாம் முன்னரே கூறியுள்ளோம். எதிர்நோக்காத அல்லது எதிர் பாராத காரணங்களால், ஒரு துறையின் செலவுகளுக்கெனப் பாராளுமன்றம் ஒதுக்குகின்ற நிதி, தேவையைப் பூர்த்தி செய்வதாக இல்லை என்பதையும் பல சந்தர்ப்பங்களில் கண்டோம். பாராளுமன்றத்தினரின் அனுமதியின்றிச் செலவு செய்வது சட்ட அடிப்படையில் குற்றமாகும். ஆட்சித் துறையினர் செலவு வகைகளுக்கென்று, பாராளுமன்றத்தின் கையை எதிர்நோக்கி நின்றாலும், அதனால் சொல்லவொண்ணாத பல துன்பங்களும் விளையக்கூடும். மேலும், உடனடியாகச் செலவிடப்படுவதற்குப் பணம் தேவையாக இருக்கலாம். அதற்கான ஏற்பாடுகளை அரசாங்கம் உடனடியாக மேற்கொள்ளவில்லையெனில், அது பொதுஜன நலனைப் புறக்கணிப்பதாகிவிடும். அத்தகைய நெருக்கடியான நிலைமைகளைச் சமாளிப்பதற்கென்று,திட்ட விதி 267-ன் கீழ், பாராளுமன்றம், 'இந்திய இடைப்பாட்டுச் செலவின நிதி' ஒன்றையும் அமைத்துக்கொள்ளலாம். இதற்குத் தேவையான பணத்தை அவ்வப்போது சட்ட அனுமதி பெற்று வழங்குவார்கள்.' இது ஜனாதிபதியின் வசமிருந்து வரும். எதிர்பாராது எழுகின்ற செலவினங்களுக்கென்று ஜனாதிபதி அவ்வப்போது இதிலிருந்து முன்பணம் வழங்கிவருவார். அவ்வாறு வழங்குவதற்கென்று சில விதிகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. நிதித் துறையில் கையாளப்படுகின்ற பல வழிமுறைகளைப்போலவே,

இவ் இடைப்பாட்டுச் செலவின நிதி ஏற்பாடும், ஆங்கில நாட்டின் அடிச்சுவடுகளைப் பின்பற்றியே அமைந்துள்ளது. தற்போது இவ் இடைப்பாட்டுச் செலவின நிதியின் மொத்த மதிப்பு 150 மில்லியன் ரூபாய்களாக உள்ளது.

ஒதுக்கப்பெற்றுள்ள நிதித்தொகை ஓர் அரசாங்கப் பிரிவின் தேவைகளை ஈடுசெய்ய இயலாததாக இருந்தால், அப் பிரிவின் எதிர்பாராத அவசரத் தேவைகளுக்கான உபரிப் பணம் இடைப்பாட்டுச் செலவின நிதியிலிருந்து வழங்கப்பெற்று வந்தது. ஆனால், இத்தகைய முதலீடுகளைப் பின்னர் சட்ட அதிகாரம் பெற்றவைகளாகச் செய்வதுண்டு. நான் முன்னர் கூறியவாறு, ஆட்சித்துறையினர் பாராளுமன்றத்தின் ஐயமற்ற அனுமதியைப்பெற்ற பின்னரே பணச்செலவு செய்யவேண்டும். இவ்வாறான நிலைகளைத் தாங்குவதற்கென்று 'உபரி பட்ஜெட்' ஒன்றையும் தயாரிப்பதுண்டு. வருடாந்தர மானியத்திற்கென்று வழங்கப்பெறுகின்ற தொகைகளுக்கு அதிகமான செலவுத் தொகைள் யர்வும்இவ்வுபரி பட்ஜெட்டில் இடம் பெறுகின்றன. நடப்பு நிதியாண்டு முடிவடைவதற்கு முன் உபரி பட்ஜெட்டும் சமர்ப்பிக்கப்படும். வருடாந்தர பட்ஜெட்டை ஒப்புதல் பெறுவதற்கென்று கடைப்பிடிக்கப்படுகின்ற வழிகளையே உபரி பட்ஜெட்டின் அனுமதி பெறுவதற்கும் கையாளுகின்றனர். உபரி பட்ஜெட் அனுமதிக்கப்பெற்றவுடன் இடைப்பாட்டுச் செலவின நிதியிலிருந்து பெற்ற பணத்தை வாபஸ் செய்துவிடுவர். இவ்வாறு இடைப்பாட்டுச் செலவின நிதியில் ஏற்படும் குறைவுகள் நிறைவு செய்யப்படுகின்றன.

அரசாங்க நிதி விவகாரங்களில் பாராளுமன்றக் கமிட்டிகள் இரண்டு முக்கியப் பங்கு பெறுகின்றன. நிதித்துறை வழிமுறைகளைப்பற்றிய விவாதம், இவ்விரு கமிட்டிகளின் தொண்டுகளைப் பற்றியும் கூறுவதாலேயே நிறைவுபெறும். அவைகள் முறையே 'வரவு-செலவுத் திட்ட மதிப்புக் கமிட்டி'. என்றும், 'பொதுக் கணக்கு வழக்குக் கமிட்டி'யென்றும் பெயர் பெறுகின்றன. இந்தச் சந்தர்ப்பத்தில் 'இந்தியக் கம்ட்ரோலர் அண்டு ஆடிட்டர்' ஜெனரல் (அரசாகங்கத் தணிக்கைத் தலைவர்) என்ற அலுவலரின் அரும்பணிகளைப்பற்றியும் குறிப்பிடவேண்டும். அவைகளைப் பின்னுமோர் இடத்தில் தனியாகக் குறிப்பிட்டுள்ளோம். அரசாங்கம் திட்டுகின்ற நிதித் திட்டங்களையும், அட்டவணைகளையும், பிற நடவடிக்கைகளையும் ஏராளமான நிறுவனங்கள் கட்டுப்படுத்திவருகின்றன. அவ்வாறு தணிக்கை. செய்து வருகின்ற நிறுவனங்களின் செல்வாக்கையும் தொடர்பையும் ஊன்றிக்

கவனிக்கும்போது நிதித்துறையைப் பொறுத்து அரசியலமைப் புத் திட்டம் விதித்திருக்கின்ற கட்டுப்பாடுகள் யாவும் பெருமள வில் நடைமுறையில் கடைப்பிடிக்கப்பட்டுவருகின்றன என்பது தெளிவாகும். பாராளுமன்றத்தில் பெரும்பான்மையினரின் ஆதரவு பெற்று ஆட்சி செலுத்திவருகின்ற அதிகாரவர்க்கம் அரசியல் கட்சியின் ஆதரவு பெற்றுள்ளனர் என்பதும் உண்மை யாகவே இருக்கிறது. இதனுல், பொதுநிதியைக் கையாளுவதில் பாராளுமன்றத்திற்குள்ள செல்வாக்கிலும் எவ்வகையிலும் குறைவில்லை என்பது தெளிவாக விளங்குகிறது.

# 22. சலுகைகளும் கமிட்டிகளும்

அரசியலமைப்புத் திட்டத்தில் பாராளுமன்ற உறுப்பினர்களுக்கான பல சலுகைகளும் பாதுகாவல்களும் திட்டவட்டமாக எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. பாராளுமன்றங்களின் தாயகமாக விளங்குகின்ற பிரிட்டிஷ் பாராளுமன்றம் பல நூற்றுண்டுகளாக ஏற்படுத்தியுள்ள வழக்காறுகளின் அடிச்சுவடுகளை நமது திட்டம் பின்பற்றியிருக்கிறது. திட்டத்தின் இப்பகுதி குறிப்பாக பிரிட்டிஷ் பாராளுமன்றத்திற்குக் கடன்பாடுடையதாக அமைந்திருக்கிறது. இப் பகுதியிலேயே, பிரிட்டிஷ் காமன்ஸ் சபையை நேரடியாக நமது திட்டம் குறிப்பிட்டிருக்கிறது. பாராளுமன்றத்தின் இரு சபைகள், அதன் உறுப்பினர்கள், மற்றும் கமிட்டிகள் ஆகியவற்றிற்கு அளிக்கப்பட்டுள்ள சலுகைகளையும், பாதுகாவல்களையும், மற்றும் அதிகாரங்களையும் திட்ட விதி 105 எடுத்துரைக்கிறது. பாராளுமன்ற உறுப்பினன் ஒவ்வொருவனுக்கும் பேச்சுரிமை உண்டு. பாராளுமன்றத்தில், அல்லது அதைச் சார்ந்த கமிட்டிகளில் ஓர் உறுப்பினர் எடுத்துரைப்பதையோ அல்லது வாக்களிப்பதையோ குற்றமாகக் கொண்டு, நீதிமன்றங்களில் அவருக்கெதிராக வழக்குத் தொடரவியலாது. இத்தகைய பாதுகாப்பு அவர்களுக்கு வழங்கப்பெற்றுள்ளது. பாராளுமன்றச் சபைகளின் உத்தரவின் பெயரால் அறிக்கைகள், வர்ணனைகள், வாக்களித்தல், மற்றும் நடவடிக்கைகள் ஆகியவைகளைப் பிரசுரம் செய்கின்றபோதும் உறுப்பினர்களுக்கு இத்தகைய பாதுகாவல்கள் வழங்கப்பெற்றிருக்கின்றன.

பாராளுமன்றம், அதன் கமிட்டிகள், சபைகள் ஆகியவற்றின் உறுப்பினர்களுக்கு வழங்கப்பெற்றிருக்கும் அதிகாரங்கள், சலுகைகள், பாதுகாவல்கள் ஆகியவற்றை வகைப்படுத்தித் தொகுக்கும் முயற்சியில் பாராளுமன்றம் இதுகாறும் அதிக வெற்றிகண்டதாக இல்லை. கிடைத்த அனுபவங்களைச் செயல்

பாட்டு விதிகளாகத் தொகுத்திருக்கின்றனர். சலுகைகள்பற்றிய பிரச்சினைகளும், உறுப்பினர்களைக் கைது செய்வது, காவலில் வைப்பது போன்ற விஷயங்களும் ஆகிய இரு முக்கியப் பிரச்சினை களிலேயே செயல்பாட்டு விதி அதிகக் கவனம் செலுத்தியிருப்ப தாகத் தெரியவருகிறது. அனுமதிக்கப்படுவதற்குரிய அருகதை யுள்ள உரிமைப் பிரச்சினையொன்றைப் பாராளுமன்ற உறுப் பினர் எவரும் எழுப்பலாகும். மன்றத்தின் ஒப்புதலின்பேரில் பிரச்சினையை உரிமைக் கமிட்டியாரின் பரிசீலனைக்கு அனுப்புவது வழக்கம்; கமிட்டியாரின் சிபாரிசுகளை ஏற்று அதனடிப்படையில் மன்றம் செயல்படுவது வழக்கம்.

உறுப்பினர் ஒருவரைக் கைது செய்தாலும், அல்லது கிரிமினல் வழக்கு விசாரணைக்கென்று அவரைக் காவலில் வைக் கும்போதும், அல்லது சிறைத் தண்டனை விதித்து நீதிமன்றம் தீர்ப்பளித்தாலும், அவ்வாறு செயலாற்றுகின்ற அதிகாரிகள், செய்தியை மன்றத் தலைவர் அல்லது மேல்சபைத் தலைவருக்கு உடனடியாகத் தெரியப்படுத்தவேண்டும். அத்தகைய நடவடிக் கைகள் உறுப்பினரின்மீது எக் காரணங்களை முன்னிட்டுத் தொடரப்பெற்றன என்பதையும் அறிவிக்கவேண்டும். அவ் வாறே, உறுப்பினர் விடுதலை செய்யப்படுகின்றபோதும் செய்தியை அறிவித்துவிடவேண்டும். அவ்வாறு தான் பெறு கின்ற செய்திகளிலடங்கியுள்ள விவரங்களைக் கூடியவிரைவில் தலைவர்கள் சபையினருக்கு எடுத்தியம்புவார்கள். 'பாராளுமன்ற எல்லைக்குள் எந்த உறுப்பினரையும் மன்றத் தலைவரின் அனுமதி யின்றிக் கைதுசெய்யலாகாது. மன்றச் சபைகளின் தலைவாயில் களில், சிவில் அல்லது கிரிமினல் வழக்குச் சம்பந்தமான சம்மன் களையும், தலைவர்களின் அனுமதியின்றி உறுப்பினர்களுக்கு வழங்கக்கூடாது.

உறுப்பினர்களுக்கு ஊதியம், மற்றும் படிகளைப் பாராளு மன்றச் சட்டம் வழங்கும். அரசியல் திட்ட விதி 106 இவ்வதி காரத்தைப் பாராளுமன்றத்திற்கு வழங்கியிருக்கிறது. தற் போது அங்கத்தினர்களுக்கு ரூ. 400 மாத ஊதியமாகவும், மன்றக் கூட்டங்கள் நடைபெறும்போது தினமொன்றுக்கு ரூ. 21 வீதம் படியும் வழங்கப்படுகிறது. சராசரியில் அவர் களுக்கு மாதமொன்றுக்கு ரூ. 650 கிடைக்கக்கூடும். பிற நாடு களில், குறிப்பாக ஐரோப்பிய அமெரிக்க நாடுகளில் பாராளு மன்ற உறுப்பினர்கள் பெறும் ஊதியத்தையும் பிற படிகளையும் எண்ணிப் பார்க்கும்போது, இத் தொகை மிகக் குறைவானது. இருந்தபோதிலும் நமது நாட்டின் வாழ்க்கைத் தரத்தை

எண்ணிப் பார்க்கும்பொழுது, இத் தொகை தேவையைப் பூர்த்தி செய்வதற்காகவே இருக்கிறது. இவ்விதமான சலுகைகள் நீங்கலாக, இந்திய ரெயில்வேயின் இவ் உறுப்பினர்களுக்கு வருட முழுவதும், தேவையான இடங்களுக்குச் செல்வதற்கு இலவசப் பிரயாண வசதி (முதல் வகுப்பு) அளித்திருப்பதையும் குறிப்பிட வேண்டும்.

## பாராளுமன்றக் கமிட்டிகள்

பாராளுமன்ற அரசு முறைகளில், பாராளுமன்றம் மேற்கொள்ளும் அலுவல்களைச் செய்துமுடிப்பதற்குத் துணையாகப் பல கமிட்டிகள் அமைக்கப்படுவது மிகவும் இயற்கையான விளைவாக இருந்துவருகிறது. அலுவல்கள் அமைதியாகவும், உரிய காலங்களிலும், திறமையாகவும் நடைபெறுவதற்கு இவை மிகவும் துணைசெய்கின்றன. பாராளுமன்றத்தில் நடைபெறும் விவாதங்களைப் பொறுத்த நுண்ணிய பல கருத்துகளில் இவை கவனம் செலுத்துகின்றன. இயற்றப்படுவதற்கென்று பாராளுமன்றம் மேற்கொள்ளும் சட்டங்களைப்பொறுத்த பொதுமக்களின் கருத்துகளை நன்கு அறிந்துகொள்வதற்கு இவை உதவுகின்றன. அரசாங்கத்தினர் துவக்கிவைக்கின்ற பல பிரேரேபணைகளுக்கு எதிர்க் கட்சியினரின் பலனுள்ள கூட்டுறவையும் நன்முறையில் பெறுவதற்கு இக் கட்சிகள் உதவிவருகின்றன.

லோகசபையின் நடைமுறை விதிகள், மற்றும் வழக்காறுகளை அனுசரித்துப் பாராளுமன்றத்தில் பதினொரு கமிட்டிகள் அமைக்கப்பெற்றுள்ளன. இக் கமிட்டிகள் ஆற்றிவரும் பணிகளைக் குறித்த பொதுவான பட்டியல் இங்குத் தரப்படுகிறது. இப் பட்டியலின் உதவியால் பாராளுமன்றம் ஆற்றிவருகின்ற பணிகளை நன்கு அறிந்துகொள்ள இயலும்.

### (1) அலுவல்களை நிர்ணயிக்கின்ற அறிவுரைக் குழு

புதியதொரு சபை கூடியதும் இக் குழு உருவாக்கப்படுகிறது. பதினைந்து அங்கத்தினர்களைக் கொண்ட இக் குழு, சபையின் அலுவல்களுக்கான நேரப் பங்கீடு செய்தளிப்பதை முக்கிய வேலையாகக் கொண்டிருக்கிறது. மன்றத்தின் ஸ்பீக்கர் இதன் தலைவராகவும் பணியாற்றிவருவார்.

### (2) தனிப்பட்ட உறுப்பினரின் மசோதாக்களையும் தீர்மானங்களையும் ஆலோசிக்கின்ற குழு

இக் குழுவிலும் பதினைந்து அங்கத்தினர்கள் உண்டு. மன்றத்தினரின் பரிசீலனைக்கென்று அனுமதிப்பதற்குமுன், தனிப்பட்ட

உறுப்பினர்களின் மசோதாக்களைப் பல்வேறு கோணங்களி லிருந்து இக் குழு ஆராய்ந்துவருகிறது.

(3) மசோதாக்களைப் பரிசீலிக்கின்ற பொறுக்குக் கமிட்டி (குழு)

மசோதா ஒன்றைப் பொறுக்குக் கமிட்டியொன்றின் பார்வைக்கு அனுப்பி வைக்கவேண்டுமென்ற பிரச்சினை எழுகின்ற போது, அத்தகைய பொறுக்குக் கமிட்டியொன்றை அமைக்கின்ற தேவையும் எழுகின்றது. பொறுக்குக் கமிட்டியின் அங்கத்தினர்களை மன்றத்தினர் தேர்ந்தெடுக்கின்றனர். ஏதேனுமொரு சட்டத்தினால் அல்லலுற்ற மக்களின் பிரதிநிதிகளைக் கூட்டி விசாரணை நடத்துவது, அல்லது அவர்தம் முறையீடுகளுக்குச் செவிசாய்த்து அறிக்கையொன்றைத் தயாரித்து அவையினரின் பார்வைக்கு வைப்பதுபோன்ற அலுவல்களைப் பொறுக்குக் கமிட்டி மேற்கொள்ளுகிறது.

(4) மனுக்களைப் பரிசீலிக்கின்ற கமிட்டி

மன்றக் கூட்டத்தைத் தொடங்கும்போது இக் கமிட்டிக்கான பதினைந்து அங்கத்தினர்களைச் சபாநாயகர் அமர்த்துவது வழக்கம்.

(5) மதிப்பீடுகள் செய்கின்ற கமிட்டி

நிதி பரிபாலனம் செய்வது பாராளுமன்றம் மேற்கொள்ளுகின்ற அலுவல்களில் மிகவும் சிக்கலானது என்பதை நாம் முன்னரே அறிவோம். வரவு-செலவைத் தணிக்கை செய்வது என்ற பெரும் பொறுப்பை ஏற்றிருக்கின்ற பாராளுமன்றத்திற்கு அதைச் சரிவர நிறைவேற்றுவதற்குத் தேவையான அவகாசம் கிடைப்பதில்லை. எனவே, இரண்டு கமிட்டிகள் நியமிக்கப்படுகின்றன. அவ்விரண்டு கமிட்டிகளும், இத் துறையில் பாராளுமன்றத்திற்கு உதவவேண்டுமென்பது மன்றத்தினரின் நோக்கமாக இருந்துவருகிறது. இவ்விரு கமிட்டிகளும் முறையே, மதிப்பீடு செய்யும் கமிட்டி என்றும், பொதுக் கணக்குத் தணிக்கைக் கமிட்டி என்றும் அழைக்கப்படுகின்றன.

வரவு-செலவுத் திட்டப் புள்ளிவிவரங்களை நுணுக்கமாகப் பரிசீலிப்பது, மதிப்பீடு செய்யும் கமிட்டியின் முக்கியப் பணிகளில் ஒன்றாக இருக்கிறது. இதனால், அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் செல்வாக்கு இக் கமிட்டிக்கு உண்டு. நிதித்துறையில் மட்டிலுமன்றிப் பிற துறைகள் யாவற்றிலும் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துகின்ற மிகையான செல்வாக்கு இக் கமிட்டிக்கு உண்டு. இக் கமிட்டியார் ஆற்றிவரும் திட்டவட்டமான பணிகள் நான்கைப் பின் வருமாறு கூறலாம்.

(1) மதிப்பீட்டைப் பொறுத்து, எத்தகைய சீர்திருத்தங்கள், நிர்வாகச் சீரமைப்புகள், திறன் மற்றும் நடவடிக்கைகளில் மாறுதல்கள் ஆகியவற்றைச் செய்யக்கூடுமென்பதை எடுத்துரைத்து அறிக்கை தயாரிப்பது.

(2) நிர்வாகத்தில் திறமையையும் சிக்கனத்தையும் அதிகப்படுத்துவதற்கான மாற்றுத் திட்டங்களை அறிவுறுத்துவது.

(3) பட்ஜெட்டில் கண்டுள்ளவாறு அதன் திட்டங்களுக்குட்பட்டுப் பணம் நன்முறையில் பங்கிட்டு அளிக்கப்பட்டிருக்கிறதா என்பதைப் பரிசீலனை செய்வது.

(4) பாராளுமன்றத்திற்கு பட்ஜெட்டைச் சமர்ப்பணம் செய்வதற்கான முறைகளைப் பிரேரேபணை செய்வது.

இக் கமிட்டியில் முப்பது அங்கத்தினர்கள் உண்டு. லோக சபையின் உறுப்பினர்களிலிருந்து விகித முறையில் தேர்ந்தெடுக்கப்படும் இவ் அங்கத்தினர்கள் ஓராண்டுக் காலம் பதவியில் இருப்பர். மதிப்பீடுகளைப் பரிசீலனை செய்வதே கமிட்டியின் முக்கிய வேலை என்றாலும், பட்ஜெட் இறுதியாக நிறைவேறிவிடுவதோடு அதன் வேலை தீர்ந்துவிடுவதில்லை. இதை, இக் கமிட்டியைப் பொறுத்த ஒரு சிறப்பு என்றே கூறவேண்டும். ஆண்டு முழுவதும் அக் கமிட்டி பணியாற்றிவருகிறது. அரசாங்கத்தின் ஏதாவது ஒரு துறை அல்லது நிறுவனத்தைத் தன் இச்சைக்கேற்றவாறு தேர்ந்தெடுத்துப் பரிசீலித்து, வருட முழுவதும் தன் பணியை இக் கமிட்டி நிறைவேற்றி வருகிறது.

(6) பொதுக் கணக்குத் தணிக்கைக் கமிட்டி

இக் கமிட்டியை மதிப்பீடு செய்யும் கமிட்டியின் இரட்டையன் என்று கூறலாம். பின் கூறப்பட்டிருப்பது மதிப்பீடுகளின் தொடர்புடையது என்றால், தணிக்கைக் கமிட்டி இத் தொகைகள் எவ்வகையில் செலவிடப்பட்டிருக்கின்றன என்றும், அதன் விளைவுகள் யாவை என்றும் பரிசீலிப்பதில் ஈடுபடுகிறது என்று கூறலாம். இவ்வகையானதொரு கமிட்டி இந்திய நாட்டிற்குப் புதியதன்று. 1923ஆம் ஆண்டிலேயே 'மத்திய லெஜிஸ்லேடிவ் அசெம்பிளி' இத்தகையதொரு கமிட்டியை ஏற்படுத்திற்று. இதனால், இக் கமிட்டிக்குச் சிறப்பானதொரு பரம்பரை வழக்காறு ஏற்பட்டுள்ளது.

இக் கமிட்டியின் இருபத்திரண்டு மொத்த அங்கத்தினருள் எழுவர் இராச்சிய சபையினராவர். விகித முறையில் அங்கத்தினர்களின் தேர்வு நடைபெறுகிறது. அமைச்சரொருவர் இக் கமிட்டியில் இடம்பெற இயலாது. அங்கத்தினரின் பதவிக்காலம் ஓராண்டிற்கு மேப்பட்டு நீடிக்கக்கூடாது.

அரசினரின் வரவு-செலவுகள் யாவற்றையும் பரிசீலிப்பது இக்கமிட்டியினரின் முக்கியக் கடமையாக இருந்து வருகிறது. இம்முறையில் ஒதுக்கீட்டுத் தொகைகள் பயன்படுத்தப்பட்டிருப்பதையும், கம்ட்ரோலர், மற்றும் இந்திய ஆடிட்டர்-ஜெனரல் ஆகியோரது அறிக்கைகளையும் கமிட்டி பரிசீலித்துவரும். பின் வருபவைகளைப் பரிசீலித்துக் கமிட்டி திருப்தியடையவேண்டும் :

(அ) எக் காரியத்திற்கென்று பணம் கோரிப் பெறப்பட்டதோ அல்லது சட்ட ரீதியாக வழங்கப்பட்டதோ, அக் காரணம்பற்றியே பணம் செலவு செய்யப்பட்டிருக்கிறதென்று நடைமுறைக் கணக்கில் ஒழுங்காகப் பதிவு செய்யப்பட்டிருக்கவேண்டும்,

(ஆ) செலவு, அச் செலவுத் தொகையைக் கையாண்டுவரும் அதிகாரவரம்பு எல்லைக்குட்பட்டிருப்பதாக இருக்க வேண்டும்.

(இ) உபரியாக மனுச்செய்து பெறப்படும் தொகைகளும், அங்கீகாரம் பெற்ற அதிகாரிகள் வகுத்துள்ள சட்ட திட்ட வரம்பு எல்லைக்குட்பட்டிருக்கவேண்டும். அரசாங்கக் கார்ப்பொரேஷன்கள், உற்பத்தி ஸ்தாபனங்கள், பூரண அல்லது அரைகுறையாகத் தன் அதிகாரம் பெற்று இயங்கிவரும் நிறுவனங்கள் ஆகியவைகளின் வரவு-செலவுக் கணக்கு விவரங்களையும், இலாபநஷ்டக் கணக்குகள், மற்றும் ஐந்தொகைகளையும் பரிசீலனை செய்வது இக் கமிட்டியின் கடமையாக இருக்கிறது. நடப்பு ஆண்டில் குறிப்பிட்டதொரு காரணத்திற்கு என்று மன்றம் வழங்குகின்ற தொகைக்கு அதிகமாகப் பணச்செலவு செய்யப்படும் போது, ஒவ்வொரு தலைப்பின்கீழும் அதற்குரிய காரணங்களைப் பரிசீலனை செய்து அத்தகைய உபரிச் செலவிற்கான காரணங்களைக் கண்டறிந்து, அதைப் பொறுத்து நியாயமான சிபாரிசுகளைச் செய்வதும் கமிட்டியின் வேலைகளில் ஒன்றுக இருந்துவருகிறது.

கம்ட்ரோலர், மற்றும் ஆடிட்டர்-ஜெனரல்கள் அரசாங்கக் கணக்குகளை நன்கு பரிசீலித்து, அனுபவாயிலான தேர்ந்த கருத்துகளைப் பொதுக் கணக்குத் தணிக்கைக் கமிட்டியினருக்கு வழங்குகின்றனர். அத்தகைய வாய்ப்பு மதிப்பீட்டுக் கமிட்டியினருக்கு இல்லை.

(7) தனியுரிமைப் பரிசீலனைக் கமிட்டி

மன்றம் துவங்கும்போது மன்றத் தலைவர் பதினைந்து அங்கத்தினர்கள் கொண்ட இக் கமிட்டியை ஏற்படுத்துவார். மன்ற உறுப்பினர்களின் தனியுரிமைப் பிரச்சினைகளைக் கவனிப்பதோடு, அவ் உரிமைகளுக்கு ஏதேனும் பங்கமேற்பட்டிருந்தால் அவைகளையும் இக் கமிட்டியினர் ஆராய்ந்து முடிவு கூறுவர்.

(8) இயற்றப்படுகின்ற துணைச்சட்டப் பரிசீலனைக் கமிட்டி

பாராளுமன்றம், தனது சட்டமியற்றும் உரிமையைச் சில சந்தர்ப்பங்களில் பிற நிறுவனங்களுடன் பகிர்ந்துகொள்கிறது. அரசியலமைப்புத் திட்டவாயிலாகவும் சில நிறுவனங்கள் அவ் உரிமையைப் பெற்றுவிடுகின்றன. அத்தகைய நிறுவனங்கள் சில விதிகளையும், உபவிதிகளையும், பை-லாக்களையும் மன்றத்திற்கு அனுப்பிவைக்கின்றன. வரம்பிற்குட்பட்டிருக்கின்றனவா என அவைகளைப் பரிசீலனை செய்து, அவற்றைப் பொறுத்து அறிக்கைகளை வெளியிடும் பணியை இக் கமிட்டி ஏற்றுக்கொள்கிறது. அதிகபட்சமாக இக் கமிட்டியில் பதினைந்து அங்கத்தினர்களே இருக்கக்கூடும். அவர்கள் ஓராண்டுக் காலத்திற்குப் பதவி வகித்து வருவர். மன்றத் தலைவர் உறுப்பினர்களை அமர்த்துவார். அமைச்சர்கள் இக் கமிட்டியில் இடம்பெற இயலாது.

(9) அரசினரின் காப்புறுதிகளைப் பொறுத்த கமிட்டி

மன்றக் கூட்டங்களில் அமைச்சர்கள், அவ்வப்போது காப்புறுதிகளையும் வாக்குறுதிகளையும் வழங்குவதோடு, சில பொறுப்புகளையும் ஏற்கின்றனர். இவைகளை, நன்கு பரிசீலனை செய்து, எந்த அளவில் இவை நிறைவேற்றப்படுகின்றன என்பதை ஆராய்ந்து கூறுவது இக் கமிட்டியின் வேலையாக இருக்கிறது.

(10) மன்றக் கூட்டங்களுக்கு ஆஜராகாத அங்கத்தினர்களைத் தணிக்கை செய்யும் கமிட்டி

இக் கமிட்டியிலும் பதினைந்து அங்கத்தினர்கள் உண்டு. இவர்கள் மன்றத் தலைவரால் அமர்த்தப்பெற்று ஓராண்டுக் காலம் பதவியிலிருந்துவருவர். மன்றக் கூட்டங்களுக்கு ஆஜ

ராகாமல் விடுமுறை கோரி அங்கத்தினர்கள் செய்யும் விண்ணப் பங்களை இக் கமிட்டியினர் பரிசீலனை செய்வார்கள். அங்கத்தின ரொருவர் அறுபது நாள்களுக்கும் மேலாக, அனுமதியின்றி மன்றக் கூட்டங்களுக்கு ஆஜராகாமலிருந்ததுண்டா என்பதை ஆராய்ந்து, அதை மன்னித்து ஒழுங்குபடுத்துவதா அல்லது குறிப்பிட்ட உறுப்பினர் பதவியிழந்துவிட்டதாக அறிவிப்பதா என்ற பிரச்சினைகளைக் குறித்து அறிக்கை தயாரிப்பது இக் கமிட்டியின் வேலையாகும்.

**(11) சட்ட திட்டப் பரிசீலனைக் கமிட்டி**

மன்ற நடவடிக்கைகளையும் ஒழுங்கு முறைகளையும் நன்கு பரிசீலனை செய்து, தேவையிருப்பின் உகந்த மாறுதல்களையும் துணை விதிகளையும் சிபாரிசு செய்வது இக் கமிட்டியின் முக்கிய வேலையாக இருந்து வருகிறது. பதினைந்து உறுப்பினர்களைக் கொண்ட இக் கமிட்டியினர், மன்றத் தலைவரால் அமர்த்தப்படு கின்றனர் என்பதோடு, மன்றத் தலைவரே அக் கமிட்டியின் அலுவலால் தலைவராகவுமிருந்துவருகிறார்.

## பாராளுமன்றமும் கட்சி முறையும்

கட்சிமுறை, சட்டசபைக்குரிய ஜனநாயக அரசின் ஆணி வேராக இருந்துவருகிறது. கட்டுக்கோப்பான அரசியல் கட்சி களின்றிக் கட்சிமுறை அரசு நடைபெற இயலாது. கட்சிமுறை அரசின் ஜனநாயகக் கூறு காப்பாற்றப்படவேண்டுமெனில், சட்ட மன்றத்திற்கு உள்ளும் வெளியிலும் பொறுப்புவாய்ந்த தொடர்ச்சியான மதிப்பீடுகளும் குற்றச்சாட்டுகளும் அவசிய மாகின்றன. அவ்வாறில்லையெனில், அதிவிரைவில் அரசாங்கம் யதேச்சாதிகாரமுடையதாகவும் நாளடைவில் கொடுங் கோன்மையாகவும் மாறிவிடக்கூடும். இத்தகைய குற்றச்சாட்டு களும் மதிப்புரைகளும் ஒவ்வொரு சமயங்களில் மட்டிலுமே வழங்கப்பெற்றால் அவை பயனுள்ளவையாக இருக்க முடியாது. அவை பொறுப்பற்றவைகள் எனில் பயனற்றவை என்றும் கூறி விடலாம். எனவே, தொடர்ச்சியாகவும் பயனுள்ளவையாகவும் அவை விளங்கவேண்டுமெனில், நன்முறையில் கட்சிகளைத் திட்ட மிட்டு அமைக்கவேண்டும். இவ்வாறு, அரசியல் கட்சிகளைத் திட்ட மிட்டுஉருவாக்கவேண்டிய தேவை நன்கு விளங்குகிறது. ஆளும் கட்சியை எதிர்ப்பதும், அவர்களது குறைபாடுகளை எடுத்துரைப் பதும், சமயமும் சூழ்நிலையும் உதவும்போது ஆளும் கட்சியைப் பதவியிழக்கச் செய்வதும் எதிர்க் கட்சியினரின் முக்கிய அலுவல் களாக இருக்கவேண்டும்.

நமது அரசியலமைப்புத் திட்டம் இவ் உண்மைகளைத் தெளிவாக எடுத்துரைக்கவில்லை—மறைபொருளாகவே கூறியிருக்கின்றது. திட்ட விதி 75 (3) மட்டிலும் இதைக் குறித்துச் சற்று நேரடியாகப் பேசுகின்றது. ஆனால், நமது அரசியலமைப்புத் திட்டத்தின் அடிப்படைகளை ஊன்றிக் கவனிப்பதால், நாம் மேலே கூறியுள்ள கொள்கைகளை அடிப்படையாகக்கொண்ட கட்சிமுறை அரசியல் தேவை என்ற கருத்தையே நம் திட்டமும் உள்ளடக்கியிருப்பது நன்கு புலப்படும். பெரும்பாலும் இதற்குச் சட்டபூர்வமான அனுமதி வழங்கப்பட்டிருக்கிறதென்றே கூறலாம். அகில இந்திய அடிப்படையிலும் மாநில அடிப்படையிலும் தேர்தல்கள் நடத்துவதில், இந்தியத் தேர்தல் கமிஷன், இந்திய நாட்டிலுள்ள அரசியல் கட்சிகளை அதிகாரபூர்வமாக ஏற்றிருக்கிறதென்று நாம் கூறலாம். இந்திய தேசிய காங்கிரஸ், பிரஜா-சோஷலிஸ்ட் கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி, அகில இந்திய ஜனசங்கம் ஆகிய நான்கு அரசியல் கட்சிகளுக்குத் தேர்தல் கமிஷன் அனைத்திந்திய அந்தஸ்து வழங்கியிருக்கிறது.

## மக்கள் சபையில் அனைத்திந்திய அரசியல் கட்சிகளின் ஆதாரவலிமை

| அரசியல் கட்சி | முதல் பொதுத் தேர்தல் | | | இரண்டாவது பொதுத் தேர்தல் | | |
|---|---|---|---|---|---|---|
| | வோட்டுகளின் சத விகிதம் | ஸ்தானங்கள் | ஸ்தானங்களின் சத விகிதம் | வோட்டுகளின் சத விகிதம் | ஸ்தானங்கள் | ஸ்தானங்களின் சத விகிதம் |
| இந்திய தேசியக் காங்கிரஸ் | 45·0 | 363 | 72·6 | 46·5 | 366 | 73·4 |
| பிரஜா-சோஷலிஸ்ட் கட்சி | 16·4* | 26 | 5·2 | 10·0 | 20 | 4 |
| இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி | 3·3 | 17 | 3·4 | 9·8 | 27 | 5·4 |
| பாரதீய ஜனசங்கம் | 3·1 | 3 | 0·6 | 5·7 | 4 | 0·8 |

* பண்டைய இந்திய சோஷலிஸ்ட் கட்சி, மற்றும் கிஸான் மஸ்தூர் பிரஜா கட்சி ஆகியவைகளின் தேர்தல் முடிவுகளின் கூட்டுத்தொகை இங்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

# 23. மத்திய நீதித்துறை—பெருநீதிமன்றம்

## பெருநீதிமன்றத்தின் தேவை

மாநிலம், மற்றும் மத்திய அரசுகளிடையில் அதிகாரத்தைப் பகிர்ந்தளிப்பதென்பது கூட்டாட்சி முறை அரசியலின் அடிப்படைகளில் ஒன்றாக இருக்கிறது. இவ் அதிகாரப் பிரிவினை, திட்டவட்டமாக எழுதிவைக்கப்படுகிறது. மொழியால் எழுதிவைக்கப்பெறுவது எக்காலத்திலும் ஒரே கருத்துடையதாக விளங்க முடியாது. எந் நேரத்திலும் எல்லோரும் அதை ஒரே கருத்துடையது என்று கொள்வதும் இயலாது. அதிகார வரம்புகளைக் குறித்தும், அதிகாரப் பிரிவினையின் அடிப்படைகளைக் குறித்தும், கூட்டாட்சி முறையில் எந் நேரத்திலும் மத்திய அரசினருக்கும் மாநில அரசினருக்கும் கருத்து வேற்றுமைகள் தோன்றுவது மிகவும் இயற்கையாகும். அத்தகைய பூசல்கள் யாவும் அரசியலமைப்புத் திட்டத்தை அடிப்படையாகக்கொண்டு தீர்க்கப்பட வேண்டும். அரசியலமைப்புத் திட்டம் நாட்டில் ஈடிணையற்ற உயர்ந்த சட்டத் தொகுதியாக விளங்கும். மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்குமிடையே ஏற்பட்டிருக்கும் அதிகாரப் பிரிவினையின் தத்துவங்கள் யாவும் அதிலடங்கியிருக்கின்றன. அதே நேரத்தில், பாரபட்சமற்ற சுதந்தரமானதொரு நிறுவனம் அத்தகைய பூசல்களைத் தீர்த்து வைக்கவேண்டுமென்பது நீதி அன்னையின் விருப்பமாகும். கூட்டாட்சிமுறை அரசியலைக் கடைப்பிடித்தொழுகும் நாட்டில் பெருநீதிமன்றம் அப் பணியைச் சிறப்பாகச் செய்து வருகிறது. அத்தகையதொரு நாட்டின் தவிர்க்கவியலாத உறுப்புகளின் ஒன்றாக அது விளங்குகிறது. அரசியலமைப்புத் திட்டத்திற்கு விளக்கம் தருவதில் அது தலைசிறந்து விளங்குகின்றது. மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்குமிடையில் ஏற்படுகின்ற விவகாரங்களில் தீர்ப்பு வழங்கும் உயர்நீதி மன்றமாக அது பணியாற்றுகின்றது. இந்திய அரசியலமைப்புத் திட்டம் நிறுவியிருக்கும் கூட்டாட்சி அரசு முறையில் இந்திய

நாட்டுப் பெருநீதிமன்றம் ஆற்றிவரும் பணிகளில் தலைசிறந்த வொன்ருக இதைக் குறிப்பிடவேண்டும்.

இந்திய நாட்டுப் பெருநீதிமன்றத்தைச் சாதாரணமான தொரு ஃபெடரல் திட்டப் பெருநீதிமன்றம் என்று மட்டிலும் கூறுவது சாலப் பொருத்தமுடையதாகாது. திட்ட விதி 32-ஐ ஆராய்ந்துவரும்போது, இந் நீதிமன்றம் ஆதார உரிமைகளின் காவலஞக விளங்கிவருகிறது என்பதையும் நாம் முன்னரே கூறி உள்ளோம். மத்திய அரசாயினும் சரி, அல்லது மாநில அரசாயினும் சரி, இவ் உரிமைகளைப் பறித்துவிடாமல் தீவிரமாக அவைகளைப் பாதுகாப்பதும் இந் நீதிமன்றத்தின் சிறந்த பணிகளில் ஒன்ருக இருந்துவருகிறது. இவ் ஆதார உரிமைகளின் அடிப்படைத் தத்துவத்தையும், அவை இயங்கவேண்டிய முறைகளையும் இந் நீதிமன்றம் அவ்வப்போது வெளியிட்டுவருகின்றது. இதனல், சட்டமன்றங்கள் இயற்றுகின்ற வரம்பு மீறிய சட்டங்களையும், ஆட்சித்துறையினரின் யதேச்சாதிகாரச் செயல்களையும் தடைசெய்து, நீதிமன்றம் குடிமக்களின் உரிமைகளைக் காப்பாற்றிவருகிறது. கிரிமினல், மற்றும் சிவில் வழக்குகளில் மேல்முறையீடுகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் இந்திய நாட்டின் இறுதி மன்றமாகவும் அது பணியாற்றிவருகிறது. சிவில், கிரிமினல் வழக்குகளில் கீழ்கோர்ட்டார் வழங்கும் தீர்ப்புகள் யாவையும் புனராய்வு செய்வதற்கான ஏராளமான அதிகாரங்களை இந் நீதிமன்றத்திற்கு,அரசியலமைப்புத் திட்டம் வழங்கியிருக்கின்றது. அவ்வாறு செயல்படும்போது, அரசியலமைப்புத் திட்டத்தையும் பாராளுமன்றச் சட்டங்களையும் விளக்குவதற்கு வாய்ப்புகளைப் பெறுவதோடு, வெவ்வேறு மாநில மன்றங்களின் சட்டதிட்டங்களையும் பரிசீலனை செய்கின்ற வாய்ப்பு இந் நீதிமன்றத்திற்குக் கிடைத்துவிடுகிறது.

மேலும், சட்டநுணுக்கமான பிரச்சினைகளில் அவ்வப்போது இந்திய ஜனதிபதிக்குத் தேவையான மதியுரைகளையும் பெருநீதிமன்றம் வழங்கிவருகிறது. பொதுநலனைச் சார்ந்த அத்தகைய விசேடப் பிரச்சினைகள் எழுகின்றபோது, ஜனதிபதி அவைகளை நீதிமன்றத்திற்கு அனுப்பிவைத்து, மன்றத்தின் சிறந்த ஆலோசனையைப் பெறுவார். இவ்வகையில், இந்தியப் பெருநீதிமன்றம் தனக்கே உரிய முறையில் சிறந்த பணியாற்றிவருகிறது எனக் குறிப்பிடலாம்.

### ஒற்றை—நீதித்துறைப் பணி

கூட்டாட்சி முறையில் இயங்கிவருகின்ற பிற நாடுகளைப் போலன்றி, ஒற்றை—நீதித்துறைப் பணி முறையை இந்திய நாடு

கடைப்பிடித்துவருகின்றது. இது நடைமுறையிலிருந்துவரும் அரசியலமைப்புத் திட்டத்துடன், புதிதாக முளைத்து எழுந்த முறை என்று கூறமுடியாது. 1935ஆம் ஆண்டு அரசியலமைப்புச் சட்டத்தின்கீழ், அரசியலமைப்பு விவகாரங்களில் தீர்ப்பு வழங்குவதில் ஃபெடரல் கோர்ட் முதன்மையானதென்று ஏற்பட்டபோது இம் முறை சற்றுக்குறுகிய அளவில் கடைப்பிடிக்கப்பெற்றதெனக் கூறலாம். ஆனால், ஃபெடரல் நீதிமன்றத்தின் தீர்ப்புகள் முடிவானவை என்று ஏற்பட்டுவிடவில்லை. ஏனெனில், ஃபெடரல் மன்றத்திலிருந்தும் லண்டன் மாநகரிலுள்ள பிரிவி கௌன்சிலின் நீதி பரிபாலனக் கமிட்டிக்கு வழக்குகளை எடுத்துச் செல்லும் வழக்கமிருந்தது. தற்போது, அவ் வேலையைச் செய்துவரும் பெருநீதிமன்றத்திற்கு அத்தகைய கட்டுப்பாடுகள் இல்லை. இந்திய நாட்டுநீதித்துறை அமைப்பில் இம்மன்றம் உயர்ந்ததோர் இடம் பெற்றுள்ளது. நீதித்துறை இயங்குவதைச் சிறந்த முறையில் கண்காணித்துக் கட்டுப்படுத்தவும், நியாயம் வழங்குவதில் உயர்ந்த இடம்பெறுவதற்கும் அதற்கு நல்வாய்ப்புகள் உண்டு. இவ்வாறு நமது அரசியலமைப்புத் திட்டம் உருவாக்க விரும்பும் ஜனநாயக அரசுமுறையின் உறுப்புகளில் ஒன்றாக விளங்குவதற்கு அது முயன்றுவருகிறது.

ஒற்றைவகையான நீதித்துறை ஏற்படுத்தியதால் ஒரு சில நன்மைகள் விளைந்தன. நீதித்துறை அதிகார வரம்பில் ஒற்றுமை ஏற்பட்டிருப்பதோடு, நாடு முழுவதற்கும் பொதுப் பணி நீதித்துறை அலுவலர்களை அமர்த்துவதற்கும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. வழக்கறிஞர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து நேரடியாகப் பெருநீதிமன்ற நீதிபதியாக அமர்த்துவதில் தடையேதுமில்லை. ஆனால், இதுகாறும் அவ்வாறு ஏற்படவில்லை. பெருநீதிமன்ற நீதிபதியாக உயர்நீதிமன்றப் பணியாளர்களே இதுவரை அமர்த்தப்பட்டிருக்கின்றனர். அதைப்போலவே, உயர்நீதிமன்ற அலுவலர்களாக, அதிலும் குறிப்பாக மாவட்ட செஷன்சு நீதிபதிகளாகக் கீழ்க்கோர்ட்டுகளில் பணியாற்றி அனுபவம் பெற்றவர்களையே அமர்த்துவது வழக்கமாயிருக்கிறது. உயர்நீதிமன்றம் ஒன்றிலிருந்து நாடெங்கிலும் அமைந்துள்ள பிற உயர்நீதிமன்றங்களுக்கு நீதிபதிகளை மாற்றுவதும் வழக்கிலிருந்து வருகிறது. பெருநீதிமன்றத்தைத் தலைமையாகக் கொண்ட இந்திய நாட்டு நீதித்துறை, எல்லா வகைகளிலும் இவ்வாறாக, நெருக்கமான இணைப்பு பெற்ற முறையொன்றாக விளங்கிவருகிறது. பெருநீதி மன்றத்தின் ரிட் உத்தரவிற்கு மத்திய, மாநில, ஸ்தல எல்லைகளில் முழுவதிலும் செல்வாக்குண்டு என்பதோடு, அரசியலமைப்பு, சிவில், கிரிமினல் ஆகிய பல சட்டப் பிரிவுகளிலும் நல்ல விலைமதிப்பு உண்டு.

## சுதந்தர மன்றம் (திட்ட விதி 124)

தலைமை நீதிபதி ஒருவரையும் மற்றும் பத்து நீதிபதிகளையும் கொண்டு இப் பெருநீதிமன்றம் செயலாற்றி வருகிறது 1950ஆம் ஆண்டில் புதியதோர் அரசியலமைப்புத் திட்டத்தின் கீழ் மன்றம் தொடங்கியபோது, அதில் எட்டு நீதிபதிகளே யிருந் தனர். ஆனால், 1957ஆம் ஆண்டுப் பாராளுமன்றச் சட்டம் ஒன்று அதன் மொத்த எண்ணிக்கையைத் தற்போதுள்ள பதினொன்றாக உயர்த்திற்று.

அரசியலமைப்புத் திட்ட அடிப்படையில் மன்றம் முழுச் சுதந்தரமுடையதாக விளங்கவேண்டும். நீதிபதிகள், பூரண சுதந்தரம் பெற்றுச் செயலாற்றவேண்டுமென்பதற்காகக் கீழ்க் காணும் முறைகள் கையாளப்படுகின்றன.

### (1) நியமனம்

பெருநீதிமன்ற நீதிபதி ஒவ்வொருவரையும், இந்திய நாட்டு ஜனாதிபதி பதவியிலமர்த்துவார். அவ்வாறு செய்யும்போது பெருநீதிமன்ற நீதிபதிகள், மற்றும் மாநில உயர்மன்ற நீதிபதி களைத் தேவைக்கேற்பக் கலந்தாலோசித்து உரியவரைத் தேர்ந் தெடுப்பது என்ற வழக்கு இருந்துவருகிறது. தலைமை நீதிபதி நீங்கலாகப் பிற நீதிபதிகளை அமர்த்துவதற்குத் தலைமை நீதிபதி யுடன் சட்டபூர்வமாக, ஜனாதிபதி கலந்தாலோசிக்கவேண்டும் என்ற விதி அமைக்கப்பட்டுள்ளது.

### (2) யோக்யதாம்சங்கள்

நீதிபதிகளை நியமிப்பதில், விருப்பு வெறுப்புகளை அகற்ற வேண்டுமென்ற நோக்கமுடன் நியமனம் பெறுவோர் மிகச் சிறந்த யோக்யதாம்சங்களைப் பெற்றிருக்கவேண்டுமென்று அரசியலமைப்புத் திட்டத்தில் கூறப்பட்டுள்ளது. நாட்டின் தலைசிறந்த நீதிமன்றத்தில் அமரும் நீதிபதிகளுக்கு அத்தகைய யோக்கியதாம்சங்கள் மிகத்தேவை என்பதையும் உணர்ந்தே அவ்வாறு விதித்துள்ளனர்போலும். யோக்கியதாம்சங்கள் வருமாறு: நியமனம் பெறுபவர் இந்தியப் பிரஜையாக இருக்க வேண்டும். (அ) உயர்நீதிமன்றம் ஒன்றில் ஐந்தாண்டுகளாகப் பணியாற்றி இருக்கவேண்டும்; அல்லது (ஆ) உயர்நீதிமன்றம் ஒன் றில் பத்தாண்டுக் காலம் வழக்கறிஞராகப் பணியாற்றி இருக்க வேண்டும்; அல்லது (இ) ஜனாதிபதி அவரை மிகச் சிறந்த சட்ட நிபுணராகக் கருதவேண்டும். நீதிமன்றங்களில் குறித்த காலம் பணியாற்றி அனுபவம் பெறாத சிறந்த சட்ட நிபுணர் களையும் ஜனாதிபதி இப் பதவிக்கு அமர்த்தக்கூடுமென்பதால்,

உரிய நபரைத் தேர்ந்தெடுப்பதற்கான வாய்ப்பு சற்றுப் பெருக்கப்படுகிறது. உதாரணமாகச் சர்வகலாசாலை ஒன்றில், பெரும் புகழ்பெற்று பணியாற்றி வருகின்ற சட்ட நிபுணர் ஒருவர் பெருநீதிமன்றத்தில் அமர்த்தப்படுவதற்கு இச் சட்ட அடிப்படையில் அருகதையுள்ளவராகிவிடுவார்.

(3) பதவிக்காலம்

ஆயுட் காலம் முடியும்வரை பதவியிலிருப்பதை அரசியலமைப்புத் திட்டம் அனுமதிக்கவில்லை என்றாலும், நடைமுறையில், சற்றேறக்குறைய நெடுநாட்களுக்கு. நியமனம்பெற்ற ஒருவர் பதவியிலிருக்கக்கூடும். ஏனெனில் நீதிபதிகளாக நியமனம் பெற்றவர்கள், அறபத்தைந்து வயதைக் கடக்கும் வரையில் பதவியிலிருக்கலாம். இந்தியனொருவனின் சராசரி வயதை எண்ணிப் பார்க்கும்போதும் மூப்படைந்த இந்தியனின் வேலைத் திறனை எண்ணும்போதும் இவ் வயது உச்சவரம்பு போற்றக் கூடியதாக இருக்கிறது.

(4) ஓய்வுபெற்றபின் பணியாற்றுவதில் தடை

பெருநீதிமன்றத்தில், நீதிபதியாகப் பணியாற்றி ஓய்வு பெற்ற பின்னர், இந்திய நாட்டெல்லைக்குள் அமைந்த நீதி மன்றங்களிலோ அல்லது பிற நிறுவனங்களிலோ வழக்கறிஞராகப் பணியாற்றக்கூடாது. ஆனால், ஓய்வு பெற்ற நீதிபதியொருவரைப் பிரத்தியேக அலுவல்களுக்கென்று அரசாங்கம் நியமிப்பதில் சட்ட அடிப்படையில் தடைகளெதுவுமில்லை.

(5) பதவியிலிருந்து நீக்குதல்

திறனற்றவர் என்றோ அல்லது ஒழுங்கீனமாக நடப்பவர் என்றோ மெய்ப்பித்தாலன்றி, பெருநீதிமன்ற நீதிபதியொருவரைப் பதவியிலிருந்து நீக்கிவிட இயலாது. ஒழுங்கீனம் அல்லது திறனின்மை ஆகியவைகளை மெய்ப்பிக்கவென்று கையாளப்படும் முறையைக் கட்டுப்படுத்துவதற்குப் பாராளுமன்றத்திற்கு அதிகாரமுண்டு. கையாளப்படும் முறை எத்தகையதாக இருந்தாலும், நீதிபதியொருவரைப் பதவிநீக்கம் செய்வதற்குப் பாராளுமன்ற அவை ஒவ்வொன்றிலும் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டு, ஆஜராகியுள்ள உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் வாக்களித்து, மன்ற அவையின் மொத்த அங்கத்தினர் தொகையில் பெரும்பான்மையினரின் ஒப்புதலையும் பெறவேண்டும். அவ்வாறு நிறைவேறிய தீர்மானத்தை ஜனாதிபதிக்கு அனுப்பிவைத்தால், அதனடிப்படையில் நீதிபதியைப் பதவிநீக்கம் செய்யவேண்டுமென்று ஜனாதிபதி உத்திரவிடுவார்.

(6) ஊதியம்

அலுவலர் ஒருவருக்குக் கிடைக்கும் சுதந்தரம், பெரிதும் அவருக்களிக்கப்படுகின்ற ஊதியத்தையும், அவ் வூதியத்தை வழங்கும் அதிகாரம் பெற்றவர்களின்மீது பெறுபவருக்குள்ள உறவுமுறைகளையும்பொறுத்து அமைகின்றது பெருநீதிமன்ற நீதிபதிகளைப் பொறுத்த வரையில், இவ்வகையில் அரசியலமைப்புத் திட்டம் நல்ல பாதுகாப்பளிக்கிறது. தலைமை நீதிபதிக்கு மாதமொன்றுக்கு ரூ. 5.000-ம், பிற நீதிபதிகளுக்கு மாதமொன்றுக்குத் தலா ரூ. 4,000-ம் வழங்கப்படவேண்டுமென்று நமது திட்டம் கூறுகின்றது. வேறு பல நாடுகளின் அரசியலமைப்புத் திட்டங்கள் இவ்வூதிய நிர்ணயத்தைச் சட்டமன்றங்களின் பொறுப்பில் விட்டுவிடுகின்றன. உபரியாக ஒவ்வொரு நீதிபதிக்கும் வசிப்பதற்கென்று தனி வீடும் மற்றும் பல உரிமைகளும் சலுகைகளும் வழங்கப்படுகின்றன. சம்பளம், படி, மற்றும் உரிமைகள், விடுமுறை, அல்லது உபகாரச் சம்பளம் பெறுவதற்கான வாய்ப்புகள் (ஓய்வுபெற்றபின் அளிக்கப்படுவது) ஆகியவைகளை வேலைக்கமர்த்திய பின்னர், நீதிபதிக்குக் குறைவேற்படுகின்ற வகையில் மாற்றிவிட முடியாது. இவ்வகையான, திட்டவட்டமான விதிக்கு ஒரு விலக்குமட்டிலுமுண்டு. ஜனாதிபதி, நாட்டின் நிதிநிலை மிக அபாயகரமாக இருக்கிறதென்று பிரகடனம் செய்யும்போது, பாராளுமன்றச் சட்டமொன்றின் வாயிலாக நீதிபதிகளின் ஊதியத்தைக் குறைக்கலாகும்.

(7) பணியாளர் குழு

திட்டத் தயாரிப்பாளர்கள் இம்மட்டிலும் திருப்தியடைந்து விடவில்லை. தனக்குத் தேவையான பணியாளர்களைத் தாங்களே அமர்த்திக்கொள்ளவும், அவர்களைக் கட்டுப்படுத்தி வேலை வாங்குவதற்குமான உரிமைகளையும் பெருநீதிமன்றத்திற்கே வழங்கி மேலும் ஒருபடி முன்னேறினர். அத்தகைய சலுகை வழங்கப்பெறவில்லையெனில், மன்றத்தின் சுதந்தரம் பெயரளவிலேயே இருக்க நேரிடுமென்று அவர்கள் எண்ணினர். பணியாளர் வேறு துறைக்குச் செல்ல விரும்பினாலும். அல்லது பதவி உயர்வு பெற விழைந்தாலும் நீதித் துறையின் சுதந்தர வாழ்விற்குப் பங்கமேற்படக்கூடும். எனவே, பெருநீதிமன்ற வேலையாட்கள் மற்றும் ஆபீசர்களைத் தலைமை நீதிபதியோ, அல்லது அவரது அங்கீகாரம் பெற்ற மற்றுள்ள நீதிபதிகளோ அல்லது பிற அலுவலர்களோ வேலையில் அமர்த்தவேண்டும். அவ்வாறு, அமர்த்தப்படுகின்ற பணியாளர்களின் வேலைக்குரிய நிபந்தனைகளையும் நீதிமன்றத்தினரே தீர்மானிக்கின்றனர். மேலும், நிர்வாகச் செலவுகள், இவ்வலுவலர்களுக்கான ஊதியம் மற்றும்

மன்றத்தைப் பொறுத்த மராமத்துச் செலவுகள் ஆகியவைகளுக்குத் தேவையான பணவசதி, இந்தியத் திரட்டு நிதியிலிருந்து அளிக்கப்படுகிறது.

(8) பாதுகாப்புகள்

கடமையை நீதிபதிகள் நிறைவேற்றிவருகின்றபோது அவரது செயல்களையும் முடிவுகளையும் குறைகூற இயலாதென்று அமைந்திருப்பதை நாம் இறுதியாகக் குறிப்பிட வேண்டும். இத்தகைய பாதுகாப்பளித்து மன்றத்தின் சுதந்தரத்தை நம் திட்டத் தயாரிப்பாளர்கள் பேணியிருக்கின்றனர். இதனால், மன்றம் ஒன்றின் தீர்ப்பையோ அல்லது தனியொரு நீதிபதியின் கருத்தையோ அறிவுசார்ந்த ஆராய்ச்சிக்குட்படுத்தக்கூடாது என்ற தடையில்லை என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். முடிவெய்துவதிலும், செயல்படுவதிலும், பொருத்தமற்ற காரணங்களைக் கற்பிக்கலாகாது என்ற கருத்தே உள்ளடங்கியிருக்கிறது. நீதிபதியொருவரின் நடத்தையைக் குறித்துப் பேசுவதற்குப் பாராளுமன்றத்தினருக்கும் உரிமை கிடையாது. நீதிபதியொருவரைப் பதவிநீக்கம் செய்வதற்கான பிரச்சினை எதிர்நோக்கி இருக்கும்போதுமட்டிலும் அவ்வுரிமை மன்றத்திற்கு உண்டு. குரோத மனப்பான்மையுடனும், குறைகூற ஆவலிருப்பதால் குற்றம் கூறுபவர்களின் மேலும், அவதூறு குற்றம்சாட்டி வழக்குத் தொடர்வதற்கு மன்றத்திற்கு அதிகாரமுண்டு. அத்தகையவர்களுக்கு மன்றம் உரிய தண்டனைகளையும் வழங்கக்கூடும். மன்றத்தின் கௌரவத்தைக் காப்பதற்கும், அதற்கு உரிய பாதுகாப்பளிப்பதற்கும். இத்தகைய சலுகைகள் வழங்கப்பட்டிருக்கின்றன.

நிர்ணய சபையில் அம்பேத்கார் கூறியதைப்போல, திட்டத் தயாரிப்பாளர்கள் மன்றம் ஒன்றைத் தோற்றுவித்து அதற்குப் பூர்ண சுதந்தரம் வழங்கவேண்டுமென்றும் எண்ணியிருந்தனர். அவ்வாறு செய்வதால், ஆட்சித்துறையினருக்கும் மற்றுள்ளவர்களுக்கும் ஒரு சிறிதும் அச்சமின்றி மன்றம் செயல்படக்கூடுமென்று அவர்கள் எண்ணினர். 'ஏகாதிபத்திய முறையிலோர் ஏகாதிபதியைத்' தோற்றுவிக்கவேண்டுமென அவர்கள் எண்ணவில்லை. அவ்வெண்ணத்துடன் அவர்கள் செயல்பட்டிருந்தால், நீதித் துறையினருக்கும் ஆட்சித்துறையினருக்குமிடையில் எதிர்பாராத பூசல்களும் தேவையற்ற பிணக்குகளும் தோன்றியிருக்கக்கூடும். திட்டத் தயாரிப்பாளர்கள் மனத்தில் எண்ணியிருந்ததைப் பன்னிரண்டு ஆண்டுகளாகச் செயல்பட்டுவரும் மன்றம் நடைமுறையில் செயலாற்றியிருக்கிறது என்பதில் ஐயமெதுவுமில்லை.

## மன்றத்தின் அதிகார எல்லை

பல நாடுகளின் அரசியலமைப்புத் திட்டங்களை ஆராயும் போது, இந்திய நாட்டுப் பெருநீதிமன்றத்திற்கு, உலகிலுள்ள நீதிமன்றங்கள் யாவற்றிலும் மிக அதிகமான அதிகாரங்களும், சலுகைகளும் வழங்கப்பட்டிருக்கிறதென்று தெளிவாகத் தெரிய வரும். இந் நீதிமன்றத்தின் அதிகாரங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவைகளை முறையே ஆதார அதிகாரம், அப்பீலைப் பற்றிய அதிகாரம், அறிவுரை வழங்கும் அதிகாரம் என்று கருதலாகும்.

### ஆதார (மூல) அதிகாரம் (திட்ட விதி 131)

(அ) இந்திய அரசாங்கத்திற்கும், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட துணைநாடுகளுக்குமிடையே எழுகின்ற வழக்குகளிலும்; அல்லது (ஆ) மத்திய, மாநில அரசுகளுககும், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாநில அரசுகளுக்கும் இடையில் எழுகின்ற வழக்குகளிலும்; அல்லது (இ) இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட மாநிலங்களுக்கு இடையிலுள்ள வழக்குகளிலும் முதன் முறையாக வழக்குகளை அனுமதித்து விசாரணை செய்வதற்குப் பிரத்தியேக சலுகைகள் உண்டு. வழக்கு ஒரு சட்ட சார்புள்ளதாக இருக்கவேண்டும் அல்லது ஆதார உண்மையைப்பற்றியதாக இருக்கவேண்டும். அவைகளை யொட்டி, திட்ட அடிப்படையில் வழக்கிலிருந்துவரும் உரிமைகளையும், அல்லது எவ்வளவில் அவ் வுரிமைகளைப் பெறுவதற்கு இடமுண்டு என்பதையும், பெருநீதிமன்றம் தீர்மானித்துத் தீர்ப்பளிக்கலாகும்.

### அப்பீல்களைப்பொறுத்த அதிகாரம் (திட்டவிதி 132-லிருந்து 136 வரையிலும்)

அப்பீல்களைப்பொறுத்த, பெருநீதிமன்ற அதிகாரங்களை அரசியலமைப்புச் சார்ந்தவை, சிவில், கிரிமினல், விசேஷ வழக்குகள் என்று நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்.

இந்திய நாட்டு எல்லைக்குள்ளாக அமைந்திருக்கும் நீதிமன்றமொன்று வழங்குகின்ற டிகிரி அல்லது இறுதி உத்தரவிற்குப் பெருநீதிமன்றத்திற்கு மேல்முறையீடு செய்துகொள்ளலாம். அத்தகைய வழக்குகள், சிவில், கிரிமினல், மற்றும் உள்ள வகைகளாகவும் இருக்கலாம். திட்ட விதியின் இலக்கணத்தை வழக்கு அடிப்படையாகக் கொண்டிருக்கிறதென, உயர்நீதிமன்றம் நற்சான்று வழங்கவேண்டும். இவ்வாறு பெருநீதிமன்றத்திற்கு வழக்கை எடுத்துச் செல்வதற்கு, திட்ட விதி 132 (1) அனுமதிக்கிறது.

உயர்நீதிமன்றம், வழக்கைப் பெருநீதிமன்றத்திற்கு அப்பீலில் எடுத்துச் செல்லுவதற்கான அனுமதி வழங்குவதற்கு மறுத்து விட்டாலும், திட்ட அடிப்படையில் அவ் வழக்கிற்கான தீர்ப்பு தேவை என்று பெருநீதிமன்றம் கருதினுல் அப்பீலில் வழக்கை அனுமதிப்பதற்குப் பெருநீதிமன்றமே அதிகாரம் பெற்றிருக்கிறது. அவ்வாறு, அனுமதி அல்லது நற்சான்று பெற்றுவிட்டால் வழக்கில் சம்பந்தமுடைய ஏதாவதொரு கட்சியினர், திட்ட அடிப்படையில் நியாயம் வழங்குவதில், உயர்நீதிமன்றம் தவறி விட்டதென்பதை எடுத்துக்காட்டிப் பெருநீதிமன்றத்திற்கு அப்பீல் செய்துகொள்ளலாம். இவ்வாறு, சிவில், கிரிமினல் அல்லது பிற வழக்குகளேயாயினும், திட்ட அடிப்படையில், அவைகளுக்குத் தீர்ப்பு வழங்கவேண்டுமெனில், அரசியலமைப்புத் திட்டத்தின் நோக்கத்தையும், அதற்கேற்ற விளக்கத்தையும் வழங்குவதில் பெருநீதிமன்றத்திற்கே இறுதி அதிகாரம் வழங்கப் பட்டிருக்கிறது. இதனுல், அரசியலமைப்புத் திட்டத்தின் காவலனுகவும், திட்டத்தை விளக்குவதில் இறுதி அதிகாரம் பெற்ற உயர்மன்றமாகவும் அது விளங்கி வருகிறது.

சிவில் வழக்குகளில் மேல்முறையீட்டு மன்றமாகப் பெருநீதி மன்றம் செயல்படுவதில் ஒருசில கட்டுப்பாடுகள் உண்டு. வழக்கில் சம்பந்தப்பட்ட கட்சியினர் ஒருவர், பெருநீதிமன்றத்திற்கு வழக்கை எடுத்துச்செல்லவேண்டுமெனில், அவ் வழக்கில் அடங்கியுள்ள தொகையின் மொத்த மதிப்பு ரூபாய் 20,000-க்குக் கூடியதென்றும், அல்லது பெருநீதிமன்றத்திற்கு எடுத்துச் செல்வதற்கான தகுதியுடையதென்றும் உயர்நீதிமன்றம் ஏற்றுச் சிபாரிசு வழங்கவேண்டும். மேலும், மன்றத்தில் வழக்குத் தடைப்படுமேயெனில், எந்தக் கட்சியினரும் உயர்நீதிமன்ற தீர்ப்பைக் குறித்த அதிருப்தியை வெளியிடலாம். அரசியலமைப்புத் திட்ட அடிப்படையைக் குறித்தவரையில் அது செல்லத்தகாதென்றும் கூறிவிடலாம். பெருநீதிமன்றத்தின் மேல் முறையீடுபற்றிய அதிகாரவரம்பின் எல்லையைப் பாராளுமன்றச் சட்டமொன்றின் மூலம் விஸ்தரிக்கவும் கூடும்.

கிரிமினல் வழக்கொன்றில் பெருநீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்துகொள்ளவேண்டுமெனில், பின்வரும் நிபந்தனைகளை நிறைவேற்றவேண்டும் :

(1) குற்றம் சாட்டப்பெற்ற ஒருவனை, நிரபராதி என்று கீழ்க்கோர்ட்டார் தீர்மானித்து, அப்பீலில் அவனைக் குற்றவாளி என்று உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்து, மரண தண்டனை வழங்கியிருக்கவேண்டும்; அல்லது

(2) தனது அதிகார வரம்பிற்கு உட்பட்ட நீதிமன்றம் ஒன்றிலிருந்து வழக்கை வாபஸ் பெற்றுத் தன்முன் எடுத்துவரச்செய்து, விசாரித்துக் குற்றம் சாட்டப் பெற்றவனைக் குற்றவாளியென்று முடிவுகூறி, உயர்நீதி மன்றமொன்று அவனுக்கு மரணதண்டனை வழங்கி இருக்கவேண்டும்; அல்லது

(3) உயர்நீதிமன்றம் வழக்கைப் பெருநீதிமன்றத்திற்கு எடுத்துச்செல்வதற்கு அருகதையுடையதென்று தீர்மானித்திருக்கவேண்டும். இதைக் குறித்த, பெரு நீதிமன்றத்தின் அதிகார வரம்பின் எல்லையை விஸ்த ரிப்பதற்கும் பாராளுமன்றத்திற்கு அதிகாரமுண்டு. 'நவீன உலகம் மற்றும் இந்திய மக்களின் அறிவொளி பெற்ற உள்ளக் கிடக்கைகளை மதித்து' இத்தகைய ஏற்பாடுகளைச் செய்யவேண்டியதாயிற்று என டாக்டர் அம்பேத்கார் கூறினர்.

அரசியலமைப்புத் திட்டத்தைப் பொறுத்து, தனிச் சலுகை கள் வழங்கியிருப்பதும், அதைப் பிற சட்டத் தொகுதிகளிலிருந்து தனியாகப் பிரித்துப் பேசுவதையும் கண்டு சிலர் வியப்பெய்தவும் கூடும். இவ்வாறு, மேல்முறையீடுகளை இரு தனிப் பிரிவுகளாகப் பிரித்திருப்பதற்கான காரணங்களைச் சற்றுத் தெளிவாக விளக்க வேண்டும். பெருநீதிமன்றத்தின் முன் எடுத்துவரப்படும் வழக் கொன்றில் திட்ட விதிகளைப்பற்றிய பிரச்சினைகள் அடங்கியிருக்கு மெனில், அவ் வழக்கை விசாரணை செய்வதற்கென்று குறைந்த அளவில் ஐந்து நீதிபதிகளேனும் அமரவேண்டுமெனத் திட்டவிதி 132 கூறுகிறது. பிற வழக்கு அப்பீல்களை விசாரித்து முடிவு கூறுவதற்கெனப் பெருநீதிமன்றம் தேவையான நீதிபதிகளை அமர்த்திக்கொள்ளக்கூடும். மன்றம் ஏற்படுத்தி இருக்கும் வழக் காறுகளுக்கிணங்க திட்டப் பிரச்சினைகள் அடங்கிய வழக்குகளை விசாரணை செய்வதற்கென்று ஐந்துக்கு மேற்பட்ட நீதிபதிகள் அமருவர். மற்றுள்ள சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரணை செய்வதற்கு மூன்று நீதிபதிகளடங்கிய நியாயசபை ஏற்படுத்தப் படும். தற்போது பெருநீதிமன்றத்தில் பதினொரு நீதிபதிகள் இருந்துவருகின்றனர். ஒரே நேரத்தில் திட்டப் பிரச்சினைகள் அடங்கிய வழக்குகளை விசாரிப்பதற்கென்று குழுவொன்றையும், மற்றும் சிவில், கிரிமினல் பிரிவு ஒவ்வொன்றுக்கும் குழு ஒன்று வீதமும் அமைப்பது சாத்தியமாகிறது.

தனிரக முறையீடு

அதிகார எல்லை வரம்பைக் குறிப்பதில் திட்ட விதி 136-ஐ மிகவும் முக்கியமானதொன்ருகக் கருதவேண்டும். அவ் விதி

கூறுவதாவது : 'இந்த அதிகாரத்தில் கண்டிருப்பவை நீங்கலாக இந்திய நாட்டு எல்லையிலுள்ள மன்றம் ஒன்றின் தீர்ப்பு, டிக்ரி, தீர்மானம், தண்டனை அல்லது உத்தரவு ஆகியவைகளைப் பொறுத்த அப்பீல்களை அனுமதிப்பதற்குப் பெருநீதிமன்றத்திற்குச் சலுகை உண்டு. ஆயுதம் தாங்கிய இந்தியப் படையினரால் பிரத்தியேகமாக அமர்த்தப்படும் நீதிமன்றங்கள் மட்டிலும், இத்தகைய பரந்த வரம்பிற்கு அப்பாற்பட்டதாக நாம் கருதவேண்டும். இத்திட்டவிதியில் அடங்கிய பொருளடக்கத்தையும், பெருநீதிமன்றத்திற்கு அவ்விதி வழங்குகின்ற அதிகாரங்களின் வரம்பையும் குறிப்பிட்டு விளக்குகையில் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் பின்வருமாறு கூறினர் : 'இந்திய நாட்டு எல்லைக்குள் அமைந்த மன்றம் அல்லது நியாய சபையின் எல்லாவகையான உத்தரவுகளும் பெருநீதிமன்றத்தின் அதிகார எல்லைக்குள் அடங்கிவிடும். இரண்டாவதாக, நன்முறையில் பணியாற்றுவதற்கென்று பெருநீதிமன்றம் தனக்குத் தேவையான சட்டங்களையும் கட்டுப்பாடுகளையும் அமைத்துக்கொள்ளவும் உரிமை பெற்றிருக்கின்றது. உதாரணமாகக் கிரிமினல் வழக்கொன்றில் நியாயம் தவறிய தீர்ப்பு வழங்கப்பெறுகின்றபோதும், மன்றம் ஒன்று தவருகச் சென்றுவிடும் நேரத்திலும், அல்லது சட்ட அடிப்படையில் பெருந்தவறு நேர்ந்துவிடுகின்றபோதும் பெருநீதிமன்றத்தின் தலையீட்டை ஒருவராலும் தடுக்கவியலாது. தன் அறிவுக்கு எட்டுகின்ற வகையிலும், நாட்டு நிலைகளுக்கு ஏற்றவாறு, ஒவ்வொரு வழக்கு அல்லது பிரச்சினையிலும் முழுமையான நீதி வழங்குவதற்கென்று பெருநீதிமன்றம் தனக்கென்று ஒரு சட்ட இயலை வகுத்துக்கொள்ளுகின்ற வாய்ப்பையும் பெற்றிருக்கின்றது.'

பெருநீதிமன்றத்தின் தலையீட்டைப் பிற மன்றங்கள் அடிக்கடி விரும்புகின்றபோதிலும், மன்றம் அவ்வாறு தலையிடுவதில் மிக்க ஆர்வம் கொண்டதில்லை. திட்டவிதி 136ஐயும் அதனுடன் கூடிய முந்திய விதியையும் ஒருங்கே ஆராய்ந்தறிந்து வழக்கொன்றில் பெருநீதிமன்றம் அறிவித்த முடிவு வருமாறு: இத்திட்ட விதியின்கீழ் அளிக்கப்பட்டிருக்கும் சலுகைகளையும் உரிமைகளையும் மிகத் தேவையானபோது மிதமாகவே பெருநீதிமன்றம் உபயோகிக்கவேண்டுமென்பது தெளிவாகத் தெரிகிறது. இத்திட்ட விதியின்கீழ், அதன்முன் எழுகின்ற பிரச்சினைகள் யாவற்றிற்கும் கூடியவரையில் ஒரே வகையான முறைகளையே அது கடைப்பிடிக்கவேண்டும் மற்றுமொரு வழக்கில் அம் மன்றம் கூறியதாவது : 'அரசியலமைப்புத் திட்ட விதி 136-ன் கீழ் பெருநீதிமன்றத்திற்கு, வழங்கப்பெற்றிருக்கும் அதிகார எல்லையை வரம்பிட்டுக் கூறுவது இயலாது. அவைகளுக்குரிய கட்டும்

பாடுகள், அவ்வதிகாரங்களைக் கையாளும் முறைகளிலேயே அடங்கியிருக்கின்றன. அவ்வதிகாரம் அசாதாரணமான உபரி சக்தியாக விளங்குவதால் அதை மிதமாகவே கையாளவேண்டும். பிரத்தியேகமான தேவைகளைப் பூர்த்தி செய்கின்றபோது மட்டிலும் அவைகளைக் கவனமுடன் மிதமாகக் கையாள வேண்டும். இதைத் தவிர, இவ் விசேஷ சலுகையைக் கையாள்வதைப் பலவிதமான சட்டங்களியற்றியும் அல்லது கட்டுப்பாடுகளை அமைத்தும் ஒழுங்குபடுத்துவதென்பது இயலாது. இதைக்குறித்து நாம் தெரிவிக்கக்கூடிய கருத்து ஒன்றேயாகும். அது வருமாறு: பெருநீதிமன்ற நீதிபதிகளின் அறிவையும் நல்லெண்ணத்தையும் மனத்தில் கொண்டு, அம் மன்றமே தனது செல்வாக்கைப் பயன்படுத்துவதில் தேவைக்கேற்பத் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளுமென்றும், அரசியலமைப்புத் திட்ட அடிப்படைகளுக்கு ஆபத்து நேருகின்ற காலங்களில் மட்டிலுமே இவ்வதிகாரத்தை மன்றம் பயன்படுத்துமென்றும், அரசியலமைப்புத் திட்டம் முழு நம்பிக்கை கொண்டிருக்கிறது.'

தேர்தல், தொழில், தொழிலாளர் ஆகிய நடுவர் நீதிமன்றங்களின் தீர்ப்புகளைப் புனராய்வு செய்வதற்கு, பெருநீதிமன்றத்திற்கு அளிக்கப்பட்டிருக்கும் அப்பீலைப்பற்றிய இவ் விசேஷ அதிகாரம் மிகவும் பயனுடையதாக இருக்கிறது. கல்கத்தா நகர டிராம்வேக்கள் வழக்கில் மன்றம் கூறியதாவது: 'ஐயத்திற்கிடமின்றிப் பெருநீதிமன்றத்தின் அதிகாரங்கள் பரந்தும், வரையறுத்துக் கூறவியலாதவைகளாகவுமிருக்கின்றன. என்றாலும், பொதுவாகக் கூறுமிடத்து, சாட்சியங்களின் உதவியுடன் நடுவர் நீதிமன்றங்கள் அளிக்கின்ற முடிவுகளைப் புனராய்வதன் பொருட்டுப் பெருநீதிமன்றம் தலையிடுவதற்குத் தேவையான பூர்வாங்க விதிகள் சில ஏற்பட்டு வழக்கிலிருக்கின்றன. அவைகளை வருமாறு வகுத்துக் கூறலாகும்: (i) நடுவர் நீதிமன்றம், தன்னை உருவாக்கிய சட்டதிட்டங்களின் வரம்பை மீறிச் செயல்படுவது; (ii) தீர்ப்பில் தெளிவான குறைபாடுகள் தென்படும்போதும்; (iii) ஊர்ஜிதமான வழக்கிலிருக்கும் முறைகளை நடுவர் மன்றம் தவறாகக் கையாண்டு தீர்ப்பு வழங்கும்போதும் பெருநீதிமன்றம் தலையிடலாகும்.'

என்றாலும், மன்றம் வருமாறு முடிவு கூறியது: 'சாதாரணமாக உயர்நீதிமன்றம் தனது விவேகத்தைப் பயன்படுத்தி வழக்கொன்றில் முடிவுரைக்குமானால், தனது விசேஷ அதிகாரத்தைப் பயன்படுத்தி அப்பீல் வழக்குகளில் பெருநீதிமன்றம் தலையிடுவதில்லை. அவ்வாறு தலையிடுவதற்குச் சம்பந்தமுள்ள வழக்குகள் அசாதாரணமானவையாக இருக்கவேண்டும். 1950-ஆம் ஆண்டு

அகதிகள் சொத்துச் சட்ட அடிப்படையில், அகதிகள் சொத்துத் தலைமைக் காவலர் உத்தரவொன்று பிறப்பித்தார். அவருக்கு இவ்வகையில் ஏராளமான அதிகாரங்கள் வழங்கப்பெற்றிருந்தன. தலைமைக் காவலரின் உத்தரவைக் குறித்துப் பெருநீதிமன்றத்திற்கு அப்பீலில் எடுத்துச்செல்லப்பெற்ற வழக்கொன்றில் அம் மன்றம் சற்று நிதானமாகவே நடந்துகொண்டது. இருந்தபோதிலும், திட்ட விதி 136-ன் ஆதிக்கம் எல்லை மீறியதாகவே இருக்கின்றது. சமவுடைமைப் பொதுநலச் சமுதாயத்தை ஏற்படுத்துவதற்கு விரும்புகின்ற மத்திய அரசும் மாநில அரசுகளும் நாள்தோறும் ஏராளமான ஆட்சித்துறை நடுவர் மன்றங்களை அமைத்துவருகின்றன. பெருகிவரும் அம் மன்றங்களின் தான்தோன்றிச் சட்டங்களையும் அநீதியான முடிவுகளையும் கட்டுப்படுத்துவதற்குத் திட்ட விதி 136, பெருநீதிமன்றத்தின் கையிலுள்ள பயனுடைய கருவியாக விளங்கிவருகிறது.

மதிப்புரை

தனது முடிவுகளையும், உத்தரவுகளையும், புனராய்வு செய்கின்ற அதிகாரத்தையும் மிக எச்சரிக்கையாகத் திட்டத் தயாரிப்பாளர்கள் மன்றத்திற்கு வழங்கியுள்ளனர். சாதாரண மன்றமொன்று உண்மைகளைக் கண்டறிய முற்படுகிறது; உயர்நீதி மன்றம், கீழ் மன்றங்களின் தவறுகளை ஆராய்ந்தறிவதற்கு முற்படுகிறது. ஆனால், பெருநீதிமன்றமோ அறிவொளியொன்றையே குறிக்கோளாகக் கொண்டிருக்கிறதெனச் சாதாரணமாகச் சொல்வதுண்டு. இருந்தபோதிலும், தவறிழைப்பதில் பெருநீதிமன்றம் ஒரு விலக்கல்ல எனவே, அத்தகைய தவறுகளைத் திருத்திக்கொள்வதற்குப் பெருநீதிமன்றத்திற்குத் தகுந்த வாய்ப்புகள் வேண்டும். திட்ட விதி 137 இதற்கு வகை செய்கிறது. தனது தீர்ப்புகளையும் உத்தரவுகளையும் புனராய்வு செய்வதற்குப் பெருநீதிமன்றத்திற்கு அதிகாரம் வழங்குகிறது. இவ்வாறு, வழங்கப்பெற்றுள்ள சலுகையைப் பயன்படுத்துவதற்குப் பெருநீதிமன்றத்திற்கு இதுகாறும் அதிக வாய்ப்புகள் இல்லை.

அதிகார வரம்பைப் பெருக்குதல்

யூனியன் அரசாங்கப் பட்டியலில் அடங்கிய சட்டமியற்றும் அதிகாரங்களைப்பொறுத்துப் பெருநீதிமன்றத்தின் அதிகார வரம்பை விஸ்தரிப்பதற்குப் பாராளுமன்றத்திற்கு அனுமதியுண்டு. மத்திய அரசும மாநில அரசுகளில் ஒன்றும் தங்களுக்குள் உடன்படிக்கை யொன்று செய்துகொண்டு, அவ்வுடன்படிக்கையின்கீழ் பிரச்சினையைப் பெருநீதிமன்றத்தின் முன்

எடுத்துச்செல்லலாகும். அவ்வாறு செய்வதற்கென்று பாராளு மன்றம் தனிச் சட்டமொன்றைப் பிறப்பிக்கவேண்டும். அரசிய லமைப்புத் திட்ட விதி 32-ன்கீழ் ஆதார உரிமைகளைப் பொறுத்த பிரச்சினைகளை எடுத்துச்செல்லலாமென்பதை நாம் முன்னரே கண்டோம். அவை நீங்கலாக மதியுரைகளையும், உத்தரவுகளை யும், ரிட் மனுக்களையும் வழங்குவதற்கு மன்றத்திற்குத் தனி அதி காரம் அளித்துப் பாராளுமன்றம் சட்டமியற்றவும் கூடும். பெரு நீதிமன்றத்திற்கு மேலும் உபரிச் சலுகைகளை வழங்குவதற்கும் பாராளுமன்றத்திற்கு அதிகாரமுண்டு. தன் அதிகார எல்லைக்குள் நன்கு செயல்படுவதற்கு இவை மன்றத்திற்கு உதவி செய்யக் கூடும். ஆனால், அத்தகைய உபரிச் சலுகைகள், அரசியலமைப்புத் திட்ட அடிப்படைகளுக்கு முரணானவைகளாக இருக்கக்கூடாது.

## மதியுரைக்கும் மன்றம் (திட்ட விதி 143)

1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் இயற்றப்படும் வரையிலும், அரசாங்கத்தின் ஆட்சித்துறை அல்லது சட்ட மன்றத்துறைகளுக்கு நீதிமன்றம் மதியுரை வழங்குவதென்பது வழக்கிலில்லை. அச் சட்டத்தின் 213ஆம் பகுதியில் இப் புதிய முறை எடுத்துரைக்கப்படுகிறது. ஆட்சித்துறை, நீதித்துறையி னிடமிருந்து அனுமதி பெறுவதென்பது, ஆங்கில நாட்டிலிருந்து வரும் பழம்பெரு வழக்கமாகும். அவ் வழக்கைப் பின்பற்றுவ தற்கு இச் சட்டம் முயல்கின்றது. 1937ஆம் ஆண்டில் இந்திய நாட்டில் பெடரல் மன்றம் ஏற்படுத்தப்பட்டது. அக் காலமுதல் ஏராளமான மதியுரைகளை அம் மன்றம் வழங்கிவரலாயிற்று. இந்திய நீதித்துறை வட்டாரங்களில், நாட்டின் தலைசிறந்த மன்றம் ஒன்றிற்கு, இத்தகைய சலுகைகளை வழங்குவதன் பயன் களைப் பொறுத்து நம்பிக்கை பிறந்தது. எனவே, இத்தகைய மதியுரை வழங்கும் அதிகாரத்தைத் திட்ட விதி 143, இந்திய நாட்டுப் பெருநீதிமன்றத்திற்கு வழங்கியபோது, அரசியல் நிர்ணய சபையில் அதைக்குறித்து அதிகமான விவகாரங்களுக்கு இடமில்லாதிருந்தது.

திட்ட விதி 143 (1) கூறுவதாவது: 'எப்பொழுதாகிலும் சட்டம் அல்லது பிற உண்மையைக் குறித்துச் சிக்கல் ஒன்று எழுந்துவிட்டதென்று ஜனதிபதி எண்ணுவாரெனில், அல்லது அத்தகைய சிக்கல் தோன்றக்கூடுமென அவர் மதியில் தோன்றி னுலும், அச் சிக்கலின் பலாபலன்கள் பொதுநலனை அதிகமாகச் சார்ந்திருக்கின்றதென அவர் கருதுவாரெனில், இப் பிரச்சினைக்கு முடிவு காண்பதற்கு ஆலோசனைக்சாக அவர் பெருநீதிமன்றத் தின் உதவியை நாடுவார். தேவையான விசாரணைகளை நடத்திப்

பின்னர் தனது கருத்துகளை மன்றம் ஜனாதிபதிக்கு அறிவித்துக் கொள்ளும். இவ்வாறு, சட்ட அடிப்படையிலேனும் அல்லது பிற நீதியைப் பொறுத்தேனும் பொதுநலச் சார்புடைய சிக்கல்கள் தோன்றுமாகில், பிரச்சினைக்கு முடிவு காண்பதற்கென்று ஜனாதிபதி பெருநீதிமன்றத்தின் உதவியை நாடலாகும். தனது கருத்தை மறுக்காது அறிவிக்கவேண்டுமென, அரசியலமைப்புத் திட்ட அடிப்படையில் மன்றத்திற்கு எவ்விதக் கட்டுப்பாடுமில்லை மேலும், இதற்கென்று எத்தகைய விசாரணையை நடத்துவ தென்று தீர்மானிக்கின்ற உரிமையும் மன்றத்திற்கு உண்டு. இவ் வகையில், சாதாரணமாகத் தன்முன் வரும் வழக்கை விசாரிப்ப தற்கு எத்தகைய முறையை மன்றம் கடைப்பிடிக்கின்றதோ, அம் முறையையே இங்கும் கையாண்டுவருகிறது. விசாரணை திறந்த அரங்குகளிலேயே நடைபெறும். தொடர்புடைய சாட்சி களைச் சாதாரண முறையிலேயே விசாரிக்கின்றனர். கருத்தை யும் திறந்த அரங்கிலேயே வெளிப்படையாக மன்றம் அறிவித்து விடுகிறது. நீதிபதிகளும் தங்களுக்குள் கூட்டுச் சேர்ந்து ஒன்றாகக் கூடியோ, அல்லது தனிப்பட்ட முறையிலோ தங்கள் கருத்துகளை வெளியிடுவர். கருத்து ஒற்றுமைகளும் இருக்கலாகும்; வேற்றுமை களுக்கும் இடமுண்டு.

நமது அரசியலமைப்புத் திட்டம் நடைமுறையில் கடைப் பிடிக்கப்படுவதற்கு முன்னதாகவே எழுந்துள்ள உடன்படிக்கை அல்லது ஒப்பந்தங்களைக் குறித்துக் கருத்து வேற்றுமைகள் எழுகின்றபோது, திட்ட விதி 143, பகுதி 2-ன்கீழ் அவைகளைக் குறித்துக் கருத்துகள் வழங்குவதற்கென அவைகளைப் பெருநீதி மன்றத்தின் பார்வைக்கு அனுப்பிவைக்கலாகும். அத்தகைய சந்தர்ப்பங்களில், தனது கருத்தை ஜனாதிபதிக்கு மன்றம் கட்டாயமாக எடுத்துரைக்கவேண்டும் என்று திட்டம் கூறியிருக் கிறது. 1947-லிருந்து 1950ஆம் ஆண்டு வரையிலும் நாடுகளை இணைக்கும் முயற்சி நடந்துகொண்டிருந்தது. இவ்விடைக் காலங்களில் இந்திய சமஸ்தானங்களுடனும் சமஸ்தானாதிபதிக ளுடனும் இந்தியத் துரைத்தனத்தார் பல உடன்படிக்கைகள் செய்துகொண்டிருந்தனர். அத்தகைய உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையுமே நாம் இங்குக் குறிப்பிட்டிருக்கிறோம்.

கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாகப் பெருநீதிமன்றத் தின் ஆலோசனையை, இத்தகைய வழக்குகளில் மூன்று முறை களே ஜனாதிபதி கோரியிருக்கிறார். இந்திய நாட்டில் சட்ட மியற்றும் உரிமையை மாற்றிக்கொடுப்பதைக் குறித்த பிரச் சினையை முதல்முறையாக 1951ஆம் ஆண்டில் ஜனாதிபதி பெருநீதி

மன்றத்திற்கு அனுப்பிவைத்தார். 1912ஆம் ஆண்டு டெல்லி சட்டத் தொகுதிகள், 1947ஆம் ஆண்டு ஆஜ்மீர்-மெர்வாரா விஸ்தரிப்புச் சட்டங்கள், C-பகுதி மாநிலங்களைப் பொறுத்த 1950ஆம் ஆண்டுச் சட்டத் தொகுதிகள் ஆகிய மூன்றையும் குறித்து, அத் தொகுதிகள் அமலாகும் யோக்கியதாம்சங்களைப் பெற்றிருக்கின்றனவா என நிர்ணயிக்குமாறு பெருநீதிமன்றத்தை ஜனாதிபதி கேட்டுக்கொண்டார். இத்தகைய திட்டவட்டமான கேள்விகளுக்குரிய பதிலை ஒருமுகமாக மன்றத்தினரால் அளிக்க இயலவில்லை. வழக்கைக் கேட்டறிந்த நீதிபதிகள் பலரகமான கருத்துகளை வழங்கினார்கள். எனினும், சட்டமியற்றும் உரிமையை மாற்றியமைப்பதுபற்றி இவர்கள் கூறிய முடிவுகளை மிகப் பொருத்தமானவை என்று புகழ்ந்தார்கள்.

பெருநீதிமன்றத்தின் உதவியை இரண்டாவது முறையாக நாடியபோது, அதிலடங்கிய பிரச்சினை மிகவும் நூதனமானதொன்றாக இருந்தது. ஆலோசனை வழங்கும் உரிமை எல்லைக்குள் அத்தகையதொரு பிரச்சினையை எவரும்கேட்டறிந்ததில்லை. பிரச்சினை 1957ஆம் ஆண்டில் கேரள நாட்டுப் பாராளுமன்றம் நிறைவேற்றிய மசோதா ஒன்றைப் பொறுத்ததாக இருந்தது. இம் மசோதா, ஆதாரக் கல்வி, மற்றும் உயர்நிலைக் கல்வி நிலைகளைத் திருத்தியமைக்க முயன்றது. தனியார் நடத்திவந்த பள்ளிகள் சிலவற்றை அரசாங்கம் எடுத்துக்கொள்வதுபற்றி மசோதாவின் ஷரத்துகளில் கண்டிருந்தது. இவை திட்ட அடிப்படையில் சொத்துரிமையைப் பொறுத்த பிரச்சினைகளாக மாறிவிட்டன. எனவே, அவைகளை அமல் நடத்துவதற்கு ஜனாதிபதியின் ஒப்புதல் தேவையாயிற்று. திட்ட அடிப்படையில் ஆதார உரிமைகளைத் துணையாகக் கொண்டு அம் மசோதாவின் செல்வாக்கைக் குறித்து அம் மாநிலத்தினுள் கடுமையான பல கருத்து வேற்றுமைகள் நிலவிவரலாயின. திட்ட விதிக்குப் புறம்பான அத்தகைய சட்டமொன்றுக்குத் தனது ஒப்புதலை அளிக்கவேண்டாமெனப் பலர் ஜனாதிபதியைக் கேட்டுக்கொண்டனர். இதனால், இவ் விஷயத்தில் பெருநீதிமன்றத்தின் ஆலோசனையைப் பெறவேண்டுமென ஜனாதிபதி முடிவு செய்தார். சிறுபான்மையினரின் பண்பாட்டு, மற்றும் கல்வி உரிமைகளைப் பொறுத்து அரசியலமைப்புத் திட்டம் அளிக்கின்ற உரிமைகளை விளக்கிப் பெருநீதிமன்றம் கருத்தறிவித்தது. மன்றம் அறிவித்த கருத்து, இதுகாறும் வெளியிடப்பெற்ற கருத்துகளில் மிக முக்கியமானதொன்றாக விளங்கியது.

அந்நிய நாடான பாகிஸ்தானுக்கு இந்தியப் பகுதிகள் சிலவற்றை விட்டுக்கொடுப்பதைக் குறித்துப் பெருநீதிமன்றத்தின் ஆலோசனை கோரியதை மூன்றாவதாகக் குறிப்பிடலாம். 1958 ஆம் ஆண்டிலேயே இந்திய-பாகிஸ்தான் பிரதம மந்திரிகளிடையில் சில பகுதிகளை இரு நாடுகளும் பரிமாறிக்கொள்ளலாமென்ற ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தது. அத்தகைய நாட்டுப் பகுதிப் பரிவர்த்தனை அரசியலமைப்புத் திட்டத்திற்குப் புறம்பானது என்று பாராளுமன்றத்தினரும் பிறரும் குறைகூறலாயினர். எனவே, இப் பிரச்சினையைப் பெருநீதிமன்றத்தின் பார்வைக்கு அனுப்பிவைப்பதென்று முடிவாயிற்று. இந்திய நாட்டிற்குச் சொந்தமான பகுதியொன்றை அந்நிய நாட்டிற்கு மாற்றிக் கொடுக்கவேண்டுமெனில், அரசியலமைப்புத் திட்டத்தில், சட்ட ரீதியில் அதற்கான மாற்றங்களைக் (திருத்தங்களைக்) கட்டாயமாக ஏற்படுத்தவேண்டுமெனப் பெருநீதிமன்றம் அறிவித்தது.

இவ்வாறு ஆலோசனை வழங்குவதற்கென்று, பெருநீதிமன்றத்திற்கு வழங்கப்பெற்றிருக்கும் அதிகாரம் எத்துணைப் பயனுள்ளதென்பதை இம் மூன்று சந்தர்ப்பங்களில் வழங்கப்பெற்ற முடிவுகள் நன்கு விளக்குகின்றன.

## பதிவு செய்துகொள்ளும் மன்றம் (திட்ட விதி 129)

பெருநீதி மன்றத்தை, முடிவுகளைப் பதிவு செய்துகொள்ளும் ஒரு மன்றமாகத் திட்ட விதி 129 செய்துவிடுகிறது. அத்தகைய பதிவு செய்துகொள்ளும் மன்றமொன்றின் முக்கியத்துவம் இருவகைப்படும். அத்தகைய மன்றங்களிலுள்ள பதிவுகளைச் சாட்சியங்களாக மதித்து, எந்த மன்றத்திலும் அவைகளைத் தாக்கல் செய்யலாகுமென்பதை முதலாவதாகக் குறிப்பிடவேண்டும். இரண்டாவதாக, நீதிமன்றமொன்றைச் சட்ட அடிப்படையில் பதிவு செய்துகொள்ளும் மன்றமாகச் செய்துவிட்டால், மன்றத்தை அவமதிப்பவரைத் தண்டிப்பதற்கு, அம் மன்றத்திற்குள்ள உரிமையையும் நாம் மறுக்கமுடியாது. இத்தகைய அதிகாரம் பெருநீதிமன்றத்திற்கு இயற்கையாக ஏற்பட்டுவிட்ட போதிலும், அவமதிப்புக் குற்றத்திற்காகத் தன்னைத் தானே தண்டித்துக்கொள்ளும் உரிமையையும் பெருநீதிமன்றத்திற்கு அரசியலமைப்புத் திட்டம் தனிப்பட வழங்கியிருக்கின்றது.

## மன்ற விதிகள் (திட்ட விதி 145)

பாராளுமன்றம் இயற்றுகின்ற சட்டதிட்டங்களுக்கு உள்ளடங்கியவையாக, ஜனாதிபதியின் அனுமதியைப் பெற்று மன்றத்தின் நடைமுறை வழக்குகளுக்கான விதிகளை அமைத்துக்கொள்

வதற்குப் பெருநீதிமன்றத்திற்கு அதிகாரம் வழங்கப்பெற்றுள்ளது.

## நீதித்துறையில் மன்றத்தின் பெருஞ்சிறப்பு

பெருநீதிமன்றம், அரசியலமைப்புத் திட்டத்திற்கு விளக்கம் அளிக்கவல்ல இறுதிச் சலுகைபெற்று விளங்குவதையும், அதனால் திட்டத்தின் காவலனாக விளங்குவதையும் நாம் முன்னர் கண்டோம். 'பெருநீதிமன்றம் இயற்றுகின்ற சட்டத்தை இந்திய நாட்டெல்லைக்குள்ளாக அமைந்துள்ள மன்றங்கள் யாவும் கடைப்பிடிக்கவேண்டும், (திட்ட விதி 141) என்று கூறிப் பெருநீதிமன்றத்தின் செல்வாக்கை மேலும் பெருக்கியிருக்கிறார்கள். மேலும், தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி, தன்முன் வரும் வழக்குகளில் முழுமையான நீதியை நிலைநாட்டுவதற்கென்று, தேவையான முடிவுகளைச் செய்வதற்கும் உத்தரவிடுவதற்கும் பெருநீதிமன்றத்திற்கு அதிகாரமுண்டு. அத்தகைய முடிவுகளையும் உத்தரவுகளையும் இந்திய நாட்டெல்லை முழுதும், பாராளுமன்றச் சட்டத்தை அமல் நடத்துவதுபோன்று வற்புறுத்தலாகும். இந்திய நாட்டெல்லைக்குள் வசிக்கும் ஒருவரைத் தன்முன் ஆஜராகவேண்டுமென்று வலியுறுத்துவதற்கு மன்றத்திற்கு அதிகாரமுண்டு. அவ்வாறே தேவையான ரிக்கார்டுகளையும், அவதூறுக் குற்றத்திற்காகத் தான் வழங்கியுள்ள தண்டனை அல்லது பிற விசாரணைகளை மேற்கொள்ளுவதற்கான உத்தரவுகளைப் பிறப்பிக்கவும் மன்றம் அதிகாரம் பெற்றிருக்கிறது (திட்ட விதி 142).

இவ்வாறு, பெருநீதிமன்றத்தின் பல்வேறு அதிகாரங்களை நாம் எடுத்துக்கூறியிருப்பதிலிருந்து அவை வியப்பூட்டுபவைகளாகவும் அசாதாரணமானவைகளாகவும் தோன்றலாம். அவைகளில் மிக முக்கியமான சிலவற்றை வருமாறு மீண்டும் எடுத்துக்கூறலாம்: அரசியலமைப்புத் திட்டத்திற்கு இறுதியான விளக்கம் கூறும் வாய்ப்பு மன்றத்திற்குண்டு மன்றம் அளிக்கும் விளக்கமே இறுதியானதாதலால், திட்டத்திற்கு விளக்கம் கூறும் வாய்ப்பைப் பெற்றிருப்பதோடு, மத்திய அரசு, மாநில அரசுகள், தலஆட்சி நிறுவனங்கள் ஆகியவைகளின் சட்ட திட்டங்களுக்கு விளக்கம் கூறுகின்ற வாய்ப்பினையும் மன்றம் பெற்றுவிடுகின்றது. அதற்குரிய மூல அதிகாரத்தின்கீழ் மாநில அரசுகளுக்கிடையில் எழுகின்ற பூசல்களிலும், அவைகளுக்கும் மத்திய அரசிற்கும் இடையில் எழுகின்ற வழக்குகளிலும் தீர்ப்பு வழங்குகின்ற அதிகாரம் மன்றத்திற்கு உண்டு. அரசியலமைப்புத் திட்ட அடிப்படையிலன்றி, மற்றும் சிவில், கிரிமினல்

வழக்குகளிலும், தன் முன் கொண்டுவரப்படும் மேல்முறையீடுகளை மன்றம் விசாரித்து நீதி வழங்கக்கூடும். மேல்முறையீட்டிற்குத் தனி அனுமதி வழங்கும் அதிகாரமும் அதற்குண்டு. இதனால், நாட்டில் கண்டுள்ள நீதிமன்றங்கள், மற்றும் நடுவர் மன்றங்களின் முடிவுகளைப் புனராய்வு செய்கின்ற வாய்ப்பும் அதற்குக் கிடைத்துவிடுகிறது. சில சூழ்நிலைகளில், ஜனாதிபதிக்கு மதியுரை வழங்குகின்ற வாய்ப்பினையும் அது பெற்றுவிடுகிறது. பெருநீதி மன்றம் இயற்றுகின்ற சட்டங்களை இந்திய நாட்டு எல்லையிலுள்ள பிற மன்றங்கள் கடைப்பிடித்தொழுகவேண்டும். மேலும், இந்திய நாட்டிலுள்ள உயர்நீதிமன்ற அலுவலர்களைத் தணிக்கை செய்யவும் மேற்பார்வையிடவும் அதற்கு அதிகாரமுண்டு. அதன் உத்தரவுகளுக்கு நாடெங்கிலும் விலை மதிப்புண்டு. நாட்டில் வசிப்பவர் எவராயினும் தன்முன் ஆஜராக வேண்டுமென உத்தரவிடுவதற்கும், தேவையான ரிக்கார்டுகளைத் தன் பார்வைக்கென்று கைப்பற்றவும் அதற்கு அதிகாரமுண்டு. இந்திய நாட்டின் தலைசிறந்த சட்டமன்றமாக விளங்கும் பாராளுமன்றத்தின் சட்டங்களையும் விலை மதிப்பற்றவைகளாகச் செய்துவிடும் செல்வாக்குப் பெருநீதிமன்ற உத்தரவுகளுக்குண்டு. இவைகளுக்கு மேலாக, அரசியலமைப்புத் திட்டம் வழங்குகின்ற ஆதார உரிமைகளின் பாதுகாவலனாக மன்றம் விளங்குகிறது. அவ்வுரிமைகளைப் பாதுகாப்பதற்கென்று மத்திய, மற்றும் மாநிலச் சட்டங்களையும் செல்லுபடியாகாதவை என்று தள்ளிவிடும் அதிகாரம் மன்றத்திற்கு உண்டு. அரசியலமைப்புத் திட்டம், மக்களுக்கு வழங்கியிருக்கின்ற ஆதார உரிமைகளைப் பறிக்கின்ற வகையில் இந்திய நாட்டின் கண்ணுள்ள ஆட்சித் துறையொன்று செயல்பட எத்தனிக்கும்போது, ரிட் உத்தரவுகளைப் பிறப்பித்து, அத் துறைகளுக்குப் பெருநீதிமன்றம் தடை விதித்துவிடும். இவ்வாறாக, இந்திய நாட்டுப் பெருநீதி மன்றத்திற்கு வழங்கப்பெற்றிருக்கும் அதிகாரங்கள் பல்வகைப்பட்டவைகளாகவும் ஏராளமானவைகளாகவும் காணப்படுகின்றன. இத்துணைச் செல்வாக்குப் பெற்றிருப்பதால், நீதித் துறையில் நிகரற்ற மன்றமாக விளங்குவதோடு, நாட்டின் சட்டதிட்டங்களையும் அரசியலமைப்புத் திட்டத்தையும் போற்றிப் பாதுகாக்கும் காவலனாகவும் விளங்குகிறது.

## பொருள் குறிப்பு அகர வரிசை

பகுதி V

# இராச்சியங்களில் அரசாங்கம்

## 24. இராச்சிய நிர்வாகத்துறை: கவர்னர்

யூனியன் அரசாங்கம் எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கிறதோ அவ்வாறே இராச்சியங்களிலும் அரசாங்க அமைப்பு ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. எனவே, யூனியன் அரசாங்க அமைப்புபற்றிய நம்முடைய விளக்க அடிப்படையில் நோக்குகின்றபோது, இராச்சிய அரசாங்கத்தின் அமைப்பும், அது இயங்கும் முறை விளக்கமும் எளிதாகின்றது. யூனியனைப்போன்றே இராச்சியங் களின் அரசாங்கமும் பாராளுமன்றமுறை அடிப்படையில் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தியா முழுவதற்கும் ஜனாதிபதி எவ்வாறு தலைவரோ அவ்வாறே இராச்சியத் தலைவர், இராச்சி யத்தின் சட்டபூர்வமான தலைவர் என்ற முறையில் கவர்னர் என அழைக்கப்படுகிறார். இராச்சிய அரசாங்கத்தின் முதல்வர், இராச்சியத்தில், இந்தியப் பிரதமரின் சரிநேர் படிவமாதலின், முதலமைச்சரென அழைக்கப்படுகிறார். யூனியனில் இருப்பது போன்று, இராச்சியங்கள் ஒவ்வொன்றிலும், அமைச்சர்கள் குழு வொன்றிருக்கிறது. இராச்சிய சட்டசபை அமைப்பும் சற்றேறக் குறைய இந்தியப் பாராளுமன்றம் போன்றே இருக்கிறது. நீதித் துறையில், இந்தியா முழுவதற்கும் உச்ச நீதிமன்றம் எத்தன்மை யுடையதாக இருக்கிறதோ, பெரும்பாலும் எல்லாக் காரியங் களுக்கும் அத் தன்மையுடையவைகளாக உயர் நீதிமன்றங்கள் இருக்கின்றன. இவ்வாறு, இராச்சிய அரசாங்கம், ஒவ்வோர் இராச்சியத்தின் அதிகார எல்லைக்குள், யூனியன் அரசாங்கத்தின் உண்மைப் பதிப்பாக இருக்கிறது. இது, அனேகமாக ஒவ்வொரு துறை அலுவலிலும் யூனியன் அரசாங்கம் செயலாற்றுவதி லிருந்து, உதாரணங்களையும், ஊக்கத்தையும் பெற இராச்சியங் களுக்கு உதவுகிறது.

இராச்சியத்தின் நிர்வாக அதிகாரம், ஜனாதிபதியால் நியமிக்கப்பட்டு, ஜனாதிபதியின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கின்றவரையிலும், பதவி வகிக்கும் கவர்னரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இராச்சியத்தின் நிர்வாக அதிகாரம் முழுவதும் கவர்னரிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பதானது, இந்திய அரசாங்கத்திற்கு ஜனாதிபதி எவ்வாறோ அவ்வாறு இராச்சியத்திற்கு அவர் சட்டபூர்வமான தன்மையைப் பெற்றிருக்கிறாரென்பதைக் காட்டுகிறது. அசாதாரணமாக, கவர்னர் பதவி ஏற்றுக் கொண்ட தேதிமுதல் ஐந்தாண்டுக் காலத்திற்குப் பதவி வகிக்கிறார்.

கவர்னராக நியமிக்கப்படுவதற்கான தகுதிகள், எளிதானவையும், குறைவானவையுமாகும். அவர் இந்தியக் குடிமகனாகவும் முப்பத்தைந்து வயதைக் கடந்தவராயுமிருக்கவேண்டும். கவர்னர் பாராளுமன்றத்தினிரு சபைகளுள் ஏதாவதொன்றிலோ அல்லது இராச்சிய சட்ட சபையிலோ உறுப்பினராகவிருத்தல் ஆகாது. இலாபந்தரும் வேறு பதவியெதையும் வகிக்கவும் கூடாது. அவருக்கு உத்தியோகபூர்வ வாடகையில்லாத இருப்பிடமும், மாதச் சம்பளமும், இதர படிகளும் பெற உரிமையுண்டு. தற்போது அவரது மாதச் சம்பளம் ரூ. 5,500 ஆக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அவரது சம்பளமும், படிகளும், அவரது பதவிக காலத்தில் குறைக்கப்படவியலாது. இவை இராச்சியக் குவிக்கப்பட்ட நிதியிலிருந்து அளிக்கப்படுகின்றன ஆதலின், சட்ட சபையால் நிறைவேற்றப்பட வேண்டியதில்லை. பதவியேற்கு முன், கவர்னர், இராச்சிய உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதி முன்பாக, அரசியலமைப்பைத் தொடர்ந்து நடைபெறுவிக்கவும், அழியாது காப்பாற்றவும், ஆதரவாகவிருக்கவும், உறுதிமொழி அல்லது வாய்மையுரை ஒன்றை எடுத்துக்கொள்ளவேண்டும்.

கவர்னர் தேர்ந்தெடுக்கப்படாது நியமிக்கப்படுவதேன் ?

அரசியலமைப்பை இயற்றியவர்கள், இராச்சியங்கள் ஒவ்வொன்றிற்கும், தேர்ந்தெடுக்கப்பட்ட கவர்னரிருக்கவேண்டுமென்று முதலில் முடிவு செய்திருந்தனர். இம் முடிவு, கூட்டாட்சியின் அங்கம் ஒவ்வொன்றிற்கும் அதிகபட்ச தன்னாட்சி தரவேண்டுமென்னும் கருத்திற்கேற்றதாகவிருந்தது. இதற்குக் காரணம், அமெரிக்க ஐக்கிய நாடுகளில், இராச்சிய கவர்னரின் தன்மை முக்கியமானதாக இருந்திருக்கவேண்டும். இருப்பினும், இரண்டாண்டுகட்குள்ளாக, நியமிக்கப்பட்ட கவர்னர் வேண்டும் என்பதற்கு ஆதரவாக இக் கருத்தைக் கைவிட முடிவு செய்தனர். அவ்வாறு செய்வதற்கு ஆதாரமாக இருந்தது என்ன என்பது ஆராயத்தக்கதாகும்.

(1) பாராளுமன்ற முறை அரசாங்கமொன்றில் தேர்ந் தெடுக்கப்பட்ட கவர்னர், அவருக்குரிய சிறப்பான இடத்தைப் பெறுவதில்லை. கவர்னர் மக்களால் நேரிடையாகத் தேர்ந் தெடுக்கப்பட்டால், மக்களுக்கு நேராகப் பொறுப்புடையவ ராகிறார். ஆதலின், அரசியல் சட்டபூர்வ இராச்சியத் தலைவ ரென்ற முறையிலல்லாமல், அதன் உண்மைத் தலைவரென்ற முறையில், அவருடைய அதிகாரங்களைச் செலுத்தவியலும். அத்தகைய ஒரு நிலைமை, மக்களால் நேரிடையாகத் தேர்ந் தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்கும் அமைச்சர் குழுவிற்கும், கவர்னருக்குமிடையே போட்டியைத் தோற்றுவிக்கக்கூடும். அமெரிக்காவிலுள்ள இராச்சியங்கள், கூட்டாட்சி அரசாங்கத்தைப்போன்று 'தலைவர்முறை அரசாங் கத்தைப் பெற்றிருப்பதால், கவர்னருக்கும் அமைச்சவைக்கு மிடையே போட்டியெழும் பிரச்சினையை அவைகள் சமாளிக்க வேண்டியதில்லை.

(2) கவர்னர் மக்களால் நேராகத் தேர்ந்தெடுக்கப்படுவ தற்குப் பதிலாக இராச்சிய சட்டசபையால் தேர்ந்தெடுக்கப் பட்டால், அமைச்சரவைக்கும் அவருக்கும் இடையே போட்டி யேற்படும் சூழ்நிலை அதிகமில்லை எனத் தெரிகிறது. இதற்குக் காரணம், கவர்னரைத் தேர்ந்தெடுத்த அதே சட்டசபைக்கு, அமைச்சவையும் பொறுப்புடையதாக இருப்பதாகும். ஆனால், அத்தகைய ஏற்பாடொன்றில் ஏற்படக்கூடிய மிகப்பெரிய குறை, எந்த அரசியல் கட்சி அல்லது கட்சிகள் அவரது தேர்வுக்கு ஆதாரமாக இருக்கின்றனவோ, அவற்றின் கைப்பாவையாக கவர்னர் ஆகக்கூடுமென்பதாகும். நிரந்தரமான அடிப்படையில் பதவிக்கு அவர் தேர்ந்தெடுக்கப்படுவதில்லையாதலால், மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுவதற்காக, சட்டமன்றத்திலுள்ள பெரும் பான்மையோர் விருப்பு வெறுப்பிற்கிணங்க, நடக்கவேண்டு மென்ற எண்ணம், உண்மையிலேயே தடுக்கமுடியாததாகிறது.

(3) நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ தேர்ந் தெடுக்கப்பட்ட கவர்னர் ஒருவர், மிகஅதிகமாகக் குவிக்கப்பட்ட அதிகாரமுடைய கூட்டாட்சி அரசாங்க முறையில் பொருந்துவ தென்பது இயலாததாகவிருக்கின்றது. ஏனெனில், எம் முறை யாகவிருப்பினும், கவர்னர் இராச்சிய மக்களிடமிருந்து அதிகாரப் பொறுப்பைப் பெறும் இராச்சியப் பிரதிநிதியா கின்றார். யூனியனுக்கும் இராச்சியத்திற்குமிடையே சச்சர வொன்றேற்படுமானால், அத்தகைய கவர்னரொருவர் யூனியன் அரசாங்கத்திற்குக் கீழ்ப்படிதலுள்ள ஊழியராகவோ அல்லது பொருத்தமான கருவியாகவோ நிருபிப்பதற்கு இயலாமற்

போகும். அதற்கு மாருக, இராச்சியத்துறையில், யூனியன் அதனுடைய அதிகாரப் பொறுப்பை ஏதாவது ஒருமுறையில் விஸ்தரிக்கும்போது கவர்னர் இடையூறுகளைத் தோற்றுவிக்கக் கூடும். இது, அவசர கால அதிகாரங்களடிப்படையில் யூனியன், சர்வ வல்லமையுடையதாக ஏற்படும் கருத்திற்கும், கூட்டாட்சி முறை செயலாற்ருமற் போவதற்கும் இயைபுடையதாகவில்லை.

பலக்குறைவான யூனியனையும், பலமிக்க இராச்சியங்களையும் ஏற்படுத்துவதற்கு, அரசியலமைப்பை ஆக்கியோர் முதலில் கொண்டிருந்த கருத்து, பலமிக்க யூனியனையும், பலக் குறைவான இராச்சியங்களையும் ஏற்படுத்த விட்டுக்கொடுத்தது. அரசியலமைப்பின் அடிப்படையமைப்பில் இப் பெரிய மாறுதல் ஏற்படுவதற்குப் பல காரணங்கள் உதவிபுரிந்துள்ளன. இக் காரணங்களுள் நாடு துண்டாக்கப்பட்டது, அவ்வாறு துண்டாக்கப் பட்டதனுல் ஏற்பட்ட பல்வேறுவகைப் பிரச்சினைகள், உணவு நெருக்கடி, நாடு முழுவதற்குமான சமூக, பொருளாதாரத் திட்டங்களின் அவசியம், மாநிலப் பற்றின் தோற்றம், இராச்சிய அமைச்சரவை நிலைபெறமுடியாமற் போகக்கூடிய அச்சம் ஆகியவைகளிருந்தன. புதிதாகப் பெற்ற சுதந்திரம், பாதுகாப்பு, நாட்டின் திட்டமிட்ட முன்னேற்றம் ஆகிய இரண்டிற்காகவும், மத்தியவழி அறிவுறுத்தல் அவசியமெனக் கருதப் பட்டது. இந்தக் காரியத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கவர்னரொருவர் இருப்பது விரும்பத்தக்கதன்று. அவசர காலங்களில், இராச்சியத்திற்குள், யூனியனின் விருப்பத்தை நடைமுறைப்படுத்துவதற்கு ஜனுதிபதியால் கட்டுப்படுத்தக் கூடிய ஒருவராக கவர்னரிருக்கவேண்டும்.

(4) புதிதாக நிறுவப்பட்ட தன்னுட்சி அரசாங்கத்தில், இராச்சிய சட்டசபையிலும, இராச்சிய முழுவதிலும் ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையான குழுக்களும், தன்னலக் கும்பல்களும் தோன்றுவது தவிர்க்கமுடியாததென்று கருதப்பட்டது. அத்தகைய நிலைமைகளில், அந்த இராச்சியத்திலேயே குடியிருக்கும் கவர்னரொருவர் போட்டிக் கும்பல்களிடையே நடுநிலையில் நின்று சுதந்திரமாகச் சமாதானம் செய்துவைப்பவராகவோ, சமரசவாதியாகவோ இருப்பதற்குப்பதிலாக அக்கறையுடைய கட்சிக்காரராகக்கூடும். கவர்னர் ஜனுதிபதியினுல் நியமிக்கப் படுபவராக இருக்கும்போது அத்தகைய ஆபத்திற்கிடமில்லையாது.

(5) கவர்னர் ஜனுதிபதியினுல் நியமிக்கப்படுகின்றபோது கூட, இராச்சிய அரசியல் சூழ்நிலை ஸ்திரமானதாகவிருக்கின்ற

வரையிலும், அமைச்சவை சட்டமன்றத்தினைசக்கமுடியாத ஆதரவைப் பெற்றிருக்கின்றவரையிலும், அவர் ஜனதிபதியைப் போல், இராச்சியத்தின் அரசியல் சட்டபூர்வமான தலைவ ரென்ற முறையினுற்றுன் பணியாற்ற வேண்டியவராகின்றார். தவிர்க்கமுடியாத விசேட சந்தர்ப்பங்களில்தான், அவருடைய வழக்கமான செயல்முறையில் மாறுதல் எதிர்பார்க்கப் படுகின்றது. ஆதலினல் மிகவதிகமான எச்சரிக்கையடிப் படையில் ஏற்பட்டதே யிவ்வேறுபாடு. சென்றசிலவாண்டுகளில், சில இராச்சியங்களில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளிலிருந்து, அரசிய லமைப்புக் கர்த்தாக்கள் இவ்வாறு செய்தது நியாயமானதென் பது தெளிவாகின்றது.

இவ் அம்சத்தைப் பொறுத்தவரையிலும், பலமிக்க மத்திய அரசாங்கத்தையுடைய கனேடிய அரசியலமைப்பு, இந்திய அரசியல் நிர்ணயச் சபையை உந்துவித்திருக்கலாமெனத் தோன்றுகிறது. அங்கு, எல்லா கவர்னர்களையும் கவர்னர்-ஜெனரலே நியமிக்கின்றார். கவர்னர்கள் அவருடைய நம்பிக் கைக்குப் பாத்திரமாகவிருக்கும்வரை பதவி வகிக்கிறார்கள். ஆனல், இவ் வேறுபாடு, கனேடியக் கூட்டாட்சியின் சுமுகமான இயக்கத்தைப் பாதிக்கவில்லை. அதற்குமாருக, பல முறைகளில் அது நன்மையானதென்பதை உறுதிப்படுத்தியிருக்கின்றது.

அல்லாடி கிருட்டினசாமி அய்யர், அரசியல் நிர்ணய சபையில் குறிப்பிட்டதாவது :

'மாநில அமைச்சவைக்கும், கவர்னருக்கும் இடையே ஒற்றுமை நிலவவும், நல்லமுறையில் இயங்கவும், சிறப்புமிக்க உறவிருக்கவும், கனேடிய உதாரணத்தை (model) நாம் ஏற்போ மாஞல் மிகுந்த நன்மை பயக்கும்.'

இவ்வாறு கவர்னரைத் தேர்ந்தெடுக்கவும், நியமிக்கவும் அரசியலமைப்பு, ஜனதிபதிக்குப் பூரண அதிகாரம் வழங்குகிறது. செயல்முறையில் கவர்னர் நடு அரசாங்கத்தினல் நியமனஞ் செய்யப்படுகிறவர் என்பதுதானிதற்குப் பொருளாகும். ஆயினும், சென்ற சிலவாண்டுகளில், கவர்னர் நடு அரசாங் கத்தின் பிரதிநிதி என்பதோடன்றி, சம்பந்தப்பட்ட இராச்சியத் திற்கும் ஏற்புடையவரென்னுமோர் சிறந்த வழக்காறு தோன்றி வளர்ந்து வருகின்றது. அத்தகைய பயன், புது கவர்னரொருவர் நியமிக்கப்படுவதற்கு முன்பாக இராச்சிய அமைச்சவையை நடு அரசாங்கம் கலந்துகொள்வதால் பெறப்பட்டிருக்கிறது. இது, இராச்சியத்தின் தலைவர் என்ற முறையில் தன்னுடைய

கடமைப் பொறுப்புகளை நிறைவேற்ற தகுதியுடைய, இரு பக்கத்திற்கும் சம்மதமுடைய ஒருவரைப் பொறுக்கி எடுக்க உதவுகிறது. அல்லாமலும், அவர் அமைச்சவைக்கு, ‘உறு பொருளுரைப்பவராகவும், அறிவுசால் ஆலோசகராகவும், இராச்சியத்தில் அரசியல் சூழ்நிலை கொந்தளிப்பாக இருக்கும் போது, நயம்படவுரைத்து பயத்தைப் போக்கித் துணிவூட்டுபவராகவும், இருக்க உதவுகிறது. இவ்வாறாக, தற்போதைய தேர்வுமுறை, அரசியல் நிர்ணய சபையால் முதலில் ஏற்கக் கருதப்பட்ட இதர எந்த மாற்றுமுறைகளாலும் ஏற்பட்டிருக்கக் கூடிய தீமைகளையகற்றிவிடுகிறது.

பிறிதொரு வழக்காறும், நிலையான தன்மையில் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. இதுவும், கவர்னரின் நிலைமையை இராச்சியத்திற்குள் கட்சி, குழு, அரசியலுக்கப்பாற்பட்டவராகச் செய்வதற்குத் துணைபுரிந்திருக்கிறது. இதன்படி, ஓர் இராச்சிய கவர்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவர் சாதாரணமாக, ஒரு வெளியாராக, பிறிதோர் இராச்சியத்திலும் குடியுறை யுடையவராக, இராச்சியத்திற்குள் அரசியலில் ஈடுபாடற்றவராக இருக்கிறார். மொத்தத்தில் இது மிகப்பெரிய நன்மையாக இருக்கிறது. இது கவர்னரை வட்டார அரசியலுக்கு அப்பாற்பட்டவராக்குவதோடல்லாமல், இராச்சியத்தின் பிரச்சினைகளையும், யூனியனுக்கும் இராச்சியத்திற்கும் இடையிலான தொடர்பில் ஏற்படும் பிரச்சினைகளையும், அவர் பற்றற்றவாறும், பருப்பொருளறியும் நோக்கோடும் ஆராய உதவுகிறது.

### கவர்னரின் அதிகாரங்களும் பணிகளும்

இராச்சிய நிர்வாக அதிகாரம் கவர்னரிடம் அளிக்கப்பட்டிருக்கிறது. அவ்வதிகாரத்தை அவர் நேரிடையாகவோ அல்லது தனக்குக் கீழ்பட்ட அலுவலர்கள் மூலமாகவோ செலுத்துவதற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறார். இராச்சிய சட்டமன்றம் எவ்வெத் துறைகளிலெல்லாம் சட்டஞ் செய்யுமதிகாரம் பெற்றிருக்கிறதோ அவ்வத் துறைகளிலெல்லாம் இராச்சியத்தின் நிர்வாக அதிகாரம் பரந்திருக்கிறது. இராச்சியத் தலைவர் என்ற முறையில் அவருடைய பொறுப்புகளை நிறைவேற்றுகின்றபோது யூனியன் தலைவரென்ற முறையில் ஜனாதிபதி எவ்வெப் பணிகளைச் செய்கின்றாரோ, அத்தகைய பணிகளை கவர்னரும் செய்கின்றார். முதன் மந்திரியையும் இதர மந்திரிகளையும் அவரே நியமிக்கிறார். அவ் வேலைகள் எளிதாக நடப்பதற்கான விதிகளையும் அவரே ஏற்படுத்துகிறார். அரசாங்க நிர்வாக நடவடிக்கைகளெல்லாம் அவர் பெயராலேயே செய்யப்

படுகின்றன. அட்வோகேட் ஜெனரலையும், இராச்சியத்தின் இதர அலுவலர்களையும் அவர் நியமிக்கிறார். பீஹார், மத்தியப் பிரதேசம், ஒரிசா ஆகிய இராச்சியங்களில் ஆதிவாசிகளின் நலன் ஒரு மந்திரியின் பொறுப்பிலிருக்குமாறு கவனிக்கவேண்டியது அவருடைய தனித் திறமையாகும். அரசியலமைப்பின் ஆறுவது அட்டவணையில் ஏற்பாடு செய்துள்ளவாறு அஸ்ஸாமில் பழங்குடி மக்கள் வாழும் பகுதிகளின் ஆட்சியைப் பொறுத்தவரை கவர்னருக்கு விசேஷ அதிகாரங்கள் தரப்பட்டிருக்கின்றன.

ஜனாதிபதிக்கு மன்னிப்பளிப்பதற்கு அதிகாரம் தரப்பட்டிருப்பதுபோல கவர்னருக்கும் அவ்வதிகாரம் தரப்பட்டிருக்கிறது. இராச்சிய நிர்வாக அதிகாரம் எவ் விஷயத்திலெல்லாம் செல்கின்றதோ, அவ் விஷயம்பற்றிய சட்டத்திற்கெதிராகச் செய்யப்பட்ட குற்றத்திற்காகத் தண்டனை பெற்ற எல்லா நபர்களுக்கும் பொருந்தும்.

கவர்னர் சட்டத்துறையில் கணிசமான அதிகாரங்கள் தரப்பட்டிருக்கிறார். இராச்சிய சட்டமன்றத்தின் பிரிக்கமுடியாததொரு பகுதியாகவுமிருக்கிறார். அவர் இராச்சிய சட்டமன்றத்தைக் கூட்டுகிறார். அம் மன்றத்தில் அவர் நேராகத் தோன்றி உரையாற்றுகின்றார் அல்லது அதற்குத் தனிச் செய்திகளை அனுப்புகிறார். அதை அவர் கலைக்கவும் ஒத்திவைக்கவும் முடியும். ஒவ்வொரு நிதியாண்டிலும் சபையின் பரிசீலனைக்கு வரவுசெலவுத் திட்டம் சமர்ப்பிக்கப்படுமாறு அவர் செய்கிறார். அவரது சிபாரிசின்பேரில்தான் மான்யங்களுக்கான கோரிக்கைகள் அசெம்பிளியில் தாக்கல் செய்யப்பட முடியும். இராச்சிய சட்டசபையால் நிறைவேற்றப்பட்ட ஒவ்வொரு மசோதாவும் கவர்னரின் இசைவிற்கு அனுப்பப்படவேண்டும். அவ்வாறு அவரிடம் அனுப்பப்பட்ட மசோதாவைப் பொறுத்தவரையிலும் கீழே சொல்லப்பட்டுள்ள மூன்று முறைகளுள் ஏதேனுமொன்றைப் பின்பற்றலாம். மசோதாவிற்கு அவர் இசைவு தரலாம். அப்போது அது சட்டமாகிறது. அல்லது திருத்தங்கள் அல்லது மாறுதல்கள் அடங்கிய ஒரு செய்தியோடு இராச்சிய சட்டசபைக்கு மீண்டுமதை யனுப்பலாம். எனினும், பண மசோதாவைத் திருப்பியனுப்புவதற்கு கவர்னருக்கு அதிகாரம் கிடையாது. இவையல்லாமல், அரசியலமைப்பு அடிப்படையில் உயர் நீதிமன்றத்தின் தன்மை எத்தகையதென்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதைப் பாதிக்கின்றவகையில் சில ஷரத்துகள் இருக்கின்றன என்று அவர் கருதினால், அம் மசோதாவிற்கு ஜனாதிபதி இசைவு தேவையென ஒதுக்கிவைக்கலாம்.

உடனடி நடவடிக்கையெடுத்துக்கொள்ள வேண்டியதற்கான சூழ்நிலைகள் இருக்கின்றன என்று கருதினல் இராச்சிய சட்ட சபைத் தொடரில்லாமல் இருக்கும் இடைக்காலத்தில் அவசரச் சட்டங்களைப் பிரகடனம் செய்வதற்கு கவர்னருக்கு அதிகாரந் தரப்பட்டிருக்கிறது ஆனல், இவ்வதிகாரம் மூன்று விஷயங்களைப் பொறுத்தவரையிலும் ஜனதிபதியின்முன் அறிவுறுத்தல்களில்லாமல் அவர் பிரகடனப்படுத்தக் கூடாதென தடுக்கப்பட்டிருக்கிருர். அம் மூன்று விஷயங்களாவன: (1) அவசரச் சட்டமொன்றில் அடங்கியிருக்கும் ஷரத்துகள் மசோதாவாக்கப் படுகின்றபோது, இராச்சிய சட்டமன்றத்தில் தாக்கல் செய்வதற்கு ஜனதிபதியின் முன்கூட்டிய அனுமதி தேவைப்படுவது அல்லது (2) அதேமாதிரியான ஷரத்துகளைக் கொண்டுள்ள ஒரு மசோதா ஜனதிபதியின் பரிசீலனைக்கு அனுப்பவேண்டியது அவசியமென்று கருதுதல்; அல்லது (3) அதே ஷரத்துகளையுடைய இராச்சிய சட்டசபையின் சட்டமொன்று ஜனதிபதியின் இசைவு பெருமற் போனல் செல்லத்தகாததாகுமென்னும் போது.

கவர்னரால் பிறப்பிக்கப்பட்ட ஒவ்வோர் அவசரச் சட்டமும் இராச்சிய சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்திற்குடைய அதே வலிமையையும் விளைவையும் அடைகிறது. ஆனல், அத்தகைய அவசரச் சட்டமொவ்வொன்றும் இராச்சிய சட்ட சபை முன் அது மீண்டும் கூடுகிறபோது சமர்ப்பிக்கப்பட வேண்டும். அவ் அவசரச் சட்டம் சட்டசபையால் ஏற்கப்படவில்லையானல் சட்டப்படி செல்லாததாகிவிடுகிறது. அவசரச் சட்டத்தை எப்போது வேண்டுமானலும், விருப்பப்படி விலக்கிக் கொள்வதற்கு கவர்னருக்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. கவர்னர் இசைவுபெற்ற இராச்சிய சட்டசபையின் சட்டமொன்றில் சேர்க்கப்படுகின்றபோது செல்லத்தகாத ஷரத்துகளை அவசரச் சட்டம் கொண்டிருக்குமானல் அது செல்லத் தகாததாகும்.

அவசர காலமொன்றின்போது, இராச்சியத்தில் உண்மையான நிர்வாகத் தலைவராக கவர்னர் இயங்குகிருர். ஜனதிபதியால் நெருக்கடி நிலைமைப் பிரகடனம் செய்யப்பட்ட உடனே இராச்சிய ஆட்சி முழுதும் யூனியனின் நேர்க் கட்டுப்பாட்டின்கீழ் வருகிறது. இராச்சியத்தில், ஜனதிபதியின் 'தலத்திருக்கும் மனிதராகவும்' 'பிரதிநிதியாகவும்' இருப்பதால், நெருக்கடி காலத்தில் கவர்னர் தானே நேரிடையாக ஆட்சி அதிகாரத்தை ஏற்றுக் கொண்டு, சிவில் துறை அதிகாரிகளின் உதவிகொண்டு நிர்வாகத்தை நடத்துகிருர்.

# 25. கவர்னரும் அமைச்சரவையும்

திட்டவட்டமாக அவர் இச்சைப்படி, உசிதம்போல் நடக்க வேண்டுமென்று அரசியலமைப்பால் விதிக்கப்பட்டிருக்கின்றபடி யல்லாத இதர சமயங்களில் அவருடைய பணிகளைச் செலுத்து கின்றபோது, கவர்னர், முதலமைச்சர் தலைமையிலுள்ள அமைச்சரவையொன்றினால் உதவியும் ஆலோசனையும் தரப்படுகிறார். ஆனால், குறிப்பிட்ட ஒரு பொருள் கவர்னரின் உசித அதிகாரத்தின்கீழ் (discretionary power) வருகிறதா அல்லது இல்லையா என்பதுபற்றி கவர்னருக்கும் அமைச்சவைக்குமிடையே கருத்து வேறுபாடு ஏற்படும் பட்சத்தில், கவர்னர் சமயோசித அடிப்படையில் செய்யும் முடிவே இறுதியானது. மேலும், கவர்னரால் செய்யப்பட்ட எதுவும் அவருடைய உசித அதிகாரத்தின்கீழ் செய்யத் தகுந்ததா, செய்யத் தகாததா என்னும் பிரச்சினை எழ முடியாது. அமைச்சர்கள் அறிவுரைப்படி, கவர்னர் பணியாற்ற வேண்டியவராக இருப்பினும், ஏதாவது ஆலோசனை கவர்னருக்குச் சொல்லப்பட்டதா. அவ்வாறாயின், என்ன ஆலோசனை சொல்லப்பட்டது என்னும் பிரச்சினை எந்த நீதி மன்றத்திலும் விசாரணை செய்யப்பட முடியாது.

முதன் மந்திரியையும், முதன் மந்திரியின் ஆலோசனைப்படி மற்ற மந்திரிகளையும் கவர்னர் நியமனம் செய்கிறார். கவர்னரின் நல்லெண்ணத்தைப் பெற்றிருக்கின்றவரையிலும் மந்திரிகள் பதவி வகிக்கிறார்கள். மத்திய அரசாங்க மந்திரிகள் லோக் சபைக்குப் பொறுப்புடையவர்களாக இருக்கின்றதைப்போல, மாநில மந்திரிகள், சட்டசபைக்குக் கூட்டாகப் பொறுப்புடையவர்களாக இருக்கின்றனர். ஒவ்வொரு மந்திரியும் பதவியேற்கும் முன்பாக அவருக்கு கவர்னர் பதவியுறுதிப் பிரமாணஞ் செய்து வைக்கிறார். நியமனஞ் செய்கின்றபோது இராச்சிய சட்ட சபையுறுப்பினராக இல்லாவிட்டாலும், ஒருவரை கவர்னர் மந்திரியாக நியமிக்கமுடியும். ஆனால், அத்தகைய மந்திரி

யொருவர் பதவியேற்ற ஆறு மாதத்திற்குள்ளாகச் சட்டசபை உறுப்பினராகவேண்டும்.

இராச்சிய நிர்வாக நடவடிக்கைகளெல்லாம் கவர்னர் பெயராலேயே செய்யப்படுவதை நாம் முன்பே கவனித்திருக்கிறோம். இவ்வடிப்படையில் இராச்சிய அரசாங்கத்தின் அலுவல் மிக நல்லமுறையில் நடப்பதற்காக விதிகள் ஏற்படுத்தக் கவர்னருக்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது தன் சமயோசித அதிகார அடிப்படையில் நடக்கவேண்டியபோது தவிர, இதர சமயங்களில அரசாங்க அலுவல்களை மந்திரிகளிடையே பிரித்து ஒதுக்க அவருக்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது அமைச்சரவைத் தலைவரென்ற முறையில் இராச்சிய நிர்வாக அலுவல்கள் பற்றிய அமைச்சவையின் முடிவுகளையும், சட்டமியற்றுவதற்கான பிரேரணைகளையும் கவர்னருக்குத் தெரிவிக்கவேண்டியது முதலமைச்சரின் கடமையாகும். இராச்சிய நிர்வாகம் அல்லது, சட்டத்துறைத் தொடர்புடைய எச் செய்தியையும் கவர்னர் கோரும்போது, அதையும் அவருக்கு முதலமைச்சர் தரவேண்டும். மேலும், ஒரு பிரச்சினைபற்றி ஓர் அமைச்சர் முடிவு செய்திருப்பாராகில், அப் பிரச்சினை, அமைச்சவையால் பரிசீலனை செய்யப் படாமற் போயிருக்குமானால், கவர்னர் விரும்புவாரானால், அதையும் அமைச்சரவைமுன் பரிசீலனைக்கு வைப்பது முதலமைச்சரின் பொறுப்பாகும்.

அரசியலமைப்பின் இந்த ஷரத்துகள் (provisions) கவர்னருக்கு மிக அதிகமான அதிகாரங்களைத் தருகின்றன. மேலெழுந்தவாரியாக அவைகளது மதிப்பைப் பார்க்கையில் மிகப் பெருமளவிற்கு அவைகளின் சக்தி மிகுந்திருக்கும். என்றாலும், அரசியல் நிர்ணய சபையில் வெளியிடப்பட்ட அறிக்கைகளிலிருந்து, நாம் முன்பே அறிந்தவாறு, கவர்னர் இராச்சியத்தின் சாதாரணமான அரசியல் சட்டபூர்வமான தலைவராகவே யிருக்கின்றார். இதன் பொருள், தன் பணிகளைச் செய்வதைப் பொறுத்தவரையிலும், அவரே 'தலைமை நிர்வாகி' என்றிருந்தாலும், உண்மையான அதிகாரம், அமைச்சவையிடமேயிருக்கிறது. இது, அரசியல் நிர்ணயசபையில் (Constituent Assembly) அதிகாரபூர்வமான பிரதிநிதிகளால் மீண்டும் மீண்டும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

'கவர்னரின் விருப்பமிருக்கின்றவரையிலும், மந்திரிகள் பதவியிலிருக்கின்றார்கள்' என்னும் ஷரத்தின் நோக்கத்தை விளக்குகின்றபோது, அம்பேத்கர் குறிப்பிட்டதாவது: "இவ் வரசியல் அமைப்பின் நோக்கம், பெரும்பான்மையினரின் நம்பிக்கையைப் பெற்றிருக்கின்ற வரையிலும், அமைச்சவை பதவி வகிக்கும் என்று நான் ஐயமறக் கருதுகிறேன். இக் கொள்கை

அடிப்படையில்தான் அரசியலமைப்பு இயங்கும். அதை அவ்வளவு தெளிவாக ஏன் நாம் சொல்லவில்லை என்றால், பாராளுமன்ற முறை அரசாங்கத்தை ஏற்படுத்துகின்ற அரசியலமைப்புகள் எதிலும் அந்த முறையிலோ அல்லது அந்த அடிப்படைகளிலோ இது சொல்லப்பட்டிருக்கவில்லை. 'விருப்பமிருக்கும் வரை' என்பது எப்போதுமே, பெரும்பான்மையின் நம்பிக்கையை ,அமைச்சவை இழந்துவிட்டது என்று தெரிந்த பிறகு; விருப்பம்' தொடர்ந்திருக்காது என்று கொள்ளப்பட்டது. கவர்னர் அமைச்சவையை விலக்குவதற்குத் தன் 'விருப்பத்தை' உபயோகிப்பாரென்பது எண்ணப்பட்டது. எனவே, பொறுப்புள்ள அரசாங்கங்களில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள ஒரே மாதிரியான சொற்றொடரினின்றும், விலகவேண்டியது அவசியமற்றது.''

எந்த அளவிற்குச் சாத்தியமோ அந்த அளவிற்கு மிகப் பரந்த மக்களாதரவு அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் முழுப் பொறுப்புடைய அரசாங்க அமைப்பில் கவர்னரொருவர் எதேச்சாதிகார (authoritarian) முறையில் நடக்கக் கூடுமென்பது நினைப்பதற்கும் முடியாததாக இருக்கிறது. பேராதரவு பெற்ற மந்திரிகளடங்கிய அமைச்சவை, சட்டசபைக்குக் கூட்டுப் பொறுப்புடையதாக இருப்பதாலும், கவர்னருக்கு அவருடைய பணிகளை நிறைவேற்றுவதற்கு உதவியும் ஆலோசனையும் தருவதாகச் சொல்லப்படுவதாலும் அவர்களைப் புறக்கணித்து நடப்பதற்கான சந்தர்ப்பங்கள் அனேகமாகக் கிடையாதென்பதும் தெளிவாவதோடு, அவர்களுடைய அறிவுரைக்கு மாறான தன்மையில் நடத்தலும் முடியாது. ஆனால், இதற்கு அவர் ஒரு சாதாரணத் தலைவர் என்றோ, 'அவருடைய அமைச்சவை குறிப்பிடுமாறு நடக்கும் கைப்பாவை என்றோ அல்லது, அவரது அமைச்சவைக்கும், ஜனாதிபதிக்குமிடையே செய்திப் போக்குவரத்திற்குதவும் அஞ்சலகம் போன்றவர் என்றோ' அல்லது அவரது அமைச்சவைக்கும் அதிகாரபூர்வ கெஜட்டிற்கும் (gazette) இடையே உள்ள தொடர்பாளர் என்றோ பொருளாகுமா?' அரசியலமைப்பு ஷரத்துகளில் கூர்ந்த அறிவும், அரசியலமைப்புத் திட்ட ஏற்பாட்டின் முழுமைபற்றிய சரியான உணர்வடிப்படையில் எழும் நல்லுணர்வும், கவர்னர் வெறும் தலைவரொருவராகவோ, அல்லது குறிப்பிட்ட இடத்தில் கையெழுத்திடுபவராகவோ இருக்கவில்லை என்பதையும், இராச்சிய விவகாரங்களின் நிர்வாகத்தில் ஓர் இன்றியமையாத பங்காற்றுவதற்காக ஏற்படுத்தப்பட்ட பணியாளரென்பதையும் காட்டும்.

கவர்னர் அவருடைய கருத்தடிப்படையில் செயலாற்று வதற்கு அத்தகைய வாய்ப்பளிக்கும் சந்தர்ப்பங்கள் பின்வரு பவைகளாகத் தோன்றுகின்றன: (1) அமைச்சர்கள் குழாம் அமைக்கப்படுவதற்கு முன்பு, ஒரு முதலமைச்சரைத் தேர்ந் தெடுப்பது. (2) மந்திரி சபை ஒன்றைப்பதவியினின்றும் நீக்குவது. (3) சட்டசபையைக் கலைப்பது. (4) சட்ட நிர்வாகம் சம்பந்தப் பட்ட விஷயங்களில் முதன் மந்திரியிடமிருந்து ஆலோசனை பெறுதல். (5) அமைச்சவையினால் பரிசிலிக்கப்படாத ஒரு பொருள்பற்றி ஓரமைச்சராலெடுக்கப்பட்ட முடிவை அமைச் சவையின் பரிசீலனைக்கு வைக்குமாறு முதலமைச்சரைக் கேட்பது. (6) சட்டசபையால் நிறைவேற்றப்பட்ட மசோதா ஒன்றிற்கு இசைவு தர மறுத்து மறு பரிசீலனைக்கு மீண்டுமதை அனுப்புவது. (7) இராச்சிய சட்டசபையால் நிறைவேற்றப்பட்ட மசோதா ஒன்றுக்கு ஜனாதிபதி இசைவு தேவையென்று ஒதுக்குவது. (8) குறிப்பிட்ட சில விஷயங்கள்பற்றிய அவசரச் சட்ட மொன்றைப் பிரகடனப்படுத்துவதற்கு முன்பு, ஜனாதிபதியிட மிருந்து விளக்கங்களை நாடுவது. (9) அவசர நிலைமையொன்றைப் பிரகடனப்படுத்த ஜனாதிபதிக்கு ஆலோசனை கூறுவது. (10) அசாம் கவர்னரைப் பொறுத்தவரையிலும் பழங்குடி (tribal) மக்கட் பகுதிகள் சம்பந்தப்பட்ட சில நிர்வாக விஷயங் களிலும், அசாம் அரசாங்கத்திற்கும் மாவட்டக் குழுவிற்கு மிடையே (தன்னாட்சி உடைய மாவட்டமொன்றினுடைய) சுரங்கங்களைப் பயன்படுத்துவதற்காகத் தரப்படும் தொகைக்காக ஏற்படும் சச்சரவுகளைத் தீர்த்துவைப்பது ஆகும்.

எனினும், கவர்னரது உசித அதிகாரங்கள் நடைமுறையில் முழுமையானதாக இருக்க முடியாதென்பதையும் குறிப்பிட வேண்டும். ஏனெனில், முழுமைத் தன்மையுடையதன் விருப்பம் சர்வாதிகாரத்தின் ஓர் அம்சமாகும். கவர்னர், ஜனநாயக அரசியலமைப்பொன்றின் எல்லைக்குள் செயலாற்றுகின்றவரை யிலும், எந்தச் சூழ்நிலைகளிலும் ஒரு சர்வாதிகாரியாக இருக்க முடியாது. பிறகு என்னதான் அவரது உசித அதிகாரத்திற்கு இருக்கும் தடை? இவ்வகையில் அமைச்சவையோ, இராச்சிய சட்டசபையோ கவர்னரைக் கட்டுப்படுத்த முடியாது. ஆனால், ஜனாதிபதி கட்டுப்படுத்தமுடியும். இதன் பொருள், கவர்னர், தனது உசித அதிகாரத்தைப் பயன்படுத்துவதில் சுதந்திரமானவ ரல்லர் என்பதாகும். அவர் அதை சுயநலத்தின் விளைவாகவோ அல்லது இராச்சிய அரசியலில், அவ்வப்போது மாறிமாறித் தோன்றும் நிகழ்ச்சிகளில், ஒருசார்புடையவராக (partisan) இருப்பதாலோ, தவறாகப் பயன்படுத்துவாரானால், ஜனாதிபதிக்

கெப்போதும் அவரைக் கட்டுப்படுத்தவும், அவசியமானல் பதவியி னின்றும் நீக்கவும் முடியும். இவ்வாறு, முடிவாக ஆய்கின்ற போது, சாதாரண காலங்களிலும் சரி, அசாதாரணமான காலங் களிலும் சரி, கவர்னர் சுதந்திரமானவர் அல்லர். ஏனெனில், அவருடைய பணிகளைச் செய்வதில் சாதாரணமாக அவர், அமைச் சவையினுல் உதவியும், அறிவுரையும் தரப்படுகிருர். இராச்சிய சட்டசபையின் நம்பிக்கையை அமைச்சவை பெற்றிருக்கிறவரை யிலும், அதனுடைய அறிவுரைக்கு மாருக, அவரது உசிதவிருப் பத்தை ஏற்படுத்த இயலாது. அதைச் செய்ய, அவர் முயற்சி செய்வாரேயாஞல், அது இறுதியாக அவரது பதவி நீக்கத்தில் கொண்டுபோய் விடக்கூடிய அரசியல் சிக்கல்களை ஏற்படுத்தும். அதற்கு மாரு, போரிஞலேற்பட்ட அவசரநிலைமை, உள்நாட்டுக் கலகம் அல்லது இராச்சியத்தில் சட்டபூர்வமான அரசாங்கம் இயங்க இயலாத நிலைமை போன்ற அசாதாரணமான நிலைமை களில், அவர் ஜனதிபதியினுடைய பிரதிநிதியாகச் செயல் புரி வாரேயல்லாமல். அச் சூழ்நிலையில் அவரே எல்லாம் என்ற முறை யில், சர்வாதிகாரத் தலைவராக.அல்ல. அத்தகைய நிலைமைகளில் அவரது அதிகாரங்கள், சாதாரண சமயங்களில் அவரது அதிகாரங்கள் பெயரளவில் இருப்பதுபோலல்லாமல், மிக்வும் உண்மையானவைகளாகவிருக்கின்றன.

எல்லாவற்றையும் ஒருங்கே காண்கையில், கவர்னர் பதவியைப் பற்றிய முக்கியத்துவம், ஆலோசகரொருவராக, அவர் ஆற்றும் பணியைப்பற்றியதென்றே தோன்றுகிறது. ஒருபுறம், அவர் அமைச்சவைக்குக் கட்சி சார்பற்ற ஆலோசகராக இருக்கிருர். இராச்சியத்தின் தலைவரென்ற முறையில், அவரைக் கலந்து ஆலோசிக்கவேண்டுமென்று கோருவதற்கு உரிமையிருக்கிறது. அதேபோன்று, அமைச்சவையை ஊக்குவிப்பதற்கும், தவறுகின்ற போது எச்சரிப்பதற்கும், அவருக்கு உரிமையிருக்கிறது. சாதக மும், அதிகாரமும் உடைய நிலைமையிலிருந்துகொண்டு, இராச்சி யத்தில் என்ன நடந்துகொண்டிருக்கிறதென்பதைப் பற்றற்று கவ னிக்கும் பார்வையாளர் போன்று அவருள்ளார். அத் தன்மையி லிருப்பதால், இராச்சிய அரசாங்கத்தின் பெருந்தன்மையையும், ஸ்திரத் தன்மையையும், கூட்டுப் பொறுப்பையும் நிலைநாட்டு கிருர். மறுபுறம், அவர் ஜனதிபதியின் பிரதிநிதியாகவும், இராச்சிய விவகாரங்களில் அவரது ஆலோசகராகவும், இராச்சியத்தில், யூனியனது 'பிரதிநிதி'யாகவுமிருக்கிருர். அவர் கூட்டரசையும், இராச்சியத்தையும் சேர்க்கும் இணைப்பாகவும், யூனியன், இராச்சியத் தொடர்பை ஏற்படுத்துபவராகவு முள்ளார். இவ்வாறு அவர், அரசியல் அமைப்பு இயந்திரத்தின்

இன்றியமையாத பகுதியாகவும், இன்றியமையாத ஒரு நோக்கத்தை நிறைவேற்றுபவராகவும், இன்றியமையாத பணி ஒன்றை ஆற்றுபவராகவுமுள்ளார். உடனிருந்து நிலைமையைத் தெரிந்து கொள்ளும் தனிச் சிறப்பைப் பெற்றிருந்த ஒருவர் கூற்றுப்படி 'நாம் இயற்றிக்கொண்டு இருக்கும் அரசியலமைப்பு அடிப்படையில், அவருக்குத் தரப்பட்டிருக்குமதிகாரம் மிகக் குறைவானதாக இருப்பினும், ஒரு கவர்னர் மிக அதிகமான அளவில் நன்மையை, அவர் நல்லவராக இருப்பின் செய்யமுடியும். அவர் தீய கவர்னர் ஆகவிருந்தால், மிக அதிகமான தீமையைச் செய்யலாம்.'

## இராச்சிய அட்வொகேட் ஜெனரல்

யூனியன் அரசாங்கத்திற்குச் சட்ட ஆலோசகராக இருக்கும் அட்டார்னி ஜெனரலைப் போன்று, இராச்சிய அட்வொகேட் ஜெனரலெனும் பெயரில், இராச்சிய அரசாங்கத்திற்காக ஒரு சட்ட ஆலோசகருக்கு அரசியலமைப்பு வகை செய்கிறது. அவர் கவர்னரால் நியமிக்கப்பட்டு, விருப்பமிருக்கும்வரை பதவி வகிக்கிறார். அட்வொகேட் ஜெனரலாக நியமிக்கப்படும் ஒருவர், உயர் நீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்படுவதற்கு, அவருக்கு என்னென்ன தகுதிகளிருக்க வேண்டுமோ, அதே தகுதிகளைப் பெற்றிருக்கவேண்டும். கவர்னர் நிர்ணயம் செய்கின்றவாறு, அட்வொகேட் ஜெனரல் ஊதியம் பெறுகிறார்.

அவரிடம் அனுப்பப்பட்ட சட்டசம்பந்தமான விஷயங்களில், இராச்சிய அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறுவது, இவரது கடமையாக இருப்பதோடு, அவ்வப்போது, அவர் பொறுப்பில் விடப்படுகின்ற சட்டச் சார்புடைய இதர சில கடமைகளையும், அவர் செய்யவேண்டும். இப் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கு இராச்சியத்திற்குள் இருக்கும் எந்த நீதிமன்றமாயினும், அதன் முன் தோன்றவோ அல்லது தேவையானபோது, இராச்சிய சட்டசபையில் உரையாற்றவோ அவர் உரிமை பெற்றிருக்கிறார்.

# 26. இராச்சிய சட்டசபை

யூனியனிலுள்ள ஒவ்வோர் இராச்சியத்திற்கும் ஒரு சட்ட சபைக்கு அரசியலமைப்பு வகை செய்கிறது. ஆனல், அது ஒவ்வோர் இராச்சிய சட்டசபையைப் பொறுத்தவரையிலும், இரு மன்றக் கொள்கையைப் (Bicameralism) பின்பற்றவில்லை ஒவ்வொன்றும் சட்டசபையில் இரு மன்றங்களையுடைய பத்து இராச்சியங்கள் உள்ளன. அவை: ஆந்திரப் பிரதேசம், பீகார், ஜம்மு காஷ்மீரம், மகாராட்டிரம், மத்தியப் பிரதேசம், சென்னை, மைசூர், பஞ்சாப், உத்தரப் பிரதேசம், மேற்கு வங்காளம் ஆகியவை. மற்ற இராச்சியங்கள் ஒற்றை மன்ற சட்ட சபையைப் பெற்றிருக்கின்றன. எங்கெல்லாம் இரு மன்றங்களை யுடைய சட்டசபைகள் இருக்கின்றனவோ, அங்கு ஒன்று சட்ட சபையென்றும், மற்றொன்று சட்டமன்றமென்றும் அழைக்கப் படுகின்றன. எங்கு ஒரேயொரு மன்றமுள்ளதோ அங்கு அது சட்டசபையென்று அழைக்கப்படுகிறது. இராச்சிய கவர்னர் சட்டசபையின் பிரிக்கமுடியாத பகுதியாக இருக்கிறார்.

இராச்சிய சட்டசபை மக்கள்சபை அடிப்படையிலும், சட்ட மன்றம் இராச்சிய சபை அடிப்படையிலும் அமைக்கப் பட்டிருக்கின்றன. ஒரு சில இராச்சியங்களுக்கு இரு சட்ட சபைகளையும், மற்றவைகட்கு ஒரு சட்டசபையையும், அரசியல் அமைப்பு ஏற்படுத்தியபோதிலும், இராச்சிய சட்ட சபைகள் ஒரு மன்றத்தை உடையவைகளாக இருக்கவேண்டுமா அல்லது இரு மன்றங்களை உடையவைகளாக இருக்கவேண்டுமா என்னும் பிரச்சினை இதுவரையிலும் முடிவு செய்யப்படாத தொன்றாகும். ஏனெனில், 169ஆம் விதி, எதிர்காலத்தில் சட்ட மன்றங்கள் ஏற்படுத்தப்படுவதற்கும், இருப்பவற்றைக் கைவிடுவ தற்கும் விசேஷ முறை ஒன்றுக்கு வகைசெய்கிறது. இதன்படி சம்பந்தப்பட்ட இராச்சிய சட்டசபை, அதன் மொத்த உறுப் பினர்களில், பெரும்பான்மைக்குக் குறையாமலும் அதே சமயத்

தில், கூட்டத்தில் கலந்துகொண்டு வாக்கு அளிப்பவர்களில் மூன்றிலிரு பங்கினருக்குக் குறையாத பெரும்பான்மையோடு, ஓர் இராச்சியத்தில் சட்டமன்றத்தை ஏற்படுத்துவதற்கோ அல்லது கைவிடுவதற்கோ, தீர்மானமொன்றை நிறைவேற்றுமானால், அவ்வாறு செய்வதற்கு, பாராளுமன்றத்திற்கு அதிகாரம் தரப் பட்டிருக்கிறது. இத்துறையில் பாராளுமன்றத்தால் இயற்றப் பட்ட சட்டம், அத்தகைய சட்டத்தால் பாதிக்கப்பட்ட அரசி யல் அமைப்பு மாற்றங்களைக் கொண்டிருக்கவேண்டும். ஆனால், இம் மாற்றங்கள் முறைப்படியான மாற்றங்களாகக் கருதப்பட மாட்டா. ஏனெனில், அவைகட்காக பிரத்யேக முறை ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.

## சட்ட சபை

## (The Legislative Assembly)

### அமைப்பு

நேரிடைத் தேர்தல் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டது இச் சபை. இவ் விதிக்கிருக்கும் ஒரேயொரு விலக்கு ஆங்கிலோ-இந்தியச் சமூகத்தினருக்குத் தரப்பட்டிருக்கும் பிரதிநிதித்துவமேயாகும். அச் சமூகத்தைச் சேர்ந்த ஒருவர்கூட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படவில்லை யானால் அச் சமூகத்தினரின் சார்பாக, ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவர்களைச் சபையின் உறுப்பினர்களாக நியமிக்க கவர்னருக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கின்றது. எந்த ஓர் இராச்சிய சட்டசபைக்கும் உறுப்பினர்களாக அதிகபட்சமாக 500 பேர்களையும், குறைந்தபட்சமாக 60 பேர்களையும், அரசிய லமைப்பு நிர்ணயித்துள்ளது. தேர்தலுக்காகச் சட்டசபையில் எத்தனை இடங்களுள்ளனவோ, அத்தனைப் பிரதேசத் தொகுதி களாக இராச்சியம் பிரிக்கப்பட்டுள்ளது. கூடுமானவரையிலும் ஒவ்வொரு தொகுதியின் மக்கள்தொகைக்கும், அதற்கு ஒதுக்கப் பட்டுள்ள இடங்களின் எண்ணிக்கைக்கும் இடையேயுள்ள விகிதாசாரம் இராச்சியம் முழுவதிலும் ஒரே மாதிரியாக இருக்கும். பத்தாண்டுகட்கு ஒருமுறை நடைபெறும் மக்கள் கணிதி முடிவில், மக்கள்தொகை மாறுபாடுகட்கேற்ப தேவை யான சீரமைவுகளைச் செய்ய தொகுதிகள் திருத்தியமைக்கப்படும். தற்போது ஒவ்வொரு தொகுதியிலுமிருக்கும் வாக்காளர்களின் எண்ணிக்கை 75,000 ஆகும். 1956ஆம் ஆண்டில் செய்யப்பட்ட இராச்சிய சீரமைப்பிற்கு முன்பும் பின்புமான புள்ளி விவரங் களைக்கொண்ட பின்வரும் அட்டவணையிலிருந்து, ஒவ்வோர் இராச்சிய சட்டசபயின் உறுப்பினர்களின் எண்ணிக்கையைத் தெரிந்துகொள்ளலாம்.

## சட்டசபை

| இராச்சியத்தின் பெயர் | மொத்த உறுப்பினர்கள் | | நியமிக்கப் பட்டுள்ளோர் |
|---|---|---|---|
| | சீரமைப்பிற்கு முன் | சீரமைப்பிற்குப் பின் | |
| ஆந்திரப் பிரதேசம் | 196 | 302 | 1 |
| அசாம் ... ... | 105 | 105 | |
| பீஹார் ... ... | 330 | 318 | |
| குஜராத் ... .. | — | 133 | |
| ஜம்மு காஷ்மீர் ... | 75 | 75 | |
| கேரளம் ... ... | 109 | 127 | 1 |
| மத்தியப் பிரதேசம். | 232 | 289 | 1 |
| சென்னை ... ... | 234 | 205 | |
| மகாராட்டிரம் ... | — | 264 | 1 |
| மைசூர் ... — | 105 | 209 | 1 |
| ஒரிசா ... ... | 140 | 140 | |
| பஞ்சாப் ... ... | 126 | 154 | |
| இராஜஸ்தான் ... | 160 | 176 | |
| உத்திரப் பிரதேம் ... | 431 | 431 | 1 |
| மேற்கு வங்காளம் ... | 238 | 258 | 4 |

## சட்டமன்றம்
## (The Legislative Council)

அமைப்பு

இராச்சியங்களுக்கு மேற்சபையொன்றை ஏற்படுத்த வேண்டுமென்னும் கருத்தை அரசியல் நிர்ணயசபையின் உறுப் பினர்கள் பலர் எதிர்த்தனர். இராச்சியங்களில் சட்டசபையோடு

மேலுமொரு மன்றமென்பது அவசியமற்றதென்று அவர்கள் கருதினார்கள். அவர்களில் சிலர் 'விலையுயர்ந்த ஆபரணம் போன்ற உயர் வாழ்க்கைப் பொருள்' போலுமிதைக் காப்பதற் கான பொருளாதாரத் தகுதி இராச்சியங்கட்கிருக்குமா என்றும் ஐயுற்றார்கள். பல இராச்சியங்களைச் சேர்ந்த சட்டசபை உறுப் பினர்கள் இப் பிரச்சினையைப்பற்றி முடிவு செய்வதற்கு அனு மதிக்கப்பட்டதும், சட்டமன்றங்களின் எதிர்காலம்பற்றி, அரசியலமைப்பில் உறுதியற்றவாறு விடப்பட்டிருப்பதும், இக் கூற்றுகட்கு ஆதாரமாகும். சட்டமன்றத்தினமைப்பு அடிப் படை" பின்வருமாறுள்ளது.

(1) மன்றத்தின் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கை, சட்டசபையின் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கையில் மூன்றி லொரு பங்கிற்கும் அதிகமாக இருக்கக்கூடாது. எங்ஙனமாயி னும், அவ்வெண்ணிக்கை நாற்பதுக்குக் குறைவாகவும் இருக்கக் கூடாது. (2) மன்றத்தின் பிரதிநிதித்துவத்தில் ஐந்து வகை களுள்ளன. அவைகளாவன: (அ) இராச்சியங்களிலுள்ள நகர சபைகள், மாவட்டக் கழகங்கள் முதலான தன்னாட்சி வட்டாரக் கழகங்களின் உறுப்பினர்களைக் கொண்ட தேர்தல் தொகுதிகளால் மொத்த உறுப்பினர்கள் தொகையில் மூன்றிலொரு பங்கினர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். (ஆ) இராச்சியக் கீழ்ச் சட்டசபை உறுப்பினர்களால் மூன்றிலொரு பங்கினர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். (இ) இராச்சியத்தில் வாழும் பல்கலைக் கழகப் பட்ட தாரிகள் (அவர்கள் குறைந்த அளவு மூன்றாண்டுகள் ஆனவர் களாக) அல்லது அதற்குச் சமத் தகுதியுடையவர்கள் அடங்கிய வாக்காளர் தொகுதிகளால் பன்னிரண்டில் ஒரு பகுதியினர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். (ஈ) மூன்றாண்டு ஆசிரியர் தொழில் தகுதியுடைய இடைநிலைக்கல்வி பள்ளி ஆசிரியர்கள் அல்லது உயர்கல்வி நிலையங்களிலுள்ள ஆசிரியர்கள் அடங்கிய வாக்காளர் தொகுதிகளால் பன்னிரண்டில் ஒரு பகுதியினர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். (உ) மற்றவர்கள், சிறப்பறிவு அல்லது இலக்கியம், விஞ்ஞானம், கலை, கூட்டுறவு இயக்க மல்லது சமூக சேவை ஆகியவற்றில் சிறந்தவர்களிலிருந்து கவர்னரால் நியமிக்கப்படவேண்டும். (3) முதல் நான்கு வகை யினர் தேர்வு ஒற்றை மாற்றுவாக்கு விகிதாசாரப் பிரதிநிதித் துவமுறை அடிப்படையில் (proportional representation by means of the single transferable vote) நடைபெறவேண்டும். (4) வோட்டெடுப்பு, ரகசிய வாக்கெடுப்பு அடிப்படையிலிருக்க வேண்டும். (5) மேலே விவரிக்கப்பட்டுள்ள பிரதிநிதித்துவத் தன்மையில் எத்தகைய மாறுதலையும் ஏற்படுத்தப் பாராளு மன்றம் அதிகாரமுடையது.

இவ் வேறுபாடுகள், இப் பொருள்பற்றிய தீவிர சிந்தனையின் விளைவாக ஏற்பட்டவையன்று என்பது குறிப்பிடத்தக்கது. தற்போது அது இருக்கின்றவாறு, அங்கு நேரிடைத்தேர்வு, மறைமுகத்தேர்வு, நியமனமுறை ஆகியவற்றின் குழப்பக் கூட்டு, பிரதிநிதித்துவ அடிப்படையில் மேல்மன்றம் அமைக்கப்படுகிறது. ஆசிரியர்கட்கும், தலஆட்சி நிலையங்களின் உறுப்பினர்கட்கும் தரப்பட்டுள்ள வாக்குரிமை முக்கியமாகப் பணி அடிப்படையைச் சார்ந்த பிரதிநிதித்துவத்தை வற்புறுத்துகிறது. ஆனாலும், அக் கருத்தடிப்படையில் பிரதிநிதித்துவம் மிகக் குறுகிய நோக்கமுடையதாக இருக்கிறது. இவைகளோடுகூட கவுன்சிலில் பிரதிநிதித்துவம் தரத்தக்கவையும், உயிர் நலன் ஏற்படுத்த வல்லவையுமான பல இதர தொழில்களும் அக்கறைக் குழுக்களும் இருக்கின்றன. கவுன்சில் உறுப்பினர்களில் மூன்றிலொரு பகுதியினரைத் தேர்ந்தெடுப்பதற்கு வகை செய்யப்பட்டிருப்பதால் சட்டசபை உறுப்பினர்களுக்கு மிக அதிகமான செல்வாக்குத் தரப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் நியமனம் செய்வதற்காக ஒதுக்கப்பட்ட இடங்களின் விழுக்காடு மிகக் குறைவானதாகத் தோன்றுகிறது. கலை, விஞ்ஞானம், இலக்கியம், சமூக சேவை ஆகிய துறைகளைச் சேர்ந்த திறமையுடையவர்கள், அவர்களுடைய அனுபவத்தாலும், முதிர்ச்சியினாலும், பெற்ற அறிவு அடிப்படையில் சிறப்பாக நிர்வாகத்தைக் கண்காணிப்பதற்கு அல்லது மேற்பார்வையிடுவதற்குத் தகுதியுடையவர்களாகிய மதிப்புடைய முதியோர்களடங்கிய சபையாக ஆக்குவதற்கேற்ப கவுன்சிலில் மிக அதிகமானவர்களாக நியமிக்கப்பட்டிருக்க வேண்டும்.

பின்வரும் அட்டவணை பல இராச்சியங்களிலுள்ள மேற்சட்டமன்றங்களின் உறுப்பினர்கள் எண்ணிக்கையையும், அவர்கள் எத் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றார்கள் என்பதையும் காட்டுகின்றது.

சாதாரணமாகச் சட்டமன்றத்தின் ஆயுட்காலம் ஐந்தாண்டுகள். ஆனால், அதற்கு முன்பாகவே கவர்னரால் அது கலைக்கப்படலாம். அவசர காலத்தில் பாராளுமன்றச் சட்டமொன்றின் மூலமாக அதனுடைய ஆயுட்காலம் ஒரு தடவையில் ஓராண்டுக் காலத்திற்கு நீடிக்கப்படலாம். எங்ஙனமாயினும், அவசரப் பிரகடனம் செயற்படுவது நின்றபிறகு ஆறுமாத காலத்திற்குப் பிறகு அதன் ஆயுட்காலம் நீடிக்கப்படமுடியாது. அதற்கு மாறாக, சட்டமன்றமோவெனில் ஒரு நிரந்தர நிலையமாகும். அதனுடைய உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்கினர்

## சட்ட மன்றம்

| இராச்சியத்தின் பெயர் | மொத்த உறுப்பினர்கள் | கீழ்ச் சட்டசபையால் தேர்ந்தெடுக்கப்பட்டோர் | தல ஆட்சியால் தேர்ந்தெடுக்கப் பட்டோர் | பட்டதாரிகளால் தேர்ந்தெடுக்கப் பட்டோர் | ஆசிரியர்களால் தேர்ந்தெடுக்கப் பட்டோர் | நியமிக்கப் பட்டோர் |
|---|---|---|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் ... | 90 | 31 | 31 | 8 | 8 | 12 |
| பீஹார் ... ... | 72 | 25 | 23 | 6 | 6 | 12 |
| ஜம்மு காஷ்மீர் ... ... | 36 | 21 | 7 | — | 2 | 6 |
| மத்தியப் பிரதேசம் ... | 90 | 31 | 31 | 8 | 8 | 12 |
| சென்னை ... ... | 50 | 16 | 16 | 6 | 4 | 8 |
| மகாராட்டிரம் ... ... | 78 | 31 | 21 | 7 | 7 | 12 |
| மைசூர் ... ... | 63 | 21 | 21 | 6 | 6 | 9 |
| பஞ்சாப் ... ... | 42 | 18 | 10 | 3 | 3 | 8 |
| உத்திரப் பிரதேசம் ... | 72 | 24 | 24 | 6 | 6 | 12 |
| மேற்கு வங்காளம் ... | 51 | 17 | 17 | 4 | 4 | 9 |

இரண்டாண்டுகட்கு ஒரு முறை மாறுகிறார்கள். இவ் வகையில் அது இராச்சிய சபையைப் பின்பற்றுகிறது.

வயதொன்றைத் தவிர வேறு எத் தனித் தகுதியும் இராச்சிய சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு ஏற்படுத்தப்பட்டிருப்பதாகச் சொல்லமுடியாது. மக்கள்சபை உறுப்பினர் ஒருவரைப்போல, தேர்ந்தெடுக்கப்படும் காலத்தில் சட்டசபை உறுப்பினர் ஒருவர் குறைந்தபட்சமாக இருபத்தைந்து வயதானவராக இருக்கவேண்டும். சட்டமன்ற உறுப்பினர் விஷயத்தில் குறைந்தபட்ச வயது முப்பதாக நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது.

கீழ்ச்சட்டசபையினுடைய அலுவலைக் கவனிப்பதற்காக சபாநாயகர், உதவி சபாநாயகர் என்ற இரு தேர்ந்தெடுக்கப்பட்ட அலுவலர்களை உடையதாக உள்ளது. சபையின் அலுவல்கள் நடப்பைப் பொறுத்தவரையிலும் இவ்விரண்டு அலுவலர்களின் தன்மையும், அதிகாரங்களும், பணிகளும் முறையே மக்கள்சபை சபாநாயகர், உதவி சபாநாயகர் ஆகியோருக்கு இருப்பவை போன்றதேயாகும். அவர்கள், சபையின் அப்போது உறுப்பினர்களாக இருப்பவர்களில் பெரும்பான்மையோரால் ஆதரிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்ட தீர்மானமொன்றினால் பதவியிலிருந்து விலக்கப்படலாம். மேற்சட்டசபை, அதனால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரொருவரையும், உதவித் தலைவரொருவரையுமுடையதாக இருக்கிறது. அவர்களுடைய அதிகாரங்களும் அலுவல்களும், சட்டசபையில் அவர்களுடைய சரிநேர்ப்படிவமாக இருப்பவர்களுக்குள்ளவை போன்றதாகும். அவர்களும், சட்டமன்றத்தில் அப்போதுஅங்கம்வகிக்கும் உறுப்பினர்களில் பெரும்பான்மையோரால் நிறைவேற்றப்படும் தீர்மான அடிப்படையில் பதவி நீக்கம் செய்யப்படலாம். இராச்சிய சட்டசபையின் ஒவ்வொரு மன்றத்திற்கும் வேலைக்கு ஆள் எடுத்தல், பணிவிதிகள் ஆகியவற்றில் சுதந்திரமாகவுள்ள உறுப்பினர்களைக் கொண்ட அரசாங்கத் தலைமை அலுவலகப் பணியாளர்கள் (secretarial staff) அடங்கிய அலுவலகமொன்றை ஏற்படுத்த அரசியலமைப்பு வகைசெய்கிறது.

### அலுவல் நடப்பு

பாராளுமன்றத்தின் இரு சபைகளினின்றும் மாறுபடும் தனி முறை எதையும் இவ்வம்சத்தைப் பொறுத்தவரையிலும் குறிப்பாகச் சொல்வதற்கில்லை. அரசியலமைப்பின் இப் பகுதியிலுள்ள விதிகளில் பெரும்பாலானவை, பாராளுமன்றத்தின் இரு சபை

கலைப்பற்றிய ஷரத்துகளின் மறுபதிப்புபோல, ஏறத்தாழ அதே மாதிரியான சொற்களைக் கொண்டவையாக இருக்கின்றன. அரசியலமைப்புச் சபையில் அம்பேத்கர் இதை ஏற்றுக் கொண்டதோடல்லாமல் அரசியலமைப்பின் அப் பகுதியிலுள்ள பல விதிகளுக்கு மிகக் குறைவான மாற்றங்கள் ஏற்பட்டிருப் பதற்கான பல காரணங்களுள் இதுவும் ஒன்றாகும் என்று குறிப் பிட்டார். முன்னோர் அத்தியாயத்தில் பாராளுமன்ற நடை முறைபற்றிய விளக்கம் எடுத்தெழுதப்பட்டிருப்பதனால், மீண்டும் இராச்சிய சட்டசபைகளின் நடைமுறை விவரங்களை இங்கு ஆராயவேண்டியது அவசியமென்று தோன்றவில்லை. அதன் இரத்தினச் சுருக்கம் கீழே தரப்பட்டிருக்கிறது.

இராச்சிய சட்டசபை குறைந்தபட்சம் ஆண்டிற்கு இருமுறை யாவது கூடவேண்டும், ஏதேனும் இரு கூட்டங்களுக்கிடையே யுள்ள இடைக்காலம் ஆறுமாதத்திற்கும் அதிகமாக இருக்கக் கூடாது. வழக்கமாக, புதுத்தொடர் (session)ஒன்று இராச்சிய அரசாங்கத்தின் கொள்கையைப் பரவலாகச் சொல்லும் கவர்னர் திறப்புரையோடு ஆரம்பமாகிறது. அவ் உரைமீது பிறகு விவாதம் நடைபெற்று கவர்னருக்கு நன்றிசெலுத்தும் தீர்மான வாயிலாக இறுதியில் அது நிறைவேற்றப்படுகிறது. இவ் விவா தத்தின்போதுதான் எதிர்க்கட்சிகள் அரசாங்கக் கொள்கை களையும், திட்டங்களையும் பொதுவாகத் திறனாயும் சந்தர்ப்பத் தைப் பெறுகின்றன.

பண மசோதாக்கள் அல்லாத இரு மசோதா ஒவ்வொன்றும் சட்டசபையின் ஏதேனுமொரு மன்றத்தில் தாக்கல் செய்யப் படலாம். அம் மசோதா மூன்றாவது வாசிப்பிற்குப் பிறகு நிறைவேற்றப்படுகிறது. பிறகு அது கவர்னர் இசைவிற்குச் செல்கிறது. ஆனால், அதை மறுபரிசீலனை செய்யுமாறு கவர்னர் அதை மீண்டும் திருப்பி அனுப்பலாம். மீண்டும் அது சட்டசபை யால் நிறைவேற்றப்படுகின்றபோது கவர்னர் இசைவுதர மறுக்கமுடியாது. ஆனால், அதை அவர் ஜனாதிபதியின் பரிசீல னைக்கு ஒதுக்கலாம். அப்போது ஜனாதிபதி அதைச் சட்டசபை யின் மறுபரிசீலனைக்கு வைக்குமாறு கவர்னரைப் பணிக்கலாம். மாற்றங்களோடோ அல்லது மாற்றங்களில்லாமலோ மீண்டும் அது நிறைவேற்றப்படுகிறபோது ஜனாதிபதியின் பரிசீலனைக்குச் செல்கிறது. அம் மசோதா இரண்டாம் தடவையாகச் சட்ட சபையினால் மறுபரிசீலனை செய்யப்பட்டு நிறைவேற்றப்பட்ட போதிலும் ஜனாதிபதி அதற்கு இசைவைத் தரவேண்டுமென்னும் கட்டாயம் கிடையாது.

## அசெம்பிளியும் கவுன்சிலும்

பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும், இராச்சிய சட்டசபையிலிருக்கும் இரு மன்றங்களுக்கும் (எங்கெங்கு இரு மன்றங்கள் இருக்கின்றனவோ அங்கு) இடையேயுள்ள தொடர்பில் காணப்படும் குறிப்பிடத்தக்க வேறுபாடு, இராச்சிய சபையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது முக்கியத்தில் குறைந்த பணியை இராச்சிய மேற்சட்டமன்றம் செய்வதேயாகும். முன்பே நாம் கண்டவாறு, இராஜ்யசபை, பணமசோதாக்களல்லாத இதர சட்ட சம்பந்தமான எல்லா அலுவல்களிலும் மக்கள் சபைக்குச் சமமான அதிகாரங்களைப் பெற்றிருக்கிறது. இரண்டிற்குமிடையே சமரச சாத்தியமற்ற கருத்து வேற்றுமை ஏற்படும்போது, அவ் வேற்றுமைபற்றி இரு சபைகளின் கூட்டுக் கூட்டத்தில் முடிவு செய்யப்படுகிறது. அதற்கு மாறாக இராச்சிய சட்டசபையிலோவெனில், மேற்சட்டமன்றம் திட்டவட்டமாகத் தாழ்நிலையில் செயலாற்றுமாறு அமைக்கப்பட்டிருக்கிறது. அதனுடைய பணிகள் ஆலோசனை கூறும் தன்மையிலேயே இருக்கின்றன. இராச்சிய சட்டசபையின் இரு மன்றங்களுக்கிடையே ஏற்படும் சச்சரவுகளைத் தீர்த்துவைக்க அரசியலமைப்பில் கொள்ளப்பட்டிருக்கும் ஷரத்துகள் 1911ஆம் ஆண்டுப் பாராளுமன்றச் (ஆங்கில) சட்டத்தின் ஷரத்துகள் அடிப்படையில் அமைந்திருப்பதாக அரசியல் நிர்ணய சபையில் அம்பேத்கர் குறிப்பிட்டுள்ளார்.

இதன்படி, ஒரு மசோதா அசெம்பிளியிலிருந்து கவுன்சிலுக்கு இரு முறைதான் அனுப்பப்படும். அசெம்பிளியிலிருந்து முதல் தடவையாக ஒரு மசோதா கவுன்சிலுக்குச் செல்லும்போது கவுன்சில் பின்சொல்லப்படுகின்ற நான்கு முறைகளில் ஏதேனும் ஒன்றைப் பின்பற்றலாம் : (1) மசோதாவை அது நிராகரிக்கலாம்; (2) மசோதாவை அது திருத்திஅமைக்கலாம்; (3) அதன் பேரில் எவ்வித நடவடிக்கையையும் அது எடுக்காதிருக்கலாம்; (கவுன்சிலால் பெற்றுக்கொள்ளப்பட்டதிலிருந்து மூன்று மாத காலம் முடிந்திருந்தால், மசோதாவைப்பற்றி என்ன நடவடிக்கையை அது எடுத்துக்கொண்டிருக்கிறதென்பதை அசெம்பிளிக்குத் தெரிவிக்காமலிருந்தால், அம் மசோதா கவுன்சிலால் நிராகரிக்கப்பட்டுவிட்டது என்று கொள்ளப்படவேண்டும்.) (4) அசெம்பிளியினால் அனுப்பப்பட்டவாறே மசோதாவை அது நிறைவேற்றலாம். முதல் மூன்று முறைகளில் ஏதேனுமொரு முறை பின்பற்றப்பட்டால் மசோதாவை இரண்டாவது பரிசிலனைக்கு அசெம்பிளி எடுத்துக்கொள்கிறது. அது கவுன்சிலால் செய்யப்பட்ட மாற்றங்களை ஏற்றுக்கொண்டோ அல்லது

நிராகரித்தோ மசோதாவை நிறைவேற்றலாம். மீண்டும் மசோதா இரண்டாம் தடவையாக கவுன்சிலுக்குச் செல்லும். இத் தடவையும் கவுன்சில் முன்னர் சொல்லப்பட்ட முறைகளுள் ஏதேனுமொரு முறையைப் பின்பற்றலாம். என்றாலும், முதல் தடவை அனுப்பப்பட்டபோது மூன்று மாதத்திற்கு மசோதா நிறைவேறுமல் தடைசெய்யக்கூடியவாறல்லாமல், ஒரு மாதம் மட்டுமே அது நிறைவேறுமல் சபை காலந்தாழ்த்தலாம். மறு முறையும் அதையேற்க கவுன்சில் மறுக்கின்றபோது, அசெம்பிளி மறுபடியும் முன்போல அதே நடைமுறையைப் பின்பற்றுகிறது. இவ்வாறு, இரண்டே தடவைகள்தாம் மசோதாக்கள் அசெம்பிளியிலிருந்து கவுன்சிலுக்குச் செல்கின்றன. கவுன்சில் மசோதாக்களைப் பொறுத்தவரையிலும் தற்காலிக நிறுத்தத் தடுப்பாணை அதிகாரத்தைத்தான் பெற்றிருக்கிறது. இம் மறுப்பாணை முதல் தடவையில் மூன்று மாதத்திற்கும், இரண்டாம்முறை ஒரு மாதத்திற்கும் மட்டுமே ஆகும். இந்த ஷரத்துகள் அசெம்பிளி கவுன்சிலின்மேல் பெற்றிருக்கும் திட்டமான மேலதிகாரத்தைத் தெளிவாக நிலைநாட்டுகின்றன. பண மசோதாக்களைப் பொறுத்தமட்டில் இராச்சிய அசெம்பிளியின் அதிகாரங்கள், நாம் முன்பே விளக்கிய மக்கள் சபை அதிகாரங்களைப் போன்றவையேயாகும். நிதி விஷயங்களுக்குப் பாராளுமன்றத்தில் பின்பற்றப்படுவது போன்ற மாதிரியிலேயே தனி நடைமுறை ஒன்று இருக்கிறது.

## சிறப்புரிமைகள்

இராச்சிய சட்டசபைக்கும், அதனுடைய குழுக்களுக்கும் அவைகளினுடைய உறுப்பினர்களுக்கும் தரப்படுகின்ற அதிகாரங்களும், சிறப்புரிமைகளும், சட்டப் பாதுகாப்புகளும், பாராளுமன்றத்திற்கும் அதனுடைய குழுக்களுக்கும் அதனுடைய உறுப்பினர்களுக்கும் தரப்படுபவை போன்றவையாகும். உறுப்பினர்கள் சட்டசபையினுல் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றவாறு ஊதியங்களும் படிகளும் பெற உரிமையுடையவர்களாக இருக்கின்றனர். தற்போது, இவைகளைப் பொறுத்தவரையிலும் பல இராச்சியங்களிடையிலும் ஒரே மாதிரியான முறை காணப்படவில்லை. இருப்பினும், அவைகளெல்லாம் தம்முடைய சட்டமன்ற உறுப்பினர்களுக்குத் தவருமல் மாதச்சம்பளங்களையும் சில குறிப்பிட்ட படிகளையும் தருகின்றன.

சட்டசபைக்கும், அதனுடைய உறுப்பினர்களுக்குமான சிறப்புரிமைகளும் சட்டப்பாதுகாப்புகளும்பற்றிய பிரச்சினை, மூன்று வழக்குகளில் சிறப்பிடத்தைப் பெற்றன. இவ் வழக்கு

களில், உயர்நீதிமன்றங்களையும், உச்சநீதிமன்றத்தையும் இராச்சிய சட்டசபைகளின் வேலைமுறையில் தலையிடுவதற்குத் தூண்டும் முயற்சி செய்யப்பட்டது. இவைகளில் ஒரிசா உயர்நீதிமன்றத்தின் முன்பாக வந்த மிஸ்ரா × நந்தகிஷோர் வழக்கும் ஒன்று இவ்வழக்கில், விண்ணப்பதாரர், ஒரிசா சட்ட சபையில் அவர் எழுப்பிய சில குறிப்பிட்ட வினாக்களை அனுமதிக்க மறுத்த சபாநாயகரின் செயல் சரியானதன்று என்று வாதித்தார்.

இவ் விஷயம் சட்டசபைமட்டுமே ஒழுங்குபடுத்துவதற்குள்ள பரிபூரணமான உரிமைகட்குட்பட்டதாகும் என்பதால் உயர் நீதிமன்றம் தலையிட மறுத்துவிட்டது. சிங்கிற்கும் கோவிந்திற்குமான இரண்டாம் வழக்கில் உத்தரப்பிரதேச சட்டசபை உறுப்பினர் என்ற தன்மையில் மனுதாரருக்கு எதிராக எடுக்கப்பட்ட சில ஒழுங்குமுறை நடவடிக்கைகள் சட்டப்படி செல்லத்தக்கனவா அல்லவா என்பதைத் தீர்மானிக்கும்படி அலகாபாத் உயர்நீதிமன்றம் கேட்டுக்கொள்ளப்பட்டது. இங்கும், உயர் நீதிமன்றம் தலையிட மறுத்துவிட்டது. நீதிமன்றத்தின் சார்பாகப் பேசும்போது நீதிபதி சாப்ரு கூறியதாவது: 'இந் நீதிமன்றம் எக் கருத்தடிப்படையிலும் ஓர் அப்பீல் நீதிமன்றமாகாதென்பது வெளிப்படை. சட்டசபையின் முடிவைத் திருத்தவோ அல்லது உயர் சிறப்புடைய உத்தியோகத்தைப் பெற்றிருப்பவர் என்ற முறையில் சபையின் சிறப்பையும் பெருமையையும் காக்கும் தனிப் பொறுப்புடையவராக சபாநாயகர் இருப்பதால் அவருடைய தீர்ப்புகளுக்கெதிராகச் செயலாற்றவோ முடியாது என்பது தெளிவாகும்.' 194ஆம் விதி அடிப்படையில் சட்டசபைக்கு (1) அதனுடைய நடைமுறைகளின் சட்டபூர்வமான தன்மையை அதுவே முடிவுசெய்யவும், (2) அதனுடைய உறுப்பினர்களை அவர்களுடைய நடத்தைக்காகத் தண்டிக்கவும், (3) தன்னுடைய நடவடிக்கைகளைச் சரிசெய்துகொள்ளவும் உரிமையுடையதாக இருக்கிறது என்றும் அவர் குறிப்பிட்டார்.

இவ் விஷயம் முதன்முதலாக சர்ச்லைட் (Searchlight) வழக்கில் உச்சநீதிமன்றத்திடம் வந்தபோது அந் நீதிமன்றம் சட்டசபைக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தது. சர்ச்லைட் என்னும் ஓர் ஆங்கில தினத்தாள் பீகார் இராச்சிய சட்டசபையில் அந்த இராச்சிய முதலமைச்சருடையவும், ஒரு முன்னாள் அமைச்சருடையவும் நடத்தைபற்றிய சில நிகழ்ச்சிகளை வெளியிட்டதால் எழுந்த வழக்காகும் அது. அச் செய்தித்தாள் அசெம்பிளியின் உறுப்பினரொருவர் முதன்மந்திரியின்மீதும், அமைச்சராக இருந்த அவருடைய முன்னாள் தோழர்மீதும், அமைச்சர்களைத்

தேர்ந்தெடுப்பதில் அவர்களுடைய நடவடிக்கைகள், ஊழலுக்கு அரசாங்கம் ஊக்கமூட்டிய வெளிப்படையான சில நிகழ்ச்சிகள் பற்றிக் காரசாரமாகத் தாக்கியதாகச் செய்தி வெளியிட்டது. அதன்பிறகு பீகார் சட்டமன்றச் செயலாளர் சர்ச்லைட் ஆசிரியருக்கு, உண்மையில் நடந்த நடைமுறைகட்கு மாறானதும் நம்பத்தகாததுமான செய்தியை வெளியிட்டதாகவும், அது சபையினுடைய சிறப்புரிமைக்கு இழிவேற்படுத்துவதாக இருப்பதாகவும் குற்றஞ்சாட்டிச் சட்டப்படியான முன்னறிவிப்பு ஒன்றை அனுப்பினர். அவ்வறிக்கை, அதன் ஆசிரியரை முதலில் பார்த்தவுடன் குற்றமிழைக்கப்பட்டிருப்பதாகச் (prima facie) சிறப்பு உரிமைக்குழு (Privileges Committee) அவருக்கு விரோதமாகக் கண்டுபிடித்திருப்பதால் அதன்முன் தோன்றவேண்டுமென்பதும், அவருக்கெதிராக ஏன் நடவடிக்கை எடுத்துக்கொள்ளக்கூடாதென்பதற்குக் காரணம் கூறுமாறும் உத்தரவிட்டது. அவ் ஆசிரியர் 32ஆம் விதியின்கீழ் அவ்வறிக்கை முறைப்படி செல்லத்தக்கதாகுமா என்பதற்கு உச்ச நீதிமன்றத்தில் ஒரு மனுவைத் தாக்கல் செய்தார்.

நீதிமன்றம் இரு வினாக்களைப்பற்றித் தீர்வுகாணத் தான் கேட்டுக்கொள்ளப்பட்டிருப்பதாகக் கூறியது. (1) சட்டமன்றம் (House of the Legislature) வெளிப்படையாகக்காணப்பட்டதும் கேட்கப்பட்டதுமான நடவடிக்கைகளைப் பிரசுரிக்காமல் தடுக்க முடியுமா? (2) 194 (3)ஆம் விதியின் கீழ்வரும் சட்டமன்றத்தின் சிறப்புரிமைகள் 19(1) (அ) விதியின் கீழ்வரும் குடிமக்களின் ஆதார உரிமைகளைக் கட்டுப்படுத்த வல்லவையா என்பவையே அவை. நான்கிற்கு ஒன்று என்ற பெரும்பான்மை அடிப்படையில் இவ்விரு வினாக்களையும் நீதிமன்றம் சாதகமாக ஏற்றது. பெரும்பான்மையோரின் சார்பாகப் பேசிய தலைமை நீதிபதி எஸ். ஆர். தாஸ், சட்டசபையால் சட்டமொன்று இயற்றப்படாமல் இருக்கின்றவரை, இந்திய அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்த காலத்தில் பொதுமக்கள் சபை (House of Commons) என்னென்ன சிறப்புரிமைகளையும், அதிகாரங்களையும், சட்டப் பாதுகாப்புகளையும்அனுபவித்துவந்ததோ அவையெல்லாவற்றையும் சட்டமன்றம் பெறவேண்டுமென்றும், குடிமகனொருவர் உண்மையான முறையில் நடைமுறைகளைப் பிரசுரிக்க சட்டமன்றம் அவருக்கு அனுமதியளிக்க மறுக்குமாஞல், அனுமதி அளிக்க அதை வற்புறுத்த முடியாதென்றும் குறிப்பிட்டார். 19(1) (அ) விதியின்கீழ் குடிமகனொருவருக்கு உறுதியளிக்கப்பட்டுள்ள ஆதார உரிமையின் ஓர் அம்சமாகிய பேச்சுரிமை சட்டசபையின் சிறப்புரிமைகளுக்கு மாருக இருக்கமுடியாது.

அவைகள் (சிறப்புரிமைகள்) பாராளுமன்றத்தால்இயற்றப்பட்ட சாதாரணச் சட்டங்களால் அல்லாமல் அரசியலமைப்புச் சட்டங்களால் வழங்கப்பட்டிருக்கின்றன என்பதையும், ஆதார உரிமைகள்பற்றிய அத்தியாயம் எந்த அளவிற்கு முக்கியமானதோ, அந்த அளவிற்கு அவைகளும் முக்கியமானவை என்பதையும் கொள்ளவேண்டுமே யல்லாது உதாசீனப்படுத்தக்கூடாது.

நீதிபதி சுப்பாராவ், தம்முடைய மாறுபட்ட தீர்ப்பில், பெரும்பான்மையோர் தீர்ப்பில் பின்பற்றப்பட்ட விளக்கவாதம் மிக முக்கியமானதும் உயர்ந்ததுமான ஆதார உரிமைகளுள் ஒன்றான பேச்சுரிமையின் பொருளையும் பரந்த தன்மையையும் செய்தி பிரசுரிக்கும் துறையைப் பொறுத்தவரையிலும் அனுவசியமாகக் கட்டுப்படுத்தவும் சுருக்கவும் செய்யும் என்று குறிப்பிட்டார். அறிவுசால் அந் நீதிபதி; '19(1) (அ)ஆம் விதிக்குப் பதிலாக ஏன் 194ஆம் விதி ஏற்கப்பட்டது? ஏன் அது மாறியிருக்கக் கூடாது?' என்று வினவினர். அவர் கருத்துப்படி, சட்டத்துறை சிறப்புரிமை ஒன்றுக்கும், ஆதார உரிமை ஒன்றிற்கும் இடையே சச்சரவு ஒன்று இருக்குமாயின், முன்னது பின்னதற்கு, ஆதார உரிமையை நிலைநாட்டவேண்டிய தேவைக்குத் தக விட்டுக் கொடுக்கவேண்டும். சட்டமன்றம் நடைமுறைகளைத் தகாதமுறையில் (malafide) பிரசுரிக்கப்பட்டிருக்கின்ற அளவிற்குத்தான் சிறப்புடையது. 19(2)ஆம் விதிமுறைப்படி இயற்றப்பட்ட சட்டமொன்று அத்தகைய நியாயமான தடைகளை விதிப்பதற்குப் போதுமான ஆதாரம் தருகிறது. 19(2)ஆம் விதி அடிப்படையில் அனுமதிக்கப்படும் நியாயமான தடைகள் சோதனையைக் கொண்டு சட்டமன்றத்தின் சிறப்புரிமையைத் தேவைக்கதிகமாகப் பாதுகாக்கலாம். எனவே, அரசியல் அமைப்பால் ' ஐயமறத் தெளிவாக உத்தரவாதம் தரப்பட்டிருக்கும் குடிமகனின் ஆதார உரிமையைப் புறக்கணித்துச் சட்டமன்றத்தின் சிறப்புரிமைக்குப் பரிவுகாட்டும் நிலைமை அவசியமற்றதாகிறது.

# 27. இராச்சியங்களில் நீதித்துறை

## உயர்நீதிமன்றம்

ஒவ்வோர் இராச்சியமும் அதனுடைய பிரதேச அதிகார எல்லைக்குள் இயங்கும் உயர்நீதிமன்றமொன்றைக் கொண்டிருக்கிறது. உயர்நீதிமன்றம் ஒவ்வொன்றும் தன்னை அவமரியாதை செய்த குற்றத்திற்காகத் தண்டனையளிக்கும் அதிகாரமுட்பட எல்லா அதிகாரங்களையும் உடையதொரு பதிவு நீதிமன்றமாகவும் (Court of Record) இருக்கிறது. உச்ச நீதிமன்றமோ, இராச்சிய சட்டசபையோ உயர்நீதிமன்றத்திற்கிருக்கும் அதை அவமரியாதை செய்ததற்காகத் தண்டிக்கும் அதிகாரத்தைப் பறிக்க முடியாது.

1950ஆம் ஆண்டில் புதிய அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்தபோது, உச்சநீதிமன்றத்தின் தன்மை என்னவென்பதையும், இணைக்கப்பட்ட, படிப்படியான அகில இந்திய நீதித் துறையமைப்பொன்றில் உச்ச நீதிமன்றத்தின் நேர்க் கீழ்ப் பகுதிகளாக உயர் நீதிமன்றங்களையெல்லாம் அது கொண்டுவந்ததென்பதையும் நாம் முன்பே விளக்கியுள்ளோம். எனினும், சுதந்தர நீதி நிலையங்களாக உயர்நீதிமன்றங்கள் செயலாற்றுவதைப் பெருமளவிற்குப் பாதிக்கத்தக்கவாறான நேரிடையாகக் கட்டுப்படுத்தும் நிர்வாக அதிகாரமெதையும் உச்ச நீதிமன்றத்திற்கு அரசியலமைப்புத் தரவில்லை.

இந்தியாவைப்போன்ற கூட்டாட்சி அரசியலமைப்பொன்றின்கீழ் உயர்நீதிமன்றங்களின் தன்மையானது இதர கூட்டாட்சிகளின்கீழ், குறிப்பாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இராச்சியங்களில் இயங்கும் நீதிமன்றங்களினின்றும் பெருமளவிற்கு மாறுபாடுடையதாக இருக்கிறது. அங்கு இராச்சிய நீதிமன்றங்கள் இராச்சிய அரசியலமைப்புகளின் அடிப்படையில் அமைக்கப்படுகின்றன. ஆதலின் அவைகள் கூட்டாட்சி நீதித்துறையமைப்போடு எவ்வகையிலும் அவ்வரசியலமைப்புகளால் சேர்க்கப்பட

வில்லை. இராச்சிய நீதிமன்றங்களின் நீதிபதிகளை நியமிக்கும் முறையிலும், ஊழியம்பற்றிய நிலைமைகளும் அவர்களுடைய அதிகார எல்லைகளும் இராச்சியத்திற்கு இராச்சியம் வேறுபடு கின்றன. அதற்கு மாருக, இந்தியாவில் இவ்வெல்லா விஷயங் களிலும் ஒரேமாதிரியான முறை காணப்படுவதோடு, அவை களைப்பற்றிய விவரமான ஏற்பாடுகளையும் அரசியலமைப்பு ஏற்படுத்துகிறது. இராச்சிய நிர்வாகமோ அல்லது இராச்சிய சட்டசபையோ உயர்நீதிமன்றத்தைக் கட்டுப்படுத்துவதற்கோ அல்லது உயர்நீதிமன்றத்தின் அமைப்பு அல்லது நிலையத்தை மாற்றுவதற்கோ அதிகாரம் பெற்றிருக்கவில்லை. அரசியலமைப் பிற்கு மாற்றங் கொண்டுவராமல், அனுமதிக்கப்படுவதெதுவாகு லும் அது பாராளுமன்றத்திடம் தரப்பட்டிருக்கிறது. இவ் வேற்பாடுகள், உயர்நீதிமன்றங்களின் சுதந்திரத்தை உறுதிப் படுத்துவதற்கு உதவி புரிபவைகளாக இருக்கின்றன.

உச்ச நீதிமன்றத்தைப்போன்று, உயர்நீதிமன்ற நீதிபதி களின் கீழ்மட்ட (minimum) எண்ணிக்கை வரையறை செய்யப் பட்டிருக்கவில்லை. ஒவ்வோர் உயர்நீதிமன்றத்திற்கான நீதிபதி களின் எண்ணிக்கையை அவ்வப்போது ஜனாதிபதி நிர்ணயிக்கிருர். இவ்வெண்ணிக்கை நீதிமன்றத்திற்கு நீதிமன்றம் மாறுபடுகிறது. சான்ருக, அசாம் உயர்நீதிமன்றம் தற்போது மூன்றே நீதிபதிகளை யுடையதாக இருக்கின்றபோது, அலகாபாத் உயர்நீதிமன்றம் இருபத்தேழு நீதிபதிகளைக் கொண்டிருக்கிறது.

தலைமை நீதிபதி நீங்கலாக உயர்நீதிமன்ற நீதிபதி ஒவ்வொரு வரும், இந்தியத் தலைமை நீதிபதியையும், இராச்சிய கவர்னரை யும், சம்பந்தப்பட்ட உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியையும் கலந்துகொண்ட பிறகு இந்திய ஜனாதிபதியால் நியமனம் செய்யப்படுகிருர். அவர் நிரந்தர அடிப்படையில் நியமிக்கப் பட்டால், அறுபது வயது முடியும் வரை பதவி வகிக்கிருர். நிய மனம் செய்யப்படுவதற்கு, இந்தியக் குடிமையுரிமையும், உயர்நீதி மன்றத்தில் வழக்குரைஞராகக் குறைந்தபட்சம் பத்தாண்டுக்கால அனுபவம் அல்லது இந்தியப் பிரதேசத்தில் நீதித்துறைப் பணி யாளராக இருந்த அனுபவம் குறைந்தபட்சத் தகுதிகளாக நிர்ண யிக்கப்பட்டிருக்கின்றன. நியமனம் செய்வதற்குப் பத்தாண்டுக் காலத் தகுதியைக் கணக்கிடுகின்றபோது, வழக்குரைஞராகப் பணியாற்றிய அனுபவத்தை நீதித்துறை அலுவலராகச் செய லாற்றிய காலத்தோடு சேர்த்துக்கொள்ளலாம். உயர்நீதிமன்ற நீதிபதியொருவர் நிருபிக்கப்பட்ட, தவருன நடத்தைக் காகவோ, அல்லது திறமையின்மைக்காகவோ உச்ச நீதிமன்ற

நீதிபதி ஒருவர் எம் முறையில் பதவியினின்றும் நீக்கப்படலாமோ அம் முறையில் பதவியிலிருந்து விலக்கப்படலாம்.

உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியும், இதர நீதிபதிகளும் மாதச் சம்பளமாக முறையே ரூ. 4,000-ம், ரூ. 3,500-ம் பெறுகின்றனர். மேலும், அவர்கள் குறிப்பிட்ட சில படிகளையும், பதவியிலிருந்து விலகிய பிறகு ஓய்வுப் பணமும் (pension) பெற உரிமையுடையவர்கள். உயர்நீதிமன்ற நீதிபதியொருவருடைய மாதச் சம்பளமும் படிகளும் அவருடைய நியமனத்திற்குப் பிறகு அவருக்குப் பாதகமாக மாற்றப்பட முடியாது. அல்லாமலும், இத் தொகைகள் குவிக்கப்பட்ட இராச்சிய நிதியிலிருந்து அளிக்கப்படுவதால் அவை இராச்சிய சட்டசபையின் அனுமதியினின்றும் விலக்கப்பட்டிருக்கின்றன. ஓய்வுபெற்ற நீதிமன்ற நீதிபதிகள், ஓய்வுபெற்றபின் சட்டத் தொழில் புரிவதற்குச் சில தடைகளை அரசியல் அமைப்பு விதிக்கிறது. இதன்படி அவர்கள் உச்ச நீதிமன்றங்கள் நீங்கலாக இதர நீதிமன்றங்களில்தான் சட்டத் தொழில் புரியலாம். உச்ச நீதிமன்ற நீதிபதிகளைப் பற்றிய ஷரத்துகளுக்கு ஏற்பவிருக்கும் இவ்வேற்பாடுகள், உயர் நீதிமன்றங்களின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்குக் கருதப் பட்டவைகளாகும்.

எனினும், உச்சநீதிமன்றத்தினின்றும் மாறுபடும் பிரத்தியேகமான அமைப்பு, வேலைமுறைபற்றிய சில ஏற்பாடுகளுமிருக்கின்றன. இவைகளில் ஓர் உயர்நீதிமன்றத்திலிருக்கும் ஒரு நீதிபதியை பிறிதோர் நீதிமன்றத்திற்கு மாற்றுவதற்கு ஜனாதிபதிக்கு இருக்கும் அதிகாரம் மிக முக்கியமானதொன்றாகும். அத்தகைய மாற்றமொவ்வொன்றும், இந்தியத் தலைமை நீதிபதியைக் கலந்தாலோசித்தபிறகே செய்யப்படவேண்டும். இவ்வேற்பாடு, நீதித்துறை சுதந்திரமாக இருக்கவேண்டுமென்னும் அடிப்படைக் கொள்கை இசைவுடையதாக இருக்கவில்லையென்றும் தோன்றும். இருப்பினும், அது ஓரளவிற்கு நியாயமானதாக இருக்கிறது. தேசிய நன்மை அடிப்படையில் தகுதிவாய்ந்த நீதிபதியொருவருடைய பணிகள் நாட்டின் எந்தவொரு பகுதிக்கும் தேவைப்படலாம். அப்போது இவ்வேற்பாடு, நாட்டிலுள்ள உயர்நீதிமன்றங்களில் ஏதேனுமொன்றிலிருந்து அத்தகைய நீதிபதியொருவரைத் தேர்ந்தெடுப்பதற்கு, ஜனாதிபதிக்கு உதவிபுரிகிறது. இந்தச் சிறந்த முறையில் நீதிபதியைப் பொறுக்குவதற்கும், இராச்சிய அல்லது பிராந்தியத் தடைகளினின்று இப் பிரச்சினையைக் கவனிக்கவும் வழி செய்கிறது. இரண்டாவதாக, உச்சநீதிமன்றம்பற்றிய ஷரத்துகளைப் போலல்லாமல், உயர்நீதிமன்றத்திற்கு உதவி நீதிபதிகளையும்,

தற்காலிக நீதிபதிகளையும் நியமிக்க ஒரு ஷரத்துமிருக்கிறது. உதவி நீதிபதிகள், உயர்மன்றத்தின் வேலையில் தற்காலிகமாக அதிகரிக்கும் வேலைப்பளுவைச் சமாளிப்பதற்கோ, அல்லது பைசலாகாமல் குவிந்து கிடக்கும் வேலைகளைப் பைசல் செய்வதற்கோ இரண்டாண்டுகளுக்கு அதிகப்படாத காலத்திற்கு நியமிக்கப்படுகின்றனர். நீதிமன்றத்தின் நிரந்தர நீதிபதியொருவர் விடுமுறையிலோ அல்லது வேறு வேலையாகவோ செல்கின்றபோது தற்காலிக நீதிபதியொருவர் நியமிக்கப்படுகிறார்.

## அதிகார எல்லை

உச்ச நீதிமன்ற விஷயத்தில் செய்திருப்பதுபோல, உயர்நீதிமன்றங்கள் சம்பந்தமாக அரசியலமைப்பு, விரிவான விளக்கங்களையும், பலவகைப்பட்ட அதிகார எல்லைகளின் ஒழுங்கு வகைகளையும் தரவில்லை. இதற்கு முக்கிய காரணம், அரசியலமைப்பு தொகுக்கப்பட்டபோது பெரும்பாலான நீதிமன்றங்கள், தெளிவாக வரையறுக்கப்பட்ட அதிகார எல்லைகளையுடையவைகளாகச் செயலாற்றிவந்தபோது, உச்சநீதிமன்றம் புதிதாக ஏற்படுத்தப்பட்ட நிறுவனமாக இருந்ததால், அதனுடைய அதிகாரங்களையும் பணிகளையும் தெளிவாக விளக்கவேண்டியது அவசியமாயிற்று. மேலும், அரசியலமைப்புச் செயற்பட ஆரம்பித்த பிறகும் உயர் நீதிமன்றங்கள், இராச்சியத்தின் மிக உயர்ந்த நீதிமன்றங்கள் என்ற முறையில் ஆரம்பமுதல் பெற்றிருந்த அதே தன்மையைத் தொடர்ந்து நிலைநாட்ட எதிர்பார்க்கப்பட்டன. ஆகையால்தான், அரசியலமைப்பின் ஷரத்துகளுக்குட்பட்டும், தகுதியுடைய பொருத்தமான சட்டசபையினுல் எதிர்காலத்தில் இயற்றப்படும் சட்டத்திற்குட்பட்டும் உயர்நீதிமன்றங்கள் தங்களுடைய அப்போது நடைமுறையிலிருக்கும் அதிகார எல்லையைத் தங்களிடமே வைத்துக்கொள்ள வகை செய்யப்பட்டது. அல்லாமலும், 'நிலவரி அல்லது அதன் வசூல்' பற்றிய விஷயங்களில் உயர் நீதிமன்றங்கள் மூலமாகச் (original) செலுத்திவந்த அதிகார எல்லைக்கு முன்போல எதிர்காலத்தில் வரையறை ஏதும் விதிக்கப்படமாட்டாது. உயர்நீதிமன்றங்கள் தங்களுடைய வேலைகளை ஒழுங்குபடுத்துவதற்காக, விதிகளை ஏற்படுத்திக்கொள்ளப் பூரண அதிகாரங்கள் தரப்பட்டிருப்பதோடு, தங்களுடைய எல்லையின்கீழ் வருகின்ற நீதிநிர்வாகத்திற்குத் தொடர்புடையதும், தேவையானதுமான அவ்வப்போதான அதிகாரமும் தரப்பட்டிருக்கின்றன.

சாதாரண மூலஅப்பீல் அதிகார எல்லையோடுகூட மேலும் நான்கு அதிகாரங்களையும் உயர்நீதிமன்றங்களுக்கு அரசியலமைப்பு வழங்குகிறது. இவை : (1) ஆதார உரிமைகள் செயற்

படுத்தப்படுவதற்கோ அல்லது வேறு ஏதேனுமொரு காரியத்திற்காகவோ 'ரிட்'கள் (writs) அல்லது உத்தரவுகள் பிறப்பிப்பதற்கு அதிகாரம் ; (2) இராச்சியத்தில் உள்ள இதர எல்லா நீதிமன்றங்களையும் மேற்பார்வையிடுவதற்கான அதிகாரம்; (3) அரசியலமைப்பு விளக்கம் சம்பந்தப்பட்ட வழக்குகளைக் கீழ்மட்ட நீதிமன்றங்களிடமிருந்து அதற்கே மாற்றிக்கொள்வதற்கான அதிகாரம்: (4) உயர் நீதிமன்ற உயர் அலுவலர்களையும், ஊழியர்களையும் நியமிப்பதற்கான அதிகாரம்.

226ஆம் விதியின் அடிப்படையில் உயர்நீதிமன்றங்கள், தம் அதிகார எல்லைக்குட்பட்ட பிரதேசங்களில், அரசியலமைப்பில் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள ஆதார உரிமைகளின் பாதுகாவலர்களாக ஏற்படுத்தப்பட்டுள்ளன. 32ஆம் விதி அடிப்படையில் உச்ச நீதிமன்றமே இவ்வாதார உரிமைகளின் இறுதிப் பாதுகாவலர் என்பதை நாம் முன்பே கவனித்தோம். ஆனால், ஆதார உரிமைகளின் பாதுகாப்பு உச்ச நீதிமன்றத்திடம் மட்டுமே ஒப்படைக்கப்பட்டிருக்குமானால், பாதிக்கப்பட்ட குடிமக்கள் பலர், மீறப்பட்ட ஆதார உரிமையொன்றைச் செயற்படுத்த நீதிமன்றத்தை அணுக இயலாதவர்களாக இருந்திருப்பர். உயர் நீதிமன்றங்களுக்கும் இவ்வதிகாரம் தரப்பட்டதால் இவ் உரிமைகள் சாதாரணக் குடிமகனுக்கும் பயன்படுமாறு மிகவும் உண்மையானதாக ஆக்கப்பட்டுள்ளது. இவ்வதிகாரத்தைச் செலுத்துமுகத்தான், நீதிமன்றம் 32ஆம் விதியின்கீழ் உச்சநீதிமன்றம் அதிகாரம் தரப்பட்டிருப்பது போன்று அதே மாதிரியான ரிட்டுகளையும், உத்தரவுகளையும், குறிப்பிட்டவாறு நடக்க வேண்டுமென்னும் நெறிகளையும் பிறப்பிக்கமுடியும்.

உயர் நீதிமன்றங்களுக்குத் தரப்பட்டிருக்கும் இவ்வதிகாரத்தின் பரப்புபற்றி (scope) உச்சநீதிமன்றம் கூறியதாவது : '226ஆம் விதியின் கீழான அதிகார எல்லை உயர் நீதிமன்றத்தால் குடிமக்களுடைய உரிமைகளைப் பாதுகாக்கவும் உத்திரவாதமளிக்கவும் செலுத்தப்படுகிறது. அதனுடைய அதிகார எல்லைக்குட்பட்ட பிரதேசங்களில் யாராவது ஒரு நபர் சட்ட ஆதாரமற்ற செயலுக்காகக் குற்றம் புரிந்ததாக அறிகின்றபோதோ அல்லது குடிமக்களின் ஆதார உரிமைகளை மீறி நடந்ததாகக் காணும் போதோ, அது, தன்னுடைய நீதியதிகாரத்தை அவருடைய உரிமைகளை நிலைநாட்டுவதற்காகவும்,குறைகளை அகற்றுவதற்காகவும் செலுத்துகிறது. இவ்வதிகாரத்தைச் செலுத்துவதற்கு அதற்கு விதிக்கப்பட்டிருக்கும் நிபந்தனைகளாவன : (1) அந்த அதிகாரம், அது எந்தெந்தப் பகுதிகளில் நீதியதிகாரம் செலுத்த வல்லதோ அந்தப் பகுதிகள் முழுவதும் செலுத்தப்படவேண்டும்.

அதாவது, அதனுடைய அதிகார எல்லைக்குட்படாத இதர பகுதிகளுக்கு அதனால் பிறப்பிக்கப்படும் ரிட்டுகள் செல்லாது. (2) எந்த நபருக்கு அல்லது அதிகாரமுடையவர்களுக்கு அத்தகைய ரிட்டுகளைப் பிறப்பிக்க உயர்நீதிமன்றம் அதிகாரம் பெற்றிருக்கிறதோ அந் நபர் அல்லது ஆட்சிபீடத்தினர் அப் பிரதேசங்களுக்குள் இருக்கவேண்டும். இது அவர்கள் குடியிருப்பினாலோ, அல்லது அப் பிரதேசங்களுக்குள் இருப்பதாலோ அதனுடைய அதிகார எல்லைக்குட்படுவதால் கட்டுப்படக் கூடியவர்களாக இருக்கவேண்டும்.

227ஆம் விதியின்கீழ் ஒவ்வோர் உயர்நீதிமன்றமும், அதனுடைய அதிகார எல்லைக்குள் செயலாற்றும் இராணுவ சம்பந்தப்பட்ட டிரிப்யூனல்கள் நீங்கலாக இதர எல்லா நீதிமன்றங்களையும் டிரிப்யூனல்களையும் மேற்பார்வையிடும் அதிகாரம் பெற்றிருக்கிறது. இவ்வதிகாரத்தைச் செலுத்துகின்றபோது உயர்நீதிமன்றம், (1) அத்தகைய நீதிமன்றங்களிடமிருந்து அன்றாட நடப்புபற்றிய அறிக்கைகள் (returns) அனுப்புமாறு கோருவதற்கும், (2) அத்தகைய நீதிமன்றங்களின் அலுவல் நடைமுறைகளையும், அவை பின்பற்றப்படுமாற்றையும் ஒழுங்குபடுத்துவதற்குப் பொதுவிதிகளை ஏற்படுத்திப் பிறப்பிக்கவும், அமைப்பு முறைகளை விதிக்கவும், (3) அத்தகைய நீதிமன்றங்களின் ஏதேனுமொன்றின் அலுவலர்கள், புத்தகங்கள், பேரேடுகள் (entries), கணக்குகள் ஆகியவற்றை எவ்வாறு வைத்திருக்கவேண்டுமென்று விதிக்கவும் அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. இவ்வதிகாரத்தின் எல்லையை விளக்கி உச்ச நீதிமன்றம் கூறியதாவது: ஓர் இராச்சியத்தில் செயலாற்றும் தேர்தல் நீதிமன்றங்கள் (Election Tribunals) உள்பட எல்லாவகையான நீதிமன்றங்களும் உயர்நீதிமன்றங்களின் மேற்பார்வைக்கு உட்பட்டவைகளாகும். அம் 'மேற்பார்வை, நீதி, நிர்வாகம் ஆகிய இரண்டின் அடிப்படையிலுமாகும்'. 226ஆம் விதியடிப்படையில் உயர் நீதிமன்றம் டிரிப்யூனல்களின் தீர்ப்புகளைச் செல்லத்தக்கனவல்ல என்றுதான் சொல்ல முடியும். ஆனால், 227ஆம் விதியடிப்படையில் அதையும் செய்யக்கூடியதோடு, அவ் விஷயத்தில் சில நெறிகளையும் (directions) பிறப்பிக்க இயலும்.

228ஆம் விதி, கீழ்நீதிமன்றங்களிலிருந்து அரசியற் சட்ட வழக்குகளை மாற்றுவதற்கு உயர்நீதிமன்றங்களுக்கு அதிகாரம் தருகிறது. இதன்படி உயர்நீதிமன்றம், அதற்குக் கீழ்ப்பட்ட நீதிமன்றமொன்றில் விசாரணையிலிருக்கும் வழக்கொன்று அரசியல் அமைப்பு விளக்கம்பற்றிய முக்கியமான சட்டப்பிரச்சினை

யைத் தழுவியதாக இருப்பதால்,அவ் வழக்கு பைசல் செய்யப் படுவதற்கு, அப் பிரச்சினை தீர்மானம் செய்யப்படவேண்டியது அவசியமென அதற்குத் தெரிகின்றபோது, அவ் வழக்கை அது அந் நீதிமன்றத்தினின்றும் திரும்பப்பெறவும், அவ் வழக்கைத் தானே பைசல் செய்யவும் அல்லது அரசியற்சட்டப் பிரச்சினையை மட்டும் தீர்மானித்து, பிறகு அவ் வழக்கு எந் நீதிமன்றத்தினிடமிருந்து திரும்பப் பெறப்பட்டதோ, அந் நீதிமன்றத்திற்கே அதை மீண்டும் அனுப்பவும் செய்யலாம். இவ்வதிகாரத்தை உயர்நீதிமன்றத்திற்கு அரசியல் அமைப்பை உருவாக்கியோர் தந்ததால், கீழ்வரிசை நீதிமன்றங்கள் மட்டத்தில் ஏற்படக்கூடிய பல அரசியல் அமைப்பு விளக்கங்களினின்றும் பாதுகாப்புச் செய்துள்ளனர். இப்போது அது இருக்கின்றவாறு, அரசியல் அமைப்பை விளக்குவதற்கு உச்சநீதிமன்றத்தோடுகூட ஒவ்வோர் உயர்நீதிமன்றமும் செய்யலாம் என்பதால் குறைந்தது பதினைந்து நீதிமன்றங்களாவது இவ் விளக்கத்தை மேற்கொள்கின்றன என்று பொருளாகிறது. அத்தகைய நிலைமைகளில் விளக்கத்தில் ஏற்படும் முரண்பாடுகளை அசாதாரணமானவையென்றோ, அல்லது இயற்கைக்கு மாறுபட்டவையென்றோ சொல்வதற்கில்லை. அத்தகைய முரண்பாடுகள் ஏற்படும் ஒவ்வொரு சமயத்திலும் அவைகளைப்பற்றி முடிவு செய்வதற்கு உச்ச நீதிமன்றத்திற்கு வாய்ப்பு இல்லாததோடு. அத்தகைய உடன்பாடு ஏற்படும் ஒவ்வொரு சமயத்திலும் தடையில்லாமல் அதை உச்ச நீதிமன்றம் தானாகவே மறுபரிசீலனை செய்வதற்கு ஏற்பாடெதுவுமில்லை. ஒவ்வொரு கீழ்மட்ட நீதிமன்றத்திற்கும் அரசியலமைப்பின விளக்கஞ் செய்வதற்கான அதிகாரம் தரப்பட்டிருக்குமானால், அது மிக மோசமான குழப்ப நிலைமையைத் தோற்றுவித்து விட்டிருக்கக்கூடும். அந்தச் சாத்தியக்கூறுகள் 228ஆம் விதியின் கண் காணப்படும் ஏற்பாடுகளினால் அடியோடு நீக்கப்பட்டிருக்கிறது.

உயர்நீதிமன்றங்கள் சுதந்திரமாகச் செயலாற்றவேண்டுமானால் அவைகள் தேவையான அளவிற்கு ஊழியர்களைப் பெற்றிருக்க வேண்டியதோடல்லாமல் அவ் ஊழியர்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தையும் பெற்றிருக்க வேண்டும். இவைகள் 229ஆம் விதியின்கீழ் உறுதிசெய்யப்பட்டிருக்கின்றன. இதன்படி உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி நீதிமன்ற உயர் அலுவல்களையும் ஊழியர்களையும் நியமிக்க அதிகாரம் தரப்பட்டிருக்கிறார். இவ் விஷயத்தில் இராச்சியப் பணியாளர் தேர்வுக் கழகத்தை (Public Service Commission) நீதிமன்றம் கலந்தாலோசிக்க வேண்டுமென்று கவர்னர் கூறலாம். தலைமை நீதிபதியும் பணியாட்

களின் ஊதிய நிலைமைகளை, இவ் விஷயத்தில் இராச்சிய சட்ட சபையால் சட்டமேதும் இயற்றப்பட்டிருக்குமானால், அதற்கு உட்பட்டு ஒழுங்குபடுத்துவதற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறார். சம்பளங்கள், படிகள், விடுமுறை அல்லது ஓய்வுப் பணம்பற்றிய விதிகளுக்கு கவர்னரின் சம்மதம் தேவை. உயர்நீதிமன்றப் பணியாட்கள் குழுவிற்கு ஒருவரை நியமிக்கத் தலைமை நீதிபதிக்குத் தரப்பட்டிருக்கும் அதிகாரம் நீதிமன்ற ஊழியத்தினின்றும் அத்தகைய உறுப்பினரொருவரை நீக்குவதற்கு அவருக்கிருக்கும் அதிகாரமும் உட்பட்டதாகும். உயர்நீதிமன்றம் சம்பந்தப் பட்ட நிர்வாகச் செலவெல்லாவற்றையும் இராச்சிய குவிக்கப் பட்ட நிதியிலிருந்து செலவுசெய்துகொள்ள அரசியலமைப்பு வகைசெய்கிறது.

உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பை அரசியலமைப்பு விதிகளுக்கு உட்பட்டுத் திருத்துவதற்கு இராச்சிய சட்டசபைக்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறதென்பதை நாம் முன்பே கவனித் தோம். உதாரணமாக, அரசியல் நிர்ணயசபையில் அம்பேத்கர் குறிப்பிட்டவாறு இராச்சிய சட்டசபை சிவில் விஷயங்களில் பண வரையறை (pecuniary limit) ஒன்றை ஏற்படுத்தி, நீதிமன்றத்தின் அதிகார வரம்பைக் கூட்டவோ அல்லது அவ் வரம்பின் எல்லையைக் கட்டுப்படுத்தவோ இதன்படி இயலும் ஆனால், பாராளுமன்றம் மட்டுமே, குறிப்பிட்ட உயர் நீதிமன்ற மொன்றின் பிரதேச அதிகார வரம்பை, யூனியன் பிரதேச மொன்றின் எல்லையை விஸ்தரிப்பதாலோ அல்லது விலக்கு வதாலோ, அதிகப்படுத்துவதற்கோ அல்லது தடைக்குள்ளாக்கு வதற்கோ அதிகாரம் பெற்றிருக்கிறது. யூனியன் பிரதேச மொன்று சட்டசபையை உடையதாக இருக்குமானால், அச் சட்ட சபை நீதிமன்றத்தின் அதிகார வரம்பில் எவ்விதத்திலும் தலை யிட அதிகாரம் தரப்பட்டிருக்கவில்லை. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட இராச்சியங்களுக்கோ யூனியன் பிரதேச மொன்றிற்கோ பொது உயர்நீதிமன்றங்களை ஏற்படுத்தப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. இது காறும் அத்தகைய பொது நீதிமன்றம் ஏற்படுத்தவில்லை யாயினும், அவ்வேற்பாடு எதிர்காலத்தில் பொருத்தமான சூழ் நிலைகள் தாமாகவே ஏற்படுகின்றபோது உயர்நீதிமன்றங்கள் மட்டத்தில் நீதிமுறையை மேலும் சிறப்பாக அமைப்பதற்கான சிறந்த சாத்தியக்கூறுகளை உடையதாக இருக்கிறது.

பின்வரும் அட்டவணை இந்தியாவிலுள்ள பல உயர்நீதி மன்றங்களையும், அவைகள் ஏற்படுத்தப்பெற்றிருக்கும் இடம்

களையும், ஒவ்வொரு நீதிமன்றத்திலுமிருக்கும் நீதிபதிகளின் எண்ணிக்கையையும் (1961) காட்டுகிறது.

உயர்நீதிமன்றங்கள்

| இராச்சியத்தின் பெயர் | நீதிமன்றம் இருக்குமிடம் | நீதிபதிகளின் தொகை |
|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | ஹைதராபாத் | 15 |
| அசாம் | ஷில்லாங்கு | 3 |
| பீஹார் | பாட்னு | 13 |
| குஜராத் | அஹமதாபாத்து | 7 |
| ஜம்மு, காஷ்மீரம் | ஸ்ரீ நகர் | 3 |
| கேரளம் | எர்ணுகுளம் | 16 |
| மத்தியப் பிரதேசம் | போபால் | 15 |
| தமிழ்நாடு | சென்னை | 12 |
| மஹாராஷ்டிரம் | பம்பாய் | 17 |
| மைசூர் | பெங்களூர் | 10 |
| ஒரிசா | புவனேசுவரம் | 5 |
| பஞ்சாப் | சாண்டிகர் | 15 |
| இராஜஸ்தான் | ஜெயபுரி | 9 |
| உத்திரப் பிரதேசம் | அலஹாபாத்து | 27 |
| மேற்கு வங்கம் | கல்கத்தா | 23 |

## கீழ்மட்ட நீதிமன்றங்கள்
## (Subordinate Courts)

அரசியலமைப்புப் பொதுவாக ஆதாரச் சட்டமாக இருக்கின்ற காரணத்தால் கீழ்மட்ட நீதிமன்றங்களின் அமைப்பு, வேலைபற்றிய ஷரத்துகளின் விரிவான புள்ளிவிவரங்களைச் சாதாரணமாக அது தருவதில்லை. அத்தகைய விஷயங்கள் இராச்சிய சட்டசபையினுல் கவனிக்குமாறு விடப்பட்டு விடுகின்றன. கீழ்மட்ட நீதித்துறைபற்றிய விரிவான புள்ளி விவரங்களை இந்திய அரசியலமைப்புக் கொண்டிருப்பதால், அது இவ் வழக்கிற்கு மாறுபட்டதாக இருக்கிறது. அரசியலமைப்பு எழுதப்பட்டபோது நிலவிய சில குறிப்பிட்ட விசித்திரமான நிலைமைகள் இதற்கு முக்கிய காரணமாகும்.

அயல் அரசாங்கமொன்றின் வசதிக்குப் பொருத்தமாகவும் துணையாகவுமிருப்பதற்காக ஆங்கிலேயரது ஆட்சியில் பொதுப் பரிபாலனம், நீதித்துறை சம்பந்தப்பட்ட அலுவல்கள் கீழ்மட்டங்களில் இருந்து நிர்வாகப் பொறுப்பலுவலரிடம் சேர்த்தளிக்கப்

பட்டிருந்தன. ஆங்கிலேயரது ஆட்சியில் ஒவ்வொரு மாநிலமும் பல மாவட்டங்களாகப் (districts) பிரிக்கப்பட்டிருந்தது. இம் மாவட்டங்கள் நிர்வாகத்தின் கேந்திரப் பகுதிகளாக இருந்தன. இம் மாவட்டங்கள் ஒவ்வொன்றும் கலெக்டர்-மாஜிஸ்டிரேட்டு என்றழைக்கப்பட்ட அலுவலர் ஒருவர் தலைமையில் இயங்கி வந்தது. இப் பதவியில் நிர்வாக அலுவல்களும் நீதி சம்பந்தமான அலுவல்களும் இணைக்கப்பட்டிருந்தன. அயல்நாட்டு இம்பீரியல் அரசாங்கம் ஒன்றின் கருவியாக இருந்த இவ்வலுவலர், வட்டாரச் சர்வாதிகாரி போன்றே நடந்துகொண்டார். சர்வாதிகாரியாக அவர் நடந்துகொள்வதற்குக் காரணம், நிர்வாக, நீதி அதிகாரங்கள் அவர் பதவியில் இணைக்கப்பட்டிருந்ததேயாகும். இம் முறையால் விளைந்த கொடுமைகள் மிக மோசமானவைகளாக இருந்தன. அரசியல் விடுதலைக்காக நடைபெற்ற தேசீய இயக்கத்தின்போது அம் முறை கொடுங்கோலாட்சியின் சாதனமாகப் பயன்பட்டது. இம் முறைக்கு எல்லா இடத்திலும் பெருங்கண்டனமிருந்ததால், நீதித்துறை நிர்வாகத்துறையினின்றும் பிரிக்கப்படவேண்டுமென்னும் கோரிக்கை சக்திமிக்கதாகவுமிருந்தது. எனவேதான், அரசியலமைப்பை இயற்றியவர்கள் இப் பிரச்சினையை விரிவாக எழுதியிருக்கின்றனர்கள். நாம் முன்பே பார்த்தவாறு நெறிசெய் நியதிகளுள் (directive principles) ஒன்று, நிர்வாகத்தினின்றும் நீதித்துறையைத் தனியாக்குவதாகும். அவர்கள் இந்த ஏற்பாட்டோடுமட்டும் திருப்தியடையவில்லை. கீழ்மட்ட நிலைகளிலும் நீதித்துறை நிர்வாகத்துறையினின்றும் முற்றிலும் தனித்திருக்கவேண்டுமென்று அவர்கள் விரும்பினர்கள். நாட்டிலுள்ள மிக உயர்ந்த நீதிமன்றத்திலிருந்து மிக அடிமட்டத்திலிருக்கும் நீதிமன்றம்வரை ஒவ்வொரு மட்டமும் (every layer) ஒவ்வொரு மட்டத்திலிருக்கும் ஒவ்வொரு பகுதியும் நீதித்துறைச் சுதந்திரமிருக்கிறதென்னும் உணர்வெண்ணத்தோடு செயலாற்றவல்லதொரு நீதித்துறை அமைப்பை ஏற்படுத்தவும் விழைந்தனர். உயர்நீதி மன்றம் கீழ்மட்டத்திலுள்ள நீதித்துறைமேல் அதிகாரம் செலுத்தும் தனிச் சிறப்பு இவ்விடம் பொருத்தம் நோக்கிச் சீர்தூக்கி அறியவேண்டியதாகும்.

ஆகையால், கீழ்மட்டத்திலுள்ள நீதிமன்றங்களைப்பற்றிய அரசியலமைப்பு ஷரத்துகள் இருவகைக் குறிக்கோள்களை அடையும் நோக்கத்தில் ஏற்படுத்தப்பட்டவையாகும். முதலாவது குறிக்கோள், மாவட்ட அதற்குக் கீழுள்ள (subordinate) நீதிபதிகளினுடைய நியமனத்திற்கும், அவர்களுக்கிருக்கவேண்டிய தகுதிகளுக்கும் வகைசெய்வது இரண்டாவது குறிக்கோள். சிவில் நீதித்துறை முழுவதையும் உயர்நீதிமன்றக் கட்டுப்பாட்

டின்கீழ்க் கொண்டுவருவது. இந்தியச் சூழ்நிலையடிப்படையில் இவ்வேற்பாடுகளின் முக்கியத்துவமானது மிகைப்படுத்தப்பட முடியாததொன்றாகும். கீழ்மட்ட நீதித்துறைதான், நீதித் துறையில் மிகச் சாதாரண மக்களோடு மிக நெருங்கிய தொடர் புடையதாக இருக்கிறது. ஆதலின், அதனுடைய சுதந்திரம் மக்களிடையே அதனிடத்தில் நம்பிக்கை ஏற்படத் தக்கவாறு ஐயத்திற்கு அப்பாற்பட்டவாறு அமைக்கப்படவேண்டியது மிகவும் அவசியமாகிறது. இவ்வேற்பாடுகளையெல்லாம் அரசிய லமைப்பில் சேர்த்ததற்கு இதுவே அடிப்படைக் காரணமாகும்.

கீழ்மட்ட நீதிமன்றங்களுக்கிடையே மாவட்ட நீதி மன்றங்கள், மற்றவைகள் என்னும் இருவகைச் சிறப்பை அரசியல் ஏற்படுத்துகிறது. மாவட்ட நீதிமன்றங்களின் நீதிபதிகள் உயர் நீதிமன்றத்தைக் கலந்தாலோசித்தபின் கவர்னரால் நியமிக்கப் படுகிறார்கள். மேலும், மாவட்ட நீதிபதியாக நியமிக்கப்படு மொருவர் ஏழாண்டுக் காலத்திற்கு வழக்கறிஞராகவோ அல்லது பிளீடராகவோ (pleader) அல்லது யூனியன் இராச்சியப் பொதுப் பணித் துறையில் ஓர் அதிகாரியாகவோ இருந்திருக்கவேண்டும். வழக்கறிஞர் அல்லது பிளீடர்களில் ஒருவர் நியமிக்கப்படும் போது உயர்நீதிமன்றத்தின் சிபாரிசு அடிப்படையில் செய்யப்பட வேண்டும்.

இராச்சியமொன்றின் நீதித்துறைப் பணிக்கு (Judicial Service) மாவட்ட நீதிபதிகளல்லாதவர்கள் நியமனம் செய்யப் படும்போது, உயர்நீதிமன்றம், இராச்சியப் பணியாளர் தேர்வுக் கழகம் ஆகியவற்றின் ஆலோசனைக்குப் பிறகு இராச்சிய விதி களுக்கிணங்க அதன் சார்பில் கவர்னரால் செய்யப்படுகிறது. இராச்சிய நீதித்துறைக்குத் தேவையானவர்களைத் தேர்ந்தெடுப் பதற்குத் தற்போது பெரும்பாலான இராச்சியங்களிலிருந்து வரும் முறை பொதுப் பணியாளர்களைத் தேர்ந்தெடுக்கும் கழகம் போட்டித் தேர்வுகளை நடத்துவதன்மூலமாகும். இத் தேர்வு களில் போட்டியிட விரும்புவோருக்குக் குறிப்பிட்ட சில குறைந்த பட்ச கல்வி, தொழில் தகுதிகளைக் கழகம் ஏற்படுத்துகிறது. வழக் குரைஞராகவோ அல்லது பிளீடராகவோ ஒருவர் குறைந்தது மூன்றாண்டு அனுபவமுடையவராக இருக்கவேண்டுமென்பது முக்கியமான தகுதிகளுள் ஒன்றாகும். தேர்ந்தெடுக்கப்பட்ட வர்கள் துறைப்பணிக்கு முறைப்படி நியமிக்கப்படுவதற்கு முன் பாகக் குறிப்பிட்ட காலமொன்றுக்குத் தனிப்பயிற்சி அளிக்கப் படுகிறார்கள். அதன்பிறகு அவர்களுடைய கடமைப் பொறுப்பு களை நிறைவேற்றும் காலத்து அவர்கள் உயர்நீதிமன்ற மேற் பார்வையின்கீழ் வருகிறார்கள்.

கீழ்மட்ட நீதித்துறைமேல் உயர்நீதிமன்றம் செலுத்தக் கூடிய கட்டுப்பாட்டின் தன்மையையும், அளவையும் 235ஆம் விதி குறித்துரைத்திருக்கிறது. அவ் விதியின்கீழ், இராச்சிய நீதித் துறையைச் சேர்ந்த மாவட்ட நீதிமன்றங்கள், அவைகளுக்கு அடுத்தாற்போல இயங்கும் கீழ்மட்ட நிலையிலுள்ள நீதிமன்றங் களிலுள்ளவர்களைப் பதவியில் அமர்த்தல்,உத்தியோகஉயர்வுகள், அவர்களுக்கு விடுமுறையளித்தல் போன்ற விஷயங்களில் உயர் நீதிமன்றம் அதிகாரம் செலுத்துகிறது. இராச்சிய நீதித்துறைப் பணிக்குப் புறம்பான பலவகைப்பட்ட மாஜிஸ்டிரேட்டுகளையும் கட்டுப்படுத்தும் வகையில் இவ்வேற்பாடுகளை விஸ்தரிக்க இராச்சிய கவர்னருக்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது.

இங்குமங்குமான சிறுசிறு வட்டார வேறுபாடுகளைத் தவிரப் பொதுவாகக் கீழ்மட்ட நீதிமன்றங்களின் (அமைப்பு (structure), பணிகள் ஆகியவெல்லாம் நாடுமுழுதும் ஒரேமாதிரியாகவே யுள்ளன. ஒவ்வோர் இராச்சியமும் நீதியாட்சிப் பரிபாலனத் திற்காகப் பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொன்றும் மாவட்ட நீதிபதியொருவரின் அதிகார எல்லைக்குள்ளிருக்கிறது. அவருக்குக்கீழ்ப் பலவகைப்பட்ட அதிகாரஞ் செலுத்தும் தரவாரி யான நீதி அதிகாரிகளிருக்கின்றார்கள். நிர்வாகத்துறையினின் றும் நீதித்துறை தனியாக்கப்படவேண்டுமென்னும் கொள்கை யின் சீரான செயலாக்கம் காரணமாக, நாட்டின் மிகப்பெரும் பாலான பாகங்களில் கீழ்மட்ட நீதித்துறை ஏற்கெனவேயே தனியாக இயங்கிக்கொண்டிருக்கிறது. அரசியலமைப்பை ஆக்கி யவர்கள் விரும்பியவாறே, உண்மையாகச் சுதந்திரமுடைய ஒரு நிலையமாக நன்முறையில் அது அமைய அரசியலமைப்பின் கண்ணுள்ள உத்திரவாதங்கள் துணைபுரியுமென்பது திண்ணம்.

# 28. யூனியன் பிரதேசங்கள்
## (Union Territories)

1956ஆம் ஆண்டில் ஏற்பட்ட இராச்சியங்களின் சீரமைப் பைப்பற்றி விவாதித்தபோது, மூல அரசியலமைப்பின்கீழ் ஏற் படுத்தப்பட்ட 'சி' பிரிவு இராச்சியங்களைப்பற்றியும், 'டி' பிரிவின் கீழ் வந்த பிரதேசங்களைப்பற்றியும் நாம் விவாதித்திருக்கிறோம். மொத்தத்தில் 'சி' பிரிவு இராச்சியங்கள் பத்து இருந்தன. 'டி' பிரிவின்கீழிருந்த இராச்சியங்கள் அந்தமானும் நிகோபார் தீவுகளுமாகும். சீர்திருத்தப்பட்ட அமைப்பின்கீழ் இந்த இராச் சியங்களினுடையவும் பிரதேசங்களினுடையவும் அந்தஸ்து எத்தகையதாக இருக்கவேண்டுமெனும் பிரச்சினையைப்பற்றிக் கவனிக்குமாறு இராச்சியங்கள் சீரமைப்புக் கழகம் (States Re-Organisation Commision) கேட்டுக்கொள்ளப்பட்டது. அதற்கு மூன்று ஒன்றுவிட்ட வழிகள் சாத்தியமாக இருந்தன. முதலா வதாக, 'சி' பிரிவு இராச்சியங்களைத் தொடர்ந்து வைத்திருப் பதற்கும், 'ஏ' பிரிவு இராச்சியங்களுக்குச் சமமான தகுதியைக் கொடுப்பதற்குச் சிபாரிசு செய்வதுமாகும்; இரண்டாவதாக, இருக்கின்ற நிலைமையில் (status quo) மாறுதல் செய்யாமல் தொடர்ந்து இருக்க அனுமதிப்பது; மூன்றாவதாக, தனித்தனி யாக இருந்த அவைகளைக் கைவிட்டு அண்டை இராச்சியங் களோடு சேர்த்துவிடுவது. ஒவ்வொரு வழிமுறைகளினால் எழக் கூடிய சாதக பாதகமான (pros and cons) விளைவுகளைக் கழகம் போதுமான அளவில் பரிசீலனை செய்தது. அவர்கள் கூறிய தாவது:

'நீண்ட தூரங்களினால் பிரிக்கப்பட்ட அவை ஒவ்வொன்றும், மிக அதிகமாகப் பொருளாதார, மொழி, பண்பாடு ஆகியவற்றில் அவற்றிற்கிடையே இருப்பதைகாட்டிலும் அண்டை இராச்சியங் களோடு தொடர்பொற்றுமையுடையவைகளாக இருக்கின்றன. அரசியல், பொருளாதாரம், கல்வி ஆகிய துறைகளின் முன்னேற்

றத்தினால் மாறுபடும் கட்டங்களில் இருக்கின்றன. அரசியல் சட்டத் துறையிலும் அவைகள் ஒரே மாதிரியான அமைப்பை உடையவைகளாக இல்லை. அவைகளில் சில சட்ட சபைகளையும் அமைச்சரவைகளையும் பெற்றிருக்கின்றன. மற்றவைகள் ஆலோசனைக் குழுக்களை மட்டும் கொண்டிருக்கின்றன. லெப்டினன்ட் கவர்னர்களால் இரண்டும், மற்றவை தலைமை ஆணையாளர்களாலும் நிர்வகிக்கப்படுகின்றன.'

இவ்விராச்சியங்கள்பற்றிய அவர்களுடைய விவாதத்தைத் திரட்டிக் கூறுமுகத்தான் கழகம் கூறியதாவது, 'இப்போதுள்ள 'சி' பிரிவு இராச்சியங்களின் அமைப்பு திருப்திகரமானதாக இருக்கவில்லை என்ற கருத்துதான் பொதுவாக இருக்கிற நிலைமை. 'சி' பிரிவு இராச்சிய உத்தியோகபூர்வமான பிரதிநிதிகள் தீர்வு கருதித் தெரிவித்த யோசனை 'ஏ' பிரிவு இராச்சியங்களுக்குத் தரப்பட்டிருக்கும் மாதிரியில் தரப்படும் சட்டபூர்வமான அந்தஸ்து ஒன்றுதான் அரசியலமைப்பு அடிப்படையில் காணப்படும் குறையைப் போக்கும் என்பதாகும். அதன்பிறகும் இந்தச் சிறிய பகுதிகள் பொருளாதாரத் துறையில் சமநிலையற்றும், நிதி நிலைமையில் பலஹீனமாகவும், நிர்வாக அரசியல் துறைகளில் ஸ்திரமற்றவைகளாகவும் இருக்கும்.

'இந்த இராச்சியங்களில் எங்கெல்லாம் ஜனநாயக முறை ஏற்படுத்தப்பட்டதோ அங்கெல்லாம் அது எதிர்பார்த்ததையும் எண்ணியதையும் விடச் செலவு மிகுந்ததாகவும் இருந்தது. இந்த அதிகச் செலவு, அதிகரித்த நிர்வாகத்திறமையினாலோ அன்றி விரைவான பொருளாதார சமூக முன்னேற்றத்தினாலோ நியாயமானதாகப்படவில்லை. இதனால் தெளிவாகத் தெரிவது, இந்த இராச்சியங்களெல்லாம் அளவுக்கு அதிகமாக மத்திய அரசாங்கத்தைச் சார்ந்தில்லாமல் தனித்தியங்க முடியாது. இது வருவாய்த்துறைகளைக் கண்டுபிடிக்கும் பொறுப்பில்லாமல் செலவு செய்வதற்குமட்டும் அதிகாரமிருப்பது போன்ற பல விரும்பத்தகாத விளைவுகளில் கொண்டுபோய்விடும்.'

'இக் கூறுகளையெல்லாம் கவனமாகப் பார்க்கின்றபோது நாம், மத்திய அரசாங்கத்தினால் நிர்வகிக்கப்படவேண்டிய இரண்டு இராச்சியங்கள் நீங்கலாக இதர இராச்சியங்களை எல்லாம் ஏற்படுத்துகிற நிதி, நிர்வாக, சட்டசம்பந்தமான இடுக்கண்களுக்கெல்லாம், இப்போது நடைமுறையிலிருக்கின்ற 'சி' பிரிவு இராச்சியங்களையெல்லாம் அண்டை இராச்சியங்களோடு இணைத்துவிடுவதுதான், பிரச்சினைகள் தீர ஒரே வழியாகும் என்ற முடிவுக்கு வந்துள்ளோம்.'

கழகத்தின் சீரமைப்புத்திட்டம் இந்திய யூனியனில் இரண்டு வகைப்பிரிவுகளை ஏற்படுத்த வற்புறுத்தியது: (1) கூட்டாட்சி அடிப்படையில் மத்திய அரசாங்கத்தோடு சட்டபூர்வமான தொடர்பு வைத்துக்கொள்ளக்கூடிய பூர்வாங்க இணைப் (primary constituent) பிரிவுகளாக அமையும் 'இராச்சியங்கள்'. இப்பிரிவுகள் நாடு முழுவதையும் இணைப்பவைகளாகப் பரந்து இருக்க வேண்டும். இன்றியமையாத கேந்திரப்பகுதி என்பதாலோ அல்லது இதர நோக்கங்களாலோ இதர இராச்சியங்களில் ஏதாவதொன்றில் சேர்க்கப்பட முடியாத காரணத்தால், மத்திய அரசாங்கத்தினுல் நிர்வகிக்கப்பட வேண்டிய 'பிரதேசங்கள்'. இத் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசியலமைப்பிற்குக் கொண்டுவரப்பட்ட ஏழாவது மாற்றத்தினுலும், 1956ஆம் ஆண்டின் இராச்சியங்கள் சீரமைப்புச் சட்டத்தினுலும் நடைமுறைப் படுத்தப்பட்டது. இதுதான் யூனியன் பிரதேசங்களின் தோற்றம் பற்றிய கதையாகும்.

இப்போது எல்லாமாகச் சேர்த்து ஆறு யூனியன் பிரதேசங்கள் இருக்கின்றன. இவைகளாவன:

(1) டெல்லி
(2) இமாசல பிரதேசம்
(3) திரிபுரா
(4) மணிப்புரி
(5) அந்தமான், நிக்கோபார் தீவுகள்
(6) இலட்சத் தீவுகள், மினிகாய் அமின்டிவித் தீவுகள்.

இவைகளில் டெல்லி கூட்டாட்சித் தலைநகராகும். ஆகையால், அது இந்திய யூனியனின் எல்லா அம்சங்களும் பொருந்திய உள் அங்கமாக (constituent unit) ஆக்கப்படவில்லை. ஒற்றை அரசாங்க ஆட்சிமுறையின் கீழும் தேசியத் தலைநகரங்களைத் தனியாகவைத்து நடத்துவதுதான் இயல்பான முறையாக இருக்கிறது. இதர நகரசபைகளின் மேலிருக்கும் கட்டுப்பாட்டைக் காட்டிலும் சற்று அதிகமாகவே நகர நிர்வாகத்தின்மேல் மத்தியக் கட்டுப்பாடு இருக்கும் நகரங்களான லண்டனும் பாரிசும் (Paris) இதற்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். கூட்டாட்சி முறையின்கீழ் மேலுமோர் அம்சத்தையும் கருதவேண்டியிருக்கிறது. தேசிய அரசாங்கம் அமைந்திருக்கும் இடத்தில் செயலாற்றும் பிரிவு ஒன்றிற்குப் பொருந்துமாறு சட்டபூர்வமான அதிகாரப் பங்கீடு இருக்குமானுல், அங்கு அது சங்கடமான நிலைமைகளைத் தோற்றுவிக்கும் என்பது திண்ணம். இதனுல்தான் பெரும்பாலான கூட்டாட்சித் தலைநகரங்கள் நடு அரசாங்கத்தின்

கிழிருக்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைநகரான வாஷிங்டனும் (Washington), ஆஸ்திரேலிய காமன்வெல்த் கூட்டாட்சித் தலைநகரான கான்பெராவும் (Canberra) இரு நல்ல சான்றுகள்.

இமாசல பிரதேசம், திரிபுரா, மணிபுரி ஆகியவற்றை யூனியன் பிரதேசங்களாக அமைப்பதற்குச் சாதகமாக இருந்த நோக்கங்கள், சிறப்பாகப் பாதுகாப்பும் பாதுகாப்புத் தேவைகளுமாகும். வடமேற்கில் இமாசலப் பிரதேசமும், மணிபுரி திரிபுரா இரண்டும் வடகிழக்கிலுமுள்ள எல்லைப் பகுதிகளாகும். யூனியன் பிரதேசங்கள் பட்டியலிலுள்ள கடைசி இரண்டும் முறையே, வங்கக் கடலிலும் அரேபியக் கடலிலும் உள்ள தீவுகளாகும் அவைகள் இராச்சியங்கள் எதனோடும் பூகோள ரீதியாகத் தொடர்புடையவைகளாக இல்லாததோடு, இதர இராச்சியங்களைவிடப் பின் தங்கியவைகளாகவும், முன்னேற்றம் ஏற்படாதவைகளாகவும் இருக்கின்றன.

இந்த யூனியன் பிரதேசங்கள் சம்பந்தப்பட்ட அரசியலமைப்பு ஷரத்துகள் அவைகளுக்கான அடிப்படை நிர்வாக அமைப்பு முறையைத் தருகின்றன. அவ்வமைப்பு முறையின் பிரதான அம்சங்கள் பின்வருமாறு :

(1) யூனியன் பிரதேசங்கள் ஜனாதிபதியால், பொருத்தமான பதவிப் பெயரோடு நியமிக்கப்படும் நிர்வாகியொருவரால் ஆட்சி செய்யப்படும். எனினும், இப் பிரதேசங்களுள் ஏதாவதொன்றின் நிர்வாகத்திற்காகச் சட்டம் இயற்றுவதன் வாயிலாக வேறு எந்த ஏற்பாட்டையும் செய்யப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது.

(2) ஜனாதிபதி விரும்பும்பட்சத்தில், ஓர் இராச்சியத்தின் கவர்னரை அடுத்துள்ள யூனியன் பிரதேசமொன்றின் நிர்வாகியாக நியமிக்கக்கூடும். யூனியன் பிரதேசமொன்றின் நிர்வாகி என்ற முறையில், அவருடைய பணிகளைச் செய்கின்றபோது, கவர்னர் தம் அமைச்சவையினின்றும் சுதந்திரமாக நடந்து கொள்வார்.

(3) யூனியன் பிரதேசங்களான அந்தமான், நிகோபார் தீவுகள், இலட்சதீவு, மினிகாய் அமிந்திவித் தீவுகள் ஆகியவற்றின் அமைதி, முன்னேற்றம், நல்லரசாங்கம் ஏற்பட ஜனாதிபதி ஒழுங்கு விதிகளை ஏற்படுத்தலாம். அவ்வாறு ஜனாதிபதியால் செய்யப்படும் ஒழுங்கு விதி, இத் தீவுகளின் நிர்வாகம் சம்பந்தப்

பட்ட நடைமுறையிலிருக்கும் சட்டமொன்றை முழுவதுமாக விலக்கலாம் அல்லது திருத்தலாம். அவ்வொழுங்குவிதி பாராளு மன்றச் சட்டத்திற்குள்ள அதே சக்தியை உடையதாகும்.

(4) எந்த யூனியன் பிரதேசமொன்றிற்கும் ஓர் உயர்நீதி மன்றத்தை அமைக்கவோ அல்லது நடைமுறையில் அங்கு இருக்கும் ஏதேனும் ஒரு நீதி மன்றத்தை உயர்நீதிமன்றமாக அறிவிப்பதற்கோ பாராளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. அத்தகைய உயர்நீதி மன்றமொன்று, பாராளுமன்றம் சட்டத்தினுல் ஏற்படுத்தும் திருத்தங்கள் அல்லது விலக்குகள் போக இதரவற்றில் உயர் நீதிமன்றம் ஏதேனும் ஒன்றிற்குள்ள வேலைகளையும் பணிகளையும் உடையதாக இருக்கும். அத்தகைய உயர்நீதிமன்றம் ஒன்று ஏற்படுத்தப்படும்வரையிலும், எந்த உயர்நீதிமன்றங்களின் அதிகார எல்லையின்கீழ் இப் பிரதேசங்கள் இருந்துவந்தனவோ, அந்த நீதிமன்றங்கள், இப் பிரதேசங்களைப் பொறுத்தவரையிலும் அத்தகைய அதிகாரத்தைத் தொடர்ந்து செலுத்தும். இவ்வதிகார எல்லையைப் பொறுத்த மட்டில் எந்த மாறுதலை வேண்டுமானுலும் செய்யப் பாராளு மன்றம் அதிகார முடையதாக இருக்கிறது.

பகுதி 6

# கூட்டாட்சி முறை

## 28-A. அதிகாரப் பங்கீட்டுத் திட்டம்

அரசியல் நிர்ணய சபையில் நகல் அரசியலமைப்புப் (Draft Constitution) பரிசீலனையைத் துவக்கி வைக்கும்போது, அரசியலமைப்பின் உருவ அமைப்பு கூட்டாட்சியாகுமென அம்பேத்கர் கூறினார். 'அது நடுவில் யூனியனையும், அதைச்சுற்றி அரசியலமைப்பால் ஒதுக்கப்பட்ட துறையில் செயலாற்றும் இறைமை அதிகாரங்களுடைய இராச்சியங்களையும் கொண்டதோர் இரட்டை ஆட்சியை ஏற்படுத்துகிறது.' கட்டுப்பாடற்ற தொடர்பால் பிணைக்கப்பட்ட இராச்சியங்களாலான கூட்டாக (league) யூனியன் இருக்கவில்லை. அவ்வாறே யூனியனிடமிருந்து அதிகாரங்களைப்பெறும் ஏஜென்ஸிகளாக இராச்சியங்களுமில்லை. யூனியனும் இராச்சியங்களும் அரசியலமைப்பால் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. இரண்டும் அவற்றின் அதிகார ஆதிக்கத்தை (authority) அரசியலமைப்பிலிருந்து பெறுகின்றன. ஒன்று, அதற்கே உரிய சொந்தத் துறையில் பிறிதொன்றிற்கு உட்பட்டிருக்கவில்லை; ஒன்றின் அதிகார ஆதிக்கம் பிறிதொன்றிற்கு இணையானதாக (coordinate) இருக்கிறது.

அரசியலமைப்பு அளவிற்கு அதிகமாக மத்திய சார்புத் தன்மையை உடையதாக இருக்கிறது என்னும் குற்றச்சாட்டைப் பற்றி அம்பேத்கர் கூறியதாவது; 'மத்திய சார்பு (centralisation) அதிகமாக்கப்பட்டு இராச்சியங்கள் நகராண்மைக்கழகங்கள் போன்று அமைக்கப்பட்டிருக்கின்றன என்னும் அடிப்படையில் தீவிரப் புகார் ஒன்று செய்யப்பட்டிருக்கிறது. இக் கருத்து மிகைப்படுத்தப்பட்டதொன்று என்பதோடு மட்டுமல்லாமல், அரசியலமைப்பு சரியாக எதைச் செய்ய விரும்புகிறது என்பதைப் புரிந்துகொள்ளாததால் கூறப்படுவது என்பதும் தெளிவாகும்.

'நடு அரசாங்கத்திற்கும் இராச்சியங்களுக்கும் இடையே இருக்கவேண்டிய தொடர்பைப் பொறுத்தமட்டிலும், அது எவ்வாதாரக் கொள்கை அடிப்படையில் அமைகிறதென்பதைக் கருத்திற்கொள்ளவேண்டியது அவசியமாகும். கூட்டாட்சித் தத்துவத்தின் அடிப்படைக் கொள்கை, மத்திய அரசாங்கத்திற்கும் இராச்சியங்களுக்கும் இடையேயுள்ள சட்ட, நீதித்துறை அதிகாரம் மத்திய அரசாங்கத்தினுல் செய்யப்படும் சட்டமொன்றினுல் பங்கிடப்படாது அரசியலமைப்பால் செய்யப்படுகிறது என்பதாகும். இதையே அரசியலமைப்பு செய்கிறது. இராச்சியங்கள், அவைகளது சட்ட, நீதித்துறை அதிகார ஆதிக்கத்திற்கு மத்திய அரசாங்கத்தை எவ்வாற்றுலும் சார்ந்திருக்கவில்லை. இத்துறையில் இராச்சியங்களும் மத்திய அரசாங்கமும் சமமானவையாகும்.

'எனவே, அத்தகைய அரசியலமைப்பு மத்திய மட்டத்தில் அதிகாரத்தைக் குவிக்கும் தன்மையதாக இருக்கிறதென்பது எவ்வாறென்பது விளங்கவில்லை. வேறு எக் கூட்டாட்சி அரசியலமைப்பிலும் காணப்படாத அளவிற்கு, நடு அரசாங்கத்திற்கு, அதனுடைய சட்ட, நிர்வாக அதிகார ஆதிக்க நிறைவேற்றத்திற்குப் பரந்த துறையை அரசியலமைப்பு தருவதாக இருக்கலாம். எச்ச அதிகாரங்கள் (residuary powers) இராச்சியங்களுக்குத் தரப்படாமல் மத்திய அரசாங்கத்திற்குத் தரப்பட்டிருக்கலாம். ஆனுல், இவ் அம்சங்கள் கூட்டாட்சித் தத்துவத்தின் சாரமாக இருக்கவில்லை.

'கூட்டாட்சித் தத்துவத்தின் முக்கியக் குறிக்கோள் மத்திய, அங்க அரசாங்கங்களுக்கு இடையே சட்ட, நிர்வாக அதிகார ஆதிக்கம் அரசியலமைப்பால் பங்கிடப்படுவதில் அமைந்திருக்கிறது. இக் கொள்கையே நம் அரசியலமைப்பில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. இதில் தவறேதுமிருக்க முடியாது. எனவே, இராச்சியங்கள் மத்திய அரசாங்கத்திற்கு உட்படுத்தப்பட்டிருக்கின்றன என்று சொல்வது தவருகும். மத்திய அரசாங்கம் இப் பங்கீட்டு எல்லையை அதன் விருப்பப்படி மாற்ற இயலாது. அவ்வாறே நீதித்துறையும் அதை மாற்றமுடியாது. ஏனெனில், நன்ருகச் சொல்லப்பட்டதுபோல: 'நீதிமன்றங்கள் மாற்றி அமைக்கலாம் எனினும், புதியதைப் புகுத்தமுடியாது. புது விவாதங்களும், கருத்துடைய புதிய அம்சங்களும் எடுத்துக்காட்டப்படுகின்றபோது முன்னுல் தரப்பட்ட விளக்கங்களை, அவைகள் திருத்தலாம். விளிம்பிலுள்ள (marginal) விஷயங்களைப் பிரித்துநிற்கும் வரைஎல்லையை இங்குமங்கும் மாற்றலாம்; ஆனுல், திட்டவட்டமாக ஒதுக்கப்பட்டுள்ள அதிகாரத்தை

மீண்டும் ஒதுக்குவதற்கு அவைகளுக்குப் பல தளைகள் இருக்கின்றன. இருக்கின்ற அதிகாரங்களுக்குப் பரந்த விளக்கத்தை அவைகள் தரலாம். ஆனால், ஒன்றிற்குத் தெளிவாகத் தரப்பட்டிருக்கும் அதிகாரங்களை மற்றொன்றிற்கு அவை ஒதுக்கமுடியாது

அம்பேத்கரின் இக் கருத்துகளை நகல் தயாரிப்புக் குழுவில் இருந்த அவர்களுடைய தோழர்களும், அரசியல் நிர்ணய சபையில் எவரெவர்களுடைய கருத்துகளுக்கு மதிப்பிருந்ததோ அவர்களும் ஆதரித்தார்கள். எனினும், சர்ச்சை தொடர்ந்தது. அதன் பிறகும் மிகப் பெருவாரியான உறுப்பினர்கள் மத்திய அரசாங்கம் அதிகமாக அதிகாரம் தரப்பட்டிருக்கிறது என்றும், அதனல் கூட்டாட்சிக் கொள்கையில் மிகச் சிறந்ததாக இருக்கும் இராச்சியங்கள் முறை (states system) இவ் அரசியலமைப்பின் கீழ்ப்பெரும் பாலும் அழிக்கப்பட்டுவிட்டதென்றும் கருதினர்கள்.

அரசியலமைப்பு ஏற்றுக்கொள்ளப்பட்ட பின்னரும் அச் சர்ச்சை விடப்படவில்லை. அச் சர்ச்சை அசெம்பிளியிலிருந்து நாட்டிற்கு உள்ளும் புறமும் இருந்த அரசியலறிஞர்கள், அரசியல் சட்ட நிபுணர்கள் அடங்கிய மிகப் பரந்த அரங்கத்திற்குச் சென்றது. சிலரது கருத்துப்படி அரசியலமைப்பு 'அரைகுறைக் கூட்டாட்சி (quasi federal) யாக இருக்கிறது. அது ஒற்றையாட்சி அம்சங்களை உப பிரிவுகளாகவுடைய கூட்டாட்சியாக இருப்பதற்கு மாருக, கூட்டாட்சி அம்சங்களை உப பிரிவுகளாகக் கொண்ட ஒருமுக அரசை ஏற்படுத்துகிறது. இதரர்கள், ஒற்றையாட்சி அம்சங்கள் பலமிக்கவையாக இருப்பதால் கூட்டாட்சி சாரமில்லாத, ஆனல், தோற்றத்திற்குக் கூட்டாட்சியாக அரசியலமைப்புத் தோன்றுகிறது என்று கருத்துத் தெரிவிக்கிறர்கள். அதே சமயத்தில் கணிசமாகக் கூட்டாட்சிக் கொள்கையின் பிம்பமாக அரசியலமைப்பு இருப்பதாகக் கருதி உண்மைக் கூட்டாட்சியாக எண்ணும் பிறிதொரு சாராரும் இருக்கிறர்கள்.

அரசியலமைப்புக் கொள்கையாளர்களிடம் கூட்டாட்சியின் தத்துவம்பற்றிய மாறுபட்ட கருத்துகள் இருப்பதால் தான் இம் மாறுபட்ட கருத்துகள் ஏற்படுகின்றன. எனவே, அரசியலமைப்பு கூட்டாட்சி வகையைச் சேர்ந்ததா இல்லையா என்னும் பிரச்சினையைக் கூட்டாட்சியின் பொருளையும், கூட்டரசின் இன்றியமையாத கூறுகள் என்ன என்பதையும் தெரிந்துகொள்ளாமல் திருப்தி ஏற்படும் வகையில் விளக்க முடியாது.

இக் காலததில் கூட்டாட்சித் தத்துவம் இரு வெவ்வேறு போக்குகளிடையே விட்டுத்தரும் அடிப்படையில் சமாதானம் ஏற்படுத்தி, பொது அபிலாஷைகளின் அளவை விரிவுபடுத்தி, வட்டாரத் தன்னாட்சியை வற்புறுத்தும் ஒரு கொள்கையாக இருக்கிறது. இதனால்தான் ஆக்டன் பிரபு (Lord Acton) 'ஜனநாயகத்திற்கு இருக்கின்ற தடைகள் எல்லாவற்றிலும் கூட்டாட்சித் தத்துவம் எண்ணியதை எண்ணியாங்கு முடிப்பதாகவும், ஒவ்வொருவரின் நோக்கத்திற்கு ஏற்றதாகவும் இருக்கிறது. கூட்டாட்சி முறை இறைமையதிகாரத்தைப் பிரிப்பதன் மூலமாக அதை வரையறுப்பதோடு கட்டுப்படுத்தவும் செய்கிறது. அரசாங்கத்திற்கு விளக்கமாகக் குறிப்பிடப்பட்ட சில உரிமைகளை ஒதுக்குவதனால், அதையும் கட்டுப்படுத்துகிறது என்று கூறினார். குடிமகன் ஒருவருடைய சுயதேவை நிறைவிற்கும், அவர் அரசிற்குச் செலுத்தவேண்டிய விசுவாசத்திற்கும் இடையே அரசில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் விட்டுத்தரும் போக்கு ஓரளவிற்குச் சாராம்சத்தைப் பொறுத்தவரையிலும் கூட்டாட்சித் தத்துவத்திற்கு அது ஏற்புடையதாகும். இக்காலக் கூட்டாட்சியமைப்புகள், பெரிய ஒருமுகக் குடியாட்சியில் நிலவிய குறைகளாலோ அல்லது வரம்புகளாலோ அல்லது தனியொருவரின் ஆட்சியிலிருந்த சில அரசின் பொருளாதார, பாதுகாப்புத் தேவைகளாலோ தோன்றியவைகளாகும். இப்போதுள்ள தேவை முழுச் சுதந்திரமோ அல்லது முழுச்சார்புடைமையோ அல்ல. ஆனால், ஒற்றுமையையும், ஒழுங்கான முன்னேற்றத்தையும், செல்வச் செழிப்பையும் ஏற்படுத்தவல்ல ஒன்றை, பிறிதொன்று சார்ந்திருக்கும் நிலையே தேவையானதாகும். பார்க்கின்ற அளவில் அது முன்னுக்குப்பின் முரணெனத் தோன்றுமெனினும், அதுவே கூட்டாட்சியின் சாராம்சமாகும். இக் கூட்டாட்சித் தத்துவம்தான் அத்தகைய விளைவை ஏற்படுத்த முடியும். இக்காலக் கூட்டாட்சியின் தன்மை, பன்மையில் ஒருமையையும், பிரிவில் ஒற்றுமையையும் ஏற்படுத்துவதாக இருக்கிறது. அது சமூக அக்கறை காரணமாக ஏற்படும் மோதல்களுக்குத் தீர்வுகாணும் கருவியாக இருக்கிறது. அவ்வழிச் சூழ்நிலைகளுக்கும், சுற்றுச் சார்புகளுக்கும் ஏற்ப விவரங்களைப் பொறுத்து என்னதான் மாறுபட்டபோதிலும் உலகின் பல பகுதிகளிலும் ஒரேமாதிரியாகத்தான இருக்கிறது. இப் பரந்த அடிப்படையில் கூட்டாட்சித் தத்துவம் நோக்கப்படுமாயின் அரசியலமைப்பின் கூட்டாட்சித் தன்மைபற்றிய சச்சரவிற்குச் சிறிதும் இடமிருக்காது. ஏனெனில், (1) அங்கு மத்திய இராச்சிய அரசாங்கங்களுக்கிடையே அரசாங்க அதிகாரம் தெளிவாகப் பங்கீடு

செய்யப்பட்டிருக்கிறது; (2) ஒவ்வோர் அரசாங்கமும் அதனதன் துறையில் பிறிதொன்றினின்றும் சுதந்திரமாக இருக்கின்றது; (3) அதிகாரப் பங்கீட்டைப்பற்றி யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே ஏற்படும் சச்சரவுகளைத் தீர்த்து வைக்க, சுதந்திரமாக இயங்கும் நீதித்துறை ஒன்றையும் அரசியலமைப்பு ஏற்படுத்துகிறது. இது, அரசியலமைப்பின் கூட்டாட்சி ஏற்பாடுகளை மென்மேலும் ஆராய்ந்தறிகின்றபோது தெளிவாகும்.

## யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையேயுள்ள சட்ட சம்பந்தமான தொடர்புகள்

## (Legislative Relations between the Union and the States)

அமெரிக்கக் கூட்டாட்சி முறையைப் பின்பற்றும் பல கூட்டாட்சி அரசியலமைப்புகளிடையே பொதுவாக உள்ள அம்சம், சட்டத்துறை அதிகாரங்கள் எடுத்தெழுதப்பட்டுள்ள பட்டியலொன்றைத் தயாரித்து அதை யூனியனுக்கு வழங்கிவிட்டு, எஞ்சியதை இராச்சியங்களுக்கு ஒதுக்குவதாகும். ஆனால், கனேடிய அரசியலமைப்போ எனில், அதற்கு மாறானதொரு முறையைப் பின்பற்றுகிறது. அம் முறைப்படி, அங்கு சட்டத்துறை அதிகாரங்களடங்கிய இரு பட்டியல்கள் இருக்கின்றன. ஒரு பட்டியல் மத்திய அரசாங்கத்திற்காகவும், பிறிதொன்று மாநிலங்களுக்காகவும் இருக்கின்றன. எச்ச அதிகாரம் நடு அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்திய அரசியலமைப்பு கனேடிய அரசியலமைப்பைப்போன்றதொரு முறையைப் பின்பற்றினாலும், கனேடியப் பட்டியல்களையும்விட மிகவும் விரிவான பட்டியல்களைக் கொண்டிருப்பதோடு, அதனில் இல்லாத பொதுப் பட்டியல் (Concurrent List) ஒன்றையும் உடையதாக இருக்கிறது. ஆஸ்திரேலியக் கூட்டாட்சி அதிகாரப் பங்கீட்டு முறையைப் பின்பற்றி அரசியலமைப்புக் கர்த்தாக்கள் மிக விரிவான பொதுப் பட்டியலைத் தயாரித்தார்கள். ஆஸ்திரேலிய அரசியலமைப்பில் 39 பொது விஷயங்கள் இருக்கின்றன. நகல் அரசியலமைப்பில் அவற்றின் எண்ணிக்கை 37 ஆக இருந்தது. (அரசியலமைப்பு இறுதியாக ஏற்றுக்கொள்ளப்பட்டபோது அவ்வெண்ணிக்கை 47 ஆக உயர்ந்தது.) இத் திட்டம் ஏறக்குறைய 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை ஒத்திருக்கிறது. இம் மூன்று பட்டியல்களும் அரசியலமைப்பின் ஏழாவது ஷெடியூலில் காணப்படுகின்றன.

இம் மூன்றிலும் தொண்ணூற்றேழு இனங்களைக்கொண்ட யூனியன் பட்டியல் மிக நீளமானதாகும். அப் பட்டியல், பாது

காப்பு, ஆயுதப்படைகள், ஆயுதங்களும் மருந்துகளும், அணுசக்தி, வெளிவிவகாரங்கள், இராஜதந்திரப் பிரதிநிதித்துவம், ஐக்கிய நாடுகள் கழகம், உடன்படிக்கைகள், போரும் அமைதியும், குடியுரிமை, ஒரு நாட்டுக் குடிமகன் பிறிதொரு நாட்டில் இருக்கும் போது அவனைக் கொண்டுவருவதற்கான ஏற்பாடு, இரயில் வேக்கள், கப்பல், விமானப் போக்குவரத்து, அஞ்சல், தந்தி, தொலைபேசி, கம்பியில்லாத் தந்தி, ஒலிபரப்புதல், காகித நாணயம், உலோக நாணயம், வெளிநாட்டுக் கடன்கள், இந்திய ரிசர்வ் பாங்கு, அயல் வர்த்தகம், நாட்டிற்குள் இராச்சியங்களுக்கிடையே நடைபெறும் வாணிகம், வர்த்தகம், தொழில் நிமித்தம் ஒன்று கூடல் (incorporation), அதை ஒழுங்குபடுத்தல், வங்கி நடவடிக்கைகள், மாற்றுண்டிகள், இன்ஷியூரன்சு ஸ்டாக் எக்ஸ்சேஞ்சு, பொருள்களைச் செய்து விற்கத் தரப்படும் உரிமை (patent), நிறுத்தல், நீட்டல் அளவைகளின் தரநிர்ணயஞ் செய்தல், தொழிற் கட்டுப்பாடு, கனிவள ஒழுங்கு, தாதுப்பொருள்கள், எண்ணெய் வளம், தொல்பொருட்காட்சிசாலைகள், நூல்நிலையங்கள், இன்னும் அவைபோன்ற இதர நிலையங்களின் பராமரிப்பு, வரலாற்றுச் சிறப்புடைய புராதனச் சின்னங்கள், இந்திய சர்வே (Survey of India) மக்கள்தொகைக் கணக்கெடுப்பு, யூனியன் பொதுப்பணித் துறைகள் (Union Public Services), தேர்தல்கள், பாராளுமன்றச் சிறப்புரிமைகள், அரசாங்கக் கணக்குகளின் சோதனை, உச்ச நீதி மன்றம், உயர் நீதிமன்றங்கள், யூனியன் பணியாளர் தேர்வுக் கழகம் ஆகியவற்றின் அமைப்பும் இயக்கமும், வருமானவரி சுங்கவரி, ஏற்றுமதிவரி, கலால்வரி, கார்ப்பொரேஷன் வரி, மூலதனச் சொத்துகளின் மதிப்பீட்டின்மீது போடப்படும் வரிகள், எஸ்டேட் வரிகள், பிரயாண முடிவுகட்ட வரி (terminal tax), செய்தித் தாள்கள் விற்கப்படுதல் அல்லது விலைக்கு வாங்கப்படுதல், மேல் போடப்படும் வரிகள்போன்றவையும் பிறவும் உடையதாக இருக்கிறது. யூனியனுக்குப் பொதுவானவைகளாக இவைகள் இருப்பதால், இத் துறைகளில் இயற்றப்படும் சட்டம் யூனியனெங்கும் ஒரேமாதிரியானதாக இருக்கவேண்டியது மிக அவசியமாகும். எனவே, இப் பட்டியலில் காணப்படும் இனங்களைப் பொறுத்தவரையிலும், சட்டமியற்றுவதற்குப் பாராளுமன்றத்திற்கே பூரண அதிகாரம் தரப்பட்டிருக்கிறது.

இராச்சியப் பட்டியலில் அறுபத்தாறு இனங்கள் இடம் பெற்றிருக்கின்றன இவ் வினங்கள், வட்டார நன்மையைக் கருத்திற்கொண்டு முடிவு செய்யப்படுகின்றன. இது யூனியனிலுள்ள பல்வேறு இராச்சியங்களிலுள்ள வெவ்வேறு இனங்களும் அவ்வவற்றின் தன்மைக்குத் தகுந்தாற்போல நடத்தப்படவேண்டுமென்பதை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. இப்

பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கும் இனங்கள் சம்பந்தமாக எந்த அளவிற்கு இராச்சியமொன்று சட்டமியற்றமுடியும் என்ற அடிப் படையைக்கொண்டுதான் இந்தியாவில் எந்த அளவிற்குக் கூட் டாட்சிக் கொள்கை பின்பற்றப்படுகிறதென்பது தீர்மானிக்கப் படவேண்டும். இவ்வினங்களில் மிகவும் முக்கியமானவை பின் வருமாறு: பொது அமைதி, போலீஸ், நீதிநிர்வாகம், சிறைச் சாலைகள், சீர்திருத்த நிறுவனங்கள், வட்டார ஆட்சி, பொதுச் சுகாதாரமும் துப்புரவும், மதுபான வகைகள், சடலங்களைப் புதைத்தலும் மயானங்களும், கல்வி நூல்நிலையங்களும் இராச்சி யத்தால் கட்டுப்படுத்தப்படும் தொல்பொருட் காட்சிசாலையும், இராச்சியத்திற்குள் செய்திப் போக்குவரத்து, வேளாண்மை, கால்நடைகள், நீர்ப்பாசனமும் நீர்ப்பாசன வசதிகளும், நில உரிமை, காடுகள், மீன்வளம், இராச்சியத்திற்குள் நடைபெறும் வியாபாரமும் வர்த்தகமும், வாயு வாயு சம்பந்தமான வேலைகள், சந்தைகளும் பொழுதுபோக்கு நிலையங்களும், கடன்கொடுத்தல், பேசும்படக் கொட்டகைகள், பந்தயங்கட்டலும் சூதாடலும், வட்டாரத் தேர்தல்கள், சட்டத்துறைச் சிறப்புரிமைகள், இராச் சிய அலுவலர் எல்லோரது சம்பளமும் படிகளும், இராச்சியப் பொதுப்பணித் துறைகளும் இராச்சியப் பொதுப் பணியாளர் பொறுக்கும் கழகமும், புதையல்களும் புதைபொருள்களும், நில வருமானம், நில வருமானவரி, காலி மனைகள், கட்டட வரி, எஸ்டேட் தீர்வை, விவசாய நிலப்பாத்தியதை கொண்டாடு வதன்மேல் விதிக்கப்படும் வரி, இராச்சியத்திலேயே உற்பத்தி செய்யப்படும் மதுபானங்கள், அபின் ஆகிய பொருள்களின்மீது விதிக்கப்படும் சுங்கத் தீர்வை, வட்டாரப் பகுதியொன்றினுள் கொண்டுவரப்படும் பொருள்கள்மேல் போடப்படும் வரி, மின் சார வரி (அதன் விற்பனையின்மேலும் உபயோகத்தின்மேலும்), செய்தித்தாள்கள் நீங்கலாக இதர பொருள்கள் விற்கப்படும் போதும் வாங்கப்படும்போதும் விதிக்கப்படும் வரிகள், சாலைகள் அல்லது உள்நாட்டு நீர்த்துறைகள்மூலமாக எடுத்துச் செல்லப் படும் பொருள்கள், பிரயாணிகள்மீது போடப்படும் வரிகள், வாகனவரி, பிராணிகள், தோணிகள்மீதான வரிகள், சுங்கவரி, தொழில்வரி, வர்த்தகவரி, உத்தியோகவரி (callings), தலை வரிகள் (capitation taxes), உயர்வாழ்க்கைச் சாதனப்பொருள்கள் முதலியன. இராச்சியப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள ஒவ்வோர் இனம்பற்றியும் சட்டம் செய்ய இராச்சியச் சட்ட சபைக்குப் பரிபூரண அதிகாரமுண்டு.

பொதுப்பட்டியலில் நாற்பத்தேழு இனங்கள் இடம்பெற் றிருக்கின்றன. இப் பட்டியலில் காணப்படும் இனங்களைப்பற்றி இயற்றப்படும் சட்டம் யூனியனெங்கும் ஒரேமாதிரியாக இருப்

பது வரவேற்கத்தக்கதெனினும் அத்தியாவசியமானதன்று. ஆதலால்தான், யூனியன், இராச்சியங்கள் என்னும் இருவகை அரசாங்கங்களின் அதிகார எல்லையிலும் அவைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. இப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள இனங்களாவன: இராச்சியப் பாதுகாப்பு சம்பந்தப்பட்ட காரணங்களுக்காகக் காவலில் வைப்பது, திருமணமும் திருமணரத்தும், விவசாயத்திற்கொவ்வாத இதர நிலங்களைப் பிறிதொருவருக்கு மாற்றுவது, ஒப்பந்தங்கள், கடனைத் திருப்பித் தரவியலாது ஓட்டாண்டியாகும் நிலைமை, அறமும் அறக்காவலர்களும், சிவில் நடைமுறை, நீதிமன்றத்தை அவமதித்தல், நாடோடித்தனம், பைத்தியமும் மனவளங் குறை நிலையும், கலப்பட உணவுப் பொருள், மருந்துகளும் விஷங்களும், பொருளாதார, சமூகத் திட்டம், வர்த்தகத் தொழில் ஏகபோகங்கள், தொழிற்சங்கங்கள், சமூகப் பாதுகாப்பு, தொழிலாளர் நலன், சட்டம், மருத்துவம் போன்ற இதர தொழில்கள், முக்கியப் புள்ளிவிவரங்கள், பல வகைப்பட்ட துறைகளில் வர்த்தகமும் வியாபாரமும், விலைக் கட்டுப்பாடு, ஆலைகள், மின்சாரம், செய்தித்தாள்கள், புத்தகங்களும் அச்சுக்கூடங்களும், ஸ்டாம்பு தீர்வைகள் முதலியன. இப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள இனங்களைப்பற்றிச் சட்டமியற்றும் அதிகாரம் இந்தியப் பாராளுமன்றத்திற்கும் இராச்சிய சட்டசபைகளுக்கும் உண்டு. இவ் இனங்களில் எதைப்பற்றியேனும் பாராளுமன்றம் சட்டமியற்றியிருக்குமாயின், அதைப் பற்றிய சட்டத்தை இராச்சியங்கள் தம் விருப்பம்போல இயற்றலாம். ஆனால், அவ் இனங்கள் எவையேனும்பற்றிப் பாராளுமன்றம் சட்டமியற்றுமாயின், அச் சட்டம் இராச்சியத்தால் இயற்றப்பட்டுள்ள சட்டத்தைக் கட்டுப்படுத்தும் திறனுடையது. எனினும், இப் பொது விதிக்கு விலக்கொன்று இருக்கிறது. இதன்படி, பொதுப் பட்டியலிலுள்ள இனமொன்றுபற்றி இராச்சியச் சட்டசபையால் இயற்றப்பட்ட சட்டம், அவ் இனம் பற்றிப் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்திற்குப் பின்னதாக இயற்றப்பட்டு, ஜனாதிபதியின் பரிசீலனைக்காக ஒதுக்கப்பட்டு, அவரது இசைவைப் பெற்றிருக்குமாயின், பாராளுமன்றச் சட்டத்தையும் அது கட்டுப்படுத்தவல்லதாகும். இவ் அம்சம் நவீனமானதும் மூலமானதுமாகும். இது, நடைமுறையிலிருக்கும் பாராளுமன்றச் சட்டமொன்றைக் காட்டிலும் சிறந்த ஒன்றை இராச்சியம் இயற்றுவதற்கோ, அல்லது இராச்சியத்தில் நிலவும் பிரத்தியேகமான சூழ்நிலைகளுக்குத் தகுந்தாற்போல ஒன்றை இயற்றுவதற்கோ வகைசெய்கிறது.

கானடாவைப்போன்று எஞ்சிய அதிகாரங்கள் துறையில் சட்டம் செய்யும் உரிமை யூனியனுக்குத் தரப்பட்டிருக்கிறது.

இவ் அதிகாரம், இராச்சிய அல்லது பொதுப் பட்டியல்களில் சேர்க்கப்படாத இனங்கள்மேல் சட்டமூலமாக வரிவிதிக்கும் அதிகாரத்தையும் உட்கொண்டதாகும். யூனியன் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள எந்தவோர் இனம்பற்றியும் இயற்றப்பட்ட சட்டங்களின் நிர்வாகத்திற்காக உதவி நீதிமன்றங்களை ஏற்படுத்தவும் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது; அல்லாமலும், இதர நாடு அல்லது பன்னாட்டு நிறுவனமொன்றோடு செய்துகொள்ளப்பட்டிருக்கும் ஏதேனும் ஓர் உடன்படிக்கை, உடன்பாடு அல்லது வழக்கத்தை நடைமுறைக்குக் கொண்டுவரச் சட்டமியற்றும் முழு அதிகாரத்தையும் பாராளுமன்றம் பெற்றிருக்கிறது.

இராச்சியப் பட்டியலில் காணப்படும் ஒவ்வோர் இனம் பற்றியும் சட்டமியற்றும் பூரண அதிகாரத்தை இராச்சியங்கள் பெற்றிருந்தபோதிலும், இப் பொது விதிக்கு இரு விலக்குகள் இருக்கின்றன:

(1) 249ஆம் விதியின்கீழ், கூட்டத்தில் பங்கெடுத்துக்கொண்டு வாக்களிப்பவர்களின் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் இரு பங்கு உறுப்பினர்களால் ஆதரிக்கப்பட்டு, இராச்சியப் பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கும் எந்தவொரு விஷயம்பற்றியும் தேசிய நலனைக் கருதிப் பாராளுமன்றம் சட்டம் செய்யவேண்டியது அவசியமென்றோ அல்லது பொருத்தமானதென்றோ இராச்சிய சபைத் தீர்மானமொன்றை நிறைவேற்றி அதன் கருத்தை அறிவிக்குமாயின், பாராளுமன்றம் அப்போது அவ் விஷயம்பற்றி இந்தியா முழுவதிற்குமோ அல்லது ஏதேனுமொரு பகுதிக்கு மட்டுமோ சட்டங்கள் இயற்றத் தகுதியுடையதாகும். அத்தகைய தீர்மானம் ஓராண்டுக் காலம்வரை செல்லும்படியாகவல்லது. எனினும், எந் நிலைமையைக் கருதி அத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதோ அந் நிலைமை ஓராண்டுக் காலமுடிவிலும் தொடர்ந்து இருக்குமானால், அந் நிலைமையைக் கருத்திற் கொண்டு மீண்டுமொரு தீர்மானம் நிறைவேற்றப்படலாம். அத்தகைய தீர்மானமொன்று நிறைவேற்றப்படாமற்போனால், அதற்கெனப் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் அவ்வாண்டு முடிவுற்ற ஆறு மாதகாலத்திற்குள் தானாகவே செயற்படாமற்போகும்.

(2) 250ஆம் விதியின்கீழ், அவசரப் பிரகடனமொன்று நடைமுறையில் இருக்கும்போது இராச்சியப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள எந்த ஒரு பொருள்பற்றியும் இந்தியா முழுவதிற்குமோ, அல்லது ஏதேனுமொரு பகுதிக்குமட்டுமோ சட்டங்கள் செய்யப் பாராளுமன்ற அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. அத்தகைய சட்டமொன்று அதிகபட்சமாக நடைமுறையில்

யிருக்கக்கூடிய காலம், நெருக்கடி நிலைமை எவ்வளவு காலத்திற்கு நீடிக்கிறதோ அதுவரையிலும், அதற்குப் பிறகு ஆறு மாத காலம் வரையிலுமாகும்.

இராச்சியங்களைத் தழுவும் வகையில் யூனியன் தானாகவே சட்ட அதிகாரத்தை விஸ்தரிப்பதற்கு இருக்கும் இவ்விரு வாய்ப்புகளோடு, இராச்சியப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள துறைகளில் சட்டங்கள் இயற்றுவதற்கான அதிகாரம், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட இராச்சியங்கள் ஏற்படுத்தித்தரும் மூன்றாவது வாய்ப்பாலும் கிடைக்கிறது. 252ஆம் விதி இந் நிலைமையைப்பற்றிக் கூறுகிறது. இதன்படி, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட இராச்சியங்களின் சட்டசபைகள், இராச்சியப் பட்டியலில் இணைக்கப்பட்டுள்ள விஷயங்களில் ஏதேனுமொன்றை ஒழுங்குபடுத்தப் பாராளுமன்றச் சட்டமொன்று விரும்பத்தக்கதெனத் தீர்மானங்களை நிறைவேற்றினால், அவ் விஷயத்தை ஒழுங்குபடுத்தும் சட்டங்களைப் பாராளுமன்றம் இயற்றுவது சட்டபூர்வமானதாகும். அத்தகைய சட்டங்கள், வேறு எந்த இராச்சியத்திற்கும் எப்போது அந்த இராச்சிய சட்டசபை அத்தகைய தீர்மானமொன்றை நிறைவேற்றுகிறதோ, அப்போது விஸ்தரிக்கப்படலாம். அத்தகைய சட்டம், திருத்தப்பட அல்லது கைவிடப்படவேண்டுமானாலும், பாராளுமன்றத்தால் அது நடைபெறவேண்டும். ஆனால், அதற்கு இராச்சியங்களே துவக்க முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். இராச்சியங்கள் அவைகளுக்குப் பொதுவாக அக்கறையுடைய ஒரு விஷயத்தில் தனித்தனியாக அவ் விஷயம் அவைகளினுடைய பிரதேச வரம்பிற்கு அப்பாற்பட்டதாக இருப்பதால் சட்டமியற்ற முடியாமற் போகும்போது, அதற்கான சட்டமியற்றுமாறு அவைகள் கோருகின்றபோது, பாராளுமன்ற நடவடிக்கை சாத்தியமாகிறதென்பதாகும்; அல்லாமலும், பாராளுமன்றச் சட்டம் எக் காரியத்தை அடைவதற்காக இயற்றப்பட்டதோ அக் காரியத்தை அடைவதற்குப் பயன்படவில்லையெனும்பொழுதோ, அல்லது அதற்கான தேவையில்லாமற் போகிறபொழுதோ, அதைத் திருத்தி அமைக்கவோ அல்லது அகற்றுவதற்கோ கேட்டுக்கொள்ளும் துவக்க உரிமையையும் இராச்சியங்களே பெற்றிருக்கின்றன.

இதர கூட்டாட்சி அமைப்புகளோடு இவ்வரசியலமைப்பை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அவ்வரசியலமைப்புகளில் எதுவும் யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே விவரமான சட்ட அதிகாரங்கள்பற்றிய பங்கீட்டை ஏற்படுத்த முயலவில்லை என்பது மற்றெல்லாவற்றையும்விட முதலில் தெற்றெனவிளங்கும். எவ்வளவு குறைவாக முடியுமோ அவ்வளவு குறைவாக சர்ச்சை

களும் வழக்குகளும் ஏற்படத்தக்கவாறு எடுத்துக்கொள்ளப் பட்டுள்ள பொருள்கள் இந்திய அரசியலமைப்பில் உருவாக்கப் பட்டிருக்கின்றன. சுருக்கமாக இருக்கவேண்டுமென்பதற்காக அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசியலமைப்பைப்போன்று இவ் விஷயத்தை விட்டிருந்திருப்பார்களானால், எண்ணிலடங்கா வழக்குகளில் அது கொண்டுபோய் விட்டிருக்கக்கூடும். அமெரிக்க அரசியலமைப்பிலுள்ள 'வர்த்தகம் பற்றிய பிரிவு' பற்றிய வழக்கு களே நீதிவிளக்கத்திற்கு அளவுக்கும் அதிகமாக இருக்கின்ற வாய்ப்பையும் மத்திய அரசாங்கமோ அல்லது அங்க அரசாங்கங் களோ ஏதேனும் ஒரு நடவடிக்கையைத் தத்தம் துறைகளிலேயே வருவதாக அது எடுக்க விரும்பும்போது, நீதிவிளக்கத்தைச் சார்ந்திருக்கவேண்டியதாக இருப்பதையும் எடுத்துக்காட்டாகக் கூறுவதற்குப் போதுமானதாகும்.

கணிசமான அளவிற்குப் பல இனங்களைக்கொண்டிருக்கின்ற ஒரு பொதுப் பட்டியலுக்கான ஏற்பாடு இவ்விடத்தில் ஒரு தனிச் சிறப்பைப் பெறுகிறது. சூரிய அஸ்தமனத்திற்கும் உதயத்திற் கும் முன்னே நிலவும் ஒளிபோல பொதுப் பட்டியல் மத்திய அரசாங்கமும் இராச்சிய அரசாங்கங்களும் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளாமல் ஒவ்வொன்றும் இத் துறையில் சட்டம் இயற்றுவதற்கான தகுதியை அடையுமாறு சிறந்து விளங்குகிறது. யூனியனும் இராச்சியங்களும் ஒன்று பிறிதொன்றின் துறையில் அத்து மீறுமலிருக்கக்கூடிய சாத்தியக்கூறு, எந்தெந்தத் துறை களில் மோதல்கள் ஏற்படக்கூடுமென்று கருதப்பட்டதோ அத் துறைகளையெல்லாம் பொதுப் பட்டியலில் சேர்த்ததால் மிகக் குறைந்தபட்ச அளவில் ஏற்படக்கூடியவாறு குறைக்கப்பட்டுள் ளது. வட்டார நலன்கள் அடிப்படையில் இராச்சியப் பட்டிய லும் தேசிய அடிப்படையில் யூனியன் பட்டியலும் தயாரிக்கப் பட்டிருக்கின்றபோது, பொதுப் பட்டியலோவெனில், இடத் திற்கும் காலத்திற்கும் ஏற்ப மாறுபடும் தன்மையுள்ள வட்டார நலன்களைக் கருத்திற் கொண்டு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இவ் விஷயங்கள் இராச்சியப் பட்டியலிலோ அல்லது யூனியன் பட்டியலிலோ சேர்க்கப்பட்டிருக்குமானுல், மோதல் கள் ஏற்பட்டிருக்கக்கூடும். இப்போதுள்ள நிலையில், பொதுப் பட்டியல் இடிதாங்கியைப்போன்று யூனியன், இராச்சியங்கள் ஆகிய இருவகை அரசாங்கங்களும் அவைகளுக்கேயென ஒதுக்கப் பட்ட சட்டத்துறைகளையும் தாண்டிச் சென்று, ஆனுல், ஒன்றின் எல்லையைப் பிறிதொன்று அத்து மீறுமல், ஆனுல், அவசியமேற் படும்போது எழக்கூடிய எத்தகைய நிலைமைகளையும் சமாளிக்க உதவுகிறது. இது, அரசியலமைப்பு செயற்பட்ட முதல் பத் தாண்டுக் காலத்திலேயே தெளிவாக்கப்படுகிறது.

இதற்குமுன் ஏற்பட்ட கூட்டாட்சிகளில் கூட்டாட்சியதிகாரம் எங்ஙனம் மெதுவாகவும் சுற்றிவளைந்த கரடுமுரடான வழியிலும் சிறுகச்சிறுக வளர்ந்தது என்பதை அறிந்திருந்த இந்திய அரசியலமைப்பை ஆக்கியோர் அதைத் தவிர்க்க எவ்வளவு ஆவலுடையவர்களாக இருந்தனர் என்பதைக் கூட்டாட்சி ஏற்பாடுகளைப்பற்றிய சிறந்த அறிவு எடுத்துக்காட்டும். அரசியல் ஒற்றுமைக்காகவும் பொருளாதார ஸ்திர நிலைமைக்காகவும் போராடிக்கொண்டிருக்கும் இந்தியா, தேசிய அரசாங்கத்தின் அதிகாரங்கள் வளர்வதற்கு நீதித்துறைத் தலையீட்டைச் சார்ந்திருக்குமாயின், இக் குறிக்கோள்களை அடைவதில் அது எந்த அளவிற்கு வெற்றி பெற்றிருக்கக்கூடும் என்பதை யாரும் சொல்வதற்கில்லை. இவை இரண்டிலும் அது ஒருகால் தோல்வியுற்றிருக்கவும்கூடும். எதிர்காலத்தில் எழக்கூடிய எதிர்பாராத எந்த நிலைமையையும் சமாளிக்கத்தக்கவாறு அரசியலமைப்பு ஏற்பாடு செய்யவேண்டியிருந்தது. கூட்டாட்சிக் கொள்கைமுறை அடிப்படையில் அதிகாரப் பங்கீட்டை ஏற்படுத்திய அரசியலமைப்பின் தனிப்பெருஞ் சிறப்பு, நாட்டின் அரசியல், பொருளாதார நிலைமைகளின் தேவைகளுக்கேற்ப மாறக்கூடிய நெகிழாத் தன்மையையும் நெகிழுந் தன்மையையும் ஒன்றுசேர்க்கும் அதன் இணையற்ற பெருமையேயாகுமென்று சுருக்கமாகச் சொல்லலாம்.

சட்டத்துறை அதிகாரங்களின் பங்கீட்டு முறை மிக உயர்ந்த அளவிற்கு மத்திய மட்டத்தில் அதிகாரக் குவியபிற்கு வகை செய்கிறது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. எழுதப்பட்ட மூல ஏற்பாடுகளினால் தெரியவரும் அதிகாரப் பங்கீட்டின் தன்மை எத்தகையதாக இருப்பினும், எல்லாக் கூட்டாட்சிகளிலும் காணப்படும் அதிகாரக் குவிப்புப் பொதுப் போக்கைச் சரியானபடி உணர்ந்திருப்பதாலும் கண்கூடான அறிவினாலும் ஏற்பட்ட விளைவு இது என்று சிலரால் போற்றப்படுகிறது. அதேசமயத்தில் சரியான கூட்டாட்சி முறையினின்றும் விலகியும். கூட்டாட்சி அமைப்பில் ஒற்றையாட்சித் தத்துவத்தைத் திணிப்பதற்கான முயற்சியென்று அதை இடித்துரைக்கின்றனர்கள். இவ்விடத்தில், கூட்டாட்சியின் பொருள்பற்றி முன்னமேயே நாம் விவாதித்ததை நினைவுகூர்ந்து எல்லோரும் பின்பற்றத்தக்க வகையில் தயாராகவுள்ள மாறுபாடே இல்லாத கூட்டாட்சி முறையொன்று கிடையாது என்பதையும், எந்தவொரு கூட்டாட்சியும் புனிதத்தன்மை உடையதன்று என்பதையும் எடுத்துக்காட்ட வேண்டும். கூட்டாட்சி அரசாங்கம் எல்லா இடத்திற்கும் எப்போதும் பொருத்தமான சிறந்த அரசாங்கமாக இருப்பதில்லை. அதுவே இறுதி முடிவுமாகாது; அதற்கு மாறாக நல்லரசாங்கம் கிடைக்க உதவும் வழியேயாகும். இருப்பினும், இந்தியாவைப்

போன்ற மாபெரு நாடொன்றில் அளவிற்கதிகமான அதிகாரக் குவிப்பு மத்திய அரசாங்க மட்டத்தில் அதிகார உணர்ச்சிக்கும் அதன் இயக்கத்திற்கும் திடீர்த் தடை ஏற்படக்கூடியதோடல்லாமல் அதைச் சுற்றியுள்ள பகுதிகளில் செயலாற்ற முடியாத ஆபத்தான நிலைமை நடைமுறையில் ஏற்படாதிருக்கும் எனச் சொல்வதற்கில்லை என்று குறைகூறுபவர்களும் இருக்கிறார்கள்.

யூனியன் அரசாங்கம் அதன் தன்மைக்கேற்பப் பல்வேறு இராச்சிய அரசாங்கங்களுடைய நடவடிக்கைகள் ஒரேமாதிரியானவைகளாக இருக்கவேண்டுமென்னும் நோக்கத்தில் மாறுபட்டில்லாமல் அவைகளை ஒன்றுபடச் செய்யவேண்டியது அதன் கடமையாகும். அவ்வாறு அது செய்யாமற்போனால் பிற்போக்குச் சக்திகள் தோன்றிவளரும் அபாயத்தைத் தடைசெய்ய இயலாது. மேலும், மத்திய மட்டத்தில் அதிகாரக் குவிப்பு ஏற்படும் போக்கு இந்தியாவைப் பொறுத்தவரையில் விசித்திரமானதன்று. போர், பொருளாதார மந்தம், சமூகப் பணிகளின் வளர்ச்சி, போக்குவரத்து, தொழில்களில் ஏற்பட்ட இயந்திரப் புரட்சி, திட்டமிடுதல், யூனியனிடமிருந்து இராச்சியங்கள் பெற்ற உதவி, நீதி விளக்கம் ஆகியவைகள் அமெரிக்க ஐக்கிய நாடுகள், கானடா, ஆஸ்திரேலியா, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளில் கூட்டாட்சி அதிகாரத்தை வளர்த்திருக்கின்றன. 'அமெரிக்க அரசியலமைப்பை ஆக்கியவர்களின் மிகத் தீவிரமான நோக்கங்களுக்கும் கொள்கைகளுக்கும் மாறாக அமெரிக்காவில் என்ன என்ன ஏற்பட்டிருக்கிறதோ, கானடாவிலும் ஆஸ்திரேலியாவிலும் என்ன ஏற்படமுடியாதவாறு வட்டார, மாநில எதிர்ப்புகள் தடை செய்தனவோ, அவைகளெல்லாம் இந்தியாவில் சட்டபூர்வமாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன என்று இந்தியத் திறனாய்வாளர் ஒருவர் அரசியலமைப்பைப்பற்றிக் கூறியுள்ளார்.

இருப்பினும், பொதுத்துறையில் இராச்சியங்கள் பெற்றிருக்கும் அதிகாரத்தோடு, அவைகள் மட்டுமே ஏகபோகமாக அதிகாரம் செலுத்தவல்ல அறுபத்தாறு இனங்களையும் சேர்த்துப் பார்க்கின்றபோது, அதிகாரப் பங்கீட்டு முறைத் திட்டத்தின்கீழ் சொற்ப அதிகாரமுடையவைகளாக இராச்சியங்கள் வைக்கப்பட்டிருக்கவில்லை என்பது தெளிவாகும். அதற்கு மாறாக இறைமையதிகாரத்தை இந்திய யூனியனோடு பகிர்ந்துகொள்பவை என்னும் துறையில் பெருமளவிற்கு அவ்விறைமையின் பிரதிநிதிகளாகச் சிறந்த முறையில் செயலாற்றுவதற்குத் தேவையான கணிசமான அதிகாரங்களை அவை பெற்றிருக்கின்றன. எழுத்துக்காட்டாக, பொது சுகாதாரம், கல்வி, விவசாயம், மீன் துறைகள்போன்றவை இராச்சியங்களின் அதிகாரவரம்பில் விடப்பட்டிருப்பதைக் குறிப்பிடலாம். தேசிய அடிப்படையில் இவ்

இனங்களின் முக்கியத்துவத்தை எடுத்துக்கொள்கின்றபோது அவைகளை இராச்சியப் பட்டியலில் சேர்த்த அறிவுடைமையை எவரும் ஐயுறுவர். ஆட்சிமுறையைப்பற்றி ஆராய்ந்த ஒருவர் குறிப்பிட்டதாவது :

'இராச்சிய எல்லைகளைப்பற்றித் தொற்றுநோய்கள் கவலைப்படுவதில்லை. இதுவும் இதுபோன்ற இதர காரணங்களுக்காகவும் தேசிய சுகாதாரம் மென்மேலும் தேசியம் பிரச்சினையாக இருக்கிறது. வேளாண்மை, மீன்துறைகளோ பிரதேசச் சிறப்புடையவைகளாக இருப்பதற்கு மாறாகத் தேசியச் சிறப்புடையவைகளாக இருக்கின்றன. பொதுநல அரசு (welfare state) நோக்கத்தை அடைவதற்குத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டிருக்கும் நாடொன்றில் உணவளித்தல், குடியானவக் குடும்பங்களின் நலன் ஆகியன தட்டமுடியாத அளவிற்குத் தேசியப் பொறுப்புகளாகும். அநேகமாக எல்லாப் பொருளாதார நடவடிக்கைகளும் வட்டாரங்களில் நடைபெற்றாலும், அவை வட்டாரச் சிறப்புடையவைகளாசமாட்டா. தேசிய அரசாங்கம், இராச்சிய அரசாங்கம் ஆகியவற்றின் அதிகாரங்களை மிகக் குறிப்பாகவும் தெளிவாகவும் வரையறை செய்ய எடுத்துக்கொள்ளப்பட்ட அரசியல் சட்டபூர்வமான முயற்சி, நாட்டு மக்களும் நாட்டுப் பொருளாதாரமும் முன்னேறுவதற்கான திட்டங்களின் தேசியத் தேவைகளைப் பெறுவதற்கு மிகப் பெரிய தடையாக இருப்பதாகத் தோன்றும்.' எனினும், இவ்வதிகாரங்களெல்லாம் இராச்சியங்களிடத்திலேயே இருந்துவருகின்றன. அவ்வதிகாரங்கள் இக்காலச் சூழ்நிலைக்கேற்ப எப்பாலுஞ் சாராத அதிகாரப் பங்கீட்டை ஏற்படுத்த முயற்சி செய்கின்ற கூட்டாட்சிமுறையின் சக்திவாய்ந்த அங்கங்களாகச் செய்கின்றன.

# 29. யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே நிர்வாகத் தொடர்புகள்

கூட்டாட்சி முறையொன்றில் இருக்கின்ற மிக முக்கியமான பிரச்சினைகளிலொன்று யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே இருக்கவேண்டிய நிர்வாகத் தொடர்புகளைச் சரியாக அமைப்பதாகும். அரசியலமைப்பில் சரியான ஏற்பாடுகள் இல்லாவிட்டால், இந்தப் பொறுப்புகளை நிறைவேற்றுவதில் இராச்சியங்களும் யூனியனும் கணிசமான இடர்ப்பாடுகளை அடிக்கடி பெறுகின்றன. எனவே, இந்திய அரசியலமைப்புத் தந்தைமார்கள், நிர்வாகத் துறையில் யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே மோதல்கள் ஏற்படுவதைத் தடுக்க விரிவான ஏற்பாடுகளைச் சேர்க்க முடிவுசெய்தார்கள். இங்கு ஏற்றுக் கொள்ளப்பட்ட முறையும் 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்ட அடிப்படையில் ஏற்படுத்தப்பட்ட அமைப்பையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது.

256ஆம் விதிப்படி, ஒவ்வோர் இராச்சியத்தின் நிர்வாக அதிகாரமும், பாராளுமன்றத்தால்இயற்றப்பட்டசட்டங்களுக்கு இணக்கமாக இருக்குமாறு செலுத்தப்படவேண்டும். அல்லாமலும், யூனியன் நிர்வாகம் குறிப்பிட்ட காரியமொன்றின் தேவைக்கேற்ப அவசியமான நெறிகளைத் தனக்குத் தோன்றுமாறு இராச்சியத்திற்குப் பிறப்பிக்க இந்திய அரசாங்கத்திற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. யூனியன் இராச்சியங்களுக்கு நெறிகளைப் பிறப்பிக்கும் கருத்துப் பெரும்பாலான கூட்டாட்சிக்ட்குப் புதியதாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அது ஐயத்தோடும் அவநம்பிக்கையோடும் நோக்கப்படுகிறது. ஆஸ்திரேலியாவிலும் கிட்டத்தட்ட இத்தகைய நிலைமைதான் நிலவுகிறது. இருப்பினும், எவ்வாறு இது நிகழ்முறையில் முற்றிலும் கைவிடப்பட்முடியும் என்பது தெரியவில்லை.

256ஆம் விதியின் குறிக்கோளை விளக்குங்கால், அது இரு பிரேரணைகளை (propositions) நோக்கமாகக் கொண்டிருக்கிற தென்று அம்பேத்கர் கூறினர்.

'முதலாவது பிரேரணை, பொதுத்துறையில் இயற்றப்படும் சட்டங்கள் மத்தியப் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்டிருந் தாலும், இராச்சியச் சட்டசபைகளால் இயற்றப்பட்டிருந்தாலும், அவைகளை நடைமுறைப்படுத்தும் அதிகாரம் பொதுவாக இராச் சியத்தைச் சேர்ந்ததாகுமென்பது. இரண்டாவது பிரேரணை, பொதுத்துறையில் எந்த ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப்பற்றி யாகிலும் இயற்றப்படும் சட்டம், நடைமுறைப்படுத்தப்பட வேண்டிய அதிகாரம் மத்திய அரசாங்கத்திடம் இருக்கவேண்டு மென்று பாராளுமன்றம் கருதுமானல், அதைப் பெறுவதற்கு அதற்கு அதிகாரமிருக்கிறதென்று கூறுகிறது'.

அத்தகைய அதிகாரத்தை மத்திய அரசாங்கம் பெறுவிட் டால், பாராளுமன்றம் இயற்றக் கடமைப்பட்டிருந்த சட்டங் களைச் சரியானமுறையில் நடைமுறைப்படுத்துவதற்கு இயலாமற் போய்விடுமென்றும் அம்பேத்கார் குறிப்பிட்டார். சான்ருக, தீண்டாமை ஒழிப்புச் சட்டம், ஆலைச் சட்டம், பாலியத் திருமண ஒழிப்புச் சட்டம் போன்றவைகளை இங்கெடுத்துக்காட்டலாம்.

'நடு அரசாங்கத்தில் இச் சட்டங்கள் நடைமுறைப்படுத்தப் படாமல் வெறுந் தாள்களாக எழுதிவைக்கப்பட்டவைகளாக இருப்பது விரும்பத்தக்கதாகுமா? தீண்டாமை ஒழிப்பு சம்பந்த மாக மத்திய அரசாங்கத்திடம் அரசியலமைப்பு ஒப்படைத்திருக் கும் பொறுப்பை நிறைவேற்ற, அது சட்டத்தை நிறைவேற்றி விட்டு, இராச்சிய அரசாங்கங்கள் இவ் விஷயம்பற்றிய சட்டங் களை நடைமுறைப்படுத்துவதற்காக என்ன செய்கின்றன என் பதைக் கைகளைக் கட்டிக்கொண்டு மௌனமாக இருக்கவேண்டு மென்பது நியாயமானதும் பிரத்தியட்சமானதுமாகுமா?'

இராச்சியங்கட்கு நெறிகள் (directions) பிறப்பிக்க யூனிய னுக்கு இருக்கும் பொது அதிகாரத்தோடுமட்டும் திருப்தியடை யாமல், மேலும் ஒரு படி சென்று, இராச்சியத்தில் யூனியனுக்கு இருக்கும் நிர்வாக அதிகாரத்தைத் தடுக்கவோ குலைக்கவோ வேண்டாமென்று ஒவ்வோர் இராச்சியத்தையும் அரசியலமைப்பு பணிக்கிறது. (257ஆம் விதிப்படி) யூனியனைச் சேர்ந்த ஏதேனு மோர் ஏஜென்சி, ஓர் இராச்சியத்தினுள் பணியாற்றுவதற்கு இடர்ப்பாடு இருப்பதாகக் கருதும்போது, யூனியன் நிர்வாகம் இராச்சிய அரசாங்கத்திற்குத் தடைகளெல்லாவற்றையும் அகற்று மாறு உத்தரவு பிறப்பிக்க அதிகாரம் தரப்பட்டிருக்கின்றது.

உத்தரவு பிறப்பிக்க இத் துறையில் யூனியனுக்கு இருக்கும் அதிகாரம் கீழே குறிப்பிட்ட சில வரையறை செய்யப்பட்ட விஷயங்களையும் கொண்டதாகும்:

(1) தேசிய அல்லது இராணுவ முக்கியத்துவம் பெற்ற போக்குவரத்துச் சாதனங்களை அமைப்பதும் அதை நிர்வகிப்பதும்.

(2) இராச்சியத்தினுள் ரெயில்வேக்களைப் பாதுகாப்பது, இவ் உத்தரவுகளைப் பிறப்பிக்கும் அதிகாரம், பாராளுமன்றம், நெடுஞ்சாலைகள் (highways) அல்லது நீர்வழிகளை, தேசியச் சிறப்புடையவைகளை அறிவிப்பதற்குப் பெறும் அதிகாரத்தையோ, அல்லது கடல், தரை, விமானப் படைகளின் வேலைகளுக்குத் தேவையான போக்குவரத்துச் சாதனங்களை அதனுடைய கடமைகளுள் ஒன்றாக அமைக்கவும் பராமரிக்கவும் யூனியனுக்கு இருக்கும் அதிகாரத்தையோ எவ் வழியானும் பாதிக்கவில்லை.

மத்திய அரசாங்கத்தினால் பிறப்பிக்கப்படும் தனி உத்தரவுகள் சம்பந்தப்பட்ட வேலைகளைச் செய்கின்ற காரணத்தால், இராச்சியங்கள் சாதாரணமாகச் செலவழிக்கும் தொகையைக் காட்டிலும் சற்று அதிகமாகச் செலவழிக்கவேண்டியதிருக்கும். அத்தகைய வேலைகளை ஏற்றுக்கொண்டதற்காக இராச்சியங்கட்கு ஏற்படும் அதிகச் செலவைச் சரிக்கட்ட அரசியல் அமைப்பு ஏற்பாடு செய்கிறது. இவ்வேற்பாட்டின்படி கொடுக்கப்பட வேண்டிய தொகைபற்றி இராச்சியங்களோடு உடன்பாடு செய்துகொள்ள யூனியன் கடமைப்பட்டிருக்கின்றது. ஆனால், சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்கள் உடன்பாடொன்றிற்கு வரத் தவறுவார்களானால், அவ் விஷயம் இந்தியத் தலைமை நீதிபதியால் நியமிக்கப்பட்ட நடுவர் (arbitrator) ஒருவரிடம் விடப்படும். அத்தகைய நடுவர் அதிகமாகச் செலவான தொகையைத் தீர்மானிப்பார். அத் தொகையை யூனியன் சம்பந்தப்பட்ட இராச்சியதிற்குக் கொடுத்து ஈடுசெய்யவேண்டும்.

யூனியன் நிர்வாகம் இராச்சிய அரசாங்கத்தின் இசைவைப் பெற்று, அவ்வரசாங்கத்திடமோ அல்லது அலுவலர்களிடமோ யூனியன் நிர்வாகத்தின்கீழ் வருகின்ற பணிகளைச் செய்யுமாறு ஒப்படைப்பதற்கு அரசியலமைப்பு அதிகாரம் வழங்குகின்றது. இங்ஙனமே, பாராளுமன்றமும் இராச்சியமொன்றில் நடைமுறைப்படுத்தவேண்டிய சட்டங்களை நிறைவேற்றிவைக்க, இராச்சிய அலுவலர்கட்கு அதிகாரங்கள் அளிக்கவோ, அல்லது பொறுப்புகளைச் சுமத்தவோ அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. யூனியன் அரசாங்கம் இராச்சிய அரசாங்கத்திற்கு அத்தகைய பணிகளை இராச்சியமோ அல்லது அதனுடைய அலுவலர்களோ

நிறைவேற்றியதற்காக ஆன தொகையைத் தரும். இங்கும் ஏதாவது சச்சரவேற்படுமாயின், இந்தியத் தலைமை நீதிபதியால் நியமிக்கப்பட்ட நடுவர் ஒருவரால் அது தீர்த்துவைக்கப்படும்.

260ஆம் விதிப்படி, இந்திய அரசாங்கம் அயற்பிரதேச மொன்றில், அப் பிரதேச அரசாங்கத்தோடு செய்துகொள்ளப் படும் உடன்பாட்டு அடிப்படையில் நிர்வாகம், சட்டம் அல்லது நீதிப்பணிகளைச் செய்ய ஏற்றுக்கொள்ளலாம். அத்தகைய உடன்பாட்டின் ஏற்பாடுகள் அயல் அதிகார வரம்பெல்லையைச் செலுத்துவதற்காக இயற்றப்பட்ட சட்டங்களின்கீழ் வருவதால், யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையிலான சாதாரண நிர்வாகத் தொடர்புகள்பற்றிய ஏற்பாடுகளின்கீழ் அவை வரமாட்டா. இவ்வேற்பாட்டின் அவசியம், இந்திய யூனியனின் பூகோள எல்லைக்குட்பட்ட இடங்களில் அயல்நாடுகட்குச் சொந்தமாக இருக்கும் பிரதேசங்களினுல் தெளிவாகிறது. அது சாத்தியமானதே. ஏனெனில், பாண்டிச்சேரியைப் போன்ற விஷயங்களில் இறைமையதிகாரம் சட்டசம்பந்தமாக (de jure) மாற்றப்படும்வரையிலும் இப் பகுதிகளில் ஏதேனுமொன்றின் கட்டுப்பாடு நிகழ்முறையில் (de facto) இந்தியஅரசாங்கத்திடம் விடப்படலாம். அத்தகைய காலங்களில், இப் பிரதேசங்கள், இவ்விதியில் காணப்படும் ஏற்பாடுகட்கிணங்க ஆட்சி செய்யப் படும்.

சுமுகமான முறையில் நிர்வாக வேலை நடைபெறுவதற்கு உதவியாக இருக்கும் பிறிதோர் ஏற்பாடு 261ஆம் விதியில் காணப்படுகிறது. இதன்படி, இந்தியப் பகுதிகளெங்கும் யூனிய னுடையவும் இராச்சியங்களுடையவும் பொதுச் சட்டங்கள், பதிவேடுகள், நீதி நடைமுறைகள் ஆகிய எல்லாவற்றிற்கும் முழு நம்பிக்கையும் கவனமும் தரப்படவேண்டும். இச் சட்டங்களும் பதிவேடுகளும் எம்முறையில் நிரூபிக்கப்படவேண்டும் என்பதும், அவற்றின் விளைவும் பாராளுமன்றச் சட்டங்களால் ஏற்படுத்தப் படும். சிவில் நீதிமன்றங்களால் இறுதியாக அளிக்கப்பட்ட தீர்ப்புகள் அல்லது நிறைவேற்றப்பட்ட உத்தரவுகள், இந்தியா வின் எப் பகுதியிலும் நடத்திவைக்கப்படுவதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

இராச்சியங்களுக்கிடையே ஓடும் ஆறுகளின் நீர், ஆற்றுப் பள்ளத்தாக்குகள்பற்றியும் எடுத்துரைக்கும் முக்கிய ஏற்பா டொன்றை அரசியலமைப்பு 262ஆம் விதியில் உடையதாக இருக்கிறது. இவ் விஷயம்பற்றி இதர கூட்டாட்சிகளில், குறிப் பாக அமெரிக்க ஐக்கிய நாடுகளில், இராச்சியங்களுக்கிடையே ஏற்படும் முடிவில்லாச் சச்சரவுகளினுல் எச்சரிக்கை அடைந்தவர்

களாக அரசியலமைப்புக் கர்த்தாக்கள், இவ் விஷயம்பற்றிக் கவனிக்கும் அதிகாரம் பாராளுமன்றத்திடமே பூரணமாக இருக்கவேண்டுமெனத் தீர்மானித்தார்கள். இவ்வாறு பாராளு மன்றம் சட்டம் செய்வதன்மூலமாக, பல இராச்சியங்களுக் கிடையே ஓடும் ஆறு எதுவாக இருப்பினும் அதன் நீரின் உபயோகம் அல்லது விநியோகம் அல்லது கட்டுப்பாடுபற்றியும், பல இராச்சியங்களுக்குப் பொதுவான ஆற்றுப் பள்ளத்தாக்கு பற்றியும் ஏற்படும் எந்தச் சச்சரவானாலும், புகாரானாலும், அதை நடுவர் தீர்ப்புக்கு விடமுடியும். அத்தகைய புகார் அல்லது சச்சரவுபற்றி உச்ச நீதிமன்றமோ அல்லது வேறு ஏதாவதொரு நீதிமன்றமோ அதிகாரம் செலுத்த முடியாதவாறும் பாராளுமன்றம் செய்யலாம். இவ்வேற்பாட்டின் முக்கியத் துவம், நாட்டின் பல்வேறு பாகங்களிலும், தாமோதர் பள்ளத் தாக்குபோன்ற பன்னோக்க, பல இராச்சியங்களுக்குப் பொது வான பல திட்டங்கள் ஏற்று நடத்தப்பட்டுவருவதனின்றும் தெளிவாகும்.

கடைசியாக, நாடு முழுவதற்குமான நிர்வாக இயந்திரம் சுமுகமாக இயங்கவும், யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடை யேயும் இராச்சியங்கள் ஒவ்வொன்றிற்குமிடையேயும் சிறந்த கொள்கை இணக்கம் ஏற்படுவதை உறுதி செய்யவும் தேவை என்று உணரப்படுகின்றபோது, பல இராச்சியங்களுக்குப் பொதுவானதொரு குழுவை (Inter-state Council) நியமிக்க ஜனாதிபதிக்கு அரசியலமைப்பு அதிகாரம் தருகிறது. அக் குழு பின்வரும் அறுதியிட்டுச் சொல்லப்படும் மூன்று கடமைகளைச் செய்யவேண்டியதாகும்:

(1) இராச்சியங்களுக்கு இடையே ஏற்பட்டிருக்கக்கூடிய சச்சரவுகளை விசாரணை செய்வதும் ஆலோசனை சொல்வதும்.

(2) இராச்சியங்களோ அல்லது யூனியன், இராச்சியங்கள் ஆகியவையோ பொதுவாக அக்கறை உடையவைகளாக இருக் கின்ற பொருள்கள்பற்றிப் புலன் விசாரணை செய்வதும் விவாதிப் பதும்.

(3) இவ் விஷயங்கள்பற்றிய சிபாரிசுகளை, குறிப்பாகச் சிறந்த கொள்கை இணக்கத்திற்கும் நடப்பிற்கும் தேவையான சிபாரிசுகளைச் செய்வதாகும்.

அத்தகைய கவுன்சிலொன்றை ஏற்படுத்துவதற்குமட்டுமல் லாமல் அதனுடைய அமைப்பு நடைமுறைகளையும், கடமை களின் தன்மையையும் வரையறுக்கவும் ஜனாதிபதி அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறார். இதுகாறும் அத்தகைய கவுன்சிலொன்று ஏற்படுத்தப்படவில்லை.

யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே உள்ள சட்ட, நிர்வாகத் தொடர்புகளை ஆய்கின்றபோது, அரசியலமைப்பின் அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் கூட்டாட்சி முறை, அதைப்போன்ற இதர முறைகளைப்போன்று, பன்மையில் ஒருமை (unity in diversity) என்னும் அடிப்படைக் குறிக்கோளை அடைய முயல்கிறதென்பது விளங்கும். அரசாங்கங்களின் முக்கியமான எல்லாத் துறைகளிலும் ஆட்சிப்பிரிவை அடிப்படையாகக் கொண்ட இரட்டையாட்சியாகக் (dual polity) கூட்டாட்சி ஒன்றிருப்பதால், சட்டங்களிலும், நிர்வாகத்திலும், நீதிப்பாதுகாப்பிலும் பலவகைகளைத் தவறாமல் ஏற்படுத்தும் வட்டாரத் தேவைகளுக்கும் சூழ்நிலைக்கும் தகுந்தாற்போல் அரசாங்கத்தின் அதிகாரங்களை அமைத்துக்கொள்ளச் செய்யப்படும் முயற்சி என்ற வகையில், குறிப்பிட்ட ஓரளவுவரையிலும் இப் பன்மைநிலை வரவேற்கப்படவேண்டும். ஆனால், குறிப்பிட்ட ஓர் எல்லைக் கப்பால் செல்கின்றபோது அது குழப்பத்தை ஏற்படுத்தவல்லதாகும். உண்மையிலேயே அது பல கூட்டாட்சி அரசுகளில் குழப்பத்தை ஏற்படுத்தியிருக்கிறது. இந்திய அரசியலமைப்புத் தந்தைமார்கள், பேராசிரியர் டைசி (Professor Dicey) குறிப்பிட்டதுபோல், சட்டவாதத் தன்மையின் ஆதிக்கம், பலவீனமான அரசாங்கம் என்ற அபாயங்களை ஏற்படுத்தக்கூடிய அதற்கே உரிய இயல்புகளையுடைய கூட்டாட்சி முறையை அறிந்திருந்தனர். இந்தியாவில் அதிகார மாற்றம் ஏற்பட்டபோதும், அதற்குப் பிறகும் இருந்த நிலைமைகள் அதிகாரத்திலிருந்தோர் தேசிய ஒற்றுமைக்காக ஒரு நூற்றாண்டுக் காலமாக எடுத்துக் கொண்டிருந்த முயற்சி, ஒற்றுமையைப் பாதுகாப்பதற்குத் தேவையான போதுமான தனிப் பாதுகாப்புகள் இல்லாத கூட்டாட்சியமைப்பு ஒன்றில் பயனற்றுப்போகுமென்று பயந்தனர்.

அதே சமயத்தில், கூட்டாட்சி முறையொன்றை ஏற்படுத்தும் கருத்தை அடியோடு கைவிட்டுவிடுவது அரசியல் ரீதியாக விவேகமற்றதாகவும், நிகழ்முறை சாத்தியமற்றதாகவும் இருந்திருக்கும். அல்லாமலும், மிக அதிகமான பரப்பளவுள்ள பிரதேசங்கள் ஒரு தேசிய அரசாங்கத்தின்கீழ்க் கொண்டுவரப்படும்போது, கூட்டாட்சித் தத்துவமென்பது ஒன்றுதான். அவைகளையெல்லாம் ஒருங்கிணைக்கப்பட்ட முறையில் விருப்பத்தோடு கலந்துகொள்ளும் உறுப்பினர்களாக ஒன்றுசேர்க்க முடியுமேயல்லாது, இதர முறைகளால் முடியாதென்பதாக இருக்கலாம். தன்னைத் தானே ஆட்சிசெய்யவும், சுதந்திரமாக இருக்கவும் அதிகாரம் தேடும் உணர்வு. மானிட சமுதாயம் எப்போது தோன்றியதோ அப்போதிலிருந்து ஏற்பட்டதாகும். எந்த உருவத்திலும் மற்றவர்

களைச் சார்ந்திருப்பது, அதனோடு தொடர்புடைய நன்மைகள் பற்றிய சிந்தனையில் நிறைவு செய்யப்படவேண்டியிருக்கிறது. பாதுகாப்பற்ற சுதந்திரம் நீடித்திருக்கமுடியாது. ஆகையால், கூட்டாட்சி யூனியன் ஒன்றை ஏற்படுத்துகின்றபோது, பிரதான மாகப் பரிசீலிக்கப்படுவது, சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள் வதற்கு இருக்கும்|உணர்வாகும். எல்லாவற்றிற்கும் மேலான இத் தகைய பரிசீலனையும் தெளிவற்றதாக இருந்தது. ஆனால், அடிப் படையான பண்பாட்டொற்றுமையுமில்லாமற்போனால்,இந்தியா வியக்கத்தக்கதொரு பன்மைச் சமுதாயமாகக் காட்சிதரும். அது கிட்டத்தட்ட ருஷ்யா நீங்கலாக ஐரோப்பாவின் பரப்பளவு எவ்வளவோ அவ்வளவு பரப்பளவையும், ஐரோப்பா முழுவதிலு முடைய மக்கள்தொகையினுமதிகமான மக்கள்தொகையையும் பெற்றிருக்கிறது. இந்தியாவில் நன்கு முன்னேற்றமடைந்த மொழிகளின் எண்ணிக்கை, மேற்கு மத்திய ஐரோப்பா முழுவதி லுமுள்ள மொழிகளின் எண்ணிக்கையைக்காட்டிலும் அதிக மானது. இன, பண்பாட்டு வேறுபாடுகளோ, ஐரோப்பாக் கண்டத்திலிருப்பதைக்காட்டிலும் திட்டவட்டமானவை களாக (pronounced) இருக்கின்றன. இத்தகைய சூழ்நிலைகளில், சுதந்திர வேட்கையையும், தலையாய பாதுகாப்புத் தேவையை யும் நிறைவுபடுத்தக்கூடிய ஒரு கூட்டாட்சி அரசியலமைப்பு முறையை ஏற்படுத்துவது அவ்வளவு சுலபமாக இல்லை. இவ்விரு குறிக்கோள்களையும் நிறைவுபடுத்துகின்ற முயற்சியில், அரசியலமைப்புக் கர்த்தாக்கள், இதர கூட்டாட்சிகளில் சாதா ரணமாகக் காணப்படாத பல சிறப்பம்சங்களைக்கொண்ட ஒரு கூட்டாட்சி அமைப்பைத் தீட்டினார்கள்.

இச் சிறப்பம்சங்களில் பெரும்பாலானவற்றை நாம் பல இடங்களில் விவரித்திருக்கிறோம். இந்தியக் கூட்டாட்சியை ஈடு இணையற்ற கூட்டாட்சியாகச் செய்யும் இச் சிறப்பம்சங்களின் தெளிந்த கருத்தைப் பெறும் வகையில் அவைகளை இவ்விடத்தே ஒருங்கே காண்பது மிகவும் பொருத்தமாக இருக்கும்.

(1) யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையேயான அதிகாரப் பங்கீடு, வேறு எக் கூட்டாட்சியாலும் முயற்சி செய்யப் படாத அளவிற்கு மிக விரிவானதாக இருக்கின்றது. அதிகாரங் கள்பற்றிய பொதுப்பட்டியல் கருத்துப்புதிதன்று; எனினும்,வேறு எந்த அரசியலமைப்பும் அதில் வரும் இனங்களை அத்தகைய விரி வான புள்ளிவிவரங்களோடு எடுத்துக்கூறவில்லை. யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே ஏற்படக்கூடிய வழக்குகளையும், பல் வகையான நீதிமன்றங்களையும், நடைமுறைகளையும் இயன்ற அளவிற்கு அகற்றும் நோக்கோடும் அதனில் வேறு எந்த அரசிய

5

அமைப்பும் பலதிறப்பட்ட விஷயங்களைச் சேர்க்கவில்லை. எச்ச அதிகாரங்கள் யூனியனுக்குத் தரப்பட்டிருக்கின்றன.

(2) சாதாரணமாகக் கூட்டாட்சியமைப்பில் இராச்சியங்கள் யூனியன் அரசியலமைப்பினின்றும் தனிப்பட்ட அரசியலமைப்புகளைப் பெறுகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இம் முறையே இருக்கிறது. அதற்கு மாறாக இந்திய அரசியலமைபபு, யூனியனுக்கான அரசியலமைப்போடுமட்டுமல்லாது இராச்சியங்களுக்கான அரசியலமைப்புகளையும் கொண்டதாக இருக்கிறது. மேலும், இந்திய யூனியனிலுள்ள இராச்சியங்கள் ஒரேமாதிரியான அரசியலமைப்பைப் பெறுகின்றன. யூனியன், இராச்சியங்கள் ஆகிய இரண்டின் அரசியல் அமைப்பை மாற்றுவதற்கான நடைமுறையும் ஒரே மாதிரியானதாகும்.

(3) இந்தியக் கூட்டாட்சியில், அரசியலமைப்பை மாற்றுவதற்கு ஏற்படுத்தப்பட்டுள்ள நடைமுறையைப் பின்பற்றாமல், இராச்சியங்களின் பிரதேச அதிகார வரம்பை மாற்றவும், இருக்கின்ற இராச்சியங்களை ஒழித்துப் புதிய இராச்சியங்களை ஏற்படுத்தவும் முடியும் (விதி 3). அதாவது, இப்போது நடைமுறையிலிருக்கும் பிரதேச அடிப்படைக் கூட்டாட்சியமைப்பு, மிகக் கடினமாகவிருக்கும் மாற்றமுறை அடிப்படையிலான அரசியலமைப்பு மாற்றம் கொண்டுவரப்படாமலே, தேவையான மாறுதல்களோடு திருத்தி அமைக்கப்படலாம்.

(4) கூட்டாட்சியின்கீழ் ஏற்படுத்தப்படும் இரட்டை அரசாங்கத்தின் வழக்கமான அம்சம் இரட்டைக் குடியுரிமையாகும். இதன் பயனாக, ஒவ்வோர் உறுப்பரசும், அதன் குடிமக்களுக்கு அல்லது குடிவாழ்பவர்களுக்கு வழங்கும் சில உரிமைகளைக் குடிவாழாதவர்கட்கு (non-residents) மறுக்கலாம் அல்லது மிகக் கடுமையான நிபந்தனைகள் அடிப்படையில் வழங்கலாம். அமெரிக்கக் கூட்டாட்சியின் ஆரம்பகாலத்தில் இது ஒரு முக்கிய அம்சமாகும். காலப்போக்கில் இரட்டைக் குடியுரிமையின் கடுமை குறைந்துள்ளது. இன்னும் அக் கருத்து கூட்டாட்சிமுறை அரசாங்கத்தோடு சம்பந்தப்படுத்தப்படுகிறது. ஆனால், அதற்கு இந்தியாவில் இடங்கிடையாது. அரசியலமைப்பு ஒற்றைக் குடியுரிமையை ஏற்படுத்துகிறது. இந்தியர்கள், எங்குக் குடியிருந்தாலும் சட்டத்தின்முன் சமமாக நடத்தப்படுகிறார்கள்.

(5) இரட்டைக் குடியாட்சி முறை சில கூட்டாட்சிகளில் இரு நீதித்துறை அமைப்பை ஏற்படுத்துகின்றது. உதாரணமாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டாட்சி நீதித் துறையோடு தொடர்பில்லாத, ஒருங்கிணைக்கப்படாத நீதித்துறை அமைப்புகளை இராச்சியங்கள் ஏற்படுத்திக்கொண்டிருக்கின்றன. ஏறத்

தாமு இதே முறையை ஆஸ்திரேலியாவும் பின்பற்றுகிறது. ஆனால், இந்தியாவில் உச்ச நீதிமன்றமும் உயர் நீதிமன்றங்களும் ஒருங்கிணைப்பட்டதொரு நீதித்துறை முறையிலுள்ளன. அவை கள் ஒரே மாதிரியான அரசியலமைப்பு, சிவில், கிரிமினல் சட்டங் களின்கீழ் ஏற்படும் வழக்குகளின் மேல் அதிகாரவரம்புடையவை களாக உள்ளன. சிவில், கிரிமினல் சட்டங்கள் தொகுக்கப்பட்டு நாடு முழுவதற்கும் செல்லுபடியாகக்கூடியவைகளாக ஆக்கப்பட் டிருக்கின்றன. அவை ஒரேமாதிரியாக இருப்பதற்காகப் பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

(6) இந்தியக் கூட்டாட்சி முறையின் முக்கியச் சிறப்பம்சம், மாறும் சூழ்நிலைகட்கேற்ப மாற்றிக்கொள்ளும் திறமையை உடையதாக இருப்பது. இது, பொதுவாகக் கூட்டாட்சி அரசிய லமைப்புகளோடு தொடர்புபடுத்தப்படும் நெகிழாத் தன்மையி னின்றும் மாறுபட்டது. சாதாரணமாக, இந்திய அரசியலமைப்பு கூட்டாட்சியாக இருக்கவேண்டுமென்று கருதப்பட்டது. ஆனால், நெருக்கடிக் காலத்தில் அது ஒருமுக ஆட்சியின் தன்மையை அடைய முடியும். இம் மாற்றம் சிக்கலான அரசியலமைப்பு முறை எதையும் ஏற்படுத்துவதில்லை.

(7) சாதாரண காலத்தில்கூடச் சில விசேஷ அதிகாரங்களை யூனியன் அரசாங்கத்திற்கு அரசியலமைப்பு தருகிறது. இவ்வாறு மூன்றிலொரு பங்கு உறுப்பினர்களால் ஆதரிக்கப்பட்டு,இராச்சிய சபையால் நிறைவேற்றப்பட்ட தீர்மானமொன்று இராச்சியப் பட்டியலில் இடம்பெற்றிருக்கும் இனங்களில் எதையும் யூனியன் பட்டியலுக்கு மாற்றித் தேசிய நலனுக்காக அத்தகைய இனங் களுக்காகப் பாராளுமன்றம் சட்டங்கள் இயற்ற வகைசெய்ய முடியும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட இராச்சியங்கள் கேட்டுக்கொள்கிறபோது, இராச்சியப் பட்டியலிலுள்ள இனங் கள்பற்றியும் பாராளுமன்றம் சட்டங்கள் இயற்ற அது வகைசெய் கிறது.

(8) இராச்சியங்களின் தலைவர்கள்—கவர்னர்கள்—ஜனாதிபதி யால் நியமிக்கப்படுகிறார்கள். அவர்கள் அவருடைய நல்லெண் ணத்தைப் பெறும்வரை பதவி வகிக்கிறார்கள்.

(9) நிர்வாகம் ஒரேமாதிரியுள்ளதை உறுதி செய்யவும், கூட்டாட்சிக் கொள்கைக்குக் குந்தகமேற்படாமல் குறைந்தபட்ச நிர்வாகத் தரங்களை ஏற்படுத்தவும் அரசியலமைப்பு சில விசேஷ அம்சங்களைப் பெற்றிருக்கிறது. இவற்றில் இந்திய நிர்வாக போலீஸ் பணித்துறைகளைப்போன்ற அகில இந்தியப் பொதுப்

பணித்துறைகளை ஏற்படுத்தலும், இத் துறைகளைச் சேர்ந்த உறுப்பினர்களை இராச்சியங்களின் முக்கியமான நிர்வாகப் பதவிகளில் நியமித்தலும் அடங்கும்.

(10) உயர்நீதிமன்றங்கட்கான நியமனங்கள் ஜனாதிபதியால் செய்யப்படுகின்றன. உயர் நீதிமன்ற நீதிபதிகள், ஓர் உயர்நீதிமன்றத்தினின்றும் பிறிதொன்றிற்கு ஜனாதிபதியால் மாற்றப்படலாம்.

(11) மத்தியப் பணித்துறையான இந்தியத் தணிக்கை, கணக்குத் துறையைச் (Indian Audit and Accounts Service) சேர்ந்த அலுவலர்களால் நிர்வகிக்கப்படும் நிறுவனமொன்றை இந்தியக் கன்ட்ரோலர் ஆடிட்டர் ஜெனரல் பெற்றிருக்கிறார். இவர்கள் யூனியன் அரசாங்கக் கணக்குகளைத் தணிக்கை செய்வதோடு மட்டுமன்றி இராச்சியங்களின் கணக்குகளையும் தணிக்கை செய்கிறார்கள்.

(12) ஜனாதிபதியால் நியமிக்கப்பட்ட தேர்தல் குழு பாராளுமன்றத்திற்கான தேர்தல்களையும், யூனியனின் தேர்ந்தெடுக்கப்படவேண்டிய அலுவலகங்களுக்கான தேர்தல்களையும் நடத்தப் பொறுப்பேற்பதோடு, இராச்சிய சட்டசபைகளுக்கான தேர்தல்களை நடத்துவதற்கும் பொறுப்பேற்கிறது.

(13) இராச்சிய சட்டசபைகளால் நிறைவேற்றப்பட்ட ஒவ்வொரு மசோதாவும் சாதாரணமாக கவர்னரின் இசைவோடு சட்டமாகுலும், சில மசோதாக்கள் ஜனாதிபதியின் இசைவிற்கு ஒதுக்கப்படவேண்டும். ஜனாதிபதியின் இசைவுபெற்ற பின்னரே அத்தகைய மசோதாக்கள் சட்டமாக முடியும்.

(14) இராச்சியங்கட்கு யூனியன் உதவி மானியங்களும் கடன்களும் தருவதற்குச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடு, யூனியன் இராச்சியங்களைத் தன் விருப்பப்படி நடக்கச் செய்வதற்கு இருக்கும் சக்தியும் அரசியலமைப்பின் சிறப்பம்சமாகும்.

(15) யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே ஏற்படும் சச்சரவுகளைத் தீர்த்துவைப்பதற்கு யூனியனிடமும், அதனுடைய ஏஜென்சிகளிடமும் அரசியலமைப்பு அதிகாரம் வழங்குகிறது. நிதிக் கழகம் (Finance Commission), பல இராச்சியக் குழு (Interstate Council) போன்றவைகள் இத்தகைய ஏஜென்சிகளுக்குச் சான்றுகளாகும்.

(16) இறுதியாக, அரசியலமைப்பு மாற்றங்கூட, மற்றவைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இந்தியாவில் எளிய

முறையை உடையதாக இருக்கிறது. இது கூட்டாட்சி அரசியலமைப்பின் நெகிழுந் தன்மையை வற்புறுத்துகிறது. முடிவாகச் சொல்லவேண்டுமானால், அரசியலமைப்பு ஒன்றிற்கு இருக்கும் சோதனை அது எவ்வாறு இயங்குகிறதென்பதேயாம். இயங்குகின்றபோது எந்த வகையிலும் அது குறையுடையதாக இருக்குமானல், அது மாற்றி அமைக்கப்படவேண்டும். இதற்காக, மாற்றம்பற்றிய முறை சுமாராக எளியதாகவும் சுலபமானதாகவும் இருக்கவேண்டும்.

அப் பட்டியல் வியப்பேற்படக்கூடிய வகையில் ஒரு பெருஞ் சாதனையாக உள்ளது. அநேகமாக ஒவ்வொரு பட்டியலும் யூனியனின் மேலாதிக்கத்தையும், இராச்சியங்களைக் கட்டாயமாக ஒழுங்குபடுத்துவதற்கான அதிகாரத்தையும் தருகிறது. அத்தகைய மேலான அதிகாரங்களையுடைய யூனியனைக் கூட்டாட்சி என்று சொல்லமுடியுமா? முன்பே எடுத்துக்காட்டப்பட்ட அரசியலமைப்புத்திறனாய்வாளர்களின் கருத்துகளும் இவ்விடத்து உண்மையாகத் தோன்றும். கடந்த பத்தாண்டுக் காலத்தில் இந்தியாவில் இராச்சியங்கள் செயலாற்றிவந்த தன்மையைக் கவனிக்கும்போதும், அவைகளினுடைய துறையில் அலுவல்களைக் கவனிக்க அவை பெற்றிருந்த சுதந்திரத்தையும் கவனிக்கும் போதும் முடிவு வேறு மாதிரியாக இருக்கும். அவசரகால அதிகாரங்களடிப்படையில் சில இராச்சியங்களின் நிர்வாக அதிகாரத்தைக் குறுகிய காலங்கட்கு மத்திய அரசாங்கம் எடுத்துக் கொண்டதும், அரசியல் ஸ்திர நிலைமையில்லாத காரணத்தால் ஏற்படமுடியாமல் இருந்த பொறுப்புள்ள அரசாங்கத்தை அவ் இராச்சியங்களில் ஏற்படுத்துவதற்கேயாகும். 249ஆம் விதியின்கீழ் இராச்சியப் பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கும் துறையில் யூனியன் சட்டமியற்றியது. 1951ஆம் ஆண்டில் நாடெங்கிலும் உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டதால்தான், அத்தகைய சட்டம் நாட்டின் பொருளாதார நன்மையைக் கருதி இயற்றப்பட்டதாகும். ஆனல், அச் சட்டம் மிகக் குறுகிய காலத்திற்கே செயற்பட்டது. பற்றாக்குறை நிலைமைகள் அகன்றதும், இராச்சியங்கள் இத் துறையில் அவைகளினுடைய அதிகாரங்களைத் திரும்பப்பெற்றன.

செயற்பட்டுவரும் அரசியலமைப்பைப்பற்றிய குறிக்கோளை அடிப்படையாகக் கொண்ட ஆராய்ச்சியில் இந்திய யூனியனிலிருக்கும் இராச்சியங்களில் முழு அளவிலான பாராளுமன்ற அமைச்சவையாட்சி நிகழ்முறையில் பணியாற்றுகிறதென்பது தெரியவரும். பேராசிரியர் அலெச்சாண்ட்ரோவிச்சு, "வட்டார சட்டசபை ஒன்றிற்கு முழுப் பொறுப்புள்ள வட்டார நிர்வாகக்

குழு வட்டார உள்ளிறைமையை உறுதிசெய்கிறது. இறைமை என்பது அதிகாரப் பங்கீட்டினால் வரையறுக்கப்பட்டிருந்தாலும், அரசுத் தன்மை என்று பொருள்படும். வட்டார அரசுகள் சில சமயங்களில் மத்திய அரசினுடைய கொள்கைக்கேற்பவும், சில சமயங்களில் அவ்வாறில்லாமலும் வட்டாரத்திற்கேற்ற கொள்கைகளைப் பின்பற்றுகின்றன. இது நிர்வாகக் கூட்டாட்சிகளில் மத்திய அரசாங்கத்தின் வழியையும் கொள்கையையும் எப்போதும் பின்பற்றும் வட்டாரப் பகுதிகளின் தன்மையினின்றும் வேறுபடுத்திக் காட்டுகிறது. அரசிற்கு இருக்க வேண்டிய சிறப்புகளை மத்திய அரசும் மாநில அரசுகளும் பகிர்ந்துகொள்ளும் கூட்டாட்சியாக இந்தியா இருக்கிறதென்பதில் சந்தேகமில்லை. தெளிவற்ற 'கூட்டாட்சியைப் போன்ற' (quasi-federal) என்னும் பெயரில் இந்தியாவை விளக்குவதைக் காட்டிலும் நிர்வாகக் கூட்டாட்சிகளினின்று (administrative federations) அதைப் பிரித்து, இறைமையதிகாரம் சரிநேராகப் பிரிக்கப்பட்டிருக்கும் கூட்டாட்சியென்று அதைக் கூறுவது பொருத்தமுடையதாகும். மேலும், வட்டார அரசுகளின் (local states) தன்மை இரு விஷயங்கள் காரணமாக பலப்படுத்தப்பட்டுள்ளது. ஒன்று, பல இராச்சியங்களில் எதிர்க்கட்சிகளினால் கூட்டரசாங்கங்கள் (coalition governments) ஏற்படுத்துவதோடு தொடர்புடையது. இரண்டாவது, மொழி அடிப்படையில் யூனியனைச் சீரமைப்பதோடு சம்பந்தப்பட்டது'' என்று குறிப்பிடுகின்றார்.

நிர்வாகக் கருத்தடிப்படையில் கூட்டாட்சி முறை எவ்வாறு இயங்குகிறது என்பதைப்பற்றியும், எதிர்காலத்திற்கு எத்தகைய போக்கை அது குறிப்பிடுகிறது என்பதைப்பற்றியும் இந்திய நிர்வாக முறையை அறிந்த பால் ஆப்பில்பியின் (Paul Appleby) சில சிறந்த கருத்துரைகள் கீழே தரப்பட்டுள்ளன:

'இந்தியாவின் புதுத் தேசிய அரசாங்கம் இதர எந்தப் பெரிய முக்கியமான நாட்டோடும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அதனுடைய தலைமையின் தன்மையைத் தவிரத் தேசிய நலன் ஏற்படுவதற்கு அவசியமான திட்டங்களைத் தீட்டி நடைமுறைப் படுத்துவதற்கு அவசியமான உறுதி தேவையென்று உணரப்பட்டிருந்தபோதும், மிகக் குறைவான ஆதாரமே தரப்பட்டிருக்கின்றதென்று குறிப்பிடுவது நியாயமற்றதாகாது. மத்திய அரசாங்க அதிகார வரம்பிலிருக்கும் நிதி ஆதாரத்தைப்போல இராச்சியங்கட்குத் தரவும், அதிகார வரம்பின் எல்லைபற்றிய விளக்கங்கள் அல்லது இங்குமங்குமான அத்தியாவசியமான வாதங்களைக் குறைந்த அளவிற்குக் கொண்டுவரவும், இராச்சியங்

களின் விவகாரங்களில் தலையிடுவதாக எதிர்க்கட்சி அரசாங்கத்தைச் சேர்ந்த அமைச்சர்' ஒருவர் குற்றஞ்சாட்டுவதற்கு முன்பாகவும், நிர்வாகப் போக்கு இன்னும் முன்னேற்றமடைய வேண்டியதாக உள்ளது.'

'வேறு பெரிய தேசிய அரசாங்கமெதுவும் இந்தியாவைப் போலக் கொள்கை அளவில் கீழ்ப்படிந்து, ஆனால், உண்மையில் இதர அரசியல் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கும் பகுதிகளை நாட்டிற்கு இன்றியமையாததாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் திட்டங்களின் நிறைவேற்றத்திற்குச் சார்ந்தில்லை.'

'அமைப்புரீதியாகப் புதுடெல்லியினால் செலுத்தப்படும் அதிகாரம் நிச்சயமற்ற, தொடர்ச்சி அற்ற அதிகாரச் சிறப்பாகும் (power of prestige). அது ஓர் ஆற்றல் கூறேயன்றி (influence), ஓர் அதிகாரமன்று. அதன் முறை திட்டங்களை ஆக்குதலும், அறிக்கைகளைப் பிறப்பித்தலும், மாநாடுகளை நடத்துதலுமாகும். இரு வெவ்வேறு திட்டத்துறைகளில் மத்திய அரசாங்கத்தின் நிர்வாகப் பணி, ஆண்டிற்கு ஒரு முறையோ அல்லது இருமுறையோ நடத்தப்படும் மாநாடுகளில் செய்யப்படுகின்றது என்பதாக மத்திய, மாநில அரசாங்கங்கள் இரண்டாலும் அதிகாரபூர்வமாக நான் அறிவிக்கப்பட்டேன். பெரும்பாலான திட்டத்துறைகளில் காணப்படும் உண்மையான அதிகாரம் குறிப்பிட்ட தலைவர்களின் சொந்த அதிகாரமும், அதே தலைவர்களது சிறந்த தலைமையின்கீழ் இயங்கும் ஒற்றுமையுடைய, பதவியிலிருக்கும் கட்சியின் அதிகாரபூர்வமற்ற சட்டத்திற்கப்பாற்பட்ட, நிர்வாகத்திற்கப்பாற்பட்ட அதிகாரமும் ஆகும். எனவே, சட்டபூர்வமாக நிர்வாகத்திற்கு உதவியாக இருக்கும் உறுப்புகளோடுகூட, இச் சக்திகள் எதிர் காலத்தில் எவ் உருவங்களில் தோன்றக்கூடுமென்பதையும் பொறுத்துதான் சாதனைகளை அடைவதற்கான சார்பிருக்கும்.'

நடு அரசாங்கத்தின் அதிகார பலக் குறைவைச் சுட்டிக் காட்டும் ஆப்பில்பியினது குறைகூறல்கள், மத்திய அரசாங்கம் இராச்சியங்களை அதன் நோக்கப்படி கொண்டுவருவதற்குப் பெற்றிருக்கும் பல கட்டுப்படுத்தும் சாதனங்களை எடுத்துக்காட்டி மறுக்கலாம். மத்திய அரசாங்கத்தால் ஏற்படுத்தப்பட்ட அரசியலமைப்பிற்கப்பாற்பட்ட திட்டக் கமிஷன், அமைச்சவையினும் உயர்ந்ததாகச் (Super Cabinet) செயலாற்றுவதையும், எங்ஙனம் அது இந்தியா முழுவதற்குமான சமூக, பொருளாதார நடவடிக்கைகளைத் தேசிய அடிப்படையில் சரியாக நடக்குமாறு பணிக்கிறது என்பதையும் இங்கு உதாரணமாகச் சொல்ல

லாம். இருப்பினும், இந்தியா ஓர் அரசாங்கத்தால் ஆளப் படாமல், ஆனால், ஒரே சமயத்தில் பதினாறு அரசாங்கங்களால், அதாவது, ஒரு தேசிய அரசாங்கமும், பதினைந்து இராச்சிய அரசாங்கங்களும் அரசியலமைப்பு அடிப்படையில் ஏற்படும் அரசாங்க அதிகாரம் முழுவதையும் தங்களுக்கிடையே பகிர்ந்து கொண்டு ஆட்சி செய்கின்ற அடிப்படை உண்மை இருக்கத்தான் செய்கிறது. இறைமை அதிகாரங்களைப் பல அரசாங்கங்கள் ஒரே அரசியலமைப்பின்கீழ் பகிர்ந்துகொள்ளக்கூடிய அத்தகைய முறை கூட்டாட்சி முறை ஒன்றின்கீழ்தான் இயலும். அம் முறை தான் இந்தியாவை ஒரு கூட்டாட்சியாகவும், அதன் அரசிய லமைப்பைக் கூட்டாட்சி அரசியலமைப்பாகவும் செய்கிறது.

# 30. நிதித் தொடர்புகள்

யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே நிதித் தொடர்பைப் பொறுத்தவரையிலும் இந்திய அரசியலமைப்பைப் போன்று வேறு எந்தக் கூட்டாட்சி அரசியலமைப்பும் விரிவான ஏற்பாடுகளைச் செய்யவில்லை. சில துறைகளிலிருந்து கிடைக்கும் வருவாய்களை ஒதுக்குவதற்கும், அவசியமான மாறுதல்களோடு அவைகளைச் சரியாக அமைப்பதற்கும் நிதிக் கழகம் (Finance Commission)ஒன்றிற்கு ஏற்பாடு செய்ததன்மூலமாகக் கூட்டாட்சித் தொடர்பில் தீவிரமான சிக்கல்கள் பல நிறைந்த இவ் அம்சத்தில் அரசியலமைப்பு மூலச்சாதனையொன்றை ஏற்படுத்தியிருக்கிறது. இதற்குமுன் ஏற்பட்ட கூட்டாட்சிகளின் நடைமுறையில் கூட்டரசாங்கத்திற்கும் அங்க அரசாங்கங்களுக்கும் இடையே நிதித்துறையில் ஏற்பட்ட முடிவில்லாத பிணக்குகளைக் காண்போருக்கு இவ் வேற்பாட்டின் சிறப்புப் புலனாகும். கூட்டரசும் அங்க அரசுகளும் வருமானவரி போன்ற துறைகளுக்கே அடிக்கடி வரிபோட்டு வருவாயை அதிகரிக்க முயற்சி செய்திருக்கின்றன. கொள்கைமட்டில் அது சரியானதாகத் தோன்றும். ஆனால், நிகழ்முறையில் அது பெரு வசதிக்குறைவுகளை ஏற்படுத்தியது. கூட்டாட்சி அரசாங்கம் அதனுடைய வரிவுயர்வு முயற்சிக்குத் தடையாக இராச்சியங்கள் இருந்தன என்று எண்ணிய போது, இராச்சியங்களோ அவைகளினுடைய திடமான நிதிநிலைமைக்கு இடையூறாகக் கூட்டாட்சி அரசாங்கமும் இருந்ததாகக் கருதின. அதே சமயத்தில் மக்களோ இரட்டை அல்லது மிக அதிகமான வரிச்சுமைக்கு ஆளாக்கப்பட்டதாக நினைத்தனர். குறிப்பிட்ட வரியொன்றை விதிப்பதற்குக் கூட்டாட்சிக்கு இருந்த அதிகாரத்திற்கு இராச்சியங்கள் அவ்வப்போது சவால்விட்டன. அதே முறையைக் கூட்டாட்சி அரசாங்கமும் இராச்சியங்களுக்கு எதிராகப் பின்பற்றியது. கூட்டாட்சி அரசாங்கங்களுக்கு இருக்கும் அதிகாரத்திற்கு மக்களும் அவர்களுடைய அக்கறைக்கேற்ப சவால்விட்டனர். இதன் பயன் எண்ணிலடங்கா வழக்குகள் ஏற்பட்டதாகும். நீதிமன்றங்கள் புதுப்புது விளக்க

கோட்பாடுகளின்வாயிலாக அப்பிரச்சினையைத் தீர்க்கமுயன்றன. அமெரிக்க ஐக்கியநாட்டு உச்ச நீதிமன்றத்தால் எடுத்துரைக்கப் பட்ட வரிவிலக்குக் கோட்பாடு (Doctrine of Immunity of Instrumentalities) இதற்கோர் உதாரணமாகும்.

1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் இப் பிரச் சினைக்கு மிகச்சிறந்த வழியொன்றின் துணைகொண்டு தீர்வுகாண முயன்றது. குழப்பத்தைத் தவிர்க்க சாத்தியமான வரிமூலங்களை யெல்லாம் மத்திய அரசாங்கத்திற்கோ அல்லது மாநில அரசாங் கங்களுக்கோ அது ஒதுக்க முயன்றது சில துறைகளில் மத்திய அரசாங்கம் வரிவிதிக்கவும் வசூலிக்கவும் அனுமதிக்கப்பட்ட தெனினும், அவ்வாறு அத் துறைகளிலிருந்து கிடைத்த தொகையை மாநிலங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட வேண்டும். 1935ஆம் ஆண்டுச் சட்டத்தின் முக்கியக் குறைபாடு மாநிலங்களுக்கிருந்த மிகக்குறைவான வருமானத்துறைகளாகும். 1935ஆம் ஆண்டுச் சட்ட அடிப்படையை அரசியலமைப்புக் கர்த்தாக்கள் பின்பற்றியபோது அச் சட்டத்திலிருந்த குறை பாடு மீண்டும் ஏற்படக்கூடாதென்று விரும்பினார்கள். அதன் விளைவாக யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே வருமா னத்தைப் பங்கிட மிக விரிவான திட்டத்தை ஏற்படுத்துகிறது. ஆனால், அத் திட்ட அடிப்படையில் விவரமாக ஒதுக்கும் பொறுப்பு, அரசியலமைப்பு இயங்க ஆரம்பித்த இரண்டாண்டு களுக்குள் ஜனாதிபதியால் ஏற்படுத்தப்படவிருந்த நிதிக் கழகத் திடம் ஒப்படைக்கப்பட்டது.

கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் அங்க அரசாங்கங்களுக்கும் இடையே மூலாதார வளங்களை ஒதுக்குவதற்குத் துணையாக இருந்த ஆதாரக் கொள்கைகள் திறமை, நிறைவுடைமை, பொருத்தமுடைமை ஆகியவைகளாகும். இம் மூன்று நோக்கங் களையும் ஏககாலத்தில் அடைவது அவ்வளவு எளிதானதன்று என்பது வெளிப்படையாகும். சட்டம், இயற்கை, பொருளா தாரம் சம்பந்தப்பட்ட பரிவுணர்வுகள் இவைகளை அடைவதற்குப் பெருந்தடைகளாக இருக்கின்றன குறிப்பான ஏதேனுமொரு முறை அனேகமாக ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இருக்குமென்று தோன்றினால், அது பல்வேறு இராச்சியங்களின் கோரிக்கைகளை யும் மாற்றுக் கோரிக்கைகளையும் திருப்தி செய்வதாக இராது. எனவே, இருசாராரும் ஏற்கத்தக்க இடைவழியை அரசிய லமைப்பு ஏற்படுத்த முயல்கிறது. இவ்விடைவழிப்படி, இப் பொருள் (subject) (1) வருவாயை யூனியனுக்கும் இராச்சியங் களுக்குமிடையே ஒதுக்குதல், (2) உதவி மானியங்களைப் பங்கிட் டளித்தல் என்னும் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

பின்வரும் பட்டியல் யூனியன், இராச்சியங்கள் ஆகியவற்றின் வருமானமூலங்களை முறையே காட்டும் :

1. யூனியன் மூலாதாரங்கள்

(Union Sources)

(1) கார்ப்பொரேஷன் வரி.

(2) காகித நாணயம், உலோக நாணயமும் அதன் செலாவணியும்; அயல்நாட்டுப் பரிவர்த்தனை.

(3) ஏற்றுமதிவரி உள்ளிட்ட சுங் கத் தீர்வைகள்.

(4) புகையிலை வரி, இந்தியாவில் பொறிவழியாக்கப்பட்ட அல்லது உற்பத்தி செய்யப்பட்ட ஒருசில பொருள்களின்மேல் விதிக்கப்படும் வரி.

(5) விவசாய நிலம் நீங்கலான சொத்துகளைப்பற்றிய எஸ்டேட்டு வரி

(6) நீதிமன்றமெதிலும் பெற்றுக்கொள்ளப்பட்ட கட்டணங்கள் நீங்கலாக, யூனியன் அதிகாரப் பட்டியலில் வரும் விஷயங்கள்பற்றிய கட்டணங்கள்.

(7) வெளிநாட்டுக் கடன்கள்.

(8) இந்திய அல்லது இராச்சிய அரசாங்கம் ஏற்படுத்திய லாட்டரி சீட்டுகள்.

(9) அஞ்சலகச் சேமிப்பு நிலையம்.

(10) தபால் தந்தி; தொலைபேசி; கம்பியில்லாத் தந்தி மூலமாக ஒலிபரப்புதலும் இவைபோன்ற இதர செய்திப் போக்குவரத்துகளும்.

(11) யூனியன் உடைமை.

(12) யூனியன் அரசாங்கப் பொதுக் கடன்.

(13) இரயில்வேக்கள்.

(14) மாற்று உண்டியல்கள், செக்குகள் (cheques), புரோநோட்டுகள் 'போன்றவைகள்பற்றிய முத்திரை வரி' விகிதங்கள்.

(15) இந்திய ரிசர்வ் பாங்கு.

(16) விவசாய வருமானம் நீங்கலாக இதர வருமானத்திற்கு விதிக்கப்படும் வரிகள்.

(17) விவசாய நிலம் நீங்கலான, தனிப்பட்டோர் கம்பெனிகளின் சொத்துகள் மூலதன மதிப்பீட்டின்மேல் போடப்படும் வரிகள்.

(18) ஸ்டாக் எக்சேஞ்சுகள், சந்தைகள், வியாபாரங்களுக் கான முத்திரை வரிகளல்லாத இதர வரிகள்.

(19) செய்தித் தாள்கள் விற்பனை, வாங்குதல், அவைகளில் வெளியிடப்படும் விளம்பரங்களுக்கு விதிக்கப்படும் வரிகள்.

(20) இரயில்வேக்களாலும், கப்பல்களாலும், ஆகாய விமானங்களாலும் ஏற்றிச் செல்லப்படும் சாமான்கள் அல்லது பிரயாணிகளிடமிருந்து வசூலிக்கப்படும். இறுதிமுனை வரிகள் (terminal taxes).

2. இராச்சிய மூலாதாரங்கள்

(State Sources)

(1) தலைக்கட்டு வரிகள்.

(2) விவசாய, நிலவாரிசு பாத்தியதைபற்றிய தீர்வைகள்.

(3) மதுபானங்கள், அபின் போன்ற இராச்சியத்தினுள் உற்பத்தி செய்யப்படுகிற சில பொருள்களுக்கு விதிக் கப்படும் ஆயத் தீர்வைகள்.

(4) விவசாய நிலம் சம்பந்தப்பட்ட எஸ்டேட்டுத் தீர்வை

(5) நீதிமன்றக் கட்டணங்களல்லாத இராச்சிய அதிகாரப் பட்டியலில் காணப்படும் துறைகளில் விதிக்கப்படும் கட்டணங்கள்.

(6) நில வருமானம்.

(7) யூனியன் அதிகாரப் பட்டியலில் குறிப்பிடப்படாத பத்திரங்கள் சம்பந்தமான முத்திரை வரிவிகிதங்கள்.

(8) விவசாய வருமான வரிகள்.

(9) நிலத்திற்கும் கட்டடங்களுக்கும் விதிக்கப்படும் வரிகள்.

(10) கனிப்பொருள் முன்னேற்றத் தொடர்புடைய பாராளு மன்றத்தால் விதிக்கப்பட்ட வரையறைகளுக்குட் பட்டுக் கனிப்பொருள் உரிமைகளுக்கு விதிக்கப்படும் வரிகள்.

(11) மின்சார விற்பனை அல்லது உபயோகத்திற்கு விதிக்கப் படும் வரிகள்.

(12) வட்டாரப் பகுதியொன்றினுள் விற்பனைக்கோ, உப யோகத்திற்கோ கொண்டுவரப்படும் பொருள்களின் நுழைவிற்கு விதிக்கப்படும் வரிகள்.

(13) செய்தித் தாள்கள் அல்லாத பொருள்கள் வாங்கப்படுதல் அல்லது விற்பனை செய்யப்படுதலுக்காகச் செலுத்தப்படும் வரிகள்.

(14) செய்தித் தாள்கள் வெளியிடப்படுவதைத் தவிர, இதர விளம்பரங்கள்மேல் போடப்படும் வரிகள்.

(15) உள்நாட்டு நீர்த்துறைகள் அல்லது சாலைகள் வழியாக ஏற்றிச் செல்லப்படும் பிரயாணிகள்மீதும் பொருள்கள் மீதும் விதிக்கப்படும் வரிகள்.

(16) வாகன வரிகள்.

(17) மிருகங்கள், தோணிகள் சம்பந்தப்பட்ட வரிகள்.

(18) உத்தியோகம், வியாபாரம், வேலை நியமனங்கள், தொழில்பற்றிய வரிகள்.

(19) ஆடம்பர வாழ்விற்கு அவசியமான பொருள்கள், கேளிக்கைகள், உற்சாகமூட்டும் வேடிக்கைக் காட்சிகள், பந்தயங் கட்டுதல், சூதாடுதல் சம்பந்தமான வரிகள்.

(20) சாலைச் சுங்கங்கள்.

3. யூனியனால் விதிக்கப்பட்டு வசூல் செய்யப்பட்டு இராச்சியங்களுக்கு ஒதுக்கப்படும் வரிகள் (விதி 269)

(1) விவசாய நிலம் நீங்கலான சொத்துகளின் வாரிசுரிமை வரிகள்.

(2) விவசாய நிலமல்லாத சொத்துகளுக்கான எஸ்டேட் வரி.

(3) இரயில்வே பிரயாணிகள் செலவுக் கட்டணம், சாமான்கள் கட்டணம் ஆகியவைமேல் போடப்படும் வரி.

(4) மார்க்கெட் நிலவரம், பங்கு பத்திரமாற்று நிலையங்கள், வியாபார நடவடிக்கைகளின்மேல் விதிக்கப்படும் முத்திரை வரி நீங்கலான இதர வரிகள்.

(5) செய்தித்தாள்கள் விற்பனைக்கும், வாங்குதலுக்கும் விளம்பரங்களுக்கும் போடப்படும் வரிகள்.

(6) இரயில்வே, கப்பல், ஆகாய விமானங்கள் ஆகியனமூலம் ஏற்றிச் செல்லப்படும் பொருள்கள், பிரயாணிகளுக்குப்போடப்படும் இறுதிமுனை (terminal) வரிகள்.

(7) இராச்சியங்களுக்குள் நடைபெறும் செய்தித் தாள்கள் அல்லாத இதர பொருள்களின் விற்பனை அல்லது

வாங்குதல்போன்ற வர்த்தகம், வியாபாரம்பற்றிய வரிகள்.

4. யூனியனுல் விதிக்கப்பட்டு இராச்சியங்களால் வசூலிக்கப் பட்டுச் செலவழிக்கப்படும் வரிகள் (விதி 268)

மருந்து, அலங்காரப் பொருள்கள் தயாரிப்பின்பேரில் விதிக்கப்படும் முத்திரை வரிகளும் ஆயத் தீர்வைகளும் (யூனியன் அதிகாரப் பட்டியலில் சொல்லப்படும்) இந்திய அரசாங்கத்தாரால் விதிக்கப்பட்டாலும் அவைகள்:

(அ) யூனியன் பிரதேசமொன்றில் விதிக்கப்படக்கூடிய விஷயங்களில் இந்திய அரசாங்கத்தினுலும்,

(ஆ) இதர விஷயங்களில் இராச்சியங்களில் விதிக்கப்படக் கூடியவைகளில் இராச்சியங்களினுலும் வசூல் செய்யப் படும்.

5. யூனியனுல் விதிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டு இராச்சியங் களுக்கிடையே யூனியனுல் விநியோகம் செய்யப்படும் வரிகள் (விதிகள் 270, 272)

(1) விவசாய வருமானம் நீங்கலான இதர வருமான வரிகள்.

(2) யூனியன் அதிகாரப் பட்டியலில் சேர்க்கப்பட்டு இந்திய அரசாங்கத்தினுல் வசூலிக்கப்படும் மருந்து, அலங் காரப் பொருள்கள்பற்றிய ஆயவரிகள் நீங்கலான இதர யூனியன் ஆயவரிகள்.

'வருமான வரிகளில்' கார்ப்பொரேஷன் வரி சேரவில்லை. வருமானவரித் துறையில் கிடைக்கும் தொகைகள், நிதிக் கழகத் தின் சிபாரிசுகளுக்கிணங்க யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் பகுத்தளிக்கப்படுகின்றன. 1957ஆம் ஆண்டின் இரண்டாவது நிதிக் கழகத்தின் சிபாரிசின்படி இராச்சியங்களுக்குச் சேர வேண்டிய பங்கு அறுபது விழுக்காடாக நிர்ணயிக்கப்பட் டிருக்கிறது.

இராச்சியங்கட்கு ஒதுக்கப்படவேண்டிய அல்லது யூனிய னுக்கும் இராச்சியங்கட்குமிடையே பங்கிடப்படவேண்டிய வரிகளை வசூல் செய்வதற்கு ஆதாரமாகவுள்ள 269, 270ஆம் விதிகள் இருந்தாலும், 269, 270ஆம் விதிகளில் சேர்க்கப்பட்டுள்ள வரி இனங்கள்மேல், சர்சார்ஜ் விதிக்க 271ஆம் விதியின்கீழ் பாராளுமன்றம் அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. அந்த சர்சார்ஜ் மூலமாகக் கிடைக்கும் தொகை யாவும் குவிக்கப்பட்ட இந்திய நிதியில் சேர்க்கப்படும்.

### தொழில்கள், வியாபாரங்கள் ஆகியவற்றின்மேல் வரிகள் (விதி 275)

வருமானவரி விதிப்பதும் வசூல் செய்வதும் இந்திய யூனிய னின் அதிகார வரம்பிற்குள் இருந்தபோதும், இராச்சியங்கள், தொழில், வர்த்தகம், உத்தியோகம், வேலை சம்பந்தப்பட்ட வரிகளை விதிக்க அனுமதிக்கப்பட்டிருக்கின்றன. அத்தகைய வரியொன்று வருமானவரியோடு தொடர்புடையதாக இருக்கிற தென்ற அடிப்படையில் செல்லத்தகாததாகாது. தொழில்கள் போன்ற இனங்களுக்கு விதிக்கப்படுகின்ற வரிகள், நகர சபைகள், வட்டாரக் கழகங்கள்போன்ற தன்னாட்சி நிலையங் களின் நலன் கருதிப் பொதுவாகப் பயன்படுத்தப்படுபவைக ளாகும். அத்தகைய வரிகளுக்கு அனுமதி தரப்படாவிட்டால் வருவாய் மிகமோசமாக இருக்கும். இக்கழகங்களின் முக்கியமான வருமான ஆதாரம் மேலும் மோசமாகிவிடும். எனினும், இவ் வரி ஆண்டொன்றிற்கு உயர்மட்ட அளவில் ரூ. 250 வரைதான் விதிக்கப்படலாம்.

### உதவித் தொகைகள் (விதி 275)

கூட்டாட்சித் தத்துவம் ஒன்றுபடுத்தும் சக்தியோடுமட்டு மல்லாமல் சமன் செய்யும் சக்தியுமாகும். யூனியனில் இணைந் துள்ள இராச்சியங்களில் பொருளாதார முன்னேற்றமும் சிறப்பு முடையவைகளாக ஒருசில இருக்கின்றபோது வேறுசில முன் னேற்றமற்றவைகளாகவும் பின்தங்கியவைகளாகவும் இருக்கின் றன. கூட்டாட்சி யூனியனில் எதிர்பார்க்கப்படும் ஒரு விளைவு சமூக, பொருளாதாரத் துறைகளில் பின்தங்கியவைகளாக இருக்கின்ற பகுதிகள் அவைகளினுடைய நிலைமையை மேம் படுத்திக்கொள்ள வாய்ப்பளிப்பதாகும். இதற்காகப் பொது வாகப் பின்பற்றப்படும் ஒருமுறை, உதவி தேவைப்படும் இராச்சி யங்களுக்கு உதவித் தொகைகள் அளிக்கும் முறையாகும். 275ஆம் விதி குவிக்கப்பட்ட இந்திய நிதியிலிருக்கும் அத்தகைய இராச்சி யங்களின் கணக்கிலிருக்கும் ரெவின்யூ தொகையிலிருந்து எந்த அளவிற்கு உதவி தேவையென்று முடிவு செய்யப்படுகிறதோ, அந்த அளவிற்கு ஆண்டுதோறும் குறிப்பிட்ட உதவித்தொகை களை அளிக்கப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் தருவதன் வாயி லாக வகைசெய்கிறது. அவ்வாறு நிர்ணயிக்கப்பட்ட உதவித் தொகைகள், நிதிக் கழகத்தின் சிபாரிசுகளை ஆதாரமாகக்கொண் டவையாகும். ஒவ்வோர் இராச்சியமும் ஆண்டுதோறும் உதவித் தொகைகளைப் பெறவேண்டுமென்ற அவசியம் கிடை யாது. நிதிக் கழகம் குறிப்பிட்ட இராச்சியமொன்றிற்கு அத்

தகைய உதவி தேவையில்லையென்று கருதுமானால், உதவித் தொகைகளை ஒதுக்கும்போது அந்த இராச்சியத்தைப் பாராளுமன்றம் விட்டுவிடலாம். இராச்சியமொன்றினால் யூனியனின் அனுமதிபெற்று அந்த இராச்சியத்திலுள்ள அட்டவணையில் கண்ட மலைவாசிகளின் பொதுநலனை ஏற்படுத்துவதற்கோ அல்லது அட்டவணையில் கண்ட பிரதேசங்களின் நிர்வாகத் தரத்தை உயர்த்துவதற்கோ மேற்கொள்ளப்படும் முன்னேற்றத் திட்டங்களுக்காகும் செலவைச் சரிக்கட்ட யூனியன் அரசாங்கம் உதவித் தொகைகள் தரவேண்டுமென்பதை அரசியலமைப்புக் கடமைப் பொறுப்பாக்குகிறது.

### இராச்சியங்களுக்கு அக்கறையுடையதும், அவைகளைப் பாதிப்பதுமான வரிவிதிப்பு மசோதாக்கள் (விதி 274)

இராச்சியங்களுக்கு அக்கறையுடைய வரிவிதிப்பு சம்பந்தமான மசோதாக்கள் விஷயத்தில் ஜனாதிபதியின் முன் சிபாரிசு தேவையென்பதாக அரசியலமைப்பு விதிக்கிறது. இவ்வாறாக, இந்திய வருமானவரிக்குப் பொருந்தும் 'விவசாய வருமானம்' என்னும் சொல்லின் பரப்பையும் பொருளையும் பாதிக்கும் மசோதாவொன்று மக்கள்சபையில் தாக்கல் செய்யப்படுவதற்கு ஜனாதிபதியின் முன் சிபாரிசு தேவைப்படுகிறது. இராச்சியங்களின் நலன்கள் பாதுகாக்கப்பட யூனியன் அரசாங்கம் ஜனாதிபதியின்மூலமாக அவைகளைக் கலந்தாலோசிக்க வேண்டுமென்பதே ஜனாதிபதியின் அத்தகைய சிபாரிசு தேவை என்பதன் நோக்கமாகும்.

### நிதிக் கழகம் (The Finance Commission) (விதிகள் 280, 281)

முன்பே குறிப்பிட்டவாறு நிதிக் கழகமொன்று ஏற்படுத்தப்படவேண்டுமென்னும் நிபந்தனை அரசியலமைப்பில் காணப்படும் மூலக் கருத்தாகும். இதன்படி ஜனாதிபதி, அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்ததிலிருந்து முதல் இரண்டாண்டுக்குள்ளும், அதன் பிறகு ஒவ்வோர் ஐந்தாண்டு முடிந்த பிறகோ அல்லது அவர் கருத்துப்படி அதற்கும் முற்பட்ட கால இடைவெளிகளிலோ நிதிக் கழகமொன்றை நியமிக்கவேண்டும். இக் கழகம் ஜனாதிபதியால் நியமிக்கப்படுமொரு தலைவரையும் நான்கு உறுப்பினர்களையும் உடையதாக இருக்கும். குறிப்பிட்ட கால இடைவெளிகளில் கழகம் நியமிக்கப்படவேண்டியிருப்பதால் இக் கழகங்களின் வேலையில் ஓரளவிற்குத் தொடர்ச்சி ஏற்படுத்தப்படுகிறது. ஒவ்வொரு கழகமும் இதற்கு முன்னிருந்த கழகங்களின் வேலைகளினால் பயனடைகிறது.

280ஆம் விதியின்படி நிதிக் கழகம் குறிப்பிட்ட இரு விஷயங்கள்பற்றியும் 'சிறந்த நிதிநலன் கருதி ஜனாதிபதியினால் கழகத்தின் பரிசிலனைக்கு விடப்படும் வேறு எந்தவிஷயம்பற்றியும்' அதனுடைய சிபாரிசுகளைச் செய்யவேண்டும். குறிப்பிட்ட அவ்விரு விஷயங்களாவன :

(1) யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே இருக்கின்ற அல்லது இருக்கக்கூடிய வரிகளின் நிகரத் தொகைகளை அவைகளுக்கிடையே பங்கிடவும், அத் தொகைகளில் இராச்சியங்களுக்குச் சேரவேண்டிய அவைகளின் பங்கை ஒதுக்குதல் முதலாவதாகும்.

(2) இரண்டாவதாக, இந்தியக் குவிப்பு நிதியிலிருக்கும் இராச்சியங்களின் வருமானங்களிலிருந்து உதவித் தொகைகள் கொடுக்கப்படுவதற்குப் பின்பற்றவேண்டிய கொள்கைகளை முடிவு செய்தலாகும்.

அரசியலமைப்பு, 270ஆம் விதிப்படி யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே விவசாய வருமானம் நீங்கலாக இதர வருமானங்களின் மீதான வரிகளைப் பங்கிடுவதைக் கட்டாயமாக்குகிறது. கார்ப்பொரேஷன் வரியும் யூனியனுக்காக விதிக்கப்படும் சர்சார்ஜும் இதிலடங்கா. யூனியன் பிரதேசங்களுக்கென்று ஒதுக்கப்படக்கூடிய வருமானங்களின் வரி அல்லது, யூனியனால் அளிக்கப்படும் ஊதியங்களின்மீதான வரி ஆகியவை யூனியனுக்கே அளிக்கப்படுகின்றன. மருந்து, சோப்புபோன்ற பொருள்களின் தயாரிப்புபற்றிய ஆயத்தீர்வைகளல்லாத இதர யூனியன் ஆயத்தீர்வைகள் பங்கிடப்படலாமெனப் பாராளுமன்றம் சட்டமொன்றினால் தீர்மானிக்குமானால், அதற்கு ஆதாரமாக அரசியலமைப்பின் 272ஆம் விதி இருக்கிறது.

வருமானவரிபற்றிய நிதிக்கழகத்தின் சிபாரிசுகளைப் பரிசிலனை செய்த பிறகு, விநியோகம் செய்யப்படவேண்டிய முறையையும் அளிக்கப்படவேண்டிய விழுக்காட்டையும் உத்தரவொன்றைப் பிறப்பித்து ஜனாதிபதி தீர்மானிக்கிறார். வருமான வரியை ஒதுக்குதல், விநியோகம் செய்தல் ஆகியவற்றில் பாராளுமன்றம் நேரடியாகச் சம்பந்தப்பட்டிருக்கவில்லை.

275ஆம் விதி, இராச்சிய வருமான உதவித் தொகைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இவ் உதவித் தொகைகள் பாராளுமன்றச் சட்ட ஆதாரத்தில் தரப்படவேண்டும்; ஆனால், இவ் விதியின் (2)ஆம் பிரிவு, சட்ட ஏற்பாடு செய்யப்படுகின்றவரை

யிலும், ஜனதிபதி தாம் பிறப்பிக்கும் உத்தரவொன்றின்மூலமாக இவ்வதிகாரத்தைச் செலுத்தலாமெனக் கூறுகிறது. ஆனல், அவருடைய இவ் வதிகாரம், 'நிதிக்கழகம் ஏற்படுத்தப்பட்ட பிறகு, அதன் சிபாரிசுகளைப் பரிசீலனை செய்தபிறகே அல்லாமல், அதற்கு முன்பாக இப் பிரிவு அடிப்படையில் உத்தரவெதுவும் பிறப்பிக்கக்கூடாது' என்னும் ஏற்பாட்டினல் கட்டுப்படுத்தப் படுகிறது. உதவித் தொகைகள் பாராளுமன்றச் சட்டத்தால் வகைசெய்யப்பட்டிருந்தாலோ அல்லது எந்த இராச்சியத் திற்கும் நிதியுதவி தேவையில்லையென்று ஜனதிபதி கருதினலோ, கழகத்தின் கருத்தை அறியவேண்டிய அவசியமில்லை. எனினும், ஜனதிபதி, இவ் விஷயத்தை முதலிரண்டு நிதிக் கழகங்களின் பரிசீலனைக்கு விட்டார்.

280 (3) (பி) விதியின்படி, 'இந்திய குவிக்கப்பட்ட நிதியி லிருக்கும் இராச்சியங்களின் வருமானத்திலிருந்து உதவித் தொகைகள் அளிப்பதற்குப் பின்பற்றப்படவேண்டிய கொள் கைகளை' சிபாரிசு செய்யவேண்டியது கழகத்தின் கடமையாகும்.

280 (3) (சி) விதியின்படி, சிறந்த நிதிநலன் கருதி எந்தவொரு விஷயத்தையும் கழகத்தின் பரிசீலனைக்கு ஜனதிபதி விடலாம் இவ் வேற்பாட்டின்படி, கீழ்க்கண்ட இனங்களில் நிதியாண் டொன்றில் நிகர வருமானங்களை இராச்சியங்களுக்கிடையே பகிர்ந்தளிப்பதற்கு என்ன கொள்கைகளைப் பின்பற்றவேண்டு மென்பதைச் சிபாரிசு செய்யுமாறு கழக உறுப்பினர்கள் கேட்கப் பட்டார்கள். இங்குக் குறிப்பிடப்படும் வருமான இனங்க ளாவன :

(அ) விவசாய நிலமல்லாத உடைமைகள்பற்றிய எஸ்டேட் வரி.

(ஆ) இரயில்வே பிரயாணக் கட்டணங்களின்மேல் விதிக் கப்படும் வரி.

(இ) ஆலைத் துணிகள், சர்க்கரை, புகையிலை (உபயோகப் படுமாறு இதர வகையினவாக மாற்றப்பட்டவை உள்பட்) ஆகியவற்றிற்கு விதிக்கப்பட வேண்டிய விற்பனை வரிக்குப் பதிலாக விதிக்கப்படும் உதவி ஆயத்தீர்வைகள்.

இறுதியாகச் சொல்லப்பட்ட பொருள்கள்மேல் விதிக்கப் படும் விற்பனை வரியிலிருந்து வருமானமாக ஒவ்வோர் இராச்சி யமும் எவ்வளவு தொகையைப் பெறவேண்டுமென்பதைப் பற்றியும் கழகம் சிபாரிசு செய்யவேண்டுமெனக் கோரப்பட்டது.

யூனியன், இராச்சியங்கள் ஆகியவைகளைப் பாதிக்கும் சிக்கல் நிறைந்த பல நிதிப் பிரச்சினைகளைத் தீர்த்துவைக்கக்கூடிய அரசியல் சட்டபூர்வமான நிதிக் கழகத்தின் சிறப்பைக் கடைசியாக நியமிக்கப்பட்ட இரண்டு நிதிக் கழகங்களின் சிபாரிசுகளிலிருந்து தெரிந்துகொள்ளலாம். யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே இப்போதிருக்கும் நிதியொதுக்கும் முறை பெரும்பாலும் இச் சிபாரிசுகளின் விளைவேயாகும்.

கழகப் பணியின் முக்கியச் சிறப்பு, கூட்டாட்சி முறையின் நிதிகளை, நடுநிலையிலிருந்து குறிக்கோளடிப்படையில் சீராக அமைக்கும் சக்தியாகத் திகழ்வதிலும், நிதிகளைப் பங்கிடும் பிரச்சினையில், கூட்டரசாங்க-இராச்சிய அரசியல் நிர்ப்பந்தங்கள், சர்ச்சைகள் போன்ற சூறுவளிகளுக்கு இரையாகாது, திறமையாகச் செய்வதிலுமுள்ளது. உண்மையாக, அக் கழகம் யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே யூனியன்மேல் அரசியல் நிர்ப்பந்தங்களைக் கொண்டுவருவதில் நாட்டமுடையவைகளாக இருக்கின்ற பணப்பசியால் பிடித்துலுக்கப்படும் இராச்சியங்களின் வேகத்தைத் தடைப்படுத்துங் கருவியாகச் செயலாற்றுகின்றபோது, யூனியனை உதவி தேவைப்படும் இராச்சியங்களுக்கு எவ்வளவிற்கு இயலுமோ அவ்வளவிற்கு உதவி செய்யுமாறும் செய்கிறது. யூனியன் கழகத்தின் சிபாரிசுகளுக்கு மாறாக நடப்பதென்பது அநேகமாக இயலாது.

அரசியலமைப்பில் பல விசேஷ ஏற்பாடுகளும் இருக்கின்றன. அவைகள், யூனியனுக்குச் சொந்தமான உடைமைகள், வருமானம் ஆகியவற்றின்மீது இராச்சிய அரசாங்கங்கள் வரிவிதிப்பதற்குச் சில சட்டபூர்வமான விலக்குகளையும், அங்ஙனமே இராச்சியங்களினுடையவற்றிற்கு யூனியன் வரிவிதிப்பதனின்றும் விலக்குகளையும் ஏற்படுத்துகின்றன. அனுமத்து நிதி விஷயங்களைப்பற்றிய பல விரிவான ஏற்பாடுகளும் அதனில் இருக்கின்றன.

யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே உள்ள நிதித் தொடர்புகளை ஆராய்வதென்பது மிகக் கடினமானதாகும். இவை சம்பந்தமான ஷரத்துகள் நுணுக்கமாகவும், பெரும்பாலும் கடினமானவையும் விளங்காதவையுமான சட்டச் சொற்களாலும் வினக்கப்பட்டிருக்கின்றன. அல்லாமலும், ஒவ்வொரு பிரேரணையும் (கருத்தும்) விலக்குகளாலும் வரையறைகளாலும் சீர்திருத்தப்பட்டோ அல்லது கட்டுப்படுத்தப்பட்டோ இருக்கிறது. இருப்பினும், இவ் வேற்பாடுகள் இதர கூட்டாட்சியில் காணப்படுவதுபோன்ற வழக்குகள் அதிகமாக ஏற்படாதிருக்க உதவுகின்றன. அரசியலமைப்பு மிகப் பெரியதாக இருக்

கிறதென்று குறைகாண்போர் இதை நினைவில் கொள்ளவேண்டும். அரசியலமைப்பின் கடந்த பத்தாண்டுக் கால இயக்கத்தில் இத் துறையில் ஏற்பட்ட வழக்குகள் மிகவும் குறைவு என்பது இதன் சிறப்பம்சமாகும்.

இவ்வாறு அரசியலமைப்பில் செய்யப்பட்டுள்ள நிதி சம்பந்தமான ஏற்பாடுகள், இதர கூட்டாட்சிகளில் காணப்படும் குறைகள் இங்கு ஏற்படாமல் தவிர்க்கின்றன. யூனியன்—இராச்சியம் ஆகியவற்றிற்கிடையே பொது அதிகாரத் துறையில் வரி விதிப்பதற்குள்ள அதிகாரம்பற்றிய சர்ச்சைகள் எழாமல் இருப்பதற்கு, ஒவ்வொன்றினுடைய வரி விதிப்பதற்கான அதிகார வரம்பைக் குறிப்பாக வரையறை செய்திருப்பதால் இது அடையப்படுகிறது. இவ் அரசியலமைப்பு, சில கூட்டாட்சிகளில் பின்பற்றப்படுவதுபோல, சுலபமான, நேரிடை, மறைமுக வரிமுறைகளைப் பின்பற்றவில்லை. நேரிடையானதும் மறைமுகமானதுமான வரிகளிரண்டும் யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இத்தகைய பிரிவினையின் நோக்கம், கூட்டாட்சி நிதித்துறையின் திறமை, பொருத்தமுடைமை என்னும் ஆதாரக்கொள்கைகளாகும். கூட்டாட்சி உதவித் தொகைகளின் ஏற்பாட்டினுல் தேவைக்கேற்ற நிறைவு அடையப்படுகிறது. யூனியனுக்கும் இராச்சியத்திற்குமிடையே நிலவவேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிற ஒழுங்கான ஒத்துழைப்பு அடிப்படையில் நிதித்துறை அமைப்பு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. எனவே, யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே நிதி உறவுகள் சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஒற்றுமை நிலவுமெனக் கருதப்படுகிறது.

நிதித் துறையில் யூனியனுக்கும்–இராச்சியத்திற்கும் இடையேயிருக்கும் உறவை ஒருங்கே பார்க்கும்போது, இந்தியக் கூட்டாட்சியின் பொதுத் தன்மையாக விளங்கும் மத்திய மட்ட அதிகாரக் குவிப்புக் கொள்கைக்கிணங்க ஒற்றுமை நிலவுகிறதென்பது எவருக்கும் புலனுகும். இராச்சிய அரசாங்கங்களைவிட யூனியன் அரசாங்கம் நிதித்துறையில் ஸ்திரத் தன்மையும் சக்தியுமுடையதாக இருக்கிறது. இது, நாடு முழுவதற்குமான பொருளாதார முன்னேற்றம் ஏற்படவும், ஒவ்வோர் இராச்சியத்திலும் பொருளாதார நடவடிக்கைகளில் காணப்படும் பிராந்திய, பிரிவினைப் போக்குகளைக் கட்டுப்படுத்தவும் அவசியமாகிறது. இப்போதுள்ளவாறு, இராச்சியங்களின் வகைவளங்கள் அளவோடு இருப்பதால், முன்னேற்றத் திட்டங்கள் எல்லாவற்றிற்குமாக இல்லாவிட்டாலும், மிகப்பெரும்பாலானவற்றிற்கு நிதி

யுதவிக்கு யூனியனை எதிர்பார்க்கவேண்டியது அவசியமாகிறது. எனவே, இயல்பாகவே அவைகள் யூனியன் முதலில் என்ன செய்கிறதென்பதையறிந்து, அதைப் பின்பற்றவேண்டியவையாக இருப்பதோடு, அவ்வப்போது அதற்குக் கீழ்ப்படிய வேண்டியவையாகவுமிருக்கின்றன. இம் முறையில் நிறையும் குறையுமுண்டு. ஆனால், இது ஒன்றுதான் இந்தியப் பொருளாதார முன்னேற்றத்திற்கு இப்போது இருக்கின்ற வழியாகத் தெரிகிறது.

எனினும், இந்தியப் பொருளாதார அமைப்பு மாறுதல்களை அடைகின்றபோது, யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையேயுள்ள நிதிசம்பந்தமான தொடர்புகளும் வருங்காலத்தில் மாற வண்டியதேயாகும். அத்தகைய மாறுதலுக்குத் தகுந்தாற்போன்ற சரிப்படுத்தலும் செய்யப்படவேண்டி யிருக்கும். வரிபற்றிய சட்டங்கள் காலமுழுவதற்கும் இயற்றப்பட முடியாது. கூட்டாட்சி அரசாங்கத்துடன் இராச்சியங்கள் கொண்டிருக்கும் உறவு பிரிக்கமுடியாத வளரும் ஓர் உறவாகும்; அதனுடைய பிரச்சினைகள், வாழ்க்கைப் பிரச்சினைகளை எவ்வாறு முடிவாகத் தீர்த்துவிடமுடியாதோ, அவ்வாறே அவைகளையும் முடிவாகத் தீர்த்துவிட முடியாது.

# 31. இராச்சியங்களுக்கிடையே வணிகமும் வியாபாரமும்

## (Inter-state Trade and Commerce)

அரசியல் நிர்ணய சபை, அதன் நடவடிக்கைகளில் ஆரம்பம் முதல், யூனியனின் எல்லாப் பகுதிகளிலும் இராச்சியங்களுக்கு இடையிலான வணிகமும் வியாபாரமும் சுதந்திரமாக நடைபெற வேண்டுமெனக் கருதியது. உண்மையில், கூட்டாட்சி யூனியனென்று ஏற்படுத்தப்படுவதன் அடிப்படைகளில் ஒன்று சுதந்திர வணிகத்தை ஏற்படுத்துவதேயாகும். ஒருசில ஆசிரியர்கள், அமெரிக்க அரசியலமைப்பிலிருக்கும் வணிகம் சம்பந்தப்பட்ட பிரிவே அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஒன்றுபட்ட நாடாக ஆவதற்கு உதவியதென்று கருதுகிறார்கள். ஏனென்றால், வணிகப் பிரிவு அடிப்படையில்தான் அமெரிக்க தேசிய அரசாங்கம் குடிமக்களுடையவும் அங்க நாடுகளுடையவும் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்த மிக அதிகமான அதிகாரங்களை மேற்கொண்டது. ஆனால், இப் போக்கு, அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்து நூற்றைம்பது ஆண்டுகள் ஆன பிறகும், யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையே முடிவே இல்லாத சட்ட வழக்குகளில் கொண்டு விட்டிருக்கிறது. ஆஸ்திரேலியாவிலும்கூட, அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டுள்ள பல வழிகளில் பயன்படுகிற இராச்சியங்களுக்கிடையிலான வணிக, வியாபார உரிமை சுமுகமான சூழ்நிலையை ஏற்படுத்தவில்லை.

அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டுள்ள இராச்சியங்களுக்கிடையிலான வணிக, வியாபார ஷரத்துகளைத் தயாரித்த போது, இந்திய அரசியலமைப்பைத் தயாரித்தவர்கள் இவ் வனுபவங்களினால் கிடைத்த பயனைப் பெற்றார்கள். இதனால் தான் 301ஆம் விதிமுதல் 307ஆம் விதிவரை இருக்கின்ற விதிகள் சிறந்தவைகளாக இருக்கின்றன. நகல் தயாரிப்புக் குழு உறுப்பினர்களில் ஒருவர், 'முழுமையற்ற மனிதர்களால் வரையப்படக்

கூடிய, கிட்டத்தட்ட பரிபூரணமான தன்மையை இவ் விதிகள் பெற்றிருக்கின்றன' என்று கூறினர். இராச்சியங்களுக்கிடையே யான வணிகச் சுதந்திரக் கொள்கையின் குறிக்கோள், வணிகமும் வியாபாரமும் எந்த அளவிற்கு இயலுமோ அந்த அளவிற்கு அதிகரிக்கவேண்டுமென்பதும், அதற்கு இடையூருகக் கூட்டாட்சியிலுள்ள இராச்சியங்களால் விதிக்கப்படும் செயற்கைத் தடைகளும் கட்டுப்பாடுகளும் இருக்கக்கூடாதென்பதுமாகும்.

அதற்கேற்ப, இந்தியா முழுவதற்குமான நன்மைகளையும், இராச்சியங்களின் குறிப்பிட்ட நலன்களையும், பிரதேசத்திற்குப் பிரதேசம் மாறுபடும் இந்தியப் பூகோள நிலைமையையும் அரசியலமைப்பு கவனித்தது. ஏற்பாடுகளின் பொதுத் தன்மையைப் பற்றிச் சொல்லும்போது அம்பேத்கர், 'இப் பகுதியில் அடங்கியிருக்கும் ஏற்பாடுகளின்படி, வணிகம், வியாபாரம் இரண்டையும் பூரண சுதந்திரமுடையவைகளாகச் செய்யவேண்டுமென்பது நோக்கமன்று. அதாவது, வணிகமும் வியாபாரமும் சுதந்திரமாக இருக்குமென்னும் ஆதார ஏற்பாட்டிலிருந்து விலகி பாராளுமன்றமும் இராச்சியங்களும் அதிகாரம் செலுத்தக் கூடாதவாறு செய்யவேண்டுமென்பது நோக்கமன்று. வணிக வியாபாரச் சுதந்திரம் பாராளுமன்றத்தாலோ அல்லது இராச்சியங்களின் சட்ட சபைகளாலோ விதிக்கப்படும் சில தடைகளுக்கு உட்பட்டதாகும். அத் தடைகள் பாராளுமன்றத்தால் விதிக்கப்படும்போது இந்தியப் பிரதேசமொன்றில் நிலவும் பொருள்களின் பற்றுக்குறையைப் பற்றியவைகளாக இருத்தல் வேண்டும். அவ்வாறே, இராச்சியங்களால் கொண்டுவரப்படும் கட்டுப்பாடுகள் பொது நலன் அடிப்படையில் நியாயமானவைகளாக இருக்கவேண்டும் என்று குறிப்பிட்டார்.

301ஆம் விதி, பரப்பைப் பொறுத்தவரை பொதுவானதாக இருக்கிறது. 'இப் பகுதியிலிருக்கும் இதர விதிகளுக்குட்பட்டு வணிக வியாபாரம், போக்குவரத்து ஆகிய எல்லாம் இந்தியா வெங்கும் சுதந்திரமாக இருக்கும்' என்று கூறுகிறது. வணிக வியாபாரச் சுதந்திரத்தின் பொதுத் தன்மையை எடுத்துக்கூறிய பிறகு அச் சுதந்திரத்திற்கு இருக்கும் தடைகளை விளக்கமாகச் சொல்கிறது. அத்தகைய தடைகள் ஐந்து இருக்கின்றன.

(1) பொது நலனை முன்னிட்டுப் பாராளுமன்றம் இந்தியாவின் எப் பகுதியிலும் தடைகளை விதிக்கலாம் (விதி 302). இவ் வேற்பாட்டின் நோக்கம் சமநிலையிலிருக்கும் சிறந்த பொருளாதாரத்திற்குப் பாதுகாப்பாகப் பொருள்களின் போக்குவரத்

த்தைக் கட்டுப்படுத்துதலும்,பொருள்கள், பணிகள் ஆகியவற்றின் சரியான அமைப்பை ஏற்படுத்திப் பொருள்கள் சரிவரக் கிடைக்கும் நிலையை ஏற்படுத்துதலுமாகும். நாட்டின் ஒரு பகுதியில் பஞ்சத்தால் மக்கள் பரிதவித்தபோது மற்றொரு பகுதியில் அளவிற்கு அதிகமாக உணவுப் பொருள் கடந்த பல ஆண்டுகளில் கிடைத்துவந்ததைப்போன்ற அனுபவம் ஏற்படக்கூடாது என்பதேயாகும். அத்தகைய மோசமான நிலைமைகளைத் தடுக்கத் தேவையான அதிகாரம் பாராளுமன்றத்திற்கு இல்லாவிட்டால், வணிக வியாபார சுதந்திரம் நன்மைக்குப் பதிலாக வாழ்க்கைச் சுதந்திரத்திற்கே கேடு விளைவிப்பதாகிவிடும்.

(2) வணிக வியாபாரப் பொருள்களின் தாராள நடமாட்டத்தைக் கட்டுப்படுத்துவதற்குப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் தரப்பட்டிருந்தாலும்,இது சம்பந்தமாகப் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்கள், சாதாரணமாக ஒரு சார்புத் தன்மையுடையவைகளாக இருத்தலாகாது. சான்றாக, ஓர் இராச்சியத்திற்குப் பதிலாகப் பிறிதோர் இராச்சியத்தை அது பரிந்துகொள்ளலாகாது. ஆனால், நாட்டின் ஏதேனுமொரு பகுதி, பொருள்கள் பற்றாக்குறையால் பாதிக்கப்படுகிறபொழுது அத்தகைய நிலைமையைச் சமாளிக்கப் பட்சபாதகமான சட்டத்தையும் பாராளுமன்றம் இயற்றலாம் (விதி 303).

(3) ஓர் இராச்சிய சட்டசபை மற்ற இராச்சியங்களிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பொருள்களுக்கு அதேமாதிரி அந்த இராச்சியத்தில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்கு வரி விதிக்கப்படுமானால், வரி விதிக்கலாம். ஓர் இராச்சிய சட்டசபை பொதுநலன் கருதி அந்த இராச்சியத்திற்குள் வணிக வியாபாரங்களுக்கு நியாயமான கட்டுப்பாடுகளை விதிக்கலாம் (விதி 304). விசேஷ நிலைமைகளில், இராச்சியங்களுக்கு இடையேயான வணிகம், வியாபாரம் ஆகியவற்றை ஒழுங்குபடுத்த இங்கு உசித அதிகாரம் தரப்பட்டிருப்பதைக் காணலாம். ஆனால், இது மத்தியக் கட்டுப்பாட்டிற்குட்பட்டது. இதன்படி,அத்தகைய கட்டுப்பாடுகளை விதிக்கப் பிரேரேபிக்கும் மசோதா எதுவும் ஜனாதிபதியின் முன்-அனுமதி பெற்றபிறகே இராச்சிய சட்டசபையில் தாக்கல் செய்யப்படவேண்டும். இதன் நோக்கம் வெளிப்படை. பிரதேச அல்லது மாநிலப் பற்றுக் காரணமாகவும், இந்தியா முழுமைக்குமான நன்மைகளை நோக்கமாகக் கொள்ளாமலும் புது மசோதாவோ அல்லது நடைமுறையிலிருக்கும் சட்டமொன்றை மாற்றுவதற்கான மசோதாவொன்றோ இராச்சிய சட்டசபையொன்றில் தாக்கல் செய்யப்படுமானால் அதற்கு

அனுமதி தருவதை ஜனாதிபதி விரும்பினால் தராது நிறுத்திவைக்கலாம். அம் மசோதா பொதுநலனடிப்படையிலும், விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் நியாயமானவைகளாகவும் இருக்கின்றனவா என்று அறிவதற்கு ஜனாதிபதிக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும்.

(4) 305ஆம் விதியின்படி அரசியலமைப்பு ஆரம்பமான போது வழக்கிலிருந்த வரிபற்றிய சட்டங்கள் இராச்சியங்களுக்கிடையிலான வணிக வியாபாரச் சுதந்திரத்தை மீறியவையாக இருந்தாலும், ஒழுங்குபடுத்துவதற்குப் பாராளுமன்றத்திற்குள்ள அதிகாரத்திற்குப் புறம்பாக இருந்தாலும், அவைகள் பாதுகாக்கப்பட்டன. அதே சமயத்தில் அச் சட்டங்களில் தேவையான மாறுதல்களை ஜனாதிபதி விருப்பம்போலச் செய்வதற்கு அவருக்கு அதிகாரம் தரப்பட்டிருந்தது. இவ் விதி இப்போது இருக்கும் வடிவத்தில் 1955ஆம் ஆண்டில் அரசியலமைப்பிற்குக் கொண்டுவரப்பட்ட நான்காவது மாற்றத்தினால் செய்யப்பட்டதாகும். அது, அம் மாற்றம் கொண்டுவரப்படுவதற்கு முன்பு, இராச்சியங்களின் ஏகபோக உரிமைகளுக்காக இயற்றப்பட்ட சட்டங்களையும் காப்பாற்றுகிறது. ஒவ்வொரு கட்டுப்பாடும் அதன் நோக்கத்திற்குத் தகுந்தாற்போல நியாயமானதாக இருக்கவேண்டுமென்பது, உச்ச நீதிமன்றத்திற்கு நியாயமான தன்மையை ஆராயவும், நியாயம் வழங்கவும், அதன் கருத்துப்படி நியாயமற்றதென்று தோன்றினால் செல்லத்தகாததாகத் தீர்ப்பளிக்கவும் போதுமான அதிகாரத்தைத் தருகிறது.

(5) 307ஆம் விதியின்கீழ், 301 முதல் 304 வரையிலுமுள்ள விதிகளின் நோக்கங்களைச் செயலுக்குக் கொண்டுவர அவசியமான அதிகாரியொருவரை நியமிக்கவும், அவருக்கு அவசியமான அதிகாரங்களை உசிதம்போலத் தரவும் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. இந்த ஷரத்தைப்பற்றிக் கூறும் போது, அம்பேத்கர், '(அது) அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வழக்கிலிருக்கும் இராச்சியங்களுக்கிடையேயான கழகத்தைப் (Inter-State Commission) போன்றதோர் அதிகாரக் கழகத்தைப் பாராளுமன்றம் ஏற்படுத்துவதற்கு உதவுமொரு விதியாகும். அவ்வதிகாரி அல்லது அதிகாரக் கழகத்தைப்பற்றித் திட்டவட்டமாகச் சொல்லாததால், பாராளுமன்றம் அதன் விருப்பம்போல ஓர் அதிகாரி அல்லது கழகத்தை நியமிக்கச் சுதந்திரம் வழங்குவது விரும்பத்தக்கதென்று கருதப்பட்டது' என்று கூறினார். ஆஸ்திரேலியாவில்கூட இராச்சியங்களுக்கிடையேயான கழகம் (Inter-State Commission) வணிகம், வியாபாரம் ஆகிய துறைகளில் சிறந்த பணியைச் செய்துவருகிறது.

இராச்சியங்களுக்கிடையேயான விற்பனை, வாங்கல் மேல்வரிகள் (விதி, 286)

பொருள்கள் விற்பனை, வாங்கல்பற்றிய அரசியலமைப்பு ஏற்பாடுகள் மூல அரசியலமைப்பு நகலில் கிடையா. அரசியல் நிர்ணய சபையின் அலுவல்கள் முடியுந் தறுவாயில் மாறுதல்கள் மூலமாக அம்பேத்கரால் அவை கொண்டுவரப்பட்டன. அவ் வேற்பாடுகளின் அவசியம்பற்றிப் பேசும்போது அவர் கூறிய தாவது :

'நகல் அரசியலமைப்புத் திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ள நிதி முறை எனக்குத் தெரிந்த இதர நிதிமுறைகளினும் சிறந்ததாக இருப்பினும், அதில் ஒரு குறையிருக்கிறது. அக் குறை, மாநிலங்கள் (இராச்சியங்கள்) அவைகளின் வகைவளங்களுக்கு மத்திய அரசாங்கத்தினுல் தரப் படும் உதவித் தொகைகளைப் பெரும்பாலும் சார்ந் திருக்குமாறு செய்திருப்பதாகும்.....................ஆகை யால், மத்திய அரசாங்கத்தை இராச் யங்கள் மிக அதிகமான வகை வளங்களுக்கும் சார்ந்திருக்கும் போது, சட்டபூர்வ அரசாங்க நோக்க அடிப்படையில், குறைந்தது ஒரு வருமான வகை வளத்தையாவது மாநிலங்களிடம் விடுவது விரும்பத்தக்கதாகுமென்று நான் கருதுகிறேன்.'

பண்டங்களை வாங்குதல அல்லது விற்பதற்காக வரிகள் போட்டு வருமான வளத்தைப் பெற இராச்சியங்களுக்கு அதி காரம் தருகிறபோது, அவ் வரி விதிக்கும் அதிகாரம் இராச்சியங் களுக்கிடையிலான வணிக,வியாபாரச் சுதந்திரத்தைப் பாதிக்கும் அளவிற்கு விட்டுவிடக்கூடாது என்று கருதப்பட்டது. எனவே, விதி 286 (1) எந்த இராச்சியமும் (அ) இராச்சியத்திற்கு வெளியே அல்லது (ஆ) இந்தியப் பகுதிக்குள் பொருள்களை இறக்குமதி செய்யும்போதோ அல்லது பொருள்களை வெளியே ஏற்றுமதி செய்யும்போதோ விற்பனை அல்லது வாங்குதலுக்காக வரி போடக்கூடாதென்று விதிக்கிறது. எனினும், அவ் விதியின் (அ) உபபிரிவிற்கு ஒரு விளக்கமிருக்கிறது. அது, 'ஓர் இராச்சியத் தின் கொள்முதலுக்காக' அந்த இராச்சியத்திலேயே பொருள்கள் தரப்படும்போது, பொருள்களைப்பற்றிய பொதுச் சட்டத் தின்கீழ் அவை இதர இராச்சியமொன்றில் விற்கப்பட்டு அல்லது வாங்கப்பட்டிருந்தாலும், எந்த இராச்சியத்தில் பொருள்கள் உண்மையாக இறக்கப்பட்டனவோ அங்குதான் வாங்குவதோ விற்பதோ ஏற்பட்டதாகக் கொள்ளவேண்டும்' என்று வகை செய்கிறது. 286ஆம் விதியில் (2)ஆம் பிரிவு, பாராளுமன்றத்

தால் அனுமதி அளிக்கப்பட்டதற்கு மாறாக, 'இராச்சியங்களுக்கு இடையிலான வணிகத்திலோ அல்லது வியாபாரத்திலோ பொருள்கள் விற்பனை அல்லது வாங்கல் நடைபெற்றிருக்கு மாஞல் 'அவற்றின்மேல் எந்த இராச்சியமும் வரி விதிக்கக் கூடாது' என்கிறது. கடைசியாக, அதே விதியின் (3)ஆம் பிரிவின் கீழ், ஓர் இராச்சிய சட்டசபை, ஜனுதிபதியின் இசைவு தரப் பட்டிருந்தாலல்லது, பாராளுமன்றத்தால் பொதுமக்களுக்கு அத்தியாவசியமான பண்டமென்பதாக அறிவிக்கப்பட்ட பண்டத்தின் விற்பனை, வாங்குதல் ஆகியவற்றின்மேல் வரி விதிக்கக்கூடாதெனத் தடுக்கப்பட்டிருந்தது.

எனினும், இந்த ஷரத்துகள் அடிப்படையில் இராச்சியங் களால் கொண்டுவரப்பட்ட விற்பனைவரிச் சட்டங்களின் நிறை வேற்றம் விரைவாகவே பல நடைமுறை இடர்ப்பாடுகளைத் தோற்றுவித்தது. அவைகளால் ஏற்பட்ட சர்ச்சைகள் உயர் நீதி மன்றங்களிலிருந்து அப்பீல்களாக உச்ச நீதிமன்றத்தை அடைந் தன. ஆனுல், உச்ச நீதிமன்றத்தாலும் முற்றிலும் ஏற்கத்தக்க விளக்கத்தைத் தர இயலவில்லை. அந் நீதிமன்றம் அதனுடைய தீர்ப்புகளில் பிளவுபட்டிருந்தது. ஒரு சமயம் அந் நீதிமன்றம் குறுகிய பெரும்பான்மையில் இப் பொருளைப்பற்றிய அதனுடைய முன் தீர்ப்புகளை மாற்றியது.

அந் நீதிமன்றத்தின் பிளவுபட்ட தீர்ப்பும், அதனுடைய முன் நிலைமையை அதுவே மாற்றியமைத்ததும், இராச்சியங்களுக் கிடையிலான விற்பனைவரிப் பிரச்சினையைப் புது அடிப்படையில் கொண்டுவிட்டன. அம் முடிவு, இராச்சியங்களுக்கிடையிலான எந்த வியாபார பேரத்தின்மீதும் பாராளுமன்றம் சட்டமியற்று வதனுல் வேறுவிதமாக முடிவு செய்தாலல்லது, இராச்சியங்கள் விற்பனைவரி விதிப்பதைத் தடை செய்தது. நீதிபதிகளினுடைய பல திறப்பட்ட கருத்துகளின் விளைவுதான் அரசியலமைப்புக்குக் கொண்டுவரப்பட்ட ஆருவது மாற்றம். அம் மாற்றம், 286ஆம் விதியின் (1) பிரிவை அது முன்பிருந்தவாறே விட்டுவிட்டு, மற்றவைகளைப் பின்வரும் ஏற்பாடுகளால் மாற்றி அமைத்தது :

'286 (2) பாராளுமன்றச் சட்டத்திஞல், பிரிவு (1)-ல் சொல்லப்பட்ட ஏதாவதொரு வழிப்படி, எப்போது பொருள் களின் விற்பனை அல்லது வாங்கல் நிகழ்கிறதென்பதைத் தீர்மானிப்பதற்குக் கொள்கைகளை உருவாக்கலாம்.'

'286 (3) இராச்சியமொன்றின் எந்தச் சட்டமும், பாராளு மன்றத்தால், இராச்சியங்களுக்கிடையே நடைபெறும் பொருள்

களின் விற்பனை அல்லது வாங்கல் விசேஷ முக்கியத்துவமுடைய தென்று சட்டமொன்றினால் அறிவிக்கப்படும்போது, அவற்றின் மேல் விதிக்கின்ற வரி (அல்லது), வரி விதிப்பதற்கு அதிகாரம் வழங்குதல் ஆகியவை, விதிக்கப்படும் முறை, விகிதங்கள், இதர விஷயங்களெல்லாம் பாராளுமன்றத்தால் குறிப்பிடப்படுகின்ற நிபந்தனைகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டிருக்க வேண்டும்.'

இந்த ஷரத்துகளின்படி, மேலே சொல்லப்பட்ட கொள்கைகளைக்கொண்ட 1956ஆம் ஆண்டு மத்திய விற்பனைவரிச் சட்டத்தைப் பாராளுமன்றம் இயற்றியது. அச் சட்டம் சிக்கல் நிறைந்த அம்சங்களையுடைய இப் பொருளை ஒழுங்குபடுத்த உதவுகிறது.

# 32. நெருக்கடிகால ஏற்பாடுகள்

அரசியலமைப்பின் நெருக்கடிகால ஏற்பாடுகளைப்பற்றிய அத்தியாயத்தைப்போல, வேறு எந்த அத்தியாயமும் குறைகூறு வோரின் தீவிரத் தாக்குதல்களுக்கு ஆளாகவில்லை. இவ் ஏற் பாடுகள் விவாதிக்கப்பட்டபோது, அரசியல் நிர்ணய சபை மிகக் கொந்தளிப்பான காட்சிகளைக் கண்டது. சபையின் பல முக்கிய உறுப்பினர்கள் அரசியலமைப்பில் இவ் ஏற்பாடுகள் சேர்க்கப் படுவதை, இதர பகுதிகளிலுள்ள ஜனநாயக ஏற்பாடுகளுக்கு அவை மாறுபட்டவை என்று கருதியதால் எதிர்த்தார்கள். எனினும், பெரும்பான்மையான உறுப்பினர்கள், புதிதாக ஏற் படுத்தப்பட்ட யூனியனைப் பிரிவினைச் சக்திகள் நிலைகுலையாமல் தடுக்க எடுத்துக்கொள்ளப்படும் முன்னெச்சரிக்கை நடவடிக்கை யாகக் கருதி, தயக்கத்துடன் அவற்றைச் சேர்க்க இசைந்தார்கள்.

அரசியலமைப்பு வெவ்வேறு வகைப்படும் மூன்று நெருக்கடி நிலைமைகளுக்கு வகை செய்கிறது. இவை ஒவ்வொன்றின் விஷயத்திலும் நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்ய ஜனாதிபதி அதிகாரம் தரப்பட்டிருக்கிறார்.

### (1) போர் நெருக்கடி நிலைமை (விதி 352)

போர் அல்லது அயல் ஆக்ரமிப்பு அல்லது உள்நாட்டுக் கலகம் காரணமாக இந்தியப் பாதுகாப்போ அல்லது அதனுடைய ஏதேனுமொரு பகுதியோ பயமுறுத்தப்படுகிற நிலைமை காரணமாகத் தவிர்க்கமுடியாத நெருக்கடி நிலவுகிற தென்றுகருதினால், ஜனாதிபதி அவசர நிலைமைப் பிரகடனம் செய்ய லாம். அதற்குப் பிறகு அப் பிரகடனம் கைவிடப்படலாம். இல்லாவிட்டால், அது பார்ராளுமன்றத்திற்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டும். இரண்டு மாத காலத்திற்குள் பாராளுமன்றம் அதை ஏற்காவிட்டால், அது சக்தியற்றதாகிவிடும்.

அவசரப் பிரகடனம் செய்யப்படுகிறபொழுது மக்கள் சபை கலைக்கப்பட்டிருக்கலாம் அல்லது அதற்குப் பிறகு இரண்டு மாத காலத்திற்குள் கலைக்கப்பட்டிருக்கலாம். எவ்வாறாயினும், அது இராச்சிய சபைக்கு அப்போது தாக்கல் செய்யப்படவேண்டும். கவுன்சில் அதை நிறைவேற்றினாலும், புது மக்கள் சபைக் கூட்டம் ஆரம்பமான முப்பது நாட்களுக்குள் அப்போதும் அது ஆமோதிக்கப்படவேண்டும். அதற்கு மாறாகக் கவுன்சிலே அதை ஆமோதிக்காவிட்டால் அது செயற்பட முடியாது.

உடனடியான ஆபத்திருக்கிறதென்று ஜனாதிபதி கருதுவாரானால், ஆக்ரமிப்போ அல்லது கலகமோ ஏற்படுவதற்கு முன்பே கூட ஜனாதிபதிக்கிருக்கும் அவசரகால அதிகாரம் பயன்படுத்தப் படலாம்.

அவசரப் பிரகடனத்தின் விளைவு (விதிகள் 353-ம் 354-ம்)

அவசர நிலைமை பிரகடனப்படுத்தப்பட்டதும், அதனால் எந்தப் பகுதி பாதிக்கப்பட்டதோ அப் பகுதியில் அரசியலமைப்பின் கூட்டாட்சி ஷரத்துகள் செயலாற்றுவதில்லை. இதன் விளைவாக, யூனியன் அதிகாரம் இருவகைகளில் விரிவுபடுத்தப் படுகிறது. முதலாவது, அவசர நிலைமைப் பகுதியிலிருக்கும் இராச்சிய நிர்வாகத்திற்கு உத்தரவுகள் பிறப்பிக்கும் அளவிற்கு யூனியன் நிர்வாக அதிகாரம் விரிவடைகிறது. இரண்டாவதாக, பாராளுமன்றத்திற்கு இருக்கும் சட்டம் செய்யும் அதிகாரம், இராச்சிய அதிகாரப் பட்டியலிலிருக்கும் பொருள்களின்மேலும் செல்லுபடியாகும். மேலும், அரசியலமைப்பின் நிதித்துறை சம்பந்தப்பட்ட ஏற்பாடுகள் அடிப்படையில் சாதாரணமாக இராச்சியங்களுக்கே ஒதுக்கப்படவேண்டிய ரெவின்யூ தொகையைக் கட்டுப்படுத்துவதற்கோ, தடுப்பதற்கோ உத்தரவிட ஜனாதிபதி அதிகாரம் தரப்பட்டிருக்கிறார். எனினும், அத்தகைய உத்தரவுகள் பாராளுமன்றத்தின் இரு சபைகளினுடைய சம்மதத்திற்கு வைக்கப்படவேண்டும். இவ்வேற்பாடுகள் செயற்படும்போது ஏற்படும் கூடுதல் பயன் முழு அளவிலான ஒற்றை அரசாங்கத் தோற்றமாகும்.

(2) இராச்சியங்களில் அரசியல் சட்டப்படியான அவசர நிலைமை (விதி 356)

கவர்னரிடமிருந்து கிடைத்த அறிக்கையிலிருந்தோ அல்லது இதர வகைகளினாலோ, இராச்சிய அரசாங்கமொன்று அரசியலமைப்பு ஷரத்துகளுக்கேற்ப இயங்கமுடியாத நிலைமையொன்று ஏற்பட்டிருக்கிறதென்று ஜனாதிபதி கருதுவாரானால், அவசர நிலைமையொன்றைப் பிரகடனம் செய்ய அதிகாரம்

அளிக்கப்பட்டிருக்கிறார். அதன் பயனாக, (i) அவரே அந்த இராச்சிய அரசாங்கத்தின் பணிகள் எல்லாவற்றையுமோ அல்லது ஏதாவதொன்றைமட்டுமோ ஏற்கலாம்; அல்லது அவை எல்லாவற்றையுமோ அல்லது ஏதாவது ஒன்றைமட்டுமோ அந்த இராச்சிய கவர்னருக்கோ அல்லது வேறு நிர்வாகக் குழுவிடமோ அவர் அளிக்கலாம். (ii) இராச்சிய சட்டசபையின் அதிகாரங்கள் பாராளுமன்றத்தால் செலுத்தப்படவேண்டியவை என்று அவர் அறிவிக்கலாம். (iii) அவர், அவசரப் பிரகடனத்தின் குறிக்கோளுக்கிணங்க, இயற்கையாக அல்லது காரண காரியமாக ஏற்படும் விளைவுகளுக்கேற்ப, தேவையான ஏற்பாடுகளைச் செய்யலாம். ஆனால், உயர் நீதிமன்றமொன்றிற்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களைத் தானே ஏற்க முடியாது.

அந்த அவசரப் பிரகடனம், போர்க்கால அவசரப் பிரகடனமொன்று எவ்வாறு ஆமோதிக்கப்படவேண்டுமோ அவ்வாறே பாராளுமன்றத்தின் இரு மன்றங்களாலும் ஆமோதிக்கப்படவேண்டும். பாராளுமன்றம் அப் பிரகடனத்தை ஆமோதித்தாலும், அவ்வாமோதிப்பிற்குப் பிறகு ஆறு மாத காலத்திற்குப் பிறகு சாதாரணமாக அது இயங்க முடியாது. அப் பிரகடனம் அதிகபட்சமாக மூன்றாண்டுக் காலத்திற்கு, தொடர்ச்சியாக அடுத்தடுத்து, அவசர நிலைமை தொடர்ந்திருக்க நீடிக்கப்படலாம்.

அவசரப் பிரகடனம், இராச்சிய சட்டசபையின் அதிகாரங்களைச் செலுத்துவதற்குப் பாராளுமன்றத்திற்கு அனுமதி தந்தால், பின்னால் சொல்லப்படுகின்ற இரண்டு வழிகளில் ஏதாவதொன்றைப் பாராளுமன்றம் பின்பற்றலாம். நிதி சம்பந்தப்பட்டவைகள் உள்பட எல்லாச் சட்டங்களையும் அது இயற்றலாம். ஆனால், மேற்பட்ட அதிகமான இவ் வேலைகளைச் செய்வதற்குப் பாராளுமன்றத்திற்கு இயலாமற்போனால், இராச்சிய சட்டசபையின் அதிகாரங்களை ஜனாதிபதிக்கு வழங்கலாம் அல்லது வேறு பொருத்தமான ஓர் அதிகாரி அல்லது அதிகாரக் குழுவிற்கு இவ்வதிகாரத்தை வழங்குவதற்கு ஜனாதிபதிக்கு அதிகாரமளிக்கலாம். மக்கள் சபை அதனுடைய கூட்டத் தொடரில் இல்லாமற்போனால் பிறகு அது அளிக்கவேண்டிய அனுமதிக்குட்பட்டு, இராச்சியக் குவிக்கப்பட்ட நிதியிலிருந்து செலவினங்களை அனுமதிக்க ஜனாதிபதிக்குப் பாராளுமன்றம் அதிகாரம் வழங்க உரிமை தரப்பட்டிருக்கிறது. மேலே சொல்லப்பட்ட ஆட்சிக் குழுக்கள் எதனாலும் இயற்றப்பட்ட சட்டமெதுவும், அவசரப் பிரகடனம் விலக்கப்பட்டதிலிருந்து ஓராண்டு முடிவுறும்போது செல்லுபடி ஆகாதென்ற ஏற்பாடும் செய்யப்பட்டிருக்கிறது.

**ஆதார உரிமைகளின் தாற்காலிக விலக்கு (விதிகள் 358, 359)**

மேலே விவாதிக்கப்பட்ட இரண்டு வகைகளில் ஏதாவ தொன்றின்கீழ் பிரகடனப்படுத்தப்பட்ட நெருக்கடி காலத்தில், அரசியலமைப்பின் 19ஆம் விதிப்படி உறுதியளிக்கப்பட்டிருக்கும் ஆதார உரிமைகளைத் தாற்காலிகமாக விலக்குவதற்கு இராச்சியத் திற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. 'இராச்சியம்' என்னும் சொல் ஆதார உரிமைகள்பற்றிய அத்தியாயத்தில் எக் கருத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கிறதோ, அதேகருத்தில் இங்கும் உபயோ கப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆதார உரிமைகளை வழங்குவத னின்றும் தடைசெய்யும் அதிகாரம் பாராளுமன்றத்தோடுமட்டு மல்லாமல், யூனியன் நிர்வாகத்திற்கும் கீழ்நிலை ஆட்சிக் குழுக்க ளுக்கும் அளிக்கப்பட்டிருக்கிறதென்பது அதன் பொருளாகும். ஆதார உரிமைகளிலொன்றைச் செயற்படுத்தவேண்டுமென்று நீதிமன்றமொன்றைக் கேட்டுக்கொள்வதற்கிருக்கும் உரிமையை யும் நிறுத்திவைக்க ஜனாதிபதிக்கு அரசியலமைப்பு அதிகாரம் வழங்குகிறது. ஆதார உரிமைகள்பற்றிய அத்தியாயமே நெருக் கடி காலத்தில் நிறுத்திவைக்கப்படலாமென்பது அதன் பொரு ளாகும். இருப்பினும், அத்தகைய உத்தரவுகள் எவ்வளவு விரை வாக முடியுமோ அவ்வளவு விரைவாகப் பாராளுமன்றத்தின் அனுமதிக்கு அனுப்பப்படவேண்டும்.

### (3) நிதி நெருக்கடி நிலைமை (விதி 360)

நிதி ஸ்திரத்தன்மை அல்லது இந்தியக் கடன் அல்லது அத னுடைய பகுதி பயமுறுத்தப்படுகின்ற நெருக்கடி நிலைமை யொன்று ஏற்பட்டிருக்கிறதென்று ஜனாதிபதி திருப்தியடைவா ரானால், நிதி நெருக்கடி நிலைமையைப் பிரகடனப்படுத்தலாம். மற்ற இருவகை நெருக்கடி நிலைமையைப்போன்றே இவ் வகை யைச் சேர்ந்த பிரகடனமும் பாராளுமன்றத்தால் ஏற்கப்பட வேண்டும்.

நிதி நெருக்கடி காலத்தின்போது, 'இராச்சிய அரசாங்க மொன்றிற்குச் சில சரியான நிதி முறைகளைப் பின்பற்றவேண்டு மென்று கட்டளைகள் பிறப்பிக்குமளவிற்கு யூனியன் நிர்வாக அதிகாரம் அதிகப்படுகிறது;' அல்லது அந் நோக்கத்திற்காக ஜனாதிபதி விரும்பும் வேறு கட்டளைகளைப் பிறப்பிக்கவும் முடியும். அத்தகைய கட்டளைகள், அரசாங்க ஊழியர்களது சம்பளங்கள், படிகள், உயர் நீதிமன்ற, உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் சம்பளங்கள், படிகள் உட்பட எல்லாவற்றையும் குறைக்குமாறு கோருவதையும் கொண்டதாகும்.

அரசியல் அமைப்புச் சபையில் திறனாய்வு

இந்த ஏற்பாடுகள் கண்மூடித்தனமான, எதேச்சாதிகாரத் தன்மையை உடையவைகளாக இருப்பதாக அரசியலமைப்புச் சபையில் திறனாய்வாளர்கள் குறிப்பிட்டனர்.

கே. டி. ஷா என்பவர், 'உயிரற்றதும் பிற்போக்கானதுமான இந்தச் சிறந்த, புகழின் உச்சியிலிருக்கும் இவ் வத்தியாயத்தின் ஏற்பாடுகளில் இரு தெளிவான கருத்துகள், அடிப்படையான வைகளாகவும் செல்வாக்குடையவைகளாகவும் இருப்பதை எவ ரும் அறிய முடியும் என்பதை நான் காண்கிறேன். அவ் விரு கருத்துகளாவன: (1) அங்கங்களுக்கெதிராக மத்திய அரசாங் கத்திற்குத் தனி அதிகாரங்களைக் கொடுத்திருப்பது. (2) மக்க ளுக்கெதிராக அரசாங்கத்தை வலிமையுடையதாகச் செய்திருப் பது. குறிப்பாக இவ் அத்தியாயத்தின் ஷரத்துகளையும், பெரும் பாலும் ஒவ்வொரு விதியிலும் தரப்பட்டிருக்கின்ற அதிகாரங் களையும் சீர்தூக்கிப் பார்க்கும்போது, சுதந்திரம் அல்லது ஜன நாயகம் என்னும் பெயரொன்றே இவ் அரசியலமைப்பில் எஞ்சி யிருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது' என்று குறை கூறுகிறார்.

மற்றொரு திறனாய்வாளரான எச். வி. காமத் என்பார், 'இவ் அத்தியாயமொன்றின் துணையைமட்டும் கொண்டு, கடந்த பல ஆண்டுகளில் நாம் உயர்வாக எண்ணிவந்த குறிக்கோள்களுக்கும் கொள்கைகளுக்கும் நேர்மாறான, ஒரு சர்வாதிகார அரசை, போலீஸ் இராச்சியத்தை ஏற்படுத்துவதற்கான அடிப்படை யைப் போட விரும்புகிறோம். இலட்சக்கணக்கான அப்பாவி ஆண்கள் பெண்களின் உரிமைகள் தொடர்ந்த ஆபத்திலிருக்கும் ஓர் அரசை அமைக்க விரும்புகிறோம். இடுகாட்டு அமைதியைப் போல, பாலைவன சூன்யத்தைப் போன்ற அமைதி நிலவும் அரசை ஏற்படுத்த விழைகிறோம்' என்று கடுமையாகத் தாக்கி ஞர். எச். என். குன்ஸ்ரூவின் கருத்துப்படி அவசரகால நிதி ஏற்பாடுகள், இராச்சியங்களின் நிதிச் சுதந்திரத்திற்குப் பெருந் தீங்கு விளைவிப்பனவாகும்.

அவசரகால ஏற்பாடுகள்பற்றிய அத்தியாயம் முழுவதும் தீவிரத் தாக்குதலுக்காளானபோதிலும் அவ் அத்தியாயத்தின் இரு விதிகள் அத் தாக்குதலுக்கு முக்கியமான இலக்காகவிருந்தன. இவை 19ஆம் விதியடிப்படையில் உறுதியளிக்கப்பட்டிருந்த ஆதார உரிமைகளின் தாற்காலிக விலக்கைப்பற்றியதும், உச்ச நீதிமன்றம் உள்ளிட்ட நீதிமன்றங்கள்மூலமாக ஆதார உரிமை

களைத் தொடர்ந்து நிறைவேற்றுமாறு வசதி செய்துதந்த ஏற்பாட்டின் விலக்கைப்பற்றியதுமான 358, 359ஆம் விதிகளாகும்.

திறனாய்வு அடிப்படையிலெழுந்த இத் தாக்குதல்களெல்லாம் முக்கியமானவையாகும். அவை அரசியலமைப்புச் சபை உறுப்பினர்கள் பலருடைய அச்சத்தையும், மக்களில் பெரும்பாலோருடைய பயத்தையும் எதிரொலித்தன. எனினும், பத்தாண்டுகளுக்குப் பிறகு அவ் அச்சங்கள்பற்றி மீண்டும் சிந்திக்கின்றபோது, அவற்றின் பெரும்பகுதி கற்பனையென்பதும், தீவிரக் குறிக்கோள்வாத அடிப்படையிலெழுந்ததென்பதும், அரசியலமைப்பின் பொதுத் தன்மையைச் சரியாகப் புரிந்துகொள்ளாததாலெழுந்ததென்பதும், பொதுவாகக் கூட்டாட்சி அரசியலமைப்புகளின் இயங்கு முறையை அறிந்துகொள்ளாததால் ஏற்பட்டதென்பதும், எவராலும் உணரப்படுவதாகும். அரசியல் நிர்ணய சபையினுள்ளும் புறத்தும் அரசியலமைப்புத் தயாரிக்கப்பட்டபோது வெளியிடப்பட்ட அச்சங்களும், தீவிரத் தாக்குதல்களும், அவற்றின் தீவிரத் தாக்குந் தன்மையை இழந்துவிட்டன என்பது கடந்த சில ஆண்டுகளில் பெற்ற அனுபவத்திலிருந்து தெரியவரும். முதல் பன்னிரண்டு ஆண்டுகளில் அரசியலமைப்பு சில தெளிவான ஏற்கத்தக்க போக்குகளை வெளிப்படுத்தியிருப்பதால், இக் குறைகளைப்பற்றிய ஆய்வு மிகவும் எளிதாகிறது. அத்தகைய ஆய்விற்கு, இக் குறைகூறல்களைப் பின்வரும் தலைப்புகளில் வகைப்படுத்திக்கொள்ளலாம் :

(1) அரசியலமைப்பின் கூட்டாட்சித் தன்மை அழிக்கப்பட்டு யூனியன் எல்லாம்வல்ல (all powerful) வலிமையுடையதாக மாறும்.

(2) அரசின் அதிகாரங்கள், அதாவது, யூனியனுடையவும் அங்கங்களினுடையவுமான அதிகாரங்களெல்லாம் யூனியன் நிர்வாகப் பொறுப்பில் வரும்.

(3) ஜனாதிபதி சர்வாதிகாரியாவார்.

(4) இராச்சியங்களில் நிதியதிகாரம் விலக்கப்படும்.

(5) ஆதார உரிமைகள் அர்த்தமற்றவைகளாகிவிடும். அதன் விளைவாக அரசியலமைப்பின் ஜனநாயக அடிப்படைகள் அகற்றப்படும்.

இவைகளை ஒன்றன்பின்ஒன்றாக ஆராயலாம். நெருக்கடிப் பிரகடனத்தின் காரணமாக அரசாங்கத்தின் கூட்டாட்சித் தன்மை ஒற்றையாட்சித் தன்மையையுடையதாக மாறுதலடையும் என்பது உண்மை. ஆனால், இது தீவிர தேசிய நெருக்கடி நிலவுங்

காலத்தில், ஏறத்தாழ எல்லாக் கூட்டாட்சிகளையும் பற்றிய உண்மையாகும். நாட்டின் பாதுகாப்பும் ஸ்திரமான நிலையை ஏற்படுத்துவதும் யூனியனின் பொறுப்பாகும். தேசப் பாதுகாப்பு எந்த அளவிற்கு முக்கியமானதோ அந்த அளவிற்குக் கூட்டாட்சித் தன்மையைப் பாதுகாக்கவேண்டுமென்பது முக்கியமான தன்று. இவையிரண்டிற்கும் இடையே ஒருகால் மோதலேற்படுமானால், தேசப் பாதுகாப்பே மேலானதாகக் கொள்ளப்படவேண்டும். ஆனால், அத்தகைய நிலைமை அரிதாக ஏற்படக்கூடிய தொன்றாகும். எனவே, நெருக்கடி நிலைமையைச் சமாளிப்பதற்கு ஏற்கப்பட்டுள்ள ஏற்பாடுகள் அபரிமிதமான முன்னெச்சரிக்கையின் பயனாகும்.

ஓர் இராச்சியத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுமாறு மத்திய அரசாங்கம் அழைக்கப்படக்கூடிய திட்டவட்டமான சந்தர்ப்பங்கள் விவரமாகச் சொல்லப்படலாம். சான்றாக, மிகப் பரந்த அளவில் ஏற்படும் உள்நாட்டுக் கலவரங்கள் அல்லது அந்நியர் ஆக்ரமிப்புக் காரணமாகவும், இன்னும் இதர காரணங்களாலும் இராச்சியத்திலுள்ள அரசாங்கம் ஸ்தம்பித்துச் சட்டத்தையும் அமைதியையும் பராமரிக்கமுடியாமற் போகலாம். இத்தகைய சந்தர்ப்பத்தில், மத்திய அரசாங்கத் தலையீடில்லாவிடில் குழப்பமே அங்கு ஏற்படும். அப்போது அங்கு அரசியல் செயலற்றுப்போகக்கூடும். இக் கருத்து மிகவும் கவனமாக ஆராயப்படவேண்டும். அமைச்சவை எதுவும் அமைக்கப்படமுடியாதபோதோ அல்லது அமைச்சவைகள் ஏற்பட்டாலும் அவைகள் நிலையற்றவைகளாக இருக்கின்றபோதோ அரசியல் செயலற்ற நிலைமை ஏற்படலாம். அரசாங்கம் ஸ்திரமற்றதாக இருக்கும்போது சாதாரணமாக அரசியலமைப்பின்படி கீழ்ச்சபையைக் கலைத்துப் புதியதாக மீண்டும் அதை அமைப்பது சரியான முறையானதாக இருக்கும். கலைக்கப்பட்ட பிறகும், அதே உட்குழுக்கள் பிராந்தியச் சட்டசபையில் இடம்பெறுமானால் அவை அமைச்சவையொன்று ஏற்படுவதை முடியாததாக ஆக்குகின்றபோது மத்திய அரசாங்கம் தலையிடுவது தவிர்க்கமுடியாததாகும். இதற்கடுத்தது மூன்றாவது நிலையான பொருளாதார முட்டுக்கட்டை ஏற்படுவதுமிருக்கிறது.

அரசியலமைப்புத் தயாரிக்கப்பட்டபோது எந்த நிலைமையையும் சமாளிப்பதற்கு வலிமைமிக்க யூனியன் அவசியமென்பது பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. காஷ்மீரில் நடைபெற்ற சண்டை, இந்திய யூனியனில் சேருவதற்கெதிரான சில சுதேச மன்னர்களின் அடங்காப்பிடாரித்தனம், ஹைதராபாத் இராச்சி

வத்தில், தெலுங்கானுப் பகுதியில் ஏற்பட்ட ஆயுதமேந்தியவர்களின் ஊடுருவல், ஹைதராபாத்தில் 'போலீஸ் நடவடிக்கை' எடுக்கவேண்டியிருந்ததற்கான சூழ்நிலை போன்றவையும் இதர பிற கலகச் சக்திகளும் புதிதாக ஏற்படுத்தப்பட்ட யூனியனின் அடிப்படைகளையே ஆட்டவைத்தன. அவசரகால ஏற்பாடுகளைப் பற்றிக் குறை கூறுபவர்கள், பல நூற்றுண்டுகளில் முதன் முதலாக, நாடு முழுவதையும் தழுவிய ஒற்றை நிர்வாகத்தை இந்தியா ஏற்படுத்தியிருப்பதை மறந்துவிட்டதாகத் தோன்றுகிறது. மொழிப்பற்று, பிராந்திய அல்லது மாநிலப் பற்று போன்ற உள்ளிருந்து அல்லது வெளியிலிருந்து தோன்றுகின்ற கலவர சக்திகளால் அழிக்கப்படுவதற்கு விடமுடியாத அளவிற்கு யூனியன் ஒரு தலைசிறந்த, உயர்ந்த மதிப்புள்ள சாதனையாகும். இராச்சியங்கள் புறப் பயமுறுத்தலை வெற்றிகரமாகச் சமாளிக்க முடியாதவையென்பதோடு, உள்நாட்டில் ஏற்படும் நெருக்கடியைச் சமாளிப்பதிலும் எப்போதும் நம்பத்தகாதவைகளாகும். ஆட்சியதிகாரம் சிதறியிருக்குமானுல் நெருக்கடியொன்றின் போது நாசமேற்படும்.

முதல் பன்னிரண்டு ஆண்டு அரசியலமைப்பு வரலாறு இவ்வேறுபாடுகளின் சிறப்பை அவசியமானதென்று உறுதிப்படுத்துகிறது. இக் காலத்தில் ஒருசில இராச்சியங்களில் சட்டபூர்வமான அரசாங்கம் செயற்படமுடியாத அவலநிலை ஏற்பட்டதால், ஆறு தடவைகளில் ஜனுதிபதி நெருக்கடி நிலைமையைப் பிரகடனம் செய்யவேண்டியதாயிற்று. முதலாவது அத்தகைய பிரகடனம் பஞ்சாபில் 1951ஆம் ஆண்டில் பார்கவா மந்திரிசபை இராஜினுமா செய்தபோது மாற்று மந்திரிசபை அமைக்க முடியாததால் செய்யப்பட்டது. அவ் அவசரப் பிரகடனம் பஞ்சாப் கவர்னரால் அனுப்பப்பட்ட அறிக்கையை ஆதாரமாகக்கொண்டு செய்யப்பட்டது. அந்த நெருக்கடி காலத்தின்போது இராச்சிய ஆட்சி நிர்வாகத்தை ஏற்று நடத்த கவர்னருக்கே ஜனுதிபதி அதிகாரம் தந்தார். அதேசமயத்தில் இராச்சியத்தின் சட்ட அதிகாரம் பாராளுமன்றத்திற்குக் கொடுக்கப்பட்டது. ஆனுல், நெருக்கடி நிலைமை மிகக் குறுகிய காலத்திற்கே இருந்தது. அதன் பிறகு பாராளுமன்ற அரசாங்கம் மீண்டும் ஏற்படுத்தப்பட்டது. அவசியம் என்று கருதப்பட்ட காலத்திற்குப் பிறகு, இராச்சியத்தின் நேரடிக் கட்டுப்பாட்டை வைத்துக்கொள்ள விருப்பமில்லையென்பதை மத்திய அரசாங்கம் ஆர்வத்தோடு தெளிவுபடுத்தியதோடல்லாமல், வட்டார அரசியல் நிலைமைகள் ஸ்திரமடைந்து விரைவாகவே மந்திரிசபையொன்று அமைக்கப்படுவதற்கும் அது உதவி செய்தது.

அவசரகாலப் பிரகடனத்திற்கான இரண்டாவது சந்தர்ப்பம் 1951-ல் முதலாவது பொதுத் தேர்தல்களுக்குப் பிறகு பெப்சு (PEPSU) இராச்சியத்தில் நிலையான மந்திரிசபை அமைக்க முடியாமற்போனபோதாகும். முதலில், அங்கிருந்த காங்கிரஸ் மந்திரிசபை விரைவிலேயே சட்டசபையில் அதன் பெரும்பான்மை பலத்தை இழந்தது. அதற்குப் பிறகு ஏற்பட்ட கூட்டு மந்திரிசபை உட்பிளவு காரணமாகத் திறமையோடு சுமுகமாகப் பணியாற்ற முடியவில்லை. அவசர நிலைமை பிரகடனத்தால் இராச்சியச் சட்டசபை கலைக்கப்பட்டது. நெருக்கடி காலத்தில் இராசப்பிரமுகருக்கு (Rajapramukh) நிர்வாகத்திற்கு உதவியாக இருக்கும்பொருட்டு யூனியன் அரசாங்கம், சிவில் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த அனுபவமிக்க ஒருவரை ஆலோசகராக நியமித்தது. ஆறு மாத காலத்திற்குள் தேர்தல்கள் நடைபெற்று காங்கிரஸ் கட்சி நிலையான பெரும்பான்மையோடு மீண்டும் அதிகாரத்திற்கு வந்தது.

மூன்றாவது சந்தர்ப்பம் 1954ஆம் ஆண்டு புதியதாக நிறுவப்பட்ட ஆந்திர இராச்சியத்தில் அசாதாரணமான சூழ்நிலைமைகளில் ஏற்பட்டது. ஆட்சியிலிருந்த பிரகாசம் மந்திரிசபை காங்கிரஸ் கட்சியினாலும் சில சுயேச்சை உறுப்பினர்களாலும் ஆதரிக்கப்பட்டது. ஆனால், அமைச்சவை,;சட்டசபையில் மிகக் குறைவான பெரும்பான்மையைத்தான் பெற்றிருந்தது. மதுவிலக்கு, இராச்சியத்தில் எவ்வாறு அமல்படுத்தப்படுகிறது என்பதைப்பற்றி, குழுவொன்று செய்திருந்த சிபாரிசுகளை நடைமுறைப்படுத்தவேண்டியதை ஒட்டி எழுந்த நெருக்கடியான நம்பிக்கையில்லா வோட்டின்போது அதனுடையஆதரவாளர்கள் பிரிந்து சென்றது அதைப் பதவியினின்றும் வீழ்த்தியது. மந்திரிசபையைத் தோற்கடிப்பதற்கு ஒன்றுசேர்ந்த எதிர்க்கட்சி உறுப்பினர்கள், சுயேச்சை உறுப்பினர்களையும் காங்கிரஸ் அதிருப்தியாளர்களையும் சேர்க்காமல் மூன்று கட்சிகளைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். எனவே, அத்தகைய வெவ்வேறு பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் மந்திரிசபை அமைப்பதற்கு ஒன்றுசேருவது எளிதன்று. அல்லாமலும்,அப்போதிருந்த இராச்சியச் சட்டசபை உறுப்பினர்கள், 1953ஆம் ஆண்டில் ஆந்திர இராச்சியம் ஏற்படுவதற்கு முன்னிருந்த ஒன்றுபட்ட சென்னை இராச்சியச் சட்டசபைக்கு முதல் பொதுத் தேர்தல்களின்போது தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். இந்தச் சூழ்நிலைகளில் பொதுவிருப்பமும் புதுத் தேர்தல்கள் நடத்தப்படுவதையே விரும்பியது. ஆனால், தோற்கடிக்கப்பட்ட பிரகாசம் மந்திரிசபை, தேர்தல்கள் நடைபெறுவதற்கான காலம்வரைக்கும்கூடத்தாற்காலிக மந்திரிசபையாகக்

கூடத் தொடர்ந்திருக்க விருப்பமற்றதாக இருந்தது. கவர்னருடைய அறிக்கை இவ் விஷயங்களைத் தெளிவுபடுத்தியதால் அதன் அடிப்படையில் ஜனாதிபதி அவசர நிலைமையைப் பிரகடனம் செய்து, நிர்வாகத்தைத் தானே மேற்கொண்டார். எனினும், 1954ஆம் ஆண்டில் நடைபெற்ற புதுத் தேர்தலுக்குப் பிறகு நிலையான மந்திரிசபை அமைக்க
முடிவுக்கு வந்தது.

நான்காவது தடவையாக, முன்னாள் திருவாங்கூர் கொச்சி இராச்சியத்திலிருந்த காங்கிரஸ் மந்திரி சபை, சட்டசபையில் அதன் பெரும்பான்மையை இழந்து இராஜினமா செய்தபோது 1956-ல் நெருக்கடி நிலைமை பிரகடனப்படுத்தப்பட்டது. அப்போது அங்கு மாற்று மந்திரிசபையொன்றை அமைப்பதற்கு வேறு எக் கட்சியாலும் முடியாததால் யூனியன் நிர்வாகத்தை மேற்கொள்வது அவசியமாயிற்று. பெப்சு விஷயத்தில் செய்ததைப்போல இராச்சிய நிர்வாகத்தை ஏற்கப் பணிக்கப்பட்டிருந்த இராசப்பிரமுகருக்கு உதவியாக ஓர் ஆலோசகர் நியமிக்கப்பட்டார். அந்த நெருக்கடி நிலைமை நீடித்திருந்த ஓராண்டுக் காலத்தில் புதுக் கேரள இராச்சியம் அமைக்கப்பட்டு இரண்டாவது பொதுத்தேர்தல்கள் நடத்தப்பட்டன. தேர்தலில், சட்டசபையில் போதுமான பெரும்பான்மையை எக் கட்சியும் பெறுவிட்டாலும், பொதுவுடைமைக் கட்சி (Communist) உறுப்பினர்களும் சில சுயேச்சையினரும்கொண்ட கூட்டு மந்திரி சபை தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்டதும் 1957-ல் ஏற்பட்டபோது பாராளுமன்ற முறை அரசாங்கம் அங்குச் சாத்தியமாயிற்று.

நெருக்கடி நிலைமை பிரகடனத்திற்கான ஐந்தாவது சந்தர்ப்பம் மீண்டும் கேரளாவிலேயே அசாதாரணச் சூழ்நிலைகளில் ஏற்பட்டது. இச் சூழ்நிலைகள் 1957-ல் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி அந்த இராச்சியத்தில் அதிகாரத்தை ஏற்றுக்கொண்ட பிறகு தோன்றின. எல்லா எதிர்க்கட்சிகளாலும் ஆதரிக்கப்பட்ட பொதுமக்கள் கிளர்ச்சியொன்று 1959ஆம் ஆண்டுத் தொடக்கத்திலிருந்து சிறுகச்சிறுக ஆதரவு பெற்றுவந்தது. விரைவில் அது மாபெரும் வளர்ச்சியடைந்து இராச்சிய முழுவதிலும் அரசாங்கத்திற்குக் கீழ்ப்படியா இயக்கமொன்றை (civil disobedience) நடத்தியதால் சட்ட, அமைதிப் பராமரிப்பு படு தோல்வியடைந்தது. இச் சூழ்நிலைமைகளில் அந்த இராச்சிய கவர்னர் 1959ஆம் ஆண்டு ஜூலை மாதம் அரசியலமைப்பு அடிப்படையில் இராச்சிய நிர்வாகம் நடத்தப்பட முடியாதென்னும் முடிவிற்கு வந்துவிட்டதாக ஜனாதிபதிக்கு அறிவித்தார். இவ் அறிவிப்பு அடிப்படையில் 1959ஆம் ஆண்டு ஜூலை மாதம் 31ஆம்

தேதி ஜனாதிபதியால் நெருக்கடிப் பிரகடனமொன்று வெளியிடப்பட்டது. அந்த நெருக்கடி நிலைமை ஏழு மாதங்களுக்குமட்டுமே இருந்தது. அக் காலத்தில் புது அசெம்பிளி அமைக்கப்படுவதற்குத் தேர்தல் நடத்தப்பட்டது. 1960-ல் நடைபெற்ற தேர்தல் இராச்சியத்தில் நிலவிய அரசியல் ஸ்திரமற்ற தன்மையை முடிவிற்குக் கொண்டுவந்ததோடு, மிகப் பேராதரவுடைய புது மந்திரி சபையொன்று 1960ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் பதவியில் அமர்த்தப்பட்டது.

அவசர நிலைமைப் பிரகடனத்திற்கான இறுதிச் சந்தர்ப்பம், ஒரிசா இராச்சியத்தில் மூன்றாண்டுகளுக்கும் அதிகமாகப் பணி புரிந்துவந்த காங்கிரஸ்—கணதந்திர பரிஷத் கூட்டு மந்திரிசபை தொடர்ந்து பதவியிலிருக்க முடியாமற்போனபோது 1961ஆம் ஆண்டில் ஏற்பட்டது. மந்திரிசபை தன்னுடைய இராஜிநாமாவை கவர்னருக்குச் சமர்ப்பித்தது. கவர்னரின் ஆலோசனைப்படி, ஜனாதிபதி அவசர நிலைமையைப் பிரகடனம் செய்தார். இவ் அவசர நிலைமை ஆறு மாதத்திற்குக்கூட நீடிக்கவில்லை. ஏனெனில், ஜூன் மாதத்தில் நடந்த இடைத் தேர்தல்களில் காங்கிரஸ் கட்சி கணிசமான பெரும்பான்மையோடு ஒரிசா அசெம்பிளிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு, அதன் பயனாக காங்கிரஸ் மந்திரி சபையொன்று பதவியில் அமர்த்தப்பட்டது.

இந் நிகழ்ச்சிகள், அவசர நிலைமையொன்று எதற்காக எம்முறையில் நடைமுறையில் ஜனாதிபதியால் அறிவிக்கப்படுகிறது என்பதை எடுத்துக்காட்டுகின்றன. அவைகளைப் பின்வருமாறு திரட்டிக் கூறலாம் :

(1) மத்திய அரசாங்கத்தின் குறுக்கீட்டிற்கு இன்றியமையாத நிபந்தனை, இராச்சியத்தில் ஏற்படும் அரசியல் ஸ்திரமற்ற நிலைமை, அதாவது, பாராளுமன்ற முறை அரசாங்கம் முற்றிலும் செயலாற்ற முடியாமற் போவது.

(2) யூனியன், ஸ்திரமற்ற தன்மை நிலைமையை மிகவும் அதிகமான முன்னெச்சரிக்கையோடு கவனித்து வருவதோடுமட்டுமல்லாமல், மாற்று மந்திரிசபை அமைக்கப்படுவதற்கான வாய்ப்பையும் ஏற்படுத்தித் தரும்.

(3) இராச்சியச் சட்டசபை கலைக்கப்பட்ட பிறகு, நிலைமைக்குப் பரிகாரம் காண்பதற்காகப் புதுத் தேர்தல் நடத்தப்படுமானால், தோற்கடிக்கப்பட்ட மந்திரி சபை தற்காலிகமாக நிர்வாகத்தைக் கவனிப்பதற்கு அனுமதிக்கப்படும்.

(4) வேறு வழியில்லையென்னும்போதுதான் அவசர நிலைமைப் பிரகடனம் ஒருவழியாகப் பின்பற்றப்படுகிறது. அதாவது, (i) பதவியிலிருக்கும் மந்திரிசபை சட்டசபையின் நம்பிக்கையைப் பெற்றிராதபோதும், (ii) மாற்று மந்திரிசபை அமைக்கமுடியாமற்போகும் போதும், (ii) தோற்கடிக்கப்பட்ட மந்திரிசபை, புதுத் தேர்தல்கள் நடத்தப்படும்வரையிலுங்கூட பதவியிலிருந்து நிர்வாகத்தை நடத்த விருப்பமில்லாதிருக்கும்போதும், அவசரப் பிரகடனம் செய்யப்படுகிறது.

(5) அவசரப் பிரகடன காலத்தில் இராச்சியத்தின் சட்ட சம்பந்தமான அலுவல்களெல்லாம் பாராளுமன்றத்திற்கு மாற்றப்படும். அத்தகைய அலுவல்கள் நிர்வாகத்திற்குப் பொறுப்பேற்கும் நிலையமொன்றிற்கு மாற்றப்படுவது மிகக் குறைவான அளவிலேயே இருக்கும்.

(6) எவ்வளவு விரைவாகப் பொறுப்புள்ள அரசாங்கத்தை ஏற்படுத்துவதற்கானவாறு இராச்சிய அரசியல் நிலைமை சீர்திருந்துகிறதோ அவ்வளவு விரைவாக அது மீண்டும் ஏற்படுத்தப்படும்.

மேலே விளக்கப்பட்ட சந்தர்ப்பங்களில் மத்திய அரசாங்கம் குறுக்கிட்டபோது, அவசர நிலைமை முடிந்ததும் நிலையான அமைச்சரவைகள் ஏற்பட்டன. இவ்வாறு, சட்டபூர்வமான அரசாங்கம் இராச்சியங்களில் முறிந்தபோது, அரசியல் ஸ்திர நிலைமையில்லாத இராச்சியங்களில் பொறுப்புள்ள அரசாங்கம் ஏற்படுத்துவதற்கான சாதனமாகவும்,உட்பூசல் காரணமாகவோ அல்லது சாதகமாக இல்லாத சூழ்நிலைகள் காரணமாகவோ அரசியல் கட்சிகள் நிர்வாகப் பொறுப்பை ஏற்கமுடியாதபோது அவைகளுக்கு ஆதரவாகவும், மத்திய அரசாங்கம் தலையிடத் தரப்பட்டிருக்கும் நெருக்கடி நிலைமைபற்றிய ஏற்பாடுகள் நடைமுறையில் பயன்படுகின்றன.

அவசர காலமொன்றின்போது நிர்வாகம் அளவிற்கதிகமாக சக்திவாய்ந்ததாக இருப்பது இயற்கையேயாகும். ஒருமுக ஆட்சியாக இருந்தாலும், கூட்டாட்சியாக இருந்தாலும் இப்போக்கு உலகமெங்கும் காணப்படுவதொன்றாகும். பாராளுமன்ற முறை பின்பற்றப்படும் ஜனநாயக நாடுகளில் பாராளுமன்றம் விழிப்போடிருப்பதும், குறிப்பாக எதிர்க்கட்சி உறுப்பினர்கள் நிர்வாகத்தை அதன் நடவடிக்கைகளுக்குப் பொறுப்பு

ஏற்குமாறு வற்புறுத்துவதும் பொதுவான ஓர் அனுபவமாகும். இவ்வாறு பாராளுமன்றம், நிர்வாகம் நியாயமான வழிகளினின்றும் பிரிந்து செயலாற்றும்போது அதைக் கட்டுப்படுத்துவதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறது. அவசரகால ஏற்பாடுகள் பாராளுமன்றத்தை எவ் வகையாலும் நிலைமையை அறிவதினின்றும் தடை செய்யாததோடு, நிர்வாகத்தை வழிக்குக் கொண்டு வருவதற்கான உரிமையை எப்போதும்பெற உதவுகின்றன ; அல்லாமலும், எப்போதாவது, இயற்றப்பட்டுள்ள அவசரகால ஏற்பாடுகளை நடைமுறைப்படுத்தும்போது, நிர்வாகம் அளவிற்கு மீறிச் செய்திருப்பதாக அவர்கள் அறிவார்களாளுல், நிர்வாகத்திலிருப்பவர்களை அவர்கள் கண்டிப்பதற்கு எப்போதும் இயலும் ; அவர்கள் மந்திரிசபையைப் பதவியிலிருந்து விலக்கிப் பிறிதொன்றைப் பதவியிலமர்த்தவும் முடியும்.

அவசர காலத்தில் ஜனாதிபதிக்கிருக்கும் நிலைமையைப்பற்றிக் குறைகூறுவோர் எடுத்துக்காட்டியுள்ளனர். அவசர காலத்தில் ஜனாதிபதி விரும்புவாராளுல் ஒரு சர்வாதிகாரியாக மாறக்கூடுமென்று அவர்கள் கருதுகிறார்கள். ஆனால், இது அவ்வாறில்லை. ஜனாதிபதிக்கிருக்கும் அதிகாரங்களின் உண்மையான நடைமுறை சாத்தியமான எல்லையை நாம் முன்பே கண்டிருக்கிறோம். அவர் ஒரு சீசராகவோ (Caesar) அல்லது சார் (Tzar) ஆகவோ மாறக்கூடிய சாத்தியக்கூறுகள் உண்மையிலேயே மிகவும் குறைவு. அமைச்சவை ஒன்றின் உதவியில்லாமல் ஜனாதிபதியே நாட்டை ஆளக்கூடிய சந்தர்ப்பமே கிடையாது. ஜனாதிபதியும் அமைச்சரவையும் ஒன்று சேர்ந்துகொண்டு, தொடர்ந்து அவசர நிலைமையைத் தோற்றுவிப்பதென்பதும், பாராளுமன்றம் ஏற்படும் போதெல்லாம் அதைக் கலைத்துவிட்டு அரசியலமைப்புக்கு எதிராகச் சதி செய்வதென்பதும், ஜனநாயகத்திலும் அதன் நிலையங்களிலும் அவநம்பிக்கை கொள்கின்ற அச்சத்திஞல் அல்லது மக்களரசாங்கங்கள் இயங்குமுறையை உணர்ந்திருப்பதனுலல்ல. எந்த அரசியலமைப்பும், அதை நடைமுறைப்படுத்துபவர்கள் வேண்டுமென்றே அதை அழிக்கமுயலும்போது, அத்தகைய நிலைமையைத் தவிர்க்கமுடியாது. அரசியலமைப்பிலுள்ள ஏற்பாடுகள் எத்தகையனவாக இருப்பினும், அவ்வாறு ஏற்படுவதை எம்முறை அரசாங்கத்தாலும் தடுத்து நிறுத்தவியலாது.

மந்திரிசபையின் துணைகொண்டோ, துணையில்லாமலோ அவசர நிலைமைப் பிரகடனங்களைக்கொண்டு எதேச்சாதிகாரமாக நடக்கத் துணிந்தாலும், பாராளுமன்றத்தின் சம்மதமில்லாமல் நிர்வாகத்தை அவர் நடத்துவதென்பது முற்றிலும் முடியாததாகும். ஏனென்ருல், பாராளுமன்றத்தின் அனுமதியில்லாமல்

ஜனாதிபதி, நிதிகளைச் செலவழிப்பதற்கு அரசியலமைப்பில் ஏற்பாடெதுவுமில்லை. எனவே, அதிகபட்சமாக ஜனாதிபதி அவருடைய சர்வாதிகார ஆட்சியை நடைமுறையிலிருக்கும் நிதியாண்டு முடியும்வரைதான் நடத்தமுடியும். அதற்குப் பிறகு நிர்வாகத்தைத் தொடர்ந்து நடத்த அவருக்குப் பாராளுமன்றத்தின் ஆதரவு தேவையாகும்.

நிதி நெருக்கடி நிலைமையைப்பற்றிய ஏற்பாடுகள், சுதந்திரத்திற்குப் பிறகு திடீரென்று மோசமாகிவிட்ட இந்தியப் பொருளாதாரச் சூழ்நிலையின்போது கொண்டுவரப்பட்டவைகளாகும். அவைகளை அரசியலமைப்பில் சேர்த்ததற்கான காரணங்களைப் பற்றி விவரிக்கும்போது அம்பேத்கர் கூறியதாவது : ' இவ் விதி ஏறத்தாழ, அமெரிக்க மக்களைப் பொருளாதாரப் பெருமந்தத்தின் விளைவாகப் பீடித்திருந்த நிதி, பொருளாதாரத் துன்பங்களை அகற்றுவதற்கு ஜனாதிபதிக்கு அதிகாரந்தரும் இதே மாதிரியான ஏற்பாடுகளைக்கொண்ட 1933ஆம் ஆண்டின் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தேசிய மீட்சிச் சட்டத்தைப் (National Recovery Act of the U.S.A.) பின்பற்றுகிறது.'

நிதி நெருக்கடி நிலைமையைப்பற்றிய ஏற்பாடுகள் இதர கூட்டாட்சிகளின் இயங்கு முறையில் கிடைத்த அனுபவங்களை, எவ்வாறு அரசியலமைப்பைத் தயாரித்தவர்கள் பயன்படுத்திக் கொண்டார்கள் என்பதையும் விளக்குகின்றன. எனினும், இவ் ஏற்பாடுகளைப் பயன்படுத்துவதற்கான சந்தர்ப்பம் இதுகாறும் ஏற்படவில்லை.

இறுதியாக, ஆதார உரிமைகளைத் தாற்காலிகமாக விலக்குவதற்கான அரசியலமைப்பிலுள்ள ஏற்பாட்டையும் பரிசீலனை செய்யலாம். இதுதான் அரசியலமைப்பிலுள்ள விதிகளில் மிகவும் வரவேற்கப்படாத ஒன்றாகத் தெளிவாகத் தெரிகிறது.

சட்டபூர்வமான உரிமைகளை நிறுத்திவைப்பதற்கான ஏற்பாடு, நெருக்கடி நிலைமை பிரகடனப்படுத்தப்பட்டதுமே ஆதார உரிமைகளின் நிறுத்தமும் இயல்பாகவே ஏற்படும் என்று பொருள்படாது. ஆதார உரிமைகளின் நிறைவேற்றம் அவசரப் பிரகடனம் செய்யப்பட்ட பிறகும் தொடர்ந்திருப்பது சாத்தியமாகும். அதனாலேயே 'நாடு' முழுவதும் அவ் உரிமைகள் நிறுத்தி வைக்கப்படவேண்டியதில்லை. மேலும், விலக்கல்பற்றிய உத்தரவு பாராளுமன்றத்திடம் சமர்ப்பிக்கப்படவேண்டும். ஆகையால், பாராளுமன்றம், அதன் கருத்திற்கேற்ப எந் நடவடிக்கையையும் மேற்கொள்ளலாம்.

இவ் ஏற்பாட்டின் சிறப்பைப்பற்றித் தீர்ப்பளிப்பதற்குப் பன்னிரண்டு ஆண்டுக் காலத்தில் அரசியலமைப்பு இயங்கியதை அடிப்படையாகக்கொண்டு சொல்ல முடியாது. எனினும், பெப்சுவிலும், ஆந்திராவிலும், கேரளாவிலும் இன்னும் இதர இடங்களிலும் நெருக்கடி நிலைமை பிரகடனம் செய்யப்பட்ட போது, ஆதார உரிமைகள் அளிக்கப்படுவது தடை செய்யப்பட வில்லையென்பது இங்குச் சிறப்பாக அறியத்தக்கதாகும். யூனியன் நிர்வாகம், இராச்சியங்களிடம் தகாத முறையில் நடந்ததாகவோ அல்லது பாராளுமன்றத்தைப் புறக்கணித்ததாகவோ, இதுவரையிலும் எச் சான்றும் கிடையாது. ஜனாதிபதி சர்வாதிகாரியாக மாறக்கூடுமென்னும் பயம், நம் நாட்டு அரசியலில் பொதுவாகக் கருதப்படாத ஒன்றாகும். நெருக்கடிகால அதிகாரங்கள்பற்றிய ஷரத்துகளின் சிறப்பு, கடந்த சில ஆண்டுகளில் நன்றாகத் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது. அது ஜனநாயகத்தை அழிப்பதற்கு மாறாக, இராச்சியங்களில் எங்கெல்லாம் அதற்குப் பேராபத்தேற்பட்டதோ அங்கெல்லாம் அது மீட்சிபெற உதவி இருக்கிறது.

பகுதி 7

# பலவகை ஏற்பாடுகள்

## 33. இந்தியத் தணிக்கைத்துறைத் தலைவர்
## (The Comptroller and Auditor-General of India)

பாராளுமன்றமுறை ஜனநாயகத்தின் இன்றியமையாத தேவை சுதந்திரமான தணிக்கைக்கு ஏற்பாடு செய்வதாகும். நாம் முன்பே கண்டவாறு, பாராளுமன்ற அடிப்படையைக்கொண்ட அரசாங்கத்தில் நிர்வாகம் அதனுடைய எல்லா நடவடிக்கைகளுக்கும் சட்டத்துறைக்குப் பொறுப்புடையதாக இருக்கிறது. இந்த நிர்வாகப் பொறுப்பை, சட்டத்துறை திறமையோடு நிறைவேற்றுவதற்கு நிர்வாகத் துறையின் நடவடிக்கைகளைச் சரிபார்க்கவும், அவை ஒவ்வொன்றைப்பற்றியும் அதனுடைய தீர்ப்புகள் பொருத்தமான முறையில் தகுதியுடையனவாக இருந்தால்தான் முடியும். ஒருசில நிர்வாக நடவடிக்கைகளை யார் வேண்டுமானாலும் தணிக்கை செய்யமுடியுமென்றாலும், வேறு சிலவற்றைச் சாதாரண மனிதர்கள் தணிக்கை செய்வது கடினமாகும். நிர்வாகத்தினால் செய்யப்பட்ட நிதி வரவுசெலவுகள் சரியான முறையில் செய்யப்பட்டனவா அல்லவா என்பதை அறிய, கணக்குகளைச் சோதிப்பதும் மதிப்பிடுவதும் தொழில் நுணுக்கத் துறையைச் சேர்ந்த வேலையாகும். பாராளுமன்றம் பொதுவாக, சாதாரணமானவர்களை உடையதாக இருப்பதால், அத்தகைய தணிக்கையைச் செய்வதற்குப் பொருத்தமான ஸ்தாபனமன்று. இருப்பினும், அரசாங்கத்தின் நிதிபற்றிய நடவடிக்கைகளைத் தணிக்கை செய்யவேண்டியதும் வரி செலுத்தியவர்களின் பணம் சரியானவாறு செலவழிக்கப்படுகிறதா என்பதை உறுதி செய்யவேண்டியதும் பாராளுமன்றத்தின் பணியாகும். இக் காரியத்திற்குப் பாராளுமன்றம், நிபுணர்

ஒருவரின் உதவியைப் பெறவேண்டியது அவசியமாகிறது. ஆகையால்தான் தணிக்கைத்துறைத் தலைவர் பதவி, பாராளுமன்ற முறை மக்களாட்சியின் இன்றியமையாத ஓர் அம்சமாகிறது. தணிக்கைத்துறைத் தலைவர் சிறப்பாலோசனைதான் பாராளுமன்றம் திறமையோடு அதன் வேலையைச் செய்வதற்கு உதவுகிறது. அத்தகையதொரு முக்கியப் பணியைச் செய்வதால்தான் தணிக்கைத்துறைத் தலைவர், பாராளுமன்றமுறை அரசாங்கத்தின் இயக்கத்தில் இன்றியமையாததொரு கருவியாகக் கருதப்படுகிறார். இத் துறையில் செய்யப்படுகின்ற முக்கியமான பணிதான் அவருடைய பதவியை (office) நம்முடைய மக்களாட்சி அரசியலமைப்பின் நான்கு தூண்களில் ஒன்றாக ஏற்படுத்துகிறது. சட்டத்துறை, நிர்வாகத்துறை, நீதித்துறை ஆகியவை இதர மூன்று தூண்களாகும்.

தணிக்கைத்துறைத் தலைவர் பதவியைப்பற்றிய அரசியலமைப்பு ஏற்பாடுகளில் குறிப்பிடத்தக்க புதுமை எதுவுமில்லை. அத்தகைய பதவி (இந்தியப் பொதுத் தணிக்கையாளர்) 1919ஆம் ஆண்டிலிருந்தே இந்திய அரசியலமைப்பு இயந்திரத்தின் பிரிக்க முடியாத அங்கமாக இருந்துவந்திருக்கிறது. இப் பதவியைப் பற்றிய கருத்தே இங்கிலாந்திலிருந்து வருவதாகும். அங்கு இது ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு வரலாற்றையுடையதாக இருக்கிறது.

இந்தியாவில் தணிக்கைத்துறைத் தலைவர் முதல்தடவையாக சட்டபூர்வமான அங்கீகாரம் பெற்றது 1919ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தினாலாகும். அத்தகைய அங்கீகாரம், நிர்வாகத் துறையினின்றும் முழுச் சுதந்திரமாக அவர் நடப்பதற்குத் தந்ததாகாது. கவுன்சிலில் அங்கம் வகித்த இந்திய மந்திரியினால் விதிக்கப்படும் பொதுவான அல்லது விசேஷ உத்தரவுகளுக்குட்பட்டுத் தணிக்கைத்துறைத் தலைவர் ஒரு தணிக்கையைச் செய்யவேண்டும். அரசாங்கக் கணக்குகளைப் பற்றிய அவருடைய அறிக்கைகள் அந்த அதிகாரிக்கு கவர்னர்-ஜெனரல் மூலமாக அனுப்பப்படவேண்டும். 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் தணிக்கைத்துறைத் தலைவரைக் கட்டுப்படுத்துவதற்கு இந்திய மந்திரிக்கு இருந்த அதிகாரத்தை ஒழித்து அவருடைய சுதந்திரத்தைக் கணிசமாக அதிகரித்தது. தணிக்கைத்துறைத் தலைவர் அவருடைய ஆண்டுத் தணிக்கை அறிக்கைகளைச் சம்பந்தப்பட்ட சட்டசபைகளுக்கு இந்திய அரசாங்கம், மாநில அரசாங்கங்கள்மூலமாக அனுப்பவேண்டும்.

பாராளுமன்ற ஜனநாயகத்தில், தணிக்கை செய்வதற்கு, சுதந்திரமான ஏஜென்சியொன்று அவசியமென்று உணர்ந்து

தணிக்கைத்துறைத் தலைவரை, அரசியலமைப்பைப் படைத்தவர்கள் முழுச் சுதந்திரமுடையவராகச் செய்தனர். அதனால் அவருடைய வேலைகளை அச்சமில்லாமலும் திறமையாகவும் அவர் செய்வதற்கியலும் என்று கருதப்பட்டது.

## தணிக்கைத்துறைத் தலைவரின் சுதந்திரம்

148ஆம் விதியின்கீழ்த் தணிக்கைத்துறைத் தலைவர், ஜனாதிபதியின் கையால் எழுதப்பட்டு, முத்திரை பொறிக்கப்பட்ட ஆணை ஒன்றினால், உச்ச நீதிமன்ற நீதிபதியொருவர் நியமிக்கப்படுவது போல நியமிக்கப்படவேண்டும். உச்ச நீதிமன்ற நீதிபதி ஒருவர் எந்த அடிப்படைகள் காரணமாக எவ்வாறு பதவியிலிருந்து விலக்கப்படலாமோ, அங்ஙனமே அவரும் பதவி நீக்கம் செய்யப்படலாம். தணிக்கைத்துறைத் தலைவராக நியமிக்கப்பட்ட எவரும் பதவியேற்பதற்குமுன், ஜனாதிபதி முன்பாக உறுதிமொழி செய்து அதன்படி நடப்பதாக, அதற்காகவே ஏற்படுத்தப்பட்ட முறைப்படி பிரமாணம் செய்யவேண்டும். அவருடைய சம்பளமும் இதர ஊழிய நிபந்தனைகளும் பாராளுமன்றத்தால் தீர்மானிக்கப்படலாம். ஆனால், ஒருமுறை நியமிக்கப்பட்ட பிறகு வேலைக்கு வாராமல் விடுப்பெடுத்துக்கொள்ளல், பதவியிலிருந்து ஓய்வு பெறல் அல்லது ஓய்வெடுத்துக்கொள்ளவேண்டிய வயது ஆகியவைபற்றிய அவருடைய உரிமைகளோ அல்லது ஊதியமோ அவருக்குப் பாதகமாக மாற்றியமைக்கப்படக் கூடாது. தற்போது, உச்ச நீதிமன்ற நீதிபதியொருவர் பெறுகின்ற சம்பளம் போன்றே, தணிக்கைத்துறைத் தலைவரும் மாதமொன்றுக்கு ரூபாய் 4,000 ஊதியமாகப் பெறுகிறார். பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகோ அல்லது விலகியபிறகோ, இந்திய அரசாங்கத்தின் கீழோ அல்லது ஏதாவதோர் இராச்சிய அரசாங்கத்தின் கீழோ வருவாய் உடைய பதவியொன்றை வகிக்கத் தகுதியற்றவராவார். அலுவலக ஊழியர்களது ஊதியங்கள், மற்றவைகள் உட்படத் தணிக்கைத்துறைத் தலைவர் அலுவலக நிர்வாகச் செலவுகளெல்லாம் இந்தியக் குவிப்பு நிதியிலிருந்து அளிக்கப்படவேண்டும். இந்தியத் தணிக்கைக் கணக்குத் துறையில் செயலாற்றும் பணியாளர்களது பணிவிதிகளும், தணிக்கைத்துறைத் தலைவரது ஆட்சி அதிகாரங்களும், தணிக்கைத்துறைத் தலைவரைக் கலந்துகொண்ட பிறகு ஜனாதிபதியால் ஏற்படுத்தப்படவும் வகை செய்யப்பட்டிருக்கிறது. அத்தகைய விதிகள் அரசியலமைப்பின் ஷரத்துகளுக்கும், பாராளுமன்றத்தால் இதற்காகச் செய்யப்படும் சட்டத்திற்குட்பட்டும் இருக்க வேண்டும். இந்த ஷரத்துகளை அவற்றோடு தொடர்புடைய உச்ச நீதிமன்ற நீதிபதிகளைப்பற்றிய ஷரத்துகளோடு ஒப்பிட்டுப்

பார்க்கும்போது இவ் இருவகையின் நோக்கப் பரப்பு, பெரும்பாலும் ஒரேமாதிரியாக இருப்பதையும், தணிக்கைத்துறைத் தலைவர் பதவி அதன் சுதந்திரத்தைப் பொறுத்தவரை உச்ச நீதிமன்ற அடிப்படையில் ஏற்பட்டிருக்கிறதென்பதையும் அது விளக்கும். அம் முறையில் தணிக்கைத்துறைத் தலைவர், அவருடைய பொறுப்புகள் நிறைவேற்றத்தைப் பொறுத்தவரை அரசியலமைப்பு ஆதாரத்தையும், அதனுடைய தெளிவான ஏற்பாடுகளினுல் பாதுகாப்புடையதாக இருப்பதையும் துணையாகக்கொண்டு பணியாற்ற முடியும்.

## தணிக்கைத்துறைத் தலைவரது கடமைகளும் அதிகாரங்களும்

149, 150ஆம் விதிகள் தணிக்கைத்துறைத் தலைவரது கடமைகளையும் அதிகாரங்களையும் எடுத்துக் கூறுகின்றன. 149ஆம் விதியின்படி, யூனியன் இராச்சியங்களினுடைய கணக்குகள், யூனியன் அல்லது இராச்சியங்களால் ஏற்படுத்தப்பட்ட அதிகாரக் குழு அல்லது நிலையத்தின் கணக்குகள் ஆகியவற்றின் தணிக்கைக்கு, தணிக்கைத்துறைத் தலைவரது அதிகாரங்கள், கடமைகள்பற்றிய விதிகளை வரையறை செய்யப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. மேலும், அத்தகைய அதிகாரங்களையும் கடமைகளையும் பாராளுமன்றம் ஏற்படுத்துகின்றவரையிலும் அரசியலமைப்பு இயங்க ஆரம்பிப்பதற்கு முன்பு, இந்தியத் தணிக்கைத்துறைத் தலைவர் என்னென்ன கடமைகளையும் அதிகாரங்களையும் செலுத்திவந்தாரோ அத்தகையனவற்றை அவர் செய்வதற்கு அது ஏற்பாடு செய்திருக்கிறது. இத் துறையில் பாராளுமன்றம் இதுகாறும் சட்டம் இயற்றுததால், இந்திய டொமினியன் அரசியலமைப்பின்கீழ் அவருக்கு முன்பிருந்தவர் ஆற்றிவந்த பணிகளுக்கொப்பான அதே பணிகளைத் தணிக்கைத்துறைத் தலைவர் செய்து வருகிறுர். 150ஆம் விதிக்கிணங்க யூனியன், இராச்சியங்கள் ஆகியவற்றின் கணக்குகள் எவ்வமைப்பிலும் முறையிலும் இருக்கவேண்டுமென்பதை ஜனுதிபதியின் ஆமோதிப்பிற்குட்பட்டு வரைசெய்யத் தணிக்கைத்துறைத் தலைவர் அதிகாரம் பெற்றிருக்கிறுர்.

தணிக்கைத்துறைத் தலைவர் அலுவலகம் மூன்று பிரதான பணிகளைச் செய்யவேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது:

(1) அரசாங்கத்தினுடைய செலவுகளைத் தணிக்கைசெய்தல்;

(2) அரசாங்கச் செலவு சம்பந்தமான நிதி விதிகளும் கட்டளைகளும் பின்பற்றப்பட்டிருக்கின்றனவா என்பதைக் காணல்;

(3) செலவினங்களைப்பற்றிய இசைவாணைகளைப் பிறப்பிப்பவர்கள், அவற்றிற்கான அதிகாரத்தைப் பெற்றிருக்கின்றார்களா என்பதைத் தானே திருப்தி செய்து கொள்ளல்.

எனினும், தணிக்கைத்துறைத் தலைவரின் முக்கியமான பணி, அப் பணி சட்டப்படி அவர் ஆற்றவேண்டிய பணிகளுள் ஒன்றாக இல்லாவிட்டாலும், பொருளாதார நிலைமையை நோக்கமாகக் கொண்டு கணக்குகளைச் சோதனை செய்வதும், எங்கு அதிகமாகவும், அவசியமில்லாமல் வீணடிக்கப்பட்டும் இருக்கிறதோ அத்தகைய இனங்களை அரசினர் கணக்கை ஆராயும் சட்டப் பேரவைக் குழுவின் (Public Accounts Committee) கவனத்திற்குக் கொண்டுவருவதுமாகும். எங்கெல்லாம் பாராளுமன்றமுறை அரசாங்கம் நடைமுறையிலிருக்கிறதோ அங்கெல்லாம் இது, இப் பதவியின் மிக முக்கியமான பணியாகக் கருதப்படுகிறது.

## தணிக்கைத்துறைத் தலைவரும் அரசினர் கணக்கை ஆராயும் சட்டப் பேரவைக் குழுவும்

நிதி ஒதுக்கீடுபற்றிய கணக்குகளையும், அவைகளைப்பற்றிய தணிக்கைத்துறைத் தலைவரின் அறிக்கைகளையும், அவைபோன்ற பாராளுமன்றத்திடம் வைக்கப்பட்ட இதர கணக்குகளையும், அரசினர் கணக்கை ஆராயும் சட்டப் பேரவைக் குழு சரியென்று அதற்குத் தோன்றுமாறு சோதனை செய்யவேண்டியது அதன் கடமையாகும். அத்தகைய சோதனையின் நோக்கம், நிதித்துறையில் மேற்கொள்ளப்படும் எல்லா நடவடிக்கைகளுக்கும் அது பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையதாக இருப்பதை உறுதிப்படுத்துவதற்காகும். அதனுடைய தேர்வாராய்வுகளை மேற்கொள்வதற்கு அக் குழு, அரசாங்கக் கணக்குகளின் சிக்கல்களை எல்லாம் ஆராய்கின்ற தணிக்கைத்துறைத் தலைவரின் சிறப்பாலோசனையைப் பெறுகிறது. அக் குழு, அதன்முன் தோன்றி சாட்சியமளிக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கும் துறையைச் சேர்ந்த சாட்சிகளை, அவர்கள் எத்:துறையைச் சேர்ந்தவர்களோ அத் துறையைப்பற்றிய தணிக்கைத் துறைத் தலைவரின் ஆண்டறிக்கைகளில் காணப்படும் குற்றச்சாட்டுகளுக்கான அவர்களுடைய சாட்சியங்களை ஆய்கிறது. அரசினர் கணக்கை ஆராயும் சட்டப் பேரவைக் குழுவின் வெற்றி அல்லது தோல்வி முக்கியமாகத் தணிக்கைத்துறைத்தலைவரின் ஆண்டறிக்கைகளின் தரத்தைப் பொறுத்ததாகுமென்பது நன்றாக உணரப்பட்டிருக்கிறது. அவருடைய அறிக்கைகள், உதவி மான்யங்கள் வழங்கப்படாமல் பாராளுமன்றத்தால் அனுமதிக்கப்பட்ட நிதி ஒதுக்கீடு மீறப்படாதிருப்பதை உறுதி செய்வதற்கு உதவுவதோடு, அவ்

வொதுக்கீடு அடிப்படையிலான செலவு, ஏற்படுத்தப்பட்ட விதிகளுக்குட்பட்டிருக்குமாறு செய்யவும் உதவுகிறது. அதோடு மட்டுமல்லாது அவர் பாராளுமன்றத்தின் சார்பாக அரசாங்கச் செலவுத் திட்டத்தின் சிறப்பு, உண்மைத் தன்மை, சிக்கனம் ஆகியவற்றையும் தனக்குத்தானே திருப்தி செய்துகொள்ள வேண்டும்.

யூனியன் சம்பந்தப்பட்ட கணக்குகளைப்பற்றிய தணிக்கைத் துறைத் தலைவரின் அறிக்கைகள் 151ஆம் விதிப்படி ஜனாதிபதிக்குச் சமர்ப்பிக்கப்படவேண்டும். இராச்சியங்கள் சம்பந்தப்பட்ட கணக்குகள் கவர்னர்களிடம் சமர்ப்பிக்கப்படுகின்றன. இவ் அறிக்கைகள் முறையே, பாராளுமன்றத்திடமும் இராச்சிய சட்டசபைகளிடமும் தாக்கல் செய்யப்படுகின்றன.

வரி கொடுப்போரின் நலன்களைப் பாதுகாப்பதற்காகச் செய்யப்படும் தணிக்கைத்துறைத் தலைவரின் சேவையின் மதிப்பு அளவிடற்கரியதாகும். நாட்டு நிதிக்குப் பாதுகாவல் தணிக்கை. பாராளுமன்றத்தின் சார்பாக அரசாங்கத்தின் நிதித்துறை நடவடிக்கைகளை மேற்பார்வையிடுபவராக இருப்பவர் தணிக்கைத் துறைத் தலைவர். ஆண்டுதோறும் அரசாங்கச் செலவு வேகமாக அதிகரித்துக்கொண்டுவரும் இந்தியா போன்ற நாடொன்றில், அரசியலமைப்பில் கொள்ளப்பட்டிருக்கும் ஜனநாயகக் கொள்கைகளை உயர்ந்த முறையில் அடைவதற்குத் தணிக்கைத் துறைத் தலைவரின் பங்கை அதிகப்படுத்துவதற்கும் வலுப்படுத்துவதற்கும் வாய்ப்பிருக்கிறது.

# 34. அரசினர் பணிகள்

எந் நாட்டிலும் நிர்வாகத்தின் திறமையும் தரமும், அரசினர் பணித்துறைகளைச் சேர்ந்த உறுப்பினர்களின் திறமையையும், பயிற்சியையும், வாய்மையையும் பொறுத்தே அமைகின்றன. அரசியலமைப்பின் நோக்கம் பொதுநல அரசொன்றை ஏற்படுத்துவதென்னும்போது, அத்தகைய அரசொன்றின் பணிகள் மிக விரிவான நடவடிக்கைகளைக் கொண்டதாக இருக்கிறதென்பது வெளிப்படையாகும். இந் நடவடிக்கைகளின் வெற்றிகரமான செயலாக்கம், முன்னேக்கமும், திறமையும், வாய்மையும், நம்பிக்கையுமுடையவர்கள் அரசின் நிர்வாகத்தை நடத்துவதற்குக் கிடைப்பதைப் பொறுத்திருக்கிறது. இதை உறுதி செய்வதற்கு அரசியலமைப்பை ஆக்கியவர்கள் எடுத்துக்கொண்ட அக்கறை, அரசினர் பணியாளர் தேர்வுக் கழகங்களின் (Public Service Commissions) அமைப்பு, பணிகள்பற்றிக் காணப்படும் ஏற்பாடுகளிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. அரசாங்க வேலை நியமனத்தைப்பற்றிய விஷயங்களில் சம வாய்ப்புத் தரப்பட வேண்டும் என்பதற்கு அரசியலமைப்பு உத்தரவாதமிருப்பதை நாம் பார்த்திருக்கிறோம். இவ் ஏற்பாடுகளோடு சமாதானமடையாத அவர்கள், இந்தியாவில் அரசினர் பணிகளில் செயலாற்றுவோர் திருப்தியுடையவர்களாகவும், பாதுகாப்பிருக்கிறதென்ற திடமுடையவர்களாகவும், இருப்பதற்கான சில விசேஷ ஏற்பாடுகளையும் ஒருபடி மேற்சென்று செய்திருக்கிறார்கள்.

நிர்வாகத்தில் 'அரசியல் பிரிவிற்கும்' (political wing) 'சிவில் பணிப் பிரிவிற்கும்' இடையே ஏற்படவேண்டிய சரியான இசைவிப்பு ஜனநாயக அரசாங்கமொன்றின் பெரும் பிரச்சினைகளுள் ஒன்றாகும். முதலாவது, மக்களின் பிரதிநிதியாக இருப்பதால், அவர்கள் விருப்பத்திற்கிணங்கப் பதவிக்கு வரும் அல்லது பதவியிலிருந்து விலகும். இரண்டாவது, அதற்கு மாறாக, நிரந்தரமாகப் பதவியிலிருப்பவர்கள். எனவே, அவர்கள் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு தலைவர்களின்கீழ்ச் செயலாற்ற வேண்டியவர்

களாகிறார்கள். மேலும், பல்வேறு கொள்கைகளை பல்வேறு தலைவர்களின் விருப்பு வெறுப்புகளுக்கிணங்க நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டியவர்களாகின்றார்கள். இதை அவர்கள், அரசியற் பற்றற்ற நோக்கும் ஒருசார்புத் தன்மையற்றும் இருப்பார்களானால்தான் செய்யமுடியும். அதேசமயத்தில் அப்போது பதவியிலிருக்கும் அரசாங்கத்திற்கும் அவர்கள் விசுவாசமுடையவர்களாகவும் இருக்கவேண்டும். எந்த அளவிற்கு இக் குறிக்கோள் அரசியலமைப்பில் இடம் பெற்றிருக்கிறது என்பதை இப்போது நாம் ஆராய்வோம்.

யூனியன், இராச்சியங்கள் ஆகியவற்றின் அரசினர் பணிகளுக்கான ஆள் எடுத்தல், பணி விதிகள் முதலானவற்றை முறைப்படுத்த முறையே, பாராளுமன்றத்திற்கும் இராச்சியச் சட்டசபைகளுக்கும் 309ஆம் விதி அதிகாரம் தருகிறது. பாதுகாப்புத்துறைப் பணிகளிலோ அல்லது யூனியன் சிவில் பணிகளிலோ அல்லது அகில இந்தியப் பணிகளிலோ அங்கம் வகிக்கும் எல்லாரும் ஜனாதிபதியின் விருப்பமுள்ளவரை பதவி வகிக்கிறார்களென்பதை 310ஆம் விதி உறுதிப்படுத்துகிறது. அவ்வாறே இராச்சியப் பணிகளைச் சேர்ந்த உறுப்பினர்கள், கவர்னரின் விருப்பமுள்ளவரை பதவி வகிக்கிறார்கள். ஜனாதிபதியோ அல்லது கவர்னரோ அரசின் சட்டபூர்வமான தலைவரேயாதலின், ஜனாதிபதி அல்லது கவர்னரின் இவ் அதிகாரங்கள் யூனியன் அமைச்சவை அல்லது இராச்சிய அமைச்சவையினால் செலுத்தப்படுகின்றன. எனவே, பலதிறப்பட்ட பணிகளையும் கட்டுப்படுத்தும் உண்மையான அதிகாரத்தை அமைச்சவை செலுத்துகிறது. இது, சட்ட சபைக்கு நிர்வாகத்தின் பொறுப்புடைமையை உறுதிப்படுத்தும் பொறுப்புள்ள ஜனநாயக அரசாங்கத்தின் இயல்புக்கேற்றதாக இருக்கிறது.

'ஜனாதிபதி அல்லது கவர்னரின் விருப்பமுள்ளவரை பதவி வகிப்பது' என்பது, அரசினர் பணிகளில் அங்கம் வகிப்போர் ஜனாதிபதியாலோ அல்லது கவர்னராலோ எதேச்சாதிகாரமாகப் பதவியிலிருந்து விலக்கப்படலாம் என்று பொருள்படாது. அத்தகைய நடவடிக்கை ஒன்றிற்கெதிரான சில அரசியற் சட்டபூர்வமான பாதுகாப்புகள் இருக்கின்றன. அவை 311ஆம் விதியில் பின்வருமாறு சேர்க்கப்பட்டிருக்கின்றன :

(1) யூனியன் சிவில் பணியையோ அல்லது அகில இந்தியப் பணியையோ அல்லது இராச்சியப் பணியையோ சேர்ந்த உறுப்பினர் எவரும், யாரால் நியமிக்கப்பட்டாரோ அவருக்கும் கீழுள்ள எவராலும் விலக்கப்படவோ அல்லது அகற்றப்படவோ முடியாது.

(2) அத்தகைய உறுப்பினர் எவரும் அவருக்கெதிராக எடுத்துக்கொள்ள உத்தேசிக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைக்கு எதிராகக் காரணங்காட்டுவதற்குப் போதுமான வாய்ப்புத் தரப் படாதிருக்கும்வரையிலும் பதவியிலிருந்து விலக்கப்படவோ அல்லது அகற்றப்படவோ அல்லது பதவியின் தரத்தைக் குறைக் கவோ முடியாது.

அரசியலமைப்புச் சபையில் அம்பேத்கர் தெளிவாகக் குறிப் பிட்டதுபோல, இவ் விதியின் குறிக்கோள், சிவில் பணியைச் சேர்ந்த உறுப்பினர் ஒருவரைப் பாதிக்கும் ஒவ்வொரு நடவடிக்கை விஷயத்திலும் முன் அறிவிப்புத் தரப்படவேண்டு மென்னும் பொதுக் கருத்துரையொன்றை ஏற்படுத்துவதாகும். 'சிவில் பணியைச் சேர்ந்தோருக்கு நாம் தரக்கூடிய பாது காப்பும் ஆதரவும் அதுவே சிறந்த ஏற்பாடாக இருக்கமுடியும் என்றுதான் எண்ணியிருக்கவேண்டும். ஏனெனில், அது பதவி யினின்று விலக்குவதற்கிருக்கும் அடிப்படை வரம்பை ஏற்படுத்து கிறது.' அரசினர் பணிகளில் முக்கியமான அமிசங்களுள் 'பதவியின் நிரந்தரத்:தன்மை' ஒன்றாகும் என்பதில் ஐயமிருக்க முடியாது. இது, 'பணிப்பிணைப்'போடு (security of service) கொண்டிருக்கும் நெருங்கிய தொடர்பினால், ஒன்றைப்பற்றி நினைக்கும்போது பிறிதொன்றைப்பற்றி நினைக்காதிருக்க முடியாது என்னும் அளவிற்கு இணைந்திருக்கிறது. தொடர் பணியாளர் தொகுதி (personnel) மிக முக்கியமானதாகும். பணிகளில் அடிக்கடி செய்யப்படும் மாறுதல், பணத்தைப் பொறுத்தவரை அதிகச் செலவேற்படுத்துவதாகவும், திறமை யைப் பொறுத்தவரையிலும் பணச்செலவைவிட அதிக இழப் புடையதாகவும் இருக்கிறது. சிவில்துறை ஊழியர்கள், அவர் களுடைய 'தலைவர்களிடம்' அச்சமில்லாமல் வெளிப்படையாக நடந்துகொள்ளக்கூடிய அளவிற்கு அவர்களுக்கு நம்பிக்கையை ஏற்படுத்தக்கூடிய பதவி நீடிப்புக் காலப் பாதுகாப்புத் தரப்பட வேண்டும். இது மிகப் பெருமளவிற்கு மேலே குறிப்பிடப் பட்டுள்ள அரசியற் சட்ட உத்தரவாதங்களால் பெறப்படுகிறது.

எனினும், சிவில் பணியாளர்கள் தங்களைத் தாங்களே காப்பாற்றிக்கொள்வதற்கான இவ் எல்லா வசதிகளும் தரப் படாத சில விலக்குகளுமிருக்கின்றன. இவைகளாவன :

(1) ஒரு நபர் நடத்தை அடிப்படையில் கிரிமினல் குற்றச்சாட்டின்பேரில் தண்டிக்கப்பட்டதைக்கொண்டு விலக் கப்படுகின்றபொழுதோ அல்லது பதவித் தரத்தினின்றும் குறைக் கப்படுகின்றபொழுதோ;

(2) நாட்டுப்.பாதுகாப்பை முன்னிட்டு அத்தகைய வாய்ப்பை சிவில் பணியாளர்களுக்குத் தர இயலாதபோதும்.

கடந்த சில ஆண்டுகளில் உயர் நீதிமன்றங்களும் உச்ச நீதி மன்றமும், தொடர்ந்தாற்போன்றெழுந்த வழக்குகளில், யூனியனுலோ அல்லது இராச்சியங்களாலோ அரசாங்க ஊழியர் கள் பதவியினின்றும் விலக்கப்பட்டதோ அல்லது அகற்றப் பட்டதோ தரப்பட்டிருக்கின்ற பாதுகாப்புகள்படி அரசிய லமைப்பில் சரியானதா அல்லவா என்று அறிவிக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டன. சியாம்லால் X உத்திரப்பிரதேச அரசாங்க வழக்கில், 'கட்டாயமாகத் தரப்படும் பதவி ஓய்வொன்று பதவி விலக்கலோ அல்லது அகற்றலோ ஆகாதாகையால் 311ஆம் விதியின் ஷரத்துகள் இங்குப் பொருந்தா' என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. அங்ஙனமே, ஒப்பந்த அடிப்படையிலான பணியை ஒப்பந்தத்திலுள்ள ஷரத்தொன்றின் ஆதரவைக் கொண்டு முடிவிற்குக் கொண்டுவருவது 311ஆம் விதிப்படி, பதவி விலக்கலோ அல்லது அகற்றலோ ஆகாது. மகேஷ்பிரசாத் X உத்தரப்பிரதேச அரசாங்க வழக்கில் 311 (1)ஆம் விதி, பணியி லிருந்து அகற்றப்படுவது, நியமனத்தைச் செய்தது யாரோ அவர் அல்லது நேர்முக மேலதிகாரியால்தான் செய்யப்படவேண்டும் என்று பொருள்படவில்லை என்று நீதிமன்றம் குறிப்பிட்டது; நீக்கும் அதிகாரி அதே தரத்தையோ அல்லது .வகையையோ சேர்ந்தவராக இருந்தால் போதுமானது. சிவில் ஊழிய நடவடிக்கை ரொருவர்மேல் எடுத்துக்கொள்ள உத்தேசிக்கப் பட்டிருக்கும்போது அதற்கெதிராகக் காரணங்காட்டுவதற்கு நியாயமான வாய்ப்பளிக்கப்படவேண்டுமென்பது, ஒரு தடவைக் கும் அதிகமான வாய்ப்புத் தரவேண்டுமென்று உணர்த்தவில்லை. மேலும், அந்த சிவில் ஊழியர் அவருக்குத் தரப்பட்ட அத்தகைய வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளவில்லையானல், அதை அவர் அவருடைய பொறுப்பிலேயே செய்கிருர்.

ஒவ்வோர் ஒழுங்கு நடவடிக்கைபற்றிய விஷயத்திலும் அரசினர் பணியாளர் பொறுக்கும் குழுவை அரசாங்கம் கலந்து கொள்ளவேண்டுமென்று கூறும் 320ஆம் விதியின் ஷரத்துகளைப் பின்பற்ருதது, 311ஆம் விதியின்கீழ் சிவில் ஊழியரொருவருக்கு விரோதமாகச் சரியான முறையில் எடுக்கப்பட்ட நடவடிக்கை யொன்றைப் பாதிக்குமா என்ற வினு, உத்தரப் பிரதேச அரசாங் கத்திற்கும் எம். எல். திருவஸ்தவாவுக்குமான வழக்கில் உச்ச நீதிமன்றத்திடம் வந்தது. '320ஆம் விதி கட்டாயமானதாகக் கொள்ளப்படமுடியாததோடு 311ஆம் விதிக்குத் துணைவிதி என்

னும் தன்மையில்லை. 311ஆம் விதி 320ஆம் விதியினால் கட்டுப் படுத்தப்பட்டிருக்கவில்லை,' என்று நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

புருஷோத்தம்லால் திங்கராவுக்கும் இந்திய யூனியனுக்கு மிடையே 1958ஆம் ஆண்டு நடைபெற்ற வழக்கின்போது, அது வரையிலும் அளிக்கப்பட்ட தீர்ப்புகளின் அடிப்படையில் 311ஆம் விதியில் காணப்படும் பாதுகாப்புகளின் அளவையும் ஆழத்தை யும்பற்றிய விரிவான ஆராய்ச்சியொன்றைச் செய்வதற்கான வாய்ப்பு உச்ச நீதிமன்றத்திற்குக் கிட்டியது. அவ் வழக்கைப் பற்றிய சுருக்கமான கருத்துகள் பின்வருமாறாகும். "புருஷோத் தம்லால் 1924ஆம்ஆண்டு இரயில்வே பணியில் சைகையாளராகச் (signaller) சேர்ந்தார். உயர்பதவிகளுக்கான தொடர்ச்சியான தேர்வுகளின் பயனாக 1950ஆம் ஆண்டில் அவர் தலைமைக்கட்டுப் பாட்டு அதிகாரியானார் (மூன்றாம் பிரிவுப் பணியைச் சேர்ந்த பதவி). 1951ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் அவர் பொறுக்குக் குழுவொன்றினால், அரசிதழ் பதிவு பெற்ற இரண்டாம் பிரிவு அலுவலகத் தரத்தில் இரயில்வே தொலைபேசித் துறைக்கு உதவி மேற்பார்வையாளராகத் (Assistant Superintendent) தேர்ந் தெடுக்கப்பட்டார். 1951ஆம் ஆண்டு ஜூலை மாதம் அவர் அப் பதவியில் வேலைக்கமர்ந்தார். அவருடைய மேலதிகாரி 1953ஆம் ஆண்டில், 1953ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தோடு முடியும் ஆண் டிற்கான இரகசிய அறிக்கையில் (Confidential Report) அவ ருக்கு விரோதமாகச் சில பாதகமான கருத்துகளை எழுதி இருந்தார். இவ் அறிக்கையில் சொல்லப்பட்டிருந்த கருத்துகள், அதற்குப்பிறகு பிறிதோர் உயர் அதிகாரியினால் உறுதிசெய்யப் பட்டன. இக் கருத்துகள் ஜெனரல் மானேஜருக்குத் தெரி விக்கப்பட்டபோது எழுதியதாவது : 'இவ் அறிக்கைகளைப்பற்றி அறிகிறபொழுது நான் ஏமாற்றமடைகிறேன். ஓர் உயர் அதிகாரி என்ற முறையில் அவரிடம் காணப்பட்ட குறைகளை அவர் நிவர்த்தி செய்கின்றவரையிலும் கீழ் அதிகாரியாக அவர் நியமிக்கப்படவேண்டும். அடியிற் கோடிட்ட பகுதிகள் அவருக் குத் தெரிவிக்கப்படவேண்டும்.' அந்த அப்பீல் முறையீட்டு வாதி அவருக்கெதிரான கருத்துகளை எதிர்த்து அவர் கட்சியை எடுத்துக் கூறினார். ஆனால், இது சாதகமான முடிவை ஏற்படுத்தவில்லை. 1953ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் மூன்றாம் பிரிவிற்கு (class III) அவர் மீண்டும் நியமிக்கப்பட்டார். முதலில் அவர் முறையீடு ஒன்றின்மூலம் ஜனாதிபதிக்கு விண்ணப்பித்துக் கொண்டார். எனினும், அதனால் பயனில்லை. 1955ஆம் ஆண்டு பஞ்சாப் உயர் நீதிமன்றத்தில் ஒரு ரிட் மனுவை அவர் தாக்கல் செய்தார். அம் மனுவை விசாரித்த நீதிபதி, புருஷோத்தம்

லாலுக்கு எதிராக எடுக்க உத்தேசிக்கப்பட்டிருந்த நடவடிக்கைக்கு எதிராகக் காரணம் காட்டுவதற்கு அவருக்கு வாய்ப்புத் தரப்படாததால் 311ஆம் விதியின் ஷரத்துகள் மீறப்பட்டன வென்றும், அதனுல் அவருக்கு எதிராக எடுக்கப்பட்ட நடவடிக்கை செல்லாது என்பதாகவும் அறிவித்தார். இந்திய யூனியனுல் தாக்கல் செய்யப்பட்ட உரிமைப்பட்டய மேல்முறையீடொன்றின் (letters patent appeal) காரணமாக, இரு நீதிபதிகளைக்கொண்ட உயர் நீதிமன்ற டிவிஷன் பெஞ்ச் ஒன்று மேற்சொல்லப்பட்ட உத்தரவை மாற்றி ரிட் மனுவைத் தள்ளியது. எனவே, விண்ணப்பதாரர் உச்ச நீதிமன்றத்திற்கு அப்பீல் செய்தார்.''

உச்ச நீதிமன்றம் அதனுடைய தீர்ப்பில் நான்கிற்கு ஒன்று என்ற அடிப்படையில் பிரிந்திருந்தது. பெரும்பான்மையினரின் சார்பாகப் பேசும்போது தலைமை நீதிபதி தாஸ் பின்வரும் கருத்துகளை எடுத்துரைத்தார்:

'310(1)ஆம் விதியின் ஆரம்ப வாசகங்களில் எடுத்துரைக்கப்படும் விலக்குகளுக்குட்பட்டு, உதாரணமாக, விதிகள் 124, 148, 218, 324; நம்முடைய அரசியலமைப்பு, சொல்லப்பட்ட 310(1) விதியின்படி அரசாங்க ஊழியர்கள் ஜனுதிபதி அல்லது கவர்னர் விருப்பமுள்ளவரை பதவி வகிக்கிருர்கள் என்னும் ஆங்கிலப் பொதுச் சட்டத்தின் நியதியை (English Common Law Rule) ஏற்றுக்கொண்டிருக்கிறது. அவ் விருப்பத்தைப் பயன்படுத்துவதற்கு 311ஆம் விதியின்படி இரு தகுதிகளை அது விதித்திருக்கிறது. அதாவது, 311ஆம் விதியின் ஷரத்துகள் 310 (1)ஆம் விதியை வரையறை செய்வதாக அமைத்திருக்கின்றன. 311ஆம் விதியின்கீழ் இரு விஞக்கள் எழுகின்றன. அவைகள், (1) பாதுகாப்புக்குரியவர் யார் என்பதும் (2) பாதுகாப்பின் நோக்கமும் வரையறையுமாகும்.'

'நிரந்தரமான சிவில் பதவியுடையவர்களாக இருக்கும் நபர்களுக்காகவோ அல்லது பணிகளில் நிரந்தரமாக இருப்பவர்களுக்காகவோ பாதுகாப்பாக இருக்கும் 'ஏற்பாடுகளின் நடப்பு நிலையைக் கட்டுப்படுத்துவதானது அவ் விதிக்கு மாறும் பண்பேற்றும் சொற்களைச் சேர்ப்பதற்குச் சமமாகும். அவ்வாறு செய்வது அரசியலமைப்பையோ அல்லது சட்டமொன்றையோ விளக்கிக் கூறும் சிறப்புக் கொள்கைகளுக்கு எதிர்மாறுனதாகும். அவ் வேறுபாட்டிற்குப் பகுத்தறிவு அடிப்படை எதுவும் இருக்க முடியாது. நிரந்தர அல்லது தற்காலிக வகுப்புகளுக்கிடையே (மாற்று, தற்காலிகமான தகுதிகாண் பருவம் உள்பட) அவ் விதி

வேறுபாடுகளேற்படுத்தவில்லை. எனவே, அவைகளிரண்டும் அதன் பாதுகாப்பிற்கு உட்பட்டவையாகும்.'

'அவ் விதியின் அடிப்படையில் ஏற்படும் பாதுகாப்புகள் இரண்டாகும். (1) எவ் அதிகாரியினால் (authority) நியமனம் செய்யப்பட்டதோ அவ் அதிகாரிக்கும் கீழ்ப்பட்ட அதிகாரியினால் விலக்கப்படுவது அல்லது அகற்றப்படுவதை எதிர்ப்பது, (2) காரணங் கேட்கப்படாது, விலக்கப்படுவது அகற்றப்படுவது அல்லது தரத்தினின்றும் குறைப்பது போன்றவைகளை எதிர்ப்பது. 'விலக்கப்படுதல்,' 'அகற்றப்படுதல்,' 'தரத்தில் குறைக்கப்படுதல்' ஆகிய சொற்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டபோது சிறப்புப் பொருளைப் பெற்றன. அரசாங்கம் அந்த மூன்று வகைப்பட்ட தண்டனையைத் தருவதற்கு எண்ணும் வழக்குகளில்தான், அரசாங்க ஊழியரொருவர்மீது எடுத்துக்கொள்ள உத்தேசிக்கப் பட்டிருக்கும் நடவடிக்கைக்கெதிராகக் காரணம் காட்டப் போதுமான வாய்ப்பளிக்கவேண்டும். ஆதலால், பதவி விலக்கம் செய்யப்படுவது தண்டனை அடிப்படையில் அல்லாது இதர வழியில் செய்யப்படுகின்றபோது, பதவி விலக்குச் செய்யப்பட்ட அந்த அரசாங்க ஊழியர் 311 (2)ஆம் விதியின் பாதுகாப்புக் கோர முடியாது.'

'அரசாங்க ஊழியரொருவர், தெளிவான அல்லது குறிப்பால் உணர்த்துகிற அல்லது பணி நிலைமைகளைக் குறிக்கும் விதிகள் அடிப்படையில் பதவிக்கு உரிமை பெறுகின்றபோது, அத்தகைய ஊழியரொருவரது வேலைநீக்கம் அல்லது கீழ்பதவிக்கு நியமிக்கப் படுவதொன்றே தண்டனையாகும். முதல் நோக்கிலும் (prima facie) அது தண்டனையாகும். ஏனெனில், அது அவர் அப் பதவியி லிருப்பதற்கோ அல்லது அத் தரத்தைப் பெறுவதற்கோ அவருக் கிருக்கும் உரிமைகளையும், ஊதியங்களையும், இதர நன்மைகளையும் அடைவதற்கு முடியாதவாறு பறிமுதல் செய்வதாக இயங்கு கிறது; ஆனால், அவ் ஊழியர், நிரந்தரமான அல்லது தற்காலிக மான பதவியொன்றிற்கு, தகுதிகாண் பருவம் அல்லது மாறுதல் (afficiating) அடிப்படையில் அப் பதவிக்கோ அல்லது அத் தரத் திலோ நியமிக்கப்பட்டபோது, அத்தகைய உரிமையை அவர் பெற்றில்லாதபோதும், அவருடைய தற்காலிகப் பணி, பொருத் தமான விதிகள் (rules) அடிப்படையில் நிரந்தரப் பணியைப் போன்ற பணிக்கான (quasi permanent service) தக்க பருவத்தை அடையாதிருக்கும்போதும் அவருடைய நியமனம் முடிவிற்குக் கொண்டுவரப்படுமானால் அது அவருக்குள்ள எந்த உரிமையையும் பறிக்காததோடு அதுவே அவருக்குத் தரப்பட்ட தண்டனையாகு

-வும் ஆகாது. இதை வேறு நோக்கில் பார்க்கின்றபோது, எப்போதேனும் அரசாங்கம் வேலையை முடிவிற்குக் கொண்டு வருகின்ற உரிமையைப் பெற்றிருக்கும்பொழுது; ஒப்பந்தம் அல் லது விதிகளில் குறிப்பிட்டுள்ளவாறு செய்யப்படுகின்ற நீக்கம் (termination) நீக்கப்பட்டதனுலும் (per se) முதல் தோற்றத்தி னுலும் (prima facie) தண்டனையாகாது. அது 311ஆம் விதியின் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் சேர்ந்ததாகாது.'

(2) 'அத்தகைய நிகழ்ச்சிகளின்போதும், தவருன நடத்தை திறமையின்மை போன்றவற்றின் அடிப்படையில் அரசாங்கம் அந்த ஊழியருக்கெதிராக நடவடிக்கை எடுக்க முடிவுசெய்தா லும் அல்லது நீக்கல், அகற்றல் அல்லது குறைத்தல் போன்ற தண்டனையை அதன் சட்டபூர்வமான பின் விளைவுகளோடு அவர் மேல் சுமத்த முடிவு செய்தாலும் அவ் ஊழியர் 311 (2)ஆம் விதி யின்கீழ்ப் பாதுகாப்புக் கோர உரிமையுடையவர்.'

'நீதிமன்றங்கள் பின்பற்றவேண்டிய இரு சோதனைகளில் முதலாவது அப் பதவிக்கோ அல்லது தரத்திற்கோ அந்த ஊழியர் உரிமையைப் பெற்றிருந்தாரா என்பது; இரண்டாவது, அல்லது அவர் பிரதிகூலமான பலன்களால் பாதிக்கப்பட்டிருந் தாரா என்பதாகும். இவ் விரு சோதனைகளில் ஏதாவதொன்றை அந்த வழக்கு திருப்தி செய்தால், அப்பொழுது அவ் ஊழியர் தண்டிக்கப்பட்டதாகவும், பதவியை முடிவிற்குக் கொண்டு வந்தது பதவியிலிருந்து விலக்கப்பட்டதாக அல்லது அகற்றப் பட்டதாகவும் சொல்லப்படவேண்டியதோடு, அவருடைய மூலப்பதவிக்கு அவர் மீண்டும் அனுப்பப்படும்போது அவரு டைய தரத்தைக் குறைத்ததாகவும் கருதப்பட்டு 311 (2)ஆம் விதி யையும் அதனில் காணப்படும் ஏற்பாடுகளையும் மதித்து நடந்த தாகக் கொள்ளவேண்டும். அவ்வாறில்லாவிட்டால் பணியை முடிவுக்குக் கொண்டுவருதல் அல்லது தரத்தைக் குறைத்தல் தவ ருனதாகக் கொள்ளப்படவேண்டும்.'

"அந்த மேல் முறையீட்டுவாதி அவ்வுயர் பதவிக்கு மாற்றுப் பணியாளர் அடிப்படையில் நியமிக்கப்பட்டார். ரயில்வே சட்டத்தின்படியும் ஆதார விதிகள்படியும் அப் பதவியில் அவர் தொடர்ந்திருப்பதற்கு உரிமை கிடையாது. அத்தகைய நியமனம் அரசாங்கத்தினுல் எப்போது வேண்டுமாஞலும் நியாய மான அறிவிப்பிற்குப் பிறகு முடிவிற்குக் கொண்டுவரப்படலாம். ஆதலின் அவரை அப் பதவியினின்றும் கீழ்ப்பதவிக்கு நியமித்தது உரிமை எதையும் பறிமுதல் செய்ததாகவும் 'தரத்தில் குறை' ஏற்படுத்தியதாகவும் விலக்குவது தண்டனை தருவதற்காத

என்ருகாது. அது 'விலக்கல் அல்லது அகற்றல்' என்பதாகவு மாகாது. ஏனெனில், ரயில்வே சட்டத்தின் (மேல் முறையீட்டு வாதிக்குப் பொருந்தக்கூடிய) 1729ஆம் விதிக்கான (rule) குறிப்பு I-ல் அதற்குஆதாரமில்லை. மேலும் அது பிறகு அவருக்குக் கிடைக்கக்கூடிய பதவி உயர்வுக்கான வாய்ப்புகளேயோ அல்லது அவர் எப் பதவியில் இருந்தாரோ அப் பதவியில் அவருக்குள்ள மேல்நிலையைப் (seniority) பறிமுதல் செய்யவில்லை. அவர் 311 (2)ஆம் விதியின் தேவைகள் பின்பற்றப்படவில்லை என்று புகார் செய்யமுடியாது.'

நீதிபதி விவியன்போஸ், தம்முடைய மாறுபட்ட தனித் தீர்ப்பில் 311ஆம் விதியைப்பற்றிய பெரும்பான்மையினரின் விளக்கத்தைப் பொதுவாக ஏற்றுக்கொண்டார். ஆனால், அவர் 'நீக்கல், அகற்றல், தரம் குறைத்தல்' ஆகிய சொற்கள் விசேஷப் பொருளுடையன என்றும், தண்டனை போன்ற பிரதி கூலங்கள் ஏற்படும்போது 311 (2)ஆம் விதி பொருந்துகிறதென் றும், எப்போது உரிமையொன்று மீறப்படுகிறதோ அப்போது அவ் விதி அக்கறையுடையதாக இருக்கிறதென்றும் கூறினர். அவர் கூறியதாவது:

'சோதனை 'ஒப்பந்த அடிப்படையிலான ஒன்றை முடிவிற்குக் கொண்டுவரும்போது' (contractual termination) ஏற்படக் கூடியவைகளினும் அதிகமாகப் பின்னல் ஏற்படும் தீமைகள் இருக் குமா என்பதாக எப்போதும் இருக்கவேண்டும். மேலும், அச் சோதனை, 311 (2)ஆம் விதி பல விதிகளால் (rules) ஏற்படுத்தப் படும் தண்டனைகளுக்குமட்டும் பொருந்துமாறு செய்யப்படக் கூடாதாவென்பதாக, அதாவது, வேறு சொற்களால் சொல்ல வேண்டுமாயின், குறிப்பான விதிகள் (rules) சிலவற்றின்படி குறிப்பிட்ட பின்விளைவு தண்டனையொன்ருகாதென்றோ அல்லது குறிப்பிட்ட ஒரு நடவடிக்கை தண்டனையாகச் செயற்பட எண்ணப்பட்டதல்ல என்பதாகவோ, அவ் விதி தவிர்க்கப்பட முடியாதா என்பதாக இருக்கவேண்டும்.''

"இவ் வழக்கில் பழைய நிலையை அடையச் செய்யும் உத்தரவு பிடிகொடாததாக இருப்பினும், அவ் உத்தரவிற்கு உண்மையான அடிப்படையாக இருக்கும் ஜெனரல் மானேஜருடைய குறை காணுரை அல்லது இடப்பொருத்தமில்லாத நிர்வாகக் குறித் தல்கள் (notings) அதாவது, '......உயர் அதிகாரியாக இப்போ திருக்கும் சந்தர்ப்பத்தில் காணப்பட்ட குறைகளை அவர் நிவர்த்தி செய்கின்றவரையிலும்,' என்பவைகளைக் கவனிக்காதிருக்க

முடியாதென்பதோடு 311 (2)ஆம் விதி இங்கு சம்பந்தப்பட்டிருக்கிறது.''

''நடவடிக்கையின் தோற்றம் அல்லது பின்பற்றப்படுகின்ற நடைமுறை அல்லது குறிப்பிட்ட அதிகாரியின் மனத்தில் தோன்றியதென்ன என்பவைகளால் உண்மையான தீங்கு ஏற்படுவதில்லை. ஆனால், அதன்பின் ஏற்படும் பின்விளைவுகளால்தான் ஆகும். ஆகையால், எனக்குச் சரியெனத் தோன்றுவது 311ஆம் விதியின் பாதுகாப்புகள் பேரிடிகளுக்கேயல்லாது கடுஞ்சொற்களுக்கு எதிராக இருக்கவில்லை. உத்தரவின் விளைவுதான் முக்கியமாகும். 'ஒப்பந்த அடிப்படையொன்றின்' மூலமாக ஏற்படக்கூடியதைக் காட்டிலும் அதிகமாகத் தீமைகள் ஏற்படுகின்றபோது 311ஆம் விதி அங்குப் பொருத்தமுடையதாகிறது என்பது என் தீர்ப்பாகும். குறிப்பிட்ட விதிகளின்படி குறிப்பிட்ட விளைவு தண்டனையாகாதென்றோ அல்லது குறிப்பிட்ட நடவடிக்கை தண்டனையாகச் செயற்படக் கருதப்படவில்லையென்றோ சொல்வதால் அவ் விதி புறக்கணிக்கப்படும் என்று நான் நினைக்கவில்லை.''

கேம்சந்துக்கும் இந்திய யூனியனுக்கும் ஏற்பட்ட வழக்கில் நீதிமன்றம் குறிப்பிட்டதாவது :

'எடுக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைக்கெதிராகக் காரணங்காட்ட நியாயமான வாய்ப்புத் தரவேண்டுமென்பது,

(அ) அவருடைய குற்றத்தை மறுத்துரைப்பதற்கும், அவர் குற்றமற்றவர் என்பதை நிலைநாட்டுவதற்கும் எந்த அடிப்படையில் குற்றங்கள் சுமத்தப்படுகின்றன என்பதை அவருக்குச் சொல்கின்றபோது ஏற்படும் வாய்ப்பு;

(ஆ) அவருக்கெதிராக வரும் சாட்சிகளை, அவரைக் காத்துக் கொள்ளக் குறுக்கு விசாரணை செய்யவும், அவரையோ அல்லது அவர் பாதுகாப்பிற்கு ஆதரவான சாட்சிகளையோ விசாரிப்பதற்கும் வாய்ப்பு ;

(இ) விசாரணை முடிந்த பிறகும், அரசாங்க ஊழியர்மேல் சுமத்தப்பட்டிருக்கும் குற்றங்களின் அபாயம் அல்லது அபாயமற்ற தன்மை நிரூபிக்கப்பட்ட பிறகுப்அவருடைய கவனத்தைச் செலுத்திய பிறகும், மூன்று தண்டனைகளில் எது அவர்மீது சுமத்தப்பட்டிருக்கிறது என்பதை முடிவுசெய்து அதைஅவருக்குத் தெரியப்படுத்துகின்றபோது, உத்தேசிக்கப்பட்டிருக்கும் அத் தண்டனையை அவருக்கு ஏன் தரப்படக்கூடாதென்பதைத்

விண்ணப்பித்துக்கொள்வதற்கான வாய்ப்பு' ஆகியவற்றை யும் சேர்த்தாகும்.

அரசாங்க ஊழியரொருவரின் பணிகள் 'புரட்சிகரமான நடவடிக்கைகள்' அடிப்படையில் விலக்கப்பட முடியுமா? இவ் வினு பால கோட்டையாவுக்கும் இந்திய யூனியனுக்குமான வழக்கின் போது எழுந்தது. அவ் வழக்கின்மேல் முறையீட்டுவாதி, 1949ஆம் ஆண்டின் ரயில்வே பணி (நாட்டுப் பாதுகாப்பைப் பாதுகாக்கும்) ஒழுங்கு விதிகளின்கீழ்ப் பிறப்பிக்கப்பட்ட அறிக்கைகள் சட்டப்படி செல்லத்தக்கனவா என்பதையும், அவர்பற்றிப் பிறப்பிக்கப்பட்ட தற்காலிகப் பதவிநீக்கம், நிரந்தரமாகப் பதவியினின்றும் விலக்கல்பற்றிய உத்தரவுகளையும் செல்லத்தக்கனவா என்று வாதம் செய்தார். மேல் முறையீட்டுவாதியின் சார்பாக 311ஆம் விதியின் சட்டபூர்வமான பாதுகாப்புகளுக்கு எதிராகவும், 14ஆம் விதியின் கீழ் உத்தரவாதம் செய்யப்பட்டிருக்கும் ஆதார உரிமைகளுக்கு மாருகவும் (சட்டத்தின் முன் சமம் என்பதும், சட்டங்களின் சமப் பாதுகாப்பும்) 19(1) (c)ஆம் விதிக்கு (கழகங்கள் அமைக்கும் உரிமை) மாருகவும் பாதுகாப்பு ஒழுங்கு விதிகள் (Security Rules) இருப்பதால் செல்லுபடியாகத் தகாதவையாகும் என்று சாதிக்கப்பட்டது. இவ் வாதங்களை நீதிமன்றம் நிராகரித்து, ஒருமனதாக எடுத்துக் காட்டியதாவது :

(1) பாதுகாப்பு ஒழுங்கு விதிகளில் 3ஆம் விதியில் வரும் 'புரட்சிகரமான நடவடிக்கைகள்' என்னும் சொற்களின் பொருள் விரிவானதாக இருக்கலாமெனினும் அவை தெளிவற்றதும் முடிவற்றதென்பதும் சொல்ல முடியாது. சுருக்கமான அதன் தலைப்பில் சொல்லப்படுவதுபோல 3ஆம் ஒழுங்கு விதிக்கான ஏற்பாட்டில்; அதன் குறிக்கோளாகச் சொல்லப்படுவது தேசியப் பாதுகாப்பை உத்தரவாதம் செய்வதாகும். தேசியப் பாதுகாப்பைக் கருத்திற்கொண்டு பார்க்கும்போது 'புரட்சிகரமான நடவடிக்கைகள்' என்னும் சொல் சுருக்கமாகவும், சட்ட அடிப்படையில் வகைப்படுத்தக்கூடியதாகவும் இருக்கிறது. 1949ஆம் ஆண்டின் அந்தப் பாதுகாப்பு ஒழுங்கு விதிகள் அரசியலமைப்பின் 14ஆம் விதிக்குப் புறம்பானவையல்ல.

(2) அந்த மேல்முறையீட்டுவாதிகள் 19(1) (c)ஆம் விதியின் (கம்யூனிஸ்டுக் கட்சியிலும் தொழிலாளர் அங்கங்களிலும் அங்கம் வகிக்க) கீழ் சங்கங்கள் ஏற்படுத்த அல்லது அங்கம் வகிக்க ஆதார உரிமையுடையவர்கள் என்பதில் சந்தேகம் கிடையாது. ஆனல், அவர்கள் அரசாங்கத்தில் தொடர்ந்து உத்தியோகம் பார்க்க ஆதார உரிமை கிடையாது; அவர்களுடைய பணிகள்

அரசாங்கத்தினுல் முடிவிற்குக் கொண்டுவரப்படுகின்றபோது, 311ஆம் விதி மீறப்படாதிருக்கும்போது அவர்களுடைய சட்டபூர்வமான உரிமைகள் பாதிக்குமாறு செய்யப்பட்டிருக்கிற தென்று புகார் கூற முடியாது.

(3) நியமன நிபந்தனைகள் (மேல் முறையீட்டுவாதிகளுக்குப் பொருந்தக்கூடிய) சரியான முன்னறிவிப்பிற்குப் பிறகு அவர்களுடைய பணிகளை முடிவிற்குக் கொண்டுவர வகைசெய்வதால் தக்க காலத்திற்கு முன்பே முடிவிற்குக் கொண்டுவந்ததாகச் சொல்லும் பிரச்சினை எழவில்லை. பாதுகாப்பு ஒழுங்கு விதிகளின் 7ஆம் விதி ஒய்வூதியம், கைம்மாறு போன்ற எல்லா நன்மைகளையும் விதிகளுக்குட்பட்டு அவர்கள் பெறக்கூடியவர்கள். அவர்களுடைய பணிகளை முடிவிற்குக் கொண்டுவரும் அவ் உத்தரவுகள், ரயில்வே பணியாளர் தொகுதிச் சட்டத்தின் 148ஆம் ஒழுங்குவிதியின்கீழ்ப் பிறப்பிக்கக்கூடிய உத்தரவொன்றிற்குச் சமமானதாக இருப்பதால், அது விலக்கப்படல் அல்லது அகற்றப்படலாகாது. ஆதலின், அரசியலமைப்பின் 311ஆம் விதி இங்கு கொண்டுவரப் படுவதற்கு முடியாது.

(4) அவ் விதிகள், நிலவிவரும் புரட்சிகரமான நடவடிக்கைகள் அல்லது பிறகு எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய புரட்சிகரமான நடவடிக்கைகளுக்காக அதன்கீழ் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்பதில் மிகத்தெளிவாக இருக்கின்றன. பின்னுல் சொல்லப்பட்ட விஷயத்தில் நடவடிக்கை எடுப்பதற்கான ஆதாரங்கள், இப்போது எழுந்துள்ள வழக்குகளுக்கான அறிக்கைகளைப் போன்று, ஊழியர்கள் செயலில் ஈடுபடுவதற்கு முந்திய அவர்களுடைய நடத்தையிலிருந்து என்பதால் அவைகள் சென்றகாலத்தையும் உட்படுத்தவேண்டுமென்பதில்லை.

310ஆம் விதியின்கீழ் அரசாங்க ஊழியரொருவரை அவருடைய அலுவல் கடமைகள் சம்பந்தப்படாத நடத்தைகளுக்காக தண்டிக்க அரசாங்கத்திற்கு அதிகாரமிருக்கிறதா? இவ் வினு எல். என். பாண்டே வழக்கில் அலஹாபாத் உயர்நீதிமன்றத்தால் உடன்பாடுடையவாறு விடையளிக்கப்பட்டுள்ளது. நீதிமன்றத் தீர்ப்பை அளித்து நீதிபதி தாவன் (Justice Dhavan) கூறியதாவது :

'அவ் அலுவலருக்கு எதிராக எடுக்கப்பட்ட நடவடிக்கை, சம்பந்தப்பட்ட நடத்தை, தவறுன நடத்தைக்குச் சமமானதென்றும், அரசாங்க அலுவலர் ஒருவரின் உயர்வுக்குத் தக்கதல்லவென்றும் அல்லது எழுதப்படாத நடத்தைபற்றிய விதியை

மீறியதாகுமென்றும் அரசாங்கம் கருதுமானால், 311ஆம் விதியின் ஏற்பாடுகளுக்கிணங்க, குற்றஞ் சாட்டப்பட்ட அலுவலருக்கு அவர்மேல் எடுக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைக் கெதிராகக் காரணங் காட்டுவதற்குத் தேவையான சந்தர்ப்பம் தரப்பட்டிருந்தால் நியாயமானதாகும். அவர் மேலும் குறிப்பிட்டதாவது, அரசாங்க ஊழியர் ஒருவர் அவருடைய தனி வாழ்க்கையில் செய்த தவறான நடத்தைக்காகஅரசாங்கத்திற்குப் பதிலிறுக்கக் கடமைப்பட்டிருக்கவில்லையென்னும்வாதம் சரியான தென்றால், அதன் முடிவு, அரசாங்க ஊழியர் ஒருவரின் தனி வாழ்க்கை எவ்வளவுதான் குற்றமுடையதாகவும் வெறுக்கத் தக்கதாகவுமிருந்தாலும், அவர் கிரிமினல் குற்றம் ஒன்றைச் செய்கின்றவரையிலும் அல்லது அரசாங்க ஊழியர்களது நடத்தைபற்றிய விதிகள் (Conduct Rules) குறிப்பாகச் செய்யக் கூடாதென்று தடுக்கும் குற்றமொன்றைப் புரிகின்றவரையிலும், அவருடைய பணிகளை அகற்றுவதற்கு அரசாங்கம் அதிகாரமற்றதாகிவிடும். இது அரசாங்கத்தின் நிலைமையை அரசாங்கத்தைச் சேராத இதர வேலைக்கு வைத்துக்கொள்பவர்களின் நிலைமையை விடக் கேவலமானதாக்கிவிடும் அளவிற்கு அரசாங்க ஊழியர்களிடம் அச்சத்தோடு கூடிய பணிவின்மையை வலுப்படுத்தும். அது ஒவ்வோர் அரசாங்க ஊழியரும் இடத்திற்கேற்ப ஜனாதிபதி அல்லது கவர்னரின் நல்லெண்ணத்தைப் பெறுகின்றவரையிலும் பதவி வகிக்கிறார் என்றுரைக்கும் 310ஆம் விதியின்கண் இருக்கும் கொள்கை பெரும்பாலும் அழிப்பதாக இருக்கும். அரசாங்க ஊழியர் எவராயினும் அவர் பணிகளை வேண்டாமென்று விலக்குவதற்கு அரசாங்கத்திற்கிருக்கும் அதிகாரம் அரசியலமைப்பின் 311ஆம் விதியிலும் இதர ஷரத்துக்களிலுமுள்ள பாதுகாப்பு நிபந்தனைகளால் கட்டுப்படுத்தப்பட்டிருந்தாலும், உண்மையானதாகும்.

## அகில இந்தியப் பணிகள்

அகில இந்தியப் பணிகள் ஏற்படுத்தப்படுவதற்கு 312ஆம் விதி வகைசெய்கிறது. அகில இந்தியப் பணியொன்று, மத்திய இராச்சியப் பணிகளாகிய இரண்டினின்றும் வேறுபட்டது. முன்பே குறிப்பிடப்பட்டதுபோல 309ஆம் விதியின்கீழ், மத்திய அரசாங்கம் தன்னுடைய பணிகளை ஏற்படுத்தவும், நியமனம் செய்யவும், பணிவிதிகளை ஏற்படுத்தவும் உரிமையுடையது போன்று இராச்சியங்களும் தங்களினுடைய சிவில் பணிகளை ஏற்படுத்தவும், தங்களினுடைய சொந்தப் பணிவிதிகளை ஏற்படுத்தவும் உரிமையுடையவைகளாக இருக்கின்றன. இவ்வாறு நடு அரசாங்கத்திற்கும் இராச்சியங்களுக்கும் தனித்தனி அதிகார

வரம்புகளைக் கொடுக்கின்றபோது, 312ஆம் விதி இத் துறையில் இராச்சியங்களுக்கிருக்கும் தற்சுதந்திரத்தை அகில இந்தியப் பணிகளை ஏற்படுத்தும் அதிகாரத்தை மத்திய அரசாங்கத்திற்கும் கொடுப்பதால், ஓரளவிற்கு அவைகளினின்றும் எடுக்கிறது. இருப்பினும், அரசியலமைப்பைப் படைத்தவர்கள், மத்திய அரசாங்கத்திற்கு அத்தகைய அதிகாரத்தைத் தந்தபோது இராச்சியங்களின் பிரதிநிதிகள் பெரும்பான்மையோரின் இசைவிற்கேற்ப அவ்வதிகாரம் இருக்கவேண்டுமென்றும் கருதினார்கள். எனவேதான் 312ஆம் விதி அகில இந்தியப் பணியொன்று, இராச்சிய சபை தேசிய நலனை முன்னிட்டு ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அத்தகைய அகில இந்தியப்பணிகள் ஏற்படுத்த வேண்டியது அவசியமாகும் என்ற தீர்மானமொன்றை மூன்றிலிரு பங்கு பெரும்பான்மைக்குக் குறைவில்லாத ஆதரவோடு நிறைவேற்றி அறிவிக்குமானால், ஏற்படுத்தப்படலாம் என்று வகைசெய்கிறது. அத்தகைய தீர்மானமொன்று இராச்சியங்களால் தரப்பட்ட அதிகாரமொன்றிற்குச் சமமானதாகக் கருதப்படவேண்டும். அத்தகைய தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டதும், அத்தகைய அகில இந்தியப் பணியொன்றை ஏற்படுத்தவும், அதனோடு தொடர்புடைய விபரங்களை ஏற்படுத்தவும் பாராளுமன்றம் தகுதியுடையதாக இருக்கிறது.

அகில இந்தியப் பணிகள் அவற்றின் தன்மைக்கேற்பத் தேசிய ஒற்றுமையையும் வலுவையும் ஏற்படுத்தும் சாதனங்களாகும். இன்றியமையாத முக்கியமான நிர்வாகத் துறைகளில் அவை பொதுத் தரங்களை ஏற்படுத்தத் துணைசெய்கின்றன. அவைகள் ஒவ்வோர் இராச்சியத்திலும் மத்திய அரசாங்கத்தின் அதிகார வரம்பிற்குட்பட்ட பணியில் உறுப்பினர்களாக இருப்பதால் அதிக சுதந்திரத்தோடு தேசிய நோக்கில் தேசிய நலன்களைக் கருத்திற்கொண்டு செயலாற்றவல்ல சிறந்த அதிகாரிகள் பணி புரிய உதவுகின்றன. அத்தகைய அகில இந்தியப் பணிகளை ஏற்படுத்துமெண்ணம் அரசியலமைப்பை ஆக்கியவர்களுக்கு முதலில் கிடையாது. எனவேதான் நகல் அரசியலமைப்பு இத் துறையில் எவ்வேற்பாட்டையும் செய்யவில்லை. ஆனால், தேசப் பிரிவினையும், பாகிஸ்தான் தோற்றமும், அதையொட்டி எழுந்த நிச்சயமற்ற நிலைகளும் சுதந்திரம் கிடைத்த சில நாட்களுக்குள்ளாகவே அதிகாரத்திலிருந்தவர்களுக்கு நாட்டு ஐக்கியத்தைக் காப்பாற்ற அத்தகைய பணிகள் சக்திவாய்ந்த சாதனங்களாக இருக்கும் என்பதைத் தெளிவாக்கின. அகில இந்தியப் பணிகளை ஏற்படுத்துவதற்குத் தேவையான அனுபவம் இந்திய சிவில் பணியின் அமைப்பிலிருந்து கிடைத்தது.

தற்போது, பழைய இந்திய ஆட்சிப் பணியாளர் தொகுதியோடு (Indian Civil Service)கூட இந்திய ஆட்சிப் பணியாளர் தொகுதி (Indlan Administrative Service), இந்தியப் போலீஸ் பணியாளர் (Indian Police Service) தொகுதி ஆகிய இரண்டு அகில இந்தியப் பணியாளர் தொகுதிகள் இருக்கின்றன. இருப்பினும், யூனியன் பல மத்தியப் பணியாளர் தொகுதிகளை ஏற்படுத்தியிருக்கிறது. இவைகளில் மிகவும் முக்கியமானவைகள் வருமாறு :

(1) இந்திய வெளிவிவகாரப் பணியாளர் தொகுதி

(2) இந்தியக் கணக்குத் தணிக்கைப் பணியாளர் தொகுதி

(3) இந்தியப் பாதுகாப்புக் கணக்குப் பணியாளர் தொகுதி

(4) வருமான வரி அலுவலர்கள் (வகுப்பு I) தரம் II பணித் தொகுதி
(Income-Tax Officers (Class I) Grade II Service)

(5) இந்திய இரயில்வே கணக்குப் பணியாளர் தொகுதி

(6) இந்திய சுங்க, ஆயப் பணியாளர் தொகுதி

(7) இந்திய இரயில்வேயின் ரெவின்யூ பணியாளர் தொகுதியும் இடப்பெயர்வு (போக்குவரத்து) பணியாளர் தொகுதியும்

(8) இராணுவத்துறை நிலங்களும் கன்டோன்மென்ட் பணியாளர் தொகுதியும்

(9) இந்திய அஞ்சல் பணியாளர் தொகுதி

(10) மத்தியப் பொறியியல் பணியாளர் தொகுதி

(11) இந்திய இரயில்வே பொறியியல் பணியாளர் தொகுதி.

(12) தபால், தந்தித் துறையைச் சேர்ந்த உயர் தந்திப் பொறியியல், வான் தந்திப் பணியாளர் தொகுதி. (Superior Telegraph Engineering and Wireless Branches of the Posts and Telegraphs Department)

இந்திய ஆட்சிப் பணியாளர் தொகுதி உறுப்பினர்களின் நன்மைகளைப் பாதுகாக்கவும் குறிப்பிட்ட சில ஏற்பாடுகளை அரசியலமைப்பு செய்திருக்கிறது.

## அரசினர் பணிகளும் பொதுநல அரசும்

அரசியலமைப்பு ஏற்பாடுகளையெல்லாம் ஒருங்கே எடுத்துக் கொண்டு ஆராயும்பொழுது, இந்திய அரசின் மாறுபட்ட தன்மைக்கேற்ப அரசினர் பணிகளை அமைக்க அவை ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன என்பதில் சந்தேகமே கிடையாது. சிவில் ஊழியரொருவர் வழக்கமான வாய்மையுடைமை, விசுவாச முடைமை, திறமையுடைமை என்னும் சிறப்புகளையுடையவராக இருக்கவேண்டியதேயாகும். அவருடைய வாய்மை குற்றச் சாட்டிற்கு அப்பாற்பட்டும், அவருடைய விசுவாசமுடைமை ஐயத்திற்கப்பாற்பட்டதாகவும், அவருடைய திறமையுடைமை ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் தரங்களுக்கேற்புடையதாகவும் இருக்கவேண்டும். பொதுமக்களிடமிருந்து வேண்டுமென்றே தனித்திருக்கும் நோக்கத்தோடு உயர்பணித் தொகுதிகளில் ஆங்கிலேயர்கள் இந்தியாவில் ஒருவகைப்பட்ட சுய தற்பெருமை யைச் செயற்கையாக ஏற்படுத்தியிருந்தார்கள். அத்தகைய நிலைமை, யூனியன் அரசாங்கமும் இராச்சிய அரசாங்கங்களும் மிக அதிகமான வேகத்தில் சாதாரண மக்களுடையவும் பொதுநலனை அடைவதற்கு அர்ப்பணித்துக்கொண்டிருக்கும்போது, அகலு கிறது. இன்று அரசினர் பணித்துறை சமூக சேவை செய்வதற் கான ஆர்வமும், மக்களோடு மக்களாக மாறவும் வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. 'இன்று திறமையென்பது அன்றாடக் கடமைகளைத் திறமையாகச் செய்வதென்பதையும்விட ஆழமான பொருளுடையதாகக் கருதப்படுகிறது. அது, ஏழ்மையையும், நோயையும், அறியாமையையும் இறுதியாக விரட்டியாக வேண்டுமென்னும் வெளிப்படையான திடமான குறிக்கோளோடு மக்களின் பொருளாதார வாழ்வை விறு விறுப்பாகச் செயற்படுத்தவேண்டுமென்பதைக் குறிப்பாகக் காட்டுகிறது.

அரசாங்கத்தின் நிரந்தரமான அங்கமாகிய அரசினர் துறை கள், அரசியற் சார்புடைய அமைச்சர்களுடன், இக் காரியத்தைச் சாதிப்பதற்கு ஒத்துழைப்பளிக்கவேண்டியது மிக முக்கியமான தாகும். நிர்வாகத்தைக் கட்டுப்படுத்துவது இனியும் சிவில் பணித்துறையின் பொறுப்பாக இருக்கவில்லை. அது மக்கள் பிரதி நிதிகளினுடைய பொறுப்பாகும். மக்கட் பிரதிநிதிகளின் மேற் பார்வையில் மக்களுக்குத் தொண்டுசெய்ய வேண்டியதுதான் அப் பணித்துறைகளின் கடமையாகும். கொள்கையைத் தீர் மானிப்பது அமைச்சரின் வேலையாகும். கொள்கையொன்று தீர்மானிக்கப்பட்ட பிறகு, அக் கொள்கை அவருக்குப் பிடித்திருந் தாலும் இல்லாவிட்டாலும், நல்லெண்ணத்துடனும், கடமை

யோடும் அதை நிறைவேற்றவேண்டியது சிவில் ஊழியரின் வேலையாகும்.

அதேபோது, சரியான முடிவொன்றைச் செய்வதற்குச் சிவில் ஊழியர், அவருடைய அரசியல் தலைவராக இருப்பவருக்குத் தேவையான செய்திகளையும் அனுபவத்தையும் அளிக்க வேண்டியது அவருடைய மரபடிப்படையில் வரும் கடமையாகும். இதைச் சிவில் அலுவலர், அவருடைய வேலைக்குப் பாதுகாப்பிருக் கிறதென்னும்போது தவிர, இதர சமயங்களில் அவருக்குத் தலைவராக இருப்பவருக்குப் பிடிக்காமற் போகுமோ என்ற பயத்தினால் செய்யமுடியாமற் போகும். திறமையான நிர்வாகத் தைக் கருத்திற்கொண்டு சிவில் ஊழியர், இவ் ஆலோசனையை அரசியலமைப்பாதாரத்தில் செய்யலாம்.

பாராளுமன்றமுறை மக்களாட்சியின் சிறப்புகளுள், இரு வெவ்வேறு பகுதிகளைச் சேர்த்து ஒற்றுமையாகவும், ஒரே பகுதி யைச் சேர்ந்த இரு அங்கங்கள் ஒன்றுக்கொன்று வேறுபடும்போது அவைகளையும் இணைத்து ஒற்றுமையாக இயங்குமாறு செய்வதும் ஒன்றாகும். நிரந்தர சிவில் ஊழியர் இயல்பாகவும் பயிற்சியினா லும் கன்சர்வேடிவாகவும், குறுகிய நோக்குடையவராகவும், அடிக் கடி தனித்துறை மரபுகளின் சிறப்பை மிகைப்படுத்துபவராக வும் இருக்கிறார். அவர், நிபுணரொருவருக்குடைய நோக்கில் பொருள்களைக் கவனிப்பதோடு அதிகார வர்க்கத்தினரின் போக்கை வெளிப்படுத்துகிறார். அதே சமயத்தில் அரசியல்வாதி ஒருவர் இயல்பாகவும், அனுபவத்தாலும் மக்களுடைய விவகாரங் களில் சிறந்த அறிவுடையவராக இருக்கிறார். அவருடைய நோக்கம் பரந்ததாகவும், அவருடைய போக்கு விட்டுத்தரும் மனப்பான்மையுடையதாகவும், கருத்துகள் முற்போக்கு உடையவைகளாகவும் இருக்கின்றன. அவர் துவக்கத்தன்மை, நடுநிலைமை ஆகிய பண்புகளைப் பெற்றிருக்கிறார். அவருடைய பரந்த நோக்கும் சிறந்த பொது அறிவும் மக்களுடைய விவகாரங் களில் பழுத்த அனுபவத்தால் ஏற்பட்டவையாதலின், எல்லாப் பிரச்சினைகளிலும் விரும்பத்தக்கதும் ஆக்கந்தரத்தக்கதுமான நன்னோக்கை ஏற்படுத்துகிறது. இவர்களிருவரின்—நிர்வாகியும் அரசியல்வாதியும், சிவில் ஊழியரும் அமைச்சரும்—கூட்டு முழுப் பலன்களை ஏற்படுத்தவேண்டும்.

நிரந்தரப் பணிகள் நிர்வாக வளர்ச்சித் தொடர்ச்சியை நிலை நாட்டுகின்றபோது மக்களிடையே அதற்கு இருக்கவேண்டிய ஆதரவை அமைச்சர் ஏற்படுத்துகிறார். சட்டத் துறைக்கும் நிர்வாகத்துறைக்குமிடையே அமைச்சர் பாலம்போன்றமைந்து

நாட்டின் பெருஞ்சிறப்புக்கு அவை இரண்டின் ஒத்துழைப்பை உறுதிசெய்கிறார். திறமையான நிர்வாகத்தை முன்னிட்டு அரசாங்கத்தின் இவ்விரு பகுதிகளும் அவற்றின் தனித் தன்மையைப் பாதுகாக்கவேண்டும். அரசியலில் சிவில் ஊழியர் நெகிழா நடுநிலைமையைப் பாதுகாக்கவேண்டும். அமைச்சர் அக் கொள்கையை உண்மையாகப் பின்பற்றுவதுடன் சிவில் ஊழியரின் நோக்கையும் மதிக்கவேண்டும். அப்பொழுதுதான் அடுத்தடுத்து வரும் அமைச்சவைகளுக்கிடையே நிரந்தரப் பணித் துறைகள் உண்மையான தொடர்பை ஏற்படுத்தவும், நிர்வாகம் தொடர்ச்சியாக ஸ்திர நிலைமையை உடையதாகவும் செய்ய முடியும்.

இருப்பினும், அரசாங்கத்தின் அமைச்சர்கள் பணித் துறைகள் ஆகிய இரு அங்கங்களிடையே சுமுகமான ஒத்துழைப்பு ஏற்படாதவாறு தடைசெய்யும் இடையூறுகள் பல இன்னும் இந்தியாவில் இருக்கின்றன. இவைகள் மத்திய அரசாங்கத்தைக் காட்டிலும் இராச்சியங்களில் மிகுந்து காணப்படுகின்றன. பெரும்பாலான இராச்சியங்களைப் போலல்லாமல், மத்தியில் அரசாங்கம் அரசியல் ஸ்திர நிலைமையை உடைய ஒப்பற்ற சிறப்பைப் பெற்றிருக்கிறது. ஒரே கட்சி அதிகாரத்தில் இருந்து வருவதோடு மட்டுமல்லாமல் உயர்மட்டத்தில் தலைமையும் மாறாமல் இருந்துவந்திருக்கிறது. மத்திய அரசாங்கத்தில் அமைச்சரவைப் பிரிவின் உயர்சிறப்பையும் இதனோடு சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும். இதற்கு நேர்மாறாக, பெரும்பாலான இராச்சியங்கள், பல பாதகமான தன்மைகளால் பாதிக்கப் பட்டிருக்கின்றன. அவற்றில் பெரும்பாலானவற்றில் ஒரே கட்சி அதிகாரத்தில் தொடர்ந்திருந்துவந்தபோதிலும், பல இராச்சியங்களில் மேல் மட்டத்தில் தலைமை அடிக்கடி மாறுதல்களை அடைந்துவந்துள்ளது. இராச்சிய சீரமைப்பு. பிரதேசங்கள் பணியாளர் தொகுதி ஆகியவற்றில் பல மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளது. அதன் பயனாக, நிர்வாக அனுபவமில்லாத பல புது அமைச்சர்கள் அரசாங்கத்தின் உயர் மட்ட பதவிகளில் சேர்ந்தனர். வயதாலும், அனுபவத்தாலும் முதிர்ந்த உயர்ந்த அதிகாரிகள் பலர் மத்திய அரசாங்கத்திற்கு மேலும் சிறப்புடைய பதவிகளை ஏற்கச் சென்றனர். அவர்களுக்குப் பதிலாக வந்தவர்கள் அவர்களைப்போன்ற அனுபவமுடையவர்களாக இருக்கவில்லை. இவையெல்லாம் இந்தியாவில் நிர்வாகத் திறமையை மிக மோசமாகப் பாதித்திருக்கின்றன.

எனினும், நிர்வாகத்தின், அமைச்சர்கள் பிரிவிற்கும் பணியாளர் தொகுதிக்கும் இடையே இப்பொழுதுள்ள சூழ்நிலையில்

இணக்கத்தையும், நட்பையும், ஒற்றுமையையும் ஏற் டுத்தவல்ல சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. இவைகளில், அமைச்சர்களும் சிவில் பணித்தொகுதியினரும் நிறைவேற்றிவைக்கப் பொதுவாக ஏற்றுக்கொண்டிருக்கும் குறிக்கோள் மிக முக்கியமானதாகத் தோன்றுகிறது. அரசியலமைப்பில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் நெறிசெய் நியதிகள் (Directive Principles) அப் பொதுக் குறிக்கோளுக்கு வகைசெய்கிறது. அது, சுதந்திர இந்தியாவின் பொருளாதார, சமூக அடிப்படைகளுக்கு உயிரூட்டும் பொதுக் குறிக்கோள் நெறியாகவும், கற்றறிந்த ஒவ்வோர் இந்தியர் எண்ணத்திலும் அது ஊடுருவி உற்சாகமூட்டுவதாகவும் இருக்கிறது. இவ் அடிப்படைக் குறிக்கோளில் ஒற்றுமை நீடித்திருக்கும்வரையிலும், இக் குறிக்கோளை நடைமுறையில் கொண்டுவர பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருப்பவர்கள், ஒருவரையொருவர் உணர்ந்து ஒன்றாக உழைக்கவேண்டியதாக இருக்கும். அத்தகைய பொறுப்புணர்வு, காலப்போக்கில் இயற்கையாகவே ஏற்பட்டே தீரும். அரசியல் துறையில், வயதுவந்தோருக்கு வாக்குரிமை என்னும் அடிப்படையில் அடுத்தடுத்து நடைபெறும் பொதுத் தேர்தல்களால் முன்பைவிட, குடியாட்சிக் கருத்துகளை நன்கு உணருகின்ற சமூகம் தோன்றும்போது பழைய தவறான எண்ணங்கள் பல மறைந்து மிக அதிகமான சகிப்புத் தன்மையும், புரிந்துகொள்கிற சக்தியும் ஏற்படும். சுதந்திரத்திற்கு முற்பட்ட காலத்தில் தீய எண்ணத்தையும், அளவற்ற வெறுப்பையும் வளர்த்துவந்த அரசியல்வாதிகளும், சிவில் ஊழியர்களும் விரைவாக மறைந்துகொண்டிருக்கிறார்கள். ஒரு புதுத் தலைமுறை இப்பொழுது தோன்றிக்கொண்டிருக்கிறது. அப் புதுத் தலைமுறை தீய எண்ணம் அல்லது சந்தேகம் ஆகியவற்றினின்றும் சுதந்திரமாக இருக்கும். சிறந்த மரபுகளும், வழக்காறுகளும் தோன்றத்தோன்ற, அமைச்சர் குழாம் உறுப்பினர்களும், பணித்தொகுதி உறுப்பினர்களும் ஒரே உயிரினத்தின் பிரிக்கமுடியாத உறுப்புகளைப்போன்று தோழமையோடு உழைக்கும் அமைப்பொன்றிற்கான சிறந்த அடிப்படைகளை இடுவதில் துன்பமேதும் இராது.

# 35. பணியாளர் தேர்வுக் கழகங்கள்

## (The Public Service Commission)

புது அரசியலமைப்பு தயாரிக்கப்பட்டபொழுது, பழைய அரசியலமைப்பின் பகுதிகளாக இயங்கிவந்த பொதுப் பணியாளர் தேர்வுக் கழகங்களின் அனுபவத்தை இந்தியா பெற்றிருந்தது. 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் மத்தியிலும், மாநிலங்களிலும் பணியாளர் தேர்வுக் கழகங்கள் ஏற்படுத்த வகைசெய்திருந்தது. இப்போதுள்ள அரசியலமைப்பு தொடங்குவதற்கு முன்பே கூட்டாட்சிப் பணியாளர் தேர்வுக் கழகம் (Federal Public Service Commission) பணியாற்றி வந்தது. இக் கழகங்களின் இயங்குமுறையில் கிடைத்த அனுபவம் இப் பகுதியைப்பற்றி எழுதுவதற்கு அரசியலமைப்பை எழுதியவர்களுக்கு உதவியாக இருந்தது. இத் துறையில் ஒரு சில மாறுதல்களைத் தவிர, அவர்கள் 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் ஷரத்துகளைப் பெரும்பாலும் ஒட்டியே எழுதினார்கள்.

### பணியாளர் தேர்வுக் கழகங்கள் எதற்காக ?

தனிப்பட்டவர்களுடையவும் அரசியல்வாதிகளினுடையவும் ஆதரவுமுறை இருந்தபோது தனிச் சிறப்புடையவர்களின் பணிகள் அரசாங்கத்திற்குக் கிடைக்கவில்லை என்பது பெரும்பாலான ஜனநாயக நாடுகளின் அனுபவத்திலிருந்து தெரிகிறது. இது எதனாலெனின், அவர்களுடைய இடத்தைச் செல்வாக்கு ஒன்றையே தகுதியாகப் பெற்றிருந்தோர் பெற்றனர். பதவியிலிருந்த சிவில் ஊழியர்கள் சிறப்பான வகையில் வேலை செய்ய முடியாதவாறு தடுக்கப்பட்டார்கள். எவ்வாறெனில், அவர்களுடைய முன்னேற்றம், திறமை, உற்சாகம் ஆகியவற்றின் அடிப்படையில் இருப்பதற்குப் பதிலாக, அரசியல்வாதிகளினுடையவும், தனிப்பட்டவர்களுடையவும் தயவைப் பொறுத்திருந்தது. அரசாங்கங்கள் மாறியபொழுது, உயர் பதவிகளும்

கைமாறியதால் சிவில் பணித்துறை நிர்வாகத் தொடர்ச்சியில் கிடைக்கக்கூடிய அனுபவத்தை ஏற்படுத்த முடியவில்லை. அரசியல் அதிகாரம் பெற்றிருந்தவர்களைச் சார்ந்திருந்தவர்களுக்குப் பதவிகள் கொடுப்பதற்காக சிவில் பணித்துறை ஊழியர்களின் எண்ணிக்கையும் அவசியமில்லாமலேயே அதிகரிக்கப்பட்டது. தனிப்பட்ட தொடர்புமுறையைவிட எந்த அளவிற்கு முடியுமோ அந்த அளவிற்கு மிகப் பரந்த துறையிலிருந்து ஆட்கள் எடுக்கும் பொழுது அரசினர் பணித்துறை திறமையுடைய மக்களைப் பெறுகிறது. அல்லாமலும், அரசாங்கத்துறை பலவற்றிற்கும் சிறந்த அறிவுடையவர்களை சமமாகப் பங்கிடுவதும் சாத்தியமாகும்.

இந்தியாவைப்போன்ற நாட்டில் பணியாளர் தேர்வுக் கழகத்தின் அவசியமும் முக்கியமும் வெள்ளிடைமலையென விளங்கும். 430 மிலியன் மக்களும் பல மொழியைப் பேசுபவர்களாகவும், பல இனத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருக்கிறார்கள். பல மதச் சிறுபான்மையினரும், சமூக, கல்வித் துறைகளில் பின் தங்கிய வகுப்பினரும் சமூகங்களும் இங்கு இருப்பதை கவனிக்க வேண்டும். இச் சூழ்நிலைகளில் அரசினர் பணிகளுக்கான ஆளெடுப்பு அரசியல் காரணங்களாலும் தனிப்பற்றுக் காரணத்தாலும் கட்டுப்படுத்தப்படுமானால் தேசத்திற்கு ஏற்படும் அபாயத்தைக் கணக்கிட முடியாது. அது, அரசினர் பணிகளின் திறமையையும் வாய்மையையும் உறுதியாகப் பாதிக்கும். இந்திய ஆட்சிப் பணியாளர் தொகுதியைப்பற்றி 1924-ல் ராயல் கழகம் (Royal Commission) என்ன எழுதியதோ அது இன்றும் பொருந்துவதாகும்.

'எங்கு ஜனநாயக நிலையங்கள் நடைமுறையிலிருக்கின்றனவோ அங்கு திறமையுடைய சிவில் பணியைப் பெறுவதற்கு இயன்றவரையிலும் அரசியல், தனிப்பட்ட செல்வாக்கு உந்தல்களினின்றும் அதைப் பாதுகாப்பதும், அரசாங்கங்கள் எத்தன்மையுடையவர்களாக இருப்பினும் அவற்றின் கொள்கைகளைத் திறம்படவும், பட்சபாதமற்றும் வெற்றிகரமாக நடத்துவதற்குதவும் அதற்கு அவசியமான ஸ்திரத்தன்மையையும், நம்பிக்கையையும் ஏற்படுத்தும். அத்தகைய தன்மையைத் தருவதும் அவசியமாகும். எந்த நாடுகளில் இக்கொள்கை உதாசீனப்படுத்தப்படுகிறதோ அந்த நாடுகளில், எங்கு 'ஸ்பாயில்ஸ் முறை' (Spoils System) அதன் இடத்தைப் பிடித்துக்கொண்டிருக்கிறதோ அங்குத் திறமையற்றதும் சரியாக அமைக்கப்படாததுமான சிவில் பணி தவிர்க்க முடியாததாக இருப்பதோடு, இலஞ்ச ஊழலும் செழிப்பாக இருக்கிறது.'

எனவே, பணியாளர் தேர்வுக் கழகத்தின் பணி இருவகைப் பட்டதாகும்: முதலாவது அமெரிக்க வரலாற்றிலுள்ள பிரசித்தி பெற்ற சொற்றொடரைப் பின்பற்றினால், 'அயோக்கியர்களை அகற்றவேண்டும்' (keep the rascals out) என்று குறிப்பிட வேண்டும். இரண்டாவது, அது சிறந்தவர்களை உள்ளே கொண்டு வர முயற்சிக்கவேண்டும். இப் பணியின் முக்கியத்தை மேலும் வற்புறுத்திக் கூறுவது இயலாததாகும்.

பணியாளர் தேர்வுக் கழகத்தின் இவ்வின்றியமையாத பணியை அரசியல் நிர்ணய சபை நன்றாக உணர்ந்திருந்தது என்பது, இப் பொருள்பற்றிய விவாதத்தில் பங்கெடுத்துக் கொண்ட உறுப்பினர்களிலிருந்தே தெளிவாக்கப்பட்டிருக்கிறது.

## யூனியன் பணியாளர் தேர்வுக்கழக அமைப்பு

## (Constitution of the Union Public Service Commission)

பணியாளர் பொறுக்கும் குழுவொன்றை யூனியன் ஏற்படுத்த வேண்டுமென்பதை 315ஆம் விதி கடமையாக்குகிறது. அது யூனியன் பணியாளர் தேர்வுக் கழகத்தின் தலைவர் என்றழைக்கப் படும் தலைவரொருவரால் தலைமை வகிக்கப்படுகிறது. தலைவரும், கழக இதர உறுப்பினர்களும் ஜனாதிபதியால் நியமிக்கப்படுகிறார்கள். அவர்கள் பதவியில் சேர்ந்ததிலிருந்து ஆறு ஆண்டுகள் அல்லது அறுபத்தைந்து வயதை அவர்கள் அடைகின்ற வரையிலும், எதுமுன் ஏற்பட்டாலும், பதவி வகிக்கிறார்கள். கழக உறுப்பினர்களில் பாதிப்பேர்களாவது குறைந்தபட்சம் பத்தாண்டுகளுக்கு அரசாங்கப் பணிபுரிந்த அனுபவமுடையவர்களாக இருக்கவேண்டும். இது கழகத்தில், சிவில் பணியில் பணியாற்றி அனுபவம் பெற்றவர்கள் அங்கம் வகிக்கவேண்டுமென்பதை உறுதிப்படுத்துவதற்காகவும், நிபுணர்கள் குழுவாக அது செயலாற்றுவதற்காகவும் கருதப்பட்டது. கழகத்தில் இருக்கவேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கை விதிகள் (regulations) அடிப்படையில் ஜனாதிபதியால் முடிவு செய்யப்படுகிறது. இப்போது கழகத்தில் எட்டு உறுப்பினர்கள் இருக்கிறார்கள்.

கழக உறுப்பினரொருவர் இரண்டாம் தடவையாக அதே பதவிக்கு நியமிக்கப்படுவதற்குத் தகுதி கிடையாது. இதர இடத்தில் வேலைக்கு நியமிக்கப்படுவதும் கடுமையாகத் தடைப்படுத்தப் பட்டிருக்கிறது. இந்திய அரசாங்கத்தின் கீழோ அல்லது இராச்சிய அரசாங்கமொன்றின் கீழோ யூனியன் பணியாளர் தேர்வுக் கழகத் தலைவர் மேலும் பதவிக்கு நியமிக்கப்பட முடியாது. தலைவர் நீங்கலான ஓர் உறுப்பினர் யூ.ப.தே. கழகத்தின் தலைவராகவோ

அல்லது இராச்சியமொன்றின் பணியாளர் தேர்வுக் கழகத் தலைவராகவோ நியமிக்கப்படத் தகுதியுடையவர். இவ்விரண்டு பதவிகளைத் தவிர வேறு எப் பதவிக்கும் யூனியன் அரசாங்கத்தின்கீழோ, இந்திய இராச்சிய அரசாங்கமொன்றின்கீழோ அவருக்குத் தகுதி கிடையாது.

கழக உறுப்பினர்கள் பணி விதிகளையும், ஊதியத்தையும் விதிகளால் நிர்ணயஞ்செய்ய ஜனாதிபதி அதிகாரம் தரப்பட்டிருக்கிறார். கழக சிப்பந்திகளின் பலம், அவர்களுடைய பணி விதிகளை விதிகளால் நிர்ணயிக்கவும் அவருக்கு அதிகாரமுண்டு. கழக உறுப்பினரொருவரின் பணி விதிகள், பதவிக்கு நியமிக்கப்பட்ட பிறகு அவருக்குப் பாதகமாக மாற்றப்பட முடியாது. கழகத் தலைவரும் உறுப்பினர்களும் முறையே ரூ. 4,000-மும் 3,000-மும் மாத ஊதியமாகத் தரப்படுகிறார்கள். இத் தொகைகள் அரசாங்கத்தில் இதர உயர் பதவிகளுக்குத் தரப்படும் சம்பளத்திற்கு நிகராக இருக்கின்றன. கழகத்தின் எல்லாச் செலவுகளும் அதாவது அதனுடைய உறுப்பினர்களின் மாதச் சம்பளங்கள் படிகள் உள்பட எல்லாம் குவிக்கப்பட்ட இந்திய நிதியிலிருந்து வழங்கப்படுகிறது.

யூனியன் பணியாளர் பொறுக்கும் குழு உறுப்பினரொருவர் தவறான நடத்தைக்காக ஜனாதிபதியால் உத்தரவொன்றின்மூலமாகத்தான் பதவியிலிருந்து விலக்கப்படலாம். அத்தகைய தவறான நடத்தையை நிரூபிப்பதற்கு அரசியலமைப்பு நடைமுறையொன்றை ஏற்படுத்துகிறது. இதன்படி, அவ் விஷயம் ஜனாதிபதியால் உச்ச நீதிமன்றத்திற்கு அனுப்பப்படும். நீதிமன்றம், அரசியலமைப்பில் 145ஆம் விதியில் ஏற்படுத்தப்பட்டுள்ள முறைப்படி விசாரணையொன்றை நடத்தி அறிக்கையொன்றை ஜனாதிபதிக்குச் சமர்ப்பிக்கும். உச்ச நீதிமன்ற விசாரணை நடைபெறுவதற்கு முன்பு சம்பந்தப்பட்ட உறுப்பினரொருவரைத் தற்காலிகமாக ஜனாதிபதி விலக்கம் செய்யலாம். பின்வரும் காரணங்களுக்காகக்கூடக் கழக உறுப்பினரொருவரை ஜனாதிபதி உத்தரவொன்றின்மூலமாகப் பதவியிலிருந்து விலக்கலாம் :

(1) அவர் நொடித்துப்போனவர் என்று தீர்மானிக்கப்பட்டாலோ ; அல்லது (2) பதவியிலிருக்கும்போது அலுவலகக் கடமைகளுக்குச் சம்பந்தமில்லாத இதர ஊதியங் கிடைக்கும் வேலையொன்றைப் பார்த்தாலோ; அல்லது (3) ஜனாதிபதியின் கருத்துப்படி அவர் உடல் வலிமையும், மன வளமும் அற்றவரென்பதால் பதவியிலிருப்பதற்குத் தகுதியற்றவர் என்று கருதப்

படும்பொழுதோ ; அல்லது (4) இந்திய அரசாங்கத்தினுலோ அல்லது இராச்சிய அரசாங்கமொன்றினுலோ அல்லது அவற்றின் சார்பாகவோ செய்யப்படும் ஒப்பந்தம் அல்லது குத்தகையில் ஏதேனுமொரு வழியில் சம்பந்தப்பட்டிருந்தாலோ அல்லது கம்பெனியொன்றின் சாதாரண உறுப்பினராக இருக்கும்போது தவிர இதர இலாபத்திலோ, நன்மைகளிலோ பங்குபெறும் போதோ—பதவியிலிருந்து நீக்கப்படலாம். இவையெல்லாம், கழகம் திறமையோடு பொறுப்புகளை நிறைவேற்றவும், சுதந்தரமாகவும் பட்சபாதமற்று இருக்கவும் கருதப்பட்டவைகளாகும்.

## இராச்சியப் பணியாளர் தேர்வுக் கழகங்களின் அமைப்பு

யூனியனிலுள்ள ஒவ்வோர் இராச்சியமும் 315ஆம் விதியின் கீழ் ஒரு பணியாளர் தேர்வுக் கழகத்தையுடையதாக இருக்க வேண்டும். எனினும், ஒன்றுக்கு மேற்பட்ட இராச்சியங்களுக்குக் கூட்டுப் பணியாளர் தேர்வுக் கழகங்கள் அமைக்கப்படலாம். ஆனுல், அத்தகைய கழகங்கள் சம்பந்தப்பட்ட இராச்சியங்களின் வேண்டுகோளுக்கிணங்க பாராளுமன்ற சட்ட அடிப்படையில் தான் ஏற்படுத்தப்படலாம். ஓர் இராச்சியத்தின் எல்லாம் அல்லது ஏதேனுமொரு தேவைக்காக, ஜனுதிபதியின் அனுமதியோடு யூனியன் பணியாளர் தேர்வுக் கழகம் அதனுடைய பணிகளை அளிக்க அரசியலமைப்பு அனுமதிக்கிறது.

இராச்சியப் பணியாளர் கழகத்தின் உறுப்பினர்கள் கவர்னராலும், கூட்டுப் பணியாளர் கழக உறுப்பினர்கள் ஜனுதிபதியாலும் நியமிக்கப்படுகிறுர்கள். யூனியன் கழகத்தைப்போன்றே இங்கும் நியமனம் அதிகபட்சமாக ஆறுண்டுக் காலத்திற்குச் செய்யப்படுகிறது. ஆனுல், உறுப்பினரொருவர் ஆறுண்டுக்காலம் செயலாற்றினுலும், ஆற்றுவிட்டாலும் அறுபது வயதைப் பதவியிலிருக்கும்போதே அடைவாரானுல், அவர் ஓய்வு பெறவேண்டும். இராச்சியப் பணியாளர் தேர்வுக் கழகம் கூட்டுப் பணியாளர் தேர்வுக் கழகம் ஆகியவற்றின் உறுப்பினர்கள், யூனியன் அல்லது இராச்சிய அரசாங்கங்களின்கீழ் வேறு வேலையெதுவும் பார்க்கத் தகுதியற்றவர்கள். ஆனுல், ஒரு தலைவர், யூனியன் பணியாளர் தேர்வுக் கழகத்தின் தலைவராகவோ அல்லது உறுப்பினராகவோ அல்லது வேறு ஏதேனும் ஓர் இராச்சிய அல்லது கூட்டுப் பணியாளர் தேர்வுக் கழகத்தின் தலைவராகவோ ஆகலாம். உறுப்பினரொருவர், மேலே சொல்லப்பட்ட பதவிகளோடு, எந்தக் கழகத்தில் அவர் உறுப்பினராக இருக்கிறுரோ அந்தக் கழகத்தின் தலைவராகவுமாகலாம். இராச்சியப் பணியாளர் தேர்வுக் கழகங்களின் உறுப்பினர்களின் பணி விதிகள் ஏறத்தாழ யூனியன்

பணியாளர் தேர்வுக் கழகத்திற்குள்ளவை போன்றவையே யாகும். ஒரேயொரு முக்கிய வேறுபாடு ஊதியத்தில் காணப் படுவதாகும். அது இராச்சியத்திற்கு இராச்சியம் வேறுபடுகிறது. இராச்சியப் பணியாளர் தேர்வுக் கழகத்தின் உறுப்பினர் ஒருவரின் பணி விதிகள் நியமனம் செய்யப்பட்ட பிறகு அவருக்குப் பாதக மாக மாற்றப்பட முடியாது. இராச்சியக் கழகத்தின் உறுப்பினர் களின் எண்ணிக்கையும் இராச்சியத்திற்கு இராச்சியம் மாறுபடு கிறது. இராச்சிய அல்லது கூட்டுக் கழகங்களின் உறுப்பினர்களை அகற்றுவதற்குப் பின்பற்றப்படும் அடிப்படை, நடைமுறை ஆகியவைகள் யூனியன் பணியாளர் தேர்வுக் கழக உறுப்பினர்களை அகற்றுவதற்குப் பின்பற்றப்படுபவைகளையே ஒத்திருக்கிறது.

## கழகங்களின் பணிகள்

இக் கழகங்கள் 320ஆம் விதி அடிப்படையில் பின்வரும் வேலைகளைச் செய்கின்றன:

(1) யூனியன் அல்லது இராச்சியங்களின் துறைப் பணி களுக்குத் தேவையான நியமனங்களைச் செய்ய தேர்வு கள் நடத்துவது.

(2) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட இராச்சியங்கள் யூனியன் பணியாளர் தேர்வுக் கழகத்தைக் கேட்டுக் கொள்ளுமாயின், இதற்காக கூட்டாக ஆள் சேர்க்கும் திட்டங்களை உருவாக்கவும் நடைமுறைப்படுத்தவும் உதவி செய்வது.

(3) யூனியன் அல்லது இராச்சிய அரசாங்கத்திற்கு ஆலோ சனை தருவது ;

(அ) சிவில் பணிகளுக்கும், சிவில் பதவிகளுக்கும் ஆள் சேர்க்கும் முறைகளைப்பற்றிய எல்லா விஷயங் களிலும் ;

(ஆ) சிவில் பணிகளுக்கும், சிவில் பதவிகளுக்கும் நிய மனங்கள் செய்கின்றபோது பின்பற்றவேண்டிய கொள்கைகளையும் ஒரு பணியிலிருந்து பிறிதொரு பணிக்கு மாற்றுதல், பதவி உயர்வு தருதல் போன்ற வற்றிற்குப் பின்பற்றவேண்டிய கொள்கைகளைக் கூறல் ;

(இ) யூனியன் அல்லது இராச்சியங்களின், அரசாங்க ஊழியர்களைப் பாதிக்கும் ஒழுங்கு நடவடிக்கை பற்றிய விஷயங்கள் ;

(ஈ) யூனியன் அலுவலர் அல்லது இராச்சிய அலுவலருக்கெதிராகத் தொடரப்பட்ட சட்ட சம்பந்தமான நடவடிக்கைகளுக்காக ஆன செலவுக் கோரிக்கைகள்;

(உ) கடமையை நிறைவேற்றும்பொழுது யூனியன் அலுவலர் அல்லது இராச்சிய அலுவலரொருவரால் அடையப்பட்ட காயங்களுக்காகக் கோரப்படும் ஓய்வூதியம்;

(ஊ) ஜனாதிபதியாலோ அல்லது கவர்னராலோ குறிப்பாக அதனிடம் அனுப்பப்பட்ட வேறு விஷயம் எதுவானாலும்.

யூனியன் கழகம் அல்லது இராச்சியக் கழகத்தின் பணிகள் பாராளுமன்றத்தாலோ அல்லது சம்பந்தப்பட்ட சட்டசபையாலோ இயற்றப்படும் சட்டத்தால் 321ஆம் விதியின்கீழ் விரிவாக்கப்படலாம். அத்தகைய சட்டமொன்று கழக வேலைகளின் வரம்பிற்குள், யூனியன் அல்லது இராச்சிய அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்ட, வட்டாரக் கழகங்கள் அல்லது பொதுக் கார்ப்பொரேஷன்கள் (Public Corporations) போன்ற அரசினர் நிலையங்களின் பணித்துறைகள் சம்பந்தப்பட்ட விஷயங்களையும் கொண்டு வரலாம். யூனியன் இராச்சிய அரசாங்கங்களின் நடவடிக்கைகள் அதிகரித்துக்கொண்டு வரும்போது மேலும்மேலும் பொதுக் கார்ப்பொரேஷன்களும் அவைபோன்ற இதர நிலையங்களும், அதிகரித்துக்கொண்டே இருக்கும் எண்ணற்ற அலுவலர்களின் நியமனத்தோடு, ஏற்பட்டேயாக வேண்டுமென்ற உண்மையைக் காணும்போது இது முக்கியமானதாகிறது.

## கழகங்களின் அறிக்கை

யூனியன் பணியாளர் தேர்வுக் குழு, கழகத்தால் செய்யப்பட்ட வேலைகள்பற்றிய ஆண்டறிக்கையொன்றை ஜனாதிபதிக்கு சமர்ப்பிக்கவேண்டும். அவ் அறிக்கை, கழகத்தால் செய்யப்பட்ட சிபாரிசுகளின்மேல் அரசாங்கம் எடுத்த நடவடிக்கையை விளக்கும் குறிப்பாணையோடு (memorandum) பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும் சமர்ப்பிக்கப்படும். அவ்வாறே, இராச்சியக் கழகமும் கவர்னருக்கு ஓர் ஆண்டறிக்கையை அனுப்பவேண்டும். அவ் அறிக்கையின்மேல் இராச்சிய அரசாங்கம் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளை விளக்கும் குறிப்பாணையோடு இராச்சிய சட்டசபைமுன் தாக்கல் செய்யப்படவேண்டும். கழகம் செய்த சிபாரிசுகளை அரசாங்கம் ஏற்றுக்

கொள்ளாத நிகழ்ச்சிகள் ஏதேனுமிருக்குமானால் அவ்வாறு ஏற்றுக்கொள்ளாததற்கான காரணங்களையும் அக் குறிப்பாலே குறிப்பிடவேண்டும்.

அரசியலமைப்பில் குறிப்பிடப்படும் பணியாளர் தேர்வுக் கழகங்களெல்லாம், யூனியன் பணியாளர் தேர்வுக் கழகம் உட்பட ஆலோசனை தரும் நிலையங்களேயாகும் என்பதைக் குறிப்பிட வேண்டும். அவ்வளவு முக்கியம்வாய்ந்த பணியாளர் தேர்வுக் கழகத்தின் சிபாரிசுகளை அரசாங்கம் கண்டிப்பாக ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்தப்படாததேன் என்று கேட்கப்படலாம். இவ் விஷயத்தில அரசியலமைப்பைப் படைத்தவர்கள் 1935ஆம் ஆண்டு அரசியலமைப்புச் சட்டத்தில் பின் பற்றப்பட்ட நடைமுறையைப் பின்பற்றினார்கள். கழகத்தின் சிபாரிசுகளெல்லாம் கட்டாயமானவைகளாக இல்லாமல் ஆலோசனை கூறுபவைகளாக இருக்கும்போது அதிகச் செல்வாக்குடையவைகளாக இருக்கின்றன என்பது அனுபவம் எடுத்துக் காட்டுவதாகும். கழகம் சட்டபூர்வமாகக் கட்டாயப்படுத்தும் வகையில் அதிகாரங்கள் தரப்படுமானால் கழகத்திற்கும் அரசாங்கத்திற்கும் மோதல்கள் ஏற்படக்கூடிய வாய்ப்பிருப்பதோடு, ஒரே பகுதியில் இரண்டும் போட்டி அரசாங்கங்கள்போல நடக்கவும், ஒன்று மற்றொன்றைக் கட்டுப்படுத்தும் வகையில் விருப்பத்தை மற்றதன்மேல் திணிக்க முயலும் சூழ்நிலை போன்ற அபாயமுமிருக்கிறது. கழகத்தின் சிபாரிசுகளைப் புறக்கணிப்பதற்கெதிராக இருக்கும் உண்மையான பாதுகாப்பு அரசியலமைப்பில் வகைசெய்யப்பட்டிருக்கும் பாராளுமன்றக் கட்டுப்பாடாகும். அரசாங்கத்தினுடைய நடவடிக்கையை விலக்கக் கூடிய அதிகாரம் பெற்றிருக்கும் சட்டசபைமுன் அரசாங்கம் அதனுடைய நடவடிக்கையை நிலைநாட்டவேண்டும்.

இங்கிலாந்திலோ அல்லது அமெரிக்க ஐக்கிய நாட்டிலோ சட்ட அடிப்படையில் இயங்கும் குழுக்கள் அல்லது கழகங்களைக் காட்டிலும், இந்தியாவிலுள்ள பணியாளர் தேர்வுக் கழகங்கள் சட்ட நோக்கோடு பார்க்கும்போது அதிக பலமுடையவைகளாக விருக்கின்றன. இது எதனாலெனின், நிர்வாகத் துறையையும், சட்டத் துறையையும் ஏற்படுத்தும் இறைமையையுடைய அதே அதிகாரத்தினால் இக் கழகங்களெல்லாம் ஏற்படுத்தப்படுகின்றன. அவைகளெல்லாம் அரசியலமைப்பாலேயே உருவாக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், இங்கிலாந்திலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் இதர இடங்களிலும், பணியாளர் தேர்வுக் கழகங்கள் சட்டசபையால் ஏற்படுத்தப்படுவதால், ஆங்கிலப் பாராளுமன்றமும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் காங்கிரசும் (Congress) விருப்பம்

போல அவைகளை மாற்றியமைக்க அதிகாரமுடையவைகளாக இருக்கின்றன. இவையெல்லாம் கீழ்ப்பட்ட நிலையங்கள் எனப் படலாம். இந்தியாவில் பணியாளர் தேர்வுக் கழகங்கள் சட்ட சபைக்கோ, நிர்வாகத்திற்கோ எவ்வாற்றானும் கீழ்ப்பட்டவை யல்ல. இவ்வாறு, பணியாளர் தேர்வுக் கழகமொன்று எக் குறி யிட்ட பொருள்பற்றியும் சாதாரணமாகச் செய்தியை தர மறுக் காதெனினும், அவ்வாறு எச் செய்தியையும் தர மறுப்பதற்கு அதற்கு இருக்கும் சட்டபூர்வமான உரிமையையும் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

இந்தியாவிலுள்ள பணியாளர் தேர்வுக் கழகங்களெல்லாம் அனுவசியமான உந்தல்களால் பாதிக்கப்படாமல் இருப்பதற்கும், சுதந்திரத்தோடும், நடுநிலைமையோடும், வாய்மையோடும் அவைகள் பணியாற்றுவதற்குத் தேவையான, நியாயமான எல்லாப் பாதுகாப்புகளையும் ஏற்படுத்த அரசியலமைப்பைத் தோற்றுவித்தவர்கள் விரும்பினார்கள் என்பது வெளிப்படை யாகத் தெரிகிறது.

## கழகப் பணியின் முதன்மை

யூனியன் இராச்சியங்களிலுள்ள பணியாளர் தேர்வுக் குழுக்களின் ஆண்டறிக்கைகளைக் காணும்போது அக் கழகங்கள் செய்யும் வேலைகளின் அளவும், வகையும் நன்கு தெரியும். பணித் தொகுதிகள் பலவற்றிற்கும் வேண்டிய ஆட்களை எடுப்பதற்கு போட்டித் தேர்வுகளை நடத்துவதுதான், இக் கழகங்கள் மேற் கொண்டுள்ள பணிகளில் மிகவும் கடினமானதாகும். யூனியன் பணியாளர் தேர்வுக் குழு அண்மையில் அனுப்பிய அறிக்கை களுள் ஒன்று அதனுடைய பணிகளுள் சிலவற்றைப்பற்றிய பின்வரும் விவரங்களைத் தருகிறது:

(1) கழகத்தில் நடத்தப்பட்ட இருபத்தேழு தேர்வுகளுக்கு மொத்தமாகச் சில 56,956 விண்ணப்பதாரர்கள் இருந்தனர். இவர்களில் 2,800 வேட்பாளர்களைக் (candidates) கழகம் பேட்டி கண்டது. இத் தேர்வுகளில், இந்திய ஆட்சிப் பணியாளர் தொகுதி, இந்தியப் போலீஸ பணியாளர் தொகுதி, இன்னும் பல மத்தியப் பணிகள் ஆகிய ஒருசில மிகவும் முக்கியமானவைகள். இத் தேர்வுகளில் சுமார் 8,000 பேர் கலந்துகொண்டார்கள். மற்றவைகளில், கூட்டுப் பணியாளர் தொகுதிப் பிரிவுத் தேர்வு (Joint Services Wing Examination), பொறியியல் பணித் தொகுதித் தேர்வு, நிலைப்பணியாளர் தொகுதித் தேர்வு ஆகிய வைகள் மிக அதிகமான எண்ணிக்கையரை ஈர்க்கின்றன.

(2) சுதந்திரம் கிடைத்த பிறகு அதிகமாகிவிட்ட அரசாங்க நடவடிக்கைகளால் நேர்முகப் பேட்டியின்மூலமாக ஆட்களைப் பொறுக்கும் முறை முக்கியமானதாகியிருக்கிறது. சுமார் 47,000-க்கும் அதிகமான மனுக்கள் பெறப்பட்டு, 1,400 பதவிகளுக்கு 9,500 பேர்கள் பேட்டி காணப்பட்டனர்.

(3) பல உயர் பதவிகள், குறிப்பாக முறைப்படி ஒழுங்காக அமைக்கப்பட்ட பணித் தொகுதிகளுக்கு, கீழ்ப் பதவிகளில் அத்துறைகளில் ஓரளவிற்கு அனுபவம் பெற்றவர்களை உயர்த்துவதன் வாயிலாக நிரப்பப்பட்டிருக்கின்றன. அத்தகைய பதவி உயர்வுகளுக்கு சம்பந்தப்பட்ட துறைகளால் சிபாரிசுகள் செய்யப்படுகின்றன. அவைகளைக் கழகம் ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்ளப்படுகிறது. சராசரியில் 10,000-க்கும் அதிகமான அத்தகைய விஷயங்கள் ஆண்டுதோறும் கழகத்தினுல் கவனிக்கப்படுகின்றன.

(4) ஓராண்டுக்கு மேலும் ஆனுல் மூன்ருண்டுகட்குட்பட்டும் தற்காலிகமாகச் செய்யப்படுகின்ற நியமனங்கள் விஷயமாகப் பின்பற்றவேண்டிய சாதாரண முறைகள்பற்றியும் பணித்துறை விஸ்தரிப்புக் கோரியும், ஓய்வுபெற்ற சில அரசாங்க ஊழியர்களை மீண்டும் வேலைக்கமர்த்துவதுபற்றியும் கழகத்திடம் ஆலோசனை கோரப்படுகிறது. அது 1,000-க்கும் அதிகமான அவ் விஷயங்களை ஆண்டுதோறும் நடத்துகிறது.

(5) ஒழுங்கு நடவடிக்கைகள்பற்றிய விஷயங்களில் கண்டனத் தண்டனை வழங்கும் முன்பும், அதைவிடக் கடுமையான தண்டனைகளாகிய தற்காலிகப் பதவி விலக்கல், அல்லது நிரந்தரமாக நீக்கல் போன்றவைகளைச் செயற்படுத்துவதற்கு முன்பும் ஜனுதிபதி கழகத்தைக் கலந்துகொள்ள வேண்டியதாகும். அத்தகைய சுமார் இருநூறு விஷயங்களை கழகத்தால் ஆண்டுதோறும் கவனிக்கப்படுகிறது.

(6) நியமனங்களை வரன்முறைப்படுத்தல், ஓய்வூதியம் அளிக்கவேண்டுமென்னும் கோரிக்கைகள், அரசாங்க ஊழியர்கள் கடமைகளை நிறைவேற்றும்போது செய்த செயல்களுக்காக அவர்கள்மேல் தொடரப்பட்ட சட்ட நடவடிக்கைகளினின்றும் பாதுகாத்துக்கொள்ள செய்யப்பட்ட சட்டச் செலவுகளைத் தரவேண்டுமென்னும் கோரிக்கைகள் ஆகிய விஷயங்களையும் கழகம் கவனிக்கிறது.

ஒருசில தனித்தனியான நிகழ்ச்சிகளைத் தவிர மந்திராலயங்களும், துறைகளும் அரசியலமைப்பு ஏற்பாடுகளைப் பொதுவாகப்

பின்பற்றியதாகக் கழகம் அதனுடைய அறிக்கைகளில் ஏற்றுக் கொண்டிருக்கிறது. கழகத்தினுடைய சிபாரிசுகளைப் பெரும் பாலும் முழுதாக ஏற்றுக்கொண்டு அவைகளின்படி அரசாங்கம் நடந்ததாக அதற்குப் பொருள் கொள்ளலாம். உண்மையில் 1957–58ஆம் ஆண்டிற்கான அறிக்கை, கழகத்தின் சிபாரிசுகளில் ஒன்றைக்கூட யூனியன் அரசாங்கம் ஏற்றுக்கொள்ள மறுக்க வில்லை என்பதைக் காட்டுகிறது. இதர ஆண்டுகளுக்கான அறிக் கைகளும் சற்றேறக்குறைய அதே தன்மையைத்தான் காட்டு கின்றன. கழகத்தினுடைய சிபாரிசுகள் ஆலோசனை தரும் தன் மைக்கொப்பானவையெனினும், அரசியலமைப்பு அடிப்படை யில் சுதந்திர நிறுவனமாக மிகத் திறமையுடன் அது செயலாற்று கிறதென்பதை நிலைநாட்ட வேறு பெரிய சோதனையெதுவும் தேவையில்லை.

# 36. ஆட்சி மொழி

இந்தியாவைப் போன்று ஆட்சி மொழியைப்பற்றிய விரி வான ஷரத்துகளையுடைய அரசியலமைப்புகள் மிகக்குறைவே யாகும். சாதாரணமாக, ஆட்சி மொழிக்காக அரசியற் சட்டத் தில் விசேஷ ஏற்பாடு செய்யவேண்டியதில்லை. ஏனெனில், மிகப் பெரும்பாலான நாடுகளில் மக்கள் அனைவருடையவும் பொதுப் பேச்சு மொழியாக ஒரே மொழியுள்ளது. அல்லது குறைந்த பட்சம் மிக அதிகப் பெரும்பான்மையினர் ஒரு மொழியைப் பேசு கின்றனர். ஆனல், உலகின் சில பகுதிகளில் இப் பொது முறைக்கு விலக்குகளும் இருக்கின்றன. ஒருசில நாடுகள், அவற்றின் எல்லைக்குள், இருமொழிகள் அல்லது பல மொழிகளால் ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்க்க விசேஷ ஏற்பாடுகளைக்கூடச் செய்திருக்கின்றன. இந்தியா இரண்டாவதாகச் சொல்லப்பட்ட வகையைச் சேர்ந்ததாகையால் அரசியலமைப்பில் ஆட்சிமொழி யைப்பற்றிய தனி அத்தியாயமொன்று அவசியமாயிற்று.

ஆட்சிமொழிக் குழுவின் சொற்கள்படி: 'நாடு சமாளிக்க வேண்டிய மொழிப் பிரச்சினையின் சிக்கலும் அதன் கடினமான தன்மையும் வெளிப்படையாகும். நாட்டின் கலாசார வாழ்க்கையில் காணப்படும் சக்திமிக்க கூறுகளுக்கும் அதன் மறு படிவமாகப் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு நாடு மீண்டும் கண்டுபிடித்துள்ள அரசியல் ஒற்றுமைக்குச் சின்னமாக மொழியடிப்படையொன்றிற்கும் உருவமொன்று கொடுக்க நாம் முயற்சி செய்துவருகிறோம். அங்ஙனம் செய்யும்பொழுது, மக்களுக்கு அயல்மொழியாக ஆனல் அதே சமயத்தில், உலக மொழிகளுள் மிக அதிகமான மக்களால் பேசப்படுவதாகவும், வளமிக்கதாகவும், சிபாரிசு செய்வதற்கான பொதுத் தகுதிகளை உடையதாகவுமிருக்கும் ஆங்கில மொழியடிப்படையில் இருக்கும் நடைமுறையொன்றை மாற்றிப் புதியதாக ஒன்றை ஏற்படுத்த விரும்புகிறோம். நவீன சமுதாயத்தில் தோன்றும், அரசாங்கச் சார்புடையதும், அச் சார்பு அற்றதுமான பல திறப்பட்ட

தொடர்பிற்கு, ஆங்கிலத்திற்குப் பதிலாக நாம் ஏற்படுத்த விரும்பும் மொழிகள் போதுமான அளவிற்குத் தற்போது வளர்ச்சியற்றவைகளாக இருக்கின்றன. இத்தகைய மொழிகளில் சுமார் பன்னிரண்டு அல்லது அதற்கும் அதிகமான மொழிகள், செய்திப் போக்குவரத்துத் துறையில் சிறப்பான முன்னேற்றமடைந்த சாதனங்களாகவிருப்பதாகக் கருதப்படுகின்ற தற்போதைய ஐரோப்பிய மொழிகளைப் பேசுவோரின் எண்ணிக்கையை மட்டும் கருத்திற்கொண்டு பார்க்கும்போது, அம்மொழிகளைப் பேசும் மக்களின் தொகையினும் அதிகமான மக்கள் தொகையினரால் பேசப்படுகின்றன ஆதலின், உலக மொழிகள் பட்டியலில் இடம்பெறத் தகுதியுடையவைகளாகும். யூனியன் மொழியாக, வட்டார மொழிகளுள் நாட்டில் மிகவதிகமான மக்களால் பேசப்படுகிறதென்ற முக்கியமான அடிப்படையில், இந்தி மொழி தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது.'

பின்வரும் அட்டவணை இந்திய[1] மொழிப் பிரச்சினையைப் பற்றிய விளக்கத்தைத் தருகிறது.

| மொழி | | | பேசுவோரின் எண்ணிக்கை | மொத்த மக்கள் தொகையில் அதன் விழுக்காடு |
|---|---|---|---|---|
| அசாமிய மொழி | ... | ... | 4,988,226 | 1·39 |
| வங்காளி | ... | ... | 25,121,674 | 7·03 |
| குஜராத்தி | ... | ... | 16,310,771 | 4·57 |
| இந்தி, உருது, இந்துஸ்தானி, பஞ்சாபி. | | | 1,49,944,311 | 42·01 |
| கன்னடம் | ... | ... | 14,471,76 | 4·05 |
| காஷ்மீரம் | ... | ... | கிடைக்கவில்லை | |
| மலையாளம் | ... | ... | 13,380,109 | 3·69 |
| மராத்தி | ... | ... | 27,049,522 | 7·57 |
| ஒரியா | ... | ... | 13,153,909 | 3·68 |
| சமஸ்கிருதம் | ... | ... | 555 | 0·00010 |
| தமிழ் | ... | ... | 26,546,764 | 7·0 |
| தெலுங்கு | ... | ... | 32,999,916 | 9·24 |
| இதர மொழிகளைத் தாய் மொழியாகப் பேசும் மக்கள். | | | 32,906,787 | 9·22 |
| மொத்தம் | ... | | 3,56,879,394 | |

1 இப் புள்ளி விவரங்கள் 1951ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட மக்கள் கணிதியை ஆதாரமாகக் கொண்டவை.

ஆட்சிமொழிபற்றிய விவாதத்தின்போது, அரசியலமைப்புச் சபை, உணர்ச்சியால் மிகுந்த மொழிவெறி வசப்பட்ட நிதானமிழந்த காட்சிகளைக் கண்டது. இருப்பினும், அச் சபை காரசாரமான விவாதத்திற்குப் பிறகு ஏற்றுக்கொள்ளக்கூடிய முறை மரபொன்றை (formula) உருவாக்கியது. ஆட்சிமொழிபற்றிய ஏற்பாடுகள் இச் சமரசமுறை மரபின் பயனாகும்.

## யூனியன் ஆட்சி மொழி (விதிகள் 343-ம் 344-ம்)

யூனியன் ஆட்சி மொழியைப்பற்றிய முக்கிய ஏற்பாடுகள் 343, 344 ஆகிய விதிகளில் காணப்படுகின்றன. அவை வருமாறு :

(1) தேவநாகரி வடிவத்தில் எழுதப்பட்ட இந்தி யூனியன் ஆட்சிமொழியாக இருக்கும்.

(2) அரசியலமைப்புத் தொடக்க முதலாகப் பதினைந்தாண்டுக் காலத்திற்கு யூனியன் ஆட்சிமொழியாக ஆங்கிலம் அரசாங்க அலுவல்கள் எல்லாவற்றிற்கும் தொடர்ந்திருந்து வரும். ஆனால், இக்காலத்தில் ஆங்கிலத்தோடு இந்தியையும் உபயோகிக்க ஜனாதிபதி அதிகாரம் தரலாம்.

(3) பதினைந்தாண்டுகட்குப் பிறகும் எந்த ஒரு காரியத்திற்கும் ஆங்கிலத்தைத் தொடர்ந்து உபயோகிக்கப் பாராளுமன்றம் வகை செய்யலாம்.

(4) அரசியலமைப்புத் தொடங்கியதிலிருந்து ஐந்தாண்டு முடியும்போது, இந்தி மொழியைப் பரவலாக உபயோகப்படுத்துவதற்கும் ஆங்கில மொழி உபயோகத்திற்குக் கட்டுப்பாடுகள் விதிக்கவும், இன்னும் இவைபோன்ற விஷயங்களில் சிபாரிசுகள் செய்யவும் ஜனாதிபதி ஒரு குழுவை நியமிப்பார். அதே காரியத்திற்காக அரசியலமைப்புத் தொடங்கிய பத்தாவது ஆண்டு முடிவில் ஜனாதிபதி ஒரு குழுவை நியமிக்கவேண்டியது அவசியமாகும். சிபாரிசுகளைச் செய்கின்றபொழுது,இந்தியாவினுடைய தொழில், பண்பாட்டு, விஞ்ஞான முன்னேற்றத்திற்கவசியமான பரிசீலனையையும், அரசினர் பணித் தொகுதிகள் சம்பந்தமாக இந்தி பேசாத பகுதிகளிலுள்ள மக்களின் நியாயமான நலன்களையும் கோரிக்கைகளையும் குழு கருத்தில் கொள்ளவேண்டும்.

(5) விகிதாசார பிரதிநிதித்துவ முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட முப்பது பேர்களடங்கிய (லோக் சபையிலிருந்து 20 பேரும், இராச்சிய சபையிலிருந்து 10 பேரும்) பாராளுமன்றக்

குழு ஒன்று ஜனாதிபதியால் நியமிக்கப்பட்ட குழுவின் சிபாரிசு களைப் பரிசீலனை செய்து ஓர் அறிக்கையை ஜனாதிபதிக்கு சமர்ப் பிக்கும். அக் குழு செய்துள்ள அறிக்கை அடிப்படையில் ஜனாதிபதி உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம்.

அரசியலமைப்பு ஏற்பாடுகளுக்கிணங்க, அரசியலமைப்புத் தொடக்கத்திலிருந்து ஐந்தாண்டுகளானதும் 1955ஆம் ஆண்டு ஜூன் மாதம் பி. ஜி. கேர் தலைமையில் இருபத்தோர் உறுப்பினர் களடங்கிய குழுவொன்றை ஜனாதிபதி நியமித்தார்.

அக் குழு அதன் அறிக்கையை 1956ஆம் ஆண்டு மத்தியில் ஜனாதிபதிக்குச் சமர்ப்பித்தது. ஐந்நூறு பக்கங்கள் கொண்ட அவ்வறிக்கை, குழுவின் பரிசீலனைக்கு விடப்பட்ட ஒவ்வொரு பிரச்சினையைப்பற்றியும் அலசி ஆராயும் சிறப்புடைய பத்திர மாகும். இருப்பினும், அவ்வறிக்கை கடுஞ்சர்ச்சைகளைத் தோற்று வித்தது. நாட்டின் பெருமொழிகளாகிய வங்கம், தமிழ் ஆகிய வற்றின் பிரதிநிதிகளாக அக் குழுவில் அங்கம் வகித்த இரு முக்கிய உறுப்பினர்கள் வெளியிட்ட கடுமையானதும், சமரசத் திற்கு இடமேயில்லாததுமான மாறுபட்ட கருத்துகள் அவ் வறிக்கையின் முக்கியமான குறைகளுள் ஒன்றாகும். எனினும், இந்திய மொழிப் பிரச்சினையின் சிக்கலையும், முக்கியத்துவத்தை யும் அறிவதற்குதவும் ஒரு சிறந்த பத்திரமாகும் அது.

அரசியலமைப்பில் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாட்டிற் கிணங்க உள்துறை அமைச்சரைத் தலைவராகக் கொண்ட முப்பது உறுப்பினர்கள் கொண்ட பாராளுமன்றக் குழுவொன்று அக் கழ கத்தின் சிபாரிசுகளை ஆராய்ந்தது. அக் குழுவின் அறிக்கை 1958ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 8ஆம் நாள் பாராளுமன்றத் திற்குத் தாக்கல் செய்யப்பட்டது. யூனியனைப் பொறுத்தவரை யிலும் இந்தியும், இராச்சியங்களைப் பொறுத்தமட்டில் பிரதேச மொழிகளும் ஆங்கிலத்திற்குப் பதிலாக அரசாங்கக் காரியங் களுக்குப் பின்பற்றவேண்டுமென்னும் அரசியலமைப்பு ஏற் பாட்டைஏற்றுநடக்கவேண்டுமென்ற திட்டவட்டமானகருத்தை வெளியிட்டபோது, இத் துறையில் ஏற்படவேண்டிய இறுதி மாற்றம் நெகிழ்ச்சியுடையதும், நடைமுறைச் சாத்தியமானது மான வழியில் அமையவேண்டுமென்றும் கருத்துத் தெரிவித்தது. இவ்வாறு, அக் குழு இறுதி மாற்றம் நிதானமாகவும் நெகிழ்ச்சி யுடைய முறையிலுமேற்படவேண்டுமென்று வற்புறுத்தியதைத் தவிர, மற்றபடி ஆட்சிமொழிக் கழகத்தின் சிபாரிசுகளை பொது வாக ஆமோதித்தது.

## மண்டல மொழிகள்
## (Regional Languages)

ஒவ்வோர் இராச்சியச் சட்டசபையும் சம்பந்தப்பட்ட இராச்சிய அரசாங்கத்தின் எல்லாம் அல்லது ஏதாவதொரு காரியத்திற்கு இராச்சியத்தில் வழக்கிலுள்ள மொழிகளுள் ஏதேனுமொன்றையோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவை களையோ பின்பற்றுவதற்கு 345ஆம் விதியின்கீழ் அதிகாரம் தரப் பட்டிருக்கிறது. ஆனால், இராச்சியமொன்றிற்கும் யூனியனுக்கு மிடையேயோ அல்லது ஓர் இராச்சியத்திற்கும் பிறிதோர் இராச்சியத்திற்குமிடையேயோ செய்திப் போக்குவரத்திற்கு அனுமதிக்கப்பட்டிருக்கும் மொழி யூனியன் ஆட்சி மொழியாகும். சில இராச்சியங்களிலுள்ள மொழிச் சிறுபான்மையோரின் நலன் களைப் பாதுகாக்க அரசியலமைப்பு விசேஷ ஏற்பாடொன்றைச் செய்திருக்கிறது. இது, அரசியலமைப்பின் 29ஆம் விதியின்கீழ் உத்தரவாதஞ் செய்யப்பட்டிருக்கும் ஆதார உரிமைகளில் காணப்படும் கலாசார உரிமையோடுகூட அதிகமாகத் தரப் படும் மற்றொரு பாதுகாப்பாகும். இதன்படி, குறிப்பிட்ட ஒரு மொழியை அரசாங்கக் காரியங்களுக்காக இராச்சியம் முழுவதற் குமோ அல்லது ஒரு பகுதிக்குமட்டுமோ, இது சம்பந்தமாக கணிசமான பகுதி மக்கள் அம் மொழியைப் பேசுவதாகவும், அதனால் அம் மொழி ஏற்கப்படவேண்டும் என்னும் விருப்பம் அம் மக்களுக்கு இருப்பதாகவும் ஜனாதிபதிக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படுகின்றபோது, அவர் அதை ஏற்றுக்கொள்வாரானால், அவ்வாறு உத்தரவொன்றை ஓர் இராச்சியத்திற்குப் பிறப்பிக்க 347ஆம் விதியின்கீழ் அவர் அதிகாரம் தரப்பட்டிருக்கிறார். மத்திய அரசாங்கத்தின் கையிலிருக்கும் இவ்வதிகாரம், மொழி வெறிப் போக்குகள் ஏற்படாமல் தடுக்கவும் பல இராச்சியங்களி லுள்ள மொழிச் சிறுபான்மையோரைப் பெரும்பான்மையோர் ஆதிக்கம் செலுத்தாதவாறு தடுக்கவும் உதவும்.

## நீதிமன்றங்களில் மொழி
## (Language in the Courts)

பதினைந்து ஆண்டுகட்குப் பிறகும் ஆங்கில மொழி பின்வரும் காரியங்களுக்காகப் பின்பற்றப்படவேண்டுமென்று பாராளு மன்றம் முடிவுசெய்யுமானால் அதற்காக 348ஆம் விதியின்கீழ் அரசியலமைப்பு தனி ஏற்பாடொன்றைச் செய்கிறது:

(1) உச்ச நீதிமன்றம், உயர் நீதிமன்றங்களின் எல்லா நடை முறைகளும்.

(2) அரசியலமைப்பு அடிப்படையிலோ அல்லது ஏதேனுமொரு சட்ட அடிப்படையிலோ வெளியிடப்படும் அதிகாரபூர்வமான மசோதாக்கள், சட்டங்கள், அவசரச் சட்டங்கள் (ordinances), உத்தரவுகள், விதிகள் (rules), ஒழுங்கு விதிகள், துணைச் சட்டங்கள் ஆகியவற்றின் மூலப் பகுதிகள்.

எனினும், நீதிமன்றங்களிலும் ஆங்கில மொழி உபயோகப் படுத்தப்படுவதை பதினைந்தாண்டுக்கால எல்லை முடிந்ததும் பாராளுமன்றம் விரும்பினுல் நிறுத்திவிடலாம். அக்கால எல்லைக்கு முன்பாகக்கூட இந்தியோ அல்லது ஏதேனுமொரு மண்டல மொழியோ, ஜனாதிபதி இசைவு தருவாராஞல் உயர் நீதிமன்றத்தில் நடைமுறைகளை நடத்துவதற்காக பயன்படுத்துவதற்கு வகை செய்யப்பட்டிருக்கிறது.

## தனிக் கட்டளைகள்

## (Special Directives)

மொழிச் சிறுபான்மையினரின் நலன்களைப் பாதுகாக்கும் நோக்கோடு அரசியலமைப்பு சில தனிக் கட்டளைகளையும் கொண்டிருக்கிறது. இவ்வாறு 350ஆம் விதியின்கீழ் ஒவ்வொரு நபரும் எக்குறையிருப்பினும் அக்குறை நிவர்த்திக்காக யூனியன் அல்லது இராச்சிய உயர் அதிகாரி யாராக இருந்தாலும் அவருக்கோ அல்லது அதிகாரக் குழுவிற்கோ யூனியன் அல்லது இராச்சியத்தில் உபயோகப்படுத்தப்படும் எம்மொழியிலும் விண்ணப்பஞ் செய்ய உரிமை பெறுகிருர். இது தவிர, இராச்சிய சீரமைப்புக் கழகத்தால் செய்யப்பட்ட சிபாரிசுகளுக்கிணங்க அரசியலமைப்பிற்கு 1955ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட ஏழாவது மாற்றத்தில் மேலும் இரு தனிக் கட்டளைகளிருக்கின்றன. இவைகளின்படி :

(1) மொழிச் சிறுபான்மையோரின் குழந்தைகளுக்கு ஆரம்பக் கட்டம் வரையிலும் தாய்மொழிமூலமாகப் போதனை செய்வதற்கான போதுமான வசதிகளைச் செய்து தரவேண்டியது ஒவ்வோர் இராச்சியத்தினுடையவும் அந்த இராச்சியத்திலுள்ள வட்டார ஆட்சிகளினுடையவும் முயற்சியாக இருக்கும். அத்தகைய வசதிகளைச் செய்து தருவதற்கு ஜனாதிபதி, அவருக்கு அவசியமென்று தோன்றும் கட்டளைகளைப் பிறப்பிக்க அதிகாரம் தரப்பட்டிருக்கிருர்.

(2) மொழிச் சிறுபான்மையோருக்காகத் தனி அலுவலரொருவரை ஜனாதிபதி நியமிப்பார். அரசியலமைப்பின்கீழ் மொழிச் சிறுபான்மையோருக்காகத் தரப்பட்டிருக்கும் பாதுகாப்புகள் பற்றிய எல்லா விஷயங்களையும் விசாரித்து, ஜனாதிபதிக்குத் தவறுமல் அறிக்கை அனுப்பவேண்டியது அத் தனி அலுவலரின் கடமையாகும். தனி அலுவலரின் அறிக்கைகள் பாராளுமன்றத்தின் ஒவ்வொரு சபைக்கும் தாக்கல் செய்யப்படவேண்டியதோடு, சம்பந்தப்பட்ட இராச்சிய அரசாங்கங்களுக்கு அனுப்பப்படவேண்டும்.

பலதிறப்பட்ட பண்பாடுகளைச் சேர்ந்த இந்தியப் பிரிவுகள் எல்லாவற்றிற்கும் உண்மையான ஓர் உருவங்கொடுக்கும் நோக்கத்தோடு இந்தி மொழியின் வளர்ச்சிக்கும் வளத்திற்கும் தேவையான நெறியொன்றை அரசியலமைப்பு கொண்டிருக்கிறது. அத்தகைய வளம் முக்கியமாக வடமொழியினின்றும் அடுத்தபடியாக இதர மொழிகளிலிருந்தும் தேவையானவற்றைப் பெற்றுக்கொள்வதால் அடையலாம். மொழிக் கழகத்தின்படி (Language Commission) 'இதர மொழிகள்' என்பது அரசியலமைப்பில் சொல்லப்படும் இதர இந்திய மொழிகளாகத்தான் இருக்கவேண்டுமென்பதில்லை; இதர எந்த மொழியாகவும் இருக்கலாம். எனவே, இந்தி மொழி முன்னேற்றத்திற்கும் வளத்திற்கும் ஆங்கிலம் உள்ளிட்ட எந்த மொழியிலிருந்து வேண்டுமானாலும் தேவையானவற்றை எடுத்துக்கொள்ளத் தடையேதும் கிடையாது.

அரசியலமைப்பின் எட்டாம் ஷெடியூல் பதினான்கு மொழிகளைக் குறிப்பிடுகிறது.

எட்டாம் அட்டவணை

(Eigth Schedule)

விதி 344 (1)-ம், 351-ம்]

மொழிகள்

(1) அசாமிய மொழி
(2) வங்காளி மொழி
(3) குஜராத்தி
(4) இந்தி
(5) கன்னடம்
(6) காஷ்மீரம்
(7) மலையாளம்
(8) மராத்தி
(9) ஒரியா
(10) பஞ்சாபி
(11) சமஸ்கிருதம்
(12) தமிழ்
(13) தெலுங்கு
(14) உருது

மொழிப் பிரச்சினைபற்றி இன்றும் நாட்டில் விவாதங்களும் மனக் கசப்புகளும் நிலவியபோதும், அரசியலமைப்புச் சபையால் ஆட்சிமொழிபற்றிய அரசியலமைப்பு ஏற்பாடுகள் ஏற்றுக் கொள்ளப்பட்டது இந்திய தேசியம், இந்திய ஒற்றுமை ஆகியவற்றின் வெற்றியாகும். மிக ஆழமான வேறுபாடுகளுக்கிடையிலும் நாட்டு நலனில் அக்கறையுடைய மேன்மக்கள் திகைப்படையச் செய்யும் பிரச்சினைக்கும் தீர்வுகாண முடியுமென்பதை அது எடுத்துக்காட்டியது. இவ்வுணர்வு நாட்டினுடைய எதிர் கால நல்வாழ்வுக்கு வழிகாட்டுவதாகவும் நாட்டு ஒற்றுமைக்கும், ஐக்கியத்திற்குமிருக்கும் ஆர்வம் இந்தியர்களுக்கு அவர்களைப் பிரிக்க பயமுறுத்தும் ஒவ்வொரு பிரச்சினைக்கும் தீர்வுகள் காண உதவ வேண்டும்.

# 37. தேர்தல்கள்

தேர்தல்களுக்காக ஒரு தனி அத்தியாயத்தை இந்திய அரசியலமைப்பு ஒதுக்கியிருக்கிறது. இவ்வகையில் அது பொதுவாகத் தேர்தல்களை அவ்வளவு முக்கியமானதாகக் கருதாமல், சட்டசபையால் கவனிக்கப்படவேண்டிய விஷயமாக விட்டுவிடும் அரசியலமைப்புகளினின்றும் வேறுபடுகிறது. அரசியலமைப்பில் விரிவான ஏற்பாடுகளை இவ் விஷயமாக அரசியலமைப்பை ஆக்கியவர்கள் இணைத்திருப்பதொன்றே அரசியலமைப்பின் இணைபிரியாத ஒரு பகுதியாக அரசியல் உரிமைக்கு உத்தரவாதம் அளிக்க எத்துணை ஆர்வம் உடையவர்களாக அவர்கள் இருந்தார்கள் என்பதைக் காட்டுகிறது. இக் குறிக்கோளை உறுதிப்படுத்தும் நோககத்தோடு அரசியலமைப்புச் சபை ஆதார உரிமைகள் பற்றிய தன்னுடைய குழுவிற்கு இப் பிரச்சினையையும் கவனிக்குமாறு விட்டது. அக் குழு, தேர்தல்கள் சுதந்திரமாகவும், அவற்றில் நிர்வாகம் குறுக்கிடாமல் இருப்பதும் ஆதார உரிமைகளாகக் கருதப்பட்டு, அதற்காக அவசியமான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று சிபாரிசு செய்தது. ஆனால், சபை, அது ஆதார முக்கியத்துவம் வாய்ந்ததென்றாலும், ஆதார உரிமைகள்பற்றிய அத்தியாயத்தில் அதைச் சேர்க்கவேண்டியதில்லை என்று கருதிப் பிறிதோரிடத்தில் சேர்க்கத் தீர்மானித்தது. அதன்படி, வரைவுக் குழு (Drafting Committee) விரிவான தன்மையையுடைய தனி ஏற்பாடுகளைச் செய்து, அவைகளை அரசியலமைப்பில் தனியோர் அத்தியாயத்தில் ஏற்படுத்தியது.

### சட்டப்படியான தோற்றம்

### (The Legal Framework)

அரசியலமைப்படிப்படையில் தேர்தல் கழகமொன்றிற்கு வகைசெய்யப்பட்டு, பின்வரும் பொறுப்புகளைக் கவனிக்குமாறு செய்யப்பட்டிருக்கிறது:

(அ) இந்திய ஜனாதிபதி தேர்தல்;

(ஆ) இந்திய உபஜனாதிபதி தேர்தல்;

(இ) யூனியன் பாராளுமன்றமும் அதன் இரு சபைகளி னுடைய அமைப்பும்;

(ஈ) பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு இருக்கவேண்டிய தகுதிகள்;

(உ) இராச்சிய சட்டசபைகளின் அமைப்பு;

(ஊ) இராச்சிய சட்டசபைகளின் உறுப்பினர் தகுதிகள் ;

(எ) பாராளுமன்றம், இராச்சிய சட்டசபைகளின் கால வரையறைகள் ;

(ஏ) தேர்தல்கள்—பாராளுமன்றத்திற்கும் இராச்சிய சட்டசபைகளுக்கும் ;

(ஐ) லோக் சபையிலும் இராச்சியக் கீழ் சட்டமன்றங்களி லும் அட்டவணையில் கண்ட ஜாதியினருக்கும், அட்ட வணையில் கண்ட மலைவாசிகளுக்கும் பிரதிநிதித்துவம் ;

(ஒ) தேர்தல் காரியங்களுக்காக மக்கள்தொகையை நிர்ண யித்தல்.

இராச்சிய சட்டசபைகளுக்கான தேர்தல்கள் உட்பட, தேர் தல்கள் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களுக்காகவும் சட்டஞ் செய்ய 327ஆம் விதியின்கீழ்ப் பாராளுமன்றம் உச்ச அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. தேர்தல்கள் சம்பந்தமாகச்சில குறிப்பிட்ட துறைகளில் சட்டஞ் செய்யும் அதிகாரங்கள் 328ஆம் விதியின்கீழ் இராச்சியங்களுக்கும் தரப்பட்டிருக்கின்றன. ஆனால், அத்தகைய சட்டம் இவ் விஷயத்தில் பாராளுமன்றச் சட்டமெதற்கும் மாறு பட்டதாக இருத்தலாகாது.

பாராளுமன்றம் விரிவான அம்சங்கள் கொண்ட இரு முக்கிய சட்டங்களைத் தேர்தல்கள் நடைபெறுவதற்காக இயற்றியது. முதலாவது, 1950ஆம் ஆண்டு இயற்றப்பட்ட மக்கள் பிரதிநிதித் துவச் சட்டம். அது வாக்காளர்களுக்கிருக்கவேண்டிய தகுதிகளை யும், வாக்காளர் பட்டியல்கள் தயாரிப்புப்பற்றிய விஷயங்களை யும் குறிப்பிட்டது. அது தேர்தல் தொகுதிகள் அமைப்பிற்குப் பின்பற்றவேண்டிய முறையையும், பாராளுமன்றத்தில் இராச்சி யங்களுக்கு ஒதுக்கவேண்டிய இடங்களின் எண்ணிக்கையையும், ஒவ்வோர் இராச்சிய சட்டசபைக்கும் இருக்கவேண்டிய இடங்களின் எண்ணிக்கையையும் நிர்ணயித்தது. இரண்டாவ தான 1951ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம், தேர் தல்கள் நடப்பதற்கு வகைசெய்ததோடு, தேர்தல்கள் நடத்துவ

தற்கும், இன்னும் வாக்குப் பதிவு, தேர்தல் வழக்குகள், உபதேர்தல்கள் போன்றவற்றைக் கவனிப்பதற்குமான நிர்வாக இயந்திரம் போன்றவைகளைப்பற்றிய விஷயங்களை விரிவாக எடுத்துரைத்தது. இவ்விரு சட்டங்களின்கீழ் மத்திய அரசாங்கம் சட்டப்படியான விதிகளைச் செய்தது. அவைகள் 1950ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவ (வாக்காளர் பட்டியல்கள் தயாரிப்பு) விதிகளென்றும், 1951ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவ (தேர்தல்கள் நடப்பும் தேர்தல் மனுக்களும்) விதிகளென்றும் அழைக்கப்பட்டன. அதற்குப் பிறகு மாறுதல்கள் அவசியமென்று தோன்றியபோது, இவ்விரு சட்டங்களும் விதிகளும் திருத்தப்பட்டன. இத் திருத்தங்களுள் மிகவும் முக்கியமானது, வாக்காளர் பட்டியல்கள் தயாரிப்பதைப் பற்றியதாகும். முதலில் பாராளுமன்ற,அசெம்பிளித் தேர்தல் தொகுதிகளுக்குத் தனித்தனி வாக்காளர் பட்டியல்கள் தயாரிக்கப்படுவதற்கு வகைசெய்யப்பட்டிருந்தது. அதற்குக் கொண்டுவரப்பட்ட திருத்தம், இரண்டிற்கும் ஒரேயொரு வாக்காளர் பட்டியல் தயாரிக்கப்பட்டால் போதுமென்ற ஏற்பாட்டைச் செய்ததோடு அவசியமற்ற வேலைப்பளுவையும் குறைத்தது.

இச் சட்டங்கள் அடிப்படையில்தான் இரண்டு பொதுத் தேர்தல்களும் நடைபெற்றிருக்கின்றன. அவசியமேற்படும் போது நியதியும் தோன்றும் போலும்! இப் பொருளைப்பற்றியவைகளாக இருக்கும் பல தேர்தல் சட்டங்களையும் ஒன்றாகத் தொகுத்து ஒரே சட்டமாக வெளியிடுவதற்குப் பொருத்தமான சமயம் இது. மூன்றுவது பொதுத் தேர்தலுக்கு முன்பு இவைகளையெல்லாம் தொகுத்து வெளியிட்டால், சம்பந்தப்பட்ட அனைவருக்கும் இது பேருதவியாக இருக்கும்.

## ஒரு பொதுத் தேர்தல் பட்டியல்
## (One General Electoral Roll)

இத் துறையில் செய்யப்பட்டிருக்கும் சட்டபூர்வமான ஏற்பாடு முதல் தோற்றத்தில் மிகைப்பட்டதாகத் தோன்றும். ஆனால், அதைப்பற்றிய வரலாறே இருக்கிறது. ஆங்கிலேயர் ஆட்சியின்போது இந்தியாவில் வகுப்புவாத அரசியலின் தொந்தரவு காரணமாகத் தனித்தனி வாக்காளர் தொகுதிகள் ஏற்படுத்தப்பட்டன. அதன்படி, ஒவ்வொரு தேர்தல் தொகுதியிலும், அக்காரியத்திற்காக எத்தனைச் சமூகங்கள் அங்கீகரிக்கப்பட்டிருந்தனவோ அத்தனை வாக்காளர் பட்டியல்களும் இருந்தன. இவ்வாறு, இந்தியா முழுவதிலுமிருந்த முகமதியர்களுக்கெனத் தனி வாக்காளர் பட்டியல் இருந்தது. அவர்கள் முகமதியர்களுக்-

காக ஒதுக்கப்பட்ட தேர்தல் தொகுதிகளில் நின்ற வேட்பாளர்களுக்குமட்டுமே வாக்களித்தார்கள். இம் முறை எந்த அளவிற்கு இயற்கைக்குப் புறம்பானதென்பதை இங்கு வற்புறுத்தவேண்டியதில்லை. 325ஆம் விதி தனி வாக்காளர் தொகுதிகள் இறுதியாகக் கைவிடப்பட்டுவிட்டன என்பதை அறிவிக்குமோர் பிரகடனம் ஆகும். இதன் விளைவாக, இந்திய மக்களெல்லோரும் அவர்களுடைய மத, இன, சாதி அல்லது பால் வேறுபாடில்லாமல், பிரதேச அடிப்படையிலுள்ள தேர்தல் தொகுதிக்கான பொது வாக்காளர் பட்டியலில் இடம்பெறுவார்கள். இவ்வாறாகப் பல ஆண்டுகளாக இந்தியாவில் பின்பற்றப்பட்ட இயற்கைக்கொவ்வாத முறை அகற்றப்பட்டு, ஒருங்குதிரட்டப்பட்ட அரசியற் சமூகமொன்றை அரசியலமைப்பு ஏற்படுத்தியது.

## வயதுவந்தோர் வாக்குரிமை
## (Universal Adult Suffrage)

அரசியலமைப்பின் சிறப்பம்சங்களுள் ஒன்று வயதுவந்தோர் வாக்குரிமையாகும். ஆணாக இருப்பினும், பெண்ணாக இருப்பினும், இருபத்தொரு வயதிற்குக் குறையாத ஒவ்வொரு நபரும் லோக் சபைக்கும் இராச்சிய சட்ட அசெம்பிளிக்கும் நடைபெறும் தேர்தலில் வாக்குப் போடுவதற்கு உரிமையுடையவராக இருக்கிறார் என்பது அதன் பொருளாகும். அத்தகுதிபெறத் தடையாக இருப்பவைகளாவன: (1) ஓரிடத்தில் குடியிருப்பில்லாதிருத்தல்; (2) சரியான மனநிலையில் இல்லாதிருத்தல்; (3) குற்றம் புரிந்திருத்தல்; (4) ஊழல் அல்லது சட்ட இசைவில்லாத பழக்கம் முதலியன. இவ்வேற்பாடு, 'இந்திய ஜனநாயகத்தின் ஊற்று' என்று புகழப்படுகிறது. ஏனெனில், அது வாக்குரிமை பெறுவதற்காக வற்புறுத்தப்பட்ட சொத்து, வருமானம், கல்வித் தகுதிகள் போன்ற காலத்திற்கொவ்வாத, ஜனநாயக முறைக்குப் புறம்பான தகுதிகளையெல்லாம் ஒரே தடவையில் அகற்றிவிட்டது.

இந்திய ஜனநாயகத்தின் மேற்சொல்லப்பட்ட அவ்விரு ஏற்பாடுகளின் திரண்ட விளைவு உண்மையிலேயே மிகச் சிறப்புடையதாகும். 1919ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின்கீழ் வாக்குரிமை பெற்றிருந்தவர்கள் மூன்று விழுக்காட்டினரேயாவர். 1935ஆம் ஆண்டுச் சட்டத்தின்கீழ் அதைவிடப் பரந்த அடிப்படையில் ஏற்படுத்தப்பட்ட திட்டத்தின்படி, இவ்வடிப்படைக் குடியுரிமை பெற்றிருந்தவர்கள் பத்து விழுக்காட்டினரேயாவர். ஆனால், இப்பொழுது ஒவ்வொரு குடிமகனும் அதற்குத் தகுதியுடையவராவார். ஒருவருக்கு ஒரு வாக்குரிமை, ஒரு மதிப்பு

என்னும் கொள்கை அரசியற் சட்டபூர்வமான உரிமையாகியிருக்கிறது. இந்தியச் சமூகத்தைச் சட்டபூர்வமாக மத அடிப்படையிலும் வகுப்புவாத அடிப்படையிலும் பல வாக்காளர் தொகுதிகளாகப் பிரித்துவைத்திருந்த அந்த விஷேதமான முறை அகற்றப்பட்டது. வயதுவந்தோர் வாக்குரிமை ஏற்படுத்தப்பட்டதற்கு முழுப்பொருத்தமுடையதாக இருக்கிறது. அதன் விளைவாக, இந்தியக் குடிகள் இந்துக்களாகவோ, முகமதியர்களாகவோ அல்லது கிறிஸ்துவர்களாகவோ அல்லாமல் தனியர்களாக வாக்களிப்பார்கள்.

## தேர்தல் இயந்திரம்
## (The Electoral Machinery)

ஓர் இன்றியமையாத துறையில் இந்திய அரசியலமைப்பு ஒப்பற்றதாகத் திகழ்கிறது. இத் துறையில் அது கனேடிய உதாரணத்தைப் பின்பற்றுகிறது. சிறந்த ஜனநாயகத்தின் இன்றியமையாத அம்சம் சட்ட, சட்டத் துறைகளுக்கு மக்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க நியாயமான முறையில் சுதந்திரமாகத் தேர்தல்களை நடத்துவது. அதாவது, தேர்தல்கள் ஒருதலைப்பட்சமாக நடத்தப்படாமல் இருக்கவேண்டும். எனவே, ஆட்சியிலிருக்கும் கட்சி எக் காலத்தும் தன்னுடைய நன்மைக்காகத் தேர்தல்களைப் பயன்படுத்திக்கொள்ள முடியாதவாறு அரசியலமைப்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் நடைபெறும் தேர்தல்கள் எல்லாவற்றின் மேற்பார்வையும், நடத்தப்படுதலும், கட்டுப்படுத்தலும் தேர்தல் கழகம் என்றழைக்கப்படும் சுதந்தர நிறுவனத்தின்கீழ் இருக்கவேண்டுமென்று 324ஆம் விதி கூறுகிறது. தேர்தல் கழகத்தின் அதிகாரம், தேர்தல்கள் சம்பந்தமாக எழும் ஐயங்களையும் வழக்குகளையும் முடிவு செய்வதற்காகத் தேர்தல் நீதிமன்றங்களை (Election Tribunals) நியமிப்பதற்கிருக்கும் அதிகாரத்தையும் கொண்டதாகும்.

தேர்தல் கழகம் ஒரு தலைமைத் தேர்தல் அதிகாரியையும், அவ்வப்போது ஜனாதிபதியால் செய்யப்படும் முடிவிற்குத் தகுந்தாற்போன்று தேர்தல் கமிஷனர்களையும் கொண்டதாக இருக்கிறது. அவர்கள் எல்லோரும் ஜனாதிபதியால் நியமிக்கப்படுகின்றார்கள். 1951–52-ல் நடைபெற்ற பொதுத் தேர்தல்களின் போது, தேர்தல் கழகத்திற்கு உதவும்பொருட்டு பம்பாயையும் பாட்னாவையும் தலைமையகமாகக்கொண்டு இயங்கிய இரு தற்காலிகப் பிரதேச கமிஷனர்களை ஜனாதிபதி நியமித்தார். 1957ஆம்

ஆண்டில் நடைபெற்ற இரண்டாம் பொதுத் தேர்தல்கள் சம்பந்தமாக டெல்லியை தலைமையலுவலகமாகக் கொண்டு செயலாற்றிய மூன்று தற்காலிக துணைத்தேர்தல் கமிஷனர்கள் நியமிக்கப்பட்டனர். இரண்டாம் தேர்தல்களுக்குப் பிரதேச கமிஷனர்கள் நியமிக்கப்படவில்லை. இம் மூன்று துணைத்தேர்தல் கமிஷனர்களில் ஒருவர் நிரந்தர அடிப்படையில் தொடர்ந்திருக்க வேண்டியதாகும் என்று தெரிகிறது.

அக் கழகம் ஒரு சுதந்திரமான நிலையம். அச் சுதந்திரம் 324(5)ஆம் விதியால் உறுதி செய்யப்பட்டிருக்கிறது. அது, உச்ச நீதிமன்ற நீதிபதியொருவர் எந்த முறையில். எந்தக் குற்றச் சாட்டுகள் அடிப்படையில் பதவியிலிருந்து விலக்கப்படலாமோ அவ்வாறல்லாமல் தலைமைத் தேர்தல் கமிஷனரைப் பதவியிலிருந்து விலக்கக்கூடாதென்றும், இதர தேர்தல் கமிஷனரொருவர் தலைமைத் தேர்தல் கமிஷனரின் சிபாரிசு இல்லாமல் விலக்கப்படலாகாதென்றும் கூறுகிறது. இருப்பினும், தேர்தல் கமிஷனர்களின் சுதந்திரம் உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் சுதந்திரத் தன்மையைப் போன்றதன்று என்பதையும் இங்கு சுட்டிக் காட்டவேண்டும். உச்ச நீதிமன்ற நீதிபதியொருவர் 65 வயது வரை பதவி வகிக்கின்றபோது, தலைமைத் தேர்தல் கமிஷனரோ ஒரு குறிப்பிட்ட காலத்திற்குமட்டும் நியமிக்கப்படலாம். தேர்தல் கழகத்தின் பணிகளைச் செய்வதற்குப் போதுமான சிப்பந்திகள்பற்றிய வசதிகளுக்கும் அரசியலமைப்பு வகை செய்கிறது.

1951–52-ல் நடைபெற்ற பொதுத் தேர்தல்களின்போது, இராச்சிய மட்டத்தில், இராச்சியத் தலைமைத் தேர்தல் அலுவலர் (Chief Electoral Officer) சட்ட பூர்வமான அந்தஸ்தோ அல்லது பணிகளோ பெறவில்லை. சட்டப்படியான அந்தஸ்தும், வரையறை செய்யப்பட்ட அதிகாரங்களும், பணிகளும் அவருக்கு அளிக்கப்படவேண்டுமென்று பிறகு உணரப்பட்டது. அதன்படி, 'தலைமைத் தேர்தல் அலுவலர்' என்னும் பதம், தலைமைத் தேர்தல் அதிகாரியின் பணிகளை விதிகள் அடிப்படையில் நடத்துவதற்கு இராச்சிய அரசாங்கமொன்றினால் நியமிக்கப்பட்ட அலுவலர் என்று விளக்கப்பட்டது இதுகாறும் கிடைத்த அனுபவ அடிப்படையில் தலைமைத்தேர்தல் அலுவலர், இராச்சிய அரசாங்கத்தின் முதுநிலை (senior) அலுவலராக இருக்கவேண்டுமென்னும் முடிவிற்குத் தேர்தல் கழகம் வந்திருக்கிறது. பகுதிக் கால அலுவலர்களாக நியமிக்கப்படுகின்றவர்களுக்கு மாவட்டங்களில் விரிவான அதிகாரபூர்வமான பிரயாணங்களை மேற்கொள்ள நேரம் கிடைப்பதில்லை ஆகையால், மாவட்ட மட்டத்தில் தேர்தல் அலுவலர்களோடு மிக முக்கியமானதாகக் கருதப்

யடும் தொடர்பேற்படுத்திக்கொள்ள முடிவதில்லை என்று தேர் தல் கழகம் கருதுகிறது. இருப்பினும், அவ்வாறு ஒரு பகுதிநேரத் தலைமைத் தேர்தல் அலுவலர் நியமிக்கப்பட்டால், அவருக்கு உதவியாக முழுநேர இளநிலை அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட வேண்டியது அவசியமாகும்.

மாவட்ட மட்டத்தில் தேர்தல் இயந்திரம் இராச்சியத்திற்கு இராச்சியம் மாறுபடுகிறது. ஒருசில இராச்சியங்களில் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மாவட்ட தேர்தல் அலுவலர், ஒரு சிறு குழு அலுவலர்களோடு இருக்கிறார். அக் குழு தேர்தல் சமயத்தில் பலப்படுத்தப்படும். வேறு சிலவற்றில் மாவட்ட மட்டத்தில் நிர்வாகத்தைச் சேர்ந்த ஒருவரே ஓர் அலுவற் குழு துணையோடு செயலாற்றுகிறார். இன்னும் வேறு சிலவற்றில் ஒரு திட்டமும் இல்லாமல் நிர்வாகத் துறையைச் சேர்ந்தவர்களே தேர்தல் உச்சகட்டத்தின்போது அவ் வேலைகளைக் கவனிக்கின்றார்கள். எனவே, தேர்தல் அலுவலகத் துறையைச் சிறந்த முறையில் நிரந்தரமாக அமைப்பது அவசியமாகும்.

தேர்தல் தொகுதியொன்றினுடைய வாக்காளர் பட்டியல்களைத் தயாரிப்பது, பராமரிப்பது சம்பந்தமாக இயங்கும் தேர்தல் நிர்வாகக்குழு தேர்தல் கழகமும், தலைமைத் தேர்தல் அலுவலரும், அத் தொகுதியின் வாக்காளரைப் பதிவு செய்யும் அதிகாரியும் (Electoral Registration Officer) கொண்டதாக இருக்கிறது. ஒவ்வோர் அசெம்பிளித் தொகுதிக்கும் ஒரு வாக்காளர் பெயர்ப் பதிவு செய்யும் அலுவலர் இருக்கிறார். அத் தொகுதி சம்பந்தப் பட்ட வாக்காளர்பட்டியலை சட்டப்படி ஆண்டுதோறும்திருத்தித் தயார் செய்வது அவருடைய பொறுப்பாகும். வாக்காளர் பெயர்ப் பதிவு செய்யும் அலுவலருக்கு உதவியாக மேலும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட உதவி வாக்காளர் பெயர் பதிவு செய்யும் அலுவலர்களை நியமிக்க சட்டம் வகைசெய்கிறது.

ஒவ்வொரு பாராளுமன்ற அல்லது அசெம்பிளித் தொகுதிக்கும் ஒரு விவர அறிக்கை அலுவலரை (Returning Officer) தேர்தல் கழகம் நியமிக்கிறது. அவர் அரசாங்க அலுவலராக இருத்தல் வேண்டும். ஒன்று அதற்கு மேற்பட்ட உதவி அறிக்கை அலுவலர்களும் அவருடைய பணிகளை நிறைவேற்றுவதற்கு உதவியாக நியமிக்கப்படுகிறார்கள்.

வாக்குப் பதிவு, தலைமை அலுவலராலும் (Presiding Officer), வாக்குப் பதிவு அலுவலர்களாலும் (Polling Officers) நடத்தப் படுகிறது. ஒவ்வொரு வாக்கெடுப்பு நிலையத்திற்கும், பாராளு மன்ற, அசெம்பிளித் தேர்தல்களுக்குத் தனித்தனியாக ஒரு

த்லைமை அலுவலரும் சில வாக்குப் பதிவு அலுவலர்களும் நியமிக்கப்படுகிறுர்கள். பாராளுமன்றத்திற்கும் அசெம்பிளிக்கும் ஒரே சமயத்தில் தேர்தல் நடைபெறுமானுல், அப்போது இவ்வலுவலர்களில் சிலர் இரண்டிற்கும் வாக்கெடுப்பு நிலையத்தில் பொறுப்பேற்குமாறு நியமிக்கப்படுகின்றுர்கள். அவர்கள் வழக்கமாகத் தேவைப்படுகின்ற எண்ணிக்கைக் காவலாளர்களாலும் (Policemen) இதர சிப்பந்திகளாலும் உதவி செய்யப்படுகின்றுர்கள்.

## முதல் பொதுத் தேர்தல்கள் (1951–52)

முதல் பொதுத் தேர்தல்கள் வரலாற்றுச் சிறப்புடைய நிகழ்ச்சி. அது உள்நாட்டிலும் எல்லோர் கவனத்தையும் கவர்ந்தது. அவ்வளவு பெரிய அளவில் ஏற்பாடு செய்யப்பட்டு நடத்தப்பட்ட தேர்தல்களில் பல இடையூறுகள் ஏற்பட்டதும், அவைகளைச் சமாளிக்கவேண்டியிருந்ததும் இயற்கையானதாகும். அத்தகைய மாபெரும் பொதுத் தேர்தல் ஒன்று மாபெரும் வெற்றியாக இருந்ததென்றுல் அதற்கு மிகப் பெருமளவு விழுக்காட்டினராக இருந்த இந்தியப் பாமர மக்களினுடைய அரசிய லுணர்வும் ஒழுங்குமே காரணமாகும். தேர்தலின் வெற்றியைப் பற்றி எழுதும்போது ஆர். ஆர். திவாகர் குறிப்பிட்டதாவது :

'அப் பொதுத் தேர்தல்கள் தேசத்தின் புது முயற்சியாக மட்டுமல்லாது, ஜனநாயகத்தின் பெருஞ் சோதனையாகவும் இருந்தன. இது வரலாற்றில் நடைபெற்ற தேர்தல்களுள் மிகப் பெரியது. பெரியதாக இருந்ததோடுமட்டுமல்லாது, படியாத மக்களின் மிகப் பெரிய எண்ணிக்கை காரணமாகவும், சீரான போக்கு இல்லாததாலும், செய்திப் போக்குவரத்திற்குத் தேவையான வசதி போன்றவைகளும் மற்றவைகளும் இல்லாததால் சிலர் மனத்தில் சந்தேகமும் இருந்தன. ஆனுல், இந்தியமக்கள் இச்சந்தேகங்களையெல்லாம் தவிடுபொடியாக்கிவிட்டார்கள் என்று பெருமையோடு சொல்லலாம். ஐம்பது விழுக்காட்டிற்கு அதிகமான மக்கள் வாக்கெடுப்பில் பங்கெடுத்துக்கொண்டார்கள். சில பெரிய இடங்களில் எண்பது விழுக்காட்டினர் வாக்களித்துள்ளனர். வாக்கெடுப்பு தினத்தன்று மிகக் குறைவான கை கலப்புகளே இருந்தன. அறிவுடைமையோடு ஒருசிலரை வாக்காளர்கள் தெரிந்தெடுத்துள்ளார்கள். எனவே, அறியாமையைக் காட்டிலும் சாதாரணப் பொது அறிவும், பண்பாடும், அமைதியான ஜனநாயக முறைகளின் அவசியம்பற்றிய அறிவும் சாதாரண மக்களுக்கிருக்குமானுல், மற்றெல்லாவற்றையும்விட அவையே மிக முக்கியமானவையாகும். இருபத்தைந்து ஆண்டு

கட்கும் அதிகமான தன்னுடைய வரலாற்றில் மக்களிடையே கொண்டிருந்த நெருங்கிய தொடர்பின்போது, காங்கிரஸ், சுதந்திரம், ஜனநாயகம், சமூக நீதி ஆகியவைகளைப்பற்றியே இலட்சக்கணக்கான இந்திய மக்களிடம் எடுத்துக்காட்டி வந்திருக்கிறது. அவ்வாறு அது ஓரளவு வெற்றியோடு முடித்திருக்கிறதென்று சொல்லலாம். அத்தகையதோர் ஞானமில்லாமல் அமைதியான பெரியதோர் தேர்தலை பல இலட்சம் மக்களைக்கொண்டு சாதிப்பதென்பது கடினமாகும்.'

தேர்தல்களின் குறிப்பிடத்தக்க ஓர் அம்சம் பல அரசியல் கட்சிகளின் மனப்பூர்வமான ஒத்துழைப்பாகும். தேர்தல்கள் சுதந்திரமாகவும், நேர்மையாகவும், உண்மையான மக்களாட்சிச் சூழ்நிலையிலும் நடந்ததாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது. எல்லாமாகச் சேர்ந்து 3.278 இராச்சிய அசெம்பிளிகளுக்கான இடங்களுக்கு 175,000 வேட்பாளர்களும், லோக் சபை 493 இடங்களுக்கு 1,823 வேட்பாளர்களும் இருந்தார்கள். பெரியவையும் சிறியவையும், தேசிய, பிராந்திய அடிப்படையிலும் மிதப் போக்கும் தீவிரப் போக்குமுடைய 75 கட்சிகளுக்குக் குறைவில்லாமல் கலந்துகொண்டன. இவைகளில் பல புதுக் கட்சிகளாகும். அவைகளில் பல இப்போது மறைந்துவிட்டன. இவையெல்லாம் ஜனநாயகச் சூழ்நிலைக்கும், கருத்துகள் பலவற்றின் தோற்றத்திற்கும், சட்டசபைகள்மூலமாக மக்களுக்குத் தொண்டு செய்ய ஆண்கள்பெண்கள் பலருக்கும் இருந்த ஆர்வத்திற்கும் சான்றாகும்.

தேர்தல்களை அமைதியாகவும், ஒழுங்காகவும், திறமையான முறையிலும் நடத்தியதிலிருந்தே தேர்தல் கழகம் அதனுடைய சுதந்திரத் தன்மையைக் காப்பாற்றியுள்ளது. தேர்தல்களின் போது வாக்காளர் சுதந்திரத்தையும் வாக்கின் மறைமுறையையும் முழுதும் காப்பாற்ற மிகவிரிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டதோடு, அவசியமான முன்னெச்சரிக்கை யாவும் கழகத்தால் எடுத்துக்கொள்ளப்பட்டன. 600 மில்லியன் வாக்குச் சீட்டுகளைச் சுமார் 5௦0,000 சிப்பந்திகள் மிகத் திறமையாகக் கையாண்டுள்ளார்கள்.

காங்கிரஸ் கட்சியை மத்திய ஆட்சியதிகாரத்திற்கு 171,747,300 வாக்காளர்கள் அபரிமிதமான பெரும்பான்மையில் தேர்ந்தெடுத்தார்கள். அக் கட்சி, 489 இடங்களில் 364 இடங்களைப் பெற்று, சுதந்திரத்திற்குப் பிறகு முதல் இந்திய அரசாங்கத்தை ஏற்படுத்திய முதல் கட்சியாயிற்று. இப் பெரு வெற்றி, பொதுமக்களின் விருப்பத்திற்கேற்ற வெற்றியாகும்.

இராச்சியங்களில், காங்கிரஸ் கட்சி ஒருசிலவற்றில் மிக அதிகமான வெற்றியையும், சிலவற்றில் தேவையான அளவு வெற்றியையும் பெற்றது. இங்ஙனம் அசாம், பீஹார், பம்பாய், மத்தியப் பிரதேசம், பஞ்சாப், உத்தரப் பிரதேசம், மேற்கு வங்கம் ஆகிய 'ஏ' பிரிவு இராச்சியங்களில் அரசாங்கம் அமைக்கக் காங்கிரஸ் கட்சிக்கு ஏறக்குறைய 'முன்னதாகக் கையொப்பமிட்ட வெற்றுத் தாளைப்' (carte blanche) போன்ற வெற்றியை வாக்காளர்கள் தந்தார்கள். சென்னை அசெம்பிளியில் 62 இடங்களைப் பெற்றுக் கம்யூனிஸ்ட்டுகள் இரண்டாவதாகவும் ஒரிசா அசெம்பிளியில் 31 இடங்களைப் பெற்றுக் கணதந்திர பரிஷத்தும் வந்ததால், காங்கிரசின் நிலைமை சுடுநீரைக் காலில் ஊற்றிக் கொண்டவன் கதையாக, மந்திரி சபைகள் அமைக்க சுயேச்சை உறுப்பினர்களின் உதவியை நாடவேண்டியதாயிற்று.

'பி' பிரிவு இராச்சியங்களில், பெப்சு (P.E.P.S.U.) இராச்சியத்தில் காங்கிரஸ் கட்சி பரிபூரணப் பெரும்பான்மை பெறாத போது அதைவிட ஏழு குறைவான இடங்களை அகாலி கட்சி பெற்றதால், காங்கிரஸ் கட்சிக்குத் தலைவலி தந்த இராச்சியமாக இருந்தது. இராஜஸ்தானில் குறைந்த அளவு பெரும்பான்மையைப் பெற்றிருந்தது. திருவிதாங்கூர்-கொச்சியில் அது கூட்டு மந்திரிசபைகளை அமைக்கவேண்டியதாயிற்று. 1954-ல் நடைபெற்ற மறுதேர்தலும், அதற்குப் பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சிகளும் சுதந்திரம் கிடைத்த நாள்முதலாகக் காங்கிரஸ் கட்சி அந்த இராச்சியத்தில் எப்போதுமே பிரசித்திபெற்ற அரசியல் கட்சியாக இருந்ததில்லையென்பதைக் காட்டின என்றால், 1957-ல் நடைபெற்ற பொதுத் தேர்தல் அக் கட்சியைச் சிறுபான்மையோருக்குப் பிரதிநிதித்துவமுடையதென்ற அளவிற்குக் கொண்டு வந்து கதையை முடித்தது.

'சி' பிரிவு இராச்சியங்களெல்லாம் காங்கிரசுக்கு அளவற்ற ஆதரவு தந்தன. பொதுவாகப் பார்க்கும்போது, காங்கிரஸ் கட்சி வாக்காளர்களின் நல்லாதரவைப் பெற்றது.

## இரண்டாவது பொதுத் தேர்தல்கள் (1957)
## (The Second General Elections, 1957)

இரண்டாவது பொதுத் தேர்தல்கள்பற்றித் தேர்தல் கழகம் குறிப்பிட்டதாவது: 'முதல் பொதுத் தேர்தல்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இரண்டாவது பொதுத் தேர்தல்கள் புதியனவாகவோ, அல்லது இடர் நிறைந்தவைகளாகவோ இருக்கவில்லை. முதல் பொதுத் தேர்தல்களின்போது சமீபத்தில் சுதந்

திரமடைந்து ஸ்திர நிலைமையடையாத இவ்வளவு பெரிய நாடு எவ்வாறு நாடு முழுவதற்குமான வயதுவந்தோர் வாக்குரிமை யடிப்படையில் நடைபெறும் ஜனநாயகத் தேர்தல்களை வெற்றி கரமாக நடத்தவியலும் என்று மிக உற்சாகத்தோடிருந்தவர் களும் ஐயங்கொண்டிருந்தார்கள்.' இருப்பினும், 1956ஆம் ஆண்டின் இராச்சியச் சீரமைப்பு ஓரளவிற்கு நிச்சயமற்ற நிலைமை யைத் தோற்றுவித்ததோடு, ஒரு கட்டத்தில் திட்டமிட்டவாறு தேர்தல்களை நடத்த சட்ட, நிர்வாக அமைப்பு முறைகளையெல் லாம் பூர்த்தி செய்யவியலுமா என்ற பிரச்சினையையும் தோற்று வித்தது. முதலாவது இந்தியச் சட்டசபையின் ஆயுட்காலத்தை நீட்டிப்பதற்கு அரசியலமைப்பைத் திருத்தவேண்டியது இன்றி யமையாததாகும் என்று மக்களிடையே செல்வாக்குடையவர் களும்கூடப் பேசுமளவிற்கு நிலைமை இருந்தது. ஆனால், தேர்தல் கழகம் அத்தகைய நிலைமையொன்று ஏற்படாதவாறு, முடியா தென்று கருதப்பட்ட கருமத்தை தைரியமாகச் செய்து, இந்திய அரசியலமைப்பு வரலாற்றில் விரும்பத்தகாத முன்மாதிரி நிகழ்ச் சியைத் தவிர்த்தது அதன் சிறப்பிற்குச் சான்றாகும்.

இந் நிலையில், யூனியன் பிரதேசமாகிய இமாசலப் பிரதேச மும், பஞ்சாபிலுள்ள கங்கரா (Kangra) மாவட்டமும் தவிர இதர பகுதிகளிலிருந்து லோக் சபைக்கும் இராச்சிய அசெம்பிளி களுக்கும் 1957ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தோடு தேர்தல்கள் முடிந்தன. முதலாவது தேர்தல்களில் கிடைத்த அனுபவத்தைக் கொண்டு தேர்தல் இயந்திரத்தைச் சீர்திருத்தியமைத்ததானது, 1951–52 பொதுத் தேர்தல்களின்போது 17 வாரகாலத்தில் நடைபெற்ற தேர்தல்கள் 1957-ல் பதினைந்து நாட்களில் முடிக்க சாதகமாக இருந்தது.

தென் இராச்சியமான கேரளாவில் தேர்தல்மூலமாக கம்யூ னிஸ்டு கட்சியை ஆட்சியில் அமர்த்தியதால், இரண்டாவது பொதுத் தேர்தல்கள் புதிய பாராளுமன்ற முறை வரலாற்றை ஏற்படுத்தின. இந் நிகழ்ச்சி, மற்றெல்லாவற்றையும்விட இந்திய ஜனநாயகத்தின் உண்மையான கூட்டாட்சித் தன்மை யைத் தெளிவுபடுத்தியது. உலகிலேயே மிகப் பெரிய மக்களாட்சி நாட்டில் 193 மில்லியன்களுக்கும் அதிகமான வாக்காளர்கள் மத்திய மட்டத்திலும் பதினோர் இராச்சியங்களிலும் காங்கிரஸ் அரசாங்கத்திற்கு வாக்களித்தனர். பரிபூரணப் பெரும்பான்மை யைப் பெறுவதற்குக் கேரளாவில் கம்யூனிஸ்டுகள் தவறினாலும், சுயேச்சையாளர்களின் உதவியோடும் மத்திய அரசாங்கம் தலை யிடுவதில்லை என்ற உறுதிமொழியோடும் நிலையான அரசாங்க மொன்றை அவர்கள் ஏற்படுத்தினார்கள். (எனினும், 1960-ல்

நடைபெற்ற இடைப்பருவத் தேர்தலின்போது கேரள சட்ட சபையிலுள்ள மொத்த இடங்கள் 128-ல் 28ஐ மட்டுமே பெற முடிந்தது.) கிழக்குக் கடற்கரைப் பகுதி இராச்சியமான ஒரிசா வில் காங்கிரஸ் கட்சியோ, அன்றி அதற்கு நேர் எதிர்க்கட்சியான கணதந்திர பரிஷத்தோ பூரணப் பெரும்பான்மையைப் பெற முடியவில்லை. எனினும், மந்திரிசபை அமைப்பிற்குக் காங்கிரஸ் கட்சி சில சிறு கட்சிகளினுடையவும் சுயேச்சையாளர்களி னுடையவும் ஆதரவைப் பெற்றது. அதன் பிறகு காங்கிரஸ் இராச்சியத்தில் நிலையான அமைச்சவையைத் தோற்றுவிக்க கண தந்திர பரிஷத்தோடு சேர்ந்தது.

இரண்டாம் பொதுத் தேர்தல்கள் நடைபெறும்வரை உலகி லேயே மிகப் பெரிய ஜனநாயகச் சோதனையாகக் கருதப்பட்ட முதல் பொதுத் தேர்தல்களையும்விட அவற்றின் பரிமாணம் அதிகரித்தது. வாக்காளர்களின் எண்ணிக்கை 20 மிலியனுக்கு அதிகமாகவும், பதிவான வாக்குகள் 103·3 மிலியனிலிருந்து 112·3 மிலியனாகவும் அதிகரித்தன. பதிவு செய்யப்பட்ட வாக்குகள் மொத்த வாக்காளர்களின் எண்ணிக்கையில் 1951–52-ல் 44·9 விழுக்காடாக இருந்தது இப்போது 49·2 விழுக்காடாக அதிகரித்தது.

இத் தேர்தல்களுக்காக 510 மில்லியன் வாக்குச் சீட்டுகள் தயாரிக்கவும், ஒரு மில்லியன் சிப்பந்திகளை நியமிக்கவும், 2,960,000 ஸ்டீல் பெட்டிகள் பெறவேண்டியும் இருந்ததாகத் தேர்தல் கழகம் தெரிவித்திருக்கிறது.

1956ஆம் ஆண்டிலேற்பட்ட இராச்சியச் சீரமைப்பிற்குப் பிறகு, தேர்தல்கள் அமைதியாக நடைபெறுவதை உத்தேசித்து, புதிதாக அமைக்கப்பட்ட இராச்சியங்களைக் கருத்திற்கொண்டு அங்கீகரிக்கப்பட்ட இராச்சியக் கட்சிகளின் பெயர்களைத் தேர்தல் ஆணைக்கழகம் திருத்தியமைத்தது. இந்திய தேசியக் காங்கிரஸ், பிரஜா சோஷலிஸ்டுக் கட்சி, கம்யூனிஸ்டுக் கட்சி, பாரதீய ஜன சங்கம் ஆகிய நான்கு அகில இந்தியக் கட்சிகளின் நிலைமை அங்ஙனமே இருந்தது. மாற்றியமைக்கப்பட்ட இராச்சியங் களுக்கேற்ப, இராச்சியக் கட்சிகளைப் பொறுத்தவரையிலும் சிறு மாறுதல்கள் செய்யவேண்டியிருந்தது. எங்ஙனமாயினும், இராச் சிய அல்லது பிராந்தியக் கட்சியாக ஏற்றுக்கொள்வதற்குப் பதிவான மொத்த வாக்குகளில் 3 விழுக்காடு வாக்குகளைப் பெற வேண்டுமென்ற தரம், சம்பந்தப்பட்ட இடங்களில் அடிப்படை யாகக் கொள்ளப்பட்டது. இரண்டாவது தேர்தல்களின்போது அசாம் மாநிலத்திற்குள்மட்டும் இயங்கிவந்த சிறிய மிசோ

யூனியன் (Mizo Union) முதல் பலமிக்க காங்கிரஸ் நிறுவனம் உள்ளிட்ட 20 கட்சிகளைச் சேர்ந்த பிரதிநிதிகளை வாக்காளர் தொகுதிகள் தேர்ந்தெடுத்தன.

பாராளுமன்றத்திலுள்ள 494 தேர்ந்தெடுக்கப்படவேண்டிய இடங்களில் 371 இடங்களை, அதாவது, சுமாராக 75 விழுக்காட்டு இடங்களைக் காங்கிரஸ் கட்சி பெற்றதன்மூலம் தேர்தலில் பெரு வெற்றியடைந்தது. முதல் போதுத் தேர்தல்களின்போது கிடைத்ததற்கும் சிறிது அதிகமாகத் தன்னுடைய சாதனையை இப்போது அது ஏற்படுத்தியது. இராச்சிய அசெம்பிளிகளுக்கு நடைபெற்ற தேர்தல்களில் வெற்றிபெற்ற வேட்பாளர்களில் காங்கிரஸ்காரர்கள், சுமார் 65·1 விழுக்காட்டினராவர். இவ் விழுக்காடு ஏறக்குறைய முதல் தேர்தல்களின்போது இருந்த வாறேயாகும். பாராளுமன்றத் தேர்தல்களுக்கான இதர கட்சி களின் புள்ளி விவரங்கள் மிகமிகக் குறைவானவையாகும்.

அசெம்பிளித் தேர்தல்களில், காங்கிரஸ் அல்லாத பிரஜா சோஷலிஸ்டுக் கட்சி, கம்யூனிஸ்டுக் கட்சி, ஜனசங்கம் ஆகிய மூன்று அகில இந்தியக் கட்சிகள் 1951–52 தேர்தல்களில் ஏற் படுத்திய சாதனைகளைக்காட்டிலும் சிறிது அதிக முன்னேற்றத்தை ஏற்படுத்தின. இதர கட்சிகளைக் காட்டிலும் ஒரிசாவில் கண தந்திரப் பரிஷத் காங்கிரசையும்விட அதிகமான இடங்களைப் பெற்றது.

இராச்சியவாரியாக அசெம்பிளித் தேர்தல் முடிவுகளைப் புனராய்வு செய்கின்றபோது சென்ற தடவை சௌராஷ்டிர இராச்சியத்திலும் உத்தரப் பிரதேசத்திலும் 90 விழுக்காடு வெற்றிபெற்ற காங்கிரஸ் அதை மீண்டும் ஏற்படுத்தத் தவறியது. ஆனால், மத்தியப் பிரதேசம், சபையிலுள்ள 288 இடங்களுக்கு 232 காங்கிரஸ்காரர்களைத் தேர்ந்தெடுத்ததன்மூலமாக ஏறத்தாழ அவ் உயர் விழுக்காட்டு வெற்றியைத் தேடித்தந்தது. அதே மாதிரியான சாதனையை அக் கட்சி சென்னை, மைசூர், பஞ்சாப், இராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் அடைந்தது. அம் மாநிலங் களில் அக் கட்சி பெற்ற இடங்கள் முறையே 151 (205 இடங் களுக்கு), 150 (208 இடங்களுக்கு), 118 (154 இடங்களுக்கு), 119 (176 இடங்களுக்கு) இடங்களைப் பெற்றது. காங்கிரசின் வெற்றி கேரளாவில் 34 விழுக்காட்டிலிருந்து மத்தியப் பிரதேசத்தில் 81 விழுக்காடாக மாறுபட்டிருந்தது. இரண்டாம் பொதுத் தேர் தல்கள் இராஜஸ்தானில் காங்கிரசின் நிலையைப் பலப்படுத்தியது. முதல் பொதுத் தேர்தல்களின்போது, காங்கிரஸ் 160 இடங் களுக்கு 82 இடங்களைத்தான் சட்டசபையில் பெற்றிருந்தது.

ஆயினும், காங்கிரசைப் பொறுத்தமட்டிலும் மிக அதிகமான முக்கியத்துவம் வாய்ந்தது, ஆந்திராவில் கம்யூனிஸ்டு கோட்டைகள் என்று கருதப்பட்ட இடங்களில் பெற்ற வெற்றியும், கேரளாவில் தோல்விகள் பலவற்றைப் பெற்று அக் கட்சிக்கு அடுத்த இரண்டாவது கட்சியாக வந்ததுமாகும். ஜனசங்கம், இராம் ராச்சிய பரிஷத் போன்ற கட்சிகள் சார்பிலும் சுயேச்சையாளர்களாகவும் முன்னாள் சமஸ்தானாதிப்திகள் போட்டியிட்ட போதும்,சிறந்த வெற்றியை இராஜஸ்தானில் பெற்ற காங்கிரசை ஒரிசாவில் இணைக்கப்பட்ட சமஸ்தானங்களின் அதிபதிகளின் தலைமையில் கணதந்திர பரிஷத் பூரணப் பெரும்பான்மையைப் பெறமுடியாதவாறு தடுத்துவிட்டது. உண்மையில் காங்கிரஸ் கோட்டைகளாகக் கருதப்பட்ட இடங்களில் கணதந்திர பரிஷத் சில இடங்களைப் பெற்றது. எனினும், 1961-ல் நடந்த இடைப்பருவத் தேர்தல்களில் பரிஷத்திற்கு அதிகமான நட்டங்களேற்படுத்திப் பரிபூரண வெற்றிபெற்றதன் வாயிலாகப் பழைய நிலையினின்றும் அது மீண்டது. ஆந்திராவிலும் இராஜஸ்தானிலும் கிடைத்த பெருவெற்றிகளுக்கு நேர்மாறாகப் பெரிய இராச்சியங்களான உத்தரப் பிரதேசமும் பம்பாயும் 1952-ல் முழு அளவில் காங்கிரசை ஆதரித்த நிலை மாறி, கணிசமான அளவில் காங்கிரஸ் வேட்பாளர்கள் வெற்றிபெறாது தோல்வியுறச் செய்தன. காங்கிரசுக்கு முக்கிய இடமான பிறிதோர் இராச்சியமாகிய பீஹாரும் முதல் தேர்தல்களைவிடக் குறைவான காங்கிரஸ் உறுப்பினர்களையே தேர்ந்தெடுத்தது.

மத்தியப் பிரதேசத்திலும் மைசூரிலும் கம்யூனிஸ்டுகள் செல்வாக்கைப் பெற இயலவில்லை. ஜனசங்கம் உத்தரப்பிரதேசத்தில் மிக அதிகமான வாக்குகளைப் பெற்றது. இந்து மகாசபை இரண்டாவது பொதுத் தேர்தல்களில் தன்னுடைய முக்கியத்துவத்தை இழந்தது.

இரண்டாவது பொதுத் தேர்தல்கள் முடிவுற்றதும் தேர்தல் ஆணைக்கழகம் குறிப்பிட்டதாவது :

'முதல் பொதுத் தேர்தல்கள் கல்வியறிவற்ற மக்களுக்கு வாக்கு என்றால் என்ன என்பதை அறிவுறுத்த உதவி செய்தனவெனின்,இரண்டாம் பொதுத்தேர்தல்கள் அவ்வாக்கை உணர்ந்த நிலையில் விருப்பம்போல அளிக்கத் துணைபுரிந்தன. பிறிதொரு முக்கியமானதும் வரவேற்கத்தக்கதுமான அம்சம் தேர்தல் ஆணைக்கழகமும் தேர்தல்துறைப் பணியினரும் அரசியல் கட்சிகளுடையவும் பொதுமக்களுடையவும் தெளிவான வளர்ந்து வரும் ஆதரவைப் பெற முடிந்திருப்பதாகும். எனவே, மிகக்

குறுகிய காலத்தில் ஜனநாயக சுயாட்சி அரசாங்கத்திற்கு மக்கள் தகுதியுடையவர்களாக இருக்கின்ருர்களா அல்லது பெரும்பாலான மக்கள் படித்தறியாதவர்களாக இருக்கும்போது வயது வந்தோர் வாக்குரிமையை ஏற்படுத்தியது அறிவுடைமையாகுமா என்று இயல்பாகவே எழுந்த பல ஐயப்பாடுகள் சரியற்றவையென்று இப்போது நிரூபிக்கப்பட்டுவிட்டது. தேர்தல், நகரங்களிலோ அல்லது நாட்டுப்புறங்களிலோ இருக்கும் வாக்காளர்கள் மகிழ்ச்சியடைவதற்காக நடத்தப்படும் நவீன கேளிக்கையாகக் கருதப்படாமல், அதிகாரத்தைக் கைப்பற்ற பல கட்சிகளுக்கிடையிலும், வேட்பாளர்களிடையிலும், நடைபெறும் அரசியற் போராட்டமாக ஏற்பட்டிருப்பதோடு, அதன் முடிவு போட்டியிடும் வேட்பாளர்களில் யார் யாரை வாக்காளர்கள் இறுதியாகத் தேர்ந்தெடுக்கிருர்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது என்பதைப் பார்வையாளர்கள் எல்லோரும் இப்போது ஏற்றுக்கொள்கிருர்கள். பின்தங்கிய பகுதிகளிலும் வாக்காளர்களால் காட்டப்பட்ட சிறந்த அரசியலறிவு, அரசியல் மாணவர்களேயும் நடுநிலைமைப் பார்வையாளர்களேயும், திகைப்படையச் செய்திருக்கிறது.'

தேர்தல் உயிரோட்டமுடையது. சூழ்நிலைகளுக்கும் தேவைகளுக்குமேற்ப அது வளர்கிறது. இந்தியாவில்கூட முதல் தேர்தல்களில் பின்பற்றிய முறை அதிசயிக்கத்தக்க மாறுதல்களை அடைந்திருக்கிறது. பரிபூரணத் தன்மையை அடையும் வரை, வருங்காலத்திலும் பல மாறுதல்கள் ஏற்படும்.

# 38. குறிப்பிட்ட வகுப்புகளைப்பற்றிய தனி ஏற்பாடுகள்

இந்திய அரசியல் வாழ்க்கையில் ஒரு தனி அம்சம், ஆங்கிலேயர் ஆட்சியின்கீழ் இருந்த வகுப்புவாத வாக்காளர் தொகுதிகள். தேசியக் கருத்து அதற்கெதிராக இருந்தது. இருப்பினும், அது தொடர்ந்திருந்ததோடல்லாது காலப்போக்கில் எந்த நாட்டு வரலாற்றிலும் காணப்படாத அளவிற்கு வகுப்புவாத அரசியல் முறையொன்றை ஏற்படுத்தியது. இதன்படி, இந்தியாவிலுள்ள முகமதியர்கள், சீக்கியர்கள், இந்தியக்கிறிஸ்துவர்கள் போன்ற அனேகமாக ஒவ்வொரு சமயச் சிறுபான்மையினரும் சட்டசபைகளில் அவர்களுக்காகக் குறிப்பிட்ட சில இடங்கள் ஒதுக்கப்பட்டிருந்தனர். இச் சலுகை ஆங்கிலோ-இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டது அட்டவணைச் சாதியினரும் 1935ஆம் அரசியலமைப்புச் சட்டப்படி தனி சமூகத்தினராக நடத்தப்பட்டுத் தனிப்பிரதிநிதித்துவம் தரப்பட்டனர். ஆனால், காந்தியடிகளின் வரலாற்றுச் சிறப்புடைய 1933ஆம் ஆண்டு உண்ணாவிரதம் அதைத் தடுத்து, கூட்டு வாக்காளர் தொகுதிகள் அடிப்படையைக்கொண்ட தேர்தல் தொகுதிகளில் இதர இந்துக்களோடு அட்டவணைச் சாதியினருக்கு இடங்கள் ஒதுக்கப்பட்டன. 1947-ல் இந்தியா சுதந்திரம் பெற்றபோது இந் நிலைமையே இருந்தது.

சமய அடிப்படையில் நாடு இந்தியா, பாகிஸ்தான் என்று பிரிக்கப்பட்டபோதிலும், சமயச் சிறுபான்மையினர் பிரச்சினையைப் பிரிவினை தீர்த்துவைக்கவில்லை. பாகிஸ்தான் 'இஸ்லாமிய அரசாயிற்றெனினும் பிரிக்கப்படாத இந்தியாவிலிருந்த முகமதியரனைவரும் அவ்வரசிற்குக் குடிபெயர்ந்து செல்லவில்லை சுமார் நாற்பது மில்லியன் முகமதியர்கள் அதற்குப் பிறகும் இந்தியாவிலிருந்தனர். இஃதன்றியும், கிறிஸ்துவர்கள், சீக்கியர்கள், சமணர்கள், பார்சிகள்போன்ற இதர சமயங்களைச் சேர்ந்த

சிறுபான்மைக் குழுவினருமிருந்தனர். அட்டவணைச் சாதியினரும் ஆதிவாசிகளும் தனிச் சலுகை காட்டப்படவேண்டியிருந்த சமயச் சிறுபான்மையினருக்குச் சமமாக அதன் பிறகும் நடத்தப் பட்டனர். 1947-ல் அரசியலமைப்புச் சபை இப் பிரச்சினையை எடுத்தபோது இவ் விஷயத்தைப்பற்றிய பழங்கருத்துகளி னின்றும் அடிப்படை வேற்றுமை கிடையாது. சர்தார் படேலைத் தலைமையாகக் கொண்ட ஆதார உரிமைகளையும் சிறுபான்மை யினரையும்பற்றிய ஆலோசனைக் குழு என்ற பெயருடைய ஒரு குழுவை, அப் பிரச்சினையைப்பற்றிய பல அம்சங்களை ஆராய்ந்து சபைக்குச் சிபாரிசுகளைச் செய்யவும், அச் சிபாரிசுகளுக்குத் தேவையான ஏற்பாடுகளை அரசியலமைப்பில் ஏற்றுக்கொள்ள வும், அரசியல் நிர்ணய சபை ஏற்படுத்தியது. அக் குழு சிறு பான்மைச் சமூகங்களுக்கு ஏதேனுமோர் வடிவத்தில் இட ஒதுக் கல்கள் செய்வதைப் பொதுவாக ஆதரிக்கும் விளைவானதோர் அறிக்கையைத் தயாரிக்க இரண்டாண்டுக் காலமெடுத்துக் கொண்டது. இதற்கிடையில் சுதந்திரமும் நாட்டுப் பிரிவினையை யொட்டியேற்பட்ட பிரச்சினைகளும் புது நோக்கமொன்றை ஏற்படுத்தியதோடு, அசெம்பிளியிலிருந்த பல சிறுபான்மைச் சமூகங்களைச் சேர்ந்த பல உறுப்பினர்களின் கருத்திலும் கணிச மான மாறுதலை ஏற்படுத்தின. வங்கத்தைச் சேர்ந்த இந்தியக் கிறிஸ்துவத் தலைவரான எச். சி. முகர்ஜி என்பார், சட்டசபை களின் இட ஒதுக்கல்கள் செய்வதற்கான உத்தேசத்தைக் கைவிட வேண்டுமென்று முதன்முதலாகக் கேட்டுக்கொண்டார். இப் பிரேரணைக்கு இன்னும் பலரிடமிருந்து விரைவாக ஆதரவு கிடைக்கவே, அரசியல் நிர்ணய சபையும் அரசியலமைப்பில் வகுப்புவாதக் கொள்கையடிப்படையில் இட ஒதுக்கல்கள் செய்ய வேண்டியதில்லையென்று தீர்மானித்தது.

ஆலோசனைக் குழுவின் சிபாரிசுகளைப்பற்றிய விவாதங்களின் அடிப்படையில் அரசியல் நிர்ணய சபையால் செய்யப்பட்ட முடிவுகள், இந்திய அரசியலில் புதுப்போக்கொன்றை ஏற்படுத் தின. இப் புதுப்போக்கின் முக்கியமான அம்சங்களாவன: (1) தனி வாக்காளர் தொகுதிகள் ஒழிப்பு; (2) சட்டசபைகளில் இடங்கள் ஒதுக்குவதைக் கைவிடல்; (3) சிறுபான்மையினருக்குத் தனிப் பாதுகாப்புகள் ஏற்படுத்துவதைக் கைவிடுதல் ஆகியவைக ளாகும். இதற்குச் செய்யப்பட்ட விலக்குகள், தனித்தன்மையை ஒவ்வொன்றுமுடையவையாயிருந்த அட்டவணைச் சாதியினர், அட்டவணை மலைவாசிகள், ஆங்கிலோ-இந்தியர்கள் ஆகிய மூன்று சமூகங்களைப் பற்றியவையாகும். இவைகள் சம்பந்தப்பட்ட விஷ யங்களிலும் தனி ஏற்பாடுகள் அரசியலமைப்புத் தொடக்கத்தி

லிருந்து பத்தாண்டுக் காலத்திற்குமட்டுமே அளிக்கப்பட்டன. இவ்வேற்பாடுகள் அரசியலமைப்பின் தனி அத்தியாயமொன்றில் எழுதப்பட்டுள்ளன.

## சட்டசபைகளில் ஆங்கிலோ-இந்தியர் பிரதிநிதித்துவம்

மக்கள் சபைக்கு ஆங்கிலோ-இந்தியச் சமூகத்தினரைச் சேர்ந்த அதிகபட்சமான இரண்டு உறுப்பினர்களை அச் சமூகத்தினர் தேவையான அளவிற்குப் பிரதிநிதித்துவம் பெறவில்லையென்று கருதினால், ஜனாதிபதி நியமிப்பதற்கு அரசியலமைப்பு அவருக்கு அதிகாரம் வழங்குகிறது. ஜனத்தொகை அடிப்படையில் பார்க்கின்றபோது, பாராளுமன்றத்தில் ஓர் இடத்திற்குக் கூட ஆங்கிலோ-இந்திய சமூகத்தினருக்கு உரிமை கிடையாது. பொதுத் தேர்தல்களில் ஓர் ஆங்கிலோ-இந்தியர்கூடத் தேர்ந்தெடுக்கப்படவில்லையென்றால்தான், அரசியலமைப்பு ஏற்பாட்டின்படி ஜனாதிபதி செயலாற்றுவார். தற்போது மக்கள் சபையில் நியமனம் செய்யப்பட்ட இரண்டு ஆங்கிலோ-இந்தியர்கள் இருக்கிறார்கள்.

இந் நியமனங்களைச் செய்வதற்கு ஜனாதிபதிக்கு அதிகாரம் தரப்பட்டிருப்பதுபோன்றே, சட்டசபையில் அச் சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்குப் போதுமான பிரதிநிதித்துவமில்லையென்றும் அச் சமூகத்தினருக்குப் பிரதிநிதித்துவம் அவசியமென்றும் கருதினால், எத்தனை பேர்கள் நியமிக்கப்படவேண்டுமோ அத்தனை பேர்களை நியமிக்க இராச்சியமொன்றின் கவர்னருக்கு 363ஆம் விதியின்கீழ் அதிகாரமளிக்கப்பட்டிருக்கிறது. தற்போது மேற்கு வங்க அசெம்பிளியில் நால்வரும், ஆந்திரப் பிரதேசம், பீஹார், பம்பாய், கேரளம், மத்தியப் பிரதேசம், சென்னை, மைசூர், உத்தரப்பிரதேச சட்டமன்றங்கள் ஒவ்வொன்றிலும் ஒருவரும் நியமிக்கப்பட்ட ஆங்கிலோ-இந்திய உறுப்பினர்களாக இருக்கின்றார்கள். இங்ஙனம், எந்தெந்த இராச்சியங்களில் அச் சமூக மக்களின் தொகை இரண்டாயிரத்திற்கும் அதிகமாக இருக்கிறதோ அந்த இராச்சியங்களெல்லாவற்றிலும் அச் சமூகத்தினருக்குப் பிரதிநிதித்துவம் தரப்பட்டிருக்கிறது.

## பணித்தொகுதிகளில் இடமொதுக்கல்

சில பணித்தொகுதிகளில் ஆங்கிலோ-இந்தியச் சமூகத்தினருக்கு உத்தியோகங்களைப் பொறுத்தவரை 336ஆம் விதியின்கீழ் விசேஷச் சலுகை தரப்பட்டிருக்கிறது. அதன்படி, அரசியலமைப்புத் தொடங்கியதிலிருந்து முதல் இரண்டாண்டுகளுக்கு 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதிக்கு முன்புவரையிலும் எவ்வடிப்படை பின்பற்றப்பட்டதோ அவ்வடிப்படையில்

அவர்கள் இரயில்வேக்கள், ஆயத்துறை, தபால்தந்திப் பணித் தொகுதிகளில் உத்தியோகத்திற்கு நியமிக்கப்பட்டார்கள். இவ் வொதுக்கல் முறை ஒவ்வோர் ஈராண்டுக் காலத்திற்கும் பிறகு பத்து விழுக்காடாகக் குறைக்கப்பட்டு, பத்தாண்டுகட்குப் பிறகு முழுவதுமாக நிறுத்தப்படவேண்டுமெனப்பட்டது. அத்தகைய ஒதுக்குமுறை, அச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள், இதர சமூகங் களைச் சேர்ந்த உறுப்பினர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது திறமையடிப்படையில் சிறந்தவர்களாக இருப்பார்களாயின், எந்தவொரு பதவிக்கும் நியமிக்கப்படுவதற்குத் தடையாக இருக்காது. ஆயினும், ஆங்கிலோ-இந்தியர்களுக்காக ஒதுக்கப் பட்ட பதவிகளுக்கு அவர்களிடமிருந்து கிடைத்த பதில் மிகமிகக் குறைவானதாக இருக்கிறதென்பதைக் குறிப்பிட வேண்டும்.

## கல்வி வசதி மானியங்கள்

அரசியலமைப்பின் 337ஆம் விதியின்கீழ்ப் பத்தாண்டுக்காலத் திற்கு விசேஷக் கல்வி மானியங்கள் பெற ஆங்கிலோ-இந்தியச் சமூகத்திற்கு உரிமையளிக்கப்பட்டது. 1947-ல் அச் சமூகம் எந்த அளவிற்கு உதவிபெற்று வந்ததோ அந்த அளவிற்கு முதல் மூன்றாண்டுகளில் உதவிமானியங்கள் வழங்கப்படும். அதன்பிறகு மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை விழுக்காடாகக் குறைக்கப்பட்டு, பத்தாண்டுக்கால முடிவில் முழுவதும் நிறுத்தப்படும். அல்லா மலும், அத்தகைய மானியங்களைப் பெறும் ஆங்கிலோ-இந்தியக் கல்வி நிலையங்கள் ஆண்டுதோறும் இதர சமூகங்களைச் சேர்ந்த வர்களை நாற்பது விழுக்காட்டளவிற்காவது சேர்த்துக்கொள்ள வேண்டும்.

இவ்வேறுபாடுகள், ஆங்கிலோ-இந்தியச் சமூகத்தைப் போன்ற சிறு சமூகங்களுக்கு உற்சாகமூட்டுவதற்காக அவர்க ளுடைய தனிநலன்களை அரசியலமைப்பில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்ற, அரசியலமைப்பை ஆக்கியவர்களுக்கு இருந்த உண்மையான நோக்கத்தைத் தெளிவுபடுத்துகின்றன. 1947-ல் ஆங்கிலேயர்கள் இந்தியாவைவிட்டு வெளியேறியபொழுது, ஆங்கிலோ-இந்தியர்கள் தங்களுடைய எதிர்காலத்தைப்பற்றி அச்சமுடையவர்களாக இருந்தனர். எனினும், அச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் தங்களுடைய நலன்கள் பத்திரமாக இருந்த தைச் சீக்கிரமாக உணர்ந்ததோடு, தன்னம்பிக்கையுடைய இந்தியக் குடிகளாக அவர்கள் தொடர்ந்திருப்பதற்காகத் தனிச் சலுகைகளைத் தருவதற்கும் சுதந்திர இந்தியத் தலைவர்கள் தயாராக இருந்ததையும் உணர்ந்தார்கள்.

## அட்டவணைச் சாதியினரும் ஆதிவாசிகளும்

## (The Scheduled Castes and Tribes)

1951ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்குப்படி, அரசியலமைப்பின் விசேஷ ஏற்பாடுகளடிப்படையில் அனுமதிக்கப்பட்ட நன்மைகளைப் பெறச் சுமார் 76 மிலியன் மக்கள் தகுதியுடையவர்களாக இருந்தார்கள். இவர்களில் அட்டவணைச் சாதியர் மட்டும் 51·7 மிலியன்கள் ஆவார்கள். அவர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து நாடெங்குமிருக்கின்றனர். அட்டவணையில் கண்ட ஆதிவாசிகள் சுமார் 19 மிலியன்கள் ஆவர். அவர்களில் பெரும்பாலோர் பீஹார், அசாம், மத்தியப் பிரதேச இராச்சியங்களிலுள்ளார்கள். தண்டனைபெற்ற முன்னாள் ஆதிவாசிகளையும் சேர்த்துப் பின் தங்கிய வகுப்பினர்களைப்பற்றிய சரியான விளக்கம் இன்னும் தரப்படவில்லை என்றாலும், அவர்கள் 5 மிலியன்கள் இருப்பார்களென நம்பப்படுகிறது.

### சட்டசபைகளில் இட ஒதுக்கல்

330ஆம் விதியின்கீழ் அட்டவணைச் சாதியினருக்கும் ஆதிவாசிகளுக்கும் மக்கள் சபையில் சில இடங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இவ்விடங்களின் எண்ணிக்கை அவர்களின் மக்கள் தொகை அடிப்படையில் ஒதுக்கப்பட்டு, ஒவ்வோர் இராச்சியத்திற்கும் ஒதுக்கப்பட்ட இடங்களைப்பற்றிய பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. முன்பு குறிப்பிட்டவாறு, இச் சமூகங்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் கிடையா. அவர்கள் பொது இடத்திற்கும் ஒதுக்கப்பட்ட இடங்களுக்குமாக இரு வாக்குகளையுடைய வாக்காளர்களால் இரட்டைத் தேர்தல் தொகுதிகளில் (plural constituencies) தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.[1] தற்போது இச் சமூகங்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்கள் 107 இருக்கின்றன. இவற்றில் 76 இடங்கள் அட்டவணைச் சாதியினருக்காக ஒதுக்கப்பட்டிருக்கின்றன; எஞ்சியவை ஆதிவாசிகளுக்காகும். பின்வரும் அட்டவணை இராச்சியவாரிப் பிரதிநிதித்துவத்தைக் காட்டும்:

அட்டவணையில் கண்ட சாதியினர், ஆதிவாசிகளினுடைய அரசியல் நலன்கள், பாராளுமன்றத்தில்மட்டுமல்லாது இராச்சிய சட்டசபைகளிலும் இட ஒதுக்கல்மூலமாகப் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. இங்குப் பின்பற்றப்பட்ட முறையும் அதே முறை

[1] மூலச் சட்டத்திற்குக் கொண்டுவரப்பட்ட சமீபத்திய திருத்தமொன்று, அட்டவணைச் சாதியினருக்கும் ஆதிவாசிகளுக்கும் இரட்டையுறுப்பினர் தொகுதிகளைக் கைவிடவும், ஒற்றையுறுப்பினர் தொகுதிகளை ஏற்படுத்தவும் வகை செய்கிறது.

யாகும். அதாவது, இரட்டையுறுப்பினர் தொகுதிகளும், கூட்டு வாக்காளர் தொகுதிகளும், மக்கள்தொகை அடிப்படை விகிதாசார பிரதிநிதித்துவமுமேயாகும். பின்வரும் அட்டவணை ஒவ்வோர் இராச்சிய அசெம்பிளியிலும் ஒதுக்கப்பட்டுள்ள இடங்களைக் காட்டும்:

## தனி ஏற்பாடுகள்

### மக்கள் சபை

| இராச்சியம் அல்லது யூனியன் பிரதேசத்தின் பெயர் | மொத்த இடங்கள் | ஒதுக்கப்பட்ட இடங்களின் எண்ணிக்கை | |
|---|---|---|---|
| | | அட்டவணைச் சாதியினர் | அட்டவணை ஆதிவாசிகள் |
| ஆந்திரப் பிரதேசம் ... | 43 | 6 | 2 |
| அசாம் ... | 12 | 1 | 2 |
| பீஹார் ... | 53 | 7 | 5 |
| குஜராத் ... | 22 | 1 | 3 |
| கேரளம் ... | 18 | 2 | ஒன்றுமில்லை |
| மத்தியப் பிரதேசம் ... | 36 | 5 | 7 |
| சென்னை ... | 41 | 7 | ஒன்றுமில்லை |
| மகாராட்டிரம் ... | 44 | 6 | 2 |
| மைசூர் ... | 26 | 3 | ஒன்றுமில்லை |
| ஒரிசா ... | 20 | 4 | 4 |
| பஞ்சாப் ... | 22 | 5 | ஒன்றுமில்லை |
| இராஜஸ்தான் ... | 22 | 3 | 2 |
| உத்தரப் பிரதேசம் ... | 86 | 18 | ஒன்றுமில்லை |
| மேற்கு வங்கம் ... | 36 | 6 | 2 |
| யூனியன் பிரதேசங்கள்: | | | |
| டெல்லி ... | 5 | 1 | ஒன்றுமில்லை |
| இமாசலப் பிரதேசம் ... | 4 | 1 | ஒன்றுமில்லை |
| மணிபுரி ... | 2 | ஒன்றுமில்லை | 1 |
| திரிபுரா ... | 2 | ஒன்றுமில்லை | 1 |
| மொத்தம் | 494 | 76 | 31 |

மக்கள் சபையிலும் இராச்சியச் சட்ட அசெம்பிளிகளிலும் குறிப்பிட்ட சில டங்களை அட்டவணைச் சாதியினருக்கும் ஆதிவாசிகளுக்கும் ஒதுக்கியிருப்பதால், அவர்களுக்குக் கிடைக்கக் கூடிய இடங்கள் அதிகபட்சமாக அவ்வளவே என்பது பொருளன்று. அதற்கு மாறாக, இச் சமூகங்களைச் சேர்ந்த உறுப்பினர்கள்

## சட்டசபைகள்

## (Legislative Assemblies)

| இராச்சியம் | | அசெம்பிளியிலுள்ள இடங்கள் | ஒதுக்கப்பட்ட இடங்கள் | |
|---|---|---|---|---|
| | | | அட்டவணைச் சாதியினர் | அட்டவணை ஆதிவாசிகள் |
| ஆந்திரப் பிரதேசம் | ... | 301 | 43 | 11 |
| அசாம் | ... | 108 | 5 | 26 |
| பீஹார் | ... | 318 | 40 | 32 |
| குஜராத் | ... | 132 | 10 | 17 |
| கேரளம் | ... | 126 | 11 | 1 |
| மத்தியப் பிரதேசம் | ... | 288 | 43 | 54 |
| சென்னை | ... | 205 | 37 | 1 |
| மகாராட்டிரம் | ... | 264 | 33 | 14 |
| மைசூர் | ... | 208 | 28 | 1 |
| ஒரிசா | ... | 140 | 25 | 29 |
| பஞ்சாப் | ... | 154 | 33 | ஒன்றுமில்லை |
| இராஜஸ்தான் | ... | 176 | 28 | 20 |
| உத்தரப் பிரதேசம் | ... | 430 | 89 | ஒன்றுமில்லை |
| மேற்குவங்காளம் | ... | 252 | 45 | 15 |
| மொத்தம் | | 3,102 | 470 | 221 |

அவர்களுடைய விருப்பத்திற்கேற்ப மேலும் எத்தனை இடங்களுக்கு வேண்டுமானாலும் போட்டியிடத் தடை கிடையாது. உண்மையில், சென்ற பொதுத்தேர்தல்களின்போது அட்டவணைச் சாதியினருக்கும் ஆதிவாசிகளுக்கும் ஒதுக்கப்பட்டிருந்த இடங்களைக்காட்டிலும் மேலும் அதிகமாக முறையே ஆறு உறுப்பினர்களும் மூன்று உறுப்பினர்களும் லோக் சபையில் ஒதுக்கப்படாத இடங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இவ்வாறு 494 தேர்ந்தெடுக்கப்படும் இடங்களைக் கொண்டுள்ள சபையில் இவ்விரு சமூகங்களைச் சேர்ந்த உறுப்பினர்கள் மொத்தத்தில் 116 இடங்களைப் பெற்றார்கள். அங்ஙனமே, இராச்சியச் சட்டசபைகளுக்கும் ஒதுக்கப்பட்ட இடங்களுக்கும் அதிகமாகப் பொது இடங்களில் பதினைந்து பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இவர்களில் எட்டுப் பேர்கள் அட்டவணைச் சாதியினரும், இதரர்கள் அட்டவணை ஆதிவாசியினருமாவர். இவ்வாறு இராச்சிய அசெம்பிளிகளிலுள்ள 3,102 இடங்களில் 706 இடங்களை இச் சமூகங்களைச் சேர்ந்தவர்கள் பெற்றிருந்தார்கள். இப் புள்ளி

விவரங்கள், சென்ற பொதுத் தேர்தல்கள் முடிந்தபிறகு இச் சமூகங்களைச் சேர்ந்தவர்கள் பெற்றிருந்த புள்ளிவிவரங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அதிகமானவையாகும் என்பது இங்குக் குறிப்பிடத்தகுந்ததாகும்.

## பணிச் சலுகைகளில் தனிச் சலுகை

## (Special Consideration in Services)

335ஆம் விதியின்கீழ் யூனியன் அரசாங்கத்திற்கும் இராச்சிய அரசாங்கங்களுக்கும் இச் சமூகங்களைச் சேர்ந்தவர்களுக்கு, நிர்வாகத் திறமை பாதுகாக்கப்படவேண்டியதைக் கருத்தில் கொண்டு, பணித்தொகுதிகளில் தனிச்சலுகை தரவேண்டுமென்னும் பொது நெறியானது தரப்பட்டிருக்கிறது. அதன் பொருள் அட்டவணைச் சாதியினர் அல்லது ஆதிவாசிகளைச் சேர்ந்த வேட்பாளர்கள் (candidates) இராச்சியத்திலுள்ள பல பணித்தொகுதிகளிலுள்ள பல பதவிகளுக்குத் தேவையென்று முடிவு செய்யப்படுகின்ற குறைந்தபட்சக் கல்வித் தகுதிகளையேனும் பெற்றிருக்க வேண்டுமென்பதாகும். எனினும், இச் சமூகங்களைச் சேர்ந்தவர்களுக்கென அரசியலமைப்படிப் படையில் விழுக்காட்டெல்லையெதுவும் நிர்ணயஞ் செய்யப்படவில்லை என்பதும் கவனிக்கப்படவேண்டும். இச் சலுகை எவ்வளவு காலத்திற்குத் தரப்படவேண்டுமென்னும் வரையறை செய்யப்படவில்லை. இச் சமூகங்களைச் சேர்ந்தோர் கல்வி, பொருளாதாரத் துறைகளில் கணிசமான முன்னேற்றமும், இதர இந்திய மக்களுக்குச் சமமான நிலையும் அடையும்வரை அத்தகைய சலுகையையும் ஆதரவையும் அரசு தொடர்ந்து அளிக்கவேண்டுமென்பது இயற்கையேயாகும்.

அரசியலமைப்பு ஏற்பாடுகளடிப்படையில் அட்டவணைச் சாதியினர், ஆதிவாசிகளினுடைய நிலைமையை இந்திய அரசாங்கம் 1950ஆம் ஆண்டில் மறு பரிசீலனை செய்தது. அதன் விளைவாக, திறந்த போட்டி அடிப்படையில் அகில இந்தியப் பணித்தொகுதிகளுக்கு அவர்களுடைய பங்கு பன்னிரண்டரை விழுக்காடாகவும், நேர்முகமாக ஆள் சேர்க்கும் முறையடிப்படையில் 16⅔ விழுக்காடாகவும் நிர்ணயிக்கப்பட்ட புதுக் கொள்கையொன்று ஏற்படுத்தப்பட்டது. உத்தியோக நியமனத்திற்கு அவர்களுக்காக விதிக்கப்பட்டிருந்த அதிகபட்ச வயதடிப்படையும் மூன்றாண்டுகள் அதிகரிக்கப்பட்டது. இவ் விதி 1952-ல் மேலும், மற்றவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட அதிகபட்ச வயதடிப்படையைவிட ஐந்தாண்டுகளாகத் தளர்த்தப்பட்டது. இவ்வெல்லா ஏற்பாடுகளும் அரசினர் உத்தியோகங்களுக்குச் சம

வாய்ப்புத் தரவேண்டுமென்னும் ஆதார உரிமைக்கு விலக்குகள் ஏற்படுத்தும் 16 (4)ஆம் விதிக்கு உட்பட்டவையாகும்.

மேலும், பீஹார், மத்தியப் பிரதேசம், ஒரிசா ஆகிய இராச்சியங்களில் ஆதிவாசியினர் நலன்களுக்குப் பொறுப்பேற்கும் அமைச்சர் ஒருவர் இருக்கவேண்டுமென்னும் அரசியலமைப்புத் தனி ஏற்பாடொன்றும் இருக்கிறது. அவ்வமைச்சர் அட்டவணைச் சாதியினர், பிற்பட்ட வகுப்பினர் பொதுநலங் கவனிக்கும் பொறுப்பையும் ஏற்கலாம். தற்போது, இச் சமூகங்களின் பொதுநலனுக்காக அனேகமாக எல்லா இராச்சியங்களிலும் தனி அமைச்சரகங்களோ அல்லது துறைகளோ இருக்கின்றன. இச் சமூகங்களைச் சேர்ந்த 17 அமைச்சர்களும், 12 துணை அமைச்சர்களும் இராச்சியங்களில் 1958-ல் இருந்தார்கள். இவர்கள் தவிர, யூனியன் அரசாங்கத்தில் இரு அமைச்சர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் அமைச்சரவை அமைச்சராகவும் (Cabinet Minister) பிறிதொருவர் துணையமைச்சராகவும் இருக்கிறார்.

## தனி அலுவலர்
## (Special Officer)

அட்டவணைச் சாதியினர், ஆதிவாசிகள் ஆகியோருக்கு அரசியலமைப்பில் செய்யப்பட்டிருக்கும் பாதுகாப்புகள் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் ஆராய்ந்தறிவதற்காகத் தனி அலுவலரொருவரை நியமிக்க 338ஆம் விதியின்கீழ் ஜனாதிபதி அதிகாரமளிக்கப்பட்டிருக்கிறார். அப் பாதுகாப்புகளாவன : (1) சட்டசபைகளில் பிரதிநிதித்துவம், (2) பணித்தொகுதிகளில் பிரதிநிதித்துவம்பற்றிய கோரிக்கைகள், (3) ஆதார உரிமைகள் நடைமுறைப்படுத்தப்படல். இவைகளைப்பற்றி அத் தனி அலுவலர் ஜனாதிபதிக்குத் தவறாது அறிக்கை அனுப்பவேண்டும். இவ் வேற்பாட்டின்கீழ், தனி அலுவலர் பின்தங்கிய வகுப்பினர்கள், ஆங்கிலோ-இந்தியச் சமூகத்தினர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் பாதுகாப்புகள், நலன்கள்பற்றியும் பொறுப்பொப்படைக்கப்பட்டிருக்கிறார்.

இவ்வேற்பாட்டின்கீழ் 'அட்டவணைச் சாதியினர் கமிஷனர்' என்ற பெயரில் முதல் தனி அலுவலர் 1950ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் நியமிக்கப்பட்டார். அவர் ஒவ்வொரு பிராந்தியத்திற்கும் தனித்தனியாகப் பொறுப்புடைய பத்து உதவிப் பிராந்தியக் கமிஷனர்களால் உதவி செய்யப்படுகிறார். அக் கமிஷனர் இதுவரையிலும் பத்து அறிக்கைகளை ஜனாதிபதிக்குச் சமர்ப்பித்திருக்கிறார். அவைகளில் கடைசியாகச் சமர்ப்பிக்கப்பட்டது 1961ஆம்

ஆண்டு ஜூன் மாதத்திலாகும். இவ்வறிக்கைகள் பாராளுமன்றத்தின் ஒவ்வொரு சபையிலும் வைக்கப்படவேண்டும்.

## ஆய்வாணைக் கழகங்கள்
## (Commissions of Investigation)

அரசியலமைப்பின் 340ஆம் விதியின்கீழ் இரு ஆணைக் கழகங்களை ஜனாதிபதி நியமிக்க வகைசெய்யப்பட்டிருக்கிறது. அவற்றிலொன்று அட்டவணையில் கண்ட பிரதேசங்களின் நிர்வாகம் பற்றியும், அட்டவணையில் கண்ட ஆதிவாசிகளின் பொதுநலன் பற்றியும் ஆராய்ந்து ஜனாதிபதிக்கு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும். பிறிதொன்று, சமூக, கல்வித் துறைகளில் மோசமாக இருப்போரின் நிலைமைகளை ஆராய்ந்து, அவர்களுடைய இடுக்கண்களை அகற்ற யூனியனும் இராச்சியங்களும் என்னென்ன நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவேண்டுமென்ற சிபாரிசுகளைச் செய்யவேண்டும். அவ்வறிக்கைகள், அவைகள் சம்பந்தமாக அரசாங்கம் என்ன நடவடிக்கையை எடுத்துக்கொண்டதென்று விளக்கும் அறிக்கைகளோடு பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும் தாக்கல் செய்யப்படவேண்டும். அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்ததிலிருந்து பத்தாண்டுகளுக்குள் முதலாவதாகச் சொல்லப்பட்ட ஆணைக்கழகத்தை நியமிக்கவேண்டியது கட்டாயமானதாகும். மேலும், அவ்வாணைக் கழகத்தின் சிபாரிசுகளைச் செயற்படுத்துமாறு இராச்சியங்களுக்கு ஆணைகள் பிறப்பிக்க யூனியன் நிர்வாகத்திற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. இரண்டாவதாகச் சொல்லப்பட்ட பின்தங்கிய வகுப்புகளைப் பற்றிய ஆணைக்கழகம் ஏற்படுத்துவது விருப்பத்தைப் பொறுத்ததாகும். யூனியன் நிர்வாகம் அதனுடைய சிபாரிசுகளைச் செயற்படுத்துமாறு இராச்சியங்களுக்கு ஆலோசனைதான் சொல்ல முடியும். எனினும், இவைகளெல்லாம், பின்தங்கிய வகுப்பினர்கள் அட்டவணையில் கண்ட ஆதிவாசிகளின் முன்னேற்றத்திற்கான ஆதார உரிமைகள், நெறிசெய் நியதிகள் எவ்வாறு செயற்படுத்தப்படுகின்றனவென்பதை ஆராய்வதற்குத் தேவையான நிறுவனத்தை ஏற்படுத்துவதற்காகக் கருதப்பட்டவையென்பதை இங்கு வற்புறுத்தல் அவசியமாகும்.

பின்னிலை வகுப்பினர் ஆணைக்கழகத்தை அரசியலமைப்பின் 340ஆம் விதியின்கீழ் 1953 ஜனவரியில் ஜனாதிபதி நியமித்தார். அக் கழகம் அட்டவணையில் கண்ட சாதியினர், ஆதிவாசிகளோடு மக்களில் இன்னும் எந்தெந்தப் பிரிவினர் சமூக, கல்வித் துறைகளில் பின்னிலை வகுப்பினர்களாக நடத்தப்படவேண்டுமென்பதற்கான அடிப்படையைத் தீர்மானிக்குமாறு பணிக்கப்பட்டது.

அவ்வடிப்படைக்கேற்ப. அத்தகைய பிரிவினர்களையும், உத்தேசமாக அவர்களுடைய எண்ணிக்கையையும், அவர்கள் வாழும் பிரதேசங்களையும் கொண்ட பட்டியலொன்றைத் தயாரிக்கும் பொறுப்பும் அக் கழகத்திடம் விடப்பட்டது. இரண்டாண்டு காலம் உழைத்து, அக்கழகம் தன் அறிக்கையை சமர்ப்பித்தது. ஆனால், அரசாங்கம் மிகக் கவனமாக அக் கழகத்தால் செய்யப்பட்ட சிபாரிசுகளைப் பரிசீலனை செய்து, அவைகளை நிறைவேற்ற இயலாதென்று தள்ளிவிட்டது. அக் கழகத்தின் முக்கியமான இடர்ப்பாடு, சமூக, கல்வித் துறையில் 'பின்னிலை'யை நிர்ணயஞ் செய்யக் குறிக்கோள் சோதனைகளையும் அடிப்படையொன்றையும் கண்டுபிடிக்க இயலாமற்போனதாகும். அதன் முடிவு, சுமார் 115 மில்லியன் மக்களைக்கொண்ட 913 சமூகங்களோடு 2,399 சமூகங்களைக் கொண்ட பட்டியலைத் தயாரித்ததாகும்.

பின்னிலை வகுப்பினர் பட்டியலொன்றைத் தயாரிக்கும் அதனுடைய முயற்சியில் இந்திய அரசாங்கம், அதற்கான சரியான அடிப்படையொன்றைத் தீர்மானிக்க இராச்சிய அரசாங்கங்களைத் தாற்காலிகமாக அளவாய்வுகள் செய்யுமாறு கேட்டுக்கொண்டது; ஆனால், இராச்சிய அரசாங்கங்களிடமிருந்து கிடைத்த பதில்கள், மத்திய அரசாங்கத்திற்குத் திருப்தி தருபவைகளாக இல்லாமையால், அப் பொறுப்பை இந்தியப் பொதுப் பதிவாளர் அலுவலகத்திற்கு ஒப்படைத்தது. அவ்வலுவலகத்தால் தயாரிக்கப்பட்ட அறிக்கையே இப்போது சமூக, கல்வித்துறைகளில் பின்னிலை வகுப்பினர் பட்டியலை நிர்ணயிப்பதற்கும், அவர்கள் முன்னேற்றத்திற்கு அரசாங்க உதவி அளிப்பதற்கும் துணையாக இருக்கிறது.

ஓர் இராச்சிய அட்டவணையில் கண்ட சாதியினர் பட்டியலில், சாதிகளையும், இனங்களையும், ஆதிக்குடிகளையும் சேர்த்துக் கொள்வதற்கு அறிவிப்புச் செய்யும் அதிகாரத்தை ஜனாதிபதிக்கு அரசியலமைப்புத் தருகிறது. ஆனால், ஓர் அறிக்கை வெளியிடப்பட்டதும் அவருடைய அதிகாரம் முடிந்துவிடுகிறதாகையால், அதைத் திருத்தவோ, மாற்றவோ அவரால் முடியாது. அத்தகைய திருத்தம் அல்லது மாற்றமெதுவாயினும், அதைப் பாராளுமன்றந்தான் செய்ய முடியும். அதே முறைதான், மலைவாசிகள், ஆதிக்குடிச் சமூகங்கள்பற்றி முடிவுசெய்வதற்கும் பின்பற்றப்படுகிறது.

கடந்த பத்தாண்டுகளில் அட்டவணையில் கண்ட சாதியினரும், ஆதிவாசிகளும், பின்னிலை வகுப்பினரும் ஆச்சரியப்படத்

தக்க முன்னேற்றமடைந்திருக்கிறார்கள். சில ஆண்டுகட்கு முன்பு அவர்கள்தாம் உலகின் எப் பகுதியிலும் மிக அதிகமான பின்னிலையில் இருந்தவர்கள். அடிமை இந்தியாவில் அவர்களில் மிகப் பெரும்பாலோர் சமூகத்தின் கடைக்கோடியினராகத் 'தீண்டப்படாதவர்கள்' என்று சொல்லப்படும் பெயரோடு கல்வி அறிவில்லாதவர்களாகவும் நனிமிகு நல்கூர்ந்தாராகவும் இருந்தார்கள். ஆனால், இன்றோ அவர்களில் பலர் சமூகம் என்னும் ஏணியில் பல படிகளையேறி, உச்ச நிலையிலிருக்கின்றார்கள். இன்னும் பலர் அவர்களை விரைவாகப் பின்பற்றி வருகின்றார்கள். தொடர்ச்சியாக அளிக்கப்படுகின்ற ஆணையாளர் அறிக்கை ஒவ்வொன்றும், அவ் வகுப்பார் பொதுநலனுக்காகச் செய்யப்படும் பணிகளின் அளவையும் வேகத்தையும் தெளிவாகக் காட்டுகிறது. இவ் வகுப்பினரைப்பற்றிய அரசியலமைப்பேற்பாடுகளில் மூலமான ஏற்பாடு, அரசியலமைப்பில் சொல்லப்பட்டுள்ளவாறு இச் சமூகங்களின் முன்னேற்றம் இருக்கிறதா என்று கவனிப்பதற்குப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ள தனி அலுவலரை நியமிப்பதற்குச் செய்யப்பட்டிருப்பதேயாகும்.

இச் சமூகங்களின் பலவகைத் துரித முன்னேற்றம், சமூக, பொருளாதார, கல்வி என்னும் மூன்று முக்கியத் துறைகள் வாயிலாக நிறைவேற்றப்படுகிறது. சமூகத் துறையில் தீண்டாமை ஒழிப்பியக்கம் வலுப்பெற்று வருவதோடு, பல சிறந்த பயன்களையும் ஏற்படுத்தியிருக்கிறது. அட்டவணையில் கண்ட சாதிகளைச் சேர்ந்த உறுப்பினர்கள் சம வுரிமைகளும் சலுகைகளுமுடைய சகோதரக் குடிகள் என்பதோடு, அன்பும் பண்பும் காட்டப்படவேண்டியவர்கள் என்னும் உணர்வு, உயர்சாதி என்றழைக்கப்படுபவர்களிடையே விரைவாக வளர்ந்துவருகிறது. பொருளாதாரத் துறையில், பல தொழிலாளர் நலச் சட்டங்கள், குறுமக் கூலிச் சட்டங்கள் (Minimum Wage Laws), கூட்டுறவு, நில விநியோகச் சட்டங்கள் இயற்றப்பட்டு, அவர்கள் கணிசமான முன்னேற்றமடைந்துவருகிறார்கள். இச் சமூகங்களைச் சேர்ந்த உறுப்பினர்களுக்கு நெசவுத் தொழில், தோல் தொழில் போன்ற பல குடிசைத் தொழில்கள் அதிக வருமானத்திற்கு வகைசெய்கின்றன. கல்வி வசதிகள்பற்றிய ஏற்பாடுகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு, இத் துறையில் ஏற்பட்டு வரும் முன்னேற்றம் உண்மையிலேயே மிகச் சிறந்ததாக இருக்கிறது. யூனியன் அரசாங்கத்தாலும் இராச்சிய அரசாங்கங்களாலும் இச் சமூகங்களைச் சேர்ந்தவர்களுக்கு ஆண்டுதோறும்

ஆயிரக்கணக்கான கல்விக் கழக உறுப்பினர் பொருள் உதவி (fellowships), மாணவர் படிப்பிற்குத் தரப்படும் உதவிச்சம்பளம் (scholarships), மாணவர் சலுகைப் பணவுதவி (stundentships), உதவிப் பணம் (freeships) தரப்படுகின்றன. இச் சமூகங்களின் பொதுநலனுக்காக முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 400 மிலியன் ரூபாய்கள் செலவழிக்கப்பட்டதோடு, மிகத் தீவிரமான முறையில் ஊக்கமூட்டும் முடிவுகளும் சாதிக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாவது திட்டத்தில் இதற்காக ஒதுக்கப்பட்ட தொகை மேற்சொன்ன தொகையைப்போல இரு மடங்காகும். இச் சமூகங்களின் விரைவான முன்னேற்றத்தில் அரசு காட்டும் விறுவிறுப்பான ஊக்கம் காரணமாக இதர சமூகத்தினரை அவர்கள் சீக்கிரமே எட்டிப் பிடிப்பார்களென்பதிலும், நாட்டின் பலதிறப்பட்ட முன்னேற்றத்திற்கு அவர்களுக்குச் சமமான தொண்டாற்றுவார்களென்பதிலும் நம்பிக்கை இருக்கிறது.

பாதுகாப்பிற்கான, குறிப்பாக, சட்டசபைகளில் இடம் ஒதுக்குவதற்கான பத்தாண்டு கால எல்லை, 1959ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட அரசியலமைப்பு எட்டாவது மாற்றம், இப்போது, மேலும் பத்தாண்டுகளுக்கு நீட்க்கப்பட்டிருக்கிறது. அடுத்த பத்தாண்டு கால வரையறையில் இச் சமூகங்கள் காணும் முன்னேற்றம், இப்போது ஒதுக்கல்கள் (reservations) எவ்வுருவங்களில் இருப்பினும், அவைகளின் ஒழிப்பிற்கு உதவக்கூடிய வகையில் நாடு பலதிறப்பட்ட தன்னுடைய முன்னேற்றப் பாதையில் அடுத்த கட்டத்தையடைய உதவுமென எதிர்பார்க்கப்படுகிறது.

# 39. அரசியலமைப்பிற்கு மாற்றம்

கூட்டாட்சி அரசியலமைப்புகளில் மிகப் பெரும்பாலானவை மிகக் கடினமானவையாகவும், மாற்றம்பற்றிய சிக்கலான முறைகளையுடையவையாகவும் இருப்பதால், பொதுவாகவே அவைகள் நெகிழாதவைகளாக இருக்கின்றன. ஐக்கிய நாட்டு அரசியலமைப்பைப் போன்ற கூட்டாட்சி அரசியலமைப்பொன்றை மாற்றுவது மிகமிகக் கடினமானதாகும். ஆஸ்திரேலிய அரசியலமைப்பிலும் மாற்றம்பற்றிய முறை சிக்கலானதாக இருக்கிறது. அதற்கு மாறாக, இந்திய அரசியலமைப்பு மிக எளிதானதாக எடுத்துக்காட்டுகிறது.

அரசியலமைப்பொன்று ஓர் ஆதாரப் பத்திரமாகும். அது நிர்வாகத்துறை, சட்டத்துறை, நீதித்துறை ஆகிய அரசின் மூன்று உறுப்புகளின் தன்மையையும் அதிகாரத்தையும் விளக்குகின்ற பத்திரமாகும். அது நிர்வாகத்துறையையும், சட்டத்துறையையும், குடிகள்மேல் செலுத்தக்கூடிய அதிகாரங்களையும் வரையறுக்கின்றது. ஓர் அரசியலமைப்பின் நோக்கம் அரசின் உறுப்புகளைத் தோற்றுவிப்பதோடு மட்டுமல்லாமல், அவைகளது அதிகாரத்தைக் (authority) கட்டுப்படுத்துவதாகவும் இருக்கவேண்டும். ஏனெனில், அவ் உறுப்புகளின் அதிகாரத்தின்மேல் கட்டுப்பாடு விதிக்கப்படவில்லையாயின், அங்குக் கொடுங்கோன்மையும் நசுக்கியொழித்தலுமிருக்கும். இயல்பாகவே, அரசியலமைப்பைப் போன்றதோர் ஆதாரப் பத்திரம் அடிக்கடி மிகச் சுலபமான மாறுதல்களுக்கு இலக்காகக்கூடாது. ஏனெனில், அது அரசியலமைப்பிற்குக் கட்டுப்பட்டு நடக்கும் குடிகளின் தன்மையைக் கெடுக்கும். மேலும், அது அரசாங்கத்தின் பல்வேறு உறுப்புகளின் நடைமுறையை அளக்க உதவியாக இருக்கும்; ஏற்றுணரத்தக்க தரமொன்றைத் (standard) தர முடியாமற்போகும். குறிப்பாகக் கூட்டாட்சி அரசியலமைப்பொன்று இந் நிலைமைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

ஏனெனில், அது அரசாங்கத்தின் வெவ்வேறு உறுப்புகளின் அதிகாரங்களை வரையறை செய்வதோடு மட்டுமல்லாமல், கூட்டாட்சியின் நடு அரசாங்கத்திற்கும், அங்கங்களின் அரசாங்கத்திற்குமிடையே நுண்ணியதொரு சமநிலையையும் ஏற்படுத்துகிறது. அரசாங்க அமைப்பு இயங்கவேண்டிய முறையை எடுத்துரைக்கும் மூலப் பத்திரத்தை உருக்குலையாமல் பாதுகாப்பதற்கு இங்கு ஆராயப்பட்டவைகள் மிகப் போதுமானவையாகும். ஆதலின், அரசியலமைப்பிற்குக் கொண்டுவரப்படும் மாற்றமெதுவும் தவிர்க்கமுடியாத காரணங்களாலும் சூழ்நிலைகளாலும் நியாயமானதாக ஆக்கப்படவேண்டும்.

அதே சமயத்தில், அரசியலமைப்பு உயிரோட்டமுடைய பத்திரம் என்பதையும் உணரவேண்டும், அது வளர்ந்து கொண்டிருக்கும் நாட்டோடு வளரவேண்டும். மாறுபடும் மக்களுடைய தேவைகளுக்கும் சூழ்நிலைகளுக்கும் பொருந்த வேண்டும். சில சமயங்களில், சக்திவாய்ந்த சமூகப் பொருளாதார சக்திகளது உந்தலினால் அரசாங்க அமைப்புமுறை பெரு மாறுதல்களுக்கு உட்படவேண்டியிருக்கும். அவசியம் என்று கருதப்படுகின்ற அத்தகைய மாறுதல்களைத் தடுக்கின்றவாறு அரசியலமைப்பு இருக்குமானால் தீவிர வற்புறுத்தல் காரணமாக அழிக்கப்படலாம். எனவே, அரசியலமைப்பொன்று நிரந்தரமானதாக இருக்க முடியாது. அல்லாமலும், அது ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதாலோ, ஏற்றுக்கொள்ளப்பட்டதுமுதல் இயங்கிவருவதாலோ புனிதமானதாகவுமாகாது.

அரசியல் நிர்ணய சபையில் அம்பேத்கர் குறிப்பிட்டதுபோல அரசியலமைப்பின் சில பகுதிகளைப் பொறுத்தமட்டில், மாற்றம் பற்றிய ஏற்பாடுகள் ஓரளவிற்கு நெகிழாதவைகளாக இருப்பினும், இதர சிலவற்றைப் பொறுத்தமட்டிலும் நெகிழக்கூடியவைகளாகவும், எளிய முறையில் மாற்றுவதற்கான வசதிகளுடையனவாகவும் செய்யப்பட்டிருக்கின்றன. அத் திட்டத்தைப் பற்றிய விவரங்களைக் குறிப்பிட்டு அவர் கூறியதாவது:

'அரசியலமைப்பின் பல விதிகளையும் மூன்று வகைகளாகப் பிரிக்க நாம் பிரேரேபிக்கிறோம். ஒரு வகையில், பாராளுமன்றம் சாதாரணப் பெரும்பான்மையால் மாற்றங் கொண்டுவரக்கூடிய விதிகளைச்சேர்த்திருக்கிறோம். (இராச்சியங்களில் மேல்மன்றங்கள் ஏற்படுத்துவது அல்லது கைவிடுவது போன்ற ஏற்பாடுகள் இவ்வகைக்கு எடுத்துக்காட்டுகள்). இரண்டாம்பிரிவு விதிகளுக்குப் (மாற்றம் கொண்டு வருவதற்கு) பாராளுமன்றத்தில் மூன்றில்

இரு பங்கு பெரும்பான்மைத் தேவையாகும். (ஆதார உரிமைகள்பற்றிய அரசியலமைப்பின் 111ஆவது பகுதியும், நெறிசெய் நியதிகள் (directive principles) பற்றிய IVஆவது பகுதியும் இவ் வகையைச் சேர்ந்தவை). மூன்றும் வகைக்குப் பாராளுமன்றத்தில் மூன்றிலிருபங்கு பெரும்பான்மையும் இராச்சியங்களின் ஆமோதிப்பும் தேவைப்படும். இத் துறைகளைப் பொறுத்த மாற்றம் சம்பந்தமாக இராச்சியங்கள் முக்கியமான செல்வாக்குடையவைகளாக ஆக்கப்பட்டிருக்கின்றன. அரசியலமைப்பின் படி இவ்வாதார விஷயங்களில் இராச்சியங்கள் முக்கிய அதிகாரங்களைப் பெற்றிருக்கின்றன. அரசியலமைப்பால் ஏற்படுத்தப்பட்ட இவ்வாதார அடிப்படை, பாராளுமன்றத்தால் ஒருதலைப் பட்சமாகக் கொண்டுவரப்படும் மாற்றத்தால் பாதிக்கப்படும். (யூனியனுக்கும் இராச்சியங்களுக்கும் இடையேயான சட்ட அதிகாரப் பிரிவினைபற்றிய பகுதிகள் இவ்வகையின்கீழ் வருகின்றன).

மாற்றத்திற்கான முறை அரசியலமைப்பின் 368ஆம் விதியில் விளக்கப்படுகிறது. இதன்படி, பாராளுமன்றத்தில் ஏதேனுமொரு மன்றத்தில் அக் காரியத்திற்காகத் தாக்கல் செய்யப்படும் மசோதாவினுல் துவக்கப்படலாம். அம் மசோதா பாராளுமன்றத்தின் ஒவ்வொரு மன்றத்திலும், அம் மன்றத்தின் மொத்த உறுப்பினர்களில் பெரும்பாலோராலும், அப் பெரும்பான்மை அம் மன்றத்தின் கூட்டத்தில் கலந்துகொண்டு வாக்கெடுப்பில் பங்கெடுத்துக்கொண்டவர்களின் எண்ணிக்கையில் மூன்றிலிருபங்கிற்குக் குறைவில்லாமலும் நிறைவேற்றப்படுகிறபோது, அது ஜனுதிபதியின் இசைவிற்கு அனுப்பப்படும். ஜனுதிபதி தம்முடைய இசைவைத் தருகிறபோது, அம் மசோதாவின் நோக்கத்திற்கேற்ப அரசியலமைப்பு மாற்றப்படுகிறது. ஆனுல், முன்னமேயே குறிப்பிட்டதுபோல, ஒருசில மாற்றங்களைப் பொறுத்த வரையிலும், மொத்தமுள்ள இராச்சியங்களில் பாதிக்குக் குறையாத இராச்சியங்களின் சட்டசபைகளால் அவற்றைப்பொறுத்த மட்டில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு, ஆமோதிக்கப்பட்டால்தான், ஜனுதிபதியின் இசைவிற்கு அம் மாற்றமசோதா சமர்ப்பிக்கப்படமுடியும். அரசியலமைப்பின் பின்வரும் ஏற்பாடுகள் இவ்வகையின்கீழ் வருகின்றன :

(1) விதிகள் 54 (ஜனுதிபதி தேர்தல்), 55 (ஜனுதிபதி தேர்தல் முறை), 73 (யூனியனின் நிர்வாகத்தின் அதிகாரத்தின் பரப்பு), 162 (இராச்சியங்களின் நிர்வாக அதிகாரத்தின் பரப்பு), அல்லது 241 (யூனியன் பிரதேசங்களுக்கான உயர்நீதி மன்றங்கள்);

(2) 5ஆம் பகுதியின் 4ஆம் அத்தியாயம் (யூனியன் நீதித் துறை); 6ஆம் பகுதியின் 5ஆம் அத்தியாயம் (இராச்சியங்களிலுள்ள உயர் நீதிமன்றங்கள்); 11ஆம் பகுதியின் 1ஆம் அத்தியாயம் (யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையேயான சட்டசம்பந்தமான தொடர்புகள்);

(3) ஏழாவது ஷெடியூலிலுள்ள லிஸ்டுகளில் ஏதாவதொன்று;

(4) பாராளுமன்றத்தில்இராச்சியங்களின் பிரதிநிதித்துவம்; மேலும்.

(5) அரசியலமைப்பிற்கான மாற்றம்பற்றிய ஏற்பாடுகள்;

மேற்சொல்லப்பட்ட ஏற்பாடுகளில் விளக்கப்பட்டவாறு நெகிழாத் தன்மையையும் நெகிழுந் தன்மையையும் இணைக்க வல்லதும் இதனோடு ஒப்புநோக்கவல்லதுமான பிறிதோர் கூட்டாட்சி அரசியலமைப்புக் கிடையாதெனலாம்.

அரசியலமைப்பு ஏற்பட்டதிலிருந்து முதல் பத்தாண்டுகளில் அது ஒன்பது தடவைகள் மாற்றப்பட்டது. அடுத்தடுத்து அரசியலமைப்பு ஏற்பட்ட அவ்வளவு குறுகிய காலத்தில் மாற்றங்கள் ஏற்பட்டமையால் அரசியலமைப்பு பலங்குறைந்து வருவதற்கான அறிகுறி என்பதாக அதைப்பற்றிக் குறை கூறுகிறவர்களால் அது தாக்கப்படுகிறது. அவர்களில் சிலர், அவ்வளவு விரைவாகவும் எளிதாகவும் மாற்றத்தை ஏற்கின்ற அளவிற்கு அரசியலமைப்பு மலிவானதாகச் செய்யப்படக்கூடாதென்று கருதினார்கள். இக் குறைகூறலில் ஓரளவிற்கு உண்மை இருக்கிறது. எனினும், பத்தாண்டுகட்கு முன்பு பெற்ற அரசியற் சுதந்திரத்தை வலுப்படுத்தவும் வளப்படுத்தவும் வேண்டியிருந்த மிக முக்கியமான காலத்தில் ஏற்பட்ட அரசியலமைப்பு மாற்றங்களுக்குத் தவிர்க்க இயலாத சூழ்நிலைகளிலிருந்தனவென்பது கூர்ந்தாய்கின்றபோது தெரியவரும். ஒரு சில மாற்றங்கள் 1950ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட அரசியலமைப்பின் அடிப்படையில் ஏற்பட்ட புதிய அரசியல் முறையின் அறுதியான படிப்படியான தோற்றத்தினால் இயற்கையாகவே ஏற்பட்டவைகளாக இருந்தபோது, மற்றவைகள் அரசியலமைப்பின் சில முன்னேற்பாடுகளை நடைமுறைப்படுத்துகின்றபோது எழுந்த கண்கூடான இக்கட்டுகளால் அவசியமானவையாகும். இராச்சியங்களின் சீரமைப்பும், அதைத் தொடர்ந்து எழுந்த அரசியலமைப்பு மாற்றம் முதலாவதாகச் சொல்லப்பட்ட வகைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றபோது, உடைமை

உரிமை (right to property) பற்றிய மாற்றங்கள் பின்னவை யாகச்சொல்லப்பட்ட வகைக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகும். அரசியலமைப்பில் சம்பந்தப்பட்ட பகுதிகளைப்பற்றி விவாதித்த போது, பல்வேறு மாற்றங்களைப்பற்றியும் நாம் விவாதித்திருக் கிறோம். எவ்வாறாயினும், அவைகளை வரிசைக்கிரமமாக மீண்டும் இங்குச் சிந்தித்துப் பார்ப்பது பொருத்தமானதாகத் தோன்று கிறது.

முதலாவது மாற்றம் (1951) 15, 19, 31, 85, 87, 174, 176, 341, 342, 372, 376 ஆகிய விதிகளை மாற்றியது. மேலும், அது அர சியலமைப்பிற்குப் புதியதோர் அட்டவணையையும் (ஒன்பதாம் அட்டவணை) சேர்த்தது. அம் மாற்றத்தின் முக்கியமான நோக்கம், சில ஆதார உரிமைகளை நடைமுறைப்படுத்துவதில் அனுபவிக்கவேண்டியிருந்த கஷ்டமான இடர்ப்பாடுகளை அகற் றுவதாகும். குறிப்பாக, சட்டத்தின்முன் சமம் (equality before law), பேச்சு சுதந்திரம் ஆகிய உரிமைகளும் சொத்துரிமையும் ஆகும்.

இரண்டாவது மாற்றம் (1952) மக்கள் சபைக்குத் தேர்ந் தெடுக்கப்படவேண்டிய உறுப்பினரொருவருக்கு 7,50,000 மக்கள் தொகை இருக்கவேண்டுமென்னும் குறிப்பிடப்பட்ட அளவை அகற்றுவதற்காக 81ஆம் விதியை மாற்றியது. மூல ஏற்பாட் டின்படி ஒவ்வொரு 7,50,000 மக்களுக்குக் குறைந்தபட்சம் ஓர் உறுப்பினராவது மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். மேலும், சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப் பினர்களின் எண்ணிக்கை அதிகபட்சமாக 500-க்கும் அதிகமாக இருத்தலாகாதென்றும் வகைசெய்யப்பட்டது. ஆனால், வளர்ந்து கொண்டேயிருக்கும் உண்மையான மக்கள்தொகை அளவுப்படி இவ்வெல்லைகள் நடைமுறையில் பின்பற்றமுடியாதவை என்பது விரைவில் தெளிவாயிற்று.

மூன்றாவது முன்னேற்றம் (1954) மூன்று சட்டத்துறை அதி காரப் பட்டியல்களை (lists) கொண்டிருந்த ஏழாவது அட்டவணை யில் மாறுதல்கள் கொண்டுவரச் செய்யப்பட்டது. அதன் விளை வாக, யூனியன் சட்டத்துறை அதிகார வரம்பு முதலில், இராச் சியங்கள் அதிகாரப் பட்டியலிலும் (State list), பொதுப் பட்டியலி லும் (Government concurrent list) சேர்க்கப்பட்டிருந்த சில இனங்களைச் சேர்த்ததனால் விரிவுபடுத்தப்பட்டது.

நான்காவது மாற்றம் (1955) 31ஆம் விதியையும், 31எ-விதி (சொத்துரிமை)யையும் மேலும் (மீண்டும்) திருத்தியது. அது

305ஆம் விதியையும் ஒன்பதாவது அட்டவணையையுங்கூட மாற்றியது.

ஐந்தாவது மாற்றம் (1955) 3ஆம் விதியை மாற்றியதோடு இராச்சிய சட்டமன்றம், அதனை பாதிக்கின்ற பிரதேச அல்லது எல்லை மாறுதல்கள்பற்றிய அதனுடைய விருப்பத்தை உணர்ந்து கொள்வதற்கான புதியதொரு முறையையும் தந்தது.

ஆறுவது மாற்றம் (1956) ஏழாவது அட்டவணையை மேலும் மாற்றியது. அது, இராச்சியங்களுக்கிடையிலான விற்பனைவரி பற்றிய 269, 286ஆம் விதியையும்கூட மாற்றியது.

ஏழாவது மாற்றம் (1956) இதுவரையிலும் அரசியல் அமைப்பிற்கு ஏற்பட்டிராத மிக விரிவான மாறுதல்களை ஏற்படுத்தியது. இம் மாற்றம், முன்னமேயே சொல்லப்பட்டதுபோல, பிரதானமாக இராச்சியங்களின் சீரமைப்பைப்பற்றியதாக இருந்தது. அத்தகைய சீரமைப்போடு அதன் பயனாக ஏற்பட்ட பல மாறுதல்களையும் ஏற்படுத்தவேண்டி இருந்தது. இவ்வாறு, இம் மாற்றம் முதலாவது, நான்காவது ஷெடியூல்களோடு அரசியலமைப்பின் பல விதிகளையும் கணிசமாக பாதித்தது.

எட்டாவது மாற்றம் (1960) தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கும் (Scheduled castes), பழங்குடி மக்களுக்கும் (Tribes) சட்டமன்றங்களில் இடங்கள் ஒதுக்கும் காலத்தை மேலும் பத்தாண்டுகளுக்கு நீட்டித்தது.

ஒன்பதாம் மாற்றம் (1960) இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே எல்லைத் தாவாக்கள் தீர்வுக்காக ஏற்பட்ட விரிவான ஒப்பந்தத்தின் பகுதியாக ஏற்பட்ட இசையடிப்படையில் சில குறிப்பிட்ட இந்தியப் பிரதேசங்களைப் பாகிஸ்தானுக்கு மாற்றுவதற்கு வகை செய்தது.

# 40. முடிவுரை

எழுதப்பட்ட அரசியலமைப்பிற்கு அப்போதே உயிர் வந்து விடுவதில்லை. மனிதர்கள் ஒன்றுகூடி அதை இயக்கும்போதுதான் அது உயிர் பெற்று வளர ஆரம்பிக்கிறது. காலஞ் செல்லச் செல்ல, அது அமைப்பிலும் உள்ளடக்கத்திலும் நுட்பமான மாறுதல்களையடைந்து, புதிய உருவத்தையும் புதுப் பொருளையும்கூட பெறுகிறது. இத் தன்மை, அதை இயக்குபவர்களுடைய தன்மையையும் பண்பையும் பொறுத்து ஏற்படுகிறது. காலமும் சூழ்நிலைமைகளும் அதனிடம் அவைகளினுடைய சுவடுகளை ஏற்படுத்துகின்றன. இருப்பினும், மற்றெல்லாவற்றையும்விட எழுதப்பட்ட அரசியலமைப்பொன்றின் அமைவு நோக்கத்தை (destiny) உருவாக்கித் தருபவர் மனிதர்களேயாவர்.

அம்பேத்கர் குறிப்பிட்டதாவது: 'ஓர் அரசியலமைப்பு எவ்வளவுதான் சிறந்ததாக இருப்பினும், அதைச் செயற்படுத்த, பொறுப்பு ஒப்படைக்கப்பட்டவர்கள் சிறந்தவர்களாக இல்லாமற்போனால், அரசியலமைப்பும் சிறப்பற்றதாகிவிடும். ஓர் அரசியலமைப்பு எவ்வளவுதான் மோசமானதாக இருப்பினும், அதை இயக்குபவர்கள் சிறந்தவர்களாக இருப்பின், அது சிறப்புடையதாக மாறும். ஓர் அரசியலமைப்பின் இயக்கம் அதன் தன்மையைமட்டும் பொறுத்திருக்கவில்லை. சட்டத்துறை, நிர்வாகத்துறை, நீதித்துறை போன்ற அரசிற்கு வேண்டிய உறுப்புகளைத்தான் அரசியலமைப்பு வகைசெய்ய முடியும். அரசின் உறுப்புகள் இயங்குவதென்பது மக்களையும், அவர்களுடைய கொள்கைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றுவதற்கு அவர்கள் ஏற்படுத்துகின்ற அரசியல் கட்சிகளையும் பொறுத்திருக்கிறது. இந்திய மக்களும் அவர்களுடைய கட்சிகளும் எவ்வாறு நடந்துகொள்வார்கள் என்று யார் சொல்ல முடியும்? அவர்களுடைய நோக்கங்களையடைவதற்கு அவர்கள் சட்டபூர்வமான முறைகளைப் பின்பற்றுவார்களா அல்லது அவைகளையடைவதற்குப் புரட்சி முறைகளைப்

பின்பற்றுவார்களா? புரட்சிகரமான முறைகளை அவர்கள் பின்பற்றினால், அரசியலமைப்பு எவ்வளவுதான் உயர்ந்ததாக இருப்பினும் வீழ்ச்சியடையுமென்று சொல்வதற்கு முக்காலமும் உணர்ந்த ஞானி எவரும் தேவையில்லை. எனவே, மக்களும் அவர்களுடைய கட்சிகளும் ஆற்றக்கூடிய பங்கைப்பற்றிக் கருதாமல் அரசியலமைப்பைப்பற்றிமட்டும் தீர்ப்பளிப்பது அவசியமற்றதாகும்.'

எந்த அரசியலமைப்பும் பரிபூரணமானதன்று. இப் பொது விதிக்கு இந்திய அரசியலமைப்பும் விலக்கன்று. அரசியல் சட்டபூர்வமான அரசாங்கம் வேண்டுமென்பதில் இருந்த ஆழ்ந்த ஆர்வம், அரசியல் சுதந்திரம் பெற்ற மூன்றாண்டு காலத்திற்குள் சொந்த அரசியலமைப்பொன்றை வகுத்த பெருமை இந்தியாவைச் சேரும். அவ்வரசியலமைப்பு இந்தியாவில் ஓர் அரசாங்க அமைப்பை ஏற்படுத்துவதற்கான சாதனமாக மட்டுமல்லாது அமைதியான சமூக மாறுதலை ஏற்படுத்துவதற்கான சிறந்த கருவியாகவும் கருதப்பட்டது. ஓர் அரசியலமைப்பின் பலமும், ஸ்திரத் தன்மையும், சந்தர்ப்பத்திற்கேற்பச் சிறந்த அமைதியான சமூக அமைப்பொன்றை ஏற்றுக்கொள்வதற்கு அதற்கு இருக்கும் சக்தியையும், சமூக, பொருளாதார அமைப்புகளில் அமைதியான முன்னேற்றம் ஏற்படுவதற்கான மாறுதல் தோன்ற வகை செய்வதையும் பொறுத்ததாகும். இந் நோக்கத்திற்கு இணங்க இந்திய அரசியலமைப்பு, குறிக்கோளொன்றை ஏற்படுத்துகிறது. அக் குறிக்கோள் காலத்திற்கு ஒவ்வாததென்றோ அல்லது பிற்போக்குத் தன்மையுடையதென்றோ அரசியலமைப்பைத் தீவிரமாகக் குறைகூறுபவர்களாலும் சொல்ல முடியவில்லை. அதன் அடிப்படைக் குறிக்கோள் இந்தியக்குடிகளெல்லோருக்கும் நீதியையும், சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் பெறுகின்ற நோக்கத்துடன் மதப் பொதுநோக்குடைய (secular)குடியரசொன்றை ஏற்படுத்துவதாகும். அது பொருளாதார, சமூக மக்களாட்சியோடு இணைந்த அரசியல் மக்களாட்சி என்னும் உயர்ந்த கூட்டுறவு காமன்வெல்த் கருத்தை நடைமுறைக்குக் கொண்டுவர விரும்புகிறது. பொதுநல அரசொன்றை ஏற்படுத்துவதற்குத் தேவையான விரிவான நெறிகளை அரசிற்கும் அதன் ஏஜென்சிகளுக்கும் தருமாறு அமைந்திருக்கிறது, அவ்வரசியலமைப்பு.

இந்தியக் குடியரசு அரசியலமைப்பு ஏற்றுக் கொள்ளபட்ட தருணத்தில் அரசியலமைப்புச்சபையில் அதனுடைய உறுப்பினர்களால் பல உயர் கருத்துகள் வெளியிடப்பட்டன. மக்களாட்சித் தத்துவத்திற்கும், குடியரசு தத்துவத்திற்கும் (Republicanism)

